உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட தேசிகேந்திராய நம:

# சித்தாந்தபோதரத்னாகரம்.

## திருவுந்தியார்.



கலித்தாழிசை.

அகளமா யாருமறி வரிதப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற.

என்பது உந்தியார் என்சொல்லிய வாறோவெனின் - யாவரானும் அறிதற்கரிய பரம் பொருள் யான் அறியவந்து யான் தானாக அருளைக் கொடுத்ததென்று சொல்லிற்று.

(இதன்பொருள்.) யாவரானும் அறிதற்கரிய ஞானசொரூபமாகிய பரசிவம், ஞானாசாரியனென இம்மண்ணுலகில் எழுந்தருளிவந்தது; (வந்த அத்திருவுருவம்) யான் சிவமேயாக அருள்செய்தது என்க.

யாரும் அறிவரிது அகளமாய அப்பொருள் எனக்கூட்டுக

அகளம் எனவே ஞானசொரூபம். அஃதாவது எங்குங் கலந்துநிற்கும் பெரியவுருவம். யாரும் எனவே பிரமன்முதல் நாதாந்தமவரை யுள்ளவர். அறிவரிது எனவே சுட்டறிவால் அறியப்படாதது. அப்பொருள் எனவே பதிப்பொருளாகிய பரசிவம். சகளமாய்வந்தது எனவே ஆசிரியராயவந்த வடிவம். தானாக எனவே சீவத்தன்மைகெட்டுச் சிவத்தன்மையை யடைய. தந்தது எனவே அருளைக்கொடுத்தது. அஃதாவது அநந்நியமாயிருத்தலாகிய அத்வைதானுபவத்தைத் தந்தது

சீவன் சிவாகாரமாதற்குச் சிவமன்றி வேறொருவர் வரின் சிவமாதல் கூடாதாகலின் அகளமா யாரும் அறிவரிதப்பொருள் சகளமாய வந்தது என்றும், தான் சகளமாய்வந்ததற்கு அருள் காரணமானதுபோல், சீவன் சிவமாதற்கும் அருளன்றிக் கூடாதாகலின் தானாகத்தந்தது அருளென்றுங் கூறினர்.

ஞானசொரூபம் என்றதை †"ஆதிநடு வந்தமிலா அளவில்சோதி அருண்ஞானமூர்த்தியாய்" என்றதனானும், பிரமன்முதல் நாதாந்தம்வரை அறிவரிது என்றதை ✻"பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன் மா மன்னுசோதி மணிமார்பன் [illegible] மன்னும் வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன் நாத நாதாந்த நடுவே தம்போதத்தால் ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலை" என்றதனானும், பெரியவுருவம் என்றதை "ஆயிரங்கமலம் ஞாயிறு ஆயிரம் முக்கண் முக கரசரணத்தோன்" எனவும், "எண்ணிற் பலகோடி சேவடி முடிகள் எண்ணில் பல்கோடி திண்டோள்கள் எண்ணில் பல்கோடி [illegible] முக்கண் முகம் இயல்பும், எண்ணில் பல்கோடி [illegible] [illegible] ஏத்தும், எண்ணில் பல்கோடி குணத்தோர் வீழி" திருவிசைப்பாவானும் அறிக.

[illegible] செ - ள். (2) ✻ போற்றிப்பஃறொடை.

யா - வினா எஞ்சாமைப்பொருளது. யாரும் - உம்மைமுற்று. அப்பொருள் உலகறிச் சுட்டு. உந்து ஈ - உயர்கின்ற ஈப்பபறவை. வினைத்தொகை. ஈ விளி. பற - அகரவீற்றுவியங் கோள். இப்பாட்டான் இறைவனே ஆசிரியனாய்வந்து தானாகும் அருள்கொடுத்தல் கூறப் பட்டது.

திருக்களிற்றுப்படியார்.

நேரிசை வெண்பா.

(ச) அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி-நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல ஆண்டனன்காண்
மாணவக என்னுடனாய் வந்து. (1)

(ரு) ஆகமங்கள் எங்கே அறுசமயம் தான்எங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே-பாகத்
தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யார் அறிவார் பேசு. (2)

என்பது மாணவகனே! திருவம்பலத்தின்கண்ணே, பஞ்சகிருத்திய தாண்டவம் செய்தருளும் ஞானமயமாய்ப் பிரகாசியாநின்ற எமதுநடராஜவள்ளல், இவ்வுலகின்கண் உருவமயமா யிருப்பவன்போல், என்னுடைய ஆசிரியவுருவமாய்வந்து, என்னுடனாய்ப் பிரியாது பொருந்தியிருந்து, எனக்கு விலங்காட் அநாதியா யமைந்துள்ள மூலமலமாகிய ஆணவமலம் என்னைவிட்டு வேறுமபடி, என்னை அடிமைகொண்டனன். (1) (அகள மயனாகிய எம்மிறைவன்) தன் அருட்சத்தியானது வாமபாகத்தில் சிவகாமியென நின் றருளும் திருவுருவமாகவும், தான் நடனஞ்செய்தருளும் திருவுருவமாகவும் கொண்டு நின்று பின்னர் எனது ஆசிரியத் திருவுருக்கொண்டுவந்து, என்னை அடிமையாக ஆளாதொழிவானாயின், வேதமுதலியவற்றால் இத்தன்மைத்தென்று கூறவொண்ணாத் சொரூபவடிவமாயும், அருளினால் ஆகமத்தே யறியநின்ற தடத்தவடிவமாயும் நின்றரு ளும், தத்சிவமாகிய அந்தப்பெரியதோர் வடிவத்தை யாவர் அறியவல்லவர் அவனன்றி ஆகமத்திற்கூறப்படும் பொருள்களும், அறுசமயக கொள்கைகளும், யோகமுறைகளும், ஞானநெறிகளும் தாமே உணர்த்தவல்லனவாகுமோ நீசொல்வாயாக (2) என்பதாம்.

மாணவக அம்பலதது அகளமயமாய் நினற எங்கூத்தன் உலகில் சகளமயம்போல் (என்னுடனாயவந்து) தங்கி நிகளமாம ஆணவமூலமகல ஆண்டனன் (1) எனவும், பாகத் தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் ஆகமங்களெங்கே அறுசமயந்தானெங்கே யோகங்களெங்கே உணர்வெங்கே அந்தப்பெருவடிவை யார்அறிவார்பேசு (2) எனவும் கூட்டுக.

இவ்விரண்டு பாட்டானும், உந்தியுள் கூறபபட்ட பெருவடிவாகிய அகளவடிவம் இத்துணைத்தாமென்றும், அது சகளமாய் வருவதனால் உண்டாகும் உபகாரம் இத்துணைத் தாமென்றும் விதந்துகூறபபட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியா அகளம் என்றதை அகளமயமாய்நின்ற அம்பலம் எனவும், சகளம் என்றதை கூத்தன் எனவும், யாரும் அறிவரிதாப்பொருள் என்றதை பாகத்தருள் வடிவும்தானுமாகிய அந்தப்பெருவடிவை எனவும், தானாக என்றதை நேருல கிற்றங்கி என்னுடனாய்வந்து எனவும், தந்தது என்றதை நிகளமாம் ஆணவமூலமலமகல ஆண்டனன் எனவும், பதிஞானத்தால் அகன்றொழியவேண்டிய ஆணவமலம், பாசஞான பசுஞானங்களை யுணர்த்தும் ஆகமங்களானும் அறுசமயங்களானும் யோகங்களானும், உணர்வுகளானும் ஒழியா என்னும் உண்மைதோன்ற ஆகமங்களெங்கே அறுசமயந்தா னெங்கே யோகங் களெங்கே யுணர்வெங்கே எனவுங்கூறினர்.

# திருவுந்தியார்

அம்பலக்கூத்தன் - சிவபேதங்களை யெல்லாங்கடந்து நாத நாதாந்தப பொருளாய் சமவொளியாய்ச் சிற்பர வியோமப்பொருளாய் விளங்கும் பரசிவசொரூப அருளுரு வென்பார் அகளமய மாய்நின்ற அம்பலத்தெங்கூத்தன் சகளம் எனவும், அவ்வரிய அரு ளுருவத்தினின்றும்வந்த பேரருளுருவம் தான்வழிபடும் குருவடிவென்பார் உலகில் என் றுடனுய்வந்துதங்கி எனவும், நடராஜமூர்த்தியாய்வந்த திருவுருவம் சர்வான்மாக்களுக்கும் ன்மமலமும் மாயாமலமும் அகலவும், என் ஆசிரியனுய்வந்தஅப்பெருமானது திருவுருவம் ன்மம் மாயைஎன்னும் அவ்விருமலங்கட்கும் மூலமலமாயுள்ள அம்மலம் எனக்ககலவும், அம்மூலமாகிய ஆணவம்அகன்றபின்னர் நான்தன்னருளின்வழிநிற்கவும், என்னையாண்டு கொண்டனன் என்பார் ஆணவமூலமகல ஆண்டனன் எனவும், இறைவன் ஆசிரியனுய் வந்து என்னை ஆண்டு எனக்கு உணர்த்துவனவற்றை யானுணர, என்னுள் தன்னருளை நிறுத்தி யானுணரும் வண்ணம்செய்து, ஒழுக்கத்தக்க மலத்தை,—பாசநீக்கத்தையும் முத் திபபேற்றையும் கரதலாமலகம்போல் எடுத்துக்காட்டவல்ல ஆகமங்களும், பாசநீக்கமும் சிவபபேறும் சித்தியாம்வண்ணம் தியானுதி பேதங்களையும் உபாசனுதிகிரமங்களையும் உடைய அறுசமயங்களும், தியானுதிபேதங்களானும், உபாசனுதிகிரமங்களானும் கூட வேண்டிய சிவபாவனையை வருவிக்கவல்ல ஆதாரயோக நிராதாரயோகங்களும், சிவபாவ னையால் சிவமாந்தன்மையைக் கூட்டும் உணர்வாகிய ஞானமும், ஒழித்து என்னையாட் கொள்ளுந்தன்மையை உடையனவாமோ? ஆகா. ஏனெனின், யான் உணரச்செய்யவல்ல அருட்டன்மையும், எனக்கு உணர்த்தவல்ல ஆசிரியத்தன்மையும் ஆகமாதிகளாகிய அவை உடையனவாகா என்பார் ஆகமங்களெங்கே அறுசமயந்தான் எங்கே யோகங்கள் எங்கே உணர்வுஎங்கே எனவும், உண்ணின்று உணரச்செய்யும் அருள்வடிவும் வெளி யேநின்று உணர்த்தும் குருவடிவும் என்னை உணரும் வண்ணம் செய்யும் வகையினும் உணர்த்தும் வண்ணம் செய்யும் வகையினும் ஆளாதொழியின் சத்திசிவமாய் (மாதாளும் பாகத்தனுய்) விளங்கும் அபபெரிய வடிவத்தைத் தமதுபோதமாகிய அறிவால் எவ்வகை எடுத்துபபேச வல்லுனராவர். இதனையாராய்ந்து நீசொல்வாயென்பார் அந்தப் பெருவடிவை யாரறிவார் பேசு எனவுங்கூறினர். (க)

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெண்ணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற.

எ-து உ-ர் என்சொல்லிய வாறோவெனின் மும்மலபபழக்கம் ஆசிரியவசனத்தாலன் றிச் சாத்திரப்பழக்கத்தால் நீங்காதென்றுசொல்லிற்று.

(இ - ள்.) மேற்கூறிய (ஆசிரியர்கூறும்) அந்த வொருபொருளாலே, பிரபஞ்ச விவ காரப பழக்கம் நீங்கப் பழகுவதல்லாமல், நூல்வழியில் உழலுவதனுல் யாதுபயன் உண் டாம் என்க.

ஒருபொருளாலே பழக்கந்தவிரப் பழகுவதன்றி எனக்கூட்டுக. பெண்ணேஎன் றது விளி. ஈண்டுபெண்ணென்றது நெஞ்சத்தை. பொருளால் என்றது மூன்றும் வேற்றுமைக்கருவிப்பொருள். இபபொருளுக்குப் பழக்கம் தவிர அன்றி உழப்புவது என் என்றும், பழகுவதன்றி உழப்புவதென் என்றும் தனித்தனிகூட்டிமுடிக்க.

ஒருபொருள் என்றது ஆசிரியனுற்கூறப்படும் உபதேசப்பொருள் சாத்திரங்களிற் கூறப்படும் பலமொழிக்கும் இடங்கொடுபபதாகலின் அச்சொற்பொருளை. பழகுவது என்றது அவ்வுபதேசப்பொருளைச் சிரவணஞ் செய்தவாறே சிந்தித்தலை. பழக்கந்தவிர என்றது சிந்தனைசெய்தவாறே தெளிந்து மும்மலப்பழக்கத்தை விட்டொழித்தலை: உழப்புவது என்றது உபதேசப்பொருளைச் சிந்தித்துத் தெளிதலாகிய உழப்பைவிட்டு நூல்களைச்சிரவணமாத்திரஞ்செய்யும் உழப்பின்வழிநிற்றலை. என் என்றது அவ்வுழப்பு விட்டைகூடுதலாகிய பயனைக்கொடாதென்பதை.

# சித்தாந்தபோதரத்நாகரம்.

ஆன்மாவாகிய இவன் மும்மலத்தோடும் எப்பொழுதும் உள்ளவனாகலினானும், அம்மலகாரியங்களிலேயே பழகிவருகின்றவனாகலினானும், இவனுக்கு அறிகருவியுள்ள கருவிகரணங்களும் மாயாகாரியத்தினால் ஆனவைக ளாகலினானும், மலம் நீங்கும் பழக்கம் எவ்விதத்தும் இல்லாதவனாகலினானும், அம்மலப்பழக்கத்தைச் சொற்பழக்கமொன்றினால் நீக்குந்தன்மை யுடையவனாவனோ ஆகான். ஆகலான், ஆசிரியன் நின்மலப் பொருளாகிய இறைவனாகலின், அவ் வாசிரியவசனங்களைக்கொண்டு பாசநீக்கமெனப்படும் மலநீக்கமும், சிவமாந்தன்மைப் பெருவாழ்வெனப்படும் சிவானுபவமும்வர, சாஸ்திரங்களில் முயல்வதே பயன்தரும் முயற்சிவகையாம். ஆசிரியனை விட்டு நூல்களிற் பழகும்பழக்கம் பயன்தரும் முயற்சியாகாவென்றொழிக என்பதாம்.

இப்பாட்டான், தன்னறிவால் சாத்திரங்களை ஆராயும்பழக்கத்தைவிட்டுக் குருமொழியாற் பழகி, மலப்பழக்கத்தை ஒழிக்கவேண்டுமென்று கூறப்பட்டது. இதனால் களிற்றுருகும் அடிமைத்திறத்தை யுணர்ந்துந் திருவருள்ஞானத்தை விசேடித்தும், அடிமைத்திறத்தை உணர்த்தப் பெறாதபாசஞான பசுஞானங்களை இழித்துங்கூறியவாறுமாம்.

## திருக்களிற்றுப்படியார்.

௬. சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் தன்வச—
னமாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறுமே—ஆர்ந்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மையாய் இதனைச் செப்பு. (1)

௭. இன்று பசுவின் மலம் அன்றே இவ்வுலகில்
நின்ற மலம் அனைத்தும் நீக்குவதிங்—கென்றால்
உருவுடையான் அன்றே உரு அழியப் பாயும்
உரு அருள வல்லான் உரை. (2)

(எ - து.) ஞானாசாரியர் உபதேசிக்கும் வசனமாத்திரத்தினால் வாய்க்கத்தக்க பிரயோஜனம், ஞானசாஸ்திரங்களைத் தமது மதிநுட்பத்தால் ஓதுகின்றவர்களுக்கு வந்து கூடுமோ கூடா. ஏனெனில்,—தாகமுடையார், அலையினால் ஓசைமிக்க தண்ணியகடல் நீரைக் குடிப்பாராயின், அவர்கட்குத் தாகத்தாலுண்டாகிய விடாய் தணியப்பெறுமோ? தெளிந்த அறிவுடையவனே! இதனை நீயே சொல்லுவாயாக. (1) இவ்வுலகின்கண் அசுத்தமாகக்காணப்படும் மலவாசனைக ளனைத்தையும், இப்பொழுது போக்குவது பசுவின்மலத்தா லல்லவா, இங்ஙனமிருக்குமாயின், ஆன்மாக்களுக்குள்ள தேகாதிகளுக்குக் காரணமாகிய மலவாசனைகளைப்போக்கவல்ல ஞானசொரூபத்தை அனுக்கிரகஞ் செய்ய வல்லவன், அந்த நின்மலஞானமே திருமேனியாக வுடைய சிரியனல்லவா? இதனை நீயே சொல்லுவாயாக (2) என்பதாம்.

சற்குருவின் தன்வசன மாத்திரத்தே வாய்த்த வளம், சாத்திரத்தை யோதினர்க்கு வந்துறுமேசெப்பு (1) எனவும், இவ்வுலகில், நின்றமலமனைத்தும், இன்று நீக்குவது, பசுவின் மலமன்றே என்றால், இங்கு உருவு அழியப்பாயும் உருவு அருளவல்லான் உருவுடையானன்றே உரை (2) எனவுங்கூட்டுக.

இவ்விரண்டுபாட்டானும், உந்தியுட்கூறப்பட்ட ஆசிரியவசனத்தின் சிறப்பையும், அதனால் எளிதில் அடையப்படும் பெரும்பிரயோசனத்தையும், அவ்வாசார்யவசனத்தை விட்டு சாஸ்திர ஆராய்ச்சிசெய்யும் உழப்பினால் உழப்பேயன்றி வேறுபயனின்மையும் திட்டாந்தமுகத்தால் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் ஒருபொருள் என்றதை உருவழியப்பாயும் உருவருளவல்ல உருவுடைய சற்குரு எனவும், பழக்கம் என்றதை சாத்திரத்தையோதுதல் எனவும், பழகுவது என்றதை இன்று பசுவின்மலமன்றே இவ்வுலகில் நின்றமல

மலைக்கும் தவிர்த்தல் போல், வளம்வாய்ந்த சற்குருவின் தன்வசனமாத்திரமெனவு உழப்புவதென்றதை ஆர்த்தகடல் தண்ணீர்குடித்தவர்க்குத் தாகந்தணிந்திடுமோ (அது போல்)சற்குருவின் தன்வசனத்தைவிட்டுச் சாத்திரத்தை யோதுதல் எனவும், என் என லும் வினைபொருளைக்கொண்டு இதனைச்செட்பு எனவும், உரை எனவுங்கூறினார்.

அல்லதூஉம், மலம் அநாதியே யுள்ளதாகலின் நின்றாடலெனவும், அம்மலத்தின் காரியங்கள் பலவாகலான் அனைத்தும் எனவும், ஆசிரியவடிவம் அசத்தாகிய அம்மல மனைத்தையும் போக்கும் சத்ரூபமாகலான் ரூபநருவெனவும், அம்மலவாசனைகளைப் போக்கும்வகை பசுவின்மலமேபோ லெனவும், அப்பசுவின்மலமன்றி உலகிலுள்ள மலங்களைப் போக்குவது வேறொன்றின்மைபோல் ஆன்மாக்களிடத்துள்ள ஆணவாதிமலங்களைப் போக்குவது ஆசிரியவசனமன்றி வேறொன்றின்மையால் அவ்வாசிரியவுருவம் சிதருப உருவமெனவும், கடல்நீர் மேகசம்பந்தத்தால் உண்ணீராவதுபோல மலமீங்கப்பெற்ற ஆன்மாக்கள் வாக்குமனோதீதமாகிய சிவானந்தம் அனுபவிக்கப்பெறுதல் ஆசிரியர் தமது வசனத்தோடு சாஸ்திரார்த்தங்களைக் கலந்து உபதேசிக்கும் உபதேசங்களாலாகலான் அவரது உருவம் ஆனந்தருவ எனவும், இங்ஙனமான சச்சிதானந்த திருமேனி யுடையராகிய ஆசிரியரன்றி சச்சிதானந்த சாக்ஷாத்கார சிவானுபவமாகிய வளம், சாத்திரத்தை யோதினர்க்கு வாராதாகலான், சாத்திரத்தை யோதினார்க்கு வாய்த்தவளம வந்திறுமே எனவும் வகுத்துக்கூறினாரென்க.

இதனால் பழக்கந்தவிரப் பழகுவதன்றி உழப்புவது என் என்பதனைத் திட்டாந்த முகத்தானும், அனுபவமுகத்தானும் விளக்கிப் பின்னர் மாணவகனை நோக்கி, இனி நீ ஆசிரியவசனத்தினாலே மலப்பழக்கந்தவிரச் சிரவணாதிகளை நீங்காது பழகிவருவாயாக. ஆசிரியனை நம்மைப்போலும் உருவுடையனே என்றெண்ணி அவனைக் கைவிட்டு நீ சாத்திரம் ஓதுவதை விட்டொழிவாயாக என்று வலியுறுத்திக்கூறப்பட்டது.

ஆகவே, சாத்திரத்தை என்றதை சற்குருவின் தன்வசனத்தைக்கொண்டு பழகுவதாகிய உடன்பாட்டிற்கும், சற்குருவின் தன்வசனத்தை விட்டு உழத்தலாகிய எதிர்மறைக்கும் கொள்க. எனவே, குருவசனத்தைக்கொண்டு சாத்திரத்தைப் பழகவேண்டுமென்பது உடன்பாடெனவும், குருவசனத்தைவிட்டுச் சாத்திரத்தைப் பழகுவது உழப்பேயாகலான் அது எதிர்மறை எனவும் கூறியவாறுமென்க (உ)

கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற.

எ - து உ-ா என்சொல்லிய வாறோ எனின், ஆசிரியரைக்கொண்டு மும்மலப்பழக்கம் ஒழியப்பெற்றவர் பிறப்பிறப்பொழிவரென்றுசொல்லிற்று.

(இ - ள்.) காணும்படி அருளால்வந்ததிருவுருவத்தை ஆசிரியமூர்த்தியாகக்கொண்டு, ஞானசாதனமாகிய கருமங் கைகூடப்பெற்றவர்கள், நீரப்பற்றை யடையும்நெறியை யடையார் (அடையாராகவே) அவர்களுக்கு மீண்டும் சனனமுமில்லை, மரணமும் இல்லை என்க.

கண்டத்தையென்றது சிவம் குருவடிவாய் வரக்காணப்பெற்றதை. கருமம் என்றது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை. முடித்தவர் என்றது அந்த நான்கால் சிவானுபவம் வரப்பெற்றவர். பிண்டத்தில் வாரார் என்றது பிராரத்தானுபவத்தை அனுபவித்தற் கெடுத்த தேகத்தில் அப்பிராரத்தத்தை அனுபவிக்கும் இடைக்காலத்தில் விருப்புவெறுப்புக்களை யுண்டாக்கி அவ்வழியான் பிறத்தற்கிடஞ்செய்யும் ஆகாமியவினைக்கு இடங்கொடார். பிறப்பிறப்பில்லை என்றது சுவர்க்கம் நரகம் பூமி என்னு மூவிடத்தும்

அண்டாண்ட புவனகோடிகளிலும் செல்லுதற்குரிய பூதசாரசரீரம் யாதனாசரீரம் பூத பரிணாம சரீரம் ஆகிய சரீரங்களில் மாறிமாறி இறந்துஇறந்து பிறந்துபிறந்து வருவதாகிய தொழில் இல்லையாதல்.

இதனால் மலப்பழக்கங்கள் தவிர்தற்காகக கண்ட ஆசிரியரிடத்தில் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் இம்மூன்றின் முறைமைகளையும் நன்குணர்ந்து நிட்டை கூடுதலாகிய கருமத்தை முடித்துக்கொண்டவர் மேல் கீழ் நடு சுற்றுப்பக்கம் என்னும் எவ்விடங்களினும் போய்வருவதற்குரிய சரீரங்களில் வாரார். வந்துமரணமடைதலும், மீண்டும் சனனமெடுத்தலுமாகிய அல்லலை யடையாரென்க.

இப்பாட்டான் கருமமுடித்தல் இத்தன்மைத்தா மென்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்

அ. கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
அண்டத்தின் அப்புறத்த தென்னாதே—அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆரறிவும் சென்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று. (1)

எ . (அளவிடப்படாத பெரியவேதங்களுக்கும் அப்பாற்பட்ட (எட்டப்படாத) தாய், உள்ளதன்றோ சச்சிதானந்தரூபமாகிய சிவம், (அச்சிவசொரூப சாக்ஷாத்காரம் நமக்காதல் எவ்வாறென்று சொல்லுவதைவிட்டு,) தம்மால்காணப்பட்டதாகிய குருவடிவத்தைக் கொண்டு, தாம் செய்யவேண்டிய சிரவணாதிகளைச் செய்து, அச்சாதனங்களால் சொரூப சாக்ஷாத்காரத்தை முடித்துக்கொண்டவர், அண்டகோடிகளுடைய நிலைகளில், தம்மறிவைச்செலுத்தி நன்றாயுணரப் பெற்றவர்களால் சொல்லப்பட்ட அண்டங்களுடைய மேலிடங்களிலும், கீழிடங்களிலும், சுற்றுப பக்கங்களிலும் போய் காணத்தக்கவராகார். எனவே அவ்விடங்களில் பிறந்திறக்குந் தொழிலை யுடையவராகார் (1) என்பதாம்.

அண்டத்தின் அப்புறத்தது என்னாதே கண்டத்தைக் கொண்டு கருமமுடித்தவர் யாரறிவும் சென்றறியும் என்றுகூட்டுக.

இப்பாட்டான் உந்தியுள்கூறப்பட்ட குருவடிவத்தைக் காண்டற்கெளிய உருவமென் றெண்ணாது. காண்டற்கரிய பரம்பொருளுருவமெனக் காணல்வேண்டுமென்றும், அங்ஙனங் கண்டபின்னர் அவ்வாசிரியரால் பிறவாநெறிக் கேதுவான அரிய ஞான கருமத்தை முடித்துக்கொண்டவரே, எங்கும் பிறப்பதற் கிடமில்லா தொழிவரென்றும் விதந்து கூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் கண்டத்தை என்றதை அண்டத்தின் அப்புறத்தது என்றும், கொண்டுகருமமுடித்தவரென்றதை என்னாதே கொண்டு கருமமுடித்தவரே என்றும், பிண்டத்தில்வாராரென்றதை கண்டவர்களின்று என்றும், பிறப்பிறப்பில்லை என்றதை ஆர் அறிவும் சென்றறியும் அண்டத்தினப்புறமும் இப்புறமும் எப்புறமும் என்றுங்கூறினார்.

"பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார் ஆராலுங் காண்டற்கரியான், எமக்கெளிய பேராளன் தென்னன் பெருந்துறையான்" எனவும், "வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும், கால்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய, தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்டு" எனவும், "செங்கணெடுமாலும் சென்றிடந்துங் காண்பரிய" எனவும், தமது ஆசிரியர் திருவுருவத்தினது அருமையும், அவ்வரிய வுருவுடைய இறைவனது கருணையும் தோன்றுமாறு கூறிய மணிவாசகத்திறத்தையே கண்டுணரவேண்டுமென்பார் கண்டதாகியகுருவடிவத்தை அண்டத்தினப்புறத்தது எனவும், அங்ஙனமான அரியபொருள் குருவடிவங்கொண்டுவந்தது "காட்டாதனவெல்லாங் காட்டிச்சிவங்காட்டித் தாட்டாமரைகாட்டித், தன்கருணைத்தேன்காட்டி, நாட்டார் நகைசெய்ய

நாமேலை வீடெய்தவேயாகலான் அக்குறிப்புணர்ந்து, குருவடிவத்தைக் காணப்பெறுதார் எண்ணுவதுபோல் எண்ணும்எண்ணத்தை யொழிக்கவேண்டு மென்பார் என்றதே எனவும், அவ்வெண்ணத்தையொழித்து அக்குருவடிவத்தைக் கொண்டு சாத்திரங்களாற் காட்டாதனவெல்லாங் காணவும், அங்ஙனங்கண்ட வுணர்ச்சியால் சிவத்தைக்காணவும், சிவத்தைக் கண்டபின்னர் அந்தஞானக்கிரியைகள் தனது ஞானக்கிரியைகளோடுகலந்து அவைகளால் விரும்பப்படுவனவாகிய வேம்பெனப்படும் சிற்றின்பங்களையெல்லாம் தீங் கரும்பெனவே நுகர்வித்து, அங்ஙன நுகருங்கால் அவைகளிலுள்ள வேம்பின் திறத்தைக்காட்டி, அச்சிற்றின்பானுபவத்தை யொழித்துப் பின் பேரின்பத்தேனை நாடும் நாட்டத்தைத்தரும் கருணையை நாடவும், அந்நாட்டம் மேலிடுங்காலத்து உலகத்தாராகிய நாட்டார் நகைசெய்தலைக் காணவும், அதனைக்கண்டு நாணுது மகிழ்ந்து, பின்னர் பிறவியிற்பட்டுப் பாழ்படுதலைவிட்டு, பிறவாநெறியாகிய வீடெய்துவதில் விரையவும் வேண்டுமென்பார் கொண்டுகருமமுடித்தவரே எனவும், இங்ஙனங் கூறிவந்தமுறைபபடி கண்டத்தைக்கொண்டு கருமமுடித்து எல்லாநிலங்களுக்கு மேனிலமாகிய வீட்டினைச்சேர்ந்தவர்க்குப பிண்டத்தில்வரும்வழி யடைபடுமென்பார் கண்டவர்களின்றுஎனவும், மேனிலமாகிய வீட்டினைச்சேராதவர் சேருமிடங்கள் இத்தனையாமென்பார் அண்டத்தின் அப்புறமும் இப்புறமும் எப்புறமும் எனவும், அப்புறமென்றது சுத்தமாயா புவனமெனவும், எபபுறமென்றது சுத்தாசுத்த மாயாபுவனமெனவும், இபபுறமென்றது அசுத்தமாயா புவனமெனவும் அபபுவனங்களெல்லாம் ஒருமலம் இருமலம் மும்மலம் என்னும் மலங்களையுடையார் ஆங்காங்குஞ் சென்று ஆங்காங்குள்ள விடயங்களை நுகர்ந்த நிலங்களாயும், மும்மலப்பற்றொழிந்த சுத்தான்மாக்கள் அந்நிலபபற்றுக்களை யொழிக்கவேண்டி நூல் வழியான் அறியபபடுவனவாயும உள்ளனவாயிருத்தலென்பார் ஆம் அறிவும் சென்றறியு மெனவுங்கூறினர்.

இதனால் சொரூபமாத்திரமாகவே யிருக்கும் இறைவன் தடத்த வுருவங்கொள்ளுதல் அனுக்கிரகிக்குநிமித்தமே யாகலினானும், அங்ஙனங் கொண்டுவரினும அவ்வுருவம் இபபிரகிருதிவுலகில் நிற்றல் கூடாதாகலினானும், அவ்வுருவததைக கண்டபொழுதே கேட்டல்முதலிய மூன்றினும் தீவிரமிருத்தல் வேண்டுமெனவும், தீவிரமற்றிருபபின் பிண்டத்தில்வந்து போதலென்னும் பெருந்துன்பமாகிய அல்லல் நீங்காதெனவும், ஆகலின் மாணவகன் கண்ட ஆசிரியவடிவத்தைக்கொண்டு அபபுறம் இபபறம் எபபுறமென்னும் எவ்விடங்களிலும் சேராவண்ணம ஞானநெறியாகிய சன்மார்க்கத்தில் தலைப்பட்டிருத்தல் வேண்டுமென்று வலியுறுத்தபபட்டது.

அபபுறத்ததென்றதே என்றதனால் வேதங்க...... ...க்குமனாதீதமென்று சொல்லபபடுமானால் அப்பரம்பொருளை நாம் எவ்வாறு கேட்கக் கூடுமெனவும், கேட்டாலன்றோ சிந்திக்கலாமெனவும், சிந்திக்கவந்தாலன்றோ தெளியலாமெனவும், தெளிந்தாலன்றோ நிட்டைகூடவருமெனவும், எண்ணிச் சோர்வடையும் மந்தபரிபாகிகளது இலக்கணத்தையும்; கருமமுடித்தவரே என்றதனால் இது சாதிக்கற்பாலது, இது சாதிக்கப்பாலதன்று என்றெண்ணுதலொழிந்து பிறவிககஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையவராய் குருவடிவத்தைக்கண்டு கருமத்தை முடித்துக்கொள்ளும் தீவிரதரமுடைய அதிகாரிகள் இலக்கணத்தையுங் கூறியவாறுமாம்.

இச்செய்யுளுக்கு - ஞானத்தினிலக்கணமாகவும், அதனுடைய அனுபவ இலக்கணமாகவும் உரைகூறியுள்ளார்; அவ்வுரை ஈண்டு சிறிதும்பொருந்தாதென்க. (௩)

எங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙன் இருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற.

எ - து. உ - ர். - என்சொல்லியவாறோ வெனின், கண்டத்தைக்கொண்டு கரும முடித்தவர்க்கு உண்டாகும் சுகம் சொல்லமுடியாதென்று சொல்லிற்று.

(இ - ள்.) ஆசிரியரைக்கொண்டு சிரவணாதிகளால் நிட்டைகூடிய அவ்விடத்திற் காணும் சிவசொரூபமும், அச்சொரூபத்தால் விளையும் இன்பசுகமும் எதுபோ லிருந்த தென்று எப்படிச்சொல்லுகேன்? சொல்லமுடியாது, நீயும் உன்னறிவால் அறியப்படும் தன்மை யுடைத்தானதும் அன்று என்க.

அங்ஙனிருந்தது, எங்ஙனிருந்த தென்றுகூட்டுக.

அங்ஙன் என்றது இடம். அஃதாவது - கருவிகரணச் சேட்டையற்றுச்சீவன் சிவத்தைநோக்க, சிவம் தன்னைநோக்கும்படி அதுவரையில் செய்துவந்த செயலைவிட்டு அச்சீவனை நேர்நோக்க, அவ்விருநோக்கமுங் கூடுமிடம். இருந்தது என்றது அவ்விடத்தில் விடயானந்தத்தை யழித்தெழுந்த சிவானந்தம். எங்ஙனிருந்தது என்றது அவ்வானந்தம் இப்படியன் என்றெண்ண வொண்ணாத சிவனது ஆனந்தமாம். ஆகவே எவ் வண்ணஞ்சொல்லுகேன் என்றார்.

இப்பாட்டான், சிவனைப்போல் சிவானந்தமும சொல்லவொண்ணாத தென்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

கூ. அன்றுமுதல் யாரேனும் ஆளாய் உடனாகிச்
சென்றவர்க்கும் இன்னதெனச் சென்றதிலை—இன்றிதனை
எவ்வா றிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அவ்வா றிருந்த தது. (1)

கO. ஒன்றும் குறியே குறியாதலால் அதனுக்
கொன்றும் குறியொன்றி லாமையினால்—ஒன்றோடு
உவமிக்க லாவதும் தானில்லை ஒவ்வாத்
தவமிக்காரே இதற்குச் சான்று. (2)

(எ - து.) (இன்றயான்ஒருவனன்று) அன்று(அநாதி)முதலாக,) என்னைப்போலும் ஆரியர்களாய்ப் போதிக்கவந்த சிவானுபூதிமான்களாகிய எவ்வளவு பெரியோர்களாலும், தங்கட்கு ஆட்பட்டுத் தேசத்தைவிட்டுப் பிரியாத நிழல்போலும் தம்முடனிருந்து வழிபட்டுக்கேட்டு, கேட்டவண்ணஞ் சிந்தித்துத் தெளிதலில் சென்றவர்கட்கும், சமாதியனுபவத்தி லுண்டாகும் சிவானந்தம் இத்தன்மைத்தாமென்று சொல்வதற்குத் தெரிந்ததில்லை. அங்ஙனமான அருமையுடைத்தான அவ்வானந்தத்தை, இப்பொழுது எப்படி யிருந்ததென்று எவ்வகையாகச் சொல்லுவேன், மாணவகனே! சொல்லும்வகை யற்றதாகிய அந்நிலையில் அவ்வானந்தம் இருந்தது(1) அவ்வானந்த சிவசொரூபத்திற்குச் சமானமான ஓரடையாளம் ஒன்றும் இல்லாமையினால், அவ்வானந்த சிவசொரூபத்தை யடையப்பெற்றவர், அவ்வானந்த நிலையராய்ச் சும்மாயிருப்பதே அடையாளமாம். அல் லான் அச்சிவானந்த சொரூபத்தோடு ஒப்பாகச்சொல்வதற்கு ஒருபொருளு மில் யாயிற்று. ஆகவே ஒருவரோடுஞ் சேர்த்து எண்ணப்படாத தவத்திற்சிறந்த சும்மா யிருப்பவராகிய சிவயோகிகளே சாக்ஷியா யிருப்பவர் (2) என்பதாம்.

இதனை இன்று எவ்வண்ணஞ் சொல்லுகேன் (1) எனவும், அதனுக்கு ஒன் றுங்குறி ஒன்றிலாமையினால் ஒன்றுங்குறியே குறி ஆதலால் - ஒன்றோடு உவமிக்க லாவதும் தானில்லை (2) எனவும் கூட்டுக.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ஞானசம்பந்த குருப்யோ நம:

# திருத்தொண்டர் புராணம்

என்னும்

# பெரியபுராணம்.

## (முதற்காண்டம்.)

### பாயிரம்.

#### நடராஜமூர்த்தி வணக்கம்.

*உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.*

(என்பது)—பொன்னம்பலமாகிய திருவம்பலத்தின்கண் நடனமூர்த்தியாய் நின்றருளும் இறைவன் அலகில் சோதியன். அதனால், உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன். அரியவனாயினும், அவ்விறைவன் நிலவுலாவிய நீர்மலிவேணியனைக் காண்டலின் அவனது சிலம்பணிந்த மலரடியை நாம் வாழ்த்தி வணங்குவாம் என்பதாம்.

அம்பலம் என்பது - பரமாகாசம் என்க. எனவே, ஆகாசம், வாயுவாதி பூதங்களுக்கும் அவற்றின் காரியங்களுக்கும் தாரகமாய், வியாபகப்பொருளாய், வெளியிடமாயிருப்பதுபோல், அம்பலம் - பரசிவத்துக்கும் பரசிவபேதங்களுக்கும் ஆதாரமாய், வியாபகப்பொருளாய், வெளியிடமாயிருப்பதாலும், பூதசம்பந்தமாயுள்ள ஆகாசம் சடரூபமாய்ச் சடரூபங்களுக்குத் தாரகமாய், அவை தத்தமதொழில்புரிய இடங்கொடுத்திருப்பதுபோல், அம்பலம் - சித்பரவியோமமாய், சிவசொரூபத்துக்குத் தாரகமாய், அச்சிவசொரூபம் பஞ்சகிருத்தியங்களைச்செய்ய இடங்கொடுத்திருப்பதாலும், முத்தான்மாக்கள் புகுந்தொடுங்குதற்கு இடமாயுள்ள பலப்பிரயோஜன ரூபமாயிருப்பதாலும் அம்பலம் என்றதென்க.

அலகில்சோதியன் என்பது - ஞானரூபன். எனவே, இருளை அப்பிரகாசப்படுத்தும் சூரியப்பிரகாசம்போல், ஞானம் அஞ்ஞானவிருளை அப்பிரகாசப்படுத்தும் ஆற்றலையுடைய சோதியாயும், சூரியப்பிரகாசமானது உதிப்பதாய் இருப்பதும் போவதுமாகிய அளவினையுடையதாகலின் அதுபோலல்லாமல், ஞானம் ஆதிமத்தியாந்தமற்றதாயும், அஃதாவது இடையேவந்து கலப்பதென்பதின்றி அநாதியேயுள்ளதும், முத்தி என்னும் எல்லையையடைந்தகாலத்து நீங்கியுள்ளதுமான நிகளமாம் ஆணவமூலமலத்தை

அகல்விக்கவல்ல அளவிறந்த பிரகாசத்தை யுடையதுமாகிய அந்த மெய்ஞ்ஞானசொரூபத்தையே தனது திருமேனியாகக்கொண்டிருத்தலால் அலகில்சோதியன் என்றதென்க.

உலகெலாமுணர்ந்தோதற்கரியவன் என்பது-அறிவதற்கும் சொல்வதற்கும் கூடாதவன் என்க. எனவே, ஆன்மாக்களுட்சிலர் சுத்தமாயையால் ஆக்கப்பட்ட தநுகரணபுவனபோகங்களையுடைய ஆன்மவர்க்கங்களாயும், அசுத்தமாயையால்ஆக்கப்பட்ட தநுகரணபுவனபோகங்களையுடைய ஆன்மவர்க்கங்களாயும், பிரகிருதிமாயையால் ஆக்கப்பட்ட தநுகரணபுவன போகங்களையுடைய ஆன்மவர்க்கங்களாயும் உள்ளவர். இவ்வான்மாக்களுடைய ஞானமும் கிரியையும் ஒருமலத்தாலும் இருமலத்தாலும் மும்மலத்தாலும் கவரப்பட்டுள்ளனவாயிருத்தலால், (அஃதாவது, அறியுந்தன்மையுடைய ஞானமும், சொல்லுஞ்செயலுடைய கிரியையும் மலசம்பந்தப்பட்டுள்ளனவாயிருத்தலால்) உணர்ந்தோதற்கரியவன் என்றதென்க.

நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்பது - அலகில்சோதியாயும், உலகெலாமுணர்ந்தோதற்கரியதாயும உள்ள நிஷ்களத்திருமேனியோடு சகளத்திருமேனியையும் உடையவன் என்க. எனவே, நிஷ்களத்திருமேனியால் ஆக்கப்படும் அருட்பந்தத்தில் ஆன்மாக்களைப் பவச்செய்தலாகிய சிவானந்தப்பெருக்கு மருட்பந்தமாகிய மலபந்தம் நீங்கினாலன்றி அவ்வானந்தப்பெருக்குப் பரவாதாகலான், அதுபரவுமாறு அப்பந்தத்தைநீக்குவது சகளத்திருமேனியாயிருத்தலால், நிலவுலாவிய நீர்மலிவேணியனையன் என்றதென்க.

மலர்சிலம்படி என்பது - வேதச்சிலம்பொலிக்கும் அருளுருவாகிய மலரடி என்க. எனவே, மருட்பந்தமாகிய மலபந்தத்தை நீக்குவதும், அருட்பந்தத்தில் பரவச்செய்வதும், அது கூட்டுஞ்சிவானந்தமும் அருள் அடியா (முதலா)யிருத்தலாலும், அவ்வுண்மைதோன்றவே வேதவொலி சிலம்பொலிபோல் அவ்வடியில் நீங்காதிருந்து ஒலித்துக்கொண்டிருத்தலாலும், மலர்சிலம்படி என்றதென்க.

வாழ்த்திவணங்துவாம என்பது-அடியுருவாயிருக்கின்ற அருளைவாழ்த்துவதும், அருளுருவாயிருக்கின்ற அடியை வணங்குவதுமே சிவனருள்கூடுவதற்குவாயிலாயிருத்தலால் வாழ்த்திவணங்துவாம் என்றதென்க.

இதனுல் அம்பலம் என்றது - சிதாகாசமெனப்படும் சித்பரவியோமத்தையும், அலகில்சோதியன் என்றது - மெய்ஞ்ஞானசொரூபத்தையும், உலகெலாம் என்றது - மூவகை ஆன்மாக்களையும, உணர்ந்தோதற்கரியவன் என்றது - அவ்வான்மாக்களுடைய ஞானகிரியைகளைச் சுட்டிக்காட்டும் மொழிகளையும், நிலவு என்றது - மலமாகியகளங்கம் மெல்லமெல்லவொழிந்து முத்திநிலைகூடிய ஆன்மாக்களுடைய நிலையைக்காட்டும் ஓர் அடையாளப்பொருளையும், நீர்மலி (கங்கை) என்றது - முத்திநிலைவரப்பெற்ற ஆன்மாக்களுள்ளத்தில் பரவிக்கிடக்கும் சிவானந்தப்பெருக்கு நிற்குநிலையைக்காட்டும் ஓர் அடையாளப்பொருளையும், வேணி என்றது - சராசரமாய் விரிந்துகிடக்கும் சர்வான்மாக்களுக்கும் தான் இடமாய்நின்று அடக்கியாளும் தன்மையைக்காட்டும் ஓர் அடையாளப்பொருளையும், சிலம்பு என்றது - இவ்வுண்மைகளைமுறையே ஓசையெலாமற்ற சிவயோகநிலையில் வேதமானது வேதாந்தமாகிய சிற்றொலி (சிலம்பொலி)யாய் உணர்த்துந்தன்மையைக்காட்டும் ஓர் அடையாளப்பொருளையும், மலரடி என்றது - நிஷ்களசொரூபத்தியானத்தில் விளையும் அருளையும்,தடத்தசொரூப வழிபாட்டில் விளையும் அன்பையும் விளைவிக்கும் ஓர் அடையாளப்பொருளையும், வாழ்த்திவணங்துவாம் என்றது மேற்கூறிய இருவகைப்பொருள்களில் சுட்டுமொழியுட்பட்ட பொருள்களை உள்ளுந்தோறும் வாழ்த்த இச்சையுண்டாமாகலான், அது முற்றுப்பெறச் சொரூபத்திருமேனியையும், அடையாளப்பொருள்களை உள்ளுந்தோறும் வணங்க இச்சையுண்டாமாகலான், அது முற்றுப்பெறத் தடத்தத்திருமேனியையும் ஆடுவானுடையான் என்னும்உண்மையையுணர்த்தியவாறுமென்க. அன்றியும்ஆடுவான் என்றதன் சிறப்பொன்றையே கூறியதுமாம்.

அம்பலத்தாடும் இறைவனே - உலகெலாம் உணர்ந்தோதற்கரிய நிஷ்களத்திருமேனியும், நிலவுலாவிய நீர்மலி வேணியையுடைய சகளத்திருமேனியும் உடைய பரசிவம் என்று குறித்தது மாமென்க.

இங்ஙனங் குறித்தவையெல்லாம் யாதுநோக்கியெனின்:—கேட்டலாகிய சிரவண காலத்து-உணர்ந்தோதற்கரிய நிஷ்களசொரூப தரிசனமும், சிந்தித்தலாகிய மனனகாலத்து நீர்மலி வேணியோடுகூடிய சகளசொரூப தரிசனமும், தெளிதலாகிய நிதித்யாசனகாலத்து அலகில் சோதியாகிய ஞானசொரூப தரிசனமும், நிட்டையாகிய சமாதி காலத்துச் சிற்பரவியோமத்தில் நடிக்கும் கிரியாசொரூபதரிசனமுந்தந்து, அந்நால்வகைத் தரிசனத்தினுல் தம்மைத் தரிசனஞ்செய்யும் ஆன்மாக்களாகிய காண்போர்களையும், தரிசனத்தைக் காட்டுவான் எனப்படும் நடராஜமூர்த்தியாகிய தம்மையும், தம்மால் காணப்படுவதாகிய ஞேயப்பொருளையும், * இழந்துபோதலொழிந்து † சிவமேசிவமாகச், சிவமாகியே யிருப்பதாகிய ஆனந்தவெல்லையில் இருத்தித், தமது தனிப்பெருங்கூத்தில் பெருகிவரும் பேரின்பவெள்ளத்துள், காண்பவர்களாகிய ஆன்மாக்களைக் காட்டுவானுகிய தாம், திளைத்திருக்கச்செய்ய, அத்திளைப்பில் அவ்வான்மாக்களால் காணப்படும் சிவமாகிய ‡ ஞேயப்பொருளில், மாறுதமகிழ்ச்சியுள் மலர்ந்திருக்கச் செய்வனென்னும் உண்மையும் உணர்த்தற்காமென்க. அல்லதூஉம், உலகெலாம் உணர்ந்தோதற்கரியவ னென்றதனுல்-நிஷ்களத்திருமேனியின் இலக்கணத்தையும், நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்றதனுல்-சகளத்திருமேனியின் இலக்கணத்தையும், அலகில்சோதியன் அம்பலத்தாடுவான் என்றதனுல்-நிஷ்களசகளத் திருமேனியின் இலக்கணத்தையும் உணர்த்தியவாறுமாம்.

எங்ஙனமெனின், நடராஜனுகிய இறைவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தூயவுடம்பினனுகலானும், இயற்கையுணர்வும் முற்றுமுணர்வும் உடையவனுகலானும், அவ்விறைவனை இயல்பாகவே பாசங்களினின்று நீங்காதவர்களும், அருளுடம்பாகிய தூயவுடம்பற்ற மாயாவுருவங்களுடையவர்களும், செயற்கையுணர்வும் சிற்றுணர்வும் ஆகிய உணர்வினையுடையவர்களுமே ஆன்மாக்களாதலால் அவ்வான்மாக்கள் எங்ஙனம் உணர்ந்தோதற்குரியவராவர். ஆகவே உலகெலாமுணர்ந்தோதற்கரியவனுயினன். இது நிஷ்களத்திருமேனியி னிலக்கணத்தைக் குறித்தது.

§ "அநாதி சிவனுடைமையால் எவையும் ஆங்கே, அநாதியெனப் பெற்ற அனுவை,-அநாதியே, ஆத்தத்துயர்அகல அயபிகையோடு எவ்விடத்தும், காத்தல் அவன் கடனே காண்." என்ற திருவாக்கின்படி ஆன்மாக்கள் தம்மை யுணர்ந்தோதற்கரியவராயினும் அவ்வான்மாக்களை இறைவன் உடைமையாகப் பெற்றுள்ளானுகலான் அவர்கள் தம்மை யுணர்ந்தோதும்வண்ணம் பேரருளுடைமையால் நிலவுலாவிய நீர்மலிவேணியனுயினன். இது சகளத்திருமேனியி னிலக்கணத்தைக்குறித்தது.

பேரருளுடைமையால் அருளுருக்கொண்டது:—ஆன்மாக்கள் தம்மையுணர்தற்கும் ஓதற்குமேயாகலின், அவர்களுக்கு அவ்விரண்டுங் கூடுமாறு தமது முடிவிலாற்றலுடைமையால் பந்தமாகிய அஞ்ஞானம் ஊனமாம்வண்ணம் ஊனநடனமும், ஞானம் வளரும் வண்ணம ஞானநடனமும் செய்தருளுகின்ற ஞகையால், அம்பலத்தாடுவானுயினன். அந்நடனத்தால் ஊனம் ஒழிந்து, ஞானம் வளர்ந்தபின்னர், வரம்பிலின்பமுடைய சிவா

---

* 'இழந்துபோதல் ஒழிந்து' என்றதை, வினவெண்பா. "காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை காண்பார்கள் நன்முத்தி காணர்கள்" என்றதனுற்காண்க. † 'சிவமேசிவமாக' என்றதைத் திருக்களிற்றுப்படியார் "சிவமே சிவமாக யான்நினைந்தாற் போலச்சிவமாகியே யிருப்பது" என்றதனுற்காண்க. ‡ ஞேயம்-சிவம். § திருக்களிற்றுப் படியார்.

னந்தத்திற்கு எல்லையாகிய குஞ்சிதபாதத்தி லிருத்தி, எல்லையில்லாத அகண்டாகார சொரூபத்தில் மாறாது மகிழ்ந்து, நிலயத்தராகவே யிருக்கச்செய்கின்ற ஞானையால் அலகில்சோதியன் ஆயினனென்க.

ஓர் திருமேனியே கொண்டு, ஓர்திருவடியால் ஊனநடனமும், ஓர் திருவடியால் ஞானநடனமும், செய்தருளுகின்றபடியால் இது-சகளநிஷ்களத்திருமேனியின் இலக்கணத்தைக் குறித்தது.

எனவே,நடனஞ்செய்தல்-சகளமும், அந்நடனத்தால் பந்தமொழித்து அகண்டாகார சொரூபத்தில் மாறாது மகிழ்ந்த தன்வசபத்தராகச் செய்தல் நிஷ்களமும் ஆகலின், அலகில்சோதியன் அம்பலத்தாடுவானென ஒருமுடிபாக்கி சகளநிஷ்களத் திருமேனியாகக் கூறியதென்க.

இனிச் சேக்கிழார்பெருமான் நடராஜபெருமானை வணங்கி வாழ்த்தி, எம்பெருமானே! அன்று திருவாரூரின்கண் தொண்டர்சீர்பரவத் திருவுளங்கொண்ட உமது தோழராகிய வன்றொண்டப் பெருமானுக்குத், 'தில்லைவாழந்தணர்' என ஓரடி யெடுத்துக் கொடுத்தருளினீர். அப்பெருமானார் அறிவிற்பெரியராதலின் அவ்வடியாகிய அருளே முதலாகக்கொண்டு திருத்தொண்டத்தொகையை முடித்தருளினார். இன்று அப்பரவை மணாளரை பரவி அவரருளிய திருத்தொண்டத் தொகையை விரிவாகக்கூற எண்ணியுள்ளேன்! யானோ அறிவிற் சிறியேன்! இதனைக் கூறவல்லேனோ? அல்லேனாகலின், நாதப்பெருமானே! இவ்விரிநூல் முற்றுப்பெறுமாறு அருளால் ஒரு பெருமொழியை எடுத்துக்கொடுத்து முற்றுப்பெறச் செய்யவேண்டும் என்று வேண்ட வேண்டியாங்கே அருளும் நடராஜவள்ளல் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுத்தருளினர்.

அருளலும், ஆசிரியர் சேக்கிழார் அத்திரு அடியைத் திருவருளுணர்ச்சியான் ஆராய்வாராயினார். அவ்வாராய்ச்சியாதெனின், நாயன்மார்களில் ஒருவராக எண்ணப்படும் அந்தணர்களைத் தில்லைவாழந்தணர் என்று ஒரு தொகைமொழியை நம்பெருமான் நமது சுந்தரமூர்த்திகட்கு ஓரடியாக எடுத்துக்கொடுத்தனர். அவர் சங்கிலிகாதலராகலின் அத்தொகைமொழியை முதலாகக்கொண்டு ஏனைய தொகையடியார்களையும், தனியடியார்களையுங் காட்டும் தொகைமொழிகளையும், தனிமொழிகளையும் புணர்த்தி, திருத்தொண்டத் தொகையைப் பாடிமுடித்தருளினர். அதுபோலும ஒருநாயன்மாருடைய சரித்திரத்தை விரித்துக்கூறவல்ல ஓர்விரிமொழியை அடியேமாகிய நமக்கு ஆரம்பமாகத் திருவாய் மலர்ந்தருளாது, நாயன்மார் அனைவரையும் குறிக்கும் உலகெலாம் என்னும் ஓர்பெரிய விரிமொழியைத் திருவாய்மலர்ந்தருளினர். நாம் சங்கிலிதோள் நயந்தோரது திருவடியின்கண் நமது நெஞ்சத்தைப் பூட்டியுள்ளேமாகலின், தில்லைவாழந்தணர் என்னுந் தொகைமொழியைக்கொண்டு அவர் நாயன்மார்களைத் தொகுத்தோதியதுபோல் நாமும் உலகெலாம் என்னும் ஒருமொழியாகிய இவ்விரிமொழியால் நாயன்மாரது சீர்த்திமுற்றும் விரித்துக் கூறவல்லுநராவேம் என்னுங் குறிப்பையும், சங்கிலித்தோள் நயந்தோரது திருவடித் தியானவிசேடத்தையும் நமக்கறிவுறுத்தியதுபோலுமாம். என்றிவ்வாறு சேக்கிழார் உணர்ந்து, பின்னர் உள்ளங்களிகூர்ந்து "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்னுந் திருப்பாசுரத்தைப் போதியருளினார்.

உலகெலாம் என்று அடி யெடுத்துக்கொடுத்த பெருமானை, அவனது அரியபெருமையும் அவனது சொரூபத்தையும் கூறி வாழ்த்தி வணங்கவேண்டுவது முறைமையாகலின், அம்முறைமைக்கேற்ப உணர்ந்தோதற்கரியவனென்று அவனது அரியபெருமையையும், அலகில்சோதியன் அம்பலத்தாடுவான் என்று அவனது சொரூபத்தையும், வாழ்த்துவதற்கான முடியை நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்று அவ்விரண்டையாளங்களோடு வாழ்த்தினாரெனவும், "உலகெலாம்" என் றடியெடுத்துக் கொடுத்ததனால் தம்

மாட்டுப் பேரருளுடைமையும், அவ்வடியைக்கொண்டு புராணத்தை முடிக்கும் முடிவிலாற்றலையும் தமதுள்ளத்து உடனுயிருந்து காட்டுதலால், அவ்விருகுணங்களைக்காட்டும் அவ்விரண்டடையாளங்களைச் சிறப்பித்துக் கூறினாரெனவுங்கொள்க.

வாழ்த்துதற்குப் பேரருளுடைமையும், முடிவிலாற்றலுடைமையும் மிகச்சிறப்புடைத்தாகலின், அதுநோக்கியும் முடிக்கண்விளங்கும் அவ்விரண்டையும் சிறப்பித்து வாழ்த்தியதூஉமாம்.

பேரருளுடைமையில் தன்வயத்தனாதலும், தூயவுடம்பினனாதலும், இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்குதலுமாகிய மூன்றுகுணங்களும், முடிவிலாற்றலுடைமையில் இயற்கையுணர்வினனாதலும், முற்றுமுணர்தலுமாகிய இரண்டுகுணங்களும் அடங்குதலின் அச்சிறப்புநோக்கி வாழ்த்தியதூஉமாம்.

உலகெலாம் என்ற அடியைக்கொண்டு நடக்கும் இப்பெரியபுராணமுற்றும் அம்மலர்சிலம்படியின்கண் உள்ள வரம்பிலின்பம் அமைந்திருக்கவேண்டுமென்று வாழ்த்தியதூஉமாம்.

இனி வணங்குதற்கெடுத்துக்கொண்ட திருவடியின்கண் வரம்பிலின்பமுடைத்தாகலின் அதனை வேதமாகிய சிலம்பு ஓயாது எடுத்துக்கூறுவதுபோல ஒலித்துக்கொண்டு இருத்தலின் அச்சிறப்புநோக்கி மலர்சிலம்பென்று அவ்வடையாளத்தைச் சிறப்பித்து வணங்கியதூஉமாம்.

அயனும் அரியும் காண்டற்கரியனவாய்க் காணுதொழிந்த அடிமுடிகளை அன்பரெல்லாம் ஆனந்தத்துடன் காணச் சிற்றம்பலம் இடங்கொடுத்ததாகலின் அச்சிறப்புநோக்கி அலகில்சோதியன் அம்பலத்தாடுவான் என்றதூஉமாம்.

ஒருலகோ ஒருபதியோ என்றற் றொடக்கத்தனவாகிய பெருமைவாய்ந்த பெரியோரது புராணத்தை இங்கு யான் முடித்து அதனை அன்பரெல்லாங்காண இவ்வம்பலம் இடங்கொடுத்ததாகலின் அச்சிறப்புநோக்கி ஆடுவான் அம்பலம் என்று கூறியதூஉமாம்.

இதுகாறும் கூறிப்போந்தனவேயன்றி உணர்ந்தோதற் கரியவனும், நிலவுலாவிய நீர்மலிவேணியனும், அலகில்சோதியனும், அம்பலத்தாடுவானும் ஆகிய நடராஜமூர்த்தி, உலகெலாம் என்று அசரீரியாய் ஓசைபடத் திருவாய்மலர்ந்த அவ்வடியை நாம் வாழ்த்தி வணங்குவாம் என்றதூஉமாம்.

உலகெலாம் என்னும் அடியைக்கொண்டு நடக்கும் இப்பெரியோர்புராணம் உலகெலாம் நிலவிவுலாவவும், அலகில்சோதியாய்ப் பிரகாசிக்கவும், மலரடியின்கண் வேதம் சிலம்பா யொலித்துக்கொண்டிருப்பதுபோல் உலகெலாமென்னும் இவ்வேதமொழியும் அவனடியில் ஒலித்துக்கொண்டிருக்கவும் வாழ்த்திவணங்குவாம் என்றதூஉமாம். அன்றியும் பூஜாகாலங்களில் மந்திரபுஷ்பம் ஓதுங்கால் வேதங்கள் ஓதப்பட்டுவருதல்போல் உலகெலாம் என்பதை முதலாகக்கொண்ட இப்புராணமும் ஓதப்பட்டு வரவேண்டும் என்பது ... மாம்.

உலகெலாம் என்னும் ஒருமொழியை ஆங்காங்கு புணர்த்திக்கூறும் இப்பெரிய புராணம் அன்பற்ற புறச்சமயிகள், உணர்ந்தோதற்கரியதாய், அன்புள்ள அகச்சமயிகள் கண்டு களிக்கத்தக்க கங்கையாகிய நீர்போல் பரந்தெழுந்து ஆழ்ந்த பொருளுள்ளதாய், சித்தாந்த சைவர்கள், அம்பலத் தாடலைக்கண்டு களிப்பதுபோல் ஆனந்திக்கத் தக்க பேரின்பை விளைவிப்பதா யிருத்தல்வேண்டுமென்று வாழ்த்திவணங்குவாம் என்றதூஉமாம்.

உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான் மலர்சிலம்படி.
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம். வாழ்த்திவணங்குவாம்.

இவ்வாறு முதனிலை கடைநிலைகளாகப்பிரித்து முதனிலையைச் சத்திப்பிரணவ வணக்கமாகவும், கடைநிலையைச் சிவப்பிரணவ வணக்கமாகவும் கொள்க. உகரம் - சத்தி அகரம் - சிவம்.

உலகெலா முணர்ந்தோதற் கரியவன என்றதனல் - அருவத்திருமேனியனுயு நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்றதனல் - உருவத்திருமேனியனும், அலகில சோதியன் அம்பலத்தாடுவான் என்றதனல் - அருவுருவத்திருமேனியனும் விளங்கு கின்றனென்பதை விளக்கி, அங்ஙனமான எமது நடராஜ வள்ளலது மலர்சிலம்படியை வாழ்த்தி வணங்குவாம் என்றதாஉமாம்

ஒன்றினுந் தோய்வின்றித் தானேசுயம்பிரகாசமாய் நிற்கும் தன்னுண்மையிற், சிவ மென நிற்பனென்னும் பொருள்போதர, உலகெலா முணர்ந்தோதற்கரியவ னெனவும், உலகெலாமாகி வேறா யுடனுமாகி, இவ்வாறு உயிர்களின்வழி நிற்குந் தன்மையிற், சத்தி எனநிற்பன் என்னும் பொருள்போதர அலகில்சோதியன் எனவும், தாதான்மியத் தான் இருதிறப்பட்டுப் பின் ஐந்தொழில்செய்யும் தன்மையிற் பதியெனப பெயர் பெற்றுநிற்பன் என்னும் பொருள் போதர நிலவுலாவிப நீர்மலிவேணியன் எனவும், அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வனே சிவமெனவும், சத்தியெனவும்,பதியெனவும் நிற்ப னென்னும் பொருள்போதர, அம்பலத்தாடுவான் எனவும், இங்ஙனம் மூவகையாய்ப போதரும் பொருள்விளக்க நடனஞ்செய்யும் எமது நடராஜப்பெருமானது மலர்சிலம் படி வாழ்த்திவணங்குவாம் என்றதாஉமாம்.

அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் தாதான்மியத்தான் சிவம் சத்தி என இரு திறப்பட்டுப பின் பதி யென நிற்பன் என்றதனை, இப்பாட்டின் அடிகள் நிற்கும் நிலை யானுங்காண்க.

உலகெலா முணர்ந்தோதற் கரியவன் என்னும் அடி - சிவத்தன்மையை விளக்குத லான் அதுமுன்னரும், அலகில்சோதியன் என்னும் முற்பாதி - சத்தித்தன்மையை விளக் குதலான் அதுமூன்றாம் அடியின் முன்னரும், நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்னும் அடி-பதியை விளக்குதலான் இது இவ்விரண்டடியின் இடையினும், மூன்றாம் அடியின் பிற்பாதியாகிய அம்பலத்தாடுவான் என்னும் அடி-அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வ னேசிவம் சத்தி என இருதிறப்பட்டுப், பின் ஒன்றாய்ப் பஞ்சகிருத்தியமியற்றி நிற்கும் பதித்தன்மையை விளக்குதலான் அலகில்சோதியன என்னும் அடியினிறுதியினும் நின் றமைகாண்க.

விஞ்ஞான கலர்க்குத் தன்மையில்—அலகில் சோதியனும், பிரளயாகலர்க்கு முன் னிலையில்—நிலாவுலாவிய நீர்மலிவேணியனும், சகலர்க்குப படர்க்கையில்—அம்பலத் தாடுவானும், நின்றருளும் முறைமையுங் கூறியதுமாம்.

அம்பலத்தாடுவான் - முப்புறச் சமயிகளால் காண்டற்கரியானென்பது தோன்ற உலகெலாமுணர்ந்தோதற்கரியவன் எனவும், அகச்சமயிகளால் காண்டற்கெளியவன்என் பது தோன்ற நிலவுலாவிய நீர்மலிவேணியன் எனவும், சித்தாந்தசைவர்க்கு வேதாகமங் களின் குறியிறந்து நிற்பவனென்பதுதோன்ற அலகில்சோதியன் எனவும் விளக்கி யவாறுமாம்.

முப்புறச் சமயிகளுக்கரியனாய், அகச்சமயிகளுக் கெளியனாய், சித்தாந்தசைவர்க்குக் குறியிறந்தவனாய் நின்றருளும் இறைவன் இவ்வம்பலத்தாடுவானே என்று வேதம் சிலம்

புருவாய் அவனடியிற்பொருந்தி வாய்மலர்ந்தரற்றுவதனால் அவ்வேதவாணையின்படி யான் அவனை வாழ்த்தி அவனடியை வணங்குவாமென்றதுமாம்.

"பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன் மாமன்னுசோதிமணி மார்பன் நாமன்னும் வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன், நாதம் நாதாந்தம் நடுவே தம்போதத்தால் ஆமளவுநேடஅளவிறந்த அபபாலாய்"ப போவனென்பது தோன்ற உலகெலாமுணர்ந்தோதற்கரியவ னெனவும், சுடர் மேலோங்கிபபோதல்போல் அளவிறந் தபபாலாய்போகும் இறைவன் குன்றாதசேயவொளியன் என்பதுதோன்ற அலகில்சோதியனெனவும், அளவில் சோதியனாய்ப் போகும்அவன் சித்தாந்த சைவாறி வின் மன்னி அவர்வேண்டும் உருவுகொண்டு கட்புலனுக்குத் தோன்றுவனென்பது தோன்ற நிலவுலாவிய நீர்மலிவேணியன் அம்பலத்தாடுவான் எனவும், அறிவின்கண் ணும் கட்புலனின் கண்ணும் காணபபெறும் திறமுடைய சித்தாந்தசைவர் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வதற்கு அன்பான் சரியை கிரியா யோகங்களைவிரும்புகின்றாராகலின் நமக்கும் அச்சரியையாதிகள் முற்றுபபெற்று ஞானத்தால் நாமும் அவனடி சேருவோ மென்பதுதோன்ற மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம் என்றதுமாம்.

யாவராலுங் காண்டற்கரியவனாய் அலகில் சோதியனாய் அம்பலத்தாடுவானாய் நிற்கும் இறைவனே சாந்தியாதீத கலைபரியந்தமுள்ள எல்லாவுலகங்களையும் சங்கரிக்கும் மகாசங்காரக் கடவுளாவான், என்பது தோன்ற உலகெலாமுணர்ந் தோதற்கரியவ னெனவும், முடியிலுள்ளபிறையும் கங்கையும் எல்லாவுலகமும் ஒடுங்குவதற்கும் மீளத் தோன்றுவதற்கும் நிலைக்களமாயுள்ள முதற்கடவுள் என்பதைக்காட்டுதலால் அதனை யுணர்த்த நிலவுலாவிய நீர்மலிவேணியனெனவும், வேதமும் இவ்வாறே சிலம்புருவாய் அவனடியிற் பொருந்தி அரற்றுகின்றதென்பதுணர்த்த மலர் சிலம்படி எனவும், "இப் பொருள்சேர் இறைவன்புகழ் புரிந்தார்மாட்டு இருள்சேர் இருவினையுஞ்சேரா" என்ப துணர்த்த வாழ்த்தினெனவும், இவ்விறைவனது தாளை வணங்கபபெறாததலை 'கோளில் பொறியிற்குணமிலவே' என்பதுணர்த்த வணங்குவாம் என்பதுமாம்.

கங்கை-இவன் எல்லாவற்றையும் ஒடுக்கிக்கொள்ளும் இறைவனென்ப துணர்ந்தே தனதுவிரிந்த ஆற்றலைக் காட்டாது சடையில் ஒருபாலடங்கியதானும், பிறை - மீளவும் நமதுகலை தோன்றுவதற்கு கங்காதரனாகிய இவ்விறைவன் தோற்றுவித்தாலன்றித் தோன்றலாகாதென்பதுணர்ந்தே சரண்புகுந்ததானும் அங்ஙனம் கூறியதென்க.

## உலகெலாம் என்றதன் காரணம்.

1 "உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்லத்
தலைவனா யிவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தானே
நிலவுசீர் அலனாகி நின்றனன் நீங்கான்தெங்கும்."—என்றபடி

எங்கு நீங்காதிருக்குந்தன்மையுடையவன் தாமென்பதுதோன்ற உலகெலாமென்றார்.

2. உலகெலாம் என்றதனால் அறியப்படும் அத்துவிதப்பொருளை யுணரப்பெறாத போலிவேதாந்திகள் இலதெனக்கூறும் சேதன சேதனப்பிரபஞ்சமாகிய உலகமெல் லாம் உள்பொருளாகிய தம்மைக்காட்டும் உள்பொருளென்பது தோன்ற உலகெலா மென்றார்.

3. வேதாந்தத் தெளிவே சைவசித்தாந்தமாகலின் வேதாந்தத்தில் இல்லையென்று கொண்ட அச்சொற் பொருளைக்கொண்டே சித்தாந்தத்தால் உள்ளதென்று நாட்டும் தெளிவுடைத்தென்பதுதோன்ற உலகெலாமென்றார்.

---

போற்றிப் பஃறொடை. † சிவஞானசித்தியார் 2-ஆம்-சூ-ம்.

4. ஒரும்வேதாந்தத் துச்சியிற்பழுத்த ஆராவின்ப அருங்கனிபிழிந்து சாரங்கொண்ட சைவசித்தாந்தத் தேனுய்த் தெய்வமாயிருக்கும் தம்மாற்கூறப்பட்ட வேதாகமங்களில் வகுக்கப்பட்ட இருவினைகளையும், புண்ணியபாவங்களையும், இன்பதுன்பங்களையும், சொர்க்க நரகங்களையும், உளவெனக்காட்டுவது உலகென்பது தோன்ற உலகெலா மென்றார்.

5. தம்மை அநாதிஎன்பதையும் தமக்கநாதியாயுள்ள பஞ்சகிருத்தியத்தால் காணப் படும் பசுபாசங்கள் அநாதிஎன்பதையும் கண்கூடாகக் காட்டுவது உலகமே என்பது தோன்ற உலகெலாமென்றார்.

6. வேதங்களாலும் காணக்கூடாத தம்மை "ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிடவந் திடும் காலமே" என்ற சுருதிப்படி காணும்படிச்செய்வது உலகமென்பது தோன்ற உலகெலாமென்றார்.

7. தமதுஸ்வரூபமாகிய அருள்வெளிக்குள் அகிலாண்டகோடியெல்லாம் தங்கும் படிக்கு இச்சைவிளைவித்த நன்மையுடைத்து உலகென்பதுதோன்ற உலகெலாமென்றார்.

8. தமது, சத்து சித்து ஆனந்தம் என்னும் இலக்கணங்களை இவ்வுலகு தனக்குள்ள அநித்தியம் சடம் துக்கம் என்னும் மூவகைத்தன்மையால் காட்டும் அருமையுடைத்து என்பதுதோன்ற உலகெலாமென்றார்.

9. எமதுருவமாகிய நிஷ்களமும் சகளமும் சகளநிஷ்களமும் எமது குணமாகிய எண் குணங்களும் காணபபெறுதற்கும் அவற்றான் அடையப்படும் பயனை அடைதற்கும் உலகே யிடமென்பது தோன்ற உலகெலாமென்றார்.

10. ஆன்மாக்கள் அடையவேண்டிய பெத்தமுத்திப் பயன்களாயுள்ள புருஷார்த்தம் பரமபுருஷார்த்தமாகிய பிரயோஜனங்களை யடைதற்கு இடம் உலகம் என்பதுதோன்ற உலகெலாமென்றார்.

11. சச்சிதானந்தமாகிய உயர்ந்த தன்மையுடைய தம்மோடு திருத்தொண்டத்தொகை யள் குறிக்கப்பட்டாரும் உயர்ந்தோரே யாவரென்பது தோன்ற உலகெலாமென்றார்.

12. நீ அரசனிடம் கூறியபடி இப்புராணம், நெல்லிற்காணப்படும் அரிசியைப் போலும், கறவையிற் காணப்படும் பாலைப்போலும், கரும்பினிடத்திற் காணப்படும் சர்க் கரையைப்போலும், விறகினிடத்திற்காணப்படும் தீயைப்போலும், மார்க்கத்தினிடத்திற் காணப்படும் பூஞ்சோலையைப்போலும், அம்மையிலும் இம்மையிலும் உறுதிபயக்கத் தக்க சிவகதையாயும் புராதனமாயும் தவகதையாயும் தவம் பண்ணிப் பேறுபெற்ற முனிக் கதையாயும் விளங்குதற்கிடம் எல்லாஉலகமுமென்பதுதோன்ற உலகெலாமென்றார்.

13. ஆதிநடுவந்த மென்னும் காலங்களிலும் தான் தில்லையின்கண் நிற்பவனாகலானும் தன்னை வழிபடற்குரிய அந்தணர்களும் வழிவழியாயுள்ளாராகலானும் இத்திருத்தொண் டத்தொகையும் ஆதிநடுவந்தமென்னும் காலங்களில் நிலைபெற்று வழிவழியாய் வாழ்ந்து வரவேண்டுமென்று திருவுளத்திற்கொண்டே அன்று தியாகராஜப்பெருமான் தில்லை வாழந்தணரென அடியெடுத்துக்கொடுத்ததுபோல் அத்திருத்தொண்டத்தொகை பின் வகையாகவும் வந்து அதன்பின் இப்போது விரியாகவும் வர,வந்திருக்கின்றபடியால் விரி வைக்காட்டும் அடியை நடராஜப்பெருமான் எடுத்துக்கொடுக்க அருண்மொழித்தேவர் வேண்டினாராகலின் உலகெலா மென்றார்.

பிராகிருதராகிய அஞ்ஞானிகளுணர்வு சுட்டி யுணரும் உணர்வாகலின் உணர்ந் தோதற்கரியவன் என்றார்.

ஞானிகளுணர்வு இறைவன் உள்நின்று உணர்த்தும் உணர்வுமயமாய் நிற்பதாகலின் உணர்ந்தோதற்கரியவன் என்றார்.

பாசவுண்மையுணரப்பெறாத புறப்புறச் சமயிகளும், பசுவினுண்மையுணரப்பெறாத புறச்சமயிகளும், பதியுண்மையுணரப்பெறாத அகப்புறச்சமயிகளும் திருவருளுணர்வை யறியாராகலின் உணர்ந்து ஓதற்கு அரியவன் என்றார்.

சித்தசித்தாகிய உலகத்தோடு நடராஜன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் நிலையை யுணராது உலகிற்கு வேறாகவுணரும் உணர்வுடையோர் அவனை உணர்ந்தோதுந் தன்மையைப் பெறாராகலின் உணர்ந்தோதற்கரியவன் என்றார்.

"திருமேனி ஒன்றல்லன்" எனவும் "வேதமுதல் விண்ணோரு மண்ணோருந் துதித்தாலும் ஓதவுலவா வொருதோழன்" "ஏதவனூர் ஏதவன்பேர் யாருற்றார் யாரயலார் ஏதவனைப்பாடும் பரிசு" எனவும் கூறும் அருமையுடையவன் ஆகலின் உணர்ந்தோதற்கரியவன் என்றார்.

நூலுணர்ச்சி அற்ற அஞ்ஞானிகளாகிய பிராகிருதர்களாலும், நூலுணர்ச்சியுடையராய் இறப்பில் தவமாகிய சரியையாதிகளில் முயற்சியற்ற ஞானிகளாகிய வைநைகிர்களாலும், பண்டை நற்றவத்தால் இடையறாது பத்தியிற்றலைப்பட்டு உணர்ந்தோதும் செயலற்ற சாமுசித்தர்களாலும், உணர்ந்தோதற்கரியவன் ஆகலின் உணர்ந்தோதற்கரியவன் என்றார்.

இறைவன், இவ்வருட்புராணத்தைப் போற்றியோதாது இறுமாப்போர் எத்தகைய பெரியோராயினும் அவரை அடக்குவானென்னும் உண்மையும், போற்றியோதிப் பணிவோர் எத்தகைய சிறியாராயினும் அவரை ஆக்கத்தோ டோங்கிவளரச் செய்வானென்னு முண்மையும் போதர சீரையும் நிலையையுங் கூறியதாகும்.

உலகெலாமென்றது இறைவனது ஏகமாந்தன்மையையும், உணர்ந்தோதற்கரியவன் என்றது வேறாந்தன்மையையும், அலகில்சோதியன் அம்பலத்தாடுவான் என்றது இறைவன் தனது ஆணையென்னும் பரியாயப்பெயருடைய அலகில்சோதியாய்விளங்கும் சிற்சத்தியோடு கலந்திருக்குந் தன்மையும், பஞ்சகிருத்தியங்களை நிகழ்த்தற்பொருட்டு அச்சத்தியின் கூறாகிய பராசத்தி முதலாகக்கூறப்படும் பஞ்சசத்திகளோடு கலந்திருக்குந்தன்மையும் உணர்த்தலால் உடனாந்தன்மையும், நிலவுலாவிய நீர்மலிவேணியனென்றது, இவ்விறைவனே ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்பவனென்பதையும் அறியக்கூறியதென்க.

"உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்றது—சிவநிலை.
"அலகில்சோதியன்" என்றது—சத்திநிலை.
"நிலவுலாவிய நீர்மலிவேணியன்" என்றது—பதிநிலை.

அநாதிமுத்த சித்துருவாகிய முதல்வன் தாதான்மியத்தால் சிவம் சத்தி என இரு திறப்பட்டுப் பின் பதியென நிற்கும் அப்பொருள் நிலை இம்மூவடி நிலையில் விளங்கக் கூறி சிவநிலையில் தனது இச்சையும், சத்திநிலையில் தனது ஞானமும், பதிநிலையில் தனது கிரியையும், நீங்காதுவாழ நடராஜப்பெருமானது மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம் என்று கூறியதாமென்க.

## "உ"கரத்தை முதலாக எடுத்தகாரணம்.

1. நெல்லிற்காணப்படும் அரிசியைப்போல் ஆன்மாவும், கறவையிற் காணப்படும் பால்போல் சிவஞானமும், கரும்பிற்காணப்படும் சுவைரசம்போல் சிவசொரூபமும், விளக்கிற்காணப்படும் தீயைப்போல் மலநாசமும், பூஞ்சோலையிற்காணப்படும் நன்மார்க்கத்தைப்போல் சிவசன்மார்க்கமும், முன்னுள்ள வேதசிவாகமங்களில் ஓங்கிவிளங்கிப்

பொலிவதனை கண்டுணர்ந்துவாழ, இப்புராணம் புருஷருவாய் நிற்றலின், முத்தொழி லைக்குறிக்கும் பிரணவாக்ஷரங்களில் ஸ்திதி எழுத்தாகிய உகாரத்தை முதலெழுத்தாகக் கூறினார்.

2. முன்னுள்ள பதினொரு திருமுறைகளையும் ஓங்கச்செய்வது இப்புராணமே யாக லின் உகாரத்தை முதலாகக்கூறினார்.

3. அகாரம் சித்து பொருளையும், மகாரம் அசித்துப்பொருளையும், உகாரம் அவ்விரு பொருளையும் காட்டுவதாகலான், இப்புராணத்துள் அவ்விருபொருளும் காண உகாரத்தை முதலாகக் கூறினார்.

4. அகரவெழுத்தை ஓகாரமாக ஓங்கி யொலிக்கச்செய்வது உகரமாதலின் இப புராணம் ஓங்கவேண்டுமென்னும் கருத்தால் ஓங்கச்செய்வதாகிய உகாரத்தை முதலாகக் கூறினார்.

5. அகரவெழுத்தின்பொருள் தாமேயாகலின் தம்மைமாத்திரங்குறிக்கும் அகரத்தை யெடுக்காது தம்மையும், தமதருளையும், அவ்வருள் பெற்றாரையும், இபபுராணத்துட் குறிக்க உகரத்தை முதலாககூறினார்.

6. அகாரம் அறிவாகிய சிவத்தையும், உகாரம் அருளாகிய சத்தியையும், மகாரம் ஆனந்தநிலையாகிய ஆனந்தத்தையும், உணர்த்தும் அக்கரங்களாகலின் இபபுராணத்தை அருட்புராணமாகக்காண அருளைக்குறிக்கும் உகாரத்தை முதலாகக்கூறினார்.

7. மேனின்றோரையும பின்வருபவரையும் நிகழ்காலத்துள்ளாரையும் திருத்தொண் டத்தொகையட் கூறிய பெருமான் ஸ்ரீ சுந்தரமூர்த்திகளாதலால் அவரது புராணத்தை முதலிடைகடைகளில் வைக்கற்பாற்று, என்றுணர்த்த முதல் இடை கடைகளைச் சுட்டுவ தாகிய உகரத்தை முதலாகவெடுத்தார்.

8. இபபுராணம் தோன்றிய பொருள்போலுமன்று, தோன்றிநிற்கும் பொருள்போலு மன்று, தோன்றி நின்றழியும பொருள்போலுமன்று, புராதனமா (அநாதியா) யுள்ளது என்பது குறித்தற்கு உகாரததை முதலாக எடுத்தார.

9. இம்மையினும் அம்மையினும் உறுதி பயக்கத்தக்கது இபபுராணம் என்பது குறித் தற்கு உகாரததை முதலாகவெடுத்தார.

10 உண்மை ஞானத்தையம், உண்மைச்சிவானுபவததைபும், அறிவிதது யாவரையும் உய்விப்பது இப்புராண மென்றுணர்த்த உகாரத்தை முதலாக எடுத்தார்.

11. இபபுராணத்துக்கு மேலானபுராணம் முன்னுண்டானது மில்லை, சமானமாகப பின்னுண்டாகப போவதுமில்லை, ஆகலான் இது ஒன்றே தனிக்கதையென்றுணர்த்த உகாரத்தை முதலாகவெடுத்தார்.

12. அழியாத தவமாகிய சரியையாதி நான்கினையும, முன்செயதுப பின்பெற்ற தாகிய அழியாபபேற்றை யெடுததுக்காட்டவல்லது இப்புராணமேயாகலான், உகாரத்தை முதலாக வெடுத்தார்.

13. தவம்பண்ணிப பேறுபெற்ற தனிக்கதை-முன்னுள்ள வேத சிவாகமங்களினும், அவற்றின்சார்பாகப் பின்வந்தனவாகிய சார்புநூல்களினும், நெல்லைக்குத்தி யாராய்ந் தெடுக்கும் அரிசியைப்போலும், ஆன்மாவையாராய்ந்தெடுத்தற்கும், அந்த அரிசியைப் பாகபபடுத்தி இன்சுவைப்பாலோடு கலந்து, பாலன்னமாக்குவதுபோலும், ஆன்மாவை ஆராய்ந்துணர்ந்த பின்னர் சிவஞானப் பாலோடுகலத்தற்கும், கரும்பினிடத்துக்காணப் படும் இன்சுவைபோலும் பாலினிடத்துக் காணபபடும் சுவைபோலும் சிவஞானத்தில் சிவஸ்வரூபத்தைக் காண்பதற்கும் இப்புராணம் விளக்கைப்போல் பிரகாசிக்க வேண்டு மாகலான், உகாரத்தை முதலாகவெடுத்தார்.

14. குளிர்பூஞ்சோலை வழிநடப்போர்க்கு நன்மார்க்கமாயிருப்பதுபோல், உண்மை வழியில் நடப்போர்க்கு, இப்புராணம் அச்சோலைபோலிருப்பதால் உகரத்தை முதலாக வெடுத்தார்.

15. இப்புராணந்தான் சத்தானது, ஏனையவெல்லாம் சத்தற்ற உமியைப்போன்றது, என்று குறிக்க உகரத்தை முதலாகவெடுத்தார்.

16. முக்காலத்துமுள்ள தில்லைவாழந்தணரை முதலாகவுடைய திருத்தொண்டத் தொகையை, முதலாகவுடையது இப்புராணமென்பார் முக்காலத்தைக்குறிக்கும் உகரத்தை முதலாகவெடுத்தார்.

உகரச்சுட்டு பின் வந்தவரைக்காட்டுவதாகலான் யாவர்க்கும் பின்வந்தவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய புராணத்தை ஆரம்பிப்பதற்கு உகரத்தை முதலாகக்கூறியதேயன்றி, உலகெலா முணர்ந்தோதற்கரிய நாம் நிலவுலாவிய நீர்மலிவேணிய ஞானாகாலத்துத் தோன்றிய நமது பிரதிபிம்பமே சுந்தரமூர்த்திகளாமென்றும், அவரது திருமேனி-அலகில் சோதியனாகிய நம்மைப்போலும் ஆயிரஞாயிறு போன்றதென்றும், நாம் சித்ஸ்வரூபமாகிய அம்பலத்தின்கணிருந்து ஆடுவதைப்போலும், அவர் அருளுருவாகிய பரவையாரிடத்திருந்து அருள்விளையாடலைச்செய்வாரென்றும், நமதாட்டமானது * ஆன்மாக்களிடத்துள்ள மலசத்தியை ஓர்பாதத்தாற்றடுத்து, ஓர்பாதத்தால் ஆட்கொண்டு வாழ்த்திவணங்கச் செய்யு முறையைபோல் அவரதுபுராணமும் மலசத்தியைத் தடுத்து ஆட்கொள்ளுமுறைமையை யுடைத்து ஆகலான் அவரது புராணத்துக்கும் தடுத்தாட்கொண்ட புராணமெனப் பெயரிடுவாயென்று உகரத்தை முதலாக எடுத்துக் கூறியதுமாமென்க.

## மந்திரம்.

உ-ல-கெ-லா-ம் என்னும் இவ்வைந்தெழுத்தும் சிவமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாக்கரப் பொருளையுணர்த்தும் அக்கரங்களாகலான் அதனையே உபதேசிக்கும் மந்திரமாகக்கொண்டு சிற்பரவியோமமாகிய பரமாகாசசரீரியாய்ச் சோதியாய் அழிவதின்றி நீக்கமில் அறிவானந்த முதன்மை நித்தியமுடைத்தாகிய சூக்குமைவாக்கான் ஓசைபட எடுத்தோதினாரென்க.

உலகெலாம் என்னும் இவ்வைந்தெழுத்தும் ஸ்ரீ பஞ்சாக்கரப்பொருளை உணர்த்துமாறெங்ஙனமெனின் - மகாரமாகிய அசுத்தமாயா சம்பந்தப்பட்ட உலகபேதங்களையும், நகாரசம்பந்தப்பட்ட சுத்தாசுத்த மாயாசம்பந்தப்பட்ட உலகபேதங்களையும், யகாரமாகிய ஆன்ம சம்பந்தப்பட்ட உலகபேதங்களையும், வகாரமாகிய அருள் சம்பந்தமுடைய சுத்த மாயாசம்பந்தப்பட்ட உலகபேதங்களையும் இங்ஙனங் கூறிய சுத்தம் சுத்தாசுத்தம் அசுத்தம் என்னும் மூவகைத்தான அசரமாகிய பிரபஞ்சங்கட்கும் மூவகை உயிர்வர்க்கங்களெனப்படும் சரமாகிய பிரபஞ்சங்கட்கும் வேறாய் சுயம்பிரகாசமாய் சிவமென நிற்கும் ஓர் பொருளையும், உவன் என வேறுபிரிக்கப்பட்ட சிவன் அங்ஙனம் வேறாகவேயிராமல் வகார நகாரங்களாகிய அருளோடும் திரோதத்தோடும் ஒன்றாய் யகார மகாரங்களாகிய ஆன்மாவோடும் மலத்தோடும் உடனாயுங்கலந்து உகாரமாகிய சத்தியெனநிற்கும் ஓர் பொருளையும், ஓர்வகையான் வேறெனக்காட்டும் பொருளால் சிவமாயும், ஓர்வகையான் ஒன்று உடன் எனக்காட்டும் பொருளால் சத்தியாயும் நிற்பதாகிய பதித்தன்மையைக்காட்டும் ஐந்தொழிலையும், அவ்வைந்தொழிலையும் செய்வோர் தம்மையன்றி ஒருவரும் இல்லை என்பதையும் காட்டும் பிரபஞ்சமாகிய உலகமே என்னும் ஓர் பொருளையும் உணர்த்துவதே பஞ்சாக்கரப்பொருளாமென்க.

---

* ஊன்றியபாதம் மலசக்தியைத் தடுப்பதாகலான் தடுத்தவகையை வாழ்த்தியும், தூக்கியபாதம் ஆட்கொள்வதாகலான் அதனை வணங்கியும் என்றார்.

சேக்கிழார் பெருமானது வேண்டுகோளுக்கு அருளினவன் பஞ்சாக்கர மூர்த்தியாகலான் அவன் அடியெடுத்துக்கொடுத்ததும் அஞ்சக்கரமே யாமெனக.

பஞ்சாக்கரத்தில் பதி பசு பாசங்களைக் காண்டல் போல் உலகெலாம் என்னும் பதத்தில் உயர்ந்தோனும் பரமாசாரியாயுள்ளபதியையும், அவன்வசப்பட்ட உயர்ந்தோராகிய மூத்தான்மார்களையும், அவர்கள் அவதரித்த இடமாகிய பாசத்தையும் காணக்கிடக்கின்றமையுங்காண்க

அஃதேபோல் பஞ்சாக்கரத்தில் ஆன்மபரமான்ம ஐக்கியம் காணக்கிடத்தல்போல் உலகெலாம் என்னும் பதத்தை முதலாகவுடைய இப்புராணத்திலும் பரசிவம் நாயன்மார்களோடும், நாயன்மார்கள் பரசிவத்தோடும் ஐக்கியமுற்றிருக்கும் நிலைமையும், ஐக்கியத்தில் திருவருட்பேறும் சிவதெரிசனமுமே யாகலான் அவைகளையும் காணக்கிடக்கின்றமைகாண்க.

இனி இச்செய்யுளில் உள்ள (1) உலகு (2) எல்லாம் (3) அரியவன் (4) நிலவு (5) நீர் (6) வேணியன் (7) அலகு (8) சோதியன் (9) அம்பலம் (10) ஆடுவான் (11) சிலம்பு (12) அடி என்னும் பன்னிரண்டுபெயர்ச்சொற்கள் சருக்கத்தைச் சுட்டிநின்றன.

"அரியவன் நிலவு" எனப பிரித்துப் பாடங்கொள்க. ஏனெனில் னகரத்திரிவு விகாரமாகலின். "வேணியனலகில்" எனவே கொள்க. ஏனெனில் உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பாகலின். இவ்வாறு கொள்வோமாயின் முதலடியில் 16 - எழுத்தும் இரண்டாவதில் 13 - ம், மூன்றாவதில் 16 - ம், நான்காவதில் 18 - ம் ஆக அறுபத்து மூன்றெழுத்துக்களும் நின்று தனி அடியாரைச் சுட்டக் காணலாம். மற்று இச்செய்யுளில் (1) உலகு (2) உணர்ந்து (3) ஓதற்கு (4) நிலவு (5) உலாவு (6) அலகு (7) அம்பலத்து (8) சிலம்பு என்னும் எட்டு முற்றுகரக் குற்றுகர மொழிகள் கெடுதல் விகாரம் பெற்றுள்ளன. இவற்றோடு தொகுத்தல்விகாரம் அடைந்த எலாம் என்றதையும் கூட்ட விகாரமொழிகள் ஒன்பதாம். இவை தொகையடியார் ஒன்பதின்மருக்கும் அறிகுறியாக நிற்பன. இங்ஙனந் தொடுத்துக் காட்டுதல் மங்கல வாழ்த்துக்கு இலக்கணமென வுணர்க. இன்னமும் இத்திருப்பாட்டின் இலைமறை காய்போல் எஞ்சியுள்ள சிறந்தபொருள்களை இந்நூலாசிரியராகிய சேக்கிழார் பெருமானது வரலாறு கூறுமிடத்துக்காண்க.

## மானுடப்பிறப்பின் சிறப்பு.

ஊன் அடைந்த உடம்பின் பிறவியே
தான் அடைந்த உறுதியைச் சாருமால்
தேன் அடைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
மாநடஞ்செய் வரதர்பொற் றாள்தொழ.

(எ - து.) மாமிசம் அடையப்பெற்றுள்ள உடம்பாலாகிய பிறப்பு, தேனிறைந்துள்ள மலர்களையுடைய சோலைகளாற் சூழப்பட்டுள்ள தில்லையென்னும் க்ஷேத்திரத்தின்கண், பேராநந்தங்கொண்டு நடனஞ்செய்தருளும் நடராஜவரதரது,பொன்போலும் அரிய திருவடியைத் தரிசிக்கப்பெறுமானால்; அந்தப்பிறப்பே, இந்த நிலவுலகில் வந்ததனால் அடையவேண்டிய பயனை அடையும் என்பதாம்.

ஊனடைந்த உடம்பின்பிறவி, வரதர்பொற்றாள் தொழ, தானடைந்த வுறுதியைச் சாரும் எனக் கூட்டுக.

பூதசாரவுடம்பு யாதனுவுடம்பு பூதபரிணாமவுடம்பு என உடம்பு மூவகையாகலின், ஈண்டெடுத்துக்கொண்டவுடம்பு பூதபரிணாமவுடம்பென்பார். ஊனடைந்த உடம்பின்பிறவியே என்றார். பூதசாரவுடம்பு - கரை திரை மூப்பற்று என்றும் ஒருபடித்தாய்த் தேவலோக போகசுகத்தையே அனுபவித்தற்கு வன்மைபெற்றிருப்பது, எனவே யுத்தமமாகத்

இல் எவ்வகைத்தான துன்பம்வரினும் அவற்றால் உயிர் இறவாது வாழுந் தன்மை யுடைத்து. யாதனு வுடம்பு அஃதேபோல் நரகயாதனையில் எவ்வகைத்தான துன்பம் அனுபவிக்கவரினும் உயிர் இறவாது நைந்துநைந்து வருந்தி அதிற்றானே ஆழ்ந்து கிடக்கும் தன்மையுடைத்து. பூதபரிணாமவுடம்பு - நரைதிரையாதி துன்பமற்று சுகத்தையனுபவித்தற்குரிய வன்மையையும், ஊழ்வலியான்வருந் துன்பத்தைப் பொறுத்து அனுபவித்தற்குரிய வன்மையையும் உடையதன்று. அஃதேயுமன்றி மாமிசாதிகள் ஒழியப்பெறின் உயிரும் ஒழியும் மென்மைத்தன்மையுடையது. பூதசாரசரீரம் போகசாதனத்துக்கும் யாதனாசரீரம் துன்பசாதனத்துக்கும் வன்மைபெற்றிருப்பதுபோல், மென்மைத் தன்மையுடைய பூதபரிணாமசரீரம் மோக்ஷசாதனத்துக்கு வன்மையையுடைத்தென்பார். ஊனடைந்த உடம்பின்பிறவி தில்லைமன்னுள் மாநடஞ்செய்வாதார் பொற்றாள்தொழ, தானடைந்த வுறுதியைச்சாரும் என்றார்.

எனவே, பூதசாரவுடம்பை - உயிரடைந்தகாலத்து நரகதுன்பத்துக் கேதுவாயுழன்று பாபத்தையொழிக்கும் உறுதியைப் பெற்றதின்று. யாதனுவுடம்பை யடைந்தகாலத்து சுவர்க்கபோகத்துக் கேதுவாயுள்ள புண்ணியத்தைத் தேடும் உறுதியைப் பெற்றதின்று. பூதபரிணாம வுடம்பை யடைந்த காலத்து அது பாவத்தை யொழிக்கும் வன்மையைப் பெற்ற புண்ணியத்தையும், வருந்திச்செய்யும் புண்ணியத்தையொழிக்கும் வன்மையைப் பெற்றுள்ள பாவத்தையும் ஒழித்து, இனிப் பிறவாநெறிக்கு ஏதுவாயுள்ள சிவபுண்ணியத்தைத் தேடும் உறுதியைத் தந்து, அவ்வுறுதியான் ஞானநடனமாகிய மாநடஞ்செய்தருளும் குஞ்சிதபாதத்தை யடைதலாகிய முத்தியிற்கூட்டிப் பேரின்பத்தையும் சாரச் செய்யுமென்றார். ஊனடைந்த பிறவி என்றது - யானைமுதல் எறும்பீறாய உடம்புகளெல்லாமென்க. இவ்வுடம்புகளெல்லாம் முத்திபெற்றுய்ந்தமை புராணங்களானும் அப் புராணக்கூற்றுக்களுக்கு ஏற்ப ஆலயங்களில் அமைந்துவிளங்கும் குறிகளானும் அடையாளங்களானும் காண்க.

புண்ணியானுபவத்துக்குப் பூதசாரசரீரத்தையும், பாபானுபவத்துக்கு யாதனாசரீரத்தையும், சிவானுபவத்துக்குப் பூதபரிணாமசரீரத்தையும் உபகரித்தற்கு மாநடஞ்செய்தருளும் வள்ளல் நடராஜனன்றி வேறொருவ ரன்மையான் மாநடஞ்செயவாதர் என்றார். செம்புகாளிதம்போகப்பெறின் பொன்னாந்தன்மையைப் பெறுதல்போல், சீவன்திருவடியடையப்பெறின் பாசம்போய்ச் சிவமாகலின் பொற்றாள் என்றார். குஞ்சிதபாதத்தாற் செய்யும்நடனம் ஞானநடனமாகலின் அந்நடனத்தையே ஈண்டு மாநடம் என்றார். இது மாநடனமாகவே ஊன்றியபாதநடனம். நடனமெனப்படும். எனவே பெத்தநிலையைக் குறித்தது நடனமெனவும், முத்திநிலையைக்குறித்தது மாநடனமெனவும் நடனத்தின் வேற்றுமையைக் குறித்ததென்க.

இதனால் எந்தப்பிறப்பு மாநடஞ்செய் வரதர்பொற்றாள் தொழப் பெறுகின்றதோ அந்தப்பிறப்பே, பிறந்ததனாற்பெறும் பேற்றைப் பெற்ற பிறப்பாமென்று அப்பிறப்பின் அருமையைக் கூறினாரென்க. (2)

## விநாயகர் வணக்கம்.

எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்துள் இருத்துவாம்.

(எ - து.) (எம்மால் இப்பொழுது) எடுத்துச் சொல்லப்புகும் இக்கதை, (தம்பிரான்தோழரென்று அன்பர்களெல்லாம் புகழ்ந்தெடுத் துரைக்கும் சுந்தரமூர்த்திகளுடைய) பெரியசரித்திரம், (இப்பெரியகதையை, யாம் தமிழ்ச்செய்யுளால் செய்யக் கருதி

யுள்ளேமாகலின் அது இப்புராணத்திற்குத் தலைவராகிய சுந்தரமூர்த்திகள் ஓதியருளிய தமிழ்-சிவபிரானுக்கு இனித்ததுபோல் அன்பர்க்கு இனிக்குமாறு) இனிய தமிழ்ச்செய்யுளாய் நடக்கும்மேன்மையை அடியேனுக்கு அருள்செய்யும்படி, ஐந்து பெரியதிருக்கரங்களையும், தாழ்ந் தசைதலையுடைய இரண்டுசெவிகளையும், நீண்ட ஒருபெரிய முடியையும், மதத்தையும் உடைய யானைமுகக்கடவுளை, எமதுகருத்தினின்றும் நீங்காவண்ணம் தியானிப்பாமென்பதாம்.

சுந்தரமூர்த்திகளது அருள்நிறைந்த சரித்திரப்பொருளெல்லாம் தமதுள்ளத்தில் அமர்ந்திருத்தல் வேண்டுமென்பார் கடத்தையும், அவகதையைக்கொண் டெழுந்த இலக்கியங்களையெல்லாம் தன்னடிக்கட்படுத்தி முடிமன்னரைப்போல் இப்புராணம் பொலிவுபெற்றிருத்தல் வேண்டுமென்பார் நீள்முடியையும், இத்தவகதை அன்பர்செவிகளிற் புகும்போது வேறொரு அவகதைகளைக் கேட்பதற்கு அவரது செவிப்புலன் பரவாவண்ணம் தடுத்து இதிற் றனேபரந்து ஆழ்ந்திருக்கச் செய்தல்வேண்டு மென்பார். அசைதலோடுகூடிய பரந்தசெவிகளையும், அம்மையும் இம்மையும் உறுதிபயக்கத்தக்க இக்கதையின்கண் செவிசாய்த்திருப்போரது உள்ளத்தின்கண் அரன் திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்கரம் பதிந்திருக்கச் செய்யவேண்டுமென்பார் தடங்கையைந்தையும் எடுத்துக் கூறியவாறும்.

சுந்தரமூர்த்திகளுடைய சரித்திரமாகிய இப்புராணம் அதுகாறும் தெரிவதற் கின்றியிருந்த பெரியோராகிய தொண்டர்களுடையகதையை முறையானே எடுத்து வெளியாக்கவந்ததாகலினானும், ஆன்மாக்களிடத்துக் கலந்திருக்கும் மலங்களை அவர்களினின்றும் எடுக்கவல்லதாகலினானும், அம் மலபந்தத்தால் பிறவிக்கடலில் ஆழ்ந்திருக்கும் ஆன்மாக்களை முத்திக்கரையாப்விளங்கும் குஞ்சிதபாதத்திற்சேர்க்க ஆன்மபோதத்தை எடுக்குந் திறமுடையதாகலினானும், சிற்பரச்செல்வர்களுடைய ஞானச்சரிதை இதனுள் அடங்கியிருத்தலால் அதுகொண்டு பெரியோரெல்லாம் பெரிதுபெரிதென் றெடுத்துப் போற்றுவராதலினானும், இதனையோதுவாரை மேன்மே லோங்க எடுக்குமாதலினானும் எடுக்குமாக்கதை என்றார்.

தனக்கென வேண்டும்பொருளும் வேண்டாப்பொருளும் இல்லானாகிய இறைவன் தமிழ்வேதமாகிய தேவாராதி பதினொரு திருமுறைகளில் இனித்தனனாகலின் இன்தமிழ் என்றார். தமிழில் இனிக்கானாயின்-பரவையார்பால் தூதுசெல்வனா! முதலையுண்டபாலனை யழைப்பனா! என்பு பெண்ணுருவாய் வரச்செய்வனா! மறைக்கதவைத் திறப்பிப்பனா! ஞானசம்பந்தப் பெருமானுக்கு ஞானப்பாலை உண்பிப்பனா! நாவுக்கரசுகளுக்குச் சூலைநோயைக்கொடுத்து ஆட்கொண்டு கொல்லவந்தயானையை வணங்கச்செய்வனா! நீற்றறையைத் தாமரைத்தடாகம் ஆக்குவனா! விடத்தைஅமுதாக்கி உண்ணச்செய்வனா! கல்லைத் தோணியாக ஆக்குவனா! பரியின்மேல் சேவகனாய் வருவனா! மண்சுமக்க வருவனா! வந்து பிரம்படி படுவனா! சங்கவித்வான்களில் தலைவனாய் இறையனாரென வருவனா! சேரமானருளிய ஆதியுலாவிற்கு மகிழ்ந்து தலையை யசைப்பனா! சங்கப் புலவருக்குத் தமிழைத்தாங்கப் பலகையளிப்பனா, திருமுறைகளைத் தமது பொன்னம்பலத்தில் பண்டாரமாகச் சேமித்து வைப்பனா! திருவாசகத்தையும் திருக்கோவையையும் கைவருந்த ஏட்டிலெழுதி அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கைநாட்டென்று எழுதி யாவரும் அறியச்செய்வனா! காரைக்காலம்மைக்கு மாங்கனி யளித்து அம்மையென் றழைப்பனா! இடைக்காடனார் பிணக்குத்தீர்ப்பனா! இவைபோலும் பலதிருவிளையாடலைச் செய்வனா! செய்யானென்க.

இங்ஙனம் இறைவன் இனித்தசெய்யுட்களைப்போலும் எம்மால் சொல்லப்படும் செய்யுட்களும் அப்பெரியோர்களது அருட்செயல்களைக்கொண்டு இனித்திருத்தலின் இன்தமிழ்ச்செய்யுளாயென்றார். அருட்செயல்களில் கலந்து இனிக்கும் இம்மாக்கதை

இன்றமிழ்ச்செய்யுளாய் நடக்குமேன்மை நமக்குச்செய்திடவே "உலகெலாம்" என்ற சத்திப்பிரணவார்த்த அக்ஷரசகிதமாகிய அடியை இறைவன் அருளினனாகலின் இனி அம்மொழியையேகொண்டு இப்பெரியோர் புராணத்தை முடிக்கத் தடக்கையைந் துடைத் தாழ்செவி நீண்முடிக் கடக்களிறாகிய பிரணவசொரூபரைக் கருத்துளிருத்துவா மென்றார்.

பிரணவசொரூபியாகிய கடவுள், இடையூற்றைச்செய்பவரும் இடையூற்றையகற்று பவரும் ஆகலான், குன்றக்கூறல் முதலிய பத்துக்குற்றங்களையும் போக்கிச் சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகினையும் பொருத்துமாறு கரம் ஐந்து, செவியிரண்டு, நீண் முடியொன்று, மதமொன்று ஆனைமுகமொன்று ஆகப் பத்துறுப்புடன் விளங்கும் விநாய கப்பெருமானைக் கருத்துளிருத்துவா மென்றலுமாம்.

இதனால், விநாயகர் வணக்கங் கூறியதேயன்றி, எடுத்துமாக்கதை என்றதனால் புராணத்தின்சிறப்பும், இன்றமிழ்ச்செய்யுள் என்றதனால் - செய்யுட்சிறப்பும் எடுத்து காட்டியவாறுமாமென்க. (க)

## திருக்கூட்டப்புகழ்ச்சி.

வேறு.

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்
பொதிதல னுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.

(எ - து.) வளரும் பருவத்தினையுடைய பிறை அணிந்த சடைமுடியுடைய சிற்சபா நாதரை, ஆதிகாலந்தொட்டுப் போற்றிவரும் நாயன்மார்களுடைய பரிசுத்தமாகிய திரு நாமமென்னும் மலர்களிடத்து நிறைந்துகிடக்கும் இன்சுவைத்தேனை, உண்டுகளிக்கும் சுத்தான்மாக்களுடைய பெரியசபையானது, இறைவனால் விதிக்கப்பட்டிருக்கும் முறைப் படி இவ்வுலகின்கண் பிரகாசித்து வெற்றிகொண்டிருக்கக் கடவது என்பதாம்.

இறைவன் ஆன்மாக்களுக்குத் தான் எப்பொழுதும் உபகரிக்குஞ்செயலை மேற் கொண்டிருப்பவன் என்னும் உண்மைதோன்ற பஞ்சகிருத்தியங்களை அனவரதமும் இயற்றுதற்குரிய தாண்டவம்புரியவல்ல பதி-சிற்சபேசனேயாகலின் மன்றுளார் எனவும், அவ்வுபகாரச் செயலால் ஆணவச்சார்பால் தேய்ந்திருக்குந்தன்மையை யுடைய ஆன்மாக்க ளுடைய அறிவை வளர்விக்குந் தன்மையுடையோன் தானே என்பது தோன்றப் பிறை யை அடையாளமாலையாகச் சடையில் தரித்திருக்கின்றவ னாகலின் மதிவளர் சடைமுடி எனவும்,திருத்தொண்டத்தொகையுள் கூறப்பட்டிருக்கும் நாயன்மார்கள் ஆதிசிருட்டிகால ந்தொட்டு வந்த பெரியோரென்பது தோன்ற காலத்தைக்குறித்தற்கிடங்கொடாத தில்லை வாழந்தணர்களை முதலாக எடுத்து ஓதினாராகலின் காலத்தைக்குறிக்காது பொதுமை யான் முன் எனவும், பஞ்சகிருத்தியாதிபதியாயும், அஷ்டமூர்த்தியாயும், எங்கும் வியாபி யாயும், விளங்கும் ஒப்பற்றபரம்பொருள் மதிவளர்சடைமுடி மன்றுளானன்றி வேறு எத்தேவரும் அவ்விறைமைக் குணங்கள் உடையராகாரென்று அவரை யெல்லாம்போற் றாது இறைமைக்குணங்கள் முற்றவுமுடைய அந்த நடராஜனது மெய்ம்மைசேர்ந்த

"இருள்சேர் இருவினையும் சேராஇறைவன்" என்னும் குறட்கு - இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையரெனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின் அவை முற்றவுமுடைய இறைவன்புகழே பொருள் சேர் புகழெனப்பட்டது, என்ற பரிமேலழகர் உரையால் காண்க.

புகழினையே விரும்பிப்போற்றுவதில் நாயகத்தன்மை யுடையோர் அறுபான்மும்மைக் குட்பட்டாரே என்பதுதோன்ற ஒருவர் திருநாமத்தைக் குறிக்காது பொதுமையான் மன்றுளாரைத் துதிசெய் நாயன்மார் எனவும், அத்தகைய நாயன்மார்களது திருநாமங் களைத் தொகுத்தோதிய திருத்தொண்டத்தொகையைப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குடையார் மந்திரமாகக்கொண்டு மயிர்சிலிர்த்தக நைந்துருகி மெய்யன்பால் என்றும் விளம்பப் பெறுவார்களாயின் அவர்களைக்கைதவத்தினும், புல்லறிவினும், கற்பனையினும், மையலினும் பொருந்தாவண்ணஞ்செய்து அத்துவிதானந்த அகண்டபரிபூரணத்தில் நித்தியமாய வாழச்செய்வது நிஜமென்பதும், பஞ்சாக்கரம் சிவம்முதலாகிய ஐந்துபொருளைக் குறிக்கும் ஐந்தெழுத்துடையதேனும் சிவமென்னும் ஒருபொருளையே குறிக்கும் ஒருசொல்லெனப்படும் சிவமந்திரமாய் நிற்பதுபோல் திருத்தொண்டத் தொகையுட்பட்ட நாமங்கள் பலவாயினும் அவையெல்லாம் சிவானந்தானுபூதியைத் தருதற்கு ஒருமந்திரமேயாக விருப்பதென்பதும்தோன்ற ஒருமையாற் றூயசொல் எனவும், இறைவனருள் வேண்டி இறைவனடியை யர்ச்சித்தற்கு சிவமந்திரம் மலராயிருப்பதுபோல், அன்பு வேண்டியர்ச்சிப்போர்க்கு நாயன்மார் திருநாமக்கோவையாகிய மந்திரமே மலரென்பது தோன்ற சொன்மலரெனவும், ஸ்ரீ பஞ்சாக்கரத்தில் ஆகமப்பொருள், ஆரணப்பொருள், புராணப்பொருள், ஆனந்தத்தாண்டவப்பொருள், மோனந்தமாகியமுத்திப்பொருள் ஆகிய ஐம்பொருளும் நிறைந்திருப்பதுபோல், சிவஞானசாதனம், சிவப்பேறு, சிவானுபவம், சிவானந்தம் அன்புஎனவே - சிவஞானசாதனத்தாற்சிவப்பேறும், சிவப்பேற்றால் சிவானுபவமும், சிவானுபவத்தாற் சிவானந்தமும், அச்சிவானந்தம நீங்காதிருக்கச்செய்யவல்ல அன்பும் ஆகிய ஐவகைத்தேனும், பூக்களில் தேன் நிறைந்திருப்பதுபோலும் அந் நாயன்மார்களது திருநாமத்தைக்குறித்த ஒவ்வொருபுராணங்களில் பொதிந்துகிடக்கும் அவ்வருமைதோன்ற உவமைவாயிலாக மலர்போதின் நறவு எனவும், மலரின்கண்ணுள்ள தேனை அறுகால்வண்டுகள் வேண்டி யுண்பதுபோல், இறைவனால் வரத்தரும் அன்புசெறிதேனை வுணரவிரும்பும் அவாவுடை அறிவுடையார் அவர்புராணங்களில் ஆராய்ந்துணரவல்லராய் அதிற்காணப்படும் அன்பினையுணர்ந்து தேன்போல் தித்திக்கும் அவ்வன்பின் வயத்தராவா ரென்பது நிச்சயமென்னும் உண்மைதோன்ற நுகர்தரு புனிதர் எனவும் சிவஞானசாதனம் கைவரப்பெற்றவர் கைவரப்பெறாது அவாவுவதும், சிவப்பேற்றை எய்தப்பெற்றவர் எய்தப்பெறாது வருந்துவதும், சிவானுபூதி அடையப்பெற்றவர் அடையப்பெறாது வாடுவதும், சிவானந்தத்தில் நிற்கப்பெற்றவர் நிற்கப்பெறாது வேண்டுவதும் அன்பைநோக்கியே யாகலான் அவ்வரியஅன்பின் வயத்தராய் அவ்வழியொழுகப் பெற்ற அன்பாளராகிய புனிதரது சபையே பஞ்ச சபேசனாகிய இறைவனுக்கு யாவர்க்கும் காட்சிகொடுக்கும் இராஜசபைஎன்பது தோன்ற அவையுட்சிறந்த பேரவையென்றும், "மன்னருள் எவ்வண்ணம் மானுடரின் மாணவக, அன்னவகையே யரனருளும் - என்னில், அடியவரே யெல்லாமும் ஆங்கவர்தாம் ஒப்பில், அடியவரே யெல்லாம் அறி" என்று சித்தாந்தத்தில் விதித்திருத்தலின், அரனருளை முறையாகவிதிக்கும் அதிகாரம்பெற்றுள்ள அடியார்களாகிய அரசர்கள் விதிக்கும் விதிகள் எவையோ அவையே இவ்வுலகின்கண் நிலவப்பெற்று வெற்றியுடன் இருக்கக்கடவனவன்றி ஏனையவையல்ல என்பது தோன்ற விதிமுறையுலகினில் விளங்கி வெல்கவே எனவுங் கூறினர்.

பத்தராய்ப்பணிவார்கள், பரமனையேபாடுவார், சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசியமுனிவர், அப்பாலும் அடிச்சார்ந்தார் என் றெண்ணப்பட்ட தொகையடியார்கள் பலரும் தனியடியார்களாகிய அப்பெருமக்களோடு ஒன்றுயெண்ணப்பட்டவரே யாவர் என்றும், அவர்களுடைய பெருமையுந்தோன்ற நாயன்மார் எனப் பொதுப்படக் கூறினரென்க.

---

**திருக்களிற்றுப்படியார்.**

தூயசொன்மலர் என்பதற்கு - திருத்தொண்டர்களது சரிதமென்று கூறுவாருமுளர். சடைமுடியின் மண்ணுளள மதி - தேயுந்தன்மையை யுடைய வளர்மதியன்று, வளருந் தன்மையையுடைய பிறையென்று மதித்தற்கு மதிவளர் என்றார்.

இதனால், திருத்தொண்டத்தொகை சிவமந்திரம்போன்ற மந்திரமென்பதும், அதனை யோதும் அடியவரது சபை உலகில் வெற்றியுடன் பிரகாசிக்கக் கடவதென்றும் கூறிய வாறுமென்க. (ச)

## அவையடக்கம்.

வேறு.

அளவிலாத பெருமைய ராகிய
அளவிலா அடியார்புகழ் கூறுகேன்
அளவுகூட உரைப்பரி தாயினும்
அளவிலாசை துரப்ப அறைகுவேன்.

(இ - ள்.) இதுபோலும் இவர்களதுபெருமையென் றளவிடப்படாத பெருமை யுடையவராகிய, அளவில்லாத அடியார்களுடைய கீர்த்தியை யான் எங்ஙனம் சொல்ல வல்லவனாவேன், அங்ஙனம் அவர்களது புகழ் எனது சொல்லுட்படுத்திச் சொல்லுவது முடியாதசெயலேயாயினும், (எனது) அளவில்லாத ஆசை (என்னைச்சொல்லுவாயென்று துரத்துவதனால், (யான் சொல்லும்வன்மையை யுடையவனாய்ச்) சொல்லுகின்றேன் என்பதாம்.

சிவஞானிகளாகிய மெய்யன்பர்கள் இறைவனது உபகாரத்தைக் கருதிநைந்து தமது அறிவிச்சைசெயல்கள் யாவும் அவ்விறைவனுக்கே யாக்க, அவ்விறைவன் "தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்பனாகலின்" தனது அறிவிச்சைசெயல்கள் யாவும் அவ்வன்பர்க்கே யாக்குவன், அத்தகைய அளவில்லாத பெருமையோடு வாழும் மேம்பாடுடையவ ரென்பார் அளவிலாதபெருமைய ரெனவும், அங்ஙனம் அன்பர்களோடு ஏகனாகிய இறைவன் அநேகனாய்த் தனது புகழ்களை அவர்களது ஞானச்செயலால் வெளிப்படுத்து கின்றானாகலின் அப்பெரும்புகழ் உடையவரென்பார் அளவிலா அடியார்புகழ் எனவும், அருளானும் அன்பானும் இறைவனோடு தாதான்மியமாகிய (கலந்த) அவ்வடியார்களது புகழை, அருளோடும் அன்போடும் கலக்கப்பெறாத எனது அறிவிச்சைசெயல்களைக் கொண்டு யான் எங்ஙனம் எடுத்துக்கூறும் ஆற்றலுடைய னாவனென்பார் அளவு கூடவுரைப்பரிது எனவும், அளவுகூட வுரைப்பரிது என்ற அந்நிலையில் நான் நிற்க, என் ஆசையெழுந்து என்னுட்புகுந்து இடைவிடாது என்னைச்சொல்லுவாயென்று துரத்துவதனால் யான் அதனைத் தடுக்கவறியாது "ஆசைவெட்கமறியாது"என்பதுபோல், அவ்வாசையின்வழித்தாய் நாணமிழந்து சொல்லத்துணிந்தேனென்பார் அளவிலாசைதுரப்ப அறைகுவேன் எனவுங் கூறினார்.

இதனால் அளவில்லாத பெருமையுடையவர்களாகிய அடியார்புகழை யானே கூற வந்தவன் அன்று, என் ஆசை என்னைத்துரத்த அந்த ஆசையுட்பட்டுச் சொல்லுகிறேனென்று கூறியதாமென்க. (ரு)

தெரிவரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவருஞ்சீர் புகலலுற் றேன்முற்றா
பெருகுதண்கடல் ஊற்றும் பெருநசை
ஒருசு ணங்கனை ஒக்குந் தகைமையேன்.

(இ - ள்.) யாவரானும் அறிதற்கரிய சிறப்பினையுடைய நாயன்மார்களது ஒப்பற்ற பெருமையை, (யான்) சொல்லத் தொடங்கினேன். (இதனால் யான் எத்தகையனென்று உணருங்கால்,) நீர்ப்பெருக்க மிக்க கடல்முழுவதையும் ஊர்வழியாய்க் கவிழ்க்கும் பேராசையைக் கொண்ட ஒருநாய்க்குச் சமானமாகும் தன்மையுடையவனாயினேன் என்பதாம்.

3

திருத்தொண்டத்தொகையுட் பட்டாரது செயலெல்லாம், வேண்டுவார்க்கு வேண்டும்பொருளைத் தந்த இறைவனுக்கு, வேண்டும்பொருளைத் தந்த செயற்கரும் செய்கைகளாகலின் தெரிவரும் பெருமையும், பொருவரும் சீருமாயிற்றென்க. அத்தகையசிறப்புடைய எனதாசையாற் சொல்லப்புகுந்ததனால் யான் கடலைச்சிறிதாக வெண்ணிக் கவிழ்க்கத் துணிந்த சிற்றறிவுடைய சிறியநாயினுக்குச் சமானமாயினேன் என்க.

இதனால் யான் தொண்டர் சரித்திரத்தைச் சொல்லி முடிக்கவல்லவனன்று. ஏனெனின், அது கடல்போன்றது. யானோ நீரைநாவினால் நக்கும் நாய்போன்றவன். ஆகவே அது என்சொல்லான் முற்றுப்பெறுவதின்று. மற்றெனவெனின் எனக்கு வசப்படாதிருந்த என்னுளை தொண்டர்சீரில் முற்றுப்பெற்றிருக்கச் செய்தனனென்று கூறியதாமென்க.

சுணங்கனை யொத்த யான் உலகெலாம் என்னும் அருண்மொழியை யுட்கொண்டு பெருகுந் தன்மையினையுடைய தண்கடல் நீர் முழுவதும் வாய்முகந்து உலகினர்க்கு ஊற்றி உபகரிக்கவேண்டும் என எண்ணுகின்ற சுண்ணப (வெள்ளிய)கனை (ஒலிக்கும் மேகத்தை) யொத்துள்ளேனாதலின் தெரிவரும் பெருமைத்திருத்தொண்டர்தம் பொருவருஞ் சீர்ப்புகலலுற்றேன் என்று புறச்சமயத்தாரை அடக்கியதாம்.

நாலுண்பேனென்று நாவாலுண்ணவந்த நாய்க்குக் கடல் அடங்காததுபோல் திருத்தொண்டர்புராணம் என்னுவில் அடங்காததன்று. ஏனெனின், உலகெலாமென்று அருளாற்கூறிய அவ்வருண் மொழியையேகொண்டு இப்புராணக்கடலை அடியேன் நாவாற் கூறவந்தனனாகலின் யானுண்ணப்பெறுவானாயினேன். அன்றி இறைவன் உலகெலாம் என்னும் ஓர் மொழியிலடக்கி எடுத்துக்கொடுத்தானாகலினானும் அது, என்னுவிலடங்கி நிற்றலானும் அம்மொழியிலடங்கியுள்ள தெரிவரும் பெருமைத் திருத்தொண்டர்தம் பொருவருஞ்சீர் என்புகல வல்லேனாகேன்; அத்துணிபான் புகலலுற்றேனென்றார்.

அல்லதூஉம், வேதமாகிய கடலிலுள்ள பொருளெல்லாம் ஐந்தெழுத்தில் அடங்கியுள்ளதுபோலும் உ-ல-கெ-லா-ம் என்னும் ஐந்தெழுத்தில் பெரியோர்புராணம் அடங்கியுள்ளதாகலின் பஞ்சாக்கரத்தை ஓதப்பெற்ற அடியேனது நாவால் உலகெலாமென்னும் ஐந்தெழுத்திலடங்கியுள்ள பெரியபுராணத்தையுஞ் சொல்லவல்லனாவேன் என்பதுமாம்.

அல்லதூஉம், மலமாகும் உடலூண் உண்ணுதற்கு உதரம் இடந்தராது சிவமாக்கும் உயிரூண் உண்ணுதற்கு உள்ளம் இடந்தரும்.

ஆகலான் உலகெலாமென்னும் சிவமாக்கும் அருண்மொழி என்னுள்புகுந்து என்னைச்சிவமாக்கியபடியால் யான் சொல்லவல்லேனென்பதுமாம். (௬)

செப்பலுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொருட்குரை யாவருங் கொள்வரால
இப்பொருட் கென்னுரை சிறிதாயினும்
மெய்ப்பொருட்குரி யார்கொள்வர் மேன்மையால்.

(எ - து.) (ஒருவன்) சொல்லத்தொடங்கிய பொருள் சிறப்புடைப்பொருளாய்ச் சொல் சிறப்புடையன அல்லவாயிருப்பின் அச்சொல்லைக் கருதாது அச்சிறப்புடைய பொருளைநோக்கி, அப்பொருளுக்குரிய சொல்லைச் சிறப்புடைச்சொல்லாக யாவரும் சேர்த்துக்கொள்வார்கள். (அஃதேபோல், இத்திருத்தொண்டத்தொகையுட்படும்) அரிய பொருளுக்கு எனதுசொல் சிறுமையுடைத்தாயினும், மெய்ம்மைப்பொருளுக்கு உரிமையாயுள்ளவர், (சொல்லின்சிறுமையை நோக்காது, அச்சொல்லில் அமைந்திருக்கும்) பொருளின் மேன்மை ஒன்றையேகருதி அச்சொல்லையும் மேன்மையாகவே கொள்வார் என்பதாம்.

இதனால் பொருளின்சிறப்பு சொல்லான் விளங்கப்பெறுமாயின் அச்சொல் சிறப்புடைச்சொல்லே யாமெனவும், சிறப்பை விளக்காதாயின் அச்சொல் சிறப்புடைத் தன்றாமெனவும், சொல் சிறப்புடைத்தாயும் பொருள் அஃதின்றாயிருப்பின் அச்சிறப்புச் சொல்லால் அப்பொருள் சிறப்புடைத் தன்றாமெனவும், பொருட்சுவை நோக்குவோர் சொற்சுவை நோக்கார் எனவும், சொற்சுவை நோக்குவோர் பொருட்சுவை நோக்காரெனவும், சொற்சுவை நோக்கிப் பொருட்சுவை நோக்காதோர் அறிவிற் சிறியாரெனவும், பொருட்சுவை நோக்கிச் சொற்சுவை நோக்காதோர் அறிவிற் பெரியாரெனவுங் கூறுவர் கல்விநோக்குடையார் எனவும், அருள்நோக்குடையார் சொற்சுவையால் பொருளுக்குச் சுவையும், பொருட்சுவையால் சொல்லுக்குச் சுவையும் உளவாம், ஆகலின், அவ்விரு சுவையும் சுவையாகக்கருதாது, அச்சொல்லினும் பொருளினும் அருட்சுவை யொன்றையே காண்பர் எனவும், அங்ஙனங் காணப்பெறின் இது சுவையுடையசொல் என்று சொல்லை வேறுபிரித்தும், இது சுவையுடைய பொருள் என்று பொருளை வேறுபிரித்தும் பார்க்கஅறியாது, அருளுடைச் சொல்லில் அருளுடைப்பொருளைச் சுவைத்தும், அருளுடைப் பொருளில் அருளுடைச்சொல்லைச் சுவைத்தும் இன்புறுவரெனவும், விதந்து சுவை இத்தன்மையதெனவும், சுவைப்போர் இத்தன்மையரெனவும் விளக்கியவாறுமாம்.

அல்லதூஉம், சுவையுடைச் சொற்குச் சுவையுடைப் பொருளும், சுவையுடைப் பொருட்குச் சுவையுடைச் சொல்லும் ஆய்ந்துணர்ந்து களிக்கவல்ல அறிவுடையோரினும், மெய்ப்பொருட்குரியார் மேன்மையால் இந்நூலைக்கொள்வரென்றார். எனவே அன்னைவேண்டி மெய்ப்பொருளைநோக்கும் உரிமையுடையோர்க்கு இப்புராணத்துள் அவர் வேண்டும்அன்பும், அவர்நோக்கும் மெய்ப்பொருளாகிய அருளும், உலகெலாம் என்னும் அருண்மொழிப்பொருளோடு இந்நூலிற் பொதிந்துகிடத்தலின் அம்மேன்மையைக் கருதிக் கொள்வரென்றார்.

இதனால் கற்பவை-கசடறக் கல்லாதாரும், கற்றபின் - அதற்குத்தக நில்லாதாரும், ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான் அடங்காப் பேதையாரும், கற்றதனாலாய பயனாகிய வாலறிவன் நற்றாளைத் தொழப்பெறாதாரும் இந்நூலைக் கொள்ளாரென்றும், கற்பவை கசடறக்கற்றாரும், கற்றபின் அதற்குத்தக நின்றாரும், ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான் அடங்கும் அறிவிற்பெரியோரும், கற்றதனாலாய பயனாகிய வாலறிவன் நற்றாளைத் தொழப்பெற்றாருமே இந்நூலை மேன்மைபாகக் கொள்வாரென்றும், எனவே-கற்பவைக் கசடறக் கல்லாதார் முதலாயினார் சிவனருள் விரவப்பெறாதவராகலான் அவரெல்லாம் இந்நூலைச் சிறப்பாகக் கொள்ளாரென்றும், கற்பவை கசடறக்கற்றார் முதலாயினார் சிவனருள் விரவப்பெற்றவராகலான் அவரெல்லாம் இந்நூலைச் சிறப்பாகக் கொள்வரென்றுங் கூறியவாறாம். (எ)

மேய இவ்வுரை கொண்டு விரும்புமாம்
சேயவன்திருப் பேரம்பலஞ் செய்ய
தூய பொன்னணி சோழ னீடுழிபார்
ஆயசீர் அனபாயன் அரசவை.

(இ - ள்.) பொன்வண்ணம எவ்வண்ணம அவ்வண்ணம் மேனிப பொலிந் திலங்குவோனாகிய நடேசப்பெருமானது பேரம்பலமாகிய சபையை, மாற்றுயர்ந்த பசும்பொன்னாற் பொலிவுபெறச்செய்த திருநீற்றுச்சோழனென்னும் தீக்ஷாநாமமுடையனாய், எந்த வூழிக்காலத்தும் பரவிக் கிடக்கவல்லதாகிய கீர்த்திவாய்க்கப்பெற்ற அநபாயச் சக்கிரவர்த்தியினது சபையானது, 'உலகெலாம்' என்னும் பொன்மொழியை முன்னாகப் பொருந்தப்பெற்ற இப்புராணத்தைத் தலைமையாகக்கொண்டு போற்றுநிற்கும் என்பதாம்.

சேயவன் திருப்பேரம்பலம் எனத்தொடுத்து அரசவை மேய இவ்வுரைகொண்டு விரும்பும் எனக்கூட்டுக.

அநபாயச்சோழரென்னும் அரசர்பெருமானார், அன்னம்பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலமாகிய பேரம்பலம் பொன்னம்பலமாய்ப் பொலிவுபெற்றோங்கச் செய்ததுபோல் "குனித்தபுருவமும் கொவ்வைச்செவ்வாயும் குமிண்சிரிப்பும், பனித்தசடையும் பவளம்போல் மேனியும் பால்வெண்ணீறும், இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால், மனித்தப்பிறவியும் வேண்டுவதே யிந்தமாநிலத்தே" எனவும் "வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்" எனவும், மதித்து வேண்டிய பிறவியை இப்பூமிசையிற் பெற்ற அறிவுடையார்க்கு அன்புண்டாய், அவ்வன்பால் அவர்கள் களித்தோங்குமாறு இப் புராணத்தைச் செய்தருள, சேக்கிழார் பெருமானாரை வேண்டினாராகலின் அநபாய னரசவை இவ்வுரைகொண்டு விரும்பும் எனவும், பேரம்பலம் பொன்னால் மேய்ந்தமைபோல் இப் பெரியபுராணமும் 'உலகெலாம்' என்னும் அருண்மொழியால் மேவப்பெற்றமையால் மேய இவ்வுரைகொண்டு எனவுங்கூறினார்.

இதனால் பேரம்பலத்தைப் பொன்னாக்கியதால் பொருட்செல்வத்தால் அடைப்படும் புகழையும், இப்புராணம் வெளிவரச்செய்த காரணத்தால் வரப்படும் புண்ணியத்தோடு ஞானத்தையும் பெற்றுப் பிரகாசிப்பது அரசனது சபையென்று வியந்து மகிழ்ந்து கூறப்பட்டது.

அநபாயன் எனவே - தானும் அபாயமற்றவன், பிறருக்கும் அபாயத்தைப்போக்குகின்றவன் என்க. (அ)

அருளினீர்மைத் திருத்தொண் டறிவரும்
தெருளினீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல்கூறிய
பொருளினாகும் எனப்புகல் வாம் அன்றே.

(எ - து.) (சொல்லப்புகுந்த) திருத்தொண்டினியல்பு, (சிற்றுணர்வால்) அறிதற்கரிய அருட்டன்மையைப் பெற்றுள்ளது, (ஆகலின் இத்திருத்தொண்டினியல்பை) நும்முடைய அறிவினால் சொல்லுவதற்குக் கூடுமோ, என்றால், (எவ்வாற்றானும்) மயங்குவதற் கிடனில்லாத மெய்ம்மொழியைக் கூறுவானாகிய இறைவன்கூறிய பொருளுரையினால் என்னறிவைக்கொண்டு சொல்லக்கூடுமென்று சொல்லுவோமாக என்பதாம்.

திருத்தொண்டு அறிவரும் அருளினீர்மைத்து எனக்கூட்டுக

அருள்வேண்டுவோரால் செய்யப்பட்ட திருத்தொண்டாயிருப்பின் சொல்லக்கூடும் அருளுடையாரால் செய்யப்பட்ட தொண்டாயிருத்தலின் அது சொல்லப்படும் தன்மையுடைத்தன்று என்னுஞ் சிறப்புத்தோன்ற திருத்தொண்டு அறிவரும் அருளின் நீர்மைத்து என்றார். அருளினீர்மைத் திருத்தொண்டை, அருளினீர்மையுடைய அருள்மொழிபெற்றாரால் சொல்லக்கூடுமேயன்றி, அஃதில்லாதார் சொல்லக்கூடுந்தரத்ததன்று என்னும் சிறப்புத்தோன்ற தெருளினீர் இது செப்புதற்கு ஆம்! எனின் என்றார். எனவே, ஆசிரியர் தம்மைத்தாமே பிறர்வினாவும் வினாவாகக் கூறினார். யான் அருளிலனாகலின் தெருளிலன் என்பது திண்ணம். திண்ணமாயினும் திருப்பேரம்பலம் செய்ய தூய பொன்னணியாக்கிய சோழனாகிய அநபாயன் அரசவை இவ்வுரைகொள்ள விரும்புகின்றிருத்தலின், அவ்விருப்பினைச் செம்பொன் அம்பலத்தில் வீற்றிருக்கும் செம்மேனியனாகிய இறைவன் தான்முன்னின்று முடித்தல் கடனாகவெண்ணி அவ்வவை வேண்டியபடியே அருள்செய்யப் பரமாகாசசரீரியாய் 'உலகெலாம்' என்னும் அருண்மொழியை யானுணர்ந்தோத அருளினான் என்னும் அவ்வருட்சிறப்புத்தோன்ற மெய்ம்மொழி வான் நிழல்கூறிய என்றார். அம்மெய்ம்மொழி என்னளவேயன்றி உயர்ந்தோரெல்லாம் யாதொரு மயக்கமுமின்றிச் செவிப்புலனாற் கேட்டுணர்ந்து அச்சொல்லின் பொருளே யாம் என்னுரையென்று மகிழ்ந்து கூறச்செய்த அச்சிறப்புத்தோன்ற வெருளான் பொருளினதும் எனப்புகல்வாம் என்றார்.

தொண்டாற்பெறும் அருள், அருளாற்பெறுந்தொண்டு என இரண்டு. அவ்விரண்டனுள் சரியை கிரியா யோகங்களைச்செய்து அவ்வழியாற்கூடும் அருளால் ஞானத்தைப் பெறுதல் தொண்டாற்பெறும் அருள். ஞானம் வரப்பெற்ற பின்னர் அவனது பெருங்கருணைத்திறத்தைநாடி அன்புவேண்டிச் சரியைகிரியைகளைச்செய்து மனமுருகி அவ்வன்பினையே பெறும்பேறாகப் பெற்று மகிழ்தல் அருளாற் பெருந்தொண்டு. ஆகவே. தொண்டரென்னும் பெரியதிருநாமம் வாய்க்கப்பெற்ற நாயன்மார்களாகிய ஞானசீலராற் செய்யப்பட்ட தொண்டு அருளாற்பெற்ற தொண்டென்று குறித்தற்கு அருளினீர்மைத் திருத்தொண்டென்றும், இத்தொண்டைச் சொல்லப்புகுந்த யானும் அருளாற்பெறுந் தொண்டையேவேண்டும் அறிவுடையனுயுள்ளேன் ஆகலின் என்பாலும் அவ்வன்பு நின்று அத்தொண்டைச் சொல்லுந்திறத்தை யுண்டாக்கி முற்றுப்பெறச்செய்யும் என்பதில் ஐயமின்று என்னும் அத்திண்மையைக் குறித்தற்குத் தெருளின் இது செப்புதற் காமென்றும் † "எண்ணிய வெண்ணியாங் செய்துப எண்ணியார், திண்ணிய ராகப் பெறின்" என்ற உறுதிமொழிப்படி யான் அங்ஙனமே நிற்கும் அருளைப்பெற்றேனாகலின் அவ்வருளாளனாகிய எமதிறைவனும் வேதசிவாகமங்களாகிய மெய்ம்மொழிகளைக் கூறிய திருவாக்கான் நீ யாவும்சொல்லி முடிப்பாயென்று உலகெலாமென் றருளினனென்று குறித்தற்கு வெருளின் மெய்ம்மொழி யான் நிழல்கூறிய பொருளினுகும் என்றும் கூறினர்.

இதனால் - சொல்லப்புகுந்த திருத்தொண்டும் அருளினீர்மைத்து, யானும் அவ்வருளினீர்மைத் திருத்தொண்டையே வேண்டிய அருள்தொண்டன், எனக்கு அருளியமொழியும் அருளினீர்மைத்து, ஆகலின் அம்மொழியையே முதலாகக்கொண் டெழுந்த இப்பெரியபுராணமும் அருளினீர்மைத்தென்று வலியுறுத்தியவாறு காண்க. (கூ)

## நூற்பெயர்.

வேறு.

இங்கிதன் நாமங் கூறின் இவ்வுல கத்து முன்னாள்
தங்கிருள் இரண்டின் மாக்கள் சிந்தையுட் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை வெளிப் புறவிருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும் திருத்தொண்டர் புராணம் என்பாம்.

(எ - து.) (சிற்சபேசனது சந்நிதானமாகிய) இவ்விடத்தில் இப்புராணத்தினது திருநாமத்தைச் சொல்லப்புகின், ஆதிகாலந்தொட்டு இவ்வுலகத்துள் தங்கிவருகின்ற புறவிருள் அகவிருள் என்னும் இரண்டனுள், ஆன்மாக்களுடைய சித்தத்தினுள்ளே சார்ந்து அதிகரித்து நிற்றலையுடைய அஞ்ஞானவிருளை, மற்றொன்றாகிய புறம்பே காணபபடும் இருளை யோட்டுகின்ற செவந்தகிரணங்களையுடைய சூரியனைப்போலப் போக்குகின்ற திருத்தொண்டர் புராணமென்று சொல்லுவோமாக என்பதாம்.

மாக்கள் சிந்தையுட் சார்ந்துநின்ற பொங்கிய இருளை நீக்குந்திருத்தொண்டர்புராணமென்பாம் எனக்கூட்டுக.

ஏனையபுராணங்களெல்லாம் இருவினையுட்பட்டு உழல்வோரது மருட்செயலையும், அச்செயலால் சுவர்க்க நரகங்களிற்பட்டு நிலைபெறாது மேலும் கீழும் அலைவதாகிய செயலையும், அவ்வலைவுக்கே இருள்சேர் இருவினையுஞ் சேராதாகிய இறைவனை நோக்கித் தவவிரதாதிகளாகிய அவச்செயல்களைப பன்முறையும் செய்துசெய்து அவ்விறைவன்பால் அவபோகங்களையும், அவயோகங்களையும், பெற்றுவாழ்தலாகிய நிலையில் செயல்களையும், கூறுவனவேயாமென்னும் அச்சிறுமைதோன்ற இப்புராணத்தைத் திருத்தொண்டர் புராணம் என்பாம் என்றார். எனவே அவமாகும் பதங்களைத்தரும் அவச்செயல்களைச்

---

† திருக்குறள், அதி - ம், வினைத்திட்பம்.

செய்யாது தவமாகும் சரியையாதி அருட்செயல்களை எல்லை இல்லாமற்செய்து அவற்றான் சிவபோகங்களையும், சிவயோகங்களையும் பெற்றுவாழ்தலாகிய அழிவில் வாழ்க்கையையும், *"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால், வேண்டின் அஃதொன்றுமே வேண்டுவது, வேண்டினது, வேண்டாமை வேண்டவரும் என்றமையால், வேண்டிடுக வேண்டாமை வேண்டும் அவன்பால்" என்ற சித்தாந்தவாக்கியத்தின்படி இறைவன்பால் தாம் ஒன்றையும் வேண்டாது பிறவிக் கிடஞ்செய்யும் தம்மாட்டுள்ள எல்லாப்பொருள்களையும் அவ்விறைவன் வேண்ட அவ்விறைவன் வேண்டியவாறே யானெனதென்பதற்று அப்பொருள்களைக் கொடுத்து அவனைமகிழ்வித்து அம்மகிழ்ச்சியைக்கண்டு மகிழ்ந்திருந்த அன்பின்செயலையும் விளக்குதலான் இங்கித னாமங்கூறின் திருத்தொண்டர் புராணம் என்பதாம் என்றார். அரங்கேற்றியவிடம் நடராஜப்பெருமானது சபையென்பது தோன்ற 'ஐந்து' எனவும், இப்புராணம் திருத்தொண்டத்தொகையை முதலாகக்கொண்டு பாடியதாகிய அக்குறிப்புத்தோன்ற இதனையும் திருத்தொண்டர் புராணம் எனவும், இப்புராணத்தாற் பெறப்படும் பயன் இது என்னும் குறிப்புத்தோன்ற சிந்தையுள் சார்ந்துநின்ற பொங்கியஇருளை நீக்கும் எனவும், அவ்விருள் சூரியனைக்கண்டு நாடோறும் ஓடுகின்ற புறவிருள்போல் ஓடுதலின்றி அநாதிதொட்டு இன்றளவும் நீங்காது அகத்தேபொங்கியிருந்த இருளை இப்புராணமானது எங்கும் நிறைந்திருந்த புறவிருளை எப்புறத்தும்தோன்றுவண்ணம், சூரியன் உதித்தவுடன் போதல்போல் இப்புராணத்துட்பிரகாசிக்கும் சிவஞானமும் அருளும் அன்பும் ஆன்மாக்கள் சிந்தையுள் தோன்றியவுடன்முறையே, பொறி புலன் வழியாய்ப் பரவிக்கிடந்த கன்மமலவிருளும், ஆன்ம அறிவிற்பரவிக்கிடந்த ஆணவமல விருளும், பரந்தோடுமென்னும் குறிப்புத் தோன்ற ஏனைப்புறவிருள் போக்குகின்ற செங்கதிரவன்போல் எனவும் கூறினர்.

இதனால் இறைவன் பணியாகிய தொண்டன்றி வேறொருபணியும் செய்யவறியாத தொண்டர்களது புராணமாதலின் தொண்டர்புராணமெனவும், இது எவ்வொளியானும் எவ்வாற்றானும் போக்குதற்கரிய அநாதியான ஆணவாதி இருளைப் போக்குதலின் ஞானசூரியனெனவும், ஞானசூரியனாய் விளங்கும் இப்புராணம் இறைவன் உருவத்திருமேனிகொண்டு வேதசிவாகமங்களைக் கூறியருளியதுபோற் கூறாமல் அசரீரியெனப்படும் சொரூபத்திருமேனியனாய் உலகெலாமென்று அருளினனாகலின் பதிநூல்களிற்சிறந்த அருணூலெனப்படும் பெரியபுராணமெனவும் அறிவுறுத்தியவாறுமென்க.

நூற்பெயர் கூறியதோடன்றி சிந்தையுட்சார்ந்துநின்ற பொங்கியஇருளைப் போக்கும் எனப் பயனும் உடன்தோன்றக் கூறியதனால் இறைவன், தனது ஆணையெனப்படும் சத்தியினால் இயக்கப்படும் இருவினைகளையும், அவற்றின்பயன்களையும், அவையொழியும் வகையும், வேதசிரோமியாற் கூறினனெனவும், அவையிற்றை அந்நூலால் உணர்ந்த பின்னர் இருவினைகளை யியற்றுவோனும், அவற்றின்பயன்களை நுகர்வோனும், நுகர்ந்த பின்னர் அவைகளினின்றும் வேறுபடுவோனும், ஆன்மாவேயாமென ஆன்மப்பிரகாசத்தை வேதாந்தத்தாற் கூறினனெனவும், வேதாந்தத்தால் ஆன்மாவைப்பிரகாசமாயறிய வந்தபின்னர் அவ்வான்மாவுக்கு மலபரிபாகமும், சத்திநிபாதமும் உண்டாதற் கேதுவான சாதனங்களையும், அச்சாதன விசேடத்தாற் பிரகாசப்படும் சிவப்பிரகாசத்தையும், ஆகமத்தாற்கூறினனெனவும், அச்சிவப்பிரகாசத்தால் அருட்பெருக்கமும், அவ்வருட்பெருக்கால் அன்பின் நிறைவும் உண்டாமென்பதை இந்நூலாற் கூறினனெனவும் அறியக் கிடக்கின்றமைகாண்க.

## பாயிரச்சிறப்பு.

இனி, "உலகெலாம்" என்னும் முதற்செய்யுளால் இப்புராணத்துக்கு இறைவனும் இறைவனருளும் அவனருள்மொழியும் முன்னிற்குஞ்சிறப்பைக்கூறினர்.

திருக்களிற்றுப்படியார்.

"**ஊனடைந்த**" என்னும் இரண்டாஞ் செய்யுளால் உயிர்க்கு உறுதியெனப்படும் மானுடனத்தை யான் தொழுவந்தது யானடையப்பெற்றுள்ள ஊனடைந்த பிறவியினா லன்றோ எனப் பிறவியின் சிறப்பைக் கூறுவர்போன்று நடையச்சிறப்பைக்கூறினர்.

"**எடுக்குமாக்கதை**" என்னும் மூன்றாஞ்செய்யுளால் இறைவனையும், அவனருளையும், அவன்வாய்மொழியையும், இந்நூல்பெறப்பெற்றதனால் இனிஅந்நூலை முடிக்குங் கடமைப்பாடு என்னுடையதன்று, அவன்மகனாராகிய மூத்தபிள்ளையாருக்கே என்று அக்கடவுளை வழுத்துவார்போன்று அவர் தாமாகவே கடமைப்பாடுள்ளா ரென்னும் அச்சிறப்பைக்கூறினர்.

"**மதிவளர்**" என்னும் நானகாஞ்செய்யுளால் இப்புராணம் சிர்விககினத்தை மேற்கொண்டதாகலானும், அனைத்துயிர்க்கும் உறுதியாகிய இகத்தையும் பரத்தையுங் கொடுக்கும் இறைவன் ஆன்மாக்களுக்கு முதநெறியாகிய பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி ஆண்டருளத் திருவுளத்தெண்ணிக் கொண்ட சங்கமக்கோலமுடையாரது திருநாமத்தை யுச்சரித்து அவர்காட்டிய நன்னெறியின் சுவையினைக் காணப்பெற்றாரது கூட்டப்புகழ்ச்சியேயாகலானும், அந்நகூட்டத்தவர்களது சபை * "தாமடங்க இந்தத் தலமடங்கும் தாபதர்கள் தாமுணரில் இந்தத் தலமுணரும், தாமுனியில் - பூமடந்தை நில்லாள் புகழ்மடந்தை போயகலும், நாமடந்தை தங்காள் நயந்து" என்றபடி வெற்றியுள் பிரகாசிக்கும் என்னும், அச்சிறப்பையும் கூறினர்.

"**அளவிலாத**" என்னும் ஐந்தாம் செய்யுளால் எவ்வகைத்தான தேவரிடத்தும், எவ்வகைத்தான வினைச்சிறப்புடையாரிடத்தும், தான் ஒருபொருளையும் வேண்டாது, அவரவர்வேண்டும் பொருளை வேண்டியாங்கருளும் பெரும் வள்ளலாகிய இறைவன் உண்ணும் உணவாதிகளை விரும்பும் வேட்கையைக்கொண்டு வேண்ட, அவர் வேண்டிய வாறே வேண்டிவேண்டி யளித்த பெரும்புகழுடையாராகிய எம்பெருமக்களையும், அவர்களதுபுகழையும், அளவுபடுத்திக் கூறும் வன்மையுடையார் இவ்வுலகின்கண் எவரிருக்கின்றனர் இல்லை! முக்காலத்திலுமில்லை!! ஆகவே, அப்பெரியார்களது புகழை யான் சொல்லவல்லேனென்று கூறவேனுயின் அச்சொல் அவையடக்கம் வேண்டுவோர்க்கு அது அவையடக்கத்தைக் காட்டுமோ காட்டா. ஆகலான். என்னுரையால் சொல்லவல்லேன் என்றேன் என்றார். எனவே அறிவிற்சிறந்த அவையார் ஆசையை யடக்க எண்ணார்; எண்ணுவாராயினும் அவ்வாசை அடங்குந்தன்மை யுடைத்தான தன்று. அதனை யானே அடக்கத் துணியினும் பிறர் அடக்கத்துணியினும், பின் யான் சொல்லவேண்டிய புராணத்துக்குத் துணையாய்நின்று முற்றுப்பெறச்செய்வதற்குத் துணை யாது? ஆகலான், அவையாரெல்லாம் எனது ஆசையையடக்குதற்கு எண்ணாது ஆசையை அதிகரிக்கச்செய்வதற்கே விருப்புடையவரா யிருத்தல்வேண்டுமென்று அவையடக்கங் கூறுவார்போன்று அடக்கம் வேண்டாமையாகிய சிறப்பைக்கூறினர்.

"**தேரிவரும்**" என்னும் ஆறாஞ்செய்யுளால் என்னாசை எனக்குத் துணையாய நிற்கப் பெற்றதனால் இந்நூலைச் சொல்லிமுடிப்பபே னென்னும் ஆசையை யுடையவனா யிருந்தேன். எல்லாப்பொருளையும் தன்னுள் அடக்கும் ஆற்றலையுடைத்தானது ஆசை; அவ்வாசையையடக்க வல்லமையுள்ளபொருள் உலகில் ஒன்றேனுங்கிடையா, அங்ஙனமிருக்க அவ்வாசை அடியார்புகழைக் கூறத்தொடங்கிய இக்காலத்து அப்புகழ் அவ்வாசையை நாய்போலாக்கி அடக்கிற்று. எனவே அப்புகழ் கடல்போலாயிற்று. ஆசை நாய்போலாயிற்று என்க. அஃதாவது, திருத்தொண்டரது புகழ் தெரிவரும்பெருமையாய்க் காணப்பட்டதனாலென்க. என்னையெனின், ஆன்மாக்கள் மூவகையின ரென்றும், மலங்கள் மூவகையென்றும், அம்மலங்கள் அம்மூவகை யான்மாக்களிடத்து முறையே ஒன்று

* திருக்களிற்றுப்படியார்.

இரண்டு, மூன்றாகட பற்றியிருக்குமென்றும், அவற்றை இறைவன் கருணையால் தனது அறிவானும், தனது அருளுருவானும், அவர்போன்ற உருவானும் போக்கிச் சிவப்பேற்றையும் தனதுபேற்றை அளிப்பாரென்றும் சிவாகமங்களிற் கூறப்பட்டுள்ளன. அங்ஙனங்கூறியபடி அத் திருத்தொண்டர்களிடத்து நிகழ்ந்த செய்திகள் காணப்பட்டனவோ இல்லை. அஃதாவது அவர்கள் பாசவசப்பட்டுத் தம்மையும் காணாது இறைவனையுங் காணப்பெறா திருந்தனர் என்பதுமில்லை. இறைவன் மேலே சொல்லியவாறு மூவகையுருவான் அவர்களுக்கு அப்பாசத்தைப் போக்கினனென்பது மில்லை. போக்கியபின்னர் தமது சிவப்பேற்றை யளித்தாரென்பது மில்லை. அவர்கள் அப்பேற்றைப் பெற்று மகிழ்ந்தாரென்பதுமில்லை. மற்றென்னெனின், இவர்கள் வசமாய்ப பாசப்பொருள்களெல்லாம் கிடந்தனவென்றும், அப்பொருள்களையெல்லாம் இறைவன் தான்பெறும் அரியபொருளாகப் பெற்றுக்கொண்டனரென்றும், அவர்கள் செய்யும் அருட்செயலைக் கல்லையும், கமரையும், வாளையும், கானையையும், சூதாட்டுக்கருவியையும், போரிற்றாங்கும் கேடகத்தையும், இவைபோன்ற பலவுறுப்புகளையும் இறைவன் தம்முருவாகக் கொண்டு முற்றுப்பெறச் செய்தனரென்றும், செய்தபின்னர் செயற்கருஞ் செய்கையைச்செய்பவனாக இறைவன்தம்மையெண்ணாது அவர்களைநோக்கி “செயற்கருஞ்செயல் களைச்செய்த தீரர்களே” என்று அவர்களைப்போற்றி நீங்கள் எம்மைவிட்டு நீங்காது எம்முடன் வாழவேண்டும், எம்முடன் நிற்கவேண்டும், என்று, வேண்டினரென்றும், அவர்களும் வேண்டியவாறேவாழ்ந்து நிற்கின்றனரென்றும், அறியவருகின்றபடியால் அவர்களது திருத்தொண்டு நேர்வரும் பெருமையையே யுடைத்தாயிற்றென்க.

இதனால் மூவகை யான்மாக்களுள் இவர்களை ஒன்றாகச் சேர்த்தற் கின்மையால் இவர்கள் எவ்வகையினரென்றும், இவர்களால் ஆளப்பட்ட பொருளகளெல்லாம் பாசப்பொருள்களாகவே யிருக்க அவைகளையெல்லாம் பாசாகிதனாகிய விமலன் தாம் வேண்டும் பொருளகளாகவேண்டிப பெற்றுக்கொண்டதனால் அப்பொருள்கள் எவ்வகைத்தான பொருள்களென்றும், இவர்களிடத்திருந்த பொருளெல்லாம் இறைவன் வேண்டும் பொருளாகவே யிருந்தனவன்றி வேண்டாப்பொருள் ஒன்றுமின்றாக அவ்விறைவன் திருவுருக்கொண்டு இவர்களிடத்துவந்து போக்கியது எதுவென்றும், அங்ஙனந்திருவுருக் கொண்டுவந்தவுருவம் அறிவுருவத்தும், அருளுருவத்தும் ஆட்கொள்ளவந்த அவர்போன்ற வுருவத்தும் சேராமல் கல்முதலாகச் சொல்லபபட்ட உருவமாய் வெளிப்பட்டமையால் இவ்வுருவங்கள் எவற்றோடு எண்ணப்பட்ட வுருவங்களென்றும், இவ்வகைத்தான உருவங்களால் ஆளவந்தாரென்பதை எண்ணிப்பார்க்குங்கால் அவ்விறைவன் அவர்கள்பால் வந்து தாம்வேண்டும் பொருள்களைக் குறித்துக் கேட்டுப்பெற்று அவர்களைப்புகழ்ந்து அவர்களை உலகறியச் செய்தபுகழ் வெளிபபட்டதேயன்றித் தாம் அவர்களுக்கு ஏதேனும் வேண்டிய பொருள்களைக் கொடுத்துத் தம்புகழை உலகறியச் செய்ததின்மையால் இவர்களது செயல் எதனோடு எண்ணப்பட்ட செயலென்றும், இவர்கள்பால் இறைவன் பெற்றது இது இதுவெனத் தெரியவந்ததேயன்றி அவ்விறைவன்பால் இவர்கள்பெற்றது இது இதுவென்று எண்ணவும் சொல்லவும் தெரிவரிதாய்ப போனபடியால் என்னுசை நாய்போலாயிற்று என்று தன்னைக் குறைப்பார்போன்று தொண்டர்சிறப்பையும் அவர்களது தொண்டின் சிறப்பையும், அவ்விருவகைச் சிறப்பேயன்றி, கடல்நீரை வாரியுண்ணார்க்கு வாற்றி உபகரிக்க எண்ணிய நாய் அது முடியப்பெறாமை கண்டபோதினும் அக்கடல்நீரை உண்ணவெண்ணிய ஆசைநீங்கப்பெறாது அந்நீரை நாவினால் நக்கத்துணிவதுபோலும் தொண்டர்சீர் நெரிவரும் பெருமைத்தாயினும் எனது ஆசை எனது நாவினால் சொல்லத்துணிந்தது என்னும் தனது ஆசையின் சிறப்பைக்கூறினார்.

“செப்பலுற்ற பொருளின் சிறப்பினால்” என்னும் எழாஞ்செய்யுளால், எனது நாவினால் சொல்லப்பட்ட சொல் சிறப்பிலதாயினும், அச்சொல்லின்கண் காணப்படும் பொருளில் எனது ஆசை பெரிதாய் அச்சொல்லையும் பெரிதாகவெண்ணி மேலும் என்னை

சொல்லச்செய்வதை யானறிகின்றமைபோல் திருத்தொண்டிலிருக்கும் மெய்ப்பொருளுக்குரிய பொய்யடிமையில்லாத புலவர்கள் திருத்தொண்டிலிருக்கும் மெய்ப்பொருளை எமக்குக்காட்டுகின்ற இச்சொல்லைச் சிறிதென்றெண்ணப்படுமோ! படா! பெரியதினும் பெரிதே என்றுமதித்து எனதாசைபோல் தமது ஆசையைப்பெருக்கி என்சொல்லோடு அதன்கண் ணமைந்துள்ள பொருளையுங் கொள்வார்கள் என்று மெய்ப்பொருட் குரியாரைத் தமதுசொல்லைக் கொள்ளுமாறு சொல்லுவதுபோன்று நீவிர் மெய்ப்பொருளமைந்த எனதுசொல்லாகிய இப்புராணத்தைக் கொள்ளாதொழிவீராயின் நீவிர் மெய்ப்பொருட் குரியீர் என்பதுபோலியாகும் என்று அவரதுஆசை, சிறப்புடைத்தன்றென்பதையும், தமதுஆசையே சிறப்புடைத் தென்பதையுங் கூறினார்.

"மேய இவ்வுரை" என்னும் எட்டாஞ்செய்யுளால், மீண்டும் மெய்ப்பொருட்குரியாரைநோக்கிப் புலவீர்காள்! எனதாசையாற் சொல்லப்பட்ட இவ்வுரை - பேரம்பலஞ் செய்ய தூய பொன்னணியாக்கிய அனபாயச்சோழ மகாராஜாவினால் விரும்பிக்கொள்ளப் பட்டவுரை, பேரம்பலமாகிய பொன்னம்பலத்தினகண் நடனஞ்செய்தருளும் நடராஜாவினால் அருளிய உலகெலாம் என்னும் அருண்மொழியால் விரும்பி ஆளப்பட்ட வுரை என்று உரையின்சிறப்பை விளக்குவதோடு அரசன்சிறப்பையும் அரசன் அவையின் சிறப்பையும் அவர்களுக் கெடுத்துக்கூறி நீவிர் இவ்வுரைகொண்டு விரும்புமென்று கூறினார்

"அருமினிமை" என்னும் ஒன்பதாஞ்செய்யுளால் உரையின் சிறப்பை முன்னே கூறியதுபோல் இவ்வுரை வேறொருபொருளை உடையதுமன்று ஆளுவதுமன்று, நிழல (அசரீரியாகக்) கூறிய சொல்லின்பொருளேபொருளாகக்கொண்டு ஆளும் சிறப்பினை யுடைத்தாகலான் அறிவரும் அருளின்மைத்தாகத் திருத்தொண்டிருத்தல்போல் என னுரையென்று சொல்லப்படும் இதுவும் அருளினாமை தேயாம அவ்வுரையுட்பட்ட என்னறிவாகிய தெருளும் அருளினாமைத்தேயாம் ஆகலின், புலவீர்காள்! செப்புதற்காமோ என்னும் ஐயமொழிந்து ஆம் என்னும் துணிவுகொண்டு நடராசன் திருவருளை நாடுவீராக என்று தமக்கு வாய்க்கப்பெற்ற திருவருளின் சிறப்பைக்கூறினார்

"இங்கிதனாமம்" என்னும் பத்தாஞ்செய்யுளால் "திருத்தொண்டர்புராணமென்னும் பெயருடைத்து" நடராஜனளித்த சொல்லையும் பொருளையும் கொண்டுமுடிக்க இப் பெருநூல் என்று நூற்பெயரைக் கூறியதோடு மாக்கள் சிந்தையுட்சார்ந்துநின்ற பொங்கிய இருளைப் புறவிருள் போக்குகின்ற செங்கதிரவன்போல போக்கும் என்று அதன் பெயரின்கண் விளங்கும் பொருளின்சிறப்பையும் விரித்துக் கூறினார்

## பெரியபுராண திருநாமச்சிறப்பு.

"இங்கிதன நாமங் திருத் தொண்டர் புராணம் எனப்" என்று கூறியிருக்க, அஃதே போல திருத்தொண்டர் புராணம் என வழங்காது, பெரியபுராணம் என வழங்கிவரும் காரணம் என்னையோவெனின், தில்லைவாழந்தணர் முதல் இசைஞானியார் ஈறாக உள்ளாரைமாத்திரங் கூறியிருப்பின் திருத்தொண்டர்புராணமெனவே வழங்கிவரும் இவரெல்லாம், திருத்தொண்டத்தொகை யென்னும் பதிகத்தில் தொகுத் தோதப்பட்டவ ராகலினானும், அத்திருத்தொண்டத்தொகை, தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்திகளுடைய பெரியசரித்திரத்தில் அடங்கியிருப்ப தாகலினானும், அக்காரணங்களைக்கருதி பெரியபுராணம் என வழங்கிவரலாயிற்று

இவ்வுண்மையை ஆராய்ந்துணரவே, ஆசிரியர் சேக்கிழார் அநபாயன் முமமை நாயன் மார்களுடைய கதைகளை அரசனிடத்திற் சொல்லிவந்ததுபோல் சொல்ல வந்தவராயினும், அவை சுந்தரமூர்த்திகள் திருவாயமலர்ந்தருளிய திருத்தொண்டத்தொகையன்றி யில்லையாகலின் அம்மூர்த்திகளுடைய பெரியகதையை முதலாகச்சொல்லத்தொடங்கி

னேன் என்னும் அச்சிறப்புத்தோன்ற, நிர்விகற்பனைக் கருதி விசுவினைகர்த்தாவைத் துதிக்கத் தொடங்கிய அச்செய்யுளில் "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்றும், அப்பெரியோருடைய மாக் கதையில், யான் சொல்லத்தொடங்கிய தொண்டர்புராணம் வருவது என்னும் அவ் வுண்மைதோன்ற இங்கு சிறுவேலைசூட்டி இதனையே திருத்தொண்டர்புராணம் என்ப என்றார்.

அல்லதூஉம், பிரமன்முதலாயினோரைத் தொண்டராகவுடைய நடராஜன், தன்னைத் தொண்டனென்று தனது அன்பர்கள் அழைப்பதில் ஆசையுடையவனாய்த் தில்லைவாழ் அந் தணர் என்னும் நாமத்தைக்கொண்டு தொண்டர்களுக்கெல்லாம் முதல்வனாய் நிற்றலால் அவனெண்ணிய அவ்வருமைநோக்கித் தொண்டர்புராணமெனவும், திருத்தொண்டத் தொகையுள் கூறப்பட்ட பெரியோர்க்குப் பெரியோன், பெரியதெய்வமாகிய அவனன்றி வேறொருதெய்வம் இன்றாகலான் அப்பெருமைநோக்கிப் பெரியபுராணமெனவும், பெரி யோர்களால் வழங்கப்பட்டு வருகின்றன எனவுங் கொள்க.

இனிப் பெரியபுராணம் என்னும் திருநாமத்தின் சிறப்பைச் சிறிது எடுத்துக் கூறுவாம்.

ஆசிரியர் சேக்கிழார், தமது அரசனிடத்திற் சொல்லிவந்தபடி அமணர்கள் உண் டாக்கிய சீவகசிந்தாமணியினும், இவர்போன்ற ஏனைச்சமயிகள் உண்டாக்கிய நூல்களி னும் காணப்படும் பொருள்கள், உமியைப்போலும், மலட்டுப்பசுவைப்போலும், இருமை யைப்போலும், மின்மினியைப்போலும், அளறுநிறைந்தகுழியைப்போலும், உள்ளன வெனவும், அரன் உண்டாக்கிய வேதசிவாகமங்களிற் காணப்படும் பொருள்கள், அரி சியைப்போலும், கறக்கும் இயல்பினையுடைய பசுவைப்போலும், தளிர்பூஞ்சோலை வழியைப்போலும், சந்திரனைப்போலும், விளங்கொளியைப்போலும் உள்ளனவென வும், மிகவெளிமையாய்க் காட்டுவது இப்புராணமாகலின் பெரியபுராணம்.

உலகிலுள்ள நூலெனப்பட்டன வெல்லாம், சிவமாகும் நெறியினையும், அந்நெறி யின் இலக்கணங்களையும், அவ்விலக்கணங்க ளுணர்ந்து அந்நெறி எய்தப்பெற்றாரை யுங் கூறி, சிவமாய் அமர்ந்திருக்கச் செய்வதாகிய அன்பினையும், அவ்வன்பின் இலக்கண மாகிய திருத்தொண்டின் திறத்தையும், அத்தொண்டின்வழி யுணர்ந்து அன்புடையவ ராய்ச் சிவமாய அமர்ந்திருக்கப்பெற்றாரையும் கூறுதொழிய, இந்நூல் அவைமுற்றுங் கூறுவதாகலின் பெரியபுராணம்.

"சிவனுருவருவுமல்லன் சித்திறேடு அசித்துமல்லன், பவமுதற் றொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானுமல்லன், தவமுதல் யோகபோகந்தரிப்பவனல்லன் தானே, இவை பெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா இயல்பினானே" என்ற சித்தாந்த வாக்கியப்படி ஒன்றிலும் இயைந்திடாத சிவபெருமானை "அன்பேசிவமாவது" என்று திருமந்திரங் கூறிய உண்மையை எப்புராணங்களாம் விளக்காதொழிய, இப்புராணம் ஒன்றே "அன்பே சிவமாவது" என்று ஏற்றேகாரத்தாற்கூறிய உண்மையை அறிவாளிகள் நன்குணர இப்புராணம் விளக்கியிருத்தலின் பெரியபுராணம்.

பெருநூல்களென வழங்கும் ஞானநூல்களிலெல்லாம் சிவபெருமானது தடத்த இலக்கணங்களையும், சொரூபஇலக்கணங்களையும், பலமுகமாகவும், பலபிரகாரமாகவும், கூறியுள்ளனவேனும், அந்நூல்களை ஆராயப்பெற்றோரும் ஆராய்ந்தவழியே அனுபவம் வரப்பெற்றாரும், சிவனுடன் சிவமாயமர்ந்திருக்க எங்குங்காணப்பெற்றோமில்லை. இப் புராணத்துள் அறுதியிட்டுக் கூறியுள்ளார் சிவபெருமான் வீற்றிருக்கும் கோயில்களில் சிவத்தோடு இனிதமர்ந்திருக்கக் காண்கின்றோ மாகலின் அவர்களது புராணம் பெரிய புராணம்.

"தாவரசங்கமங்கள் என்றிரண்டுருவினின்று, மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன்" என்ற சித்தாந்தவாக்கியப்படி, தாவரவுருவத்தினின்று இம்மைப் போகங்களையும், புரந்தராதியர்களுடைய போகங்களையும் வேண்டுவோர்க்கு அவைகளை

அனுக்கிரகஞ்செய்வதுபோல், அவைகளை வேண்டாது "ஆகம்விண்டு கம்பம்வந்து கண் கள் தாரைதாரையாகச் செய்விக்கவல்ல பேரன்புவேண்டும் அன்பர்களுக்கு அவ்வன்பை சங்கமரூபமாய் அனுக்கிரகஞ்செய்யும் சிறப்பை அனுபவமாய் இப்புராணங் கூறுவதாக லின் பெரியபுராணம்.

வல்வினை மெல்வினையாகக்கூறப்படும் சரியை கிரியைகளினும், ஆதார நிராதார முறையாற் கூறப்படும் யோகமார்க்கங்களினும், தடத்தவழியாலும் சொரூபவழியானும் சிவசொரூபத்தை வழிபடும் வழிபாடுகளைக்கூறும் சன்மார்க்கத்நுறையினும், செல்வோர்க் குத் தலைப்படுவோனாகிய சிவனைத் தலைபடவொட்டாது தடுக்க, மேலே சொல்லிய சரியைகிரியைகளினும், யோகமுறைகளினும், ஞானத்நுறையினும், முனைத்துவரும் நான் என்பதனைத்தடுத்து, அருளைக் கூடச்செய்து, அவ்வழியே சிவனைத்தலைப்படச் செய்யவல்ல அன்பில், சத்தினிபாதத்து உத்தமரெல்லாம் தலைபபடுமாறு நாயன்மார்களது சரித்திரவைபவ வுண்மைகளை இதில் கூறுவதனால் பெரியபுராணம்.

"உலகெலாமுணர்ந்தோதற்கரிய"னாகிய இறைவன் "உலகெலாம்" என் றடியெடுத்துக் கொடுத்த அத்திருவடியையே முதலாகக்கொண்டு நடந்து வரப்பெற்றதுமன்றி, அவ் வடிபுடையானாகிய அம்முதல்வனையும், முதலடியாகக் கொண்டிருத்தலின் பெரிய புராணம்.

ஞானத்தின் மேம்பட்ட அன்பினையும, அவ்வன்பின் வழிநின்று இயற்றுவதாகிய ஞானச்சரியாதி நான்கும் அறுபான்மும்மையாய்விளங்கும் உண்மையினையும், அங்ஙனம் விளங்கிய அவ்வழியானே அரியதோர் நிலையை எய்தப்பெற்ற அளவிலாத பெருமையரா கிய அளவிலா அடியார்களையும் அளவுபடுத்திக் கூறுவது இந் நூலாகலின் பெரியபுராணம்

* திருக்களிற்றுப்படியாரின்கண் எம்பிரான் சம்பந்தரது அருட்செயலையும், திரு நாவுக்கரசுகளது அருட்செயலையும் கூறிச், சுந்தரமூர்த்திகளது அருட்செயலைக் கூறுங் கால் "வன்றொண்டன்றொண்டுகளை, ஏதாகச்சொல்லுவேனியான்" என்று சொல்லுந் திறமற்று நின்ற வன்றொண்டப்பெருமானுடைய சரித்திரத்தை முதல் இடை கடைகளிற் கொண்டிருத்தலின் பெரியபுராணம்.

முதலிடைகடைகளிற் கொண்டவற்றுள்ளும் ஆன்மாக்களுக்கு இருவினையொப்பு, மலபரிபாகம் வந்தபோது தடுத்தலும், சத்திநிபாதம் வந்தபோது ஆட்கொள்ளலும், சிவ ஞானம் வந்தபின்னர் அருளலுமாகிய முறையினையுடைய இறைவன் தானே வலிந்து வந்து தடுக்கத்தலைப்பட்டபொழுது அவ்விறைவனைத தாம்படுத்தும், தம்மை அடிமை யென ஆண்டவரைத் தாம்தோழரென ஆண்டும், பரவைசங்கிலிகளை அருள்செய்த அவருக்குத் தாம் பலதிருப்பதிகங்களை யருளியும உள்ள ஆரூரரது தடுத்தாட்கொண்ட புராணத்தை முதலாகக்கொண்டிருத்தலின் பெரியபுராணம்.

ஓடம் சிவிகை உலவாக் கிழியடைகப்
பாடல் பனைதாளம் பாலைநெய்தல் - ஏடெதிர்வெப்
பென்புக் குயிர்கொடுத்தல் ஈங்கிவைதான் ஓங்குபுகழ்
தென்புகலி வேந்தன் செயல்.

கொல்கரியில் நீற்றறையில் நஞ்சிற் கொலைதவிர்த்தல்
கல்லே மிதப்பாய்க் கடல்நீந்தல் - நல்ல
மருவார் மறைக்காட்டில் வாசல்திறப் பித்தல்
திருவாமூ ராளி செயல்.

மோக மறுத்திடினு முத்தி கொடுப்பதென
ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் - தோகையர்ப ல்
தூதாகப் போகவிடும் வன்றொண்டன் தொண்டுகளை
ஏதாகச் சொல்வேன் இயான்.

ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம், இவ்வைந்துங்கூடிய வித்யாதேகமும், அதன்பின்னர் அத்தேகத்திற்கு நேத்திரமும், நேத்திரம் உண்டானபின்னர், இருதயம், சிரசு, சிகைகளும் ஆகிய இவ்வனைத்தையுங்காக்கும் கவசமுமாயுள்ளன பதினொருதிருமுறைகளாம். அஸ்திரமந்திரம்போல் தனக்குள் அடக்கிப் புறச்சமயக் கோள்களையெல்லாம் சரகோஷத்தால் ஓட்டி, அகச்சமயிகளை உள்ளடக்கித் திக்பந்தனம் செய்வது இப்புராணம்: ஆகலின், பெரியபுராணம்.

இங்ஙனங்கூறிவந்த அங்கந்யாசமுறைபோல் திருமுறைகள் நிற்குநிலை எங்ஙனமெனின்,—ஈசானம், தத்புருஷம், அகோரம் என்னும் இம்மூன்று மந்திரஸ்வரூபமாகவுள்ளது ஞானசம்பந்தப்பெருமா னருளிய மூன்று திருமுறை. வாமதேவம், சத்யோஜாதம், இவ்வைந்துங் கூடிய வித்யாதேஹம் என்னும் இம்மூன்று மந்திரஸ்வரூபமாகவுள்ளது, வாகீசப்பெருமா னருளிய மூன்று திருமுறை, இவ்வித்தியாதேகியாகிய இறைவனுக்கு, நேத்திரமாய் நேத்திரமந்திர ஸ்வரூபமா யுள்ளது வன்றொண்டப்பெருமா னருளிய திருமுறை. இந்த நேத்திரத்தைக்கொண்டு அன்பர்கள் எண்ணும் எண்ணங்களை எண்ணும் இருதயமாயுள்ளது மணிவாசகப்பெருமா னருளிய திருவாசகம். அவ்விருதயத்தான் அன்பர்கள் எண்ணியபடி பெத்தான்மாக்களாகிய கீழ்மக்களாகாது முத்தான்மாக்களாகிய மேன்மக்களாகச் செய்யும் சிரோமந்திர ரூபமாயுள்ளது திருப்பல்லாண்டோடு கூடிய திருவிசைப்பா, அம்முத்தான்மாக்களைத் தான்பற்றற்குரிய சிகாமந்திர ரூபமா யுள்ளது, திருமந்திரம், அம்மந்திரசித்தியால் அவர்களைப் பற்றியபின்னர் அவர்கள்பால் அருளுடையனாய் எப்புறத்துங் காக்கும் கவசமந்திரரூபமா யுள்ளது திருவாலவாயானருளிய திருப்பாசுரமுதல் திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை ஈறாகவுள்ள பதினோராந்திருமுறை. அங்ஙனங் காத்தபின்னர் உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன் என்னும் சத்திபிரணவ ஹுங்காரத்தால் புறச்சமயக்கோள்களை யெல்லாம் ஓட்டி, "வாழ்க வந்தணர் வானவ ரானினம், வீழ்கதண்புனல் வேந்தனும் ஓங்குக, ஆழ்கதீயதெல்லாம் அரனாமமே, சூழ்கவையக முந் துயர்தீர்கவே" என்று உலகமுற்றுந் திக்பந்தனம்செய்வது பன்னிரண்டாந் திருமுறையாகிய இப்புராணம்.

தீயதெல்லாம் ஆழ்ந்துபோகச் செய்து, அரனாமமே சூழும்படிச் செய்யவல்ல இப்புராணம், பதினொரு திருமுறைகளையும் தனக்கு அவயவயங்களாகவும், அவற்றின் பொருள்கோள் உயிராகவும், அப்பொருள்களினுள்ளே வரும் சிவனே உயிர் அறிவாகவும் இப்புராணத் திருவிருத்தங்களே உடம்பாகவும் வாய்க்கப்பெற்று, வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க, வேத நெறியையும், சைவ நெறியையும் இரண்டு பாதமாகக்கொண்டு மாதவஞ்செய்த தென்திசைவாழ்ந்திடவந்தது இப்பெரியபுராணம்.

இன்னமும் பலவள அவையெல்லாம் இடம்வந்துழி எடுத்துக்கூறுவாம்.

இப்பாயிரத்தால் ஆக்கியோர் அளவிலாசைதுரப்ப அறைகுவேன் என்ற சேக்கிழார் பெருமானு ரென்பதையும், வெகுளின் மெய்ம்மொழி வான் நிழல்கூறிய அருள் வாக்கே வழியென்பதையும், அநபாயன் அரசன் சவை மேய இவ்வுரைகொண்டு விரும்பும் என்றதனால் - இந்நூலுக்கு அரசனவையே எல்லை என்பதையும், தெரிவருஞ்சீர் பெருமைத் திருத்தொண்டர்தம் பொருவருஞ்சீர் என்றதனால் நூற்பொருள் என்பதையும், சீர்செப்பலுற்றேன் என்றதனால் யாப்பென்பதையும், முதலியபொருள் அளவிலாத அடியார்புகழ் என்றதனால் - பொருள் இதுவென்பதையும், மெய்ப்பொருட்குரியார் என்றதனால் கேட்போர் இவரென்பதையும், மாக்கள் சிந்தையுட் சார்ந்துநின்ற பொங்கிய இருளைப்போக்கும் என்றதனால் பயன் இதுவென்பதையும் விளக்கிப் பாயிரத்தினிலக்கணங்களை வகுத்துக் கூறியவாறுமாம்.

பாயிரம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கயிலாயச் சிறப்பு.

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னு நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரி யானென்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை.

(எ - து.) யாதொன்றின் தன்மையினையும் அறியுந்தன்மையினையுடைய எவ்வகை மேம்பட்டோர்க்கும் தன்தன்மை யிதுவாமென்று அறிதற்கரிய இறைவன் எக்காலத்தும் நீங்காது வாழப்பெற்றுள்ள பெருமையிற்சிறந்த ஸ்ரீகயிலாய பர்வதமானது, பொன்னின் மேல் வெள்ளிய திருநீற்றை, முற்றவும் பூசப்பட்டுள்ளதென்று சொல்லும்படி வெண்ணிறமாய்ப் பிரகாசிக்கும் பெரிய இமயமலையின் பக்கத்திலுள்ளது என்பதாம்.

தன்னை யார்க்கும் அறிவரியான் மன்னிவாழ்கயிலைத் திருமாமலை, பொன்னின் வெண்திருநீறு புனைந்தெனப் பன்னும் நீள் பனி மால்வரைப் பாலது, எனக்கூட்டுக.

"அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர்பொருளாய் வேறாங், குறியது வுடைத்தாய வேதாகமங்களின் குறியிறந்து"* என்ற சித்தாந்தவாக்கியப்படி, புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் நான்கனுள், அகச்சமயம் ஒழித்து, ஒழிந்த முக்கூற்றுப்புறச் சமயங்களில் தனித்தனி அறுவகைப்பட்ட சமயங்களில் நின்று அவரவர்கொண்ட முதற் பொருளாய், அவரின் வேறாகிய பாடாணவாதமுதலிய அகச்சமயத்தார்க்கு இலயம், போகம், அதிகாரம் என்னு மூன்றவத்தையின் முறையே சத்தியும், உத்தியோகமும், பிரவிர்த்தியும் என்னும் தொழில்வேறுபாடுபெற்றிச் சிவன், சதாசிவன், மகேசனென்னும் பெயருடைய அருவம், அருவுருவம், உருவம் என்னுந் தடத்தக்குறியே குறியாகவுடைத்தாய், சித்தாந்தசைவர்க்கு அத்தடத்தக்குறியேயன்றி வேதாகமங்களின் கருத்திற்கு அதீதமாய்ப் பிரகாசிக்குந் தன்மையனென்பார் தன்னையார்க்கும் அறிவரியானென்றும், அவ்வரியான் தேவர்கோ அறியாத் தேவதேவனாய், செழும்பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மூவர்கோனாய்நின்ற முதல்வ (துரிய) னாய், மூர்த்தியாய், மூதாதையாய், எந்தையாய், மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்தமேனியனாய், மாதாளும் பாகத்தனாய், எக்காலத்தும் வீற்றிருக்கப்பெற்றது ஸ்ரீகயிலாயம் என்பார், என்றும் மன்னிவாழ் கயிலைத் திருமாமலை என்றும், அந்த ஸ்ரீகயிலாயம் பனியினால் மூடப்பட்டு விபூதியினது வெண்ணிறத்தைக்காட்டித் தன்னைப்போல் பிரகாசிக்கின்ற இமயமலையின் பக்கத்திலுள்ளது என்பார் பொன்னின்வெண்டிருநீறு புனைந்தெனப்பன்னுநீள்பன மால்வரைப்பாலது என்றும், கூறினார்.

ஏனைச்சமயத்தார்களது குறிகளெல்லாம் சாபமென்கிற களங்கமுடைத்தாகலின் அக்களங்கமில்லாதது இந்த நீறு என்று குறித்தற்கு வெண்ணீறு என்றும், அந்நீறு ஐசுவர்யம் என்றுகுறித்தற்குத் திருஎன்றும், ஏனைச் சமயத்தெய்வமாயுள்ளாரெல்லாம் வாக்குமனங்களால் யாவரும் அறிதற்கு எளியதன்மை யுடையரென்றும், இவன் வாக்குமனாதீதன் என்றும் குறித்தற்கு தன்னையறிவரியானென்றும், ஊழிதோறும் அழிந்து ஆவதின்றி ஊழிதோறோங்கும் பெருஞ்சிறப்பினை யுடையது கயிலைஎன்று குறித்தற்கு மன்னிவாழ்கயிலைத் திருமாமலை என்றும், இமயமலை - பனியின்மிகுதியினால் மூடப்பட்

* சிவஞானசித்தியார் - மங்கலவாழ்த்து.

டிருத்தலால் இமயமலையென்று பெயர்பெற்றதேயன்றி அதுபொன்னே என்றும், அவ் விமயத்திற்குச் சார்பில் உள்ள வெள்ளிமலையாகிய ஸ்ரீகயிலாயம் அதன்மேல் வெள்ளொளிபரப்பித் திருநீற்றொளியைக்காட்ட அச்சிறப்புடைத்தென்றும் குறித்தற்கு பொன்னின் வெண்டிருநீறுபுனைந்தென்றும் கூறினார்.

இதனால், ஸ்ரீகயிலாயம் இமயமலையின் பக்கத்திலுள்ளது என்று கூறியதேயன்றித், தன்னையார்க்கும் அறிவரியானை அறிவிப்பது ஸ்ரீகயிலாயமென்றும், இமயமலை அவனது திருநீற்றை அறிவிப்பதென்றும், எடுத்துக்காட்டினார். எனவே - கடவுளையும், திருநீற்றையும் மலைபோற்காட்டி சைவசமயமும் அச்சமயத்தெய்வமாகிய சிவமும் என்றும் மலைபோல் அழியாதோங்கி நிலைபெற்றுள்ளன என்று புறச்சமயத்தார்நாண அறிவுறுத்தப் பட்டது. (௪)

அண்ணல் வீற்றிருக் கப்பெற்ற தாதலின்
நண்ணு மூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணில் மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணி யந்திரண் டுள்ளது போல்வது.

(எ - து.) அக்கயிலையங்கிரி, யாவர்க்குந் தலைவனாகிய இறைவன் வீற்றிருக்கப் பெற்ற சிறப்பினையுடைத்தாதலால், மூன்றுலகில் உள்ளவர்களும், நான்குவேதங்களும், அளவில்லனவாகிய பெரியதவங்களைச் செய்ய, அவைகாரணமாய் வந்துகூடிய புண்ணியங்களெல்லாம், ஒன்றாகத் திரண்டிருப்பதுபோலும் தோற்றமுடையது என்பதாம்.

பிரமன் முதலியோர் - தமக்கு அசுரராலும் மற்றைய பலவகையாலும் இடுக்கண் வருந்தோறும், அவைகளைப் போக்கிக் கொள்வதற்குப் பலதவங்களைச்செய்ய, அவற்றால் வந்தபுண்ணியங்களுக்கும், வேதங்கள் - இறைவன் பொருள்சேர்புகழை எடுத்துப் போற்றுதற்குப் பலவகைப்பட்ட தியானங்களைச்செய்ய அவற்றால் வந்தபுண்ணியங்களுக்கும் அனுக்கிரகஞ்செய்யச் சிவபுண்ணியங்களெல்லாம் ஒன்றாகத்திரண்டெழுந்தோங்கிய காட்சியே போல்வதென்பார் மூன்றுலகும் நான்மறைகளும் எண்ணில்மாதவஞ் செய்ய வந்தெய்திய புண்ணியந் திரண்டுள்ளது போல்வது என்றார்.

பாவத்திற்குக் கருநிறமும், புண்ணியத்திற்கு வெண்ணிறமும் உவமையாகக் கூறுவராகலின் வெண்ணிறமுடைய கயிலையைப் புண்ணியமென்றார். அளவில்லாத பெரிய தவங்களைச் செய்தார்க்கே புண்ணியந் திரண்டிருக்கொள்ளுமன்றி, சிறுநாள்களில் சிறிய தவங்களைச் செய்வார்க்குப் புண்ணியந்திரளாது என்று அப்புண்ணியத்தின் அருமை தோன்ற எண்ணில்மாதவஞ் செய்யவந்தெய்திய புண்ணியந் திரண்டுள்ளது என்றார். அப்புண்ணியம் பசுபுண்ணியமன்று, பதிபுண்ணியமாகிய சிவபுண்ணியமென்பார் - அண்ணல் வீற்றிருக்கப் பெற்றது என்றார். சுவர்க்கம் மத்தியம் பாதலம் என்னும் மூன்றுலகவாசிகளும் எவ்வகைத்தான பசுபுண்ணியங்களைச் செய்யினும், ஓர் சிவபுண்ணியங் கூடினாலன்றி அப பசுபுண்ணியங்களுக்குரிய பலன்கள் சித்திக்கா என்பது பிரமாணமாகலின்; எண்ணில்மாதவஞ் செய்யவந்தெய்திய என்றார். பலதவங்களாகிய பசுபுண்ணியங்களுக்குப் பலதெய்வங்களிருப்பதுபோல் சிவபுண்ணியங்களுக்குச் சிவனே தெய்வமாக இருப்பவனென்னும் சிறப்பும், எவரெவர் எவ்வகைத்தான தவங்களைச் செய்யினும் அத்தவங்களும், அவ்வத்தவங்களுக்குரிய தெய்வங்களும், அவ்வவற்றிற்குரிய பலன்களைத்தரும் சுதந்தரமுடையனவன்று என்னுஞ் சிறப்பும், அச்சுதந்தரமுடையோன் எல்லாத்தேவர்க்கும் மஹாதேவனாகிய இறைவனே என்னுஞ் சிறப்புந்தோன்ற அண்ணலென்றார். வேதங்கள் தம்மாற்சொல்லப்படும் தெய்வங்கள் தம்மாற் காணப்பட்டவராயிருக்கின்றனர். இம் மஹாதேவனோ எந்நாளும் காணப்படாதவனாகவே இருக்கின்றனனாகலின் அவனைக்

காணும் அவாமேற்கொண்டு மறைகளும்மாதவஞ்செய்ய என்றார். மறைகளும்கண்டதில்லை என்பதை - மறையினால் கூறொணாதாகிநின்ற இறைவன் எனவும், வேதாகமங்களின் குறியிறந்ததெனவும், அல்லையீதல்லை யீதெனுமறைகளும் அன்பைச்சொல்லினால் துதித்திளைக்குமெனவும் கூறியவாற்றானறிக.

இதனால், எல்லாத்தேவர்க்கும் சிவனே மஹாதேவனாகலின் அண்ணலெனவும், அவ்வண்ணல் வீற்றிருக்கப்பெற்ற புண்ணியமே சிவபுண்ணியமெனவும், அப்புண்ணியம் மூன்றுலகமும் மறைகளும் மாதவத்தைச்செய்ய அதனால் வந்ததெனவும், அச் சிவபுண்ணிய சொரூபந்தான் வெள்ளிமலையாகிய கயிலாயமெனவும், வேதங்களே யாயினும் புண்ணியமில்லை யாயின் இறைவனைக் காண்டல்கூடாதெனவும் பிரகாசப்படுத்தப் பட்டது. (உ)

## பூவுலகிலுள்ள தலங்களுக்கும், கயிலைக்குமுள்ள ஒற்றுமைச்சிறப்பு.

நிலவும் எண்ணில் தலங்களும் நீடொளி
இலகு தண்தளிர் ஆகவெ ழுந்ததோர்
உலகம் என்னும் ஒளிமணி வல்லிமேல்
மலரும் வெண்மலர் போல்வதம் மால்வரை.

(எ - து) சிவமயமாய் ஓங்கிப்பிரகாசிக்கும் ஊழியினும் அழிவெய்தாத எண்ணில்லாத க்ஷேத்திரங்களையும், பசிய தளிர்போலும் படர்ந்திருக்கப்பெற்ற, உலகமென்று சொல்லப்படும் ஓரழகிய கொடியின்மேல், மலர்ந்திருக்கும் வெண்டாமரை மலர்போல் பிரகாசிப்பது ஸ்ரீகயிலாயம் என்பதாம்.

நீடொளிர் இலகு நிலவும் எண்ணில் தலங்களும் எனக்கூட்டுக.

உலகமெங்கும் உள்ள சிவக்ஷேத்திரங்கள் தோறும் சரியை, கிரியை யோகங்களால் இறைவனை வழிபடும் ஆன்மாக்களுக்குச் சாலோக சாமீப சாரூப மென்னும் பதங்களைக் கொடுத்து அவர்களது உள்ளங்களை மலரச்செய்வது ஸ்ரீகயிலாயமே யாகலான், உலகினை ஓர்கொடியாகவும், தலங்களைத் தளிராகவும், கயிலையை மலராகவும் கூறினார்.

தலங்கள் எங்கும் நிறைந்திருத்தல் - இறைவனது நித்தவியாபகத்தையும், அந்த அந்தக்ஷேத்திரங்கள் பொலிவுபெற்றிருத்தல் - எங்கும் வியாபகமாயிருந்து எல்லாவுயிர்களையும் பிரகாசிப்பிக்கச்செய்யும் அவனது சித்பிரகாசத்தையும், க்ஷேத்திரங்களுக் கிடங்கொடுத்திருக்கும் பூமி கொடிபோன்றிருத்தல் - எல்லாவுயிர்களுக்கும் தாரகமாய் நிற்கும் அவனது ஆதாரத்தன்மையையும், விளக்கியவாறாம். இதனால் வியாபகத்தன்மையும், சித்பிரகாசத்தன்மையும், ஆதாரத்தன்மையும் உடையவன் சிவனொருவனே என்றதை யாவரும் பிரத்தியக்ஷமாய்க் காண்டற்கே இவ்வுவமைகள் கூறப்பட்டன. அல்லதூஉம் † குறிகளும் அடையாளமுங் கோயிலும், நெறிகளும் அவர்நின்றதோர்நேர்மையும், அறிய ஆரணம் ஆயிரம் ஓதினும், பொறியிலீர் மனம் என்கொல்புகாததே. என்று வேதமொழி வலியுறுத்தியவாறுங் காண்க.

குறிகள் - சிவலிங்கமூர்த்தங்கள், அடையாளம் - தம்மைவழிபட்ட அவர்களது பெருமையும், அவர்கள்மாட்டு தமக்குள்ள மாறாஅன்பும், யாவரும் அறியுமாறு அவர்கள் குறிகளைத் தமது திருமேனியிற் கொண்டிருத்தல். கோயில் - தம்மை வழிபட்டவரது அருமையும், அவர்பால் தமக்குள்ள அன்பும் யாவரும்உணர்ந்து அவ்வழியே தமது அடி

---

† திருநாவுக்கரசுகள் தேவாரம் - குறுந்தொகை. க்ஷேத்திரம்.

கூடுமாறு இடங்கொண்டிருக்கும் ஞலங்கள், நெறிகள் - சரியையாதிமார்க்கங்கள். அவர் நின்றதோர் நேர்மை - அம்மார்க்கங்களில் சிறிதும் தவறாது அவர்கள் நின்றதாகிய உறுதித்தன்மை.

இதனால், உலகினைப்படைத்தது - உயிர்கள்வாழவென்றும், க்ஷேத்திரங்களை எங்குங் காணச்செய்தது - சன்மார்க்கமாகிய சரியையாதிகளால் அவ்வுயிர்கள் வழிபட என்றும், ஸ்ரீகயிலாயத்தை ஊழிதோறோங்கவைத்தது - அவ்வழிபாடுடையார் வேண்டும் பொருளை வேண்டியவாறே அளிக்கத் தாம் திருவுருக்கொண்டிருத்தற்கென்றுங் கூறிய வேதவாய்மையை வெளிப்படுத்தப்பட்டது. (௩)

## வாத்தியங்களின் சிறப்பு.

மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர்
கான வீணையின் ஓசையும் காரெதிர்
தான மாக்கள் முழக்கமும் தாவில்சீர்
வான துந்துபி யார்ப்பு மருங்கெலாம்.

(எ - து.) நாற்பக்கங்களினும் யாவராலும் போற்றப்படும் நான்குவேதங்களுடைய பெரிய நாதப்பெருக்கமும், வித்தியாதரர்கள்கானஞ்செய்கின்ற வீணையின் இன்னிசைப் பெருக்கமும், மேகங்களோடு மாறுபட்டு அவைகளுக்கு எதிராக மதநீரைப் பொழிந்து யானைகள் முழங்குகின்ற முழக்கமும், தேவதுந்துபிமுதலிய தேவவாத்தியங்களின் ஆரவாரமும் பெற்றுள்ளது அக்கயிலாயம் என்பதாம்.

நான்மறைநாதமும், வீணையின்னோசையும், துந்துபியார்ப்பும், பிரமன்முதலியோர் வாழும் இடங்களில் உள்ளிடத்திலிருந்து நீங்காது ஒலிக்கும் சிறப்புடையனவாயினும் கயிலையின்கண் உள்ளிடமெல்லாம் அன்பர்கள் கோஷிக்கும் ஹர ஹர என்கின்ற கோஷங்களும், பிரமனாதியர் குறையிரக்கும் இரக்கவோசைகளும் நிறைந்திருத்தலால் நான்மறை, நாதமுதலிய அவ்வோசைகள் வெளிப்பக்கங்களிலேயே நின்று யானை முழக்கங்களோடு இவையும் ஓர்முழக்கங்களாக முழங்கிக்கொண் டிருப்பனவாயின என்றார். அல்லதூஉம் - இறைவன் தமதுநாமத்தைக் கூறிப்போற்றி அன்பர்கள்மகிழ, அவர்கள் மகிழ்ச்சியைக்கண்டு இன்புறும் இன்பத்தையும்,தம்மாட்டுக்குறையிரப்போர்க்கு அவர் வேண்டும்பொருளைக்கொடுத்து அவர் இன்புறும் இன்பத்தையும் இன்பமாகக்கொள்ளிப் பவனேயன்றி இந்திரியாதிகளால் அனுபவிக்கப்படும் இன்பங்களை இன்பமாகக்கொள்ளான். அதனால் அவைகளைப் புறம்பாயொதுக்கினனென்று வெளியாக்கியவாறுமாம்.

## துவாரச்சிறப்பு.

பனிவி சும்பில் அமரர் பணிந்துசூழ்
அனித கோடி அணிமுடி மாலையும்
புனித கற்பகப் பொன்னரி மாலையும்
முனிவ ரஞ்சலி மாலையு முன்னெலாம்.

(எ - து.) முன்ட ங்கங்களிளெல்லாம், வணங்கிச் சூழ்ந்துநிற்கின்ற பலதேவர்களுடைய கிரீடங்களில் வரிசையும், கற்பகமலர்களால் தொடுக்கப்பட்ட பொன்மாலைகளின் வரிசையும், முநிவர்களெல்லாம் கைகளைக்குவித்திருக்கும் அஞ்சலிகளின் வரிசையும், அணி அணியாய் இருக்கப்பெற்றுள்ளது ஸ்ரீகயிலாயம் என்பதாம்.

விண்ணுலகத்துள்ள அமரரும், மண்ணுலகத்துள்ள முநிவரும் அனுபவித்துவரும் போக மோக்ஷானுபவங்களாகிய செல்வங்களெல்லாம் இக்கயிலையின்கண்ணே நின்று

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# தில்லைவாழந்தணர் சருக்கம்.

## தில்லைவாழந்தணர்புராணம்.

ஆதியாய் நடுவு மாகி அளவிலா அளவு மாகிச்
சோதியாய் உணர்வு மாகித் தோன்றிய பொருளு மாகிப்
பேதியா ஏக மாகிப் பெண்ணுமாய் ஆணு மாகிப்
போதியா நிற்குந் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி.

(எ - து.) சிருட்டிக்கடவுளாயும் திதிக்கடவுளாயும் சங்காரக்கடவுளாயும் மகேசுவரராயும் சதாசிவமூர்த்தியாயும் மெய்ஞ்ஞானசொரூபராயும் உமாசகாயராயும்இருக்கின்ற எழுவகைநிலையையும் தாம்செய்யும் நடனத்தால் ஆன்மாக்களுக்கு உணர்த்தும் வண்ணம், தில்லைப்பொதுவின்கண் நடனஞ்செய்தருளும் நடனத்துக்கு வந்தனஞ் செய்வோமாக, வந்தனஞ்செய்வோமாக என்பதாம்.

பொதுநடனஞ்செய்வோனாகிய நடராஜவள்ளல் மும்மூர்த்திகளாய் நிற்பவன் என்பார் ஆதியாய நடுவுமாகி அளவிலா அளவுமாகி எனவும், மும்மூர்த்திகளாய் நிற்கும் இவரே அம்மூவர்க்கு மேற்பட்ட மகேசுவரருமாய் நிற்பவர் என்பார் சோதியாய் உணர்வுமாகி எனவும், மகேசுவரராயுணரவந்த இவரே சதாசிவமூர்த்தியாயும் இருப்பவர் என்பார் தோன்றிய பொருளுமாகி எனவும், சதாசிவமூர்த்தியாகியஇவரே மூதாதையாகிய பரசிவமும் என்பார் பேதியா ஏகமாகி எனவும், அப்பரசிவம் மாதாளும்பாகத்தனாயிருப்பதுபோல் இவரும் இருப்பவர் என்பார் பெண்ணுமாய ஆணுமாகி எனவும், இவ்வுண்மைப்பொருளைத் தில்லைப்பொதுவின்கண் உணரவே நடனஞ்செய்தல் என்பார் போதியாநிற்கும் தில்லைப்பொதுநடம் எனவும், இவ்வுண்மைப்பொருளை அந்த நடனமூர்த்தியி னருளால் மனத்தால் உணர்ந்து, வாக்கால் சொல்லத்தொடங்கியதற்கு யான் பெறும்பயன் காயத்தாலேயன்றி மனத்தாலும் வாக்காலும் வணங்குதலேயாமென்பார் போற்றி போற்றி எனவுங்கூறினர்.

ஐந்தொழிலில் முன் எண்ணப்படுவது சிருட்டியாதலால் அதனை ஆதி எனவும், முத்தொழிலில் இடையில் எண்ணப்படுவது திதியாதலால் அதனை நடு எனவும், கடையில் எண்ணப்படுவது சங்காரமாதலால் அதனை அளவிலா அளவுமாகி எனவும், ஆன்மாக்களுடைய கன்மமுழுதும் கழியுமுகத்தான் மலபாகம் வரச்செய்தல் சிருட்டியாதலால் அச்சிருட்டியையும், கன்மங்கழியுமாறு அதனை அனுபவிக்கச்செய்தல் திதியாதலால் அத்திதியையும், இச்சிருட்டி திதி என்னும் இரண்டானும் உண்டாவதாகிய துன்பங்கள் சிறிதேநீங்க இளைப்பாறச்செய்தல் சங்காரமாதலால் அச்சங்காரத்தையும், இம்முத்தொழில் கிரியாசத்தியன்றி ஆகாவாகலான் அக்கிரியாசத்தியையும், அக்கிரியாசத்தியால் ஆன்மாக்களுக்குக் கன்மமலபாகம் வந்தமையும், கன்மங்கழியவந்தமையும் உணரும் உணர்வாலன்றி உணரக்கூடாதாகலான் அவ்வுணர்வையும் உடையவர் மகேசுவரதத்வாதிகாரி

யாய் திரோபவத்தொழிலுடைய மஹேஸ்வரராதலால் அவரைச் சோதியாய் உணர்வுமாகி எனவும், சிருட்டி திதி சங்காரம் திரோபவமென்னும் நான்குதொழிலாலும் ஆன்மாக்களுக்குத் தோன்றும்பொருள் பாசநீக்கமும் சிவப்பேறுமே யாகலான் அவ்விரண்டையும் அனுக்கிரகிப்போர் சதாசிவமூர்த்தியாகலான் அவரைத் தோன்றியபொருளுமாகி எனவும், இங்ஙனமான ஐந்தொழில் செய்யும் பஞ்சகர்த்தாக்களிடத்தும் பரசிவப்பிரபு,வேறுதலின்றி அவ்வம் மூர்த்திகளாகவே நின்றருளும் மூதாதையாகலான் அப்பெருமானைப் பேதியா ஏகமாகி எனவும், அபரசிவம் சத்திசிவமாய் நின்றருளும் இயல்பினனாகலான் அவ்விறைவனை பெண்ணுமாய ஆணுமாகி எனவுங் கூறினர்.

இவ்வுண்மைதான்றவே,—"தேவர்கோ அறியாத் தேவதேவன் செழும்பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை மூவர்கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி, மூதாதை மாதாளும் பாகத்து எந்தை" என்றருளிற்று திருவாசகம்.

இனி, அளவிலா அளவுமாகி என்றதற்குச்சங்காரமென்னும் பொருள் எங்ஙனம பொருந்துமெனின்,—சிருட்டியுந் திதியும் நடைபெறுங் காலம்வரின் நடைபெற்று, அழிவுறுங்காலம் வரின் அவ்விரண்டும் அழிவெய்தக் காண்கின்றோம். சங்காரமோ அழிவெய்துவதின்றி என்றும் உள்ளது. எனவே, சிருட்டிக்கும் திதிக்கும் உட்பட்டுள்ள சராசரங்களெல்லாம் சங்காரத்தொழிலன்றிக் காரியப்படமாட்டா. எங்ஙனமெனின்,—யாதானும் ஓர்வித்தினின்றும் தோன்றவேண்டிய விருக்ஷம் வெளிப்படவேண்டுமாயின் அவ்வித்தைப் பூமியிலிட அவ்வித்துப் பூமியிற்பொருந்தி அவ்வித்தினுருவங் கெட்டபின் இலை வெடிக்கக் காண்கின்றோம். அஃதேபோல், ஒவ்வொருநாள் கழிந்தாலன்றி அவ்வித்தினின்றும் வளரவேண்டிய விருக்ஷம் வளருமாறில்லை. இதனைச் சராசரங்களாகிய எல்லாப்பொருளிடத்துங் காணலாம.

இங்ஙனங் கூறிவந்ததனால் உருவங் கெடுதலென்பதும், நாள் கழிதலென்பதும் சங்காரமெனப் பொருள்படும். படவே, தோன்றவேண்டிய பொருளைத் தோன்றச் செய்வதும், வளரவேண்டிய பொருளை வளரச்செய்வதும் சங்காரமே என்பது வெளியாயிற்று. ஆகவே சிருட்டியுந் திதியும, கால அளவையுட்பட்டவை என்றும், சங்காரம் கால அளவையுட்படாததென்றும், அழிவெய்தாத் தன்மையுடைத்தான தன்றென்றும் நக்கிடத்தலால் அளவிலாஅளவுமாகி என்றார்.

இத் திருப்பாட்டான், ஆதிஎன்றது சிருட்டி எனவும், நடுஎன்றது திதி எனவும், அளவிலாஅளவு என்றது சங்காரம் எனவும், சோதியாய உணர்வுமாகி என்றது திரோபவம் எனவும், தோன்றிய பொருளுமாகி என்றது அனுக்கிரகமெனவும், பஞ்சகிருத்தியங்களை யுணர்த்தியும், அப்பஞ்சகிருத்தியங்களைப் பஞ்சகர்த்தாக்களால் ஆக்கித் தான் ஒன்றுஞ்செய்யாத சிவதத்துவத்தைப்பேதியா ஏகமாகி என்றதனால் உணர்த்தியும், அச்சிவம் உமாசகாயமாயிருக்கும் இயல்புடைமையைப் பெண்ணுமாய்ஆணுமாகிஎன்றதனால் உணர்த்தியும், இங்ஙனம் உணர்த்தினவெல்லாம உணரப் பெண்ணுமாய் ஆணுமாகிநிற்கும் நிஷ்களபரசிவம் தில்லைப்பொதுவின்கண் நடனமூர்த்தியாய்ச் சகளவுருவங்கொண்டு அம்பலத்தில் நின்று நடித்து உணர்த்தினனெனக் கடவுள்வாழ்த்துக் கூறப்பட்டது.

அல்லதூஉம், சுந்தரமூர்த்திசுவாமிகள் ஓதியருளிய திருத்தொண்டத்தொகையிற் கூறியுள்ளபடியே முதலில் * தில்லைவாழந்தணர் புராணத்தைச் சொல்லத்தொடங்கினாராகலின் எல்லாவுயிர்களிடத்தும் கருணையுடைய வேதமானது, பெண்ணுமாய் ஆணு (சத்திசிவ) மாகி நிற்கும் பரசிவமூர்த்தி, ஆதியாய், நடுவுமாகி, அளவிலா அளவுமாகி, சோதியாய் உணர்வுமாகி, தோன்றியபொருளுமாகி, பேதியா ஏகமாகி, இருபபதாகிய

* தில்லைவாழ் அந்தணரென்றது-நடராஜமூர்த்தியோடு எண்ணப்பட்ட ஏனைய அந்தணரையென்க.

அத்துவிதத்தன்மை இத்தன்மைத்தாமென்பதுதோன்ற, தில்லைப்பொதுவின்கண் நடனஞ்செய்தருளுகின்ருன். அங்ஙனம் செய்தருளும் பொதுநடனத்தை யான் பன் முறையும் நமஸ்கரிக்கின்றேன் என்று சிலம்புருவாய்க் குஞ்சிதபாதத்திலிருந்து ஒலிக்கும உண்மையைச் சிந்தித்து, அவ்வுண்மைதோன்ற தில்லைவாழந்தணர் பெருமையைச் சேக்கிழார்பெருமானும்அவ்வாறே போற்றினரென்க.

வேதங்கூறிய அத்துவிதத் தன்மையாவது - பரபிரமமென்பது - பராசத்தியோடு கூடியிருக்கும் பரசிவமேயாகலான் பொன்னுருவாய ஆனந்தமாகி எனவும், அப்பரசிவ மூர்த்தி - அளவில்லாதவுயிர்கள் பன்முறையும் ஒடுங்கித் தோன்றிநிற்ப எல்லையாய் நிற்பவனுகலான் அதியாய நடிவுமாகி அளவிலா அளவுமாகி எனவும், எல்லாவுயிர்களும் தன்னுள் ஒடுங்குங்காலத்துத் தான் அகண்ட சோதிசொரூபமாகியும், அவ்வுயிர்கள் தோன்றுங்காலத்து அவ்வுயிர்களுடைய வுணர்வுக்கு உணர்வாகியும், அவ்வுணர்வால் அவ்வுயிர்கள் அனுபவிக்கப்படும் எல்லாப்பொருள்களாகியும் இருப்பவனுகலான் சோதியாயுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகி எனவும், இவ்வாறு உயிர்களாயும் உணர்வுகளாயும் பொருள்களாயும் ஏகமாய்க் கலந்துநிற்கும் நிலைமை வேருகாமல் ஒன்ருகாமல் உடனுய்நிற்கும் நிலைமையாம்; அதுவேதான் அத்வைதத்தன்மை என்னும் உண்மை நிலைமை பேதியாமல் நிலைபெற நிற்பவனுகலான் பேதியா ஏகமாகி எனவும், இவ்வுண்மையே வேதமுங்கூறும் உண்மையாகலான் போதியாநிற்பர் எனவும், இவ்வுண்மையை யாவரும் உணரவே தில்லையின்கண் நடிக்கும் நடனுர்த்தமாகலான் தில்லைப்பொதுநடம் எனவும், அந்நடனம் ஊனமாகிய பந்தச்செயலும, ஊனமற்ற முத்திச்செயலும் ஆகிய இருசெயலையுங் காட்டுவதாகலான் போற்றிபோற்றி எனவுங்கூறினர்.

வேதம் இறைவனது அத்வைதார்த்தத்தைக் கூறியபடி கூறிப்போற்றியதேயல்லாமல் இப்பொழுது தாம் எடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ப இறைவன் தன்பால்நின்ற முறைமையை எடுத்துக்கூறிப்போற்றியதுமாம்.

எங்ஙனமெனின், தாம கூறததொடங்கிய இப்பெரியபுராணத்துக்கும் தில்லைவாழந்தணர் புராணத்துககும முதலாய்நிற்குங் கடவுள் இககடவுள்தான் என்பதுதோன்ற அதியாய எனவும, இககடவுள்தான், யான் என்னுணர்வால் உணரவேண்டுவனவெல்லாம் என்னுள்நின்று உணாததுபவனுய நிற்பவனென்பது தோன்ற நடிவுமாகி எனவும், அங்ஙனம அவன் உள் நின்று உணாததுவதனுல இவ்வந்தணர்முதலாகக கூறத் தொடங்கிய அடியாாகள் அளவில்லாதவராயினும அவர்கள்புகழ அளவில்லனவாயினும யான் சொல்லத்தொடங்கும் அச்சொல்லளவிலநின்று அவ்வளவும் விளங்கச்செய்வனென்பது தோன்ற அளவிலா அளவுமாகி எனவும், அச்சொற்களில் அவ்வாறு விளங்கும் வண்ணம் அம்முதல்வன் நிற்கும் இயல் இத்தன்மைத்தென்பது தோன்ற சோதியாய எனவும், அங்ஙனம் சோதியாய்நின்று சொற்களைத் தோற்றுவிப்பதுபோல அச்சொற்களில் அமைக்கப்படும் பொருளும் என்னுணர்வில்தோன்ற என்னுணர்வாக நிற்பவன் என்பதுதோன்ற உணர்வுமாகி எனவும, என்னுணர்வாய்நின்று தோற்றுவிக்கும் பொருள்களில் அவ்வடியார்களுடைய புகழ்ப்பொருளை உணர்வோருக்கு அவைதோன்றும் வண்ணம் அப்பொருள்வழியாயே நீங்காதிருந்து உணரச்செய்வனென்பது தோன்ற தோன்றியபொருளுமாகி எனவும், அங்ஙனம் யான்சொல்லும சொற்களினும், அச்சொற்கள் தோன்றும் என்னுணர்வினும், அச்சொற்களின் பொருளினும். அவன் கலந்திருக

† தில்லைப்பொதுவின்பெயர்,—மன்று, அம்பலம, சத்து, உம்பர் இரண்மயகோசம, அகம், புண்டரீகம், குகை, ககனம், சுத்தம், பரம், அற்புதம், மெய்ப்பதம், ஞானசுகோதயம், சிதம்பரம், முத்தி, பரபிரமம், சபை, சத்திசிவாலயம் என்ப. இன்னும்பல. இதனைக்கோயிற்புராணத்திற்காண்க.

குந்தன்மை ஒன்றாகாமல் ஒன்றாயிருக்குந் தன்மைபோலுமன்று, வேறாகாமல் வேறாயிருக்குந் தன்மைபோலுமன்று என்னும் அவ்வரியதன்மைதோன்ற பேதியாவகையாகி எனவும், இவ்வாறு சொல்லினுள்ளும் அறிவினுள்ளும் பொருளினுள்ளும் அநந்நியமாய் நின்று வெளிப்படுத்திய இவ்வுண்மையை "சேக்கிழானமது தொண்டர்சீர்பரவ நாமகிழ்ந்து உலகமென்று நம், வாக்கினால் அடியெடுத்துரைத்திட வரைந்து நூல்செய்து முடித்தனன், காக்கும் வேல்வளவ நீயிதைக் கடிதுகேளெனக் கனகவெளியிலே, ஊக்கமான திருவாக்கெழுந்தது திருச்சிலம்பொலியும் உடனெழ" என்றபடி யாவரும் உணரும் வண்ணம் இவ்வம்பலத்தின்கண் சத்திசிவமெனச் சகளவடிவங்கொண்டு நின்று திருச்சிலம்பொலியோடு ஆகாயவாக்காய்க் கூறினான் எனது கருணைவள்ளல் என்பதுதோன்ற பெண்ணுமாய ஆணுமாகிப் போதியாநிற்கும் எனவும், இவ்வுண்மையாகிய அநந்நியமென்னும் அத்வைதத்தன்மை எனக்குச் சொல்லளவேயன்றிப் பொருளளவாயும், ஏனையோர்க்குச் சொல்லளவாயும் உணர்த்திய பொதுநோக்குடையசெயல் உடையவன் என்பதுதோன்ற பொதுநடம் எனவும், அந்நடம் தகராகாசம் எனச்சிறந்தெடுத்தோதப்படும் க்ஷேத்திரம் என்பதுதோன்ற தில்லைஎனவும், யான் "தில்லையில் வந்து வந்து எதிர் தெண்டனாக விழுந்தெழுந்து, கைத்தலம் உச்சிவைத்து உளம்உருகி நைந்து, எல்லை காண்பரிதாய பேரொளியின்பவாரியின் மூழ்கி, அடிகளே உனதடியார்சீர் அடியேனுரைத்திட அடியெடுத்து இடர்கெடத்தருவாயெனத் திருவருளை யெண்ணியிறைஞ்ச, (நீ) அசரீரிவாக்காக உலகெலாம் என அடியெடுத்து உரைசெய்த பேரொலி ஓசைமிக்கு அடியார்செவிப்புலத்து நிறைய அனைவரும் கரம்உச்சிவைத்து உளம்உருகும்படிச் செய்த இப்பெருங்கருணைக்கு யான் என்செய்யக்கடவேன் இதுவன்றி வேறில்லைஎன்பது தோன்ற போற்றிபோற்றி எனவுங்கூறினார். இது பஞ்சகிருத்திய நடனஞ்செய்தருளும் நடராஜமூர்த்திவணக்கம்.

முதலாவதுபோற்றி - தமக்கு அடியெடுத்துக்கொடுத்த கருணைக்கு. இரண்டாவது போற்றி - தமக்குச்செய்த அருளைத் தாமேயாவர்க்கும் அறியச்செய்த பெருங்கருணைக்கு.

கற்பனை கடந்த சோதி கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம் செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

(எ - து.) அரிய வேதசிரசின்மேலாய் விளங்கும் சிற்பரவியோமத்தின்கண், மாயையினால் கற்பிக்கப்படும் கற்பனாவுருவங்களைக் கடந்த சோதிசொரூபமாய் நடனஞ்செய்தருளும் அகளமூர்த்தி, இத்திருச்சிற்றம்பலத்தின்கண் கருணையே ஒருருவமாகி அளவிடற்கரிய அற்புதக்கோலத்துடன் நின்று, யாங்களெல்லாங் கண்டுகளிக்கும்படி அழகுடன் ஆநந்த நிருத்தஞ்செய்தருளுகின்ற வீரகண்டையணிந்த திருவடிக்கமலங்கட்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்பதாம்.

அருமறைச்சிரத்தின்மேலாம், சிற்பரவியோமமாகும், கற்பனைகடந்தசோதி, திருச்சிற்றம்பலத்துள், கருணையே யுருவமாகிநின்று, அற்புதக்கோலநீடி, பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றிபோற்றி எனக்கூட்டுக.

இனி அருமறைச்சிரம் என்றது - வேதாந்தம். மேலாம் சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலம் என்றது - அகிலாண்டகோடிகளெல்லாம் தனதுவெளிக்குள்ளே தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயிராய்த் தழைத்திருக்கும் அருளாகிய பரமப்பிரகிருதிரூபமாகிய பராசக்திசொரூபம். கற்பனைகடந்தசோதி என்றது-மாயாகற்பிதமாகிய உருவம் அருவம் உருவாருபம் என்னும் முக்கூற்றுக் கற்பனாவுருவங்களையும் கடந்த சத்திசொரூபமாகிய ஞானச்சோதிவடிவம். கருணையே உருவம் என்றது - காரணாதிகளாகிய பிரத்தி

யங்கங்களும், அவ்வுருவங்களின் வழியாய்த் தோன்றுகின்ற தொழில்கள், வாய்மைமுதலிய குணங்கள், ஆகிய சாங்கங்களும், புவனபோகங்களாகிய உபாங்கங்களும் உடையதாய்க் காணப்படும் அத்திருவுருவம் சிறிதுந் தன்பொருட்டன்றி உயிர்களுக்கு அனுக்கிரகஞ்செய்யும் அனுக்கிரகத்தின் பொருட்டாயிருத்தலான் அவ் வுபாங்க சாங்கப் பிரத்தியங்கங்களாகிய அவ்வுருவமேயாம். அற்புதக்கோலம் என்றது - ஓங்காரமே நற்றிருவாசியாகவும், அதனில் உற்றுநீங்கா எழுத்தாகிய பஞ்சாக்கரமே பாதாதிகேசாந்தமாகவுங் கொண்டு விளங்கும் அவ்வதிசய கோலம். நீடிநின்று போற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் என்றது - அப்பஞ்சாக்கரத்திருமேனிகொண்டு என்றும் குன்றாதுநின்று, தம்மைக்காணும் அன்பர்களது ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள, அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையேயாக, குணம் ஒருமூன்றும் திருந்து சாத்துவிதமே யாக, அழகிய ஆனந்தநடனஞ்செய்தருளும் குஞ்சிதபாதம்.

எனவே, "தற்பரமாய்ப பரபதமாய்த் தாவில் அனுபூதியதாய், அற்புதமாய் ஆரமுதாய் ஆனந்த நிலையவெளிப், பொற்பினதாய்ப் பிறிவிலதாய்ப் பொருளாகி அருளாகும், சிற்பரமாம் அம்பரமாம் திருச்சிற்றம்பலம்" என்பார் மேலாம் சிதம்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலம்என்றார். அந்தச் சிதம்பரவியோமம் ஆரணங்கள் முடிந்தபதத்து உளதென்பார் அருமறைச்சிரத்தின்மேலாம் என்றார் அச்சிற்பரவியோமமாகிய திருச்சிற்றம்பலத்துள் காணப்படும் திருவுருவம் முதற்காரணமாகிய மாயையையும், அம்மாயையைக் கொண்டு உருவாதிகளைக் காண்பிக்கும் நிமித்தகாரணமாகிய கடவுளையும் கொண்டு ஆனதன்றென்பார் நம்பனை கடந்தசோதி என்றார். தனது சத்தியாகிய அருளால் தான் நினைந்ததொருமேனியைத் தனதாகக்கொண்டருளுவ னென்பார் கருணையே யுருவமாகி என்றார். நாதமாத்திரையான இயல்பாற் பிறத்தலாகிய அகரத்தோடு உகரமகரங்கள் கூடி ஓங்காரமாகிய பிரணவமே நற்றிருவாசியாகவும், அதனுள் அப்பிரணவத்தின் பொருளாகிய பஞ்சாக்கரத்துள், * சிகாரத்தைத் துடியாகவும், வகாரத்தை வீசியகரமாகவும், யகாரத்தை அபயகரமாகவும், நகாரத்தை-அக்னியேந்தியகரமாகவும், மகாரத்தை-ஊன்றிய பாதத்தின் கீழிருக்கும் முயலகனைவுங் கொண்டருளுந்திருமேனியனைப் பின்னர்ப்பிறத்தற்கிடமாயுள்ள தனுகரணாதிகளைத் தரும் மாயாமலத்தை - வலக்கரத்தால் உதறியும், பிறவி நீங்காது தொடர்ந்து வருவதற் கிடஞ்செய்யும் வல்வினையாகிய கன்மமலத்தை † இடக்கரத்தில் ஏந்தியிருக்கும் அக்கினியால் சுட்டும், கன்மமலமானது பிறவிதோறும் முளைத்து முளைத்து வருவதற்கு அனாதியே முளைத்துநிற்கும் ஆணவமலத்தை ஊன்றியபாதத்தால் மெலிவுறும்படி ஊன்றிநின்றும், பஞ்சாக்கரத்தை யுணர்த்தும் அபயகரத்தால் ஆணவமலத்தில் ஆழ்ந்துகிடக்கும் ஆன்மாக்களை எடுத்தும், அங்ஙனம் எடுத்த ஆன்மாக்களை, அவ்வான்மாக்களிடத்திலுள்ள நேயரூபமாய் விளங்கும் வீசியகரத்தால் குஞ்சிதபாதமாகிய ஆனந்தவாரிதியில் அழுந்தியிருக்கவும் ஆனந்த நிருத்தனஞ் செய்தருளும் கோலமுடையானென்பார் அற்புதக்கோலம் என்றார். இங்ஙனமான அவ்வற்புதக்கோலத்தோடு ஞானநடனத்தை நடித்து முத்தான்மாக்களுக்கு முத்தாந்தப்பாதமலர்க்கீழ் முத்தானந்தங்கொடுப்பதுபோலும், பெத்தான்மாக்களுக்குச் சிருட்டியைத் துடியாலும், திதியை அபயகரத்தாலும், சங்காரத்தை அக்னியினாலும், திரோபவத்தை ஊன்றியபாதத்தாலும் ஊனநடனத்தைநடித்து அந்நடனத்தால் பிரகிருதி புவனத்துள் இந்திரிய விஷயானந்தத்தைக் கொடுப்பவனென்பார் போற்புடன் நடனஞ்செய்கின்ற பூங்கழல் என்றார்.

---

* சேர்க்குந்துடிசிகாரம் சிக்கனவாவீசுகரம் யார்க்கும் யகாரம் அபயகரம் - பார்க்கில் இறைக் கங்கிநகரம் . அடிக்கீழ் முயலகனார் தங்குமகரமதுதான்.

† மாயைதனையுதறி வல்வினையைச் சுட்டுமலம் சாயவமுக்கி அருள்தானெடுத்து நேயத்தால் ஆனந்தவாரிதியில் ஆன்மாவைத்தானழுத்தல் தான் எந்தையார்பாதந் தான்.

இத்திருப்பாட்டான், கற்பனைகடந்தசோதியென்றது - உருவமாகிய கற்பனைக்கு முதற்காரணமாகிய மாயையைக்கடந்த ஞானவடிவம் எனவும், அந்த ஞானவடிவம் அவ்விறைவன்வடிவமேயாகலான் அவ்வடிவத்தைக் கற்பிக்க நிமித்தகாரணனாகிய கடவுள் ஒருவன் வேண்டாமையான் கற்பிக்கவேறொருகடவுளைக்கடந்த ஞானப்பிரகாச வடிவமெனவும், கருணையே யுருவமாகியென்றது - அந்தஞானபபிரகாசவடிவம் ஆன்மாக்களுக்குள்ள அஞ்ஞானவிருளைப போக்குவதற்குமிக்க அருளாற்கொண்ட திருவுருவம் எனவும், அற்புதக் கோலநீடியென்றது - ஞானக்கண்ணாற்கண்டு உணர்ந்தோதற்கரிய பிரணவத்தையும் பஞ்சாக்கரத்தையும ஊனக்கண்ணாற்கண்டு உணர்ந்தோத அத்திருவுருவத்தில் அமைத்துக் காட்டுவது மிக்கஅதிசயக் காட்சிஎனவும், அருமறைச் சிரத்தின்மேலாம் சிற்பரவியோமமாகும் திருச்சிற்றம்பலம் என்றது-பாச பசுஞானங்களைக் கடந்த பதிஞானப் பிரகாசத்தால் காணப்படும் சிச்பரவெளி எனவும், (அப்பரவெளியில்) நின்று பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் என்றது அந்த சிற்பரவெளியில் மேலேசொல்லிய கருணையுருவுடன் நின்று பெத்தான்மாக்களுக்குச் சிற்றின்பமும், முத்தான்மாக்களுக்குப் பேரின்பமும் உண்டாமாறு முறையே செய்தருளும் ஊனநடனம், ஞானநடனமெனவுங் கூறபபட்டது.

முதற்செய்யுளால "எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே, நட்டம்" என்னும் சித்தாந்தவாக்கியப்படி தாவரசொரூபமாய் விளங்கும் சிவசொரூபத்தின் இலக்கணங்களெல்லாந் தோன்றுமாறு எடுத்துக்கூறி, தில்லைப் பொதுநடம் போற்றி எனவும், இரண்டாஞ்செய்யுளால்* "சிவாயநம என்னும் திருவெழுத்தஞ்சாலே,அபாயமறநின்றாடுவான்" என்னும் சித்தாந்தவாக்கியப்படி, பஞ்சாக்கரத்தையே திருமேனியாகக்கொண்டு, பஞ்சாக்கரத்தினாலேயே பஞ்சகிருத்தியங்களையும் இயற்றி, ஆன்மாக்களுக்குப பெத்தநிலையாகிய அபாயத்தைப போக்கி, முத்திநிலையாகிய உபாயத்தைக் காட்டும் நிலைகள்தோன்றப் பொற்புடநடஞ்செய்கின்ற பூங்கழல்போற்றி எனவும்கூறி, அருமறையின் அகத்தனையும், காண்டற்கரிய அணுரூபியாயும், யார்க்குந் தெரிவரிய தத்துவனையும், திகழ்கின்ற ஒளிரூபனையும், எல்லாபபொருளிடத்தும் கலந்திருக்கும் பெரியனையும், பெரும்பற்றப் புலியூரனையும் இருக்கின்ற அரியான்தில்லைவாழ்அந்தணர்தஞ் சிந்தையனாய் என்றும் ஏத்தி வாழ்த்தி வணங்கி வழிபட நின்றருளுகின்றானாகலின் அத்தில்லைவா ழந்தணர்களைப "போற்றிநீள் தில்லைவாழந்தணர்திறம் புகலலுற்றேன்" என்று மூன்றாஞ் செய்யுள் முதலாகக் கூறத்தொடங்கினர்.

அஃதாவது,—இவ்வந்தணர்கள், ஸ்மிருதிவழி யுழன்றவர், ஆச்சிரமத்துறை அடைந்தவர், அருங்கலைகள் பலதெரிந்தவர், ஆரணங்களைப படித்தவர், சிறப்புடைய புராணங்களுணர்ந்தவர், இம்முறையான் வேதச்சிரப்பொருளை மிகத்தெளிந்தவர், அத்தெளிவான் சைவத்திறத்தை யடைந்து அதில் சரியைகிரியா யோகங்களைச் செலுத்திப பின் ஞானத்தாற் சிவனடியை (அருளை)ச் சேர்ந்தவர் என்ற அவர்களது அருட்பணித்திறமெல்லாம் எடுத்துக்கூறுவா ராயினரென்க.

என்னையெனின்,—நமது பிறவியாகிய வெந்துயரைத் தீர்க்கும் மருந்தாகி, அத்துயரத்தைப்போக்கிப் போதந்தருவதாகிய திருநீற்றினால் நிறைந்தகோலத்தனாய், நமது பிறவி வழக்கறுக்கும் பணியையேற்கொண்டு, ஆனந்தமுடையவனாய், நிருத்தனமூர்த்தியாய் நின்றருளினானாகலின் அப்பெருங்கருணைத் திறத்திற்கு நாம் செய்யக்கடவது யாது? யாது செய்தாற் கைம்மாறாகும். ஏனெனின், பிறவிவழக்கை அறுக்கவேண்டியவனும் அவனே, சிவமாக்க வேண்டியவனும் அவனே, சிவமாக்கியபின்னர் அந்தமில்லா ஆனந்தம் அளிக்கவேண்டியவனும் அவனே, இவற்றில் ஒன்றேனும் அவனன்றி நம்மால் ஆவதுண்டோ? ஒன்றும் இல்லையன்றோ? ஆகவே, இறைவன் நமதுபிறவிவழக்கை

---

* உண்மை விளக்கம்.

அறுக்கும்பணியில் நீங்காது நிற்பதுபோலும், நாம் அவனுக்குரிய தொண்டில் மாறாது நின்று அவன்பணியெல்லாம் இயற்றுவதே, நாம் பெறும்பேறும், நாம் அடையத்தகும் பெருமைக்கு எல்லையுமாம் என்று அம்பணியையே பேணிவாழும் ஒழுக்கமுடையவராய் அவ்வொழுக்கநிலையால் பொங்கும் அன்பினால் அடித்தவம்புரிந்து வாழ்வார் இவரென்று கூறத்தொடங்கினர் (உ)

போற்றிநீள் தில்லை வாழந் தணர்திறம் புகல லுற்றேன்
நீற்றினால் நிறைந்த கோலம் நிருத்தனுக் குரிய தொண்டாம்
பேற்றினார் பெருமைக் கெல்லை ஆயினார் பேணி வாழும்
ஆற்றினார் பெருகும் அன்பால் அடித்தவம் புரிந்து வாழ்வார்.

(எ - து.) (தில்லைவாழ் அந்தணர் புராணத்தைச் சொல்லத்தொடங்கிய யான் அவ் வந்தணர் அடிகளை) முன்னர் வணங்கிச் சொல்லுகின்றேன். அவ்வந்தணர்களது திறம் எத்திறத்தது எனின், திருநீற்றினால் நிறைந்திருக்கும் திருக்கோலத்தையுடைய நிருத்த மூர்த்தியாகிய நடராஜமூர்த்திக்கு உரிமையாகிய தொண்டென்று சொல்லப்படும் பெரும் பேற்றையுடையவர்கள், புகழ் என்னும்பொருளுக்கு ஓர் எல்லையாய் உள்ளவர்கள், அப் புகழ் என்னும்பொருள் தம்மிடத்தில் நீங்காது வாழ்தற்கு வைதிகசைவ சம்பந்தமாகிய ஒழுக்கங்களை மார்க்கமாகக்கொண்டு அவ்வழியொழுகும் கடப்பாடுடையவர்கள், அவ்விரு வழியாற் பெருகிவரும் பேரன்பினால் திருவடிச்சார்பினையுடைய திருத்தொண்டை இடைவிடாதியற்றி வாழ்கின்றவர்கள் என்பதாம்.

இப்பாட்டான், மேற்கூறியபோந்த நிஷ்களசகளத் திருமேனியுடையோனாகிய அரி யானை, ஒன்றாகவும் வேறாகவும் உடனாகவும் கொண்டுவாழும் திறமுடையவர் தில்லை வாழ் அந்தணர்களென்று சொல்லப்படும் அவர்களது பெருமையும், பேரன்பையும், அடித்தவமாகிய பெரியதவத்தையும் கூறப்பட்டது. (ஈ)

பொங்கிய திருவில் நீடும் பொற்புடைப் பணிகள் ஏந்தி
மங்கலத் தொழில்கள் செய்து மறைகளாற் றுதித்து மற்றும்
தங்களுக் கேற்ற பண்பில் தரும்பணி தலைநின் றுய்த்தே
அங்கணர் கோயில் உள்ளா அகம்படித் தொண்டு செய்வார்.

(எ - து.) காணுந்தோறும் அதிசயத்தை மேன்மேல் விளைவிக்கும் பேரழகினையுடைய திருவாபரணங்களைத் தமது கரங்களில் ஏந்திக்கொண்டு, நடராஜமூர்த்தியினிடத்திற் சென்று, அகண்டாகார சோதிமயமாய்ஒளிவிடும் அவனது பொன்மேனிமுற்றும் அந்த நவரத்தினாபரணங்களை அவ்வவ்வங்கங்கள் நன்றாய்த் தனித்தனி காணப்பட்டு கண்டு களிக்குமாறு அலங்கரித்தலாகிய அரியபணியைச்செய்து, வேதமொழிகளாற் போற்றிப் பின்னர் அன்பிற்றலைப்பட்டுநின்று செய்யவேண்டுவனவாகிய நைவேத்தியாதிபணி களைச் சிவாகமங்களிற் கூறியுள்ளபடி அவ்விதியிற் றலைப்பட்டுநின்று அன்பினைச் செலுத்தித் தாங்கள் வேண்டுமாறெல்லாம் செய்யுந்திறமறிந்து செய்துவருதலாகிய இவ் வகத்தொண்டை, கருணைநோக்குடையானது சிற்றம்பலத்துள் செய்பவராயுள்ளவர்கள் என்பதாம்.

இப்பாட்டான், அரியானைத் தமதுசிந்தையின்கண்ணே வைத்துள்ளாராகிய தில்லை வாழந்தணர்கள், சிற்றம்பலத்துள் வீற்றிருக்கும் தங்கள்தலைவனாகிய பொன்மேனியனை நவமணிப்பூண்களால் அழகுசெய்தும், வேதங்களாற் றுதித்தும், பின்னர் தங்கள் அன்பு நிறையுமளவும் எண்ணிச்செய்வதாகிய ஆவகனாதி பூஜோபசாரங்களைச் சைவாகமவிதி குன்றாமல் செய்து வருவார்களென்று கூறப்பட்டது.

தலைநின்றியற்றே - தங்களுக்கேற்றபண்பில் தரும்பணி அங்கணர்கோயிலுள்ளா அகம்படித் தொண்டுசெய்வார் எனக்கூட்டுக.

வேதவொழுக்கம் சைவவொழுக்கத்தையும், சைவவொழுக்கம் வைதிகவொழுக்கத்தையும் உடலுயிர்போல் தழுவிநிற்கும் பண்பினையுடைத்தென்னும் தன்மையினையுணர்ந்து வைதிகவொழுக்கத்தோடு சைவவொழுக்கத்தையும் உரிமையாகக்கொண்டு வைதிகசைவரென வாழும் பண்பினரென்பார் * தங்களுக்கேற்ற பண்பில் தரும்பணி தலைநின்றியற்று என்றார். கோயிலுள்ளாராகிய அங்கணர(நடராஜமூர்த்தியின)து திருமேனியிற் பொருந்துவதாகிய அலங்காரத்தோடு பூஜித்தலாகிய தொண்டில் கடப்பாடுடையவரென்பார் அங்கணர் கோயிலுள்ளார் அகம்படித்தொண்டுசெய்வார் என்றார். அல்லதூஉம் தம்மோடு ஒத்தவராகக் கூறிய தில்லைவாழந்தணர்கள் தமமாட்டுப் பேரன்புடையராய் "எண்ணிலாகமம் இயம்பிய இறைவர்தாம்விரும்பும், உண்மையாவது பூசனை" என இவ்வாசிரியர் பின்னே கூறியுள்ளபடி சிவாகமங்களிற் கூறப்பட்டிருக்கும் பூஜாவிதிகளில் ஒன்றேனுந் தவராமலும விடாமலும் ஆறுகாலங்களிலும் தமதுள்ளங் களிகூருமாறு தமதுபோதத்தோடு பொறிபுலன்கரணமுற்றும் இறைவனுள்ளத்திற் பொருந்துமாறு செய்யும் தொண்டில் வலிந்த அன்பினையுடையவரென்றலுமாம்.

நிருத்தகோலங்கொண்டு நின்றருளும் இத்திருமேனி எங்களது பிறவிவழக்கறுக்க வந்த கோலமல்லவாவென்று அத்திருமேனியின் அருமையைநாடி 'அரிய நவரத்தினங்களாலாகிய ஆபரணங்களை அத்திருமேனி முற்றும் அணிந்து நாங்கள் † பத்தராய்ப் பாடமாட்டோம், பரமனை பரமயோகி எத்திறத்தால் பத்திசெய்கோம், ஆகலின் எங்களை நீஇகழவேண்டாம், முத்தனே, முதல்வா, தில்லைஅம்பலத்தாடுகின்ற அத்தா, அடியோங்கள் இம்மண்ணுலகில் வந்தகாரணம் உன் ஆடல்காணும் பொருட்டல்லவா என்னும் பொருளும், சிந்தையைத் திகைப்பியாதே செறிவுடை அடிமைசெய்ய, எங்கள்தந்தையாகிய நீ அருளிச்செய்யாய், யாது நாங்கள் செய்வது என்னே, செந்தீயார் வேள்வியோவாத் தில்லைச்சிற்றம்பலத்தே, அந்தியும்பகலும் ஆட அடியிணையலசுங்கொல்லோ என்னும் பொருளும், நெஞ்சினைத்தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே, வஞ்சமே செய்தியாலோ வானவர்தலைவனே நீ, மஞ்சடைசோலைத்தில்லை மல்குசிற்றம்பலத்தே, அஞ்சொலாள் காணநின்ற அழகனீயாடுமாறே என்னும் பொருளும், மண்ணுண்ட மாலவனும் மலர்மிசை மன்னினானும், விண்ணுண்ட திருவுருவம் விரும்பினார் காணமாட்டார், திண்ணுண்ட திருவேமிக்க தில்லைச்சிற்றம்பலத்தே, பண்ணுண்ட பாடலோடும் பரமநீயாடுமாறே. என்னும்பொருளும அமைந்துள்ள ‡ வேதமொழிகளால் துதித்துப்போற்றுவர்.

* வைதிகவொழுக்கமுடையார்க்குச் சைவவொழுக்கம் ஏற்றபண்பினையுடைத்தானதாயும், சைவவொழுக்கமுடையார்க்கு வைதிகவொழுக்கம் ஏற்றபண்பினையுடைத்தானதாயும் இருத்தலின் தங்களுக்கேற்றபண்பின்எனவும், வைதிகவொழுக்கத்தால் செய்யத்தகுமபணி - சிவப்பேறெய்தற்கான சிவதத்வநிலையை யாராய்தலாகலான் அப்பணியினும், சைவவொழுக்கத்தாற் செய்யத்தகுமபணி சிவானந்தம் எய்தற்கான அன்புநிலையை மெய் (உடம்பு) த்தொண்டின் வழியாய் இயற்றுவதாகலான் அப்பணியினும் தலைப்பட்டு நின்றியற்றும் வைராக்கியசீலராகலின் அப்பணியினும் தங்களுடைய இச்சாஞானக்கிரியைகளைச் செலுத்தி அவ்விருபணிகளையும் உள்ளத்துட்பொய்யாது இயற்றிவருந்தன்மையுடையவராகலின் தரும்பணி தலைநின்றியற்றே அகம்படித் தொண்டுசெய்வார் எனவுங்கூறினர். திருநாவுக்கரசு சுவாமிகள் கோயில் தேவாரத்தில்வருவன.

சிவதத்வார்த்த பிரதிபாதகமாகிய வேதமொழிகளால் போற்றுதல் ஆத்மாக்களாகிய தாங்கள் சிவமேயாய் நிற்றற்குச் செய்யக்கடவதான தொண்டெனவும், அத்தொண்டன் சிவமேயாய் அஃதாவது, சிவனது ஞானமயமேயாய் நிற்கப்பெற்ற

வேதம் - துதிபாதற்குத் தகுதியுடைத்தென்று அவ்வேதமொழிகளாற் றுதித்தது போல், அருச்சித்தலாகிய பூஜாங்கத்திற்கு ஆகமம் தகுதியுடைத்தென்று அவ்வாகமத்திற் கூறியுள்ளவாறு பஞ்சசுத்திகளை இயற்றி, அதன்பின்னர் சக்தியாதி சத்திபரியந்தம் செய்வதாகிய பீடபூஜையும், தண்டபங்கி, முண்டபங்கி, வக்திரபங்கி என்று சொல்லப்படும் முறையாக நியசிக்கும். அஷ்டத்திரிம்ஶத் கலாநியாசங்களும், அதன்பின்னர் செய்யப்படும் வித்யாதேக நேத்திரங்களும், * ஆவாகனாதி பத்துசம்ஸ்காரங்களும், லயாங்கபோகாங்கங்களும், ஆவரண பூஜைகளும் இவையெல்லாம் செய்துமுற்றிய பின்னர் செய்யப்படுவனவாகிய தூபதீபநைவேத்திய தீபாராதனையாதி உபசாராதிகளுமாகிய அகம்படித்தொண்டு செய்வார். (௬)

வருமுறை யெரிமூன் றோம்பி மன்னுயிர் அருளால் மல்கத்
தருமமே பொருளாக் கொண்டு தத்துவ நெறியிற் செல்லும்
அருமறை நான்கி னோடா றங்கமும் பயின்று வல்லார்
திருநடம் புரிவார்க் காளாந் திருவினாற் சிறந்த சீரார்.

(எ - ரை.) அநாதியாயுள்ள ஆன்மகோடிகள் இறைவனருளால் உலகில் நிறைந்து வாழ, ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி எனனும் முத்தீககளையும், வேதத்திற் கூறப்பட்டுவரும் முறைப்படி வளர்த்து, அங்ஙனம்வளர்த்து வருதலாகிய வைதிக தருமமே அறத்தின் பொருளாகக்கொண்டு, மூதனாதெனபபடும் அரிய நான்குவேதங்களோடு ஆறுசாத்திரங்களையும் முறைப்படி கற்றுவல்லவராயுள்ளவர், (அவ்வைதிகநெறியில்நின்று அவ்வறத்தைவளர்த்து வருவதேயல்லாமல்) சைவநெறியிற் கூறப்பட்டுள்ள தத்துவவழியாற் செல்லும் ஆனந்ததாண்டவத்தைச் செயயவல்ல இறைவர்க்கு, அடிமையாகும் அருட்செல்வத்தினாலும் சிறந்திருக்கும் பெருந்தன்மையை யுள்ளவர் என்பதாம்.

மன்உயிர் அருளால் மல்க வருமுறை எரிமூன்று ஓம்பி தருமமே பொருளாக கொண்டு அருமறைநான்கினோடும் ஆறங்கமும் பயின்றுவல்லார் தததுவநெறியிற் செல்லும் திருநடம்புரிவார்க்கு ஆளாம் திருவினாற்சிறந்தசீரார் எனக்கூட்டுக.

இவ்வந்தணர்கள் தாம்பெற்றபேறு உலகெலாம் பெற்றுய்யுமாறுநினைத்தல் தருமமாகலானும், அங்ஙனம் நினைத்தவண்ணமே செய்யத்துணிதல் அதன்பொருளாகலானும், அத்தருமத்தையியற்றுதற்கான அருமறைநான்கினோடு ஆறங்கமும் வன்மையாகப் பயின்றுள்ளாராகலினும், அத்தில்லைவாழந்தணர்கள், அநாதியே மும்மலச்சார்பால் மல்கியிருக்கும் உயிர்கள் அம்மும்மலத்தினின்றும் நீங்கிவரும் முறையாக, எனவே - இருவினையொப்பும், மலபரிபாகமும், சத்திநிபாதமும், முறைப்படிவர, இம்மூன்றும் வரவேநடனஞ்செய்தருளும் இறைவனுக்குமுன்னே மூன்றக்னிகளையும் வளர்த்தி, சிவமந்திரங்களால் மலத்திரயங்களும் சம்ஸ்காரம் ஆகும்வண்ணம் உள்ளத்துட்கருதி முறையானே ஆஹுதிகொடுத்து அது முற்றும்பருவத்தில் திருவருள்நாட்டம் உண்டாம்வண்ணம்

வன்மையான், காயமுங் கரணங்களும் இவ்விரண்டின்வழியாய் அனுபவிக்கபபடும் போக விஷயங்களும் சிவமேயாய் அஃதாவது சிவனது கிரியாமயமேயாய் நிற்றற்குச் செய்யப்படுவதான் தந்திரார்த்தப பிரதிபாதகமாகிய ஆகமமொழிகளாற் சிவன் தனது இச்சாமாத்திரமாய்க்கொண்ட திருமேனியில் செய்யப்படுந்தொண்டெனவும், திருவருளாலுணர்ந்து; தங்களுடைய அகம் (உள்ளம்) இறைவனக (உள்ள)த்தும், இறைவனது அகம் தங்கள் அகத்தும் படிந்து என்றும் வாழ்வதற்கு மேலேசொல்லிய அவ்விருவகைத் தொண்டினையும் செய்வாரென்று கூறினர்.

* ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, அர்க்கியம், பாத்யம், ஆசமனம், புஷ்பதானம் ஆகபத்து.

பசிநோய்முதலியவற்றைப் போக்க அந்தயாகம் பயன்படாதோவெனின்; அஃதுணர்த்தவே இவ்வாறுஞ்செய்யுள் எழுந்ததென்க.

எங்ஙனமெனின், திருச்சிற்றம்பலத்தைக் காணப்பெற்ற மெய்ஞ்ஞானிகளாகிய மெய்யன்பர்கள் இறைவனைநோக்கி மாயையுங் கன்மமும் நீங்காது நிற்றற்கிடமாயுள்ள இப்பிறவியை இன்னமும் பாலிப்பையோ என்று பிறவிக்கஞ்சி ஏத்துவராயின், கற்பூரச் சோதியைக்காட்டி அலகில் சோதியனைக் காட்டும் அந்தணர்கள் அவர்களைநோக்கி அன்பர்காள்! நீங்கள் ஏன் அஞ்சுகின்றீர்கள், உங்களுக்குப் பிறவியை நாம் போக்குவோமென்னுங் குறிப்புத்தோன்றவன்றோ நடராசன் பஞ்சாக்கரத்தைக் குறிக்கும் அபயகரத்தைக் காட்டுகின்றான். ஆகலின் நீங்கள் அப்பஞ்சாக்கரப்பொருளை இடைவிடாது சிந்தனைசெய்யுங்கள். செய்து வருவீராயின் அச்சிந்தனை விசேடத்தால் நீங்கள் எடுத்த இப்பிறவி ஒழியுந்தருணத்தில் அடையப்பெறுவது குஞ்சிதபாதமேயாமென்று அப்பதத்தை ஓர் திருக்கரத்தை வீசிக்காட்டுகின்றான். அச்சீபாதத்தில் உங்கட்கு ஐக்கியங்கூடுமளவும் பிராரத்தவினை வாதியாமலும் பேதியாமலுமிருக்கவும், உங்களுக்கு வேண்டும் அன்னம்பாலிக்கவும், பொன்னும்பாலிக்கவுமே நடராஜனோடெண்ணப்பட்ட நாங்கள் அவனது மறுவிலாமரபின்வந்து, மாறிலா வொழுக்கம் பூண்டு, ஓதலாதி அறுதொழிலைக் கைக்கொண்டு அத்தொழிலின் ஆட்சியி (சிறப்பி)னால், வடிவும் தனமும் மனமுங் குணமும் குடியுங் குலமுங் குடிபோகச்செய்யும் வறுமை, உடலோடு நீங்காதிருந்து வருத்தும் பசி ஆகிய இவ்விரண்டாலும் வரும் கலியை (துன்பத்தை) நீக்குவோமென்பார்.

அறுதொழில்களாவன,—ஓதல்ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல்ஏற்றலாம். ஓதலாவது,- இறைபணிவழுவாது நிற்றலாம், எனவே, உடம்புநிற்குங் காறும் அது கொண்ட வினைப்பயனும், அதனைப்புசிப்பித்தற்குத் துணைக்காரணமாய் உடனிற்கும் முயற்சியும் ஒருவாற்றானும் நீங்கலாகாமையின் அவை "ஈண்டுப் பரமேசுவரன் இவ்வான்மாவாய் நின்றமுறையான் அவனிடத்தேகநிற்றற்குத்" தடையாகலான், அத்தடையைநீக்குதற்கு "அவனருளாலல்லது ஒன்றையுஞ்செய்யானாகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியா" என்னுஞ்சித்தாந்த அதிகரணத்தை ஓதுதலாம்.

அஃதாவது,—நாம்செய்யும் செய்திக்கு முதல்வன் செய்தியையின்றி அமையாதாகலின் நாம்செய்வனவெல்லாம் அவனருளின்வழிநின்று செய்வேமாயின் மாயையுங் கன்மமும் நாம் இறைவனோடு ஏகனாகிநிற்றற்குத் தடையாய் வந்துதாக்கா; ஆகலான் அவை தாக்காமைப் பொருட்டுச் செய்யப்படும் உபாயமாதல் பற்றி இறைபணிவழுவாது நிற்க வேண்டுமென்று கற்றுணர்வதேயாம். இதுமுதற்றொழில்.

இனி ஓதுவித்தலாவது,—இங்ஙனமான வேதாந்தத்தெளிவாகிய சித்தாந்தநிகரணத்தை ஓதப்பெற்றபின்னர் தாம்செய்யும் செயலெல்லாம் அருளின்வழிநின்று செய்தலாகிய இறைபணிநிற்பார்க்கு "பரமேசுவரனது ஸ்ரீபாதங்களை அறியப்புணர்த்துதல்"

என்னையெனின்,—பாசத்தோடேகனாகி மாயையுமாய்க் கன்மவழிநின்று சிவம்பற்றொழிந்தவழி விடயத்தோற்றமுண்டாய் அறிவிச்சைசெயல்கள் அவ்வழியுழன்று விடயானந்தத்தை எய்தப்பெற்று சுகமுறுதல்போல, இறைவனோடு ஏகனாகி அருள்மயமாய் அவ்வருட்செயலின்வழிநின்று பாசப்பற்றொழிந்தவழி சிவத்தோற்றமுண்டாய் அறிவிச்சை செயல்கள் அவ்வழியுழன்று சிவானந்தத்தை எய்தப்பெறுவதாயிருக்க, இவ்வுண்மையை யுணராதவாதிகள், ஏகனாகி இறைபணிநிற்பார்க்கு மேல் செய்யக்கடவதொன்றில்லை. என்னெனின், இருள்நீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழக்காண்டல்போல பாசநீக்கம் உண்டானபோதே சிவத்வவிளக்கமும் இடையீடின்றி உடனிகழக்காண்டலின் அறிவிச்சை செயல்கள் அங்ஙனம்உழல்வதனால் வரும்பயன் என்னையென்று சிவத்வவிளக்கமெனப்படும் சிவானந்தமாகிய பரமசுகத்திற்குப், இறைபணிநிற்றலாகிய அருள்விளக்

கத்திற்கும் வேற்றுமையுணராது அருள்விளக்கமே ஆனந்தவிளக்கமெனக் கருதிச் சிவத வத்தை யிழக்கின்றனர்

அங்ஙனம் ஆனந்தவிளக்கத்தை யிழக்கின்ற வாதிகளைநோக்கி பாசநீக்கம், சிவப பேறு என்னும் இருவகைப்பயனில், இருள்நீக்கத்தில் ஒளிவிளக்கம்போல, பசுத்வநீக்கத் தில் அருள்விளக்கமாத்திரையேயன்றி ஆனந்தவிளக்கமெனப்படும் சிவப்பேறு உடன் நிகழா; ஆகலான் ஏகனாகி இறைபணிநிற்றலாகிய அருள்விளக்கத்தில் அறிவிச்சைசெயல் கள அயரா அன்பில் விடயிக்குமாயின் அரன்கழல் செல்லுதலாகிய சிவப்பேறெய்தவரும் என்று ஓதுவித்தலாம் இது இரண்டாந்தொழில்

இனிவேட்டலாவது,—அானந்தாதிபாதத்தை யணைய அறிவு இச்சை செயல்கள் மூன்றையும் தலைப்படச்செய்து அவ்வழி நிற்கப்பெறுதலேயாம

என்னையெனின், "இறை பணிநிற்க" என்றதனை ஓதப்பெற்றதனால் பாசநீங்கி அருள் விளங்கப்பெற்றும், அதுவிளங்கியவழி, அானந்த ஸ்ரீபாதத்தையணைய இச்சை தோன்றப்பெற்று அவ்விச்சை அதிகரித்தவழி பத்தியினான் மறவாதே கத்த அறிவிச்சை செயல்கள் மூன்றையும அவ்வழிநிறுத்தலாகிய யாகச்செயலில் தலைப்பாட்டும இருத்த லாம். இது மூன்றாந்தொழில்

இனி வேட்பித்தலாவது,—பசுத்வமநீங்கி அருள்விளக்கம்பெற்று ஆனந்தவிளக்கம் எய்தப்பெறுதார்க்கு அது எய்துமாறு அவர்களது அறிவிச்சைசெயல்களை வேட்பித்தல்

என்னையெனின்,—பசுத்துவமநீங்கப் பெற்ற சீவன்முத்தர்க்கு சிவப்பேறுண்டாக வேண்டுவது இன்றியமையாதசெயலாகலின் அவர்கள் அச்சிவப்பேறு எய்துமாறு அவர் களது அறிவை மலங்கழுவுவதிலும், இச்சையை அன்பரொடுமருவுவதிலும, செயலைத் திருவேடத்தையும சிவாலயத்தையும் தொழுவதிலும வியாபரிக்குமாறு செய்யுமசெயல்க ளாம. இது நான்காந்தொழில்

இனி ஈதலாவது,—கருத்தனுக்கு நிறைந்தகோலமாயுள்ள திருநீறளித்தலாம

என்னையெனின்,—அங்ஙனம் வியாபரிக்குமாறு செய்தபின்னர் திருநீறு உணமாசா கிய ஆணவமலத்தைக் கழுவுவதாயும், புன்மைத்தனமையும, அவலத்தனமையும், பாவத தனமையும உடையகன்மமலத்தைத் தவிர்ப்பதாயும அறுப்பதாயும, ஆசையைவிளைவிப்ப தாகிய மாயாமலத்தைக் கெடுப்பதாயும உள்ளதாகலின் அந்நீற்றை அம்மும்மலமுங் கழுவு வதற்குக் கொடுத்தலாம

அத்திருநீற்றால் சீவனமுத்தர்கள மலத்தைக் கழுவப்பெற்றதனால் உடம்பிடர் தீர்ந்து வருத்தந்தணிந்து இன்பமுற்று பெருமைபெற்றபின்னர் அவர்களுக்குப் பத்தி யொடு போதத்தைத்தந்து அன்பரொடு மருவுவதற்கு மதியைத்தருவது அத்திருநீறேயாக லின் அதனையேகொடுத்தலாம

அன்பரொடு மருவியபின்னர், அவர்களுக்கு மலத்தைக்கழுவி அன்பரொடுங்கூட் டிய அத்திருநீற்றைத் தமதுமகனுரைகொண்டு குண்டிகைக்கையர்களோடு சாக்கியர் கூட்டம கண்திகைக்குமபடி நிலைபெறச்செய்த கருணைவள்ளல் ஆலவாயானாகிய இறை வனன்றேவென்று அவனெழுந்தருளியிருக்கும ஆலயத்துக்குச்சென்று அவனைக் காணும ஆசையை என்றுங்குன்றாவண்ணம செய்வது அத்திருநீறேயாகலின் அதனையே கொடுத்தலாம. இது ஐந்தாந்தொழில்

இனி ஏற்றலாவது,—இவ்வாறு மலங்கழுவி, அன்பரொடுமருவி, ஆலயந்தொழும அரநெறியைக் கடைப்பிடித்த சீவன்முத்தர்களது உடல் பொருள ஆவிகளை நீவார்த்துக் கொள்ளுதலாம.

என்னையெனின், சீவன்முத்தர்கள் அன்பரொடு இணங்குவதும, ஆலயத்தைவழி படுவதும் இலக்கணமாகவிருக்க, அதனை மேலோங்கவொட்டாது தடுக்குங் களைகட்டா

யுள்ளது மும்மலங்களேயாம். அம்மும்மலங்களும் விளைதற்கு இடமாயுள்ளது உடல் பொருள் ஆவிகளேயாம். ஆகலான், ஆணவமலம் விளைதற்கிடமாயுள்ள உயிரையும், கன்மமலம் விளைதற்கிடமாயுள்ள பொருளையும், மாயாமலம் விளைதற்கிடமாயுள்ள உடலையும் களைவானெண்ணி அச்சீவன்முத்தர்கள் பத்திரபுஷ்பபலன்களைக்கொண்டு அவைகளால் நடராஜப்பெருமானை அருச்சனைபுரியவருவாராயின் அவர்கள்பால் அம்மூன்றையுமே சங்கற்பஞ்செய்து நீர்வார்த்துப் பெற்று சிவார்ப்பணம்செய்து, அதனால் அவர்களுக்குண்டாகும் பேரன்பைப் பெறும்பேறுகப் பெறச்செய்தலாம். இது அறுதொழில்.

இவ்வாறு தில்லைவாழந்தணர்கள் சீவன்முத்தர்களது உடல் பொருள் ஆவிகளைச் சிவார்ப்பணஞ்செய்தபின், அம்மூன்றையும் நடராஜன் ஏற்குமாறுசெய்து, அச்சீவன்முத்தர்களைநோக்கி ஊழூழ் ஒழியுமளவும் அன்னமும் பாலிப்பான், பொன்னும் பாலிப்பான், அவ்வூழ் ஒழிந்தவழி இன்னமும் பிறவாவண்ணமும் செய்யான் என்று ஆசிகூறுவர்.

இவ்வுண்மைதோன்றவே—"அறுதொழில் ஆட்சியாலே அருங்கலிநீக்கியுள்ளார் எனவும், உறுவது நீற்றின்செல்வம் எனக்கொளும் உள்ளமிக்கார் எனவும், பெறுவது சிவன்பாலன்பாம் பேறெனபபெருகிவாழ்வார் எனவுங்கூறினர். திருஞானசம்பந்தமூர்த்திகளும் "கற்று ஆங்கு எரியோம்பி கலியை வாராமே, செற்றார்வாழ்" என்று ஓதியருளினர்.

நடராஜன் சீவன்முத்தர்களுக்கு அன்னமும் பொன்னுமளித்து மீண்டும் பிறவா வண்ணம் செய்வானென்பதை—"அன்னம்பாலிக்குந் தில்லைச் சிற்றம்பலம், பொன்னம்பாலிக்கும் மேலுமிப்பூமிசை, என்னன்பாலிக்குமாறுகண் டின்புற, இன்னம்பாலிக்குமோ இப்பிறவியே" என்றார் திருநாவுக்கரசுசுவாமிகள்.

இப்பாட்டான், (திருநடம்புரிவார்க்கு ஆளாய், மன்னுயிர்காக்கும் கருமமே பொருளாக்கொண்ட) தில்லைவாழந்தணர்கள் பிறபொழுக்கங்குன்றாத குலவொழுக்கத்திற் சிறந்தவர்களென்றும், அவ்வொழுக்கத்திற் சிறந்திருப்பதற்கேற்ப ஓதலாதியறுதொழில் திறத்தில் ஆண்தன்மையுடையவர்களாய் கலியை நீக்கிக்கொள்ளுந் திறமுடையவர்களென்றும், அத்திறத்தால் நீற்றின்செல்வமே எல்லாத்துன்பங்களையும் போக்கும் பாக்கியமென்று போற்றும் உள்ளத்திற்சிறந்தவரென்றும், அங்ஙனமான பாக்கியங்கிடைக்கப்பெற்றதனால் சிவன்பாலன்பே பெறத்தகும் பேறெனப் பெருகிவாழ்பவர்களென்றுங் கூறப்பட்டது. (௩)

ஞானமே முதலா நான்கும் நவையறத் தெரிந்து மிக்கார்
தானமும் தவமும் வல்லார் தகுதியின் பகுதி சார்ந்தார்
ஊனமே லொன்று மில்லார் உலகெலாம் புகழ்ந்து போற்றும்
மானமும் பொறையும் தாங்கி மனையறம் புரிந்து வாழ்வார்.

(எ - து.) ஞானத்தை முதலாகவுடைய ஞானமுதலிய நான்கினையும் குற்றமற ஆராய்ந்துணர்ந்து தெளிவில் மிகுந்திருப்பவர், அத்தெளிவின் மிகுதியால் எல்லாப்பொருளையும் சிவன்பாலாக்கும் தானத்திலும், தனுகரணாதிகளைச் சிவநெறியில் நிற்கச்செய்யும் தவத்திலும் வல்லவராயிருப்பவர், (அவ்விரண்டு முடைமையால்) தகுதி எனப்படும் அன்பெனும் பகுதியைச் சார்ந்திருப்பவர்;(அன்பின்பகுதியைச் சார்ந்திருப்பவராகவே) மும்மலச்சேட்டையின் விகுதியாகிய துன்பக்கூறுபாடுகள் ஒருசிறிதும் இல்லாதவராயினர்; அவையிலவாகவே உயர்ந்தோரெல்லாம் புகழ்ந்துபோற்றத்தகும் மானத்தையும் பொறையையும் மறவாது தாங்கிக்கொண்டு இல்லறத்தை நடத்திவாழ்கின்றவரா யிருப்பவராயினர் என்பதாம்.

"உடம்பின் கண்ணதாகிய பிராரத்தவாசனை உயிர்க்குத்தாக்குவதாயுள்ள அவ்வளவு காலமும், அதனான்வரும் விருப்புவெறுப்புக்களும், அவைபற்றி அறியப்பட்டுவரும் யண்

முதலாகக்கூறப்படும் மாயைகளும், அவைபற்றிநிகழும் விபரீதவுணர்வும் ஆகிய அசத்துக்கள் நீங்கியவழியும் வந்துகூடி மேம்பட்டுவருவனவாகலான் அவ்வளவிற்கெல்லாய மூலமாகிய பிராரத்தவாசனை பற்றறக்கழிந்தாலன்றி அவ்வசத்தைக் கீழ்ப்படுத்தும் மெய்யுணர்வு மேம்படுதல்கூடாதாகலின், அவ்வாசனை பற்றறக்கழிதற்பொருட்டு, திருவேடத்தையும்சிவாலயத்தையும் நாடிவழிபடவே அவ்வினைநீங்கி மெய்யுணர்வு மேம்பட்டுநிகழும் ஆகலான் அன்பினால் அங்ஙனம்வழிபடுவாயாக" என்றுசித்தாந்தத்தில் உதாரணமாகிய இயைபுகூறுதலின் இவ்வியைபுணர்ந்த பெருமக்களே அவ்வந்தணர்களாகலின் ஞானத்திற் சரியை கிரியை யோகம்ஞானம் என்னும் நான்கினையும் குற்றமறத்தெரிந்து மிக்காராய்த் தானத்திலும், தவத்திலும் வல்லராய்த்தகுதியின்பகுதியைச் சார்ந்தவராயினர். எனவே-அறிவிச்சைசெயல்கள் மூன்றும் பத்திவசப்பட்டு ஞானசம்பந்தமுடைய சரியைகிரியாயோகங்களின் வழியாய்ச் செய்யக்கடவனவாகிய வழிபாடுகளை அயரா(நீக்கமில்லா)மல் செய்துவந்தாலன்றி ஞானத்தாற்பெறப்படும் துரியாதீதநிலைக்கண்ணதாகிய சுவானுபூதியிலுண்டாகும் பரமசுகம் நீங்காதிருக்கப்பெறுதல் கூடாதென்பதனை சந்தேகமென்னும் நவையற நன்றாய்த்தெரிந்தவராய், அப்பரமசுகம் நீங்காதிருத்தற்பொருட்டு நடராஜமூர்த்திக்குச் சரியையின்வழியாய்ச் செய்யக்கடவதாகிய வழிபாட்டினால் விருப்பு வெறுப்புக்கிடஞ்செய்யும் புண்ணியபாவப்பயனையும், புண்ணியபாவப் பலகாரணமாயும் பொருந்துகின்ற கன்மமலச்சேட்டையைத் தடுத்தும், கிரியையின்வழியாய்ச் செய்யக்கடவதாகிய உட்பூஜை புறப்பூஜையாகிய வழிபாட்டினால் நிலமுதல் மோகினியீறாகக் காணப்படுகின்ற மாயாமலச்சேட்டையைத் தடுத்தும், யோகத்தின்வழியாய்ச் செய்யக்கடவதாகிய ஆதார நிராதாரயாகிய வழிபாட்டினால் ஆறாதாரங்களில் அந்தந்த ஆதாரங்களுக்குரிய திவ்யரூபங்களைக் கற்பித்துக்கொண்டு தியானித்தலாகிய சுட்டறிவும், நிராதாரயோகத்தில் முன்போல் திவ்யரூபங்களைக் கற்பித்து ஆகருவதொழிந்து சைதன்யசொரூபத்தைப் பாராதே பார்த்திருத்தலாகிய சுட்டறிவும் ஆகிய விபரீதவுணர்வைக்கொடுக்கும் ஆணவமலச் சேட்டையைத்தடுத்தும், தங்களுடைய உடல் பொருள் ஆவிகளைத் தங்கள்பால் ஊனநடனத்தையொழிக்கு ஞானநடனத்தைச் செய்தருளும் ஞானநடனமூர்த்திக்குக் கொடுக்குந்தானத்திலும், இங்ஙனம் உடல்பொருள் ஆவிகளாகிய சத்தசத்துக்களின் வழியாய்ச் சேட்டிப்பதாகிய மும்மலச்சேட்டைகளை நீக்கியவழியும் இச்சேட்டைகளுக்கெல்லாம் மூலமாகிய பிராரத்தவாசனை வந்துகூடுவதாகலான் அவ்வாசனை பற்றறக்கழிந்தாலன்றி மும்மலச்சேட்டையாகிய அவ்வசத்தைக் கீழ்ப்படுத்தும் ஞானம் (அஃதாவது, துரியாதீதநிலைக்கண்ணதாகிய சுவானுபூதியிலுண்டாகும் பரமசுகத்தைக்கொடுப்பதாகிய மெய்ஞ்ஞானம்) மேம்படுதல் கூடாதாகலின் அந்த மெய்ஞ்ஞானம் மேம்பட்டுநிகழவும், அதுநிகழ்தற்குப் பிராரத்தவாசனை வன்மைபெற்றிருத்தலால் அவ்வன்மை பற்றறக்கழிவதற்கும், திருவேடத்தையும் சிவாலயத்தையும் நாடிவழிபடுதலாகிய தவத்திலும் வல்லராய், இவ்வன்மைகுன்றாவண்ணம் அரன்கழலில் செலுத்தத்தக்க அயரா அன்பென்னும் பகுதியைத் தகுதியாகச்சார்ந்தவராய், இச்சார்பின் உறப்பான் ' தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்கு எல்லையில்லதோர் அடிமைபூண்டு" "புண்ணியபாவம் பொருந்தும் இக்காமியத்தான்வரும் அல்லல் என்செயும்" "மண்முதல் மாயையினால்வரும் அருவினை என்செயும்" "கண்ணிய அஞ்ஞானங்காட்டும் இவ்வாணவத்தான்வரும் தொல்லைவல்வினைத்தொண்டர்தான் என்செயும்" என்று தெளிந்தஞானத்தால் இனிமேல் எங்களுக்கு வரக்கடவனவாகிய ஊனங்கள் ஒன்றுமில்லை என்று இறுமாப்புடன் வாழ்வர்.

இவ்வாறுவாழ்கின்ற இவர்கள் சிவத்வவிளக்கமெனப்படும் சிவப்பேற்றையும், அதுகூட்டும் அருள்விளக்கமும் வேண்டாது, பாசநீக்கமேவேண்டித் தம்மையே பொருளாகப் பெறுவோர்அவாவும் துறவறத்தை அவாவாது நல்லோர்வேண்டும் இல்லறமாகியநல்லறத்தைவேண்டி அதனை எப்பொழுதும் இனிதுடனியற்றிவாழ்வர். ஏனெனின்,—"மோப்பக்குழையும் அனிச்சம் முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" என்ற பெரியோர்

சொற்படி முகம்வேறுபட்டுப பார்த்தவளவில் குழைந்துபோம் மேன்மைவாய்ந்த மான மிக்கார் விருந்தினரெனப்படும் அரனடியரோ யாகலினுலும், அவ்வடியார்க்கு அமுதுசெய் வித்தலினும் மண்ணினிற் பிறந்ததனுற் பெரும்பயன் வேறென்றில்லையாகலினுனும் அப்பெரியபேறு இல்லறத்தாலல்லது அமையா தாகலினுனும், அவ்வில்லறத்தையே பேறறமெனக்கொண்டு குலங்களிற்சிறந்த நான்குகுலத்தவராயினும, அக்குலங்களிற் சேராதவராயினும், உலகத்தாரால் கொள்ளப்படும் நலத்தினராயினும், நலமொழிந்த தீமை யெல்லாம் நிறைந்தவராயினும் அவர்களறிவு சங்கரரிடத்துப்பொருந்திய அன்புடையது என்றுகாணப்பெறும் அடியார்களாயின் அவர்கள் யாதுவேண்டினும் அதனை இல்லை யென்னுது கொடுத்தலில் மானமும், அங்ஙனங்கொடுத்தலினுல் எவ்வகைத்தான மேலுலகம் இல்லெனினும் எவ்வகைத்தான நரகலோகம் வருவதெனினும் அவைகளைத் தாங்கும் பொறையும் உடையவராய் உலகெலாம் போற்றவாழ்வாரென்று கூறப் பட்டது.

இப்பாட்டான், வைதிகநெறியால் அறத்தையும், சைவநெறியால் அன்பினையும் பெற்றுள்ள தில்லைவாழந்தணர்கள் அணுபக்ஷமாகக்கொள்ளும் சரியையாதிகளைவிட்டு சம்புபக்ஷமாகக் கொள்ளும் ஞான யோகக்கிரியை சரியைகளைத் தெரிந் துணரும் அறிவிற் சிறந்தவரென்றும், அந்நான்கும் நிலைபெறுமாறு தானத்திலும் தவத்திலும் வல்லவராயிருப்பரென்றும், அந்தவன்மைபால் புலன்வழிசாராது சிவஞானத்தையே சார்ந்திருப்பவரென்றும், அச்சார்பால் அறியாமையின் பகுதி சிறிதும் இல்லாதவ ரென்றும், அவை இல்லாமையால் மேல் அன்புசெலுத்தற்குரிய இல்லறத்தை மானத்தை யும பொறையையும் துணையாகக்கொண்டு நடத்தி வாழ்வார்களென்றும் கூறப்பட்டது. ()

செம்மையால் தணிந்த சிந்தைத் தெய்வவே தியர்க ளானூர்
மும்மையா யிரவர் தாங்கள் போற்றிட முதல்வ னுரை
இம்மையே பெற்று வாழ்வார் இனிப்பெறும் பேறென் றில்லார்
தம்மையே தமக் கொப் பான நிலைமையால் தலைமை சார்ந்தார்.

(எ - து.) இவ்வண்ணம் இல்லறத்தைநடத்தும் செவ்வழியினுல் சாந்தம் அடையப் பெற்ற சித்தத்தையுடைய தெய்வத்தன்மையிற்சிறந்த அந்தணர்களாயுள்ளார் மூவாயிர வர்கள்; (அவர்கள்) தாங்கள் வழிபட்டுவணங்க, யாவர்க்குந் தலைவராயுள்ள இறைவரை, இவ்வுடம்போடு கூடிவாழும் பொழுதே ஆன்மநாதராகப்பெற்றுள்ளவர், இனிப்பெறத் தரும்பேறு ஒன்றுமில்லாதவர்கள், (ஆகலான்) வேறொருவரை ஒப்பிடுவதற்கில்லாமல் அவர்களுக்கு அவர்களையே ஒப்பாகச்சொல்லப்படும் நிலைமையுடைமையால் அவர்களே தலைமையைப்பெற்றுள்ளவர்களாயினரென்பதாம்.

இங்ஙனமான விருந்தோம் பலாகிய வேளாண்மையான், பருவந்துபாழ்படுத (நல்குர வான் வருந்திக்கெடுத)லை யடையாராய், திருமகள் மனமகிழ்ந்து வாழப்பெற்று, உண வுக்குவேண்டிய வித்தை இடாமலே தானியசம்பத்தெல்லாம் உடையவராய் வாழும் செம்மையராய், எல்லாவுயிர்களிடத்தும் செந்தண்மையுடைய கடவுட்டன்மை வாய்க்கப் பெற்றவராய்ப் பூவுலகிலுள்ள ஆன்மாக்களுடைய மும்மலங்களை வேதித்து ஒழிக்க அனுதிமலமுத்தனுகிய முதல்வனைத் தங்களுக்குள் முதன்மையாய் நின்றுடும்படிப் பெற்று மூவாயிரவரென என்றும் வாழ்வாராயினர். யாவர்க்கும் முதல்வனுயுள்ள இறைவனை இவர்கள் முதன்மையாகப்பெற்றுவாழ்ந்ததன்மை எத்தன்மைத்தெனின்:— எல்லாவுயிர்களிடத்தும் உடல்உயிர், கண்ணருக்கன், அறிவொளிபோல் பிரிவறும் அத்துவிதத்தன்மையா யிருப்பதுபோ லல்லாமல், இவர்களது உடலாய் உயிராய் உண் டுறங்கிநடந்து நானுபோகங்களையுந் தானுகச்செய்து பேதமறநின்றிருக்கப்பெற்று இனிப் பெறும்பேறு ஒன்றில்லாதவராய் வாழுந்தன்மையைப் பெற்றனரென்க.

இப்பேறுபெற்றதேயன்றி, தம்மையே தமக்கொப்பான நிலைமையால் தலைமைத் தன்மையைச் சார்ந்தவராயும் இருப்பவர். அஃதாவது,—இறைவன் தனக்குமேல் ஒருவரையில்லாமைபோல் இவர்களும் இல்லாதவர், அவ்விறைவன் தனக்குச் சமானமாக ஒருவரையும் இல்லாமைபோல் இவர்களும்இல்லாதவர் மேலும் ஒப்பும் இல்லாதஅவ்விறைவன் யாவரையும் தனக்கு அடிமையாகக்கொண்டு தான்தலைமைத்தன்மையைச் சார்ந்திருத்தல்போல் இவர்களும் யாவரும் தங்களுக்கடிமைகூறத் தாம்தலைமைத் தன்மையைச் சார்ந்திருக்கின்றவராயிருக்கின்றவரென்று கூறினார்.

இப்பாட்டான், (அன்புசெலுத்துவானெண்ணி இல்லறத்தை மேற்கொண்ட அந்தணர்கள்) சாந்தசித்தத்தோடுகூடிய வேதியர்கள் என்றும், அவர்கள் மூவாயிரம்பேரெளன்றும், இவர்கள் யாவர்க்கும் முதல்வனாயிருக்கின்ற பஞ்சகிருத்திய மூர்த்தியைத் தங்கட்கே ஆன்மநாதமூர்த்தியாக இம்மையேபெற்றவரென்றும், அதனால் இவர்களுக்கு அம்மை ஒன்றுளதென்பதும அங்குபெறும்பேறு ஒன்றுளதென்பதும் இல்லாத பெருஞ்சிறப்பினரென்றும், இத்தகைத்தான சிறப்பினால் வேறொருவர் தமக்கு ஒப்பு சொல்லுவதற்கில்லாமல் தலைமைபெற்றிருப்பவரென்றும் கூறப்பட்டது. (அ)

இன்றிவர் பெருமை யெம்மால் இயம்பலாம் எல்லைத் தாமோ
தென்தமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத் தொகைமுன் பாட
அன்றுவன் றொண்டர் தம்மை அருளிய ஆரூர் அண்ணல்
முன்திரு வாக்கால் கோத்த முதற்பொருள் ஆனார் என்றால்.

(எ ) சுந்தரமூர்த்திகளை விறன்மிண்டர் "புறகு" என்றுசொல்லிய அந்நாளில், அம்மூர்த்திகளை (அடியார்கள் புறகாக்காத ஆறுமாறு) தமிழ் எனனும் மொழிக்குப பொருளாயுள்ள திருத்தொண்டத்தொகையை, அம்மூர்த்திகள் அடியார்குழாங்கள் கூடியிருக்கும் தேவாசிரியத்தின் முன்னேநின்று பாடுதற்குத் தியாகேசபபெருமானார் தமது திருவாக்கால் முதலடியாக எடுத்துத்தொடுத்தருளிய முதற்பொருள்கள் ஆயினாரென்று சொல்லபபடுமானால், இபபொழுது இத்தில்லைவாழந்தணர்களுடைய சிறப்பை எம்மால் எடுத்துச்சொல்லத்தகும் அளவினை யுடையதாகுமோ; ஆகா என்பதாம்.

வன்றொண்டர் தம்மை அன்று தென்தமிழ்பபயனாயுள்ள திருத்தொண்டத்தொகை முன்பாட ஆரூரண்ணல் முன்திருவாக்கால் கோத்தருளிய முதற்பொருளானார் என்றால் இன்றிவர் பெருமையெல்லாம் இயம்பலாம் எல்லைத்தாமோ எனக்கூட்டுக.

இதனால் அவர்கள்பெற்ற தலைமைத்தன்மையைச் சிறந்தெடுத்துக்கூறியதென்க. அஃதாவது, பாஷைகளில்தலைமைபெற்றது- தமிழ். அத்தமிழில் தலைமைபெற்றதமிழ் - தென்திசையின்கண்வழங்கும் தேவாரதிருவாசகாதிகள். அவற்றுள் தலைமைபெற்றது - திருத்தொண்டத்தொகை. இதற்குமேலொரு தலைமைபெற்றது ஒன்றுமில்லை. இங்ஙனம் தலைமைபெற்ற திருத்தொண்டத்தொகையுள் "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும்அடியேன்" என்று சிறந்தெடுத்தோதியதேயாம்.

அல்லதூஉம், - இவ்வடியை எடுத்துச்சொன்னவர் ஆரூரண்ணல் (தியாகேசர்.) அடியேன்என்று சொன்ன அவ்வீசரோ யாவருக்காயினும் அடிமையாய் அவர்பால் தாம் வேண்டும்பொருள் ஒன்றுமில்லாதவர். அத்தகைச்சிறப்புடைய அவ்விறைவர் அடியேனென்று வேண்டிக்கூறினாராகலின் இவர்களே தலைமைசார்ந்தவரென்பதில் ஐயமுண்டோ

அல்லதூஉம், - தியாகேசராகிய தம்பிரானுக்குத் தோழராகி அவரைத் தம்பொருட்டுத் தூதாகப்போம் வன்றொண்டுகொண்ட வன்றொண்டப்பெருமானும், தம்பிரான்சொல்லியவாறே தாமும் அடிமை யென்றுசொல்ல விரும்பினாராகலினானும் இவர்களே தலை

மையாயினார். ஆகலின் இவர்களன்றித் தலைமைபெற்றார் ஒருவரும் இல்லை என்றார்.

இனி, திருத்தொண்டத்தொகை முன்பாட, ஆரூரண்ணல் முன் திருவாக்கால் கோத்த முதற்பொருளானார் என்றதன் அருமையாதெனின்,—

வேதாகமங்களின்சாரமாய் மெய்ஞ்ஞானத்தின் பயனாய் சிவானுபூதிச்செல்வமாயுள்ளது திருத்தொண்டேயாம். அத்தொண்டையுணராது வேதாகமங்களை யாராய்வோர் அவைகளின் சாரத்தையறியார், மெய்ஞ்ஞானிகள் பாசம் நீங்கப்பெற்றும் அதன் பயனைப்பெறார், சிவானுபூதிமான்கள் நிட்டைவரப்பெற்றும் பிராரத்தவாசனையற்றுச் சிவானந்தச்செல்வத்தை யடையார். ஆகலான், வேதாகமஆராயச்சிக்கும் மெய்ஞ்ஞானத்திற்கும் சிவானுபூதிக்கும் முதற்பொருளாயுள்ளது தொண்டே என்றாயிற்று. ஆகவே அம்மூன்றினுங் கோத்த முதற்பொருளையும், ஆராயச்சியும் ஞானமும் அனுபூதியும உடைய தில்லைவாழந்தணர்கள் அத்தொண்டிற் றலைப்பட்டு வேதாகமங்களின் ஆராய்ச்சியின் சாரத்தையும், மெய்ஞ்ஞானத்தின் பயனையும், சிவானுபூதிச் செல்வத்தையும் பெற்றாராகலின் முதற்பொருளானா ரெனவுங்கூறினார்.

இனிச் சாரமுதலிய மூன்றையும் எய்துவிக்கத்தக்க அத்தொண்டாவன,—பரமேசுவரன் ஆன்மாவாய் நின்றமுறைமையை வேதாகம ஆராய்ச்சியான் உணரப்பெற்றோர் ஆன்மாவாய்நிற்கும் அவ்விறைவனருளாலல்லது ஆன்மா ஒன்றுஞ்செய்யாதாகவே அவனிடத் தேகனாகி நிற்கச்செய்யுந்தொண்டு, மெய்ஞ்ஞானமாகிய சிவஞானம வரப்பெற்றோர் தமது அறிவிச்சைசெயல்கள் பரமேசுரனது ஸ்ரீபாதங்களையணையுமாறு செய்யுந் தொண்டு, சிவானுபூதிமான்கள் அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடுந்தொண்டு இம்மூன்றுமாம.

ஆகவே, ஏகனாகிநிற்கச்செய்யவல்லபொருள், ஸ்ரீபாதங்களையணையுமாறு செய்யவல்லபொருள், பதியைச் சிந்திதனாகக்கண்டு வழிபடச்செய்யவல்ல பொருள். இம்மூன்றுமுதற்பொருளையும கோத்துள்ளது திருத்தொண்டத்தொகை என்க. ஆகவே ஆரூரண்ணல் திருவாக்கால்கோத்த முதற்பொருள் என்றார்.

அல்லதூஉம், ஆரூரண்ணல் வெளியிடக்கருதிய திருத்தொண்டத் தொகையைச் சுந்தரமூர்த்திகள் ஓதியருளுமாறு அமமூர்த்திகள் வாக்கின்கண் கோத்தாரென்றலுமொன்று.

இப்பாட்டான், யான் தில்லைவாழந்தணர்களது பெருமைமுற்றும் சொல்லலாம் என்னும் அவாவுடையனாயினும், அது முற்றுப்பெறுவதாகவில்லை. ஏனெனில், தமிழுக்குப் பயனாயுள்ள திருத்தொண்டத்தொகையைப் பாடுவதற்கு முன்னிற்பவராகிய தில்லைவாழந்தணர்கள் முடிவில்லாதானை முன்னாகவுடையவராகயிருத்தலால் அவர்கள்பெருமை யிங்ஙனம் முற்றுப்பெறும. இதுகாறும் இறைவன் பெருமையை முற்றுப்பெறச்செய்தார் ஒருவருமில்லை. அஃதேபோல், அவர்கள் பெருமையும் முற்றுப்பெறுமாறில்லை. மற்றென்னெனின், முற்றுப்பெறா தென்பதே முற்றுப்பெறக்கூறியதா மென்று கூறப்பட்டது (க

அகலிடத் துயர்ந்த தில்லை அந்தணர் அகில மெல்லாம
புகழ்திரு மறையோர் என்றும் பொதுநடம போற்றி வாழ்க;
நிகழ்திரு நீல கண்டக் குயவனார் நீடு வாய்மை
திகழும்அன் புடைய தொண்டர் செய்தவம் கூறலுற்றாம்.

(எ - து.) இந்நிலவுலகின்கண் எல்லாவுலகத்தவராலும் புகழ்ந்து போற்றத்தக்க மேன்மைபொருந்திய தில்லைவாழந்தணர்கள் என்னும் மூவாயிரமவேதியர்கள், சிற்றம்பலத்தின்கண் நடனஞ்செய்தருளும் பொதுநடனத்தை எப்பொழுதும் வழிபட்டுவாழ்வாராக; இனியாம் திருநீலகண்டக்குயவனார் என்று சொல்லப்பட்ட தொண்டனார்செய்த அன்புவிளங்கும் தவச்செயலைச் சொல்லுவாம் என்பதாம்.

அகலிடத்து அகிலமெல்லாம்புகழ் உயர்ந்ததில்லை யந்தணர மறையோர், என்றும் பொதுநடம் போற்றிவாழ்க; திருநீலகண்டக்குயவனார் (ஆகிய) தொண்டர்செய் அன்பு திகழும் தவம் கூறலுற்றாம் எனக்கூட்டுக.

இப்பாட்டான், தில்லைவாழந்தணர்களது முடிவிலாப்பெருமையை யான் முடிவுபடுத்திக் கூறல் பாவமாமென்று அதனையொழித்து யான் என்றும் வாழ்த்திக்கொண்டிருக்க அவர்கள் எப்பொழுதும் வாழ்வார்களாக. இனி திருநீலகண்டநாயனார் தவத்தைச் சொல்லுகின்றே னென்று கூறப்பட்டது. (௧0)

தில்லைவாழந்தணர் புராணம் முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

அர்சிகாயநம:

# திருத்தொண்டத்தொகை.

“தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்”

தில்லைவாழ் அந்தணர் என்றதனால் நடராஜமூர்த்திக்கும், தம் அடியார்க்கும் என்றதனால் அம்மூர்த்தியோடொன்றாய் எண்ணப்பட்ட ஏனைய அந்தணர்களுக்கும், அடியேன் என்றதனால் அடிமைப்பட்டுள்ளேன் என்றதாம்.

இவ்வுண்மைதோன்றவே,—“ஆதியாய் நடுவுமாகி” “கற்பனை கடந்தசோதி” என்னும் இவ்விருபாசுரத்தாலும் நடராஜமூர்த்தியை வணங்கிப் “போற்றிநீள் தில்லைவாழந்தணர் திறம்புகலலுற்றேன்” என்று ஏனைய அந்தணர் திறமெல்லாம் விதந்தெடுத்தோதி “இன்றிவர்பெருமையெம்மால் இயம்பலாம் எல்லைத்தாமோ” என்று அவர்களைப் போற்றியும் விளக்கினார்.

### * திருத்தொண்டர் அந்தாதி.

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோர்
ஒப்பப் புவனங்கள் மூன்றினும் உம்பரின் ஊரெரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் காதிப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே.

தில்லைப்பதியிற் செழுமறையோர் என்றதனால் ஏனைய வைதிக அந்தணருள் ஒருவராக எண்ணப்பட்டவரன்று வைதிகசைவராகிய தீக்ஷித அந்தணர்கள் என்றும், செப்பத் தகுபுகழ்த்தில்லை என்றதனால் அத்தீக்ஷிதர்கள் வசிக்கும் இடமும் அத்தில்லைப்பதியே என்றும், பிறையணிந்த துப்பர்க்கு உரிமைத்தொழில்புரிவோர் என்றதனால் அவர்கள் செய்யும்பணி நடராஜமூர்த்திக்குரிய அகம்படித்தொண்டென்பதும், இப்புராணத்திற்குரிய தலைவர்களையும், அவர்கள் பதியையும், அவர்கள் தொண்டையும் விதந்து இத்திருப்பாட்டாற் கூறப்பட்டதென்க.

### † தில்லைவாழந்தணர் புராணசாரம்.

நல்லவா னவர்போற்றுந் தில்லை மன்றுள்
நாடகஞ்செய் பெருமானுக் கணியார் நறபொற்
றொல்லைவான் பணியெடுத்தற் குரியார் வீடும்
துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன் பாடத்
தில்லைவாழ் அந்தணரென் றெடுத்து நாதன்
செப்பும்அருள் உடையார்முத் தீயார் பத்திச்
செல்லைகாண் பரியாரொப் புலகிற் றுமே
எய்ந்துளார் எமையாள வாய்ந்து ளாரே.

* நம்பியாண்டார் நம்பிகள் அருளியது. † உமாபதிசிவம் அருளியது.

(எ-று) தில்லைவாழந்தணர்கள் தில்லைமன்றுள் நாடகஞ்செய் பெருமானுக்கு அணுக்கராயும், நற்பொற்றொல்லைவான்பணி எடுத்தற்கு உரியராயும், வீடுபேற்றுக்குச் சிறந்த நெறியராயும், தொண்டத்தொகை முன்பாடத் தில்லைவாழந்தணரென்று எடுத்த நாதன் செப்பும் அருள் உடையராயும், முத்தீ இயற்றுபவராயும், பகலிற்கு எல்லைகாண்பரியராயும், உலகில் தாமே ஒப்பு எய்துள்ளாராயும், ஆருக்கப்பெற்ற எழுவகைப் பணித்திறத்தால், தன்வயத்த னாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை முதலியனவாகக் கூறப்பட்ட நடராஜமூர்த்தியினது எண்வகைக்குணத்துக் குள்ளாராய் அந்த ‡ நடராஜமூர்த்தியோடொப்ப வாழ்த்தப்படுகின்றாராகலின் அவர்களே எம்மையாண்டருள்வாய்ந்துள்ளாராயினார். ஆகவே அவர்களேயே நான் நாவாரப்பாடி தென்றிசைக்கோனது தூற்றேவலை யொழித்தது நானும் அவர்களது பணித்திறத்தை மேற்கொண்டு அவ் ‡ வெண்குணத்துக்குள்ளாகிய வாழ்வுபெறுவேனாக என்பதாம்.

இனி எழுவகைப் பணித்திறத்தால் எண்குணத்துக்குள்ளாயின தன்மைவருமாறு:—

மன்றுள் நாடகஞ்செய்பெருமானுக்குத் தில்லைவாழந்தணர்கள் அணுக்கராய் வாழ்த ற்குரிய பணித்திறத்தை யுடையராயினாராகலான் யாவையுந் தன்வயத்தனவாக ஆளுந் தன்மையினையுடைய அந்நடராஜப்பெருமான் அவ்வந்தணர்களைத் தன்வயத்துக்குள் ளானவராக்கித் தன்னிலையில் நிற்கச்செய்தனன்.

இதனால் தன்வயத்தனாதல் என்னும் முதற்குணத்துள்ளாக்கிய தன்மை கூறப் பட்டது.

அங்ஙனம் அவர்களும் அவன்வயத்தராகவே, அவர்களைத் தூயவுடம்பினனாகிய இறை வன் "தனது நீற்றினால் நிறைந்த கோல"த்தைப், "பொற்புடைப்பணிகள் ஏந்திமங்கலத் தொழில்கள் செய்து மறைகளால் துதித்து" ப்போற்றுவராக்கிப், "தொல்லைவான்பணிபை எடுத்தற்கு உரியராக்கி" அவர்களது அசுத்தமாயாகாரியமாகிய உடம்பைத் தமது தூய வுடம்போடொப்பச் § தூயவுடம்புடையராக வாழச்செய்து தம்மோடொப்ப யாவரும் எண்ணிப் போற்றும்படிச் செய்தனன்.

இதனால் தூயவுடம்பினனாதல் என்னும் இரண்டாங்குணத்துள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

அங்ஙனஞ்செய்யவே, இறைவனை விட்டு நம்மையடைந்து பெறுவதாகக் கூறப்படும் வீடும் சிறந்த நெறியினை யுடையராயினார் எனின் அமையற் பெறுவ தெனப்படும் வீடுபேறு சிவானந்தமையானன்றே அத்தன்மை இம்மையில் சிவான தானுபவமவர் பெற்றாலன்றிக் கூடாதன்றோ அவ்வானந்தம் 'சிவன்பால் அன்பெனு மோறு' பெற்றாலன்றி உண்டாகமாட்டா ஆகவே, சிவமாந்தன்மையை அம்மையன, இம்மையே எய்தவிக்கவல்ல சிவனால் அன்னடையே பெருக எண்ணச் செயவல்ல திறமுடைய தமது இயற்கையுணர்விற்கு அவர்களை உள்ளாக்கினன்.

இதனால் இயற்கையுணர்வினனாதல் என்னும் மூன்றாங்குணத்துள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

கோயிற்புராணம் இரணியவன்மச்சருக்கம் கஉ௯ - வது பாடலில் "எம்மையொப்ப வர்கள் யாரும் யாமவாகக்கொப்போம் என்றே, அம்மையப்பனுமாவான் அவர்களில் ஒருவன் என்றான்" என வருதலாற்காண்க.

‡ திருமறுமாற்றத்தாண்டகத்தில் "நாவாரம்பனையே *** எண்குணத்துள்ளோமே." என்றமையாற்காண்க.

§ திருஞானசம்பந்த மூர்த்திகள் புராணத்தில் "அண்டத்திறைவர் அருளால் அணி தில்லை, முண்டத்திருநீற்று மூவாயிரவர்களும், தொண்டத்தகைமை கணநாதராய் முன்றான் றகைகண்டு" எனவருதலாற்காண்க.

அவ்வுணர்விற்குள்ளாக்கவே, அன்பின் தொகுதியெல்லாம் உடையாராகிய தொண்டர்களுடைய தொகையை முற்றுணர் வுடையானாகிய "ஆரூரண்ணல், அன்று வன்றொண்டர் தம்மைத்திருத்தொண்டத்தொகை முன்பாட முன்திருவாக்கால்கோத்தருளத்" தகுதியுடைய தமது முற்றுணர்விற்குள்ளாக்கினன்.

இதனால் முற்றுமுணர்தல் என்னும் நான்காம் குணத்துக்குள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

அவ்வுணர்விற் குள்ளாக்கவே, அவர்கள் "முதற்பொருளானோர்கள்" ஆகவே, "மன்னுயிர் அருளால்மல்க, வருமுறை யெரிமூன் றோம்பு(வதாகிய) தருமமே பொருளாக் கொண்டு" அம்முத்தீயை ஓம்புவதற்கு அவர்களைத்தமது இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதலாகிய குணத்துக் குள்ளாக்கினன்.

இதனால் இயல்பாகவே பாசங்களில் நின்று நீங்குதல் என்னும் ஐந்தாங் குணத்துக் குள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

அக்குணத்துக்குள்ளாக்கவே, * இவர் நம்மவர், பிற என்றெண்ணவரும் பாசஇயல் பினின்றும் நீங்கப்பெற்று யாவரையும் தம்மவராகவே எண்ணவரும் எண்ணத்துக்குள்ளாக்கி முத்தீயை வளர்த்திவரச் செய்து அவ்வளவில் நிறுத்தாது பத்திக்கு எல்லைகாண்பரியராகச் செய்யவல்ல தமது பேரருளுக்கு உள்ளாக்கினன்.

இதனால் பேரருளுடைமை என்னும் ஆறுங்குணத்துக் குள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

அவ்வருளுக்குள்ளாக்கவே, அவர்கள் "ஞானமே முதலாநான்கும் நவையறத்தெரிந்து" மிக்காராகி, தமக்குவாய்த்துள்ள எல்லைகாண்பரிய பத்தியினால் சரியை கிரியைகளைச் செய்தலாகிய தானத்தையும் தவத்தையும் தகுதியின பகுதியாகச் சார்ந்து, அதனால் பாசக்ஷயம் உண்டாமாறு கருத, அவர் கருதியவாறே அஃதுண்டாக அவர்களைத் தமது முடிவிலாற்றலாகிய குணத்துக் குள்ளாக்கினன்.

இதனால் முடிவிலாற்றலுடைமை என்னும் ஏழாங் குணத்துக்குள்ளாக்கிய தன்மை கூறப்பட்டது.

இவ்வெழுவகைத் திறத்திற்குள்ளாக்கவே, பாசக்ஷயம் உண்டாய் அவ்வேழு குணத்துள்ளும ஆக்கிய இறைவனது ஸ்ரீபாதங்களை யணையப்பெற்றோராயினர் ஆகவே "மானமும்பொறையுந் தாங்கி மனைபறம புரிந்து வாழ்வாராய்" அதனால் "ஊனம் ஒன்றும இல்லா" ராய் ஸ்ரீபாதங்களை யணையப்பெற்ற காரணத்தால் எட்டாவதாகிய வரம்பிலின்பமுடைமை என்னும் அக்குணத்துள்ளாராய ஒப்பிலா ஒப்புடையராய வாழ்வாராயினர்.

இதனால் வரம்பிலின்பம உடைமை என்னும எட்டாங்குணத்தை யுடையராகிய தன்மைகூறப்பட்டது.

இனி இவற்றின் தொகைப்பொருள் வருமாறு:—

1. முத்தான்மாக்கள் தமது ஆன்மாவின்கண் பரமசிவன் அறிவுருவாய் அருவுருவமாய் விளங்கித் தனது ஒண்கொளியால் தமதறிவைப் பிரகாசிக்கச்செய்யும் உபகாரத்தை உணர்ந்து உள்ளம் உருகப்பெற்று, அங்ஙனம் பெற்ற விசேடத்தான் உருகும் நிலையைத் தந்தது அறிவின்கண் அறிவாய்நிற்கும் இறைவன் உருவாய்வந்தன்றோவென்று அவ்வுருவமாகிய சகளத்திருமேனியின்கண் ஆசையுடையவராய் அத்திருமேனியை அணுகுவராயின் அவ்விறைவனும் அவர்கள்பால் உருகும் உள்ளத்தனாய தான் அவர்கள் வயத்தனாய் அவர்களைத்தன்வயத்தராக வாழச்செய்வனென்னும் உண்மையை விளக்கியவாறும்.

2. தன்வயத்தராகவே அவர்களை அருள்வயத்தராக்கி அருளுருவாய் நிற்கச்செய்து மாயாவுருவச செயல்களை அவரினின்றும் நீக்கித் தனது அருளுருவாகிய திருமேனிக்

* திருநாளைப் போவாரைத் தீக்ஷிதர்களைக்கொண்டே தீயைவளர்த்த அதினின்றும் தோன்றச்செய்து தம்மோடு சேர்த்துக்கொண்ட வுண்மையாற்காண்க.

குரிய பணிகளையே செய்யச் செய்யும் தூயவுடம்பினராகச் செய்வனென்னும் உண்மையை விளக்கியவாறும்.

3. தூயவுடம்பினராய் அருட்பணியிற் றலைப்படவே, அப்பணி சிவமாயமாந் திருக்கச் செய்யவல்ல அன்பையே பேறாக எண்ணி அதனையே பெறவிரும்பச்செய்யு மன்றி அவர்களை அம்மையிற்பெறும் வீட்டை வேண்டச்செய்யா; ஆகவே பந்தம்விடுதல் வீடடைதல் எனப் பசுகுண உணர்வின்செயலால எண்ணவரும் செயற்கை உணர்வு அற்று, சிவஞானச் செயலுக்குள்ளாகும் இறைவனது இயற்கையுணர்வினராவரென்னும் உண்மையை விளக்கியவாறும்.

4. இறைவனது இயற்கையுணர்வினராகவே, அவ்வுணர்வு ஆன்மாவாகிய தமக்கு வரப்பெற்ற அம்மூத்திக்காலத்தும் தம்மை ன்மாவேயென்றும் நாம் சிவமானது சிவனருளாலேயன்றி நமது போதமுற்சியாலன்றென்றும் உணர்த்தக் உணர்ச்சியைத்தந்து நாம் சிவம் என்னும் அஞ்ஞானமாகிய மோகக்கொடியை யறுத்து என்றும் ஆன்மநிலையையுடைய நாம் என்றும் தொண்டரேயாமெனனும் முற்றுணர்வையுடையராகச் செயயும் உண்மையை விளக்கியவாறும்

5. முற்றுணர்வை யுடையவராகவே, அவ்வுணர்வான் எல்லாவுயிரும் தம்முயிர்போல் வாழச்செய்வதற்கு முதனிலை வளர்க்கும் செயலை மேற்கொள்ள எடுத்து என்னும் பாசத்தினின்றும் நீங்கினவரென்னும் உண்மையை விளக்கியவாறும்.

6 பாசத்தினின்று நீங்கினவராகவே, அதனால் உயிர்களைப் பரிபாலிக்தற்கு இறைவனது பேரருளுடைமையை யுடையவராயினர் என்னும் உண்மையை விளக்கியவாறும்.

7. பேரருளுடையவராகவே, சரியையாதிகள் ஞானமெய்தற்குச் சாதனமாயுள்ளவையென்று அவ்வளவில் விடாது அந்தஞானத்தால் நீக்கப்படும் பாசநீக்கத்திற்கும் அந் நீக்கத்தில் எய்தற்பாலதாகிய சிவப்பேற்றிற்கும் அவைகளை இன்றி அமையாவெனனும் உண்மையுணர்வந்து ஞானமெய்திய பின்னரும் சிவப்பேறெய்திய பின்னரும் எல்லையில்லாத பக்தியுடையராய் இயற்றவல்ல முடிவிலாற்ற லுடையராயினரென்னும் உண்மையை விளக்கியவாறும்

8. முடிவிலாற்றல் கைகூடப் பெறவே, அவ்வாற்றலுக்கு ஏற்றவாறு அவர்கள் வரம்பிலின்பமுடையராதல் மிக எளிமையென்னும் அவ்வுண்மையும், அவ்வுண்மையான் இவர்களே ஓய்விலாப் புகழுடையராய் உலகெலாம் போற்ற வாழ்வாரென்னும் உண்மையும் விளக்கியவாறும்

தில்லைவாழந்தணர் புராணசாரம்.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

அத்புதாய நம:

# திருநீலகண்ட நாயனார் புராணம்.

வேதியர் தில்லை மூதூர் வேட்கோவர் குலத்து வந்தார்;
மாதொரு பாகர் நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே
ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் தனிக்கூத் தாடும்
நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடும் நலத்தின் மிக்கார்.

(இ - ள்) (திருநீலகண்ட நாயனார் என்னும் நாயனார்) சிவசம்பந்திகளாகிய மூவாயிரம் பிராமணருஷிகள் வாழப்பெற்ற தில்லை என்னும் பெரியசிதம்பர க்ஷேத்திரத்தின்கண் வேட்கோவர் குலத்திலே திருவவதாரஞ்செய்தவர் எக்காலத்தும் அழிவின்றி நிலைபெற்றோங்கும் சிற்றம்பலத்தின்கண்ணே, தமது ஓர்பாகமாகிய இடப்பாகத்தில் சிவகாமியென்னும் திருநாமமுடையவராய் நின்றருளும் தேவியாரைக் கடைநோக்கமாகிய அநுக்கிரகநோக்கத்தால் நோக்கும் பார்வையுடையவராய்த் தோற்றமும் நாசமுமில்லாத அற்புதமாகிய நிலையோடுகூடி ஒப்பற்ற பஞ்சகிருத்திய நடனத்தைச் செய்தருளும் நடராஜமூர்த்தியினது சிலம்பணிந்த திருவடிகளை வாழ்த்தி வழிபடுவதாகிய நலத்தில்மிகுந்தவர் என்பதாம்.

மன்னுசிற்றம்பலத்தே, மாதொருபாகர்நோக்கி எனக்கூட்டுக.

தில்லைநகரத்தின்கண் புண்ணியபாவங்களால் விளையும் சுகதுக்கமாகிய அல்லல்கள் உண்டாகுமென்பதும், அல்லலை விளைவிக்கும்படியான இருவினைகள் தத்தம் காரியங்களாகிய செல்வ வறுமைகளைச் செய்யுமென்பதும் இருவினைகட்கு முதலாயுள்ள காமியமென்னுங் கன்மம் ஆணவமலத்துக்கேதுவான அகங்காரத்தை விளைவிக்கும் என்பதும் இல்லை என்னும் சிறப்பினையுடையதோர் ஊராகலினானும், ஆயிரம் ஆயிரம் முகமாக இறைவனை வாழ்த்தும் மூன்றுவேதங்களுமே வணங்கி வழிபடவெண்ணி மூவாயிரம் வேதியர்களாக வுருக்கொண்டு வந்தது போலும் என்றெண்ண அந்தணர்குழாங்களை பெற்றுடையதோர் ஊராகலினானும், வேதியர் தில்லைமூதூர் எனவும், பொன் வெண்பண் என்னு மூன்றுடைமையில் ஆதாரமாகிய மண்ணுடைமையாகிய குலத்தில் அவதரித்த சிறப்புடையராகலான் வேட்கோவர்குலத்துவந்தார் எனவும், என்றும் அழிவில்லாதவனும் சித்ரூபனுமுள்ள இறைவன் என்றுந் தன்னிடத்தையே இடமாகக்கொண்டு வாழப்பெற்றுள்ளதாகலின் மன்னுசிற்றம்பலத்தே எனவும், ஓர்செயலைச் செய்வதென்பதையும், செயலென்பதையும், உடையதல்லாததாகிய சிவத்தன்மையை ஓர்பாகமாகவும், எல்லாச் செயலையும் ஒருங்கேசெய்யவல்லதும், செய்கையெல்லாம் உடையதுமாகிய சத்தித்தன்மையை ஓர்பாகமாகவும், திருமேனியாகக்கொண்டுள்ள இறைவனாகிய தானொருவனே சர்வ சிருட்டியாதி அதிகாரமும் உடைய பரமபதி என்று யாவரும் எளிதில் உணரப் பஞ்சகிருத்தியநடனஞ் செய்யத் திருவுள்ளத்தெண்ணி அந்நோக்கமுணர்ந்து அவ்வெண்ணப்படி செய்விக்கச் செய்வாள் மேலேகூறிய சிவசத்தியேயாகலான் மாதொருபாகர்நோக்கி எனவும், இறைவனது நோக்கத்தையே நோக்கி அதுபோலியற்ற நிற்கும் அவருடையராகிய சிவகாமியாரது நோக்கத்தைத் துணையாகக்கொண்டு செய்யத்தொடங்கிய பஞ்சகிருத்தியநடனம் அநாதியாயுள்ள ஆன்மாக்களின் பொருட்டாகலான் ஆதியு முடிவுமில்லாத்கூத்து எனவும், அக்கூத்தால் பெத்தான்மாக்களையெல்லாம் ஆணவபந்தத்தை யொழிக்கும் மாயாமலகாரியபந்தத்தால் நிலைபடுத்திக் கன்மமலகாரிய பந்தத்தான் இருவினை

யொப்பும் மலபரிபாகமும் வரச்செய்து அது வந்தபின்னர் மலசொரூபத்தின் மறைந்து அரூபசொரூபியாய்நின்ற தன்மையினின்றும் வேறுபடுத்தி முத்தான்மாக்களாயச் சிவசொரூப தேஜோநிதிகளாய்வாழச்செய்தலின் அற்புதக்கூத்தெனவும், அக்கூத்து ஒன்றாகவேயிருக்கப் பெத்தான்மாக்களுக்கு அபரபோகமும் முத்தான்மாக்களுக்குச் சிவபோகமாகிய பரபோகமும் விளைவிக்கும் அற்புதத்தைக்காட்டலான் தனிக்கூத்தெனவும், இங்ஙனமான தனிக்கூத்தின் உண்மையை யுணராதாரும், பெருந்தமுதத்திப்பயனைக் கருதிச்செய்யும் இந்த ஆனந்தநடனத்தைத் தெரிசிக்கப்பெறுவாராயின் அவர்க்கும் வேண்டியாங்கருள்புரிவானென்று வீரக்கழல் ஒலித்தலான் நாதனார்கழல்கள் வாழ்த்தி வழிபடு நலத்தின்மிக்கார் எனவும் கூறினார்.

வேட்கோவர் குலத்துவந்தார் என்றதனால் அக்குலத்துக்குவரும் கன்மமுண்டுபார் ஆகலான் அக்கன்மந்தொலையுமாறு அக்குலத்தில் வந்தாரென்பதன்று, அக்குலத்துப் பிறந்துள்ளாரும் இனிவருவாரும் ஆகிய ஆன்மாக்களெல்லாம் உய்யுமாறு வந்தவரென்பது தோன்ற உதித்தார் பிறந்தார் என்னாது வந்தார் என்றார். சிவகாமியார் உலகினுக்கு அம்மையாராகலான் உயிர்களுக்குள்ள மலப்பிணியைப் போக்கவும், பின்னர் அவ்வான்மாக்கள் சிவசொரூப வாழ்வைப் பெறவும் செய்யத்தக்க கிருத்தியத்தில் நோக்குடையராயிருத்தல் அவரது கடமையாகலானும், அந்நோக்கின்படியே செய்யவேண்டிய செயலில் ஈடுபாடுடையவன் அப்பனாகலானும், அவ்வுண்மை தோன்ற மாதைநோக்கி என்றார். ஆன்மாக்கள் எண்ணிலவாகலினானும், அநாதியாயுள்ளனவாகலினானும், அவ்வான்மாக்களைக் குறித்தகிருத்தியமும் என்றுமிருக்குந் தன்மைத்தாகலினானும் அந்நிலை தோன்ற ஆதியுமுடிவுமில்லாதகூத்தென்றார். "கட்டப்பட்டுவீடுபேறு உன் திருவடிக்காட்சிதன்னால், கிடைப்பதாம் ஆகலான், மறையிறுயந்து கிளர்தவம், தியானம், நிட்டை, நடப்பமுடிந்து வாய்ந்த நல்லவர்க்கு அடித்துணைகாண்டல் கூடிய ஏனோர்க்கு அரிதாகும்" என்றபடி அரியதினும் அரியதாகாது எளியதினும் எளிதாய எளிதில் காணுமாறு செய்யும் நலமுடையது நடராஜனைக் கண்டு வாழ்த்தலும் வணங்கலுமாகிய வழிபாடே என்றுணர்ந்து அந்நெறியைக் கடைப்பிடித்தவரென்பது தோன்றக் கழல்கள்வாழ்த்தி வழிபடுநலத்தின் மிக்கார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான் தில்லையின்சிறப்பு இத்துணைத்தாமென்பதும், அத்தில்லையில்வாழும் இறைவனாரது நடனச்சிறப்பு இத்துணைத்தாமென்பதும், இவையனைத்திற்கும் காரணமாய்நின்ற நமதன்னையினது சிறப்பு இத்துணைத்தாமென்பதும், அன்னையாரது அருட்குறிப்பும் அக்குறிப்பின் வழியே அப்பனாரியற்றும் அருட்செயலும் இத்துணைத்தா மென்பதும், உலகம் உணர்ந்துய்யவும் வேட்கோவர்குலம் உய்யவும் வந்தவர் இந்நாயனாரென்பதும், இறைவனார்பால் இவர்கொண்ட வழிபாடு இத்துணைச் சிறப்பாம் என்பதும் கூறப்பட்ட. (௧)

பொய்கடிந் தறத்தின் வாழ்வார்; புனற்சடை முடியார்க் கன்பர்;
மெய்யடி யார்கட் கான பணிசெயும் விருப்பில் நின்றார்;
வையகம் போற்றும் செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்;
சைவமெய்த் திருவின் சார்வே பொருளெனச் சாரும் நீரார்.

(எ - து.) பொய்மையாகிய போகங்களைத்தரும் பசுதருமங்களைச் சிறிதுஞ்செய்ய மனத்தினுங்கருதாது மெய்ம்மையாகிய சிவபோகங்களைத்தரும் பதிதரும நெறிகளில் நிலைபெற்ற மனமுடையராய் வாழ்கின்றவர், கங்கையைத்தரித்துள்ள சடைமுடியுடையாருக்கு அன்பராயுள்ளவர், தம்மைப்போலும் பசுதருமத்தைக் கடிந்து மெய்யான சிவதருமத்தில் தலைப்பட்ட உண்மையடியார்களுக்கு உரித்தாயுள்ள பணியைச்செய்யும் விருப்பில் நிலைபெற்றிருப்பவர், உயர்ந்தோரால் புகழ்ந்துரைக்கப்பட்ட அறங்களையுடைய இல்லறத்தை விடாதுசெய்து வாழ்கின்றவர், மெய்த்திருவின் சார்பினையுடைய

சைவசமயச்சார்பே தம்மால் அடையத்தகும் பொருளென்று அப்பொருளைச் சார்ந்திருக்கும் தன்மையுடையவர் என்பதாம்.

புனற்சடைமுடியார்க் கன்பராகலின் பொய்கடிந்து அறத்தின்வாழும் வாழ்வையும் மெய்யடியார்கட் கானபணிசெயும் விருப்பில் நிற்கும்நிலையையும் உடையராயினர். அங்ஙனம் பொய்யைக்கடிந்த அறத்தினையும், மெய்யனுகிய இறைவனது திருமேனியே இதுவெனக்காட்டவல்ல மெய்யினையுடையராகிய அடியார்கட்கு உரியபணியையும் ஒருபொழுதன்றி எபபொழுதும் ஒழியாது செய்துவருவதற்கு இல்லறநெறி துணையாவதல்லது வேறுநெறி துணையாகாவாகலின் மனையறம்புரிந்து வாழ்வாராயினர். மனையறம்புரிந்து வாழும்நெறியைக் கடைப்பிடிக்கவே, அந்நெறி சிவச்செல்வம் நீங்காதிருக்கும் அருட்செல்வமாகிய மெய்ப்பொருளைச் சார்ந்திருக்கும் தன்மையைச்செய்யுமாகலின் அதனையே சார்ந்திருக்குந் தன்மையராயினரென்க.

புனற்சடைமுடியார்க்கு அன்பராயுள்ளார் ஊழ்வகையான் தமது குடிகெடினும், அக்குடி வாழ்வதற்குப் புரந்தரன் மால் அயன் முதலாயினருடைய வாழ்வைவிரும்பி அதற்குரிய தருமங்களைச் செய்து அவ்வாழ்வைக் கொள்வோமென்று கருதி அப்பசு தருமத்தைக் கொள்ளாது சிவதருமத்தையே கொள்வார். ஏனெனின் அவ்வாழ்வு அறியாமையைப பெருக்கி நானெனவரும் ஆணவத்தை யெழுப்பிப் பெருந்துன்பத்துக் கிடஞ்செய்யும் சிற்றின்பத்தைக்காட்டி அச்சிற்றின்பத்துக் குரிய பதார்த்தங்களை எனதெனப பற்றச்செய்து பற்றற்றான் பற்றினைப பற்றவொட்டாது அவனுக்கு வேறாக்கிச் சீவனிலையில் நிறுத்தி, எனதெனபபற்றிய பொருள்கள் தனதல்லாதனவாய்ப் பொய்ப்பட்டுப்போகத் தன்னை என்றும் பிறப்பிறபபிலாழ்த்தித் துன்புறச் செய்யுமாகலின், பொயகடிந்து என்றார். நானென ஓங்கிவரும் ஆணவத்தையடக்கி, எனதெனப் பற்றவரும் மமகாரபபதைபபை யொழித்து, இவ்விருவகைப பற்றினையும் பற்றறத்துடைத்தற்கு இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்பற்றைப் பற்றச்செய்து, இருவகைப் பற்றானுண்டாகிய மனக்கவலையை மாற்றிப், பொருளின்பங்களைக் கடலெனக்கூட்டி, அவற்றால் நுகரபபடுவனவெல்லாம் நுகர்வித்து, அங்ஙன நுகருங்காலத்து நுகரச்செய்த இறைவன்கருணையை நினைந்து நினைந்து அவன்றாளை வணங்கச்செய்து, பின்னர் பிறவாநெறியைக் கூட்டும் பேரின்பத்தைக்காட்டி, அவ் வரம்பிலின்பமுடையானாகிய இறைவனடிகூட்டி, அங்கு இறுமாந்திருக்கச்செய்வது சிவதருமமாகலின் அறத்தின்வாழ்வார் என்றார்.

நஞ்சைநிலத்தில் இடுவதாகிய பிராணதாரமெனபபடும் நெல்லைப புல்லியபயிர்களை விளைவிக்கும் ஆற்றலுடைய புஞ்சைநிலத்தில் இட்டால் அவை தோன்றும்வகை இன்றாயொழியுமாபோல், பொய்த்தேவரை யுள்ளத்தே புதைத்துவைத்து மால்கொண்டு அதனைவெளிகாட்டாது மெய்த்தேவனை யுணர்ந்தார் இவரென உணர்த்தவல்ல சிவவேடமாத்திரம் தேகத்திற்றாங்கி உண்டிப்பொருட்டாய் உலாவிவருபவரான பொய்யடியார்கட்கு ஆனபணிசெய்யின் அவற்றான்விளையும் சிவபோகம் விளையாது பாழ்பட்டுப்போமாகலின் அப பொய்யடியார்களுக்குச் செய்யாது மெய்யடியார்களை நோக்கும் நன்னோக்கத்தில் நிற்கும் நிலையுடையவராகலின், மெய்யடியார்கட்கான பணிசெயும் விருப்பில் நின்றா் என்றார். பிறப்பிறப்பிலாழ்த்தும் சிற்றின்பானுபவத்துக்கே மனைவிமக்கள் முதலாயினோர் பலர் வேண்டுமாயின் பிறவாநெறியினிறுத்தும் பேரின்பானுபவத்துக்கு அவரெல்லாம் இல்லாதொழியின் அவ்வின்பம் எங்ஙனம் முற்றுப்பெறும்; பெறாவாகலின் அது முற்றுப்பெறுமாறு செய்விக்கும் நல்லறமுடைய இல்லறம் இன்றியமையாத பேரறமாகலின், மனையறம்புரிந்துவாழ்வார் என்றார். "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" எனவும், "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" எனவும், "அறத்தாற்றின் இல்வாழ்க்கையாற்றிற் புறத்தாற்றிற், போய்ப் பெறுவதெவன்" எனவும் "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கைப், பண்பும்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்ட தேசிகேந்திராய நமஃ

# சித்தாந்தபோதரத்னகரம்.

## திருவுந்தியார்.



### கலித்தாழிசை.

அகளமா யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற.

என்பது உந்தியார் என்சொல்லிய வாறோவெனின் - யாவரானும் அறிதற்கரிய பரம் பொருள் யான் அறியவந்து யான் தானாக அருளைக் கொடுத்ததென்று சொல்லிற்று.

(இதன்பொருள்.) யாவரானும் அறிதற்கரிய ஞானசொரூபமாகிய பரசிவம், ஞானாசாரியனென இம்மண்ணுலகில் எழுந்தருளிவந்தது; (வந்த அத்திருவுருவம்) யான் சிவமேயாக அருள்செய்தது என்க.

யாரும் அரிவரிது அகளமாய் அப்பொருள் எனக்கூட்டுக.

அகளம் எனவே ஞானசொரூபம். அஃதாவது எங்குங் கலந்துநிற்கும் பெரியவுருவம். யாரும் எனவே பிரமன்முதல் நாதாந்தம்வரை யுள்ளவர். அறிவரிது எனவே சுட்டறிவால் அறியப்படாதது. அப்பொருள் எனவே பதிப்பொருளாகிய பரசிவம். சகளமாயவந்தது எனவே ஆசிரியராய்வந்த வடிவம். தானாக எனவே சீவத்தன்மைகெட்டுச் சிவத்தன்மையை யடைய. தந்தது எனவே அருளைக்கொடுத்தது. அஃதாவது அநந்நியமாயிருத்தலாகிய அத்வைதானுபவத்தைத் தந்தது.

சீவன் சிவாகாரமாதற்குச் சிவமன்றி வேறொருவர் வரின் சிவமாதல் கூடாதாகலின் அகளமா யாரும் அறிவரிதப்பொருள் சகளமாய் வந்தது என்றும், தான் சகளமாய்வந்ததற்கு அருள் காரணமானதுபோல், சீவன் சிவமாதற்கும் அருளன்றிக் கூடாதாகலின் தானாகத்தந்தது அருளென்றுங் கூறினார்.

ஞானசொரூபம் என்றதை †"ஆதிநடு வந்தமிலா அளவில்சோதி அருண்ஞானமூர்த்தியாய்" என்றதனானும், பிரமன்முதல் நாதாந்தம்வரை அறிவரிது என்றதை * "பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன் மா மன்னுசோதி மணிமார்பன் நாமன்னும் வேதம் வேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுடன் நாத நாதாந்த நடுவே தம்போதத்தால் ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலை" என்றதனானும், பெரியவுருவம் என்றதை "ஆயிரங்கமலம் ஞாயிறு ஆயிரம் முக்கண் முக கரசரணத்தோன்" எனவும், எண்ணில் பல்கோடி சேவடி முடிகள் எண்ணில் பல்கோடி திண்டோள்கள், எண்ணில் பல்கோடி திருவுருநாமம் ஏர்கொள் முக்கண் முகம் இயல்பும், எண்ணில் பல்கோடி எல்லைக்கப்பாலாய் நின்று ஐஞ்ஞூற் றந்தணர் ஏத்தும், எண்ணில் பல்கோடி குணத்தரோ் வீழி யிவர்நம்மை யாளுடையாரே" என்ற திருவிசைப்பாவானும் அறிக.

---

† சிவஞானசித்தியார் பரபக்கம். செ - ள். (2) * போற்றிப்பஃறொடை

யா - வினு எஞ்சாமைப்பொருளது. யாரும் - உம்மைமுற்று. அப்பொருள் உலகறிச் சுட்டு. உந்து ஈ - உயர்கின்ற ஈப்பறவை. வினைத்தொகை. ஈ விளி. பற - அகரவீற்றுவியங் கோள். இப்பாட்டான் இறைவனே ஆசிரியனுய்வந்து தானுகும் அருள்கொடுத்தல் கூறப் பட்டது.

திருக்களிற்றுப்படியார்.

நேரிசை வெண்பா.

) அகளமய மாய்நின்ற அம்பலத்தெங் கூத்தன்
சகளமயம் போல்உலகில் தங்கி-நிகளமாம்
ஆணவ மூல மலம்அகல ஆண்டனன்காண்
மாணவக என்னுடனுய் வந்து. (1)

(ரு) ஆகமங்கள் எங்கே அறுசமயம் தான்எங்கே
யோகங்கள் எங்கே உணர்வெங்கே-பாகத்
தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப
பெருவடிவை யார் அறிவார் பேசு. (2)

என் மாணவகனே! திருவம்பலத்தின்கண்ணே, பஞ்சகிருத்திய தாண்டவம் செய்தருளும் ஞானமயமாய்ப் பிரகாசியாநின்ற எமது நடராஜவள்ளல், இவ்வுலகின்கண் உருவமயமா யிருப்பவன்போல், என்னுடைய ஆசிரியவுருவமாய்வந்து, என்னுடனுப் பிரியாது பொருந்தியிருந்து, எனக்கு விலங்காட் அநாதியா யமைந்துள்ள மூலமலமாகிய ஆணவமலம் என்னைவிட்டு வேறுமபடி, என்னை அடிமைகொண்டனன். (1) (அகள மயனுகிய எம்மிறைவன்) தன் அருட்சத்தியானது வாமபாகத்தில் சிவகாமஎன நின் றருளும் திருவுருவமாகவும், தான் நடனஞ்செய்தருளும் திருவுருவமாகவும் கொண்டு நின்று பின்னர் எனது ஆசிரியத் திருவுருக்கொண்டுவந்து, என்னை அடிமையா ஆளாதொழிவானுயின், வேதமுதலியவற்றால் இத்தன்மைத்தென்று கூறவொண்ணு சொரூபவடிவமாயும், அருளினுல் ஆகமத்தே யறிபநின்ற தடத்தவடிவமாயும் நின்ற ளும், தத்சிவமாகிய அந்தப்பெரியதோர் வடிவத்தை யாவர் அறியவல்லவர் அவனன்றி ஆகமத்திற்கூறப்படும் பொருள்களும், அறுசமயக் கொள்கைகளும், யோகமுறைகளும், ஞானநெறிகளும் தாமே உணர்த்தவல்லனவாகுமோ நீசொல்வாயாக (2) என்பதாம்.

மாணவக அம்பலத்து அகளமயமாய் நின்ற எங்கூத்தன் உலகில் சகளமயம்போல் (என்னுடனுய்வந்து) தங்கி நிகளமாம் ஆணவமூலமலம்அகல ஆண்டனன் (1) எனவும், பாகத் தருள்வடிவும் தானுமாய் ஆண்டிலனேல் ஆகமங்களெங்கே அறுசமயந்தானெங்கே யோகங்களெங்கே உணர்வெங்கே அந்தப்பெருவடிவை யார்அறிவார்பேசு (2) எனவும் கூட்டுக.

இவ்விரண்டு பாட்டானும, உந்தியுள் கூறப்பட்ட பெருவடிவாகிய அச்சிவடிவம் இத்துணைத்தாமென்றும், அது சகளமாய் வருவதனுல் உண்டாகும் உபகாரம் இத்துணைத் தாமென்றும் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் அகளம் என்றதை அகளமயமாய்நின்ற அம்பலம் எனவும், சகளம் என்றதை கூத்தன் எனவும், யாரும் அறிவரிதப்பொருள் என்றதை பாகத்தருள் வடிவும்தானுமாகிய அந்தப்பெருவடிவை எனவும், தானுக என்றதை பேருல கிற்றங்கி என்னுடனுய்வந்து எனவும், தந்தது என்றதை நிகளமாம் ஆணவமூலமலமகல ஆண்டனன் எனவும், பதிஞானத்தால் அகன்றெழியவேண்டிய ஆணவமலம், பாசஞான பசுஞானங்களை யுணர்த்தும் ஆகமங்களானும் அறுசமயங்களானும் யோகங்களானும், உணர்வுகளானும் ஒழியா என்னும் உண்மைதோன்ற ஆகமங்களெங்கே அறுசமயந்தா னெங்கே யோகங் களெங்கே யுணர்வெங்கே எனவுங்கூறினுர்.

அம்பலக்கூத்தன் - சிவபேதங்களை யெல்லாங்கடந்து நாத நாதாந்தப் பொருளாய் சேமவொளியாய்ச் சிற்பர வியோமப்பொருளாய் விளங்கும் பரசிவசொரூப அருளுரு வென்பார் அகளமயமாயநின்ற அம்பலத்தெங்கூத்தன் சகளம் எனவும், அவ்வரிய அருளுருவத்தினின்றும்வந்த பேரருளுருவம் தான்வழிபடும் குருவடிவென்பார் உலகில் தன்னுடனுயவந்துதந்தி எனவும், நடராஜமூர்த்தியாய்வந்த திருவுருவம் சர்வான்மாக்களுக்கும் கன்மமலமும் மாயாமலமும் அகலவும், என் ஆசிரியனாய்வந்தஅப்பெருமானது திருவுருவம் கன்மம் மாயைஎன்னும் அவ்விருமலங்கட்கும் மூலமலமாயுள்ள அம்மலம் எனககலவும், அம்மூலமாகிய ஆணவம்அகன்றபின்னர் நான்தன்னருளின்வழிநிற்கவும், என்னையாண்டு கொண்டனன் என்பார் ஆணவமூலமகல ஆண்டான் எனவும், இறைவன் ஆசிரியனாய் வந்து என்னைஆண்டு எனக்கு உணர்த்துவனவற்றை யானுணர, என்னுள் தன்னருளை நிறுத்தி யானுணரும் வண்ணம்செய்து, ஒழிக்கத்தக்க மலத்தை,—பாசநீக்கத்தையும் முத்திப்பேற்றையும் கரதலாமலகம்போல் எடுத்துக்காட்டவல்ல ஆகமங்களும், பாசநீக்கமும் சிவப்பேறும் சித்தியாம்வண்ணம் தியானாதி பேதங்களையும் உபாசனாதிகிரமங்களையும் உடைய அறுசமயங்களும், தியானாதிபேதங்களானும், உபாசனாதிகிரமங்களானும் கூட வேண்டிய சிவபாவனையை வருவிக்கவல்ல ஆதாரயோக நிராதாரயோகங்களும், சிவபாவனையால் சிவமாந்தன்மையைக் கூட்டும் உணர்வாகிய ஞானமும், ஒழித்து என்னையாட் கொள்ளுந்தன்மையை உடையனவாமோ? ஆகா. எனெனின், யான் உணரச்செய்யவல்ல அருட்டன்மையும், எனக்கு உணர்த்தவல்ல ஆசிரியத்தன்மையும் ஆகமாதிகளாகிய அவை உடையனவாகா என்பார் ஆகமங்கள் எங்கே அறுசமயந்தான் எங்கே யோகங்கள் எங்கே உணர்வெங்கே எனவும், உண்ணின்று உணரச்செய்யும் அருள்வடிவும் வெளியேநின்று உணர்த்தும் குருவடிவும் என்னை உணரும் வண்ணம் செய்யும் வகையினும் உணர்த்தும் வண்ணம் செய்யும் வகையினும் ஆளாதொழியின் சத்திசிவமாய் (மாதாளும் பாகத்தனாய்) விளங்கும் அப்பெரிய வடிவத்தைத் தமதுபோதமாகிய அறிவால் எவ்வகை யான் எடுத்துப்பேச வல்லுனராவர். இதனை பாராய்ந்து சொல்வாயென்பார் அந்தப் பெருவடிவை யாரறிவார் பேசு எனவுங்கூறினர். (௪)

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெண்ணே உந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற.

எ-து உ-ர் என்சொல்லிய வாறோவெனின்-மும்மலப்பழக்கம் ஆசிரியவசனத்தாலன்றிச் சாத்திரபழக்கத்தால் நீங்காதென் றுசொல்லிற்று.

(இ - ள்.) மேற்கூறிய (ஆசிரியர்கூறும்) அந்த வொருபொருளாலே, பிரபஞ்ச விவகாரப பழக்கம் நீங்கப் பழகுவதல்லாமல், நூல்வழியில் உழலுவதனால் யாதுபயன் உண்டாம் என்க.

ஒருபொருளாலே பழக்கந்தவிரப் பழகுவதன்றி எனக்கூட்டுக. பெண்ணேஎன்றது விளி. ஈண்டுபெண்ணென்றது நெஞ்சத்தை. பொருளால் என்பது மூன்றும் வேற்றுமைக்கருவிபபொருள். இப்பொருளுக்குப் பழக்கம் தவிர அன்றி உழப்புவது என் என்றும், பழகுவதன்றி உழப்புவதென் என்றும் தனித்தனிகூட்டிமுடிக்க.

ஒருபொருள் என்றது ஆசிரியனாற்கூறப்படும் உபதேசபபொருள் சாத்திரங்களிற் கூறப்படும் பலமொழிக்கும் இடங்கொடுப்பதாகலின் அச்சொற்பொருளை. பழகுவது என்றது அவ்வுபதேசப்பொருளைச் சிரவணஞ் செய்தவாறே சிந்தித்தலை. பழக்கந்தவிர என்றது சிந்தனைசெய்தவாறே தெளிந்து மும்மலப்பழக்கத்தை விட்டொழித்தலை: உழப்புவது என்றது உபதேசப்பொருளைச் சிந்தித்துத் தெளிதலாகிய உழப்பைவிட்டு நூல்களைச்சிரவணமாத்திரஞ்செய்யும் உழப்பின்வழிநிற்றலை. என் என்றது அவ்வுழப்பு விட்டுகூடுதலாகிய பயனைக்கொடாதென்பதை.

ஆன்மாவாகிய இவன் மும்மலத்தோடும் எப்பொழுதும் உள்ளவனாகலினாலும், அம்மலகாரியங்களிலேயே பழகிவருகின்றவனாகலினாலும், இவனுக்கு அறிகருவியாயுள்ள கருவிகரணங்களும் மாயாகாரியத்தினால் ஆனவைகளாகலினாலும், மலம் நீங்கும் பழக்கம் எவ்விதத்தும் இல்லாதவனாகலினாலும், அம்மலப்பழக்கத்தைச் சொற்பழக்கம் ஒன்றினால் நீக்குந்தன்மையுடையவனுவனோ ஆகான். ஆகலான், ஆசிரியன் நின்மலப்பொருளாகிய இறைவனாகலின், அவ் வாசிரியவசனங்களைக்கொண்டு பாசநீக்கமெனப்படும் மலநீக்கமும், சிவமாந்தன்மைப் பெருவாழ்வெனப்படும் சிவானுபவமும் வர, சாஸ்திரங்களில் முயல்வதே பயன்தரும் முயற்சிவகையாம். ஆசிரியனை விட்டு நூல்களிற் பழகும்பழக்கம் பயன்தரும் முயற்சியாகாவென்றொழிக என்பதாம்.

இப்பாட்டான், தன்னறிவால் சாஸ்திரங்களை ஆராயும்பழக்கத்தைவிட்டுக் குருமொழியாற் பழகி, மலப்பழக்கத்தை ஒழிக்கவேண்டுமென்று கூறப்பட்டது. இதனால் கசிந்துருகும் அடிமைத்திறத்தை யுணர்ந்துந் திருவருள்ஞானத்தை விசேடித்தும், அடிமைத்திறத்தை உணர்த்த பெறாதபாசஞான பசுஞானங்களை இழித்துங்கூறியவாறுமாம்.

## திருக்களிற்றுப்படியார்.

௬. சாத்திரத்தை யோதினர்க்குச சற்குருவின் தன்வசன
மாத்திரத்தே வாய்த்தவளம் வந்துறமே—ஆர்த்தகடல்
தண்ணீர் குடித்தவர்க்குத் தாகம் தணிந்திடுமோ
தெண்ணீர்மையாய் இதனைச் செப்பு. (1)

௭. இன்று பசுவின் மலம் அன்றே இவ்வுலகில்
நின்ற மலம் அனைத்தும் நீக்குவதிங்—கென்றால்
உருவுடையான் அன்றே உரு அழியப் பாயும்
உரு அருள வல்லான் உரை. (2)

(எ - து.) ஞானசாரியர் உபதேசிக்கும் வசனமாத்திரத்தினால் வாய்க்கத்தக்க பிரயோசனம், ஞானசாஸ்திரங்களைத் தமது மதிநுட்பத்தால் ஓதுகின்றவர்களுக்கு வந்துறமாட்டா. ஏனெனில்,—தாகமுடையார், அலையினால் ஓசைமிக்க தண்ணியகடல் நீரைக் குடிப்பாராயின், அவர்கட்குத் தாகத்தாலுண்டாகிய விடாய் தணியப்பெறுமோ? தெளிந்த அறிவுடையவனே! இதனை நீயே சொல்லுவாயாக. (1) இவ்வுலகின்கண் அசுத்தமாகக்காணப்படும் மலவாசனைகளனைத்தையும், இப்பொழுது போக்குவது பசுவின்மலந்தா லல்லவா, இங்ஙனமிருக்குமாயின், ஆன்மாக்களுக்குள்ள தேகாதிகளுக்குக் காரணமாகிய மலவாசனைகளைப்போக்கவல்ல ஞானசொரூபத்தை அனுக்கிரகஞ் செய்ய வல்லவுன், அந்த நின்மலஞானமே திருமேனியாக வுடைய ஆசிரியனல்லவா? இதனை நீயே சொல்லுவாயாக (2) என்பதாம்.

சற்குருவின் தன்வசன மாத்திரத்தே வாய்த்தவளம், சாத்திரத்தை யோதினர்க்கு வந்துறுமேசெப்பு (1) எனவும், இவ்வுலகில், நின்றமலமனைத்தும், இன்று நீக்குவது, பசுவின் மலமன்றே என்றால், இங்கு உருவு அழியப்பாயும் உருவு அருளவல்லான் உருவுடையானன்றே உரை (2) எனவுங்கூட்டுக.

இவ்விரண்டுபாட்டானும், உந்தியுட்கூறப்பட்ட ஆசிரியவசனத்தின் சிறப்பையும், அதனால் எளிதில் அடையப்படும் பெரும் பிரயோசனத்தையும், அவ்வாசார்யவசனத்தை விட்டு சாஸ்திர ஆராய்ச்சிசெய்யும் உழப்பினால் உழப்பேயன்றி வேறுபயனின்மையும் திட்டாந்தமுகத்தால் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் ஒருபொருள் என்றதை உருவழியப்பாயும் உருவருளவல்ல உருவுடைய சற்குரு எனவும், பழக்கம் என்றதை சாத்திரத்தையோதுதல் எனவும், பழகுவது என்றதை இன்று பசுவின்மலமன்றே இவ்வுலகில் நின்றமல

மனைத்தும் தவிர்த்தல் போல், வளம்வாய்ந்த சற்குருவின் தன்வசனமாத்திரமெனவும், உழப்புவதென்றதை ஆர்த்தகடல் தண்ணீர்குடித்தவர்க்குத் தாகந்தணிந்திடுமோ (அது போல்)சற்குருவின் தன்வசனத்தைவிட்டுச் சாத்திரத்தை யோதுதல் எனவும், என் என்னும் வினைப்பொருளைக்கொண்டு இதனைச்செப்பு எனவும், உரை எனவுங்கூறினர்.

அல்லதூஉம், மலம் அநாதியே யுள்ளதாகலின் நின்றமலமெனவும், அம்மலத்தின் காரியங்கள் பலவாகலான் அனைத்தும் எனவும், ஆசிரியவடிவம் அசத்தாகிய அம்மல மனைத்தையும் போக்கும் சத்ரூபமாகலான் உந்தூருவெனவும், அம்மலவாசனைகளைப் போக்கும்வகை பசுவின்மலம்போ லெனவும், அப்பசுவின்மலமன்றி உலகிலுள்ள மலங்களைப் போக்குவது வேறொன் றின்மைபோல் ஆன்மாக்களிடத்துள்ள ஆணவாதிமலங்களைப் போக்குவது ஆசிரியவசனமன்றி வேறொன்றின்மையால் அவ்வாசிரியவுருவம் சிந்நுப உருவமெனவும், கடல்நீர் மேகசம்பத்தத்தால் உண்ணீர் ஆவதுபோல் மலம்நீங்கப்பெற்ற ஆன்மாக்கள் வாக்குமனோதீதமாகிய சிவானந்தம் அனுபவிக்கப்பெறுதல் ஆசிரியர் தமது வசனத்தோடு சாஸ்திரார்த்தங்களைக் கலந்து உபதேசிக்கும் உபதேசங்களாலாகலான் அவரது உருவம் ஆர்ந்தஉருவர் எனவும், இங்ஙனமான சச்சிதானந்தத் திருமேனி யுடையராகிய ஆசிரியரன்றி சச்சிதானந்த சாக்ஷாத்கார சிவானுபவமாகிய வளம், சாத்திரத்தை யோதினர்க்கு வாராதாகலான், சாத்திரத்தை யோதினர்க்கு வாய்த்தவளம் வந்ததுமே எனவும் வகுத்துக்கூறினரென்க.

இதனால் பழக்கந்தவிரப் பழகுவதன்றி உழப்புவது என் என்பதனை த் திட்டாந்த முகத்தானும், அனுபவமுகத்தானும் விளக்கிப் பின்னர் மாணவகனை நோக்கி, இனி நீ ஆசிரியவசனத்தினாலே மலப்பழக்கந்தவிரச் சிரவணாதிகளை நீங்காது பழகிவருவாயாக. ஆசிரியனை நம்மைப்போலும் உருவடையனே என்றெண்ணி அவனைக் கைவிட்டு நீ சாத்திரம் ஓதுவகை விட்டொழிவாயாக என்று வலியுறுத்திக்கூறப்பட்டது.

ஆகவே, சாத்திரத்தை என்றதை சற்குருவின் தனவசனத்தைக்கொண்டு பழகுவதாகிய உடன்பாட்டிற்கும், சற்குருவின் தன்வசத்தை விட்டு உழத்தலாகிய எதிர்மறைக்கும் கொள்க. எனவே, குருவசனத்தைக்கொண்டு சாத்திரத்தைப் பழகவேண்டுமென்பது உடன்பாடெனவும், குருவசனத்தைவிட்டுச் சாத்திரத்தைப் பழகுவது உழப்பேயாகலான் அது எதிர்மறை எனவும் கூறியவாறுமென்க. (உ)

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற.

எ - து உ-ர் என்சொல்லிய வாறோஎனின், ஆசிரியரைக்கொண்டு மும்மலப்பழக்கம் ஒழியப்பெற்றவர் பிறப்பிறப்பொழிவரென்றுசொல்லிற்று.

(இ - ள்.) காணும்படி அருளால்வந்ததிருவுருவத்தை ஆசிரியமூர்த்தியாகக்கொண்டு ஞானசாதனமாகிய கருமங் கைகூடப்பெற்றவர்கள், ரீரப்பற்றை யடையும்நெறியை யடையார் (அடையாராகவே) அவர்களுக்கு மீண்டும் சனனமுமில்லை, மரணமும் இல்லை என்க.

கண்டத்தைஎன்றது சிவம் குருவடிவாய் வரக்காணப்பெற்றதை. கருமம் என்றது கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை. முடித்தவர் என்றது அந்த நான்கால் சிவானுபவம் வரப்பெற்றவர். பிண்டத்தில் வாரார் என்றது பிராரத்தானுபவத்தை அனுபவித்தற் கெடுத்த தேகத்தில் அப்பிராரத்தத்தை அனுபவிக்கும் இடைக்காலத்தில் விருப்புவெறுப்புக்களை யுண்டாக்கி அவ்வழியான் பிறத்தற்கிடஞ்செய்யும் ஆகாமியவினைக்கு இடங்கொடார். பிறப்பிறப்பில்லை என்றது சுவர்க்கம் நரகம் பூமி என்னு மூவிடத்தும்

அண்டாண்ட புவனகோடிகளிலும் செல்லுதற்குரிய பூதசாரசரீரம் யாதனாசரீரம் பூத பரிணாம சரீரம் ஆகிய சரீரங்களில் மாறிமாறி இறந்துஇறந்து பிறந்துபிறந்து வருவதாகிய தொழில் இல்லையாதல்.

இதனால் மலப்பழக்கங்கள் தவிர்தற்காகக் கண்ட ஆசிரியரிடத்தில் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் இம்மூன்றின் முறைமைகளையும் நன்குணர்ந்து நிட்டைகூடுதலாகிய கருமத்தை முடித்துக்கொண்டவர் மேல் கீழ் நடு சுற்றுப்பக்கம் என்னும் எவ்விடங்களினும் போய்வருவதற்குரிய சரீரங்களில் வாரார். வந்துமரணமடைதலும், மீண்டும் சனனமெடுத்தலுமாகிய அல்லலை யடையாரென்க.

இப்பாட்டான் கருமமுடித்தல் இத்தன்மைத்தா மென்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்

அ. கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
அண்டத்தின் அப்புறத்த தென்றதே—அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும் ஆரறிவும் சென்றறியும்
எப்புறமும் கண்டவர்கள் இன்று. (1)

எ - து (அளவிடப்படாத பெரியவேதங்களுக்கும் அப்பாற்பட்ட (எட்டப்படாத) தாய, உள்ளதன்றோ சச்சிதானந்தரூபமாகிய சிவம், (அச்சிவசொரூப சாக்ஷாத்காரம் நமக்காதல் எவ்வாறென்று சொல்லுவதைவிட்டு,) தம்மால்காணப்பட்டதாகிய குருவடிவத்தைக் கொண்டு, தாம் செய்யவேண்டிய சிரவணாதிகளைச் செய்து, அச்சாதனங்களால் சொரூப சாக்ஷாத்காரத்தை முடித்துக்கொண்டவர், அண்டகோடிகளுடைய நிலைகளில், தம்மறிவைச்செலுத்தி நன்றுணரப் பெற்றவர்களால் சொல்லப்பட்ட அண்டங்களுடைய மேலிடங்களிலும், கீழிடங்களிலும், சுற்றுப பக்கங்களிலும் போய் காணத்தக்கவராகார். எனவே அவ்விடங்களில் பிறந்திறக்குந் தொழிலை யுடையவராகார் (1) என்பதாம்.

அண்டத்தின் அப்புறத்தது என்றதே கண்டத்தைக் கொண்டு கருமமுடித்தவர் யாரறிவும் சென்றறியும் என்றுகூட்டுக.

இப்பாட்டான் உந்தியுள் கூறப்பட்ட குருவடிவத்தைக் காண்டற்கெளிய உருவமென் றெண்ணாது. காண்டற்கரிய பரம்பொருளுருவமெனக் காணல்வேண்டுமென்றும், அங்ஙனங் கண்டபின்னர் அவ்வாசிரியரால் பிறவாநெறிக்கேதுவான அரிய ஞான கருமத்தை முடித்துக்கொண்டவரே, எங்கும் பிறப்பதற் கிடமில்லா தொழிவரென்றும் விதந்து கூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் கண்டத்தை என்றதை அண்டத்தின் அப்புறத்தது என்றும், கொண்டுகருமமுடித்தவரென்றதை என்றதே கொண்டு கருமமுடித்தவரே என்றும், பிண்டத்தில்வாராரென்றதை கண்டவர்களின்று என்றும், பிறப்பிறப்பில்லை என்றதை ஆர் அறிவும் சென்றறியும் அண்டத்தினப்புறமும் இப்புறமும் எப்புறமும் என்றுங்கூறினர்.

"பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார் ஆராலுங் காண்டற்கரியான், எமக்கெளிய பேராளன் தென்னன் பெருந்துறையான்" எனவும், "வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும், கால்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய, தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்டு" எனவும், "செங்கணெடுமாலும் சென்றிடந்துங் காண்பரிய" எனவும், தமது ஆசிரியர் திருவுருவத்தினது அருமையும், அவ்வரிய வுருவுடைய இறைவனது கருணையும் தோன்றுமாறு கூறிய மணிவாசகத்திறத்தையே காணவேண்டுமென்பார் கண்டதாகியகுருவடிவத்தை அண்டத்தினப்புறத்தது எனவும் அங்ஙனமான அரியபொருள் குருவடிவங்கொண்டுவந்தது "காட்டாதனவெல்லாங் காட்டிச்சிவங்காட்டித் தாட்டாமரைகாட்டித், தன்கருணைத்தேன்காட்டி, நாட்டார் நகைசெய்ய

நாமேலை வீடெய்தவேயாகலான் அக்குறிப்புணர்ந்து, குருவடிவத்தைக் காணப்பெறுதா எண்ணுவதுபோல் எண்ணும்எண்ணத்தை யொழிக்கவேண்டு மென்பார் என்றதே எனவும், அவ்வெண்ணத்தையொழித்து அக்குருவடிவத்தைக் கொண்டு சாத்திரங்களாற் காட்டாதனவெல்லாங் காணவும், அங்ஙனங்கண்ட வுணர்ச்சியால் சிவத்தைக்காணவும் சிவத்தைக் கண்டபின்னர் அந்தஞானக்கிரியைகள் தனது ஞானக்கிரியைகளோடுகலந்து அவைகளால் விரும்பப்படுவனவாகிய வேம்பெனப்படும் சிற்றின்பங்களையெல்லாம் தீங் கரும்பெனவே நுகர்வித்து, அங்ஙன நுகருங்கால் அவைகளிலுள்ள வேம்பின் திறத் தைக்காட்டி, அச்சிற்றின்பானுபவத்தை யொழித்துப பின் பேரின்பத்தேனை நாடும் நாட்டத்தைத்தரும் கருணையை நாடவும், அந்நாட்டம் மேலிடுங்காலத்து உலகத்தாராகிய நாட்டார் நகைசெய்தலைக் காணவும, அதனைக்கண்டு நாணாது மகிழ்ந்து, பின்னர் பிறவி யிற்பட்டுப பாழ்படுதலைவிட்டு, பிறவாநெறியாகிய வீடெய்துவதில் விரையவும் வேண்டு மென்பார் கோண்டுகருமமுடித்தவரே எனவும், இங்ஙனங் கூறிவந்தமுறைப்படி கண் டத்தைக்கொண்டு கருமமுடித்து எல்லாநிலங்களுக்கு மேனிலமாகிய வீட்டினைச்சேர் தவர்க்குப் பிண்டத்தில்வரும்வழி யடைப்பென்பார் கண்டவர்களின்றுஎனவும், மேனி லமாகிய வீட்டினைச்சேராதவர் சேருமிடங்கள் இததனையாமென்பார் அண்டத்தின் அப்புற மும் இப்புறமும் எப்புறமும் எனவும், அப்புறமென்றது சுத்தமாயா புவனமெனவும் எப்புறமென்றது சுத்தாசுத்த மாயாபுவனமெனவும், இப்புறமென்றது அசுத்தமாயா புவனமெனவும் அப்புவனங்களெல்லாம் ஒருமலம் இருமலம் மும்மலம் என்னும் மலங் களையுடையார் ஆங்காங்குஞ் சென்று ஆங்காங்குள்ள விடயங்களை நுகர்ந்த நிலங்களாயும் மும்மலப்பற்றொழிந்த சுத்தான்மாக்கள் அந்நிலப் பற்றுக்களை யொழிக்கவேண்டி நூல் வழியான் அறியப்படுவனவாயும் உள்ளனவாயிருத்தலென்பார் ஆம் அறியும் சேன் றறியு மெனவுங்கூறினர்.

இதனால் சொரூபமாத்திரமாகவே யிருக்கும் இறைவன் தடத்த வுருவங்கொள்ளு தல் அனுக்கிரகிக்குநிமித்தமே யாகலினானும், அங்ஙனங் கொண்டுவரினும் அவ்வுருவம் இப்பிராகிருதவுலகில் நிற்றல் கூடாதாகலினானும், அவ்வுருவத்தைக் கண்டபொழுதே கேட்டல்முதலிய மூன்றினும் தீவிரமிருத்தல் வேண்டுமெனவும், தீவிரமற்றிருப்பின் பிண்டத்தில்வந்து போதலென்னும் பெருந்துன்பமாகிய அல்லல் நீங்காதெனவும், ஆத லின் மாணவகன் கண்ட ஆசிரியவடிவத்தைக்கொண்டு அப்புறம் இப்புறம் எப்புறமென் னும் எவ்விடங்களிலும் சேராவண்ணம் ஞானநெறியாகிய சன்மார்க்கத்தில் தலைப்பட் டிருத்தல் வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது.

அப்புறத்ததென்றதே என்றதனால் வேதங்களால் வாக்குமனாதீதமென்று சொல்லப் படுமானால் அப்பரம்பொருளை நாம எவ்வாறு கேட்கக் கூடுமெனவும், கேட்டாலன்றோ சிந்திக்கலாமெனவும், சிந்திக்கவந்தாலன்றோ தெளியலாமெனவும், தெளிந்தாலன்றோ நிட்டைகூடவருமெனவும், எண்ணிச் சோர்வடையும் மந்தபரிபாகிகளது இலக்கணத்தை யும்; கருமமுடித்தவரே என்றதனால் இது சாதிக்கற்பாலது, இது சாதிக்கப்பாலதன்று என்றெண்ணுதலொழிந்து பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையவராய் குருவடி வத்தைக்கண்டு கருமத்தை முடித்துக்கொள்ளும் தீவிரதரமுடைய அதிகாரிகள் இலக் கணத்தையுங் கூறியவாறுமாம்.

இச்செய்யுளுக்கு - ஞானத்தினிலக்கணமாகவும், அதனுடைய அனுபவ இலக்கண மாகவும் உரைகூறியுள்ளார்; அவ்வுரை ஈண்டு சிறிதும்பொருந்தாதென்க. (௬

எங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙன் இருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற.

அண்டாண்ட புவனகோடிகளிலும் செல்லுதற்குரிய பூதசாரசரீரம் யாதனாசரீரம் பூத பரிணாம சரீரம் ஆகிய சரீரங்களில் மாறிமாறி இறந்துஇறந்து பிறந்துபிறந்து வருவதாகிய தொழில் இல்லையாதல்.

இதனால் மலபபழக்கங்கள் தவிர்தற்காகக் கண்ட ஆசிரியரிடத்தில் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் இம்மூன்றின் முறைமைகளையும் நன்குணர்ந்து நிட்டை கூடுதலாகிய கருமத்தை முடித்துக்கொண்டவர் மேல் கீழ் நடு சுற்றுப்பக்கம் என்னும் எவ்விடங்களினும் போய்வருதற்குரிய சரீரங்களில் வாரார். வந்துமரணமடைதலும், மீண்டும் சனனமெடுத்தலுமாகிய அல்லலை யடையாரென்க.

இப்பாட்டான் கருமமுடித்தல் இத்தன்மைத்தா மென்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்

அ. கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவரே
அண்டதின் அப்புறத்த தென்றாதே—அண்டத்தின்
அப்புறமும் இப்புறமும ஆரறிவும் சென்றறியும்
எப்புறமும கண்டவர்கள் இன்று. (1)

எ - து (அளவிடப்படாத பெரியவேதங்களுக்கும் அப்பாற்பட்ட (எட்டப்படாத) தாய, உள்ளதன்றோ சச்சிதானந்தரூபமாகிய சிவம், (அச்சிவசொரூப சாக்ஷாத்காரம் நமக்காதல் எவ்வாறென்று சொல்லுவதைவிட்டு,) தமயால்காணப்பட்டதாகிய குருவடிவத்தைக் கொண்டு, தாம் செய்யவேண்டிய சிரவணாதிகளைச் செய்து, அச்சாதனங்களால் சொரூப சாக்ஷாத்காரத்தை முடித்துக்கொண்டவர், அண்டகோடிகளுடைய நிலைகளில், தம்மறிவைச்செலுத்தி நன்றாயுணரப் பெற்றவர்களால் சொல்லப்பட்ட அண்டங்களுடைய மேலிடங்களிலும், கீழிடங்களிலும், சுற்றுப பக்கங்களிலும் போய காணத்தக்கவராகார். எனவே அவ்விடங்களில் பிறந்திறக்குந் தொழிலை யுடையவராகார் (1) என்பதாம்.

அண்டத்தின் அப்புறத்தது என்றாதே, கண்டத்தைக் கொண்டு கருமமுடித்தவர் யாரறிவும் சென்றறியும் என்றுகூட்டுக.

இப்பாட்டான் உந்தியுள்கூறப்பட்ட குருவடிவத்தைக் காண்டற்கெளிய உருவமென் றெண்ணாது. காண்டற்கரிய பரம்பொருளுருவமெனக் காணல்வேண்டுமென்றும், அங்ஙனங் கண்டபின்னர் அவ்வாசிரியரால் பிறவாநெறிக்கேதுவான அரிய ஞான கருமத்தை முடித்துக்கொண்டவரே, எங்கும் பிறப்பதற் கிடமில்லா தொழிவரென்றும விதந்து கூறப்பட்டது.

எங்ஙனமெனின்,—இவ்வாசிரியர் கண்டத்தை என்றதை அண்டத்தின் அப்புறத்ததென்றும், கொண்டுகருமமுடித்தவரென்றதை என்றாதே கொண்டு கருமமுடித்தவரே என்றும், பிண்டத்திலேவாராரென்றதை கண்டவர்களின்று என்றும், பிறப்பிறப்பில்லை என்றதை ஆர் அறிவும் சென்றறியும் அண்டத்தினப்புறமும் இப்புறமும் எப்புறமும் என்றுங்கூறினர்.

"பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார் ஆராலுங் காண்டற்கரியான், எமக்கெளிய பேராளன் தென்னன் பெருந்துறையான்" எனவும், "வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும், கால்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய, தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்டு" எனவும், "செங்கணெடுமாலும் சென்றிடந்துங் காண்பரிய" எனவும், தமது ஆசிரியர் திருவருவத்தினது அருமையும், அவ்வரிய வுருவுடைய இறைவனது கருணையும் தோன்றுமாறு கூறிய மணிவாசகத்திறத்தையே நன்குணரவேண்டுமென்பவர் கண்டதாகியகுருவடிவத்தை அண்டத்தினப்புறத்தது எனவும், அங்ஙனமான அரியபொருள் குருவடிவங்கொண்டுவந்தது "காட்டாதனவெல்லாங் காட்டிச்சிவங்காட்டித் தாட்டாமரைகாட்டித், தன்கருணைத்தேன்காட்டி, நாட்டார் நகைசெய்ய

நாமேலை வீடெய்தலேயாகலான் அக்குறிப்புணர்ந்து, குருவடிவத்தைக் காணப்பெறாதார் எண்ணுவதுபோல் எண்ணும்எண்ணத்தை யொழிக்கவேண்டு மென்பார் என்றதே எனவும், அவ்வெண்ணத்தையொழித்து அக்குருவடிவத்தைக் கொண்டு சாத்திரங்களாற் காட்டாதனவெல்லாங் காணவும், அங்ஙனங்கண்ட வுணர்ச்சியால் சிவத்தைக்காணவும், சிவத்தைக் கண்டபின்னர் அந்தஞானக்கிரியைகள் தனது ஞானக்கிரியைகளோடுகலந்து அவைகளால் விரும்பப்படுவனவாகிய வேம்பெனப்படும் சிற்றின்பங்களையெல்லாம் தீங்கரும்பெனவே நுகர்வித்து, அங்ஙன நுகருங்கால் அவைகளிலுள்ள வேம்பின் திறத்தைக்காட்டி, அச்சிற்றின்பானுபவத்தை யொழித்துப் பின் பேரின்பத்தேனை நாடும் நாட்டத்தைத்தரும் கருணையை நாடவும், அந்நாட்டம் மேலிடுங்காலத்து உலகத்தாராகிய நாட்டார் நகைசெய்தலைக் காணவும், அதனைக்கண்டு நாணாது மகிழ்ந்து, பின்னர் பிறவியிற்பட்டுப் பாழ்படுதலைவிட்டு, பிறவாநெறியாகிய வீடெய்துவதில் விரையவும் வேண்டுமென்பார் கொண்டுகருமமுடித்தவரோ எனவும், இங்ஙனங் கூறிவந்தமுறைப்படி கண்டத்தைக்கொண்டுகருமமுடித்து எல்லாநிலங்களுக்கு மேனிலமாகிய வீட்டினைச்சேர்ந்தவர்க்குப் பிண்டத்தில்வரும்வழி யடைப்புமென்பார் கண்டவர்களின்றுஎனவும்,மேனிலமாகிய வீட்டினைச்சேராதவர் சேருமிடங்கள் இத்தனையாமென்பார் அண்டத்தின் அப்புறமும் இப்புறமும் எப்புறமும் எனவும், அப்புறமென்றது சுத்தமாயா புவனமெனவும், எப்புறமென்றது சுத்தாசுத்த மாயாபுவனமெனவும், இப்புறமென்றது அசுத்தமாயா புவனமெனவும் அப்புவனங்களெல்லாம் ஒருமலம் இருமலம் மும்மலம் என்னும் மலங்களையுடையார் ஆங்காங்குஞ் சென்று ஆங்காங்குள்ள விடயங்களை நுகர்ந்த நிலங்களாயும், மும்மலப்பற்றொழிந்த சுத்தான்மாக்கள் அந்நிலப்பற்றுக்களை யொழிக்கவேண்டி நூல்வழியான் அறியப்படுவனவாயும் உள்ளனவாயிருத்தலென்பார் ஆர் அறிவும் ரென்றறியு மெனவுங்கூறினர்.

இதனால் சொரூபமாத்திரமாகவே யிருக்கும் இறைவன் தடத்த வுருவங்கொள்ளுதல் அனுக்கிரகிக்குநிமித்தமே யாகலினானும், அங்ஙனங் கொண்டுவரினும் அவ்வுருவம் இப்பிரகிருதிவுலகில் நிற்றல் கூடாதாகலினானும், அவ்வுருவத்தைக் கண்டபொழுதே கேட்டல்முதலிய மூன்றினும் தீவிரமிருத்தல் வேண்டுமெனவும், தீவிரமற்றிருப்பின் பிண்டத்தில்வந்து போதலென்னும் பெருந்துன்பமாகிய அல்லல் நீங்காதெனவும், ஆகலின் மாணவகன் கண்ட ஆசிரியவடிவத்தைக்கொண்டு அப்புறம் இப்புறம் எப்புறமென்னும் எவ்விடங்களிலும் சேராவண்ணம் ஞானநெறியாகிய சன்மார்க்கத்தில் தலைப்பட்டிருத்தல் வேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது.

அப்புறத்ததென்றதே என்றதனால் வேதங்களால் வாக்குமனாதீதமென்று சொல்லப்படுமானால் அப்பரம்பொருளை நாம் எவ்வாறு கேட்கக் கூடுமெனவும், கேட்டாலன்றோ சிந்திக்கலாமெனவும், சிந்திக்கவந்தாலன்றோ தெளியலாமெனவும், தெளிந்தாலன்றோ நிட்டைகூடவருமெனவும், எண்ணிச் சோர்வடையும் மந்தபரிபாகிகளது இலக்கணத்தையும்; கருமமுடித்தவரே என்றதனால் ஓது சாதிக்கற்பாலது, இது சாதிக்கப்பாலதன்று என்றெண்ணுதலொழிந்து பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையவராய் குருவடிவத்தைக்கண்டு கருமத்தை முடித்துக்கொள்ளும் தீவிரதரமுடைய அதிகாரிகள் இலக்கணத்தையுங் கூறியவாறுமாம்.

இச்செய்யுளுக்கு - ஞானத்தினிலக்கணமாகவும், அதனுடைய அனுபவ இலக்கணமாகவும் உரைகூறியுள்ளார்; அவ்வுரை கண்டு சிறிதும்பொருந்தாதென்க. (ரு)

எங்ஙன் இருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙன் இருந்ததென் றுந்தீபற
அறியும் அறிவதன் றுந்தீபற.

ழியுமாயினும் அது, நந்தம் மலங்களற மாற்றுவிக்கும் என்றார். அது எதுபோலெனின் பார்க்கு, ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர், அந்நீர்மை மாற்றி, அவ்வாற்றால் மறித்தாற் போலென்றார். எனவே தன்னிடத்தே வந்து கலந்தநீரைத் தன்மயமாக்கலென்றார் எனவே தன்னிடத்தே வந்து கலந்தநீரைத், தன்மயமாகக் கொண்டதேயன்றி, கடலானது மீண்டும் முன் அந்நீர் வந்த ஆற்றின்கண்ணே வந்து மோதினும், கடனீர்மயமாகவே யிருக்குமன்றி முன்னுள்ள ஆற்றுநீர்மயத்தை யெய்தாமைபோலென்க.

அதுவேயுமன்றி முன் சகலத்தில் நிட்டையின் கண் நீர் போலப்போல் நீங்கியிருப்பினும், உடல் நீங்குங்காலும் புலனறிவுநீங்கா ஆகிய அப்புலன்கள் நிட்டைவழி கூடிநிற்கும் போதத்தை ஒருகால் சிறிதே பேதப்படுத்தி, ஐம்புலவழியிற் கூட்டி, நிட்டையை மாற்றி, சத்தாதிவிடயங்களில் அலைக்கத் தலைப்படும் அஞ்ஞானம் தலைப்படுங்காலத்து அவ்விடயங்களால் ஏறும் கன்மமலங்களைபெல்லாம் நீக்கி, முன்போல் இறைவன் நிட்டையிற்கூட்டுவன். எங்ஙனமெனின் நாதனுகிவந்து ஆண்டு, அநேகனுமாகிவந்து கூட்டுவன். எனவே போதவழியேகூடி, புலன்களைச்சேர்ந்த ஆன்மாவாகிய நாமும், நம்மால் அனுபவிக்கப்படுவனவாகிய பலவிடயங்களும், இறைவனுக்கு அடிமையாயும், உடைமையாயும் இருப்பனவென்று முன்னே கேட்டும் சிந்தித்தும் தெளிந்திருக்கின்றோம். ஆதலான் நாம் இவ்வழிவந்தும், இவ்வழியிலநமமைச் சேர்ந்துவந்த போதமுதலியவைகளும், நாமும், போதமுதலியனவும், கூடிவந்த விடயங்களும் அவனேயாகியிருக்கின்றான். எப்படியெனில் போதமுதலியவற்றில் வேறறக் கலந்து அநேகனுகி அசைப்பித்தும், அசைப்பித்தவழிப் பட்டுக்கூடிய அவ்விடயங்களிலெல்லாம், தனித்தனிகலந்துநின்று அவ்வப்பயன்களை அனுபவிக்கச்செய்தது, அப்பயன்களிலுள்ள இன்பவேற்றுமைகளை நாம் அறிந்து அனுபவிப்பதற்கு நம்மோடு ஏகனுகியும் நிற்கின்றான் என்பதை அருளாலுணர்த்தி, நாம் போதத்தோடு புலன்களுடன்சேர்ந்து விடயானுபவங்களில் தலைப்பட்டதாகிய பாவும், அவனுடைய பணியே என்று தெளிவுபெறச் செய்து, பழையபடி நிட்டையிற்கூட்டி, விடயங்களால் ஆம் ஆகாமியமுதலிய காமியாதிமலங்களை யொழித்து ஆண்டருளவர் ஒழித்து ஆளாது அவ்வழிப்போய உழலும்படிச் செய்யான் எதுபோலெனின் ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை மாற்றி அவ்வாற்றால் மறித்தாற்போல் எனக் கூறுவதாயினர்.

அஃதாவது, ஆற்றுநீரானது ஆற்றின்வழிச்சென்று அலையையுடையகடலில் ஒன்றாய்க்கலந்து தன் தன்மைகெட்டிருந்தால் அது மீண்டும் அந்த ஆற்றிலே நெடுந்தூரம் சென்று எதிர்த்தாலும், உப்புநீர்மயமாயிருந்து, அதாவது கடனீரைக்கலந்ததனாலுண்டாகிய உப்புமயமாகவே யிருக்குமென்க. (கூ)

௯. நஞ்செயல் அற்றிந்த நாம்அற்ற பின்நாதன்
தன்செயல் தானேஎன் றுந்தீபற
தன்னையே தந்தான் என் றுந்தீபற

(எ - து.) உ - ர். என்சொல்லியவாறோவெனின்,—யானெனன்பதற்குச் சிவமேயாய்ச் சிவானந்தமுற்றவர்க்குச் சிவன் தன்னை அவர்க்குத்தந்து, அவர்செயலைத் தன்செயலாகக்கொள்ளுமுறைமை இதுவாமென்று சொல்லிற்று.

(இ - ள்.) செயல் நமது என்பதும் அற்று, அகங்காரத்துக் கிடஞ்செய்யும் நான் என்பதும் அற்று(ப் போனபின்னர்)ச்செயலெல்லாம் சிவனெனும் நாதனாகிய தனது செயலே யாகவும், காரணமும் தனதேயாகவும், அவனுக்கு அருளுடையதன்னையே கொடுத்தனன் என்க.

நஞ்செயல்என்பது - செயல் நமது எனனும் மமகாரம், நாம் என்பது - செயலைச் செய்கின்றவன் நாம்என்னும் அகங்காரம். நாதன்தன்செயல்தானே என்பது - என

தெனக்கருதும் அச்செயலெல்லாம் சிவனதுசெயலே என்கை. தன்னையேதந்தான் என்பது - அகங்கார மமகாரங்களைத் தன்பால் கொடுத்தவனுக்கு இறைவன் சிவமாகிய தன்னைக்கொடுத்தல். தன்னையே என்பதில் ஏகாரம் தேற்றம். அகங்காரமமகாரம் அற்றவர்களுக்குக் கொடுக்கும்பொருள் தானன்றி வேறில்லையென்பதும், அக்தேபோல் அவர்களால் விரும்பப்படும் பொருளும் தானேயன்றி வேறில்லையென்பதுமாம். எனவே நிட்டையினால் சிவசொரூபமாகிய ஞானமேயாய்நிற்கப்பெற்றவர் தன்னை நானென்றறிந்து அகங்காரத் துள்ளாகாது சிவனுக்குள்ளாவர். செயலை என்னுடையதெனக்கருதி மமகாரத்துக்குள்ளாகாது அருளுக்குள்ளாவர். அகங்காரத்தைவிட்டுத் தன்னுள்ளும் மமகாரத்தைவிட்டு அருளுள்ளும் ஆன தவமுடையார்க்குக் கொடுக்கும்பொருள் தானன்றி வேறுபொரு ளில்லையாகலான் தன்னையேதந்து தானேயாய், தவமென்பதையுங் காட்டாது அவர்செயலென்பதையும் காட்டாது தன்னையும் தன்செயலையுமே காட்டுவான், அவரும் சும்மாயிருப்பர். அவர்செயலும் சும்மாஇருக்கும். இதனால் நிட்டைகூடினார் சும்மாயிருக்கும் செயல் இத்தன்மைத்தாமென்று கூறியவாறாம்.

இதனால், விடயானந்தானுபவச் செயலுக்கு நம்செயலென்னும் மமகாரமும், நாம் என்னும் அகங்காரமும் முனைத்துநிற்பதுபோல், சிவானந்தானுபவச்செயலுக்கு அவ்வகங்கார மமகாரங்களையடக்கும் அருள் முனைத்துநிற்குமெனவும், அகங்கார மமகாரங்கள் முனைத்துச் சீவனைத்தந்ததுபோல் அருள்முனைத்து சிவனைத்தருமெனவும், சிவனைத் தரவே சீவன் சிவமயமாயும், சீவச்செயல் அருண்மயமாயும், நிற்கப்பெறுமெனவும் உணர்த்தியதாமென்க.

இப்பாட்டான் அகங்காரமமகாரங்கள் சீவனைமுனைத்துநிற்கச்செய்து, அச்சீவனை விடயானந்தத்தை இடைவிடாது அனுபவிக்கச்செய்ததுபோல், அருள் சிவனைமுனைத்து நிற்கச்செய்து, அச்சீவனை சிவானந்தத்தையிடைவிடாது அனுபவிக்கச் செய்யுமென்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

கஉ. பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் கராக்கொண்ட—பாலன்
மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நம்தம்
கரணம்போல் அல்லாமை காண். (க)

கங. தூங்கினரைத் தூய சயனத்தே விட்டதற்பின்
தாங்களே சட்ட உறங்குவார்கள்—ஆங்கதுபோல்
ஐயன்அருட்கடைக்கண் ஆண்டதற்பின் அப்பொருளாய்ப்
பையவினையும் எனப் பார். (உ)

(எ - து.) திருஞான சம்பந்த மூர்த்திகள் பாலைநிலம் நெய்தநில மாகும்படிப் பாடியதும், திருநாவுக் கரசுகள் பாம்பின்விடம் நீங்கப் பாடியதும், சுந்தரமூர்த்திகள் நெடுங் காலத்துக்குமுன் முதலையினால் உட்கொள்ளப்பட்ட பாலனது மரணத்தைக் காலனையேவி நீங்கச் செய்ததுமாகிய செயலுடைய அவர்களுக்கு, நமதுகரணம்போல் அல்லாமையாகிய தன்மையைக் காண்பாயாக. (1) இறைவனது கடைநோக்கமாகிய அருள்நோக்கம் ஆளப்பெற்றால், அதன்பின்னர் அவர் கருவிகரணச் சேட்டையற்று தன்னையாண்ட இறைவனேயாய், அவ்விறைவனிடத் துண்டாகும் அருளும் சிறிதுசிறிதாய்த் தோன்றிப் பின் பெரிதாக அவ்வருட் செயலுக்கும் உரியராவர். எதுபோலெனின், சுழுத்தியவத்தையில் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களுடைய செயலற்று உறக்கத்துக்குள்ளாயினாரை அவ்வுறக்கத்துக்குரிய மேன்மையான சயனத்திற்கொண்டுபோய்விடின் பின்

அவர்களே மெல்லமெல்லச் சிறிதுசிறிதாய்ப் பேருறக்கத்துக் குள்ளாகின்றனர். இது போல் அதுவென்று எண்ணிப் பார்ப்பாயாக (2) என்பதாம்.

இவ்விரண்டு பாட்டானும் மேலே உந்தியுட்கூறப்பட்ட நம்செயல் நாதன் தன் செயல் ஆவதன் சிறப்பும், தன்செயலான பின்னர் அவர்க்கு நாதன் தன்னைத் தருதலும் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின், இவ்வாசிரியர் நஞ்செயலற்றிந்த நானற்றபின்னுதன் தன்செயல் தானே என்றதை மற்றவர்க்கு நந்தம்கரணம்போலல்லாமைகாண் என்றதிருப்பாசுரத் தானும், தன்னையேதந்தான் என்றதை ஐயனருட்கடைகண் ஆண்டதற்பின் அப்பொரு ளாய்ப் பையவிளையுமெனப் பார் என்ற திருப்பாசுரத்தானும் அறியக்கூறினர்.

இவ்வுந்தியாரற் கூறப்பட்ட பொருளுக்குச் சைவாசாரியர்களன்றிப் பசுத்தன்மை யும், பாசச்செயலு முடையராய்ப் பின்னர், அவ்விருதன்மையும் நீங்கப்பெற்ற சிவானு பூதிமான்களிடத்தும் ஏதேனும் ஓர்காலவிசேடத்தில் பசுபாசத்தன்மைகள் அணுகவரும் ஆகலினானும், அவை அணுகவரின், நஞ்செயல் என்பதும் நான்என்பதும் முனைத்து நாதன் தன்செயலும் நாதனும் தோன்றுவாகலான், அவர்களில் யாரையேனும் எண் டெடுத்தோதாது சிவத்தன்மையும் சிவச்செயலுமே யுடைய சைவசாரியர்களுடைய செயல்களே எண்டெடுத் தோதினரென் ஏனெனின், அவ்வாசிரியர்கள் பசுத்தன்மை யடைந்து பின் பதித்தன்மையடைந்தவர்களன்று. அவர்கள் எப்பொழுதும் சிவஸ்வரூபி களே; அவரது காணுதிகளும் அப்படியே. அங்ஙனமாயினும், அவர்கள் நாடகமாய்க் கொண்ட கோலத்துக்கேற்ப, அவர்கள் சிவமாயினர், அவர்கள் கரணம் சிவகரணமாயிற்று எனச் சொல்லவந்ததென்னும் அவ்வுண்மைதோன்ற எண்டு ஆசிரியர் "மற்றவர்க்கு நந்தம் கரணம்போ லல்லாமைகாண்" என்றார். எனவே இது பாலைநிலமென்றும், இப் பிள்ளையைக் கடித்தது பாம்பென்றும், முதலையுண்டபாலனைக் கொண்டுபோனது இய மன் என்றும் அறிந்தகாலத்தும், அதையதை மாற்றியகாலத்தும், பொறிபுலன் கரணமுத லியவற்றோடும் கூடிச்செய்தனரேயன்றி அவைநீங்கிச் செய்தாரில்லை; அவர்கள் பசுத் தன்மயுடையராயும், அவர்களுடைய காணுதிகள் பாசத்தன்மை யுடையனவாயும் இருப்பின் அவையெல்லாம் மாறுதலையடையா. அவர்கள் நானென்பதை யறியார். சிவனை முதலென்றறிவார். எனதென்பதை யறியார். அருளென்பதை யறிவார். எனவே அவர்கள் நான் என்பது சிவத்தை. எனதென்பது அருளை. ஆகவே சிவன் முதலாய் நின்று அருள்செய்யத் தொடங்கின் எது எவ்வண்ணம் ஆகவேண்டுமோ அது அவ்வண் ணமே ஆகுமன்றோ! இவ்வுண்மை உய்த்துணரற்பாற்று. (௬)

எ. உள்ளம் உருகி உடன் ஆவர் அல்லது
தெள்ள அரியர் என் றுந்தீபற
சிற்பரச் செல்வர் என் றுந்தீபற.

(எ - து.) உ - ர். என்சொல் லியவாறோவெனின்,—ஞானசொரூபாகாரமாகிய சிவ னைப்பெற்ற செல்வர்கள் செயலைச்சொல்லிற்று.

(இ - ள்.) ஞானசொரூபியாகிய சிவாகாரமாகவே நிற்கப்பெற்ற சிவஞானச்செல் வர்கள் (இறைவன் தமக்குச்செய்த உபகாரங்களைக் கருதுந்தோறும்) உள்ளமுருகி அவ் வுருகும்வழியானே இறைவனுடனாவர். அப்படியல்லாமல் சிவமாயினேமென்று சொல லத் தெரியார் என்க.

உருகுதல் என்பது இறைவன் நமதுசெயலைக் கெடுக்காது அச்செயலையே தன் செயலாகக் கொண்டதினையும், நம்மைக் கெடுக்காது நம்மையே தானாகக்கொண்டதினை யும் எண்ணுந்தோறும் அன்புபெருகுதல். உடனுவர் என்பது முன் இவன் செயலிடத் தும் இவனிடத்தும் இறைவன் வேறாகாது உடனாய் நின்றமைபோல் இப்போது தன்

செயலும் தானும அவனது செயலும் அவனுமானபோது தான் வேறாய் செயலையும் தன்னையும் வேறாகருதாது உடனாய்நிற்பர். தெள்ளவறியர் என்பது நான் சிவமாயினேன் எனதுகரணம் சிவகரணமாயிற்று என்றறிந்து சொல்லதமறியாதிருப்பர். சிற்பரச்செல்வர் என்பது நிட்டையின்கண் காணப்பட்ட மேலான சித்ரூபமாகிய ஞானசொரூபமாகவே யிருக்கப்பெற்ற செல்வவான்கள். முதற்செய்யுள்முதல் ஆறுஞ்செய்யுள்வரையில் முறையே இரண்டுசெய்யுளால், மாணாக்கனுக்கு ஆசிரியன் வருவதும், வந்த ஆசிரியன்பால் கேட்டலாதிகளை மாணவகன் தொடங்கவேண்டுமென்பதுங் கூறி, மூன்றாவது முதல் கேட்டலாதிகளால் வருமபயனைத்தொகுத்துக்கூறி, இச்செய்யுளால் சிவனுரு அன்பென்பதையும், அதனை ஆன்மா அடையும்வகையும் கூறியவாறும்.

## திருக்களிற்றுப்படியார்.

கஅ. உள்ள முதலனைத்தும் ஒன்ற உருகவரில்
உள்ளம் உருகவந் துன்னுடனும்—தெள்ளி
உணருமவர் தாங்கள் உளராக என்றும்
புணர்வா நில்லாப் பொருள். (க)

(எ - து.) மாணவகனே! கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த ஞானத்தினால், உருகும் வகையறிந்து அவ்வழியான் இறைவனுடனாந் தன்மையை யறியாது ஞானத்தினால் இறைவனுண்மையை நீ அறியத் தொடங்குவையாயின், உன்னை என்றும் உணரும்வகையிற்றானே நிறுத்தி, நீ அவனோடுகலந்து உடனாய் நிற்கும்வகைக்கு இடனில்லாமல் தோன்றாதொழிவன். அங்ஙனமன்றி தான்றாது நிற்கும்பொருளாகிய இறைவனை ஞானத்தினால் உணருந் தன்மையைவிட்டு உள்ளமுதலாகச் சொல்லப்பட்ட எல்லாத்தத்துவங்களும் ஒருதன்மையாய்க் கலந் துருகுந்தன்மையைப் பெறுவையாயின் அவ்விறைவன் எல்லாத் தத்துவங்களுக்கும் முதலாயுள்ள உனதுஉள்ளமானது அத்தத்துவங்களின் வழி செல்லாது தன்பாலே உருகும்வகையாக அவ்வுள்ளத் துள்ளானாய் வந்து உன்னுடனாய் நின்றருளுவன் என்பதாம்.

தெள்ளி உணருமவர் தாங்கள் உளராக என்றும்,புணர்வா நில்லாப்பொருள், உள்ள முதலனைத்தும் ஒன்ற உருகவரின் உள்ளம் உருகவந்து உன்னுடனும் எனக் கூட்டுக.

இப்பாட்டான் மேலே உந்தியுட்கூறப்பட்ட நஞ்செயலற்று நானுமற்று நாதனாகு முறையும், நாதன் இவர்கள் செயலைத் தன்செயலாகக்கொள்ளும் விதமும் கூறப்பட்டது.
எங்ஙனமெனின், ஆசிரியர் உள்ளமுருகி யுறைவர் என்றதை உள்ளமுதலனைத்தும் ஒன்ற உருகவரின் உள்ளம் உருகவந்து உன்னுடனும் என்றும், அல்லது தெள்ளவறியர் என்றதை தெள்ளி உணருமவர் தாங்கள் உளராக என்றும் புணர்வா நில்லாப்பொருள் என்றுங்கூறினார்.

சிரவணத்தால் திரிபதார்த்த வுணர்ச்சியும்,மனனத்தால் பாசத்தினின்றும் வேறுபடுதலும், நிதித்தியாசனத்தால் வேறுபட்ட ஆன்மாவாகிய தன்சொரூபத்தைக் காண்டலும், சமாதியால் சிவசொரூபமாகிய ஞானத்தைக் காண்டலும், ஞானசொரூபத்தைக் கண்டு அச்சொரூபியாகி இறைவனால் ஆளப்பட்டுப் பின்னர் இறைவனே தன்னைக்கொடுக்க அவனைப் பெற்ற சிவஞானச் செல்வர்கள் அவனைப்பெற்ற அவ்வளவிலேயே அருள் வசத்தராய் அவசமுற்று உள்ளமுருகப் பெறுதலும், உருகப்பெற்ற அவர் ஏனைய தத்துவங்களும் அவலமாய்ப் போகாவண்ணம் அவ்வருளோடு உள்ளமுதலனைத்தும் பொருந்தி உருகும்படிசெயல்வதும், அவைகளும் உருகவருமாயின் உள்ளமுதலனைத்தும் ஒன்ற வுருக வந்ததனை இறைவன் உணர்ந்து அவனும் கருணைநிறைந்தஉள்ளத்தனாய் அவருள்ளத்துள்ளே கலந்து அவரேயாய் விடுவன். அஃதாவது, வேறாகாது அவருடனாய் நிற்பன் என்பதாம் அவ்வழியைவிட்டுத் தமக்குண்டாகிய தெளிந்த ஞானவுணர்ச்சியால்

அவர் தானாக எண்ணுவாராயின் அப்பரம்பொருள் இவர் தானாக எண்ணமாட்டான் ஏனெனில், என்றும் இவரது உணர்ச்சிஉணர்விக்க உணரும் உணர்ச்சியேயன்றித் தானாக வுணரும் உணர்ச்சியன்று. ஆகவே தானாகவுணரும் உணர்ச்சியற்ற இவரது உணர்வு உணர்விக்கும் உணர்ச்சியை எங்ஙனம் அறியக்கூடும். அவ்வுணர்ச்சிதான் இவ்வுணர்ச்சியில் எப்படி அடங்கும்? எனவே, அது பேருணர்வு; இது சிற்றுணர்வு. சிற்றுணர்வு பேருணர்விலடங்குமேயன்றி பேருணர்வு சிற்றுணர்வி லடங்குமோ? அடங்கா! என்பதும் அதுவுமன்றி அப்பொருளுக்கு ஓரியற்கையுண்டு. அஃதாவது, உணரும் உணர்வுக்குத் தன்னையுணர்த்தி அவ்வுணர்வுக்கு எடங்குதலும், உருகும் உணர்வல்லாத உணர்வுக்குத் தன்னையுணர்த்துவதும், அவ்வுணர்வுக்குள் அடங்குவதுமின்றி வேறாக இருத்தலுமாம் என்பதும், உணர்விக்கும் உணர்வுக்கு உணரும் உணர்வு வேறாய்நிற்றலின் இவ்வுணர்வு அவ்வுணர்வை என்றும் அறியா. உணர்விக்கும் உணர்வும் உணரும் உணர்விற்குத் தன்னை என்றும் உணர்விக்கா என்பதும் அபரம்பொருளின் உண்மை.

இச்செய்யுளால் உள்ளமே யன்றி ஏனைய தத்துவங்களெல்லாமும் உருகப்பெற்றால் இறைவனும் உருகிய உள்ளமுடையனாய் வந்து நம்மைப் பிரியாது உடனாயிருப்பனென்று விளக்கியவாறாம்.

உள்ளமுதலிய தத்துவங்களெல்லாமும் அந்த ஞானநிலையிலேயே உருகுந் தன்மையைப் பெறுமானால், அந்த ஞானசொரூபியாகிய இறைவனும், உள்ளமுருகவந்து உன்னுடனும் என்று அவனிவனுடன் ஆதற்குரிய ஓர் எளிமையைக்கூறினார். அங்ஙனங் கூறினாரேனும், அஞ்ஞானநிலையில் நிற்கும் உள்ளமுதலிய தத்துவங்களெல்லாம் புறம்பே காணப்படும் நாமரூபங்களாகிய பதார்த்தங்களில் உழன் றுழன்றும், அஃதேபோல் அகத்தின்கண்ணும் அந்த நாமரூப பதார்த்தங்களை யெண்ணியெண்ணி மறந்துமறந்தும், அவ்வப் பதார்த்தங்களிலுள்ள பற்றினால், தானும் அவ்வப பொருள்களும் வேறாயிராமல் ஒன்றாய்க் கலந்து தான் தோன்றாமல் அவைகள் தோன்றுதலும், அதன்பின்னர் தானும் அவைகளுந் தோன்றாமலும போதலாகிய அநுபவம் வுண்மையான், அவ்வனுபவப பழக்கமுடைய தத்துவங்களுக்கு இந்த ஞானநிலையின்கண்ணும், அப்படியே பழகும் வண்ணஞ்செய்து அந்தஞானநிலைகளில் பற்றுதலாகிய ஆசையுண்டாக்கலும் ஒருவராலும் ஒருசாதனங்களாலும் போகுதற்கரிய நானென்னும் அகங்காரத்தை யழிக்கும் வன்மையும், சிவனிடத்து என்றும்வராத அன்பினை வருவிக்கும ஆற்றலும் உடையன நல்லசிவதன்மமும் நல்லசிவயோகமும் நல்லசிவஞானமும் ஆகலின், அம்மூன்றையுங் கொண்டு அகங்காரத்தை யழித்தலும், அன்பினைவருவித்து யாரேனுங்காண அரன் தலைப்படுமாறு செய்தலும், சிற்பரச் செல்வர் செய்யும் இன்றியமையாச் செயலாகலின் அவற்றை. இனிவரும் ஏழுசெய்புளானுங்கூறுகின்றார்.

௩௫. நல்லசிவ தன்மத்தால் நல்லசிவ யோகத்தால்
நல்லசிவ ஞானததால் நானழிய—வல்லதனால்
ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்
ஆரேனும் காணா அரன். (உ)

(எ - து.) சரியை கிரியை எனபபடும நல்லசிவதன்மத்தினாலாதல், நல்ல சிவயோகத்தினாலாதல், நல்ல சிவஞானத்தினாலாதல், நானென்னும் அகங்காரம் கெடவல்லதாகலான் யாவராயினும் அந்த மூன்றிலொன்றினால் அகங்காரத்தையழித்து இறைவனிடத்து அன்புசெய்ய வல்லராயின் அன்பின்செய்கைநிகழும். அவ்விடத்து எத்தகைய ஞானமுடையோராலும் காணப்பெறாத இறைவன் முற்பட்டுவருவன் என்பதாம்.

தர்மம் யோகம் ஞானம் ஏன்றாமல் மூனறிடத்தும் நல்ல என்னும் அடைமொழியைச் சேர்த்துக் கூறுவானேன் என்னில், சிவதன்ம முதலிய மூன்றும் அகங்காரத்தையொழித்து உள்ளத்தைச் சுத்தமாக்கலான் நல்லஎன்புதையும், சிவபெருமானிடத்தில்

அன்புற்றிருப்பவனானு செய்தலால் சிவனென்பதையுஞ் சேர்த்தனரென்க. அத்தகைச் சிறப்புடைய சிவதன்மமுதலிய மூன்றனுள் ஒன்றேனும் இரண்டேனும் மூன்றேனும் உயிர்த்துணையாகக் கொண்டு, சிவபெருமானிடத்து அன்பு ஒன்றே வேண்டி அவற்றை அன்புடன் யாவர் செய்யவல்லராயினும் எத்தகைத்தான தருமங்களாலும் தானங்களாலும் தவங்களாலும் யோகங்களாலும், ஞானங்களாலும், எஞ்ஞான்றுங் காண்டற்கரியனாகிய இறைவன் தன்னை மிக எளியனாய்க் காண்டற்குத் தானே முயற்சியுடையனாய் முன் வந்தருளுவன் என்க.

இச்செய்யுளால் அகங்காரம் போதற்கும் அன்புண்டாதற்கும் இறைவன் தலைப் படுதற்கும் சாதனங்களாயுள்ளவை இவையென்று கூறியவாறும்.

சரியையாவது - அஞ்ஞானவழியில் உடல் யாதொரு சோம்பலின்றி யுழன்றும் அப்படி யுழல்வதே இன்பமாயும், உழலாவிடின் துன்பமாயும், உழல்வதனாலுண்டாகும் உடற்கஷ்டத்தைச் சிறிதும் எண்ணாமல் அதன் கஷ்டத்தாலுண்டாகும் யாதொரு பொருளோ அதனைமாத்திரம் எண்ணி யின்புற்றிருப்பதுபோல் ஞானவழியாகிய சரியையில், உடலை யுழலச்செய்து அதனாலுண்டாகும் இறைவனது பற்றைமாத்திரம் எண்ணி யின்புற்றிருப்பச்செய்வதாகும்.

கிரியையாவது -- உடலுள்ளிருந்து உழலுவதாகிய கரணங்கள், புறம்பே உடலானது எந்தெந்தப்பொருள்களில் உழலுகின்றதோ அந்தந்தப் பொருள்களையெல்லாம் எண்ணுவதும், எண்ணி அவைதம்மைக் கூடுவதற்கான செயல்களெல்லாம் உள்ளத்திலேசெய்தும், அங்ஙனஞ் செய்வதில் சலிப்பற்றும், புறம்பேயுழலும் உடல் ஓய்ந்தாலும் தாம் ஓயாமலும் அதற்குரிய வற்றை யெண்ணி யுழல்வதே யின்பமாக அப்பொருளையே எண்ணியுழல்வதுபோல் வெளியேகண்ட சிவவுருவத்தை உள்ளேகண்டு அவ்வுருவத்துக்கு உள்ளிடத்தும் வெளியிடத்தும் செய்வனவாகச் சொல்லப்பட்டுள்ளன வெல்லாம் செய்து அதில் சலிப்பற்றிருக்கச் செய்வதாகும்.

யோகமாவது—புறம்பேயுள்ளகருவியாகிய உடலாலும், அகத்தேயுள்ள கருவியாகிய கரணங்களாலும் கருதிச்செய்யப்பட்ட தொழில்களுக்கு ஏற்றவரை, முன் எண்ணுதலும், பின் அவர்கள் இருக்குமிடங்களைத் தெரிவதும், தெரிந்து அவரவரேபரமாக அவரவர்களை வழிபடுதலும், அவர்களைச் சிலபொழுது காண்டலும், சிலபொழுது காணாதிருத்தலும், ஒருவரைக் கண்டபொழுது மற்றொருவரைக் காண்பதற்கில்லாமற் போதலும், இப்படியெல்லாம் உழன்று, அவரவர்களால் வேண்டியவை முற்றுப்பெற்றால், அவர்களை மறந்துபோதலும், மறந்து அவர்களாலானவற்றைப் பற்றலும்போல, விநாயகர் முதலிய மூர்த்திகளை எண்ணுவதும், ஆதாரங்களில் அவர்களையமைத்து வழிபடுதலாகிய முறைமைகளில் சிறிதேனுந் தவறாதிருத்தச்செய்தலாகும். இவற்றின்விரிவைப் யோகமுறைமைகூறும் பின்வருஞ் செய்யுள்களாற்காண்க.

ஞானமாவது—ஞானநிலையின்கண் ஞானசொரூபியாகிய இறைவன் தன்னுடனாய் நிற்குங்கால் உள்ளமுதலிய தத்துவங்களனைத்தும், உருகுதலைப்பெற்று அன்புடையனவாய் நெகிழுங்காலத்து, அந்நிகழ்ச்சியினின்றும் அத்தத்துவங்கள் நீங்காவண்ணம் இறைவனைப் பற்றச்செய்வது சரியையும், பற்றிய இறைவன் மாட்டுச்செய்யும் வழிபாட்டில் சலிப்பற்று அவ்விறைவனோடு ஈடுபடச்செய்வது கிரியையும், சலிப்பற்ற அவ்வீடுபாட்டான் வினைய காமரூபத்தோற்றங்களைச் சிறிதேனுந் தோற்றச்செய்யாது சிவரூபங்களை தோற்றச்செய்வது யோகமும்போல், அங்ஙனந் தோன்றிய தடத்தவுருவங்களையெல்லாம் சொரூபசிவமாகவே காணச்செய்தலாகும்.

கக. மெல்வினையே என்ன வியனுலகில் ஆற்றறிய
வல்வினையே என்ன வருமிரண்டும்—சொல்லில்
சிவதன்மமாம் இவற்றில் சென்றறிலே செய்வாய்
பவகன்ம நீங்கும் படி. ([illegible])

ப்பனுமாறு" எனவும் மற்றும்பலவாற்றானும் பெரியோரெல்லாம் புகழ்ந்திருத்தலின் வையகம்போற்றுஞ் செய்கை யென்றார். பெரியோரால் போற்றப்படுஞ், செய்றுடைப்பது இல்லறமாகவே அவ்வில்லறத்தின்கணின்று செய்யும் அவ்வரிய செயலைச் சைவ மெய்த்திருவின் சார்பினையுடையார்மாட்டுச் செய்யப்பெறின் அச்சார்பினையுடையார் தாம்பெறும் பொருளாக அடையப்படும் யோகஞானங்கள், தாம்பெறும் பொருளாகத் தாமேவந்து சாருமெனச் சைவமெய்த்திருவினையுடைய அடியராகிய விருந்தினரை எதிர் நோக்கிச் சார்ந்து அவர் வேண்டியதளிக்கும் பெருந்தன்மை யுடையராகலின் சைவ மெய்த் திருவின்சார்வே பொருளெனச் சாருநீரார் என்றார். சைவமெய்த்திருவென்றது திருநீறும் கண்டிகையுமாம்; இறைவனால் கொடுக்கப்படும் பொருள்களாகிய யோக ஞானங்கள் அத்திருநீறு கண்டிகை என்னும் இரண்டையும் பொருளாகச்சாராதார்க்கு அவ்விரண்டுபொருளுஞ் சாராதாகலின் சைவமெய்த்திருவின் சார்வே பொருளெனச் சாரும் நீராரென்று அவரது சைவகோலத்தை விசேடித்துக்கூறியதுமாம்.

இத்திருப்பாசுரத்தால் நம்பெருமானார் தனிக்கூத்தாடும் நாதனார் கழல்கள்வாழ்த்தி வழிபடும் நலத்தின்மிக்கார் என்றதை விதந்துகூறியதாமெனக.

அஃதாவது, பொய்ம்மைபட்டொழியும் பசுதருமத்தைக்கடிந்து பதிதருமத்தை மேற்கொண்டாரென்பார் அறத்தின்வாழ்வாரென்றார். பதியைநாடி அப்பதிதருமத்தைச் செய்தவாறே வேறொருகடவுளரைக் கனவிலும் நினையாரென்னும் அவரது நன்னெறி தோன்ற புனற்சடைமுடியார்க்கன்பரானார் என்றார். புனற்சடைமுடியார்மாட்டு அன்பு கூடுதல் அவனடியார்மாட்டு அன்புகூடினாலன்றிக் கூடாதென்பதுதோன்ற மெய்யடியார்கட்கான பணிசெயும் விருப்பின்மிக்காரென்றார். இடத்தானும் பொருளானும் ஏவலானும் வேறெவ்வாற்றானும் அடியார்வேண்டுவன வானவற்றைக் கொடுத்தற்கு இல்லறமல்லது வேறு நல்லறமின்றென்பது தோன்ற மனையறம்புரிந்து வாழ்வாரென்றார். வையகம்போற்றும் செய்கைமனையறம்புரிந்து வாழ்வாரென்றதும், மனையறம்புரிந்து வாழ்வார்க்கு யோகஞானங்களாகிய அதிசயமுடைய அரியபொருள்கள் கைகூடாதென்று கூறுங்கூற்று வெறுங்கூற்றுமென்பதும் தோன்ற சைவமெய்த்திருவின்சார்வே பொருளெனச்சாரும் நீரரென்றார்.

இன்னணம் எடுத்துக் காட்டியவையெல்லாம் நலத்தின்மிக்கார் என்றதனை இன்ன இன்னவகையாலென்று வகுத்துக் காட்டியதாமெனக. (௨)

அளவிலா மரபின் வாழ்க்கை மட்கலம் அமுதுக் காக்கி
வளர்இளந் திங்கட் கண்ணி மன்றுளார் அடியார்க் கென்றும்
உளமகிழ் சிறப்பின் மல்க வோடளித் தொழுகும் நாளின்
இளமைமீ தூர இன்பத் துறையினில் எளியர் ஆனார்.

(எ - து.) இன்ன அளவாகிய சிறப்பினையுடையது என்று அளவிட்டுக் கூறப்படும் அளவினைக்கடந்த இல்லறத்தைநடத்தும் மரபினை மேற்கொண்டுள்ள இவ்வாழ்க்கையைத் தம்மரபுக் கேற்ப நடத்தற்குத் தொழிலாக ஏற்பட்டுள்ள உண்பாருண்ணும் அளவுக்கு ஏற்றவாறெல்லாம் மண்ணால் வனையப்படும் கலங்களைச்செய்து வருவதோடு, சிற்சபையின் கண்ணுள்ளாராகிய இறைவனடியார்கள் திருவமுதுண்ணற்கு உரித்தாகிய திருவோட்டினையும் வனைந்து அத்திருவோடுகளை வளருஞ்சந்திரனுக்கு வளர்ச்சியைத்தந்து, தான் இளம்பிறையாகவே தவழும் இயல்பினையுடைய பிறையை மாலையாகத்தரித்துள்ள சபேசரது அடியார்களுக்கு நாடோறும் கொடுத்துவருங்காலில், (பேரின்பத்துறையை யுடையாராகிய எம்பெருமானாராகிய நாயனார்க்கும் சிற்றின்பானுபவத்துக்குரிய) இளமைப்பருவமானது அதிகரித்தலால், அச்சிற்றின்பத்துக்குரிய காமத்துறையில் மிக எளி[illegible] என்பதாம்.

பிரமசாரி வானபபிரஸ்தன் சந்நியாசி என்றும், கிளைகளுவாராற் றுறக்கப்பட்டவர் வறுமையுடைவர் ஒருவருமின்றித் தன்பால்வந்திறந்தவர் என்றும், தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் என்றும எண்ணப்பட்டவரெல்லாம் தத்தமக்குரிய அளவில்நின்று தந்தம்மைக்காத்துக்கொள்ளும் தன்மையுடையவருமன்று, ஒருவரையொருவர் காக்குந்தன்மையுடையவருமன்று. இல்வாழ்க்கை என்னும்மரபு-மேலே சொல்லியயாவரையும் காத்துத் தன்னையுந் தானேகாத்துக் கொள்ளும் இயல்புடையதென்னுஞ் சிறப்புத்தோன்ற அளவிலாமாயின்வாழ்க்கை எனவும், இங்ஙனமான அளவினைக்கடந்த பெரிய அறத்தை மேற்கொண்ட இவ்வரிய இல்வாழ்க்கையை இப்பெருமானார் எத்தொழிலால் வரும் ஊதியத்தைக்கொண் டியற்றினரென்னும் அத்தொழிலின் சிறப்புத்தோன்ற மட்கலத்தாலாக்கி எனவும், புகழ் புண்ணியங்களுக் கேதுவாகிய அவ்வறங்களெல்லாம் அத்தொழிலாலேயே செய்வதுபோல் ஞானநெறிக் கேதுவாகிய சிவதருமத்தையும அம்மட்கலத்தொழிலாலேயே செய்துவந்தனரென்னும் அச்சிறப்புத்தோன்ற மன்றுளார் அடியார்க்கு ஓடளித்து எனவும், பொதுச்சிறப்பென்னும இரண்டறங்களையும், என்றும்விடாது ஊக்கப்பாடுடன் செய்யும் அவ்வொழுக்கத்தின் சிறப்புத்தோன்ற என்றும் உளமகிழ்ந்து ஒழுகுநாளில் எனவும், இவ்வாறான அறநெறியில் வன்மைபெற்றுள்ள நம்பெருமானார் தமக்கடுத்திருக்கும் இளமைப பருவத்தைச் சார்ந்துவந்த சிற்றின்பத்துறையில் வன்மை பெற்றிராது எளிமையா யிருந்தனரென்னும் அவ்வருமைதோன்ற இளமைமீதூர இன்பத்துறையினில் எளியரானார் என்றுங்கூறினார். அளவிலாமட்கலம் அமுதுக்கு ஆக்கி எனவும் ஓர் பாடம். அஃதாவது, இந்நாயனார் நடராஜமூர்த்திகளும மூவாயிரம தீக்ஷிதர்கள் திருமாளிகைகளுக்கும் நிவேதனத்துக்குரிய பாத்திரங்களை நாடோறும் கொடுத்துவரும் பெருந்தொழிலாளர் எனப்புராணத்துள் கூறப்பட்டுள்ளதால் அப்பாடங் கொள்ள வந்ததென்க.

இத்திருப்பாசுரத்தால் அளவிலா அளவினையுடைய இல்லறதருமத்தையும், சிவதருமத்தையும், அளவினுள் மிகச்சிறிய அளவினையுடைய சிறுதொழிலால் வரும் ஊதியத்தால் விடாதியற்றி வந்தாரென்றும், அவரது அருமையும் ஆற்றலும் இத்துணைச் சிறப்பினவென்றும், எத்தகைத் தவவிரத ஞானமுடைய முனியோரானும் தடுத்தற்கரியராய் எளியராதற்கின்றி மாழாந்து வேதாகமங்களிற் கூறபபடும் ஆணைகளைக்கடந்து அக்காமத்தின் வழியே போகின்றவராயிருக்க, இப்பெருமானார் அவ்வின்பத்துறையில் மனத்தை விட்டு அதிலாழச்செய்யாது உடம்பளவில் நிறுத்தி அதனை அனுபவித்துவந்த மனவலி இத்துணைச்சிறபபுடைத்து என்றும் அறிவுறுத்தியவாறும. இவரது மனவலியை "மனத்தினுந்தீண்டேன் எனவரும் அவ்வுரையானுந் தெளியக் கிடக்கின்றமைகாண்க. அதுநோக்கியே ஈண்டு எளியரானார் என்றார். உளமகிழ்சிறப்பின்மல்க ஓடளித்து என்றதனால் எவ்வகைத்தான பதார்த்தங்களினும் மகிழ்வுறும் விருப்பினைத் தடுக்கும் வீரராகிய அடியார்களுக்கு இவர்கொடுக்கும் சிறப்புடைய ஓட்டில் தம்பாலுள்ள அன்பு காணப்படுதலாலும் அவ்வோட்டில் தாம்கொள்ளத்தரும் அன்பும் இத்துணைத்தென காணப்படுதலாலும் அவ்வோடும் மண்ணுருவாயன்றி அன்புருவாகவே காணபபடுதலாலும் அச்சிறப்பினைநோக்கி அங்ஙனங் கூறியதென்க. (௯)

அவர்தங்கள் மனைவி யாரும் அருந்ததிக் கற்பில் மிக்கார்;
புவனங்கள் உய்ய ஐயர் பொங்குநஞ் சுண்ண யாம்செய்
தவம்நின்று தடுத்த தென்னத் தகைந்துதான் தரித்த தென்று
சிவன்எந்தை கண்டம் தன்னைத் திருநீல கண்டம் என்பார்.

(எ - து.) நம்பெருமானாராகிய அவருடைய வாழ்க்கைத்துணையெனப்படும் மனைவியாரும், அருந்ததியினுஞ்சிறந்த கற்பினையுடையவர். (இவர் இறைவனது திருவுருவத்துள்ளே திருக்கண்டத்துள் அமைந்திருக்கும் நீலக்குறியுடையவிடம் கருணைக்குறியவ்வா

ஆகலின் அவனது கருணையைவேண்டும் நாம் அதன் நாமத்தைச்சொல்லாது வேறென் சொல்வது என்றெண்ணி) திருநீலகண்டம் திருநீலகண்டம் என்று சொல்லிவருவர். (அங்ஙனம் அம்மந்திரத்தைச் சொல்லிவரும் காரணம் யாதெனின்) (பாற்கடலினின்றும்) பொங்கியெழுந்த வலியவிடத்தை எல்லாப்புவனங்களும் உய்யும்வண்ணம் ஐயராகிய இறைவனார் உண்டனரல்லவா? அங்ஙனம் உண்டபொழுது அவ்விடத்தை உள்ளே செல்லவொட்டாது, யாம் செய்துவந்த தவமானது கண்டத்தளவிலே நின்றிருக்கச் செய்ததுபோலும் காணப்படுகின்றதல்லா? அந்தோ! கருணையிருந்தவாறென்னே என்று "சிவனெந்தை கண்டந்தன்னைத் திருநீலகண்டமென்பார்" என்பதாம்.

இதுகாறும் இல்லறத்தின்சிறப்பும் அவ்வுறத்திற் றவறுதுநின்று இல்வாழ்க்கையை நடத்திவந்த நம்பெருமானாகிய நாயனார்சிறப்பும் கூறிவந்தனராகலின் அச்சிறப்பு வாழ்க்கைத்துணையாகிய இல்லாளது நன்மையன்றி யமையாதாகலான் அவ்வில்லாளது சிறப்பு இத்துணைத்தாம் என இப்பாசுரத்தால் கூறுவாராயினர்.

அஃதாவது அருந்ததிக்கற்பின்மிக்கார் என்றதும் திருநீலகண்டம் என்பார் என்றது மேயாம். கற்பினையுடைய மகளிர் கூட்டங்களில் சிறந்தவர் அருந்ததியார். இவர் கற்பிலும் கற்பிலக்கணத்திலும் கல்வியிலும் சிறந்தவர். கற்பாவது பிரிவாற்றுமை முதலாகப் பதினெண்வகையாகச்சொல்லப்படு மவையேயாம். கற்பிலக்கணமாவது—உள்ளமகிழ்ச்சியும் ஊடலும் ஊடலுணர்தலும் ஊடலுவகையும பிறவுமாகிய கற்புநடையாம்.

ஈண்டு இவர் மனைவியாரோ மேற்கூறியவைகளினுஞ் சிறந்து அக்கல்வியறிவிலும், அதன் பயனாகிய வாலறிவனது நற்றாளைத்தொழுதலிலும் நீங்காதகாதலுடையவராய் முனைத்துநிற்பவராதலால் அருந்ததிக்கற்பின்மிக்கார் என்றார். இவர் கல்வியிலும் கல்விப் பயனிலும் எவ்வாற்றால் சிறந்தவராவர் எனவரும் ஐயமகற்றவே புவனங்கள்உய்ய ஐயர் பொங்குநஞ்சுண்ண யாம்செய்தவநின்று தடுத்தது என்று உணரவந்தது கல்வியறிவின் திறமாம். சிவனெந்தை கண்டந்தன்னைத் திருநீலகண்டமென்பார் என்றது அக்கல்வியினாலாய பயனும். ஐயர் என்றது சிவபெருமான் தேவருட்சிறந்த அந்தணராகலின்என்க. "அந்தணரென்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்" என்ற முதுரையின்படி புவனங்களெல்லாமுய்ய நஞ்சுண்டபெருமானாகலின் அங்ஙனங்கூறியதென்க. இந்திரபதமுதலிய பதங்களுக்கு மேற்பட்ட அளவினையுடைய புவனங்களும் உய்ந்தனவாகலான் அமரருலக முய்யவென்னாது புவனங்களுய்யவென்றார். இறைவன் கண்டத்தில் நஞ்சு நிற்கத்தடுத்தது உமாதேவியாராக விருக்க அதனை யாம்செய்ததவநின்று தடுத்தது என்றது என்னையெனின் "பெண்ணினல்லவ ளாயின பெருந்தவக்கொழுந்து" என்று இவ்வாசிரியரே மற்றோரிடத்தில் கூறியிருத்தலின் அக்கருத்தே யீண்டுந்தோன்றக் கூறினாரென்க. என்னையெனின், மகளிருட்சிறந்தாரோடொப்பத் தேவியாரைபெண்ணி னல்லவளெனவும்,அவ்வளவிலமையாது பெருந்தவக்கொழுந்து எனவுங்கூறியதனால் தமது தவமே உமாதேவியாரது திருவுருவமென்று எண்ணுஞ் சிறப்பினையுடையவர் இவ்வமையாரென்றறியக்கிடக்கின்றது. (ஈ)

ஆனதங் கேள்வர் ஆங்கோர் பரத்தைபால் அணைந்து நண்ண
மானமுன் பொறாது வந்த வூடலான் மனையின் வாழ்க்கை
ஏனைய வெல்லாஞ் செய்தே யுடனுறை விசையா ரானார்
தேனலர் கமலப் போதில் திருவினும் உருவ மிக்கார்.

(எ- து.) தேன் தளித்தலையுடைய தாமரைமலரில் வசிக்கும் திருமகளினும் சிறந்த திருவுருவினையுடைய திருநீலகண்டம் என்பாராகிய இவர்தம் கணவராகிய நம் பெரியோர் ஓர்கால் தாம் வரும் வீதியின்கணுள்ள பரத்தையோடு கூடிக்கலந்து தமது வீடுவந்துசேர, (அவரது செயலைக் காணப்பெற்ற இவர், தமக் குள்ளதாகிய) மானமானது

முன்னேவந்து நிற்க, அதனால் மனம்பொருது வந்த ஊடலினால் அவரது உடலைப் பரிசித்துக் கலந்து அவருக்குக் கொடுத்துவரும் இன்பத்தை இனி நாம் கொடுத்துவருதல் இசையாததாகும் என்று அஃதொன்றைமாத்திரம் மறுத்தவராய் அஃதொழிந்த மற்றுந் தம்மால் செய்யத்தகும் உணவுமுதலிய சுகங்கட்கு ஏதுவான செயல்களனைத்தையும் விடாது செய்வாராயிருந்தனர் என்பதாம்.

தேனமர் கமலப்போதில் திருவினும் உருவமிக்கார் ஆனதங்கேள்வர் எனவும், உடனுறை விசையாராய் ஏனைய வெல்லாம் செய்வாராயினர் எனவும் கொண்டுகூட்டுக.

கேள்வர் எனவே-தன் உடற் சம்பந்தமுடையவர், தான் இன்பவகையால் நேசிக்கும் நேசத்திற்கு இடமாயுள்ளவர், தாம் தெய்வமாக நினைத்தற்கு மதிப்பாயுள்ளவர்என்ப. அன்றியும் பெருமை பெருந்தன்மை மரியாதை அகங்காரம் அபிமானம் அளவு என்னப் பொருந்தவரும் மானத்தை மேற்கொண்டுள்ளவர். இங்ஙனமான தங்கணவர் பரத்தையர் பால் நண்ணத் தலைப்படுவராயின் நமது மானங்குன்றவரும். அது குன்றவருமாயின் ஏறுபோற்பீடுநடை இவர்பாற் போம். அதுபோமாயின் புகழை விரும்பிய இல்லாளை இவர் இல்லாதவர் என்னுஞ் சொல் நம்பால்வரும். அதுவருமாயின் "தகைசான்ற சொல்" காவாவழிப்படுங்குற்றமும் நம்பால் உளதாம் என்று முறையே மானத்தினளவை என்னுதலாகிய கல்வியறிவு முன்வந்துநிற்ப, அவ்வழியே அகங்காரம் மூண்டு மேலெழுந்தது, அது எழவே இனி இவர்பால் இணைவிழைச்சு என்னும் புணர்ச்சிப்போகத்தை வெறுத்தல் * கற்பியலுமாமென்று திருவினும் உருவமிக்காராகிய இவர் நெஞ்சொடு புலத்தலாகிய செயலைத் தம்முள்ளே முன்செய்து பின் இதுசெய்வலென வரையறை செய்து கொண்டனர் என்பதுதோன்ற மனையின் வாழ்க்கை ஏனையவெல்லாஞ் செய்தே உடனுறைவு இசையாரானார் என்றார்.

---

* கற்பியலில் தலைவன் தலைமகள் என்னும் இருவர் நெஞ்சும் புணர்ச்சியை விரும்பாது புலத்தலை (பிணக்கை)க் கருதுதலும் அதுகருதியவழி கருதியபடியே ஒருவரோடொருவர் பிணங்குதற்குரிய வகையைத் தேடுதலும் அங்ஙனந் தேடும் இருவரில் தலைமகள் தன்தலைவன் மாட்டுப பிணங்குதற்குரிய காரணமில்லையாகவும் நுண்ணியதோர் காரணம் உளதாகவுட்கொண்டு அதனை அவன்மேலேற்றிப் பிணங்குதலால் புலவியைப் பாராட்டுதலும் உளதெனக்கூறியிருத்தலின் இவர் நம்பெருமானார்பால் கொண்ட ஊடலும் கற்பின்முறையே யாமென்று கண்டுதெளியற்பாலது. இக்கற்பியலுடையார்க்கு ஊடலாகிய பிணக்குத் தலைவனார்பால் ஆசையொழிந்து வந்ததன்று. ஆசையையுடன் தழுவிவந்ததேயாமென்று தெள்ளிதினுணரவே மனையின்வாழ்க்கை ஏனையவெல்லாம் செய்தேஎன்றார். இன்னமும் இவ்வம்மையாரது கற்பின்திறத்தை நோக்குழி வலியதினும்வலிதே. என்னையெனின், கணவர்மாட்டு ஊடலைக்கொள்வது தம்மாட்டுள்ள கைம்மிக்காதலை அக்கணமே அனுபவிப்பதற்கேயன்றி அக்காதலைச்சாங்காறும் விடுத்தற்கன்று. அங்ஙனம் விடுக்கவரின் தம்தலைவர்மாட்டுச் செய்யவேண்டிய ஏனைய உபசாரங்களைச்சிறிதுஞ்செய்ய எண்ணவும் எண்ணார்; செய்யவும் துணியார். அப்புணர்ச்சியை வெறுத்தபொழுது ஒருகணமேனும் அவரோடு வாழவும் விரும்பார். அன்றியும் கல்வியைநாடியும் அறத்தைநாடியும் பொருளைநாடியும் பிரிதலாகிய கல்வியிற்பிரிவு பொருள்வயிற்பிரிவு முதலிய அப்பிரிவுகள் தன்தலைவனுக்கு நேர்ந்தவழி கற்பினையுடையார் பிரிவாற்றாமையும் படர்மெலிந்திரங்குதலும் கண்விதுப்பழிதலும் பசப்புறுபருவரலும் தனிப்படர் மிகுதியும் நினைந்தவர்புலம்பலும் கனவுநிலையுரைத்தலும் பொழுதுகண்டிரங்கலும் உறுப்புநலனழிதலும் நெஞ்சொடுகிளத்தலும் நிறையழிதலும் உடையவராய் வருந்தாநிற்பர். தலைவர் கூடியவழி காதல் தம்மையறியாது அதிகரித்தலால் அக்காதல் விளைந்து முற்றுப்பெறுமாறு புலத்தலும் புலவி நுணுக்கமும் நிகழ்த்தே இயற்றி உடனே ஊடலுவகையைப் பெறுவர். இவையெல்லாம் [illegible]

இத்திருப்பாசுரத்தால் நம்பெருமானார் மனைவியார் திருவினும் மிக்கவுருவம் உடையார் எனவும், பெருமை பெருந்தன்மை மரியாதை அகங்காரம் அபிமானம் என்னும் இவையெல்லாம் பாராட்டும் மானத்தை மேற்கொண்ட கற்பிற்சிறந்தவரெனவும்; கற்பிற்சிறந்தவர் காமத்தினுஞ் சிறந்தவரேயாகலின் அங்ஙனஞ் சிறந்திருக்கும் காமத்தினைக் கற்பினெல்லையில் நிறுத்தி ஆளும் ஏனைக்கற்புடையார் போலல்லாமல் அக்கற்பினுஞ் சிறந்த சிவனாணையால் அக்காமத்தினையாளும் திறத்தினரெனவும் உணர்த்தியவாளும் (௫)

ஊண்ட அப்புலவி தீர்க்க அன்பனார் முன்பு சென்று
பூண்தயங் கிளமென் சாயல் பொற்கொடி அனையார் தம்மை
வேண்டுவ இரந்துகூறி மெய்யுற அணையும் போதில்
தீண்டுவீர் ஆயின் எம்மைத் திருநீல கண்டம் என்றார்.

(எ - து.) (தமது அன்புக்குரிய மனைவியார்பால் உண்டாகிய புலவி நுணுக்கத்தைக் குறிப்பாலுணர்ந்து அந்தோ! இவர்பால் அதிகரித்து நிற்கும் அவ்வூடல் நீங்குமாறென் நீங்காதொழியின் யாம்மகிழ்தற்குரிய புணர்ச்சிமகிழ்தல் கூடுமாறென்என்று) அதிகரித்து வெளிவந்த அப்புலவியைத் தீர்த்தற்பொருட்டு, ஆபரணங்களாற் பிரகாசிக்கின்ற இளமையான மெல்லியசாயலையுடைய பொற்கொடி போன்றவராகிய அவர்முன்னேசென்று (அவரது திருமுகத்தைநோக்கி) அவர் (விரும்பும் வகையான்) இன்சொற்களையும் இரக்க மொழிகளையும் இரக்கத்துடன்கூறி, தம்மைஅவரது உடம்பு தம்முடம்போடு பொருந்தத் தழுவத் தொடங்கும்பொழுது அவர் தாம்கொண்ட ஊடலினின்று நீங்காதவராய் எம்மை நீர் தீண்டற்க. தீண்டுவீராயின் திருநீலகண்டம் என்று ஆணையிட்டனர் என்பதாம்.

அன்பனார் ஊண்ட அப்புலவிதீர்க்க பூண்தயங்கு இளமென்சாயல் பொற்கொடியனையார்முன்பு சென்று என்றுகொண்டு கூட்டுக.

திருநீலகண்டம் என்னுமொழி தாம்செய்த தவத்தினாலுண்டாகிய மந்திரமொழியாகலின் அம்மொழியையே தமதுபுலவி மிகுதியைக்காட்டும் ஆணைமொழியாகக்கூறித் தடுத்தனரென்க. இவர்கொண்ட ஊடலுக்கு அவர்பொருத உள்ளமுடையவரென்பது தோன்ற அன்பனாரென்றார். † ஊண்ட அப்புலவிதீர்க்க என்றதைப் புலவி அதிகாரத்திற்காண்க. தலைமகளைப்பிரிந்த தலைமகளுக்கு உண்டாவதாகிய ஊடல் தம்மைப்பிரியாத இவர்பாலுண்டாகிய தென்பதுதோன்ற அனையார்தம்மையென்றார். காதன்மிகுதியால் ஊடலுண்டானகாலத்து அக்குறிப்புணர்ந்து ஊடலே உவகையாமாறு கூறுதல் தலைவர்க்குச் சிறப்பேயென்பதுதோன்ற வேண்டுவ இரந்துகூறி என்றார். தாம் இரந்துகூறிய அதனால் அக்கற்புடையார் ஊடலொழியா திருப்பரோ என்று துணிந்து பின் உவகையுண்டாமாறு அவரைச்சேரத் துணிந்தனரென்பது தோன்ற மெய்யுற அணையும்போதில் என்றார். தமதுயிருக்கு மெய்யாயிருக்குஞ் சைவநெறியிற் சிறந்த நாயனாரது உடம்புசைவ சீலமல்லாதார் உயிருக்கு உடம்பாயிருக்கும் உடம்புடைப் பரத்தையினுடம்பைத் தீண்டப்பெற்ற அசைவத்தைநாடி அஞ்சினரென்பதுதோன்ற எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டமென்றார். நீலகண்டம் என்பது விடந்தங்கியகண்டம். தங்கியிருக்கும் விடம் அவரைக்கொல்லாது அவரருளைக்காட்டி அமரர்களை வாழ்வித்தசெயலைக்காட்டும் அதிசயத்தையுடைத்தாகலின் நீலகண்டமென்னாது - திருநீலகண்டம் என்றார். (௬)

இவ்வம்மையார் தன்தலைவரது உடல் உறைவு இசையாது அவருடன் உறைவு இசைந்து கம்பத்தையுங்காத்து ஆணையுங்கடவாது இருக்குந்திறம் இவர்க்கல்லது எவர்க்குக்கூடும். ஆகலின் அருந்ததிக் கற்பின்மிக்கார் என்று மேலேகூறினாரென்க.

† இவ்விரண்டுந்திருக்குறள் புலவி நுணுக்கம் ஊடலுவகை எனவரும் அதிகாரங்களிற் காண்க.

ஆதியார் நீலகண்டத் தளவுதாம் கொண்ட ஆர்வம்
பேதியா ஆணைகேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கி
ஏதிலார் போல நோக்கி எம்மைஎன் றதனால் மற்றை
மாதரார் தமையும் என்றன் மனத்திலும் தீண்டேன் என்

(எ - து.) ஆணையாகக்கூறிய திருநீலகண்டமென்னுந் திருநாமத்தைக்கேட்ட நம் பெரியார், தமக்கு முதல்வராயுள்ள இறைவர்பால் அவர்வைத்துள்ள பற்றினளவு வேற்றுமைப்படாத திண்மையை யுணர்ந்து, அந்தோ என்றஞ்சினவராய் அவரிட்ட ஆணைப் படியே அவரது உடம்பைத்தொடாமல் அவ்விடத்தைவிட்டு அப்புறஞ்சென்று, அக்கணமே அவரை மிக்க சீலமுடையவராகவும் தம்மை அச்சீலமுடைமைக்கு வேறாகவும் பார்த்துப் பின் தம்மேல் தாமேபெரியதோர் ஆணையை வைத்துக்கொண்டுகூறினர். அஃதாவது திருநீலகண்டமென்று நமது ஆசையைத்தடுத்த அவர், என்னைஎன்னாது எம்மையென்று தம்மைப்பன்மையாகக் கூறினாராகலான், இவரை உடம்பாற் றீண்டாததுபோல் இனி வேற்றுமாதர்களையும் எனது மனத்திலும் தீண்டமாட்டேனென்றார் என்பதாம்.

தாம் ஆதியார்பால்கொண்ட ஆர்வம் நீலகண்டத்தளவு பேதியா ஆணைகேட்ட பெரியவர் எனக்கூட்டுக.

அல்லதூஉம், தாம்கொண்ட ஆர்வம் (திருநீலகண்டநாயனார்) தாம்தமது மனைவியார் பால் கொண்டதாகிய ஆசை, பேதியா - பேதிக்கும்படி, ஆதியார் நீலகண்டத்தளவு - இறைவனார் கொண்டிருக்கும் நீலகண்டத்தை எல்லையாகக்கொண்டு, ஆணைகேட்ட பெரியவர் - அந்த நீலகண்டமென்னும் திருநாமத்தையே ஆணைமொழியாகக் கூறக்கேட்ட பெரியோர், பெயர்ந்துநீங்கிட மனைவியாரைத் தீண்டுதற் கஞ்சினவராய் அவரிடத்தி னின்றும் அப்புறம்நீங்கி என்று பொருள்படுத்தலுமாம்.

நீலகண்டமென்று கூறிய ஆணைமொழி அவருக்கு இறைவன்பாலுள்ள ஆசையைக் காட்டியதெனவும், ஆர்வம் பேதியா என்றது இறைவன்பால் ஆசையெல்லாம் உள்ளவர் பாலே என்னுசையெல்லாம் உள்ளதன்றி ஆசையைச் சிறிதளவேனும் வேறொருவர் பால் செலுத்துமவரிடத்து என்னுசை சிறிதளவும் செல்லாத அளவினை யுடைத்தென்னும் பெரியதோர் அளவினைக் காட்டியதெனவும், பெரியவர் என்றது அவர்பால் தாங் கொண்டஆர்வம் கெடவரினும் அதனையெண்ணாது தம்முடைய ஆர்வத்தைக்கெடுத்த அச்செய்கையளவால் அவருக்கு இறைவன்பாலுள்ள ஆர்வம் இத்துணைத்தெனக்கண்டு அவ்வினைக் குட்பட்ட பெருந்தன்மையைக் காட்டியதெனவும், ஏதிலார்போல என்றது தமது ஆர்வம் அவரது உடம்பளவில் நின்ற சிறுமையைநோக்கி அவருக்குத் தம்மை வேறாகவும், அவரது ஆர்வம் நீலகண்டத்தளவுஞ்சென்ற பெருமையைநோக்கி தமக்கு அவரைவேறாகவும் கண்ட சீலத்தினளவைக் குறித்ததெனவும், எம்மைஎன்றது - தீண்டேனென்று அவர்கொண்ட ஆர்வமாகிய சீலத்தினளவை நோக்கி அவருக்குத் தம்மை வேறாகக்கருதிய அக்குறைபாட்டை யொழித்தல் இன்றியமையாத செயலெனவெண்ணி அச்செயல் முற்றுப்பெறுமாறு உடம்பளவிற்செல்லும் அவாவுடையமனத்தை இனி எவ்வுடம்பகத்தும் செல்லாவண்ணந்தடுத்து அவர்கொண்ட நீலகண்டத்தளவும் சென்று அவ்வளவில்நிற்க என்று அம்மனத்துக்கு ஆணையிட்டதெனவும் குறித்தனவென்க.

இத்திருப்பாசுரத்தால் நீலகண்டத்தளவில் நிற்கப்பெற்றதனால் திருநீலகண்டநாயனார் எனவந்த பெயர்க்காரணத்தையும் இவ்வரிய திருப்பெயர்வரப்பெற்றது "பெண்ணிற்பெருந்தக்க யாவுள *கற்பென்னும் திண்மையுண்டாகப் பெறின்" என்றபடி அப்

* கற்பென்னும் கலங்காநிலையை யுண்டாகப்பெற்ற பெண்ணை ஒருவன் இல்லாளாகப்பெறுவதினும் பெறத்தக்க மேம்பட்ட பொருள்கள்யாவை. இதனைத்திருக்குறள் வாழ்க்கைத்துணைநலத்திற்காண்க.

பெரும்பாக்கியத்தை வாழ்க்கைத்துணையாற் பெற்றதென அதன் காரணத்தையும் விளக்கியதேயன்றி அத்திருநாமத்துக்குரிய இறைவன்பால் நிலைபெற்றிருத்தற்கான ஆர்வத்தையும் விளைவித்தது அவ்வம்மையாரேஎன்று அறிவுறுத்தியதுமாம்.

அல்லதூஉம் நூல்களிற்கூறும் பற்றறுதியைச் செய்யுமுறைமை இதுவெனவுணர்த்தியதுமாம். அஃதாவது, பற்று - புறப்பற்று, அகப்பெற்றென இருவகை. புறப்பற்றையொழிக்கவேண்டின் அபபற்றொழியாது; ஏனெனின், அப்புறப்பற்றினைப்பற்றியிருப்பது அகப்பற்றே. அவ்வகப்பற்றொழியின் புறப்பற்று அவரை விட்டொழியும். அவ்வகப்பற்று அரனது நாமத்தைப்பற்றினாலன்றி அதுவொழியாது. ஆகலின் "மற்றுப் பற்றெனக்கின்றி நின்றிருப்பாதமே மனம்பாவித்தேன்" என்றது தமிழ்வேதம். எனவே, என்மனம் நின்றிருப்பாதமே பாவிக்கப்பெற்றதனால் மற்றுபபற்றாகிய புறப்பற்று எனக்கில்லாதொழிந்தது என்றுணர்த்தியவாறும். ஆகவே நம்பெருந்தகையார் திருநீலகண்டம் என்னும் திருநாமத்தில் தம்மனத்தைப பற்றசெய்ததுணிபால் மனத்தினுந் தீண்டேனென்றார். இதனால் புறப்பற்றாகிய மாதரைத்தீண்டுவதற்கு மனம் வேறில்லையென்றதுமாம். (எ)

கற்புறு மனைவி யாரும கணவனார்க் கான எல்லாம்
பொற்புற மெய்உ றுமல பொருந்துவ போற்றிச் செய்தே
இற்புறம் பொழியார் அங்ஙன் இருவரும் வேறு வைகி
அற்புறு புணர்ச்சி இன்மை அயல்அறி யாமை வாழ்ந்தார்.

(எ - து.) திருநீலகண்டம் என்று சொல்லத்தகும் கற்பினையுடைய அவரது மனைவியாரும், தமது கணவனாரது உடம்பைத்தொடுதற்கான செயல்களைமாத்திரஞ் செய்யாமல் ஏனைய உரியபணிகளையெல்லாம் அன்பும் அதிசயமும் பொருந்தப் பணிவுடன்செய்து, மனையைவிட்டு எங்கும் ஒருகணமேனும் செல்லாதவராய், அவ்விடத்திலேயே தமதுநாயனாரோடும் வேறாகவிருந்து, கணவர்பால் அன்பைவிளைவிக்கும் இணைவிழைச்சியில்லாமையை வேறொருவரும் அறியாவண்ணம் வாழ்ந்திருந்தனர். இவரைப்போலவே நாயனாரும் மனைவியாரோடு வேறாகவிருந்து அவர்பால் தமக்கு இணைவிழைச்சு இல்லாமையை வேறொருவரும் அறியாவண்ணம் வாழ்ந்திருந்தனர் என்பதாம்.

மெய்யுறுமற் பொற்புற பொருந்தவ போற்றிச்செய்து எனக்கூட்டுக.

தமது கணவனாரைத் தம்மைத்தீண்டா தொழித்தமையால் அவருக்கு அதனாலுண்டாகும் ஊடலுக் கிடஞ்செய்யாவண்ணம் ஏனைய உபசாரங்களை யெல்லாஞ் செய்வதில் குன்றாது மேற்கொண்ட ஆவலுடையவராய் ஆனவெல்லாஞ் செய்தமையும் புணர்ச்சியின்மை அயலார் அறியாமல் வாழ்ந்ததும் தோன்ற கற்புறுமனைவியார் என்றார். இனிய வுணவுகளைச் சமைத்தலிலும் சமைத்தவற்றை அன்போடுபடைத்தலிலும் படைக்கும் பொழுதுஇன்சொல் இடைஇடையே வழங்குவதிலும் அங்ஙனம் வழங்கும்போது இன்முகங்காட்டுவதிலும் ஒருசிறிதும் வேறுபடாதிருந்தியற்றிய இச்செயல் கற்புடையார்க்கும் அமையாதென்னும் அருமைதோன்ற கணவனார்க்கான வெல்லாம் பொற்புறபொருந்துவ போற்றிசெய்தென்றார். இதனுள் போற்றிஎன்பது இனியவுணவுகளை அட்டல் முதலிய வாகக்கூறியவற்றுள் ஒன்றேனும் கணவர்பால் ஊடலுடையார் கொள்ளும் செயலன்றாகலான் அச்செயலை இவர்காத்த அருமைதோன்ற போற்றிச்செய்தார் என்றார். இவ்வாறு மனைவியார் போற்றிச்செய்த செயலருமைநோக்கி நாயனாரும் தாம்செய்துவரும செயலால் நாயனார்தம்பால் உண்டாகிய ஊடலை ஊடலாக் எண்ணாது ஊடலுவகையாகக்கொண்ட அருமைநோக்கி மனைவியாரும் ஒருவரையொருவர் பிரிவதற்கின்றி வீட்டின் கண்ணே வாழ்ந்திருந்த அரியதினும் அரிய செய்கைதோன்ற இற்புறம்பொழியார் என்றார். இருவரும் மேலேகூறியவாற்றான் ஊடலைமறந்தாராயினும் முன்னுண்டாகிய

விண்ணவர்பழுதை ஆணையை இருவரும் மறந்து ஆணையைகடந்திலர் என்னும் அச்சிறப் புத்தோன்ற இருவரும் வேறு வைகி என்றார். உணவுவகையான் ஒன்றாயும் உடல்வகை யான் வேறாயும் இருக்கப்பெற்றாராயினும் இருவருங்கொண்ட ஆணையின்கண் வேறு படாது உடனுயிருப்பவராயிருத்தலின் இவர்களது அற்புறு புணர்ச்சியின்மையை விளை வித்த இறைவனொருவனன்றி மற்றுயாவராலும் அறியப்படும் தன்மையுடைத்தன்றென் னும் அருமைதோன்ற அயலறியாமல் வாழ்ந்தார் என்றார்.

இத்திருப்பாசுரத்தால் டம்புக்கோர் பிணியுற்றகாலத்து அவ்வுடம்பை வெறுத் தொழியாது அப்பிணியைப போக்குவதற்கான மருந்து முதலியவற்றானும் வேண்டிய உணவுமுதலியவற்றானும் முன்னையினும் சிறப்பாகச்செய்து உயிரைப் பாதுகாத்துவரு தல்போல் தமக்கு உடம்பாகியும் உயிராகியுமுள்ள நாயனாரிடத்துண்டாகிய மூட்டைக் கருதி உண்டிமுதலியவற்றால் உபசரித்தலை விட்டொழியாது உபசரித்துப் பாதுகாத்து வந்த அன்பின் திறத்தையும் தம்மிருவரிடத்தும் உண்டாகிய தகைசான்ற சொற்காத்தலில் சோர்விலாத்தன்மையும் இறுதிபயக்கும் சிற்றின்பமாகிய உடலின்பத்தை யொழித்து உறுதிபயக்கும் பேரின்பத்தில் ஒன்றுபட்டிருந்த அறிவின் திறத்தையும் உணர்த்திய வாறும். (அ)

இளமையின் மிக்குளார்கள் இருவரும் அறிய நின்ற
அளவில்சீர் ஆணைபோற்றி ஆண்டுகள் பலவும் செல்ல
வளமலி இளமை நீங்கி வடிவுறு மூப்பு வந்து
தளர்வொடு சாய்ந்தும் அன்பு தம்பிரான் திறத்துச் சாயார்.

(எ - து.) (சிற்றின்பத்தை நுகர்தற்குரிய) இளமைபபருவத்தில் சிறந்திருக்கும் நாய னாரும் அம்மையாருமாகிய இருவரும், தம்முள் அறியநின்றதாகிய சீர்மையிற்சிறந்த, திரு நீலகண்டமென்னும் ஆணைமொழியைப பாதுகாத்து, ஒவ்வொரு வருடங்களும்போக, (அவ்வருடங்களோடு இருவருடைய உடம்புகளிற் பொருந்தியிருக்கவல்ல) குன்றாத பொலிவுமிக்க இளமைப்பருவமும்போய், தளர்ந்நடையைத்தரும் தளர்ச்சியோடு முது மைப்பருவம் வந்து உடம்புசாயவந்தும், இறைவனாகிய தம்பிரானிடத்து வைத்த அன் பின்திறத்தில் சாயாதவரா யிருந்தனர் என்பதாம்.

இருவரும் அறியநின்ற ஆணையைப போற்றத்தொடங்கிய காலமானது ஆணையைப் போற்றக்கூடாதகாலம் என்பதுதோன்ற இளமையின் மிக்குளார்கள் எனவும், இளமை மிக்கிருக்கும் அக்காலத்தில் கொண்டஆணை அளவில்சீரை எய்தவும் ஆண்டுகள் சிறி தின்றும் போகவும், காத்தனரென்பதுதோன்ற அளவில்சீர் எனவும், ஆண்டுகள் பல வுஞ்செல்லப் போற்றி எனவும், அன்போடியைவதற்கெடுத்த வுடம்பினால் அன்பெய் தப்பெற்று அது வளரப்பெறின்,பின் அவ்வுடம்புதளர்ந்து சாயவரினும் அதனாற்கவலைக் கிடனில்லையென்னும் உண்மையுணர்ந்த பெரியோரென்பது தோன்ற வடிவுறுமூப்பு வந்து தளர்வோடுசாய்ந்தும் அன்பு தம்பிரான்திறத்துச் சாயார் எனவுங்கூறினார்.

இத்திருப்பாசுரத்தால் கிடைத்தற்கரிய வுடம்பும் அதனில் வரப்பெறும் இளமைப் பருவமும் எய்தப்பெற்றவழி அப்பருவத்தில் செய்தற்கரிய செயலைச்செய்து பேரின் பத்தைப் பெறுதல் ஆற்றலுடையதேயன்றி அப்பேரின்பத்தை யெய்தப்பெறாது இள மையையொழித்தலும் இளமையிற்கிடைக்கப்பெற்ற அன்பையே தம்முடம்பாகவெண்ணி அதனில் மயக்கமுடையராய் நில்லாதொழிதலும் சிற்றினத்தைச்சேர்ந்த சிறியோரது செய்கையென்னும் விளக்கி இப்பெரியோரது பெருமையைப பிரகாசப்படுத்தியவாறும்.(௯)

இந்நெறி ஒழுகும் நாளில் எரிதளிர்த் தென்ன நீண்ட
மின்ஒளிர் சடையோன் தானும் தொண்டரை விளக்கம் காண
மன்னெறி இதுவாம் என்று ஞாலத்தோர் விரும்பி உய்யும்
அந்நெறி காட்டும் ஆற்றால் அருட்சிவ யோகி ஆகி

(எ .) மூப்புவந்து உடம்புசாயவந்தும் அன்புநெறியினும் சைவநெறியினும் சாயாது நாயனார் நடந்துவருநாளில், தீயானது தளிர்விட்டாற்போற் சிவந்துநீண்டு மின்னலைப்போல் பிரகாசிக்கும் சடையினை யுடையோனாகிய இறைவரும், நன்னெறி எனப்படும் சன்மார்க்கநெறி இதுவாமென்று உலகினரறிந்து அதனைவிரும்பி (அவ்வழியான்) உய்யும்வகையாகிய அந்நெறி (இந்நெறியாமென்று) உணரும் வகையான், நம்பெருமானாகிய நாயனாரைப்பிரகாசப்படுத்தத் (திருவுளத்தெண்ணி) அருள்நிறைந்த ஓர்சிவயோகியைப்போல் திருவுருக்கொண்டு என்பதாம்.

நன்னெறி இதுவாமென்று ஞாலத்தோர் விரும்பியுய்யும அந்நெறிகாட்டுமாற்றால், தொண்டரை விளங்கங்காண, அருட்சிவயோகியாகி எனக்கூட்டுக.

இத்திருப்பாசுரத்தால், ஆண்டுகள் பலவும் செல்லுமளவும், மூப்புவந்து தளர்வொடு சாயவருமளவும், இளைவிழைவை விரும்பாதுநின்ற நெறியும், ஆண்டுகள்சென்று தளர்ந்தமூப்புவந்தும், அந்நெறியே - தம்பிரானிடத்து வைத்த அன்பானது இளம்பருவம் எய்தி வருதற்கு வாயிலாகவுங் கொண்டுநின்ற நெறியுமே, நாயனாருடைய ஒழுக்கநெறி என்பதும், அந்நெறிநிற்கவே "தன்னடைந்தார்க்கு இடைமருதீசன், பனிமலர்க்குழல் பாவைநல்லாரினும், இனியன்"என்றதமிழ்வேதபடி நாயனாருக்கு நீலகண்டன் இனித்தானென்பதும், அந்த நீலகண்டன் இனித்த இனிமையால் இளைவிழைவால் உண்டாகும் இன்பம் அவருக்கு இனிக்காதொழிந்ததென்பதும், அது இனிக்காதொழியவே நீலகண்டனிடத்துப் பெருகிய பேரின்பம் சாயாது அவர்பால் இளமைப்பருவம் எய்திநின்ற என்பதும் மேலைத்திருப்பாசுரத்தால் விளக்கினாராகலின், அந்த அன்புநெறியில் சாயாது நின்றனர் என்பார் இந்நெறி யொழுகுநாளில் என்றார்.

இளைவிழைச்சுஎன்னும் மாதரின்பத்தைக் கெடுத்தற்குப் பேரின்பம் உடையானாகிய நீலகண்டனிடத்து அன்புநாடாது, பொறிபுலன் கரணங்களோடு மன்றாடிக்கொண்டு நிற்றற்குரிய ஞானநெறிகளைக் கற்றுணர்ந்து, அங்ஙனங் கற்றுணர்ந்த வன்மையான் முன்னர் மனமாதிகரணங்களை யடக்கவும், அக்கரணங்களின் வழியாய்ப் புலன்களை யடக்கவும், அப்புலன்களின் வழியாய்ப் பொறிகளையடக்கவும், இம்முறையான் அவ்வவ்வனவாய்க் காணப்படும் நாமரூபாதி விஷயத்தோற்றங்கள் தோன்றாதொழியவும்முயன்று அம்முயற்சியால் அவை முற்றியபின்னர் புறநாட்டமும் புறநோக்கமும் அற்று, அகநாட்டமும் அகநோக்கமும் உண்டாமாறு முயலும்பருவத்தில், பூர்வம் பழகிய வாசனைபழக்கத்திலுள்ள மண்வாசனை, பொன்வாசனை, ஒருவாறு ஒழியவருமாயினும் பெண்வாசனை யொழியாது பொறிக்கு வந்து, அங்ஙனம் கட்பொறிக்கு வந்தமாத்திரத்தில் அக்கணமே புலன்வந்து கூட, அதுகூடிய அவ்வழியே மனமாதிகரணங்கள் தலைப்பட்டு, ஞானநெறியில் நிலைபெற்று நிற்கும் ஆன்மஅறிவைத் தம்மால் காட்டப்பட்ட பெண்வழியில் முனைத்து நிற்கச்செய்து அப்பெண்ணாகாரமேயாக்கி பிரஹ்மாகாரத்தைப் போக்கும் ஆன்மவிசார முடையோருக்கு, நாயனார் சாயாது நின்ற அந்நெறியை விளக்கி, அங்ஙனம் விளக்கு முகத்தானே அவர்கள் உய்யுமாறு, இறைவன் கருணைகூர்ந்தனன் என்பார் தொண்டரை விளக்கங்காண என்றார். அஃதாவது கட்பொறிக்குத் தோன்றப்படும் பெண்ணுருவம் இலக்குமியினும்சிறந்து ஒரு கணமும் ஒழியாது தோன்றிக்கொண்டிருக்கவும், அது தோன்றுங்காலத்தே உடன் வந்து கூடத்தக்கதாகிய புலன்முதலிய கரணங்களும் உடன் நிகழ்ந்துகொண்டிருக்கவும், அவற்றால் விளையத்தகும் சித்தவிகாரத்துக்குரிய சிற்றின்பானுபவம் ஒருசிறிதும் விளைவதற்கில்லாமல் அப்பெண்ணுருவமும் அவ்வுருவத்தோடு கலந்த பொறிமுதலியவைகளும் நீலகண்டன் உருவமாக்குள்ளாய் அவ்வுருவத்தை உள்ளுந்தோறும் நீலகண்டனாகிய அச்சிவாகாரமேயாய்ப் பேரின்பநுகர்ச்சியிற் றலைப்பட்டு, அங்ஙனம் தலைப்பட்ட விசேடத்தான் இளமை

[1] திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்—குறுந்தொகை

பருவத்தனவுமின்று, பின் முதுமைப்பருவத்தில் மாய்ந்துபோம் சிற்றின்பம்போலாது அவ்வின்பம் மாய்ந்துபோம் அம்முதுமைப்பருவமே இளமைப் பருவமாய்ப் பேரின்பம் வளரப்பெற்ற சீர்மையை உடைய இந்நாயனாரது உண்மையை விளக்குமுகத்தான் பேரின்பத்தைக்கூட்டாத ஞானநெறியைக் கைவிட்டு, அன்புநெறியாகிய நன்னெறி கூடுமாறு, இறைவன் அருளுருவங்கொண்டு அந்நாயனார்பால் வந்தனனென்பார் நன்னெறியிதுவாமென்று ஞாலத்தோர் விரும்பவும் அந்நெறிகாட்டுமாற்றால் அருள் சிவயோகியாகி என்றார்.

இத்திருப்பாசுரத்தால் எக்காலத்தும் நிரதிசயானந்தமாகிய பேரின்பம் அன்புநெறியாற் கூடுமேயன்றி அன்பற்ற ஞானநெறியாற் கூடாதென்பது உலகெலாம் அறிந்துய்ய நீலகண்டநாயனாருடைய உண்மையாகிய அன்புநெறியை விளக்க இறைவன் திருவுளத்தெண்ணி சிவயோகியாய் வந்தனனென்று கூறப்பட்டது. (௪௦)

## சிவயோகியார்துகோலம்.

வேறு.

கீளொடு கோவணம் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேல்
தோளொடு மார்பிடைத் துவளும் நூலுடன்
நீள்ஒளி வளர்திரு முண்ட நெற்றியும்.

(எ - து.) அரைஞாணாக நூலாற்செய்த கீளுடனே, கோவணத்தைத் தரித்து, நீக்கமின்றி எப்பொழுதும் வெண்மையாகிய ஒளிபரப்பும் திருநீற்றின் பிரகாசமானது, பிரகாசிக்கின்ற திருமேனியின்கண், தோளொடுசேர்ந்து மார்பினிடத்தில் துவண்டு அசைகின்ற பூணூலுடனே, மேனோக்கி ஒளிவளர்கின்ற அக்கினிக் கண்ணின்மேல் திரிபுண்டரந்தீட்டிய நெற்றியும் என்பதாம்.

கீளும் கோவணமும் நித்தநித்தம் வெறுவேறணியும் முறைமையுடைத்தென்பது தோன்ற கீளொடு கோவணம் சாத்தி எனவும், திருநீற்றின் ஒளியானது அழிதலையறியாத பராசத்திசொரூபமென்பது தோன்ற கேடிலா வாள்விடு நீற்றொளி எனவும், இறைவனது திருமேனியும் அப்பராசத்தியின் சொரூபமேயாகலின் அச்சம்பந்தமுடைமைதோன்ற நீற்றொளி மலர்ந்தமேனி எனவும், பூணூலானது மலமொழிந்த அசுத்தகாலங்கள் நீங்க, ஏனைய காலங்களில் தோளின்மேலும் மார்பினடுவினும் நீங்காதிருத்தல் வைதிகநெறியென்பதுதோன்ற மேல்தோளொடு மார்பிடைத் துவளுநூலுடன் எனவும், சூரியனிடத்திலும், சந்திரனிடத்திலும், நீண்டுபரந்துவளர்கின்ற ஒளி-அக்கியின் ஒளியேயன்றி வேறில்லையென்பதும், அவ்வக்னி காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்னி, என்னும் மூன்றக்னியாய் உலகியலுக்குரிய அவ்வக் காரியங்களை வளர்க்குந் தன்மை யுடைத்தென்பதும், அம் முத்திவடிவமா யிருக்கின்ற அவ்வக்னி விராஜாக்னி என்னும் பேருடைத்தாகிய சிவாக்னியாய் முப்பாசங்களையும் நீக்கி முத்திநிலைக்குரிய ஞானசாதனங்களை வளர்க்கும் சிறப்புடைத்தாகிய திருநீற்றை வளர்க்குந் தன்மையுடைத்தென்பதும் ஆகிய இவ் வொற்றுமையெல்லாம் காட்டுவது இறைவனது நெற்றியின்கண் ணுள்ள கண்ணென்பதுதோன்ற நீற்றொளி வளர்திரு முண்டநெற்றியும் எனவும் கூறினார்.

அன்புநெறி - அருளாற்கூடும் நெறியெனவும், அருள் கூடுவதனுல் பொறிபுலன்கள் அவ்வருளைக்கடத்தற்கு வலியற்று அவ்வருள்வழியேநிற்றற்கு ஆயிற்றெனவும், அன்பற்ற ஞானநெறியில் அருள்கூடாதெனவும், அதுகூடாதாகவே பொறிபுலன்கள் இவனது ஞானவுணர்ச்சியின் வன்மையிலடங்காது தத்தம் போதவழியேசெல்லும் இயற்கையுடைத்தெனவும் விளக்கி, ஞானநெறியின் மென்மையையும் அன்புநெறியின் வன்மையையும் பிரகாசப்படுத்தியவாறும்.

கேடிலா வான்விடு நீற்றெளி என்றது - பராசத்தியுக்தராய் வந்தனரென்னும் விசேடத்தைக் குறித்ததெனவும் கொள்க. (௧௧)

நெடும்சடை கரந்திட நெறித்த பம்மையும்
விடுங்கதிர் முறுவல்வெண் ணிலவு மெமபட
இடும்பலிப் பாத்திரம் ஏந்து கையராய்
நடந்துவேட் கோவர்தம் மனையில் நண்ணினார்.

(எ - து.) நீண்டசடையென்னும் தோற்றம் மறையும்படி தாறுபோல் நெறித்திருக்கின்ற சடைமுடியினையுடையவராயும், வெள்ளிய நிலவினும் மேம்பட்ட பிரகாசிக்கும் பிரகாசமுடைய புன்னகையுடையவராயும், அன்பர்களிடம் பிக்ஷான்னத்தை ஏந்துதற்குரிய பாத்திரத்தைத் தாங்கியிருக்கும் திருக்கரத்தையுடையவராயும், வீதியின்கண்ணே அடிகள் நோவ நடந்துவரும் நடையினையுடையவராயும், திருநீலகண்டநாயனாருடைய வீட்டின் கண் வந்தனர் என்பதாம்.

கதிர்விடு முறுவல் எனவும், பலியிடும் பாத்திர மெனவும் கூட்டுக.

பாதமளவும் கீழ்விழுந்து பரந்திருக்கும் நீண்டசடையாயிராமல் தலையில் நெறித்து முடித்த சடையா யிருந்ததென்பது தோன்ற நெடுஞ்சடைகரந்திட நெறித்தபம்மை என்றார். என்றும் ஒருபடித்தாய்ப் பிரகாசிக்கும் பிரகாசத்தையுடைத்து புன்னகைஎன்பது தோன்ற வெண்ணிலாவுமேம்பட கதிர்விடுமுறுவல் என்றார். பலிபாத்திரமல்லது வேறொருபொருளையுந்தாங்காத சீலமுடையாரென்பதுதோன்ற இடும்பலிப்பாத்திரம் ஏந்துகையராய் என்றார். யாவரையும் யாவையையும் நடத்திவைக்கும் இறைமைத் தன்மையுடைய தான், நடக்கும் ஆன்மத் தன்மையுடையவனாய் வந்தனன் என்னுஞ்சிறப்புத்தோன்ற நடந்துநண்ணினார் என்றார்.

வெண்ணிலவினும் மேம்பட முறுவலைக்கூறியது - நிலவினொளி—என்றும் ஒருபடித்தாயிராமல் குறைந்துகுறைந்தும், வளர்ந்துவளர்ந்தும், வருந்தன்மையுடைத்து. இவரது நகை ஓர்காலத்து அதிகமாயும்,ஓர்காலத்துக்குறைவாயும் வெளிப்படுவதின்றி என்றும் ஒருபடித்தாகலான் அச்சிறப்புத்தோன்ற என்க நகை புன்னகையாயினும் அது அவ்விறைவனுக்குள்ள ஓர் பெருந்தன்மையைக் காட்டுவதாகும். அஃதாவது, ஒருவனுக்குச் சந்தோஷமிகுமானால் அதிகநகையும், அதகுறையுமானால் நகைகுறைந்தும், வெளிப்படுதல் இயல்பாகலான் இவன் அத்தன்மையனாகாமல் வேண்டுதல் வேண்டாமையற்ற நித்தியதிருப்தனென்று காட்டுவதாமென்க. நித்தியதிருப்தராயிருக்கின்ற இவரைப்போலுமே நாயனாரும் காமத்தால் மாறுபடாமல் நித்தியதிருப்தரா யிருந்தனராகலான் அவர் மனையில் நடந்து நண்ணினார் என்றார்

குளகமாகக்கூறிய இரண்டுதிருப்பாசுரத்தானும், திருநீலகண்டநாயனார்பால் இறைவன் சிவயோகிபோல் கோலங்கொண்டு மனையின்கண் வந்தகாட்சியும், சிவயோகிகளுடைய இலக்கணம் இத்தன்மைத்தாம் என்பதுங் கூறப்பட்டது. (௧௨)

## சிவயோகியாரை நாயனார் எதிர்கொண்டேத்தல்.

நண்ணியத் தவச்சிவ யோக நாதரைக்
கண்ணுற நோக்கிய காதல் அன்பர்தாம்
புண்ணியத் தொண்டராம் என்று போற்றிசெய்
தெண்ணிய வகையினால் எதிர்கொண் டேத்தினார்.

(எ - து.) (தமது இல்லத்தைநோக்கி) மெய்த்தவத்திற் சிறந்த சிவயோகநாதராய் வந்தவரை, கண்ணாரக்கண்ட அன்பர்பால் ஆசையுடைய அன்பராகிய திருநீலகண்ட

நாயனார், (இச்சிவயோகியார்) சிவபுண்ணியமே ஒருருக்கொண்டுவந்த திருமேனியரா மென்று (தமது உள்ளத்தில் எண்ணி) அங்ஙனம் எண்ணிய அம்முறையினால் உண்டாகிய அகமகிழ்ச்சியினால், எதிர்கொண்டுசென்று வாயாரப்புகழ்ந்து வணங்கித் துதித்தனர் என்பதாம்.

புண்ணியத் தொண்டராம் என்று, எண்ணியவகையினால் எதிர்கொண்டு போற்றி செய்து ஏத்தினர் எனக்கூட்டுக.

யோகியாய் யோகமுத்தி உதவும் இறைவனே இங்கு எழுந்தருளியதுபோலுமென்று எண்ணிய அருமைதோன்ற சிவயோகநாதர் என்றும், இத்தகைத்தான சிவயோகிகள் கொள்ளுந்தவமே சிவனைப் பொருந்துந்தவமாம் என்னும் அதன்பெருமை தோன்றவும், ஏனையோர்கொள்ளுந் தவங்களெல்லாம் அவமாம் என்னும் அதன் சிறுமைதோன்றவும், நணணிய தவச்சிவ யோகர் என்றும், அங்ஙனமான அவயோகிகளை யொழித்துச் சிவயோகிகளைக் காணுந்தோறும் பெருகும் அன்பிற் சிறந்தவர் நாயனாரென்னும் அப்பெருமைதோன்ற அன்பர்தாம் என்றும், அவ்வன்பர்க்குள்ள ஆசையுந் தவச்சிவ யோகிகள்பாலே செல்லும் நெறியுடைத்தேயன்றி அவயோகிகள்பால் செல்லா நெறி யுடைத்தென்னும் அவ்வருமைதோன்ற நண்ணுறு நேசநகிய காதல் என்றும், அடி யாராக எவரைக்காண்கினும் நாம் சிவனெனக் காண்பதுபோல் இவரை நாம் காண்ப தொழிந்து சிவயோகியாகிய இவரே தம்மைச் சிவமாக நம்மைக் காணும்படிச் செய்ததே இஃது என்னபுண்ணியமோ வென்று அவர்கண்ட காட்சியின் அருமைதோன்ற புண்ணி யத்தொண்டரா மென்று போற்றிசெய்து என்றும், இவ்வரிய புண்ணியத் திருமேனி யுடையார் வருவதற்குமுன் நாம் சென்று பணிந்து போற்றாது தாழ்ப்போமாயின் இவன் பாவத்தில் ஆழ்ந்திருக்கின்றான் என்று அவர் எண்ணவருவதாகிய அபராதம் உண்டா மென்று எண்ணி விரைந்து சென்று பணிந்து புகழ்ந்தாரென்னும் அச்சிறப்புத்தோன்ற எண்ணியவகையினால் எதிர்கொண்டேத்தினர் என்றுங் கூறினார்.

இத்திருப்பாசுரத்தான், சிவனடியாரது கோலம் அதுகாறும் தாம் சிவனெனக் காணச்செய்த தென்றும், இன்று வந்த சிவயோகியினது கோலம் தம்மைச் சிவமெனக் காணச்செய்த தென்றும் வியந்து ஏற்றிப் போற்றியனதக கூறப்பட்டது. (௧௩)

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரென்
றுறையுளில் அணைந்துபே ருவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைகள்
நிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின்.

(எ - து.) பிறைவளரும் சடைமுடியினையுடைய இறைவனைத், தொண்டராகிய அடியவரென்றெண்ணி, அவ்வடியாரைத் தமதிடத்திற்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்த்து,(அதனால்)மகிழ்ச்சியானது மேலிட்டதிகரிக்க,(அவ்வதிகரிப்பினால்)தம்முள்ளத் தின் நிறைந்த பெரிய ஆசையோடு, அடியார்களைப் பூசிக்கும்படிச் சொல்லப்பட்டுள்ள பூசைகளின் கிரமப்படியே, அம்முறைமையினாற் பூசனைசெய்து முற்றியபின், நின்றவ ராய் மீண்டும் என்பதாம்.

பேருவகை கூர்ந்திட, நிறைபெரு விருப்பொடு, வழிபட மொழிந்தபூசைகள் முறைமையிற் செய்து நின்றபின் எனக்கூட்டுக.

* தொண்டரைச் சடைமுடிப்பிரானாக எண்ணும் முறைமையொழிந்து, சடை முடிப்பிரானைத் தொண்டராக எணணிய அந்த ஏற்றந் தோன்ற பிரானைத் தொண்

---

* இறைவனல்லாத தொண்டரை இறைவனாக எண்ணுதல் சிறப்புடைத்து. அஃதேபோல் இறைவன் தொண்டனாகவரின் தொண்டனாக வெண்ணுவதே சிறப் புடைத்தாம். எங்ஙனமெனின் "தாவர சங்கமங்கள் என்றிரண் டுருவினின்று மாபரன்

என்றும், தமது இல்லம் தொண்டர்க்கே உரித்தாம் ஆகலான் அவரில்லத்துக்கு அவரைக் கொண்டுபோய்ச் சேர்தல் இன்றியமையாத செயலென்னும் அச்சிறப்புத் தோன்ற உறையுளில் அணைந்து என்றும், தமதிடத்தைத் தொண்டர் வீடாகத் தாம் எண்ணியது போல் அத்தொண்டரும் தமது வீடாகவே எண்ணி அவ்வீட்டில் நுழைந்து வீற்றிருக்கப்பெற்றதனால் அவருக்கு உண்டாகிய அகமகிழ்ச்சியின் மிகுதி இத்துணைத்தாமென்பது தோன்றப் பெருவகை கூர்ந்திட என்றும், அப்பெருவகையினால் இங்கெழுந்தருளி நமக்குப் பேருவகையைத்தந்த இத்தொண்டர் பெருமானுக்கு பேருவகையை விளைவிக்க நாம்செய்யும் செயல்யாது! என்றெண்ணி அத்செயலில் அடங்காத ஆசையை உடையவராயினர் என்னும், அவரன்பின் மிகுதிதோன்ற நிறைபெரு விருப்போடு என்றும், "எண்ணிலாகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும் உண்மையாவது பூசனை" யாகலான் அவ்விறைவரே யாகிய இவருக்கும் அப்பூசைகளே விருப்பமுடைத்தாம் என்று துணிந்து அப்பூஜாவிதிகளைக் குறைவின்றி முற்றுஞ்செய்து இறைவரை மகிழ்வித்தனரென்னும் அவராற்றல் தோன்ற வழுவாமொழிந்த பூஜைகள் முறைமையின் செய்து என்றும், சிவபூஜையை முற்றுப்பெறச் செய்யவல்ல தொண்டர் பூசையை நாம்செய்யும்படி வந்த இப்பெரியகருணைக்குக் கைம்மாறு இனி அவர்வேண்டிய தளித்தலே யாமென்று செய்நன்றி மறவாதவர் என்னும் அவரது அடிமைத்திறந் தோன்ற நின்றபின் என்றும் கூறினர்.

இத்திருப்பாசுரத்தான், இறைவனார் தொண்டராகவந்து, தாம்செய்தபூஜையை ஏற்று மகிழ்ந்தருளியிருக்கும் பேரருளுக்கு யாம்செய்யத்தகும் கைம்மாறு யாதுகூறுவரோ என்று அவரது வாய்மொழியை நாயனார் நோக்கிநின்றனர் என்று கூறப்பட்டது. (௧௪)

## நாயனாரிடத்தில் ஓடுகொடுத்தல்.

எம்பிரான் யான்செயும் பணியெ தென்றனர்
வம்புலாம் மலர்ச்சடை வள்ளல் தொண்டனார்
உம்பர்நா யகனும் இவ்வோடுன் பால் வைத்து
நம்பிநீ தருகநாம் வேண்டும் போதென்று.

(எ-து,) நறுமணங்கமழும் மலர்கள் சூடிய சடைமுடியினையுடைய வள்ளலாகிய இறைவனது தொண்டனாகிய திருநீலகண்டநாயனார், எங்கள் பெருமானே! அடியேன் அடிகளுக்குச் செய்யத்தக்க பணி யாதென்று கேட்டனர். சிவயோகியாய் வந்த மஹாதேவனாகிய இறைவனும் (அப்பெரியோரைநோக்கி) நம்பீ! என்னிடத்துள்ள இத்திருவோட்டை உன்னிடத்தில் கொடுக்கின்றோம், அதனை நீவைத்திருந்து நாம் கேட்கும்பொழுது நீ கொடுக்கக் கடவாயாக என்பதாம்.

வம்புலாமலர்ச்சடை வள்ளல்தொண்டனார், எம்பிரான் யான்செயும் பணியெது என்றனர், உம்பர்நாயகனும், நம்பி, இவ்வோடு உன்பால்வைத்து, நாம் வேண்டும்போது நீதருக என்றுகூட்டுக.

செய்நன்றிமறவாமைக்கு நாம் செய்யத்தகும் பணியாதென்று எண்ணி வினவிய அப்பெரியோர் அடியார் யாதுவேண்டினும் இல்லையென்னாது அளித்தற்கு அவர் பெரிய

---

பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பான்" என்ற சுருதியானறிக. எனவே தாவரரூபமாகக் காணப்படும் இறைவனே சங்கம உருவமும் உடையவனாகலான் தாவரரூபமாகச் சிவனைக்காணும்பொழுது சிவனாகவும், சங்கமரூபமாகக் காணும் பொழுது தொண்டராகவும் காணுதல் சிறப்புடைத்தாமென்க. ஆகவே இங்கு சங்கமராக வந்தவர் இறைவனேயாகலான் சங்கமராகவே எண்ணிய அவரது புண்ணிய அறிவின்சிறப்புத் தோன்ற சடைமுடிப்பிரானைத் தொண்டரென்று உறையுளில் அணைத்தனரென்றனர்.

வன்னற்றன்மையுடைத்தானவர் என்று அவரதுபெருந்தகைமை அறிய, வம்புலா மலர்க் கடை வல்லைல் தொண்டனா எனவும், வந்தசிவயோகியார் அந்நாயனாரை வள்ளலாகிய வள்ளலே யாகலினானும். அவரிடத்துள்ள பொருளெல்லாம் தாம்கொடுத்த பொருளே யாகலினானும், தாம்கொடுத்த பொருளைத் தாம் மீண்டும்கேட்டல் அறமன்றாகலானும், இவர்பால் ஒருபொருளும் கேட்கவந்தவ ரன்றாகலானும், *"பாத்திரம் சிவம்என்று பணிதிரேல், மாத்திரைக்குள் அருளும் மாற்பேறர்" என்ற தமிழ் வேதமொழிப்படி தம்மைப் பாத்திரமாக ஆள்பவருள் இவரைப்போலும் தம்மை யாள்பவரில்லை என்னும் அந்த வுண்மைதோன்றவே வந்தவராகலினானும், அவர்பால் ஒன்றும் வேண்டாது தாம்வந்தவுண்மை யாவரும் அறிய இவ்வோடு உன்பால் வைத்து நாம் வேண்டும்போது நம்பி! நீ தருக என்றார்.

இத்திருப்பாசுரத்தால், நாயனார் யான்செய்யும்பணி யாதென்றுகேட்க, நாயனாருக்கு நாயகனாகிய உம்பர்நாயகன் வேறொருபணியும் சொல்லாது நாம்கொடுக்கும் பாத்திரத்தை மீண்டும் நாம்கேட்கும்போது கொடுப்பதேயாம் என்றருளியவைத் கூறப்பட்டது.

எனவே, ‡ "அன்பிலாரெல்லாந் தமக்குரியர்" என்றபடி, இறைவன்பால் அன்பில் லாத உலகினரெல்லாம் அவ்விறைவன்பாலே தாம் அனுபவிக்கப்படும் பொருள்களெல் லாம் பெற்றவராயிருந்தும், அவ்விறைவனுக்கும் அவனடியார்களுக்கும் ஒன்றேனுங் கொ டுப்பதற்கு எண்ணாது ஒளிக்குந் தன்மையையுடையராயினரென்னும் அவரது கொடுமை யும், "அன்புடையார் என்பும் உரியர்பிறர்க்கு" என்றபடி, ஒழுகவல்ல இவரது நன்மை யும் வெளிப்படுத்தப் பாத்திரமொன்றைத் தான்கொடுத்து நாம்வேண்டும்போது தருக வென்று வைத்தது கூறப்பட்டது. (௧௫)

தன்னை யொப்பரியது தலத்துத் தன்னுழை
துன்னிய யாவையும் தூய்மை செய்வது
பொன்னினும் மணியினும் போற்ற வேண்டுவ
தின்னதன் மையதிது வாங்கு நீயென.

(எ - து.) (நம்பீ! என்னால் கொடுக்கப்படும் பலிபாத்திரமாகிய இத்திருவோடு) இவ் வுலகின்கண் தனக்குச் சமானமாக ஒருபொருளையும் சொல்லுவதற் கில்லாமல் தானே மேம்பட்டுள்ளது, தன்னிடத்துப் பொருந்திய எல்லாப்பொருளையும் பரிசுத்தஞ் செய்ய வல்லது, இத்தன்மைத்தாகிய சிறப்பினையுடையதாகும். ஆகலின், இதனை நீ எளிதாக நினையாமல் பொன்னைப்பார்க்கிலும், இரத்தினத்தைப் பார்க்கிலும் சிறந்ததாகப் பாது காத்தல்வேண்டும். இதனை நீ வாங்குவா யென்றனர் என்பதாம்.

தலத்துத் தன்னையொப்பரியது எனக்கூட்டுக.

தனக்கு ஒருவரையும் ஒப்பாக உடையவனல்லாத இறைவனைப் பாத்திரமாகப் பெற்றாரால் ஆளப்படும் பாத்திரம் இஃதேயன்றி இவ்வுலகின்கண் வேறில்லை என் பார். தலத்துத் தன்னையொப்பரியது என்றார். மூழ்கினாரைச் சிவத்துரோகங்களாகிய பாதகங்களினின்றும் நீக்கிப் பரிசுத்தமாக்கவல்ல தீர்த்தவிசேடம்போலும், பரிசுத்தம் அடைந்தவராய்த் தம்மைத் தெரிசிக்கவந்தாரைச் சிவமாந்தன்மையைப் பெறுவிக்கவல்ல மூர்த்திவிசேடம்போலும், தம்மிடத்தில் நிலைபெற்றுவாழும் உறுதியுடையாரைச் சிவ மாந்தன்மையை அடையவொட்டாது அலைக்கவல்ல பாசச்செயலைச் செய்யவொட்டாது அருட்பணியையே செய்விக்கவல்ல க்ஷேத்திரவிசேடம்போலும், இம்மூன்று விசேடத் தையும் தம்மை யடைந்தார்க்கு உபதேசித்து அவ்வப்பிரயோசனத்தை யடையுமாறு செய்

* திருநாவுக்கரசர் தேவாரம், குறுந்தொகை.
‡ திருக்குறள் அதிகாரம் - அன்புடைமை.

விக்கவல்ல சங்கமசொரூபமா யெழுந்தருளியிருக்கும் சிவயோகிகளைப்போலும், பொய்மையாளரால் விரும்பப்படும் நற்குலம் இல்லாதவராயினும் மெய்மையாளரால் விரும்பப்படும் உள்ளன்புடையராயின், அவரிடம அன்னத்தையும் த்தமாக்குந் தன்மையிற் சிறந்ததென்னுந் தன்மைதோன்ற தன்னுழை துன்னியயாவையுந் தூய்மைசெயவது என்றார். பொன்னை ஓடாகவும், மணியைக் கல்லாகவுங் கருதி, நாம் இவ்வோட்டைப் பாதுகாக்கும் தன்மையுடையேம், பொன்னையும் மணியையும் போற்றும் இயல்பினையுடையார் உலகினர். ஆகலின் நீ அவர்களைபபோல் அவைகளைப பொருளாகக்கருதாது, இத்திருவோட்டையே நீ பாதுகாக்கபபடும் பொருளாக எண்ணிப போற்றுவாயாக என்பார் பொன்னினும் மணியினும் போற்றுவேண்டுவது என்றார். பொன் மணி முதலியவற்றினும் மேம்பாடாகப் போற்றுந்தன்மையும் உன்னிடத்து உள்ளதென்பது நீ ஓடளிக்குந்தொண்டால் காணபபடலால் இதனை வாங்கத்தக்கவன் நீயே என்பார். இது வாங்கு நீ என்றார்.

இத்திருப்பாசுரத்தால், எத்தகைத்தான பரமயோகிகளையும் ஞானிகளையும் ஓரிமைபபொழுதில் அபரிசுத்தமாக்கி அவர்களை அபாத்திர மாக்கவல்ல பெண்ணாசையை, பெண்ணுருவத்தை யுடைய தன்மனையாட்டியினாலேயே அப்பெண்ணாசையை நீத்துப, பெண்ணுருவுடைய அருள்வசபபட்டு எம்மால் ஆளபபடும அன்பாகாரமாய் விளங்குந் தன்மையார் இவரென்று யாவருக்கும் அறிவிக்க இவர்பால் தந்த திருவோடாகிய பாத்திரத்தின் சிறப்பைக் கூறப்பட்டது. (௧௬)

## ஓட்டைக்காவலிடத்தில் வைத்து இறைவரைக்காண்டல்.

தொல்லைவேட் கோவர்தம் குலத்துள் தோன்றிய
மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்
டெல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
எல்லையில வைத்துவந் திறையை எய்தினார்.

(எ-து.) பழமைஎனப்படும் குயவர்குலத்துள் அவதாரஞ்செய்த, நிறைந்தபுகழினையுடைய திருநீலகண்டநாயனார், (சிவயோகியாரால் கொடுக்கப்பட்ட திருவோட்டினை) அடிபணிந்து (இருகையாலும்) வாங்கிக்கொண்டு, அக்கணமே விரைவாய்த் தமது வீட்டினுள்ளே மிக்ககாவலுள்ள ஓர் அறையில் ஓர்பககமாகவைத்து, உடனே சிவயோகியார்பால் வந்தடைந்தன ரென்பதாம்.

அனுலோமப் பிரதிலோமங்களைபபோல் இடையிலேவந்த குலங்களைப்போ லல்லாமல் விதிமுறையாய் விதிக்கபபட்டுள்ள குலங்களைப்போல் பழமை யுடைத்தென்பார் தொல்லைவேடகோவர்தங் குலம் என்றார். திருநீலகண்டமென்ற ஓர் சொல்லாணையால் கடத்தற்கரிய காமத்தைத் தமதுதொண்டின் திறத்தால் மிக எளிமையாய்க் கடந்த பெரும்புகழாளனார் என்பார் *மல்குசீர்த் தொண்டனார் என்றார். தன்னையொப்பரியாராகிய சிவயோகியார் "தன்னுழை துன்னியயாவையும் தூய்மைசெய்வது" ஆகலின் இதனை நீவாங்குவாய் என்று நமதுகையிற்கொடுக்க எண்ணியதுபோலும் எங்காள்

* மல்குசீரென்றது - திருநீலகண்டமென்னும் ஆணைவழியில் நின்றதனால் உண்டாகிய புகழ் எனவும், மனையில் ஓர்மருங்கு என்றது - உடம்பகத்துள்ள உயிர் உணர்வு எனவும், காப்புறும் எல்லைஎன்றது - இந்திரியவிடயங்களில் செலுத்தி மயங்கச்செய்து அறிவினை மறக்கச்செய்யவல்ல மனத்தின் சார்பொழிந்து, இந்திரிய விடயங்களாலுண்டாகும் சிற்றின்பத்தைமாற்றிப் பேரின்ப சுகானுபவம் உண்டாதற்கான அருள்நெறியில் நிற்கச்செய்யவல்ல வைராக்கியாதி சீலகுணங்களெனவும், வைத்து என்றது - அக்குணங்களில் தம்முணர்வைவைத்து அவ்வுணர்வுருவாய் அருளைமறவாது வைத்துஎனவும், இறையை எய்தினாரென்றது - அவ்வருளால் சிவமேயாயினா ரெனவும்பொருள்கொள்க.

நம்மை அவ்வருளுக்குள்ளாக்கித் தூய்மைசெய்வாரோ என்று அவ்வருளைப்பணிந்து அருளுருவாகிய அத்திருவோட்டினைப் பெற்றுக்கொண்டன ரென்பார் வணங்கி வாங்கிக்கொண்டென்றார். பணிந்து பெற்றுக்கொண்ட திருவோடாகிய அருளை மறக்கத்தரும் மனத்துள் வையாது திருநீலகண்டத்தின்கண் மறப்பினை யறியாத தமது உடம்பகத்துள்ள வுணர்வினுள்ளே அக்கணமே வைத்தனரென்பார் ஒல்லையில் மனையில் ஓர்மருங்குவைத்து என்றார். அவ்வுணர்வென்னும் அவ்விடம் தமது மனையாட்டியாரிட்ட ஆணையை இளமைப்பருவந்தொட்டு முதுமைப்பருவம் வந்துள்ள அப்பருவங் காறும் காத்துள்ள காவலிடமென்பார் காப்புறும் எல்லை என்றார். உனது அருளை ஓர் ஓடுருவாகக் கைக்கொண்டு இதனை நீ வாங்குவாயென் றளித்ததனை மீண்டும் தேவரீர் வாங்காது அவ்வருளை என்பாலேயிருத்தி அவ்வருள்வழியே உன்னை நான் வந்தணுக திருவுளத்தெண்ண வேண்டுமென்னும் எண்ணத்துடன் சிவயோகியார்பால் வந்தடைந்தன ரென்பார் இறையை வந்தெய்தினார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான் சிவயோகியார் கொடுத்ததிருவோட்டை, நாயனார் பெற்றுக்கொண்டு, காவலுட்சிறந்த ஓர்வீட்டினுள்வைத்து, மீண்டும் சிவயோகியார்பால் வந்தார் என்பதும், திருவோடாகிய திருவருளைச் சிவனார்பால்பெற்று காவலுட்படாத மனத்தகத்துள்வைக்காமல், உணர்வகத்துள் வைத்தாரென் பதூஉங் கூறப்பட்டது. (கஎ)

வைத்தபின் மறையவர் ஆகி வந்தருள்
நித்தனார் நீங்கிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தாம் அம்பலம் அணைய மேவினார்.

(எ - து.) (திருவோட்டை ஒருவரும் போதற்கிடனில்லாத ஓர்காவலுள்ள விடத்தில்) வைத்துவிட்டுச் சிவயோகியார்பால் நாயனார் வந்தபின்னர், பிராஹ்மண வேடங்கொண்டு வந்தவராகிய இறைவனார், (நாயனார் வீட்டைவிட்டுத் தமதிடத்தை நோக்கி) நடக்க, (அவரருகே) நின்றவராகிய நாயனாரும் (பிரிவாற்றாமையான் அவர்முன்போகாது அவரை முன்னே) போகும்படிச் செய்து தாம் அவர்பின்னே விடாதுசென்று, (பின்னர் அம்மறையவனார்) விடைகொடுக்க, (அதனைத்தடுப்பதற்குக் கூடாதவராய் அவ்விடையை) மேற்கொண்டு மீண்டனர். அவரை யாட்கொள்ளவந்த அம்பலவாணரும், தமது சிற்றம்பலத்தைச் சேருவாராய் எழுந்தருளினார் என்பதாம்.

திருவோட்டை வீட்டினுள்ளேயும், அவ்வோடுருவாய் நின்ற அருளைத் தமது உள்ளத்திலேயும் வைத்துவந்தபின் என்பார் வைத்தபின் என்றார். திருவோட்டில் திருவருளையும், அந்தணர் வடிவத்தில் தமது சிவரூபத்தையும் மறைத்துவந்தனரென்பார் மறையவராகி என்றார். இவ்வாறு வந்தது இறைவனுக்குத் தம்பால் அருள்வந்து வந்ததென்பார் வந்தருள் என்றார். நாயனார் உள்ளத்தின்கண் எப்பொழுதும் நீங்காது வாழ்பவரென்பார் நித்தனார் என்றார். நாயனாருக்கும் அவரது மனைவியாருக்கும் வளர்ந்து வரும் முதுமைப்பருவம் நீங்கவும், அவ்விருவரும் கொண்டிருக்கும் ஆணை தற்போதத்தில் நின்று நீங்கவும் நீங்கினரென்பார் நீங்கிடஎன்றார். இறைவன் எண்ணியவாறே அவ்வருட்செயல் நிகழ நாயனார் நின்றனர் என்பார் நின்றதொண்டரென்றார். இறைவனாகிய நீ இனிகாட்டும் அருள்வழி முன்னாக, நான் பின்னாகச்செல்லும் செயலைக்காட்டினாலும் நான் எங்ஙனமோ என்று அதனை யுணர்த்துவார்போன்று அவ்விறைவன்பின் பேயினரென்பார் உய்த்துடன்போய் என்றார். இறைவனும் அஃதுணர்ந்து அவ்வாறே நாம் காட்டவருவோமாக என்று விடைகொடுக்க அவ்விடையை நாயனாரும் உட்கொண்டு "நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்குநாயகம்" என்று அவனாணையைக் கடவாது வந்தனரென்பார் விடைகொண்டு மீண்டனர் என்றார். நாயனார் மீண்டபின்னர்

நாயனாரைவிட்டு மீளஅறியாத இறைவனார், நாயனார் எண்ணியபடியே அந்தபல(பிரயோஜன)த்தை அவரடைய அருளிருக்கும் இடத்தை யடைந்தனரென்பார்—அத்தர்தாம் அம்பலம் அணையப்போயினார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், சிவயோகியாய் நாயனார்பால்வந்த இறைவனார் அவரிடத்தில் நின்றும் நீங்கித் திருவம்பலமாகிய தில்லையை யடைந்தாரென்றும், அவ்வம்பலத் தாடியினின்றும் நாயனார் மீண்டு தமது இல்லத்தை யடைந்தாரென்றும், சிவயோகியார் திருவோட்டைக் கொடுத்ததற்கும், அதனை நாம் வாங்கிவைத்ததற்கும் உரிய பிரயோஜனத்தை நாம் என்று அடையப்பெறுவோமோ என்று எண்ணித் திரும்பினார் நாயனாரென்றும், சிவயோகியாரும் அந்தபிரயோஜனத்தை அவரடைவதற்கே அம்பலத்தை யடைந்தாரென்றுங்கூறப்பட்டது. அம்பலமென்றது அந்தப்பிரயோஜனம் எனப்பொருள்.(கஅ)

## இறைவனார் மீளவும் வருதல்.

### வேறு.

சாலநாள் கழிந்த பின்பு தலைவனா தாமுன் வைத்த
கோலமார் ஓடு தன்னைக் குறியிடத் தகலப் போக்கிச
சீலமார் கொள்கை யென்று மதிருந்துவேட் கோவர் தமபால்
வாலிதாம் நிலைமை காட்ட முன்புபோல் மனையில் வந்தார்.

(எ - து.) (நாயனாரைவிட்டு அம்பலத்தை யணைந்த) இறைவனார், அனேகநாள் சென்றபின்னர், (மாதரைத்தீண்டேன் என்றுகொண்ட) சீலத்தினின்றும் என்றும் மாறுபடுதலை யறியாத திருந்திய சித்தத்தையுடைய நாயனார்பால், ஆன்மசுத்தியினுடைய நிலைமையை விளக்கமாய்க்காட்ட (அந்நாயனார்பால் நாமவேண்டும்போது தருக என்று) தாம முன்னே கொடுத்து வைத்திருந்த, (தன்னிடத்துப பொருந்திய எவ்வகைப்பொருளையும் தூயமைசெய்யவல்ல கோலத்திற்சிறந்த திருவோட்டை நாயனார்) காவலாகவைத்திருந்த இடத்தினின்றும அகன்றுபோமபடிச்செய்து, கீள் கோவணம் திருநீற்றொளி முதலியவற்றோடு எவ்வண்ணம் முன் சிவயோகியாய் வந்தனரோ, அவ்வண்ணமாகவே நாயனாரது திருமாளிகையைநோக்கி வந்தனர் என்பதாம்.

தலைவனார், சாலநாள் கழிந்தபின்பு, சீலமார் கொள்கை, என்றுந்திருந்து வேட்கோவர் தம்பால், வாலிதாம் நிலைமை காட்ட, தாம முன்வைத்த கோலமார் ஓடுதன்னைக், குறியிடத் தகலப்போக்கி, முன்புபோல், மனையில்வந்தார் எனக்கூட்டுக.

ஆன்மாக்களுக்குத் தனுகரண புவனபோகங்களைக் கொடுத்தகாலம் - அநாதிபெத்தக் காலம். அத்தனுவாதிகளைத் தன்னுடைமையாகக் கேட்கவருங்காலம் முத்திக்காலம். அவ்விருகாலத்தையும் அளவிடத்தொடங்கின் அது அளவிடக்கூடாதாகலின் அக்குறிப்புத்தோன்ற. இத்தனைநாள் கழிந்துவந்தாரென்று கூறாது சாலநாள் கழிந்தபின்பு என்றார்.

இதனால் சாலநாள் என்றது - அநாதிபெத்தககாலமெனவும், கழிந்தபின்பு என்றது - அபபெத்தநிலை நீங்கப்பெற்ற முததிக்காலமெனவும், ஈண்டு சாலநாள்கழிந்த என்பதில் பெத்தமுத்தி என்னும் இரண்டுகாலமும் அடங்குதலின் தாமுன்வைத்த என்றது - எந்தக் காலத்தைக் குறித்ததோவெனின் முத்தி - சீவன்முத்தி, பரமுத்தி என இருவகையாகலின், ஈண்டு முன் என்றது - சீவன்முத்தி நிலையைக்குறித்த காலமென்க. அஃதாவது திருவோடு கொடுத்தகாலம். மீண்டும் வந்தகாலம் - பரமுத்திநிலையைக் குறித்ததென்க. அநாதிகாலந்தொட்டு கொடுத்துவந்த தனுகரணாதிகளாகிய ஓடு மாயாமல சம்பந்தப்பட்ட ஓடு. சீவன்முத்தி நிலைக்கண்கொடுத்த இவ்வோடு - அருளுருவாகிய ஓடாகலின் கோலமார் ஓடு என்றார். எனவே - அது இருள்மயமாகிய அஞ்ஞானசம்பந்தமுடையது. இது ஒளிமயமாகிய ஞானசம்பந்தமுடையது என்னும் பொருளைக்குறித்ததென்க.

னக்கென வேர்செயலற்றுத் தானதுவாய் நிற்கில், நாதனிவன் உடல் உயிராய் உண்டுறங்கிநடந்து, நானுபோகங்களையும் தானுகச்செய்து, பேதமற நின்றவனைத்தானுக்கி விடுவன்" என்று உண்மைநெறியிற் கூறியபடி நாயனார் சீவன்முத்தி நிலையராய் இறைவ னோடு ஏகமாகி எவ்விடத்தும் இறைவனருளன்றி ஒன்றையுஞ் செய்யாராய் வாழ்பவ ராகலின் அந்நாயனாரும், திருவோடுருவா யிருக்கின்ற அருளும், வேறாயிருத்தல் எவ்வாற் றானுங் கூடாது என்னும் அவ்வுண்மைதோன்ற திருவோடு இருந்தவிடத்திராவண்ணம் இறைவன் செய்தனனாகலின் ஓடுதன்னைக் குறிப்பிடத்தகலப்போக்கி என்றார்.

இறைவன் பாசக்ஷயம் வரப்பெறாத சீவர்களுக்குச் செய்யுஞ் அருட்செயலைத் தான் வேறாய்நின்று இருவினையின் வழியாய்ச் செய்வன். சீவன்முத்தர்களுக்குச் செய்யும் அருட்செயலைத் தான் அவர்களேயாய் அவர்கள் செய்யும் செயலெல்லாம் தன்செய லாகவேகொள்வன். ஆகலின் அந்நிலையினை யுடையராயினார் நாயனார் என்று குறித்தற்கு சீலமார்கொள்கை என்றுந் திருந்துவேட்கோவர் என்றார்.

இங்ஙனமான நிலையினை யுடையார் இந்நாயனார் என்பதை இறைவன் அறிவித்தா லன்றித் தாமே உயிர்கள் அறியாராகலான் வாலிதாம் நிலைமைகாட்ட வந்தார் என்றார்.

சீவன்முத்திநிலைக்கண் எவ்வாறு சிவதரிசனமாமோ, அவ்வாறே பரமுத்திநிலைக் கண்ணுமாகலான் முன்புபோல்வந்தாரென்றார்.

இத்திருப்பாசுரத்தான், சாலநாள் என்றது - அநாதிகாலம் எனவும், பின்பு என்றது முத்திக்காலமெனவும், முன் என்றது சீவன்முத்திக்காலம் எனவும், கோலமாரோடு என் றது ஞானமயமாய்ப் பிரகாசிக்கும் அருளுருவெனவும், குறியிடத் தகலப்போக்கி என்றது ஓடுருவாய்நின்ற அருள் அவ்வுருவாயிராது நாயனாரது அறிவுருவமாய் நின்றதெனவும், சீலமார் கொள்கை யென்றுந் திருந்துவேட்கோவர் என்றது - வேட்கோவர் அருளோடு கலக்கப் பெற்றாராகலின் இவரது செயலெல்லாம் இவர்செயலன்றாய் அருட்செயலாகத் திருந்தப்பட்டு நின்றதெனவும், வாலிதாம் நிலைமைகாட்ட வந்தார் என்றது - அருட் செயலாய்நிற்கின்ற சுத்தத்தன்மையை உயிர்களெல்லாம் அறியுமாறு அருளேமுற்பட்டுக் காட்டவந்ததெனவும், முன்புபோல் என்றது பாசநீக்கத்தில் தரிசனத்துக்கு வந்தசிவமே அனுபவத்திலும் எனவும், கூறப்பட்டது. (கக)

## இறைவன் திருவோட்டைக் கேட்டல்.

வந்தபின் தொண்ட னாரும் எதிர்வழி பாடு செய்து
சிந்தைசெய் தருளிற் றெங்கள் செய்தவம் என்று நிற்ப
முந்தைநாள் உன்பால் வைத்த மெய்யொளி விளங்கும் ஓடு
தந்துநில் என்றான் எல்லாம் தான்வைத்து வாங்க வல்லான்.

(எ - து.) (முன் ஓடளித்த இறைவனார்) தமது மாளிகையை நோக்கி வந்தபின்னர், நாயனாரும் அவ்விறைவனார் எதிரேவந்து (மிக்கஆவலுடன்) நமஸ்காரஞ்செய்து, தேவ ரீர் எங்களையும் ஒருபொருளாக எண்ணி இம்மனைநோக்கிவந்தது, எங்களால் செய்யப் பட்டுள்ள தவத்தின் விசேடந்தானென்று (மிகவணக்கத்துடன்) சொல்லாநிற்க, (எல் லாங்கொடுத்து வாங்கவல்லவனாகிய இறைவனார் அவரைநோக்கி) நீ நிற்பதொழிந்து நான் முன்னொருநாளில் உன்னிடத்தில் கொடுத்துவைத்துள்ள மிக்கபிரகாசத்தோடு விளங்கும் திருவோட்டை, என்னிடத்தில் கொண்டுவந்து -கொடுத்துவிட்டு நிற்பாயாக என்றார் என்பதாம்.

சிவதரிசனம் எதிர்ப்படுவதற்கு முன் செய்ததொண்டே, சிவதரிசனம் எதிர்ப்பட்ட பின்னரும் செய்யவேண்டும் என்பது சித்தாந்தத்துணிபாகலின் வந்தபின்தொண்ட னாரும் எதிர்வழிபாடுசெய்து என்றார்.

"பேரருள்பெற்றும் பெருகினமுழங்கி நெஞ்சம்நெக்குருகி" அன்புபாராட்டுதல் மெய்யன்பாது செயலாகலின் சிந்தைசெய்தருளிற்று எங்கள்செய்தவம் என்றார்.

மெய்யன்புடையராகிய நாயனாருக்கு இனி அன்புநிறைவே சிவானுபூதி எனப் படும் சிவானந்த நிறைவாகலின், அச்சிவானந்தம் அப்பெரியோருக்கு நிறையும் வகை அவர்மனங் கசிந்து, உருகப்பெற்றாலன்றிக் கூடாதாகலான், அது கூடுதற்பொருட்டு அவர்பால் முன்புவைத்துள்ள அருளை (ஓட்டை) மிகவும்விரைந்து நாடினாராகலின் முந்தைநாள் உன்பால்வைத்த மொய்யொளிவிளங்கும் ஓடுதந்து நில்லென்றார். தன் அன்பர்கள்பால் தனது அருளைவைத்துப் பின் அவர்கள்பாலுள்ள எனதெனப்படும் எல்லாபொருளையும் தனதாகவாங்கும் வல்லாளனாகலின் தான்வைத்து எல்லாம் வாங்க வல்லான் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், பாசக்ஷயம பண்ணுவதும், அருள்விளக்கம்செய்வதும், சிவானந்தம் விளைவிப்பதும் தொண்டேயாகலான், நாயனாரும் அதனையே கடைப்பிடித்தாரென்பதும், இறைவனும் அந்நிலையே அவர்க்கு நீங்காதிருத்தற்குத் தமது அருட்செயலைச் செய்யத்தொடங்கினாரென்பதும் கூறப்பட்டது.

இதனால் எனதெனப்படும் பொருளை இறைவன் தனதாக எவர்கள்பால் வாங்க வல்லனோ அவர்கள்பாலே அவனருள் உளதெனவும், அங்ஙனம் வாங்கவல்லனல்லனாயின் அவர்கள்பால் அவனருள் இலதெனவும் அறியக்கிடக்கின்றதெனக். (௨௭)

நாயனார் திருவோடுகாணாமல் சொல்லிறந்து நிற்றல்.

என்றவர் விரைந்துகூற இருந்தவர் ஈந்த ஓடு
சென்றுமுன் கொணர்வான் புக்கார் கண்டிலர் திகைத்து நோக்கி
நின்றவர் தம்மைக் கேட்டார் தேடியும் காணார் மாயை
ஒன்றுமங் கறிந்திலா தார் உரைப்பதொன் றின்றி நின்றார்.

(இ - ள்.) சிவயோகியாய் வந்தவர் (எனது ஓட்டை என்னிடங்கொடுத்துப் பின்னர் நிற்கக்கட வாயென்று) மிகவிரைவாய்க்கூற, (அச்சொல்லைக்கேட்டநாயனார்) அந்தப்பெரிய சிவயோகியார் தன்னிடத்தில் கொடுத்த திருவோட்டை அவர்சொல்லியபடியே சீக்கிரமாய்க் கொண்டுவந்துகொடுக்க, (அவரதுசொல்விரைவினும் விரைந்து) சென்று திருவோட்டைவைத்த அறைக்குட்போய்த் தான்வைத்த இடத்தில் பார்க்க, அவ்வோட்டைக் காணாதவராய் மனந்திகைத்து, தம்மோடு வந்து நின்றவராகிய மனைவியாரை நோக்கி நாம் இங்குவைத்தவோடு காணாதொழிந்ததற்குக் காரணம் என்னையென்று கேட்டனர். (அங்ஙனங் கேட்டு அதற்கு மறுமொழிவருமளவும் ஆற்றாதவராய் தம்மனைமுற்றுந் தேடினர்.) தேடியும் காணாமையால் இஃதென்னமாயை என்று தாம் எண்ணவேண்டிய அளவும் எண்ணிப்பார்த்தும் (அம்மாயை சிவனார்செய்த மாயையாகலின்) ஒரு சிறிதும் அறியாராயினர். (அறிவதற்கில்லாதொழியவே) நாயனார் இஃது நாம் அறிவதற்கில்லாதொழியினும் இனிச்சிவயோகியாருக்குச் சொல்லும்சொல் யாதென்று எண்ணிப்பார்த்தனர். எண்ணிப்பார்த்தும் ஒருசொல்லும் அறிந்திலர். சொல்லும் இல்லாதொழியவே, பேசுஞ்சொல்லும் செய்யும்செயலும ஒன்றுமின்றி அருளையே நாடிநின்றனர் என்பதாம்.

ஆன்மாக்களுக்கு ஆணவாதிபந்தம் நீங்குதற்பொருட்டுத் தனுகரணாதிகளை வெவ்வேறாகக்கொடுத்து வைத்துவருவதிலும், அவற்றால் மலபந்தம்நீங்கி அருள்நிலைகூட வருங்காலத்து, அத்தனுவாதிகள் பாசவிஷயங்களில் உழலாது, தன்னருள்வழியில்நின்று உழல அவைகளைத் தம்முடைமை என்றுகூறி வாங்கிவருவதிலும் தீவிரமுடையவனாகலின் விரைந்துகூற என்றார். இவ்வகைத்தான தீவிரமுடையவனே ஓடுதந்துநில்லென்றானாகலின் என்றவர் என்றார்.

அழிதலையுடைய யாகமுதலிய தவவிரதாதிகளுக்கு இந்திரன்முதலியோர் கர்த்தாக்களாயிருத்தல்போல், அழிவற்ற சரியையாதி மெய்த்தவங்கட்கு இவரே கடவுளாகலான் இருந்தவரென்றார்.

அம்மெய்த்தவத்திற்கு அபாத்திரமாகாது, பாத்திரமாயுள்ள நாயனாருக்குத் திரோதசத்தியால் ஓடுருவாயிருக்கும் அருட்பாத்திரத்தைக்கொடுத்து, பின் அவர் திரோதசத்தியின்செயலினின்று நீங்கி அருட்செயலின்வழியாய் நின்றுழல, அம்மெய்த்தவத்தலைவர் ஓட்டைத்தர, அது அங்ஙனமே திரோதவுருவமாய்நின்ற ஓடுருவொழிந்து, சிவயோகியாய் வந்த இறைவனது அருளுருவேயாய் அவரைககாட்டி அவரருள்வழியில் உழல மறைந்ததாகலின் ஈந்தஓடு கண்டிலா என்றார்.

"நாயிற்கடையாம நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய், மாயப்பிறவி உன்வசமே வைத்திட்டிருக்கும் அதுவல்லால், ஆயக்கடவேன் நானேதான் என்னதோ இங்கு அதிகாரம், காயத்திடுவாய் நின்னுடைய கழற்கீழ்வை பாய் கண்ணுதலே" என்ற திருவாசகப்படி, இறைவன் அருட்பணியில் நின்று அவன் ஏவியவற்றைச் செய்வோர், சரீரத்திற்புகுதற்கேதுவாய் நிற்கும் திரோதானசத்தியின்செயலும், திருவடியின்கீழ் புகுதற்கேதுவாய் நிற்கும் அருட்சத்தியின்செயலும் இறைவன்செயலன்றி இல்லையென்றுணர்ந்து எச்செயலும் செய்வோராகலின், "இதுவாங்குநீ" என்ற காலத்தினும் வாங்கினார், "உன்பால்வைத்து, நம்பீ நாம்வேண்டும்போது நீதரு" என்றபோதும் காயபிடத்தில் வைத்துவந்து தேவரீர் ஆணைக்கு உட்பட்டவனாயிருக்கின்றேன் என்று விடைகூறி அனுப்பினார், பின்னர் "சாலநாள்கழிந்தவர்க்கு, முந்தைநாள் உன்பால்வைத்த ஓடுதந்திடில்" என்றுசொல்லியபடியே அவர்முன்னேநில்லாது உள்ளேசென்றனராகலான்—சென்றுமுன்கொணர்வான்புக்கார்—என்றார்

அருள்வசப்பட்டார்க்கும் திரோதச்செயல் நிகழுமாகலான், அத்திரோதச்செயலில் நின்றகாலத்தும், அதுவொழிந்து அருட்செயலில் தலைப்பட்டகாலத்தும், அவ்விருசெயலையும் இறைவன் உணர்த்த உணருந்தன்மையேயன்றி, தாமே உணரும் சுதந்தரமிழந்தவராகலின் நினைந்து என்றார்.

உணருஞ்சுதந்தரம் இழந்த இவர் உணாத்துஞ்சுதந்தரமுடையவனை "கூறுநாவே முதலாகக்கூறுங்கரணம் எல்லாம்நீ, தேறும்வகைநீ திகைப்புநீ தீமைநன்மைமுழுதும்நீ, வேறோர்பரிசு இங்கொன்றில்லை மெய்ம்மை உன்னை விரித்துரைக்கில், தேறும்வகையென் சிவலோகா திகைத்தால் தேற்றவேண்டாவோ" என்ற திருவாசகப்படி, ஓடு காணாது திகைத்தகாலத்து அத்திகைப்பையப்போக்கி தெளிவிக்க இறைவனை நோக்குவது அருளாள்வார்க்கு இயல்பாகலான் நோக்கி என்றார்.

அங்ஙனம்நோக்கும் நோக்குடைய அவர் ஓரோவழி பொறிபுலன் கரணவசப்பட்டு, அவைகளின் உணர்வையும செயலையும்நாடி நோக்கினும், அவைகள் அருட்பிரகாசம் உடையார்முன்னே பிரகாசங்கெட்டிருக்குமேயன்றி ஒருணர்வையும் ஓர் செயலையும் உடையனவாகக் காட்டாவாகலின்—மாயையொன்றும அங்கறிந்திலார்—என்றார்.

மாயைஎல்லாம் செய்யவல்ல மாயையே செயலற்றுநின்ற காலத்து அம்மாயையால் வசப்பட்டாரும், அம்மாயாவசப்பட்டபொருள்களும பயனற்றுப்போவாரும், பயனற்றுப் போவனவுமாயிருக்குமேயன்றி பயன்படாவாகலான்—நின்றவர்தம்மைக்கேட்டார் நேடியுங்காணார்—என்றார்.

பாசச்செயலுமற்று, பசுச்செய்லுமற்றுப்போனகாலத்து மனவாக்குகளுக்குச் செயலில்லையாகலின்—உரைப்பது ஒன்றின்றி நின்றார்—என்றார்.

இதனால், இறைவன்தம்மடியார்களைத் தன்னருள் வழிநிற்கச்செய்யும் செயலின் திறத்தையும், அஃதேபோல் அவரும் அவ்வருட்செயலில் மாறுபடாது உழலுந்திறத்தையும் உலகம் உணர்ந்து உய்யுமாறு பிரகாசமாய் உணர்த்தியவாறென்க

இத்திருப்பாசுரத்தான் நாயனார் தமது செயலற்று இனி மேல்விளைவதாகிய அருட்செயல் தோன்றாது நின்றநிலை கூறப்பட்டது. (உக)

உள்ளேசென்றநாயனாரை யழைத்தல்.

மறையவ னாகி நின்ற மலைமகள் கேள்வன் தானும்
உறையுளிற் புக்கு நின்ற வொருபெருந் தொண்டர் கேட்ப
இறையிலிங் கெய்தப் புக்காய் தாழ்த்ததென் என்ன வந்து
கறைமறை மிடற்றி னானைக் கைதொழு துரைக்க லுற்றார்.

(எ - து.) (நாயனார், சிவயோகியாருக்கு நாம் சொல்லக்கடவது என்னென்று திகைத்து உள்ளேநிற்ப) வெளியே அந்தணச் சிவயோகியாய் வந்துநின்ற உமாநாதனாகிய இறைவனும், அங்ஙனம் உள்ளேநின்ற அந்த ஒப்பற்ற பெரியதொண்டர் கேட்கும்படி (திருவோடுகொண்டுவரச் சென்ற நாயனாரே!) நீர், ஒருநொடிப்பொழுதில் என்னிடத்தில் திருவோடுடன் வருகின்றேனென்று உள்ளேபுகுந்தீரே! அந்த நொடிப்பொழுது நெடும்பொழுதாயும் என்னிடம் வருவதொழிந்து வாராதிருப்பது என்னென்று (பெருங்குரலிட்டுக்) கூவ, (அக்குரலொலி நாயனார் செவியில் அதிவேகமாய்ப் புக்கது; புகவும், திகைத்துநின்ற அத்திகைப்பினும் பெருந்திகைப்புடையராய்) சிவயோகியார்முன்னே வந்து அந்தநீலகண்டரைக் கைகளால் அஞ்சலிசெய்து விண்ணப்பஞ்செய்யத் தொடங்கினார் என்பதாம்.

தன்னுருவையும், தான் செய்யவந்திருக்குஞ் செயலையும் பிறரறியாவண்ணம் வந்து செய்யவந்தனனாகலின் மறையவனாகி என்றார். உருவையும் செயலையும் மறைத்தானாயினும் தன்னைமறைக்காது தான் நின்றனனாகலின் நின்ற என்றார். இறையில் இங்கு எய்தப்புக்காய் தாழ்த்தது என்னென என்று கூவியசொல் விடம்போல் நாயனார் செவியில் புகுந்ததாயினும், அச்சொல் அவருக்கு அருளையேசெய்ய விரைந்துகூவியதாகலின் கறைமறைமிடற்றினானை என்றார். எனவே, கண்டத்தின்கண் காணப்படும் கறையாகிய விடம் தனக்குரிய கருநிறத்தைப் புறத்தில் காட்டியதேனும், அதன் அகத்தின் நின்றுசெய்தது அருளே யாதல்போல், கூவியசொல் புறத்தே வன்மையைக் காட்டியதேனும், அது செய்யபோவது அருளேயாகலின் அங்ஙனங் கூறியதென்க. அவன் அருளன்றி வேறுசெய்யானென்று குறித்தற்கு மலைமகள் கேள்வன் என்றார். இனி "உரைக்கலுற்றா" ரென்றது தாம் உள்ளத்திட் கொண்டிருக்கும் அச்சத்தைத் தாம் வாய்விட்டுச் சொல்லாமலே சிவயோகியார் உணருமாறு காட்டிய ஓர் அடையாளக்குறியன்றி, வணங்கிக் கூறத்தொடங்கினாரென்பதன்று.

இத்திருப்பாட்டான் இறைவன் தனது அருட்செயலை நாயனார்பால் செய்வதினுள்ள விரைவும், நாயனார் இறைவனாது அருட்செயலில் ஆட்பட்டொழுகுவதினுள்ள விரைவும் கூறப்பட்டது. (உஉ)

நாயனார் இறைவரைப் பொறுக்கவேண்டல்.

இழையணி முந்நூல் மார்பின் எந்தைநீர் தந்து போன
விழைதரும் ஓடு வைத்த வேறிடந் தேடிக் காணேன்
பழையமற் றதனின் நல்ல பாத்திரந் தருவன் கொண்டிப்
பிழையினைப் பொறுக்க வேண்டும் பெருகவென் றிறைஞ்சி நின்றார்.

(எ - து.) (கைதொழுது உரைக்கலுற்ற நாயனார் யாதுகூறத் தொடங்கினாரெனின்) நூலிழையாலாகிய முப்புரிநூலையணிந்த திருமார்பினையுடைய எமது முதல்வரே! தேவரீர் அடியேனிடத்தில் கொடுத்துப்போன விருப்பத்தை விளைவிக்கும் திருவோட்டை, அடியேன் வைத்தவிடத்திலுங் காண்கிலேன், வேறு மற்றெவ்விடத்திலுங்

தேடியுங் காண்கிலேன். ஆகலின் தேவரீருடைய அந்தத் திருவோட்டைப் பார்க்கி லும் பழைமையானதாயும் நல்லதாயுமுள்ள ஓர் திருவோட்டைக் கொடுக்கின்றேன்; அத னைப் பெற்றுக்கொண்டு, எம்பெருமானே அடியேனுக்கு இப்பொழுது நேர்ந்த இந்த குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும் என்று வேண்டி அடிபணிந்து நின்றனர் என்பதாம்.

தேவரீர் அந்தணராயிருத்தலால் எவ் வுயிர்கண்மேலும் தண்ணளியைப் பூண் டொழுகல் விரதமாகலினனும், அந்தணராயிருத்தற் கேற்பச் சிவயோகியாராயும் இருத்த லான் கோபம் பலிக்குமிடத்து அதனையெழாமல் அருளாற் றடுத்தல் கடனாகலி னனும், அவ்வொழுக்கநெறி யுடையாரே அந்தணரும் சிவயோகியும் ஆவாரென்னுங் குறிப்புத்தோன்ற பெரும, என்பிழையினைப் பொறுக்கவேண்டும் என்றார். அந்தண ராதலைக் காட்டுதல் முந்நூல் ஆகலினனும், யோகி என்பதைக்காட்டுதல் திருவோ டாகலினனும்,—இழையணி முந்நூன்மார்ப, விழைதரும் ஓடு,—என்றார். விழைதரும் ஓடு எனவே, சிவயோகிகள் திருவோடொன்றை விரும்புவாரேயன்றி பொன்முதலிய வேறெப்பொருளையும் விரும்பாரென்பததோன்ற விழைதரும் ஓடு என்றார். அடியேன் கொடுக்கும்வோடு தேவரீர்கொடுத்த வோட்டைபபோல் பழைமையானதே, அந்தவோட் டிற்கு, "தன்னையொப்பரியது" என்றும், தன்னுழைத் துன்னிய யாவையும் தூய்மை செய்வது என்றும், சிலநன்மைகளைக் கூறினீரே அந்த நன்மைகளும் உடைத்தானதே என அவருள்ளங்களிக்குமாறு கூறினரென்பதுதோன்ற—மற்றதனின் நல்லபாத்திரம்— என்றார். அடியேன் அடியார்களுக்குப் பழைய நல்லபாத்திரங் கொடுத்துவந்தவனே யன்றி, அவர்களிடத்தில் ஒருபாத்திரமேனும் பெற்று வைத்தவனு மல்லேன்; வைத்து அவர்களுக்கு அதை இல்லையென்று சொல்லிக் கவர்ந்தவனு மல்லேன்; இன்றுதான் நீர் கொடுக்கவும், நான் வாங்கி வைக்கவும், அதனை இல்லை யென்று சொல்லவும் ஆயி னேன். ஆகலான் இச்சொல்லை அடியார்களுக்கு என்றும் சொல்லிவந்தவனாக திருவுள் ளத்திற் கொள்ளற்க என்னும் அக்குறிப்புத்தோன்ற இப்பிழையினைப் பொறுக்க வேண்டும் என்றார். மற்றதனின் நல்லடைய பாத்திரம் அடியேன் தந்தாலும், தேவரீர் அதனைப் பெற்றுக்கொண்டபோதிலும், அடியேன் இல்லையென்னுஞ் சொல்லை சிவ யோகியாகிய தேவரீரிடத்தில் வழங்கினேனாகலான் அது பெரும்பிழையேயாம். ஆகவே அப்பிழை தேவரீர் பொறுத்தாலல்லது தீருதலின்று. ஆகலின் எம்பிழையினைப் பொறுத்து என்னை யுய்விக்கவேண்டும் என்று பிழைக்கஞ்சி— இப்பிழையினைப்பொறுக்க வேண்டு—மென்றலுமாம்

பழைய மற்றதனின் நல்லபாத்திரம் என்பதற்கு நீர்கொடுத்த பாத்திரம் பழையது, நான் கொடுக்கப போகும பாத்திரம் புதியது என்று பொருள்கொள்வாருமுளர்.

இத்திருப்பாட்டான் அந்தணராயும் சிவயோகியாராயும் இருபபார்க்குக் கோபத் தைத் தடுத்தலும் அருளுடையராயிருத்தலும் இன்றியமையாச் செயலென்று அறி வுறுத்தித் தம்பிழையைப் பொறுக்குமாறு கூறப்பட்டது. (உகூ)

## இறைவனார் தமது ஓடு கேட்டல்.

சென்னியால் வணங்கிச் சொன்ன தொண்டரைச் செயிர்த்து நோக்கி
என்னிது மொழிந்தவா நீ யான்வைத்த மண்ணோ டன்றிப்
பொன்னினால் அமைத்துத் தந்தா யாயினுங் கொள்ளேன் போற்ற
முன்னைநான் வைத்த ஓடே கொண்டுவா என்றான் முன்னோன்.

(இ - ள்.) (பிழையினைபபொறுக்கவேண்டும் என்று) தலையால்வணங்கிச்சொல்லிய நாயனாரை (சிவயோகியாய் வந்த இறைவன்) கோபித்துப்பார்த்து, நீ இது மொழிந்த

* திருக்குறள் வெகுளாமை என்னும் அதிகாரம் "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்பதற்கு வரைந்திருக்கும் உரையிற்காண்க.

வாறு என் (நீ, ஓடுவைத்தஇடம், வேறிடம், தேடிக்காணேன் என்றும் வேறொன்று தருகின்றேன் என்றும் சொல்லியது யாதுகருதி) (நீ யாதுகருதிச் சொன்னாயானாலும், நீ சொல்லியபடி) பொன்னாற் செய்தது கொடுத்தா யானாலும், நான் (உன்னிடம்) முன்னொருநாளில் போற்றி வைத்திருக்கும்படிகொடுத்த அம் மண்ணோடன்றி வேறொன்றைக் கைக்கொள்ளேன் ஆகலின் அத் திருவோட்டையே கொண்டு வருவாயாக வென்று யாவர்க்கும் முன்னவனாகிய இறைவன் கூறியருளினான் என்பதாம்.

பெரும்பிழை செய்தார், தலையால் தண்டாகாரமாக வணங்கிப் பொறுத்தல் வேண்டினால் பெரியோராயுள்ளார் பொறுத்தல் முறையென்பது தோன்ற சென்னியால் வணங்கிச் சொன்ன என்றார். நீர்கொடுத்தது பழையது, நான் உமக்கு இப்போது கொடுக்கப் போவது நல்லபாத்திரம் என்று தமது பாத்திரத்தைப் புகழ்ந்தும், அவரது பாத்திரத்தை இகழ்ந்தும் கூறினார் என்னும் பொருள்கொண்டவர்போன்று கோபித்துப்பார்த்து, கேட்டனரென்பது தோன்ற செயிர்த்துநோக்கி என்னதுமொழிந்தவாறு என்றார்.

"பொன்னினும் மணியினும் போற்றவேண்டுவது, இன்ன தன்மையது இது" என்று நான்சொல்லியதைச் சாமானியமாக நினைத்து, நான்கொடுத்த வோடு மண்ணோடென்றும், நீ கொடுக்கும் ஓடு பொன்னோடென்றும எண்ணினாயாயினும், என்மண்ணோடு எனக்கு வேண்டுமேயன்றி நீ கொடுக்கும் பொன்னோடு நான்வேண்டிக் கொள்ளத்தக்கதன்று என்று தனது சீலமுடைமை தோன்ற யான்வைத்த மண்ணோடன்றிப், பொன்னினால் அமைத்துத் தந்தாயாயினும் கொள்ளேன் என்றார். நான் போற்றி வைத்திருந்த வோட்டை நீபோற்றவைத்து நான வாங்கவந்தேனே யன்றி, என் ஓட்டைப் போற்றாது ஒழித்த உன்வோட்டை நான் வாஙக வந்தேனல்லேன் என்னும் அவ்வுண்மை தோன்ற முன்னை நான்போற்றவைத்த வோடே கொண்டுவாவென்றான் என்றார். நாயனாரது சிவானுபூதியின் உண்மையை வெளிப்படுத்த முற்பட்டுவந்து நிற்றலின் முன்னோன் என்றார்.

சென்னியால் வணங்கிச்சொன்ன தொண்டரை முன்னோன் செயிர்த்து நோக்கி எனக்கூட்டுக.

இத்திருப்பாசுரத்தான், இறைவன் கொடுத்தவோடு அருளுருவாகலானும், நாயனார் கொடுப்பதாகச் சொல்லும்வோடு தற்போதமாகலானும், அத்தற்போதத்தை இறைவன் கொள்ளுங்காலம் உயிர்கள் அருளைப் போற்றவருங் காலத்திலன்றிப் போற்றாத காலத்தன்றாகலானும், அவ்வுண்மை தோன்றவும், அருளைப் போற்றஅறியாது தற்போதத்தை ஒழித்துவிட்டோம் என்று கூறுவாரிடத்து இறைவன் அறக்கருணையைப் பாராட்டாது மறக்கருணையே பாராட்டுவானாகலின் அச்செயல் தோன்றவும், செயிர்த்து நோக்கி என்னிது மொழிந்தாய்எனவும், பொன்னினால் அமைத்துத் தந்தாயாயினும் கொள்ளேன் எனவும், நான்வைத்தவோடே கொண்டுவா வென்றான் எனவும் கூறப்பட்டது. (௨௪)

தேடிலாப் பெரியோய் என்பால் வைத்தது கெடுத லாலே
நாடியுங் காணேன் வேறு நல்லதோர் ஓடு சால
நீடுசெல் வதுதா னொன்று தருகின்றேன் எனவுங் கொள்ளா
தூடிநின் றுரைத்த தென்றன் உணர்வெலாம் ஒழித்ததென்ன.

(எ - து.) கூடா வொழுக்கமற்ற சிவயோகச் செல்வரே! என்னிடத்தில் நீர் வைத்திருக்கும்படி கொடுத்த திருவோடானது உருக்காணாது போனபடியினால், எங்குந் தேடித்தேடிப் பார்த்தேன், பார்த்தும் காணப்பெற்றேனில்லை. (ஆகலான்) மிகவும் நெடுங்காலம் நீடித் திருக்கத்தக்க நல்ல ஓர் திருவோட்டை கொடுக்கின்றேன் என்று யான் தேவரீரைக் கேட்டுக் கொள்ளவும், அதனை ஏற்றுக் கொள்ளாது, பிணக்குற்று நான்வைத்தவோடே கொண்டுவாவென்று சொல்லிய சொல்லானது என்னறிவு முழுவதையும் ஒழித்துவிட்டது என்றுசொல்ல என்பதாம்.

சிவயோகநிலைக்குரிய ஒழுக்கத்திற் கேடில்லாத பெரியோர் தேவீராகலின், யான் கொடுக்கும் ஓட்டைக் கைக்கொண்டு எனதொழுக்கமும் கேடுபடாவண்ணங் காத்தல் கடனென்பார் கேடிலாப்பெரியோய என்றார். தேவீர் கொடுத்த வோடு என்பால் வைத்துள்ள அருளுருவென்று மகிழ்ந்து கைக்கொண்டு என்பாலேவைத்தேன். அவ் வோடுருவானது கெடுதலால் உருவபதார்த்தங்களைக் காணவல்ல அறிவுடைய எனது சுட்டறிவால் அருளுருவாகிய அதனை நான் எங்ஙனங் காணவல்லே னாவேன் என்பார். என்பால்வைத்த அது கெடுதலாலே நாடியுங்காணேன் என்றார். நான் அருளுரு வத்தைக் கண்டிலனாயினும் அவ்வருளை ஓடுருவாய்க் கண்டேனாகலின் அவ்வுருவைப் போல் என்பால் பலவோடுகள் உள்ளன அவ்வோடுகளுள் நல்லதும் நீடித்திருக்கும் வன்மைமுதலியவற்றை யுடையதும் ஆகிய அரிய ஓடொன்றைத் தருகின்றேன் என் பார், நல்லதோர் ஓடுசால நீடுசெல்வது தான் ஒன்று தருகின்றேன் என்றார். அருளுரு வாகிய ஓட்டை ஆளுகின்ற நமக்கு இந்த மண்ணோட்டைத் தருகின்றேன் என்கின் றானே! அவ்வருளோடு எங்கே! இம்மண்ணோடெங்கே! இவன்கூறுவது என்னவென்று பிணக்குற்றனரோ என்பார். —ஊடிநின்றுரைத்தது—என்றார். இச் சிவயோகியார் தாம் கொண்டபிணக்கில் நிலையாக நிற்பாராயின், நாம மேல் அறியக்கடவதும் செய்யக்கட வதும் என்னென்று அறியுஞ்செயலுமொழிந்து, செய்யுஞ்செயலுமொழிந்து சிவயோகியா ரது அருளையும், அவரது அருட்செயலையும் நாடும் நாட்டமுடையவராய் வேறு சொல் லுவ தொழிந்தன ரென்பார்—என்றன் உணர்வெலாம் வொழித்தது—என்றார்.

இத்திருப்பாட்டான் அருளையும் அருளுருவையும தமது சுட்டறிவால் காணத் தக்கதன்றென்றும், அது சிவனால் காணத்தக்கதேயன்றி வேறெவ்விதத்தாலுங் காணத் தக்கதன்றென்றும், அங்ஙனங் காணத்தக்கதன்றாயினும், அவ்வருளையே நாடியிருக்கும் அன்புடையராயிருத்தலால் அவ்வன்பென்னும் பாத்திரத்தை இறைவனார் கொடுக்கத் துணிதல் வேண்டுமென்றும், அப்பாத்திரமாகிய அன்பை இறைவன்கொள்ளானாயின் அவனருளைக் காணுமாறென்! காணுதொழியின் அவ்வருள் இத்தன்மைத்தென்று காட்டு மாறென்! ஆகவே, தற்போதமும், தற்போதச்செயலும் அற்று அருளையும், அதன் செயலையும்நாடி நிற்பர் சீவன் முத்தர்கள் என்று சீவன்முத்தி நிலைமையைக் கூறப் பட்டது. (உ௫)

இறைவனார் நாயனாரை யாவருங்காணக்கோண்டு போவேனேனல்.

ஆவதென் நின்பால் வைத்த அடைக்கலப் பொருளை வௌவிப்
பாவகம் பலவும் செய்து பழிக்குநீ ஒன்றும் நாணாய்
யாவரும் காண உன்னை வளைத்துநான் கொண்டே அன்றிப்
போவதும் செய்யேன் என்றான் புண்ணியப் பொருளாய் நின்றான்.

(எ - து.) நாயனாரது புண்ணியங்களுக்குப் பொருளாயுள்ளவராகிய சிவயோகியார், (நாயனார் "என்றன்உணர்வெலாம் ஒழித்தது" என்று சொல்லியதைக் கேட்டு, அவரை நோக்கி நான் உன்னிடத்தில்) அடைக்கலமென்று வைத்ததாகிய பொருளைக் கவர்ந்து கொண்டு (கவராதவன்போல்) வைத்த விடத்தினுங்காணேன், வேறிடத்திலுந், தேடிக் காணேன், கேடிலாப் பெரியோய் நாடியுங் காணேன், என்றன் உணர்வெலாம் ஒழிந் தது, என்று பலபலவிதமாய்க் குழைந்துகுழைந்து சொல்லாலுஞ் செயலாலும் பல அபிநயங்களைச் செய்கின்றாய்! இனிநான் செய்யக்கடவதுயாது! நீயோ சிறிதேனும் பழிக்கு அஞ்சாய், நாணமற்றவனாயும் இருக்கின்றாய். ஆகலான், எல்லாரும் உன்தன்மை இதுவாமென்று அறியும்படி, யான் தொடுத்த இவ்வழக்கில் உன்னைத் திணைப்படுத்திக் கொண்டுபோவதல்லாமல், விட்டுப் போவதில்லை என்று வலித்துக் கூறினாரென்பதாம்.

புண்ணியப்பொருளாய் நின்றான், நின்பால்வைத்த அடைக்கலப்பொருளை வௌவிய, பாவகம் பலவும் செய்து, பழிக்குநீ யொன்றும் நாணாய், (அதனால்) யாவருங்காண நான் உன்னை வளைத்து எனக்கூட்டுக.

நாயனார்செய்யும் புண்ணியம பதிபுண்ணியமென்பதும், அதற்குப்பொருளாய் நிற்பவன் சிவனே என்பதும் தோன்ற புண்ணியப் பொருளாய் நின்றான் என்றார். நாயனாருக்குத் தனுகரணாதிகளாயுள்ள எல்லாபபொருளும் தான்வைத்த தனது உடைப்பொருளே என்பது தோன்ற நின்பால்வைத்த அடைக்கலப்பொருள் என்றார்.

என்பொருளாயுள்ள அவைகளை உன்பொருளாக எண்ணி, என்தேகம் என்கரணம் என்மனையாட்டி என்மனை என்ற யாவையும் எனதெனக் கவர்ந்துகொண் டனுபவிக்கின்றவன் நீயல்லனோ என்பார் வௌவிய என்றார்.

நீ அங்ஙனங் கவர்ந்துகொண்டனுபவிப்பது பிரத்தியக்ஷமாக விருக்க, கவராதவன் போலும், அப்பொருள்கள் அழிந்தனபோலும்,என்பால்வைத்தது கெடுதலாலே என்றும், காடியுங்காணேன் என்றும், உணர்வெலாம் ஒழிந்தது என்றும் கூறுவது, உண்மையாமோ? இது நாடகமல்லவோ? என்பதுதோன்ற பாவகம்பலவும்செய்தல் என்றார்.

இங்ஙனமான நாடகத்தால் என்னை, மயக்கிவிட்டு எனதுடைமையை உன்வசமாக வைத்திருத்தல் பெரும்பழி என்பது தோன்ற பழிக்கு என்றார். உன்னிடத்திலுள்ள எல்லாப்பொருள்களும் என்னுடையனவாகவே யிருக்க, "வேறு நல்லதோர்ஓடுசால நீடுசெல்வதுதானென்று தருகின்றேன்" என்றுசொல்லின் உனக்கென்று ஒருபொருள் உளதோ? அஃது இல்லையாக நான் தருகின்றேனென்றது நாணமற்ற தன்மையென்பது தோன்ற ஒன்றுநீ நாணாய் என்றார்.

இங்ஙனமானவுண்மை யாவரும் அறிய அஃதாவது, ஆன்மாக்களாயுள்ளயாவரும் சிவசாதனங்களைசசெய்து சிவபோகத்தை யனுபவிப்பதற்கு இன்றியமையாத பாத்திரங்களாகத் தனுகரணாதிகளைக் கொடுத்திருப்ப, அவைகளைக்கொண்டு அச்சாதனங்களைச் செய்து சிவானுபவததுக் காளாகாது, விஷயானுபவங்கட்குரிய சாதனங்களைச் செய்து விஷயானந்தானுபவிகளா யிருகக, சிவன் குருவாய் வெளிவந்து எனதெனப்படுவனவெல்லாம் தனதெனக் கூறுங்காலத்து, அவற்றைக் கொடுக்கஅறியாது, கொடுப்பவர்போன்றும், அவைகளில் பற்றுடையவ ரல்லர்போன்றும், நடிப்பவர் பலராதலால், அவர்கள் இவ்வுண்மையறிய எண்ணினனென்பது தோன்ற யாவருங்காண என்றார். இவ்வுண்மையை புணர்த்துதற்கு நீயும் ஆளாய் வந்திருப்ப, நானும் அதனைவெளிப்படுத்தற்கு இப்பொழுது வந்திருப்ப, இனி அச்செயலைச் செய்யாது போவனோ என்பதுதோன்ற போவதுஞ் செய்யேன என்றார். இப்பாசுரத்தான், இறைவன் நாயனாரைப் பழிக்கஞ்சாய் உன்னைவிடேன் என்றதைக் கூறப்பட்டது. (உக)

மகனைப்பற்றி பிரமாணம் செய்யச்சொல்லல்.

வள்த்தினால் மிக்க வோடு வௌவினேன் அல்லேன் ஒல்லை
உளத்தினும் களவி லாமைக் கென்செய்கேன் உரையும் என்னக்
களத்துநஞ் சொளித்து நின்றான் காதலுன் மகனைப பற்றிக்
குளத்தினில் மூழ்கிப் போவென் றருளினான் கொடுமை இல்லான்.

(எ - து.) ("நான் உன்னை வளைத்துக்கொண்டே யன்றிப போவதுஞ் செய்யேன்" என்று சிவயோகியார் சொல்லியதைக்கேட்ட நாயனார்) "பொன்னினும் மணியினும் போற்றவேண்டுவ"தாகிய வளத்தினால் மிக்க தேவரீரது அரிய திருவோட்டை, நான் கவர்ந்துகொண்டவ னல்லன், கவர்ந்துகொள்ளவேண்டுமென்னுங் கள்ளத்தை என்னுள்ளத்தினும் கொண்டவ னல்லன். (அங்ஙனம் இல்லாமையை நான் தேவரீர் நம்புமாறு தெரிவித்தற்கு என்செய்யக்கடவேன், (நான்செய்யும்வகை ஏதேனும் உளதாயின்)

விரைந்து சொல்லக்கடவீராக என்று விண்ணப்பஞ்செய்ய, நீலகண்டத்தை ஒளித்து வந்துநின்ற சிவயோகியார் (நாயனாரைநோக்கி) உனதுகாதலுள்ள மகனை நீ கைப் பிடித்துக்கொண்டு இக்குள்ளகுளத்தினில் மூழ்கி, நான் இச்சிவயோகிகொடுத்த திரு வோட்டைக் களவுசெய்யவில்லை என்று சொல்லிவிட்டு, (உன்மனைக்குப்) போகலாம் என்று யாதொருகொடுமையும் இல்லாதவர் கூறினரென்பதாம்.

ஆன்மாக்கள் அனுபவிக்கவேண்டிய செல்வங்களையெல்லாம் உடையது அருளே என்பார் வளத்தினல் மிக்கவோடு என்றார்.

அருளுடையோன் நீ, உன்னிடத்திலுள்ள அருளை நான் அன்புடையனாயின், வெளவுந் திறமுடையவனாவேன், நான் அன்பிலி, நான் அருளை எவ்வாறுவெளவுந் திறமுடையவனாவேன் என்பார் வெளவினேன் அல்லேன் என்றார்.

நான் அன்பற்றவனாயினும் நாடகத்தால் உன்னடியார் (அன்புடையவர்) போல் நடித்து உன்னருளைக் கொள்ளைகொள்ள என்னெஞ்சத்தில் ஒருநாளும் நினைத்தவன் அல்லேன் என்பார் உளத்தினுங் களவிலாமை என்றார.

காயத்தினாலும் வெளவினை யல்லேன் என்பதையும், * உளத்தினாலும் களவை எண்ணினே னல்லேன் என்பதையும், தேவரீர் ஒப்பாதவராகக் காண்கின்றபடியால், நீர் ஒப்பத்தக்கதாக, யான் செய்யத்தக்கது ஏதேனும் உளதேல் அதனைச் சீக்கிரமாகச் சொல்லும். அதனை இப்பொழுதே செய்து எனது காயத்தினிடத்தும், நெஞ்சத்தி னிடத்தும், வெளவுதலின்மையும் களவிலாமையையும் வெளிபபடுத்தற்கு உரியவனா வேன் என்பார் ஒல்லை என் செயகேன் உரையும் என்ன என்றார்.

யாவரையுங் கொல்லஎழுந்த நஞ்சத்தைக் கண்டத்தில் ஒளித்து, அதன்கொடு மையை யடக்கிய நமது பேராற்றல்போல், அந்த நீலகண்டமென்னுந் திருநாமத்தைச் சொல்லி, யாவருடைய உயிரையுங் கொல்லவல்ல காமநஞ்சை நெஞ்சத்தில் அடக்கிய ஆற்றலுடையவர் இக்காயனார் ஒருவரே என்பதை இவ்வுலகின்கண் நிலைநாட்ட நீல கண்டனே வந்தனனென்பார் காதல் உன்மகனைப்பற்றிக் குளத்தினில் மூழ்கிப்போ என்று களத்து நஞ்சொளித்து நின்றான் அருளினான் என்றார்.

"உன்மகனைப்பற்றிக் குளத்தினில் மூழ்கிப்போ" என்ற அக்கொடுஞ்சொல் நாய னார்பால் வைத்த அளவிலாக் கருணையை வெளிப்படுத்தவே கூறினன் என்பார் கோடு மையில்லான் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், காயத்தினாலும், மனத்தினாலும், அன்புசெய்து அருளைப் பெறவேண்டுமே யன்றி, அன்புடையார்போல் நடித்து, அருளைபபெற்றார்போல் எண்

* உளத்தினும் களவிலாமை என்று மனத்தைக் குறித்தமையால், ஓடுவெளவினே னல்லேனென்றது காயத்தைக்குறித்ததாமென்க. களத்து நஞ்சு ஒளித்து நின்றான் என்றது மிக்கதோ ரதிசயத்தை உணர்வதற்கேயாம். என்னையெனின், விடமானது தன்னையுண்டவனை ஒழித்து அவன்பேர் உலகில் நில்லாவண்ணஞ் செய்வது அத னியற்கை. அவ்வியற்கையை அவ்விறைவன்பால் செய்யாது, அவன் கண்டத்தில் ஒளித்துநின்று தனக்குள்ள விடத்தை யொழித்து தன்னையுண்ட இறைவனுக்குள்ள நித்தியத்தைக் காட்டியதேயாம். காதல் உன்மகனைப்பற்றி என்றது - நாயனாருக்கு ஆசை யென்னும் பற்றின்மையை வெளிப்படுத்தற்கென்க. குளத்தினில் மூழ்கிப்போ என் றது - சிற்றின்பத்தை யொழித்த நீ சிவானந்தமாகிய பேரின்பவெள்ளத்தில் மூழ்கிச் சிவலோகத்திற் சேருவாயென்று குறிப்புரையாற் குறிப்பித்தவாறு மென்க. கொடுமை யில்லான் என்றது - இறைவன் மறக்கருணையைக் காட்டுவதெல்லாம் தம்மிடத்துள்ள அறக்கருணையைக் காட்டுதற்கே யாமென்க.

னின் அவர் அருளைப்பெறுதலரே என்பதும், எவரது அன்பு நாடகமோ எவரது அன்பு உண்மையோ அதை யதை இறைவனே வெளிப்படுத்த வருவான் என்பதும் கூறப் பட்டன. (உஎ)

மனைவியைப்பற்றிப் பிரமாணஞ் செய்யச்சொல்லல்.

ஐயர்நீர் அருளிச் செய்த வண்ணம்யான் செய்வ தற்குப்
பொய்யில்சீர்ப் புதல்வன் இல்லை என்செய்கேன் புகலும் என்ன
மையறு சிறப்பின் மிக்க மனையவள் தன்னைப் பற்றி
மொய்யலர் வாவி புக்கு மூழ்குவாய் எனமொ ழிந்தார்.

(எ - து.) சுவாமீ! தேவரீர் சொல்லியபிரகாரம் அடியேன் பிரமாணம் பண்ணுவ தற்குப் பொய்மையில்லாத சிறப்பினையுடைய புத்திரனில்லை, (ஆகலான்) வேறு எந்த விதமான பிரமாணத்தைச் செய்யவேண்டுமோ (அதனைச்) சொல்லுமென்று பிரார்த் திக்க, (இறைவனார் மகன் இல்லையாயின், உனது) குற்றமற்ற சிறப்பில்மிகுந்த இல்லா ளது கையைப் பிடித்துக்கொண்டு, தாமரைமுதலிய மலர்கள் நிறைந்துள்ள குளத்துள் மூழ்கிப் பிரமாணஞ்செய்வா யென்று கூறினார் என்பதாம்.

காயத்தினாலும், மனத்தினாலும், பொய்மையில்லாதவன் என்னும் சிறப்பினை யான் பெறுதற்குரிய மகப்பேறற்றவன் என்பார் புதல்வனில்லை என்றார்.

பொய்யினால்வரும் நரகத்தைப்போக்கி மெய்யினால்வரும் பேற்றைத்தருவோன் புத்திரன். அப்புத்திரன் எனக்கில்லை என்பார் பொய்யில் சீர்ப் புதல்வன் என்றார்.

புத்திரப்பேறற்றார் செய்யத்தகும் பிரமாணம் வேறு உளதேல் அதனை யான் செய்வதற்குச் சித்தமாயுள்ளேன் என்பார் புகலும் என்ன என்றார்.

மாண்பினையுடைய மனையாள் இல்லாதொழியினன்றோ மக்கட்பேறில்லை, என்ன செய்கேன் என்று வருந்தல்வேண்டும். நீ அவளை யுடையவனாயிருத்தலால் உனக்கு இல்லாதது என்! நீ எல்லாப்பேறும் உடையவனே! ஆகலின் உனது மனையாளைக் கைப்பற்றிமூழ்கி, உனது மெய்யினையும் "பெண்ணிற் பெருந்தக்க யாவுளகற்பென்னுந் திண்மையுண்டாகப்பெறின்" என்றுகூறும் மிக்க சிறப்பினையுடைய கற்புடைமனையா ளுடைய மெய்யினையும் யாவருங்காண நிலைநாட்டுவாயாக என்பார் மையறு சிறப்பில் மிக்க மனையவள் தன்னைப்பற்றி மூழ்குவா யென்றார்.

இத்திருப்பாசுரத்தான், புத்திரப்பேறுவேண்டி இணைவிழைச்சு விரும்பப்படும் என்னும் அறநூல்மார்க்கத்தைக் கடந்து, வீட்டுநூல்வழிச் செல்லும் நன்னெறி நமக்கு வாய்க்கப்பெற்றதுபோல், அடியார் விதித்தனவற்றைச் செய்வதற்குரியன வாய்க்கப் பெறாதொழிந்தோமே என்றெண்ணிய அவரது குறைபாட்டையும், நாயனாரது மனை யாட்டியை இறைவனார் மையறு சிறப்பின்மிக்க மனையவள் என்று சிறப்பித்து அவரது கைப்பற்றும்படி நாயனாருக்குச் சொன்னதும் கூறப்பட்டன. (உஅ)

வேறு.

நாயனார் மனைவியின் கைப்பற்ற இசையாது யான் மூழ்குவேனெனல்.

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி எதிர்நின்ற
வெங்கண்விடை யவர்அருள வேட்கோவர் உரைசெய்வார்
எங்களில்ஓர் சபதத்தால் உடன்மூழ்க இசைவில்லை
பொங்குபுனல் இயான்மூழ்கித் தருகின்றேன் போதுமென.

(எ - து.) கங்காநதியை ஒளித்துவைத்திருக்கும் சடையினையொளித்து (சிவயோகி யாய்) எதிரே எழுந்தருளிநின்ற கோபக்கண்ணுடைய விருஷபாரூடர் ("நீ மனையவள்

தன்னைப்பற்றி வாவிபுக்கு மூழ்குவாய்" என்று) அருளிச்செய்ய, அதற்கு நாயனார் கூறு கின்றார். (என்னை யாளவந்த பெருமானே!) எனக்கும் என்மனையாட்டிக்கும் ஓர்சபதம் உண்டு, அதனால் ஒருவர்கையை ஒருவர்பிடித்துக்கொண்டு ஒருங்கேநீரில் மூழ்கிச்சொல்ல இசையாது; யானொருவனே நீர் மிகுந்திருக்கும் தடாகத்தில்மூழ்கி (நீர்வேண்டிய) பிர மாணத்தைச் சொல்லுகின்றேன் வாரும் என்றனர் என்பதாம்.

கங்கையின் வெள்ளத்தைச் சடையில்மறைத்து உமாதேவியார் பக்கலிலே வந்து வீற்றிருந்ததுபோலும், நாயனார்பால் உள்ள கருணைவெள்ளத்தைச் சிவயோகியாய்வந்த வடிவத்தில்மறைத்து அவரெதிரே வந்து நின்றனர் என்பார் கங்கைநதி கரந்தசடை கரந்தருளி எதிர்நின்ற என்றார்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்குபாதங்களில் நடப்போர்க்குத் தனுவைச் சார்ந்தும், கரணத்தைச சார்ந்தும், தற்போதத்தைச் சார்ந்தும், ஆணவத்தைச சார்ந்தும் வருவனவாகிய பாசஜாலங்கள் தாங்காவண்ணம் மிக்ககோபத்தோடு நான்கு பாதத்துடன் விரைந்துவந்து வோட்டவல்ல தருமவிடையை யுடையவன் என்பார * வெங்கண்விடையார் என்றார்.

"அற்புத புணர்ச்சியின்மையை" "நீலகண்டம்" எனனும் ஆணைமொழியால் அன்றுமுதல் இன்றளவும் அயல்அறியாமல் காத்துவந்த அரியசெயலை, அந்தநீலகண்டம் உடையவன்பால் † வெளியாக்கின ரென்பார் எங்களில் ஓர்சபதத்தால் உடன்மூழ்க இசைவில்லை என்றார்.

பிரமாணஞ் செய்வோர்-பிரமாணஸ்தரா யிருந்து செய்யவேண்டுமேயன்றி, அதனைக் கடந்தவர் பிரமாணஞ்செய்யின் அது பிரயாணமாகுமோ? ஆகா! ஆகவே, "எம்மைத் தீண்டுவீராகில் திருநீலகண்டம்" என்று சொன்ன மனையாட்டியை இப்போது தீண்டில் அவ்வாணையைக் கடந்த அபபிரமாணஸதராவோம என்னுங் கருத்தை உள்ளத்துட் கொண்டு,‡ யான் பிரமாணஸ்தன் ஆகலான், நீர்வேண்டிய பிரமாணத்தை யானே செய்கின்றேன் என்பார் யான்மூழ்கித் தருகின்றேன் போதுமோவெ என்றார.

இத்திருப்பாசுரத்தான், நாயனா தாமகொண்டிருக்கும் சபதத்தை இறைவனளவும் காட்டினரென்பது கூறப்பட்டது. இதன் உண்மையை "ஆதியார் நீலகண்டத்தளவு தாம்கொண்ட ஆர்வம் பேதியா ஆணைகேட்டபெரியவர்" எனறு முன்னே கூறியவாற் றான் அறிக. எனவே நீலகண்டம் என்று கூறிவந்த ஆணையை நீலகண்டன் வந்த காலத்தும் பேதியாமையைக் காட்டியதா மெனக. (௨௬)

## இறைவன் நாயனாரது சிந்தைவன்மைகண்டு சபைக்குப்போதல்.

தந்ததுமுன் தாராதே கொள்ளாமைக் குன்மனைவி
அந்தளிர்செங் கைப்பற்றி அலைபுனலில் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய் தில்லைவாழ் அந்தணர்கள்
வந்திருந்த பேரவையின் மன்னுவன்இயான் எனச்சென்றார்.

(எ - து.) (பொங்குபுனல் யான்மூழ்கித் தருகின்றேன் போதும, என்றுசொல்லிய நாயனாரைநோக்கி நீகூறுவது மிகஅழகு! நான்முன்னே உன்னிடத்தில்) கொடுத்த

---

* இறைவன் "அறவாழியந்தணன்" ஆகலான், அவனது ஊர்தியும் அறமேயாம். அவ்வறம் சரியைமுதலிய நான்குபாதத்தோடு கூடியதாகலான் நான்குபாதமுடைய விடபரூபமாய்ச் சிவதருமம் இருப்பதென்க. அச்சிவதருமம் பாசதருமம், பசுதருமங் களைக் கடியும் இயல்புடையதாகலின் வெங்கண்ணை உடையதாயிற்று. இதனை, "கோள் ளென்புரந்தரன் மால் அயன் வாழ்வு குடிகெடினும்" என்ற திருவாசகத்தானும், "அயன் திருமால் செல்வமும் ஒன்றோஎன்னச் செய்யுந்தேவே" என்ற சித்தியார் வசனத்தானும் அறிக. † எங்கள்நீலகண்டனன்றி வேறு வெளியாக்கவேண்டிய சமயம் ஏதுவரினும் வெளியாக்கோம் என்னும் அவ்வுறுதியை ஈண்டு வெளியாக்கின ரென்க.

தாகிய ஓட்டைக் கொடுக்காமலும், (எடுத்துக்கொள்ளவில்லை என்றுகூறுவதாகிய) அக்கொள்ளாமைக்குப் (பிரமாணமாக) உன் மனைவியினுடைய செந்தளிர்போன்ற அழகிய கையைப் பிடித்துக்கொண்டு, அலைவீசுகின்ற நீரில் மூழ்காமலும், உன்மனத்தைச் சலிப்பில்லாமல் ஸ்திரப்படுத்தி யிருக்கின்றாய், (ஆகலின்) இனி நான் தில்லைவாழ் அந்தணர்கள் வந்திருந்ததாகிய பெரியசபையின்கண் (உனது நிலையையும், எனது நிலையையும்) நிலைபெறச்செய்யப்போகின்றேன் என்றுசொல்லிச் சபைக்குப் போயினர் என்பதாம்.

முன்தந்தது தாராதே எனக்கூட்டுக.

* "அளக்குநெறியினன் அன்பர்கள் தம்மனத்து ஆய்ந்துகொள்வான், விளக்கும் அடியவர் மேல்வினைதீர்த்திடும் விண்ணவர்கோன்" என்றவேதமொழிப்படி இறைவன், அன்பர்களை அளக்குநெறியினால் அளந்து அவர்மனத்தை ஆய்ந்துகொள்பவனும், ஆய்ந்துகொண்டபின்னர், அவரது மேல்வினையைத் தீர்த்து, உலகெல்லாம் அறிய விளக்குவோனுமாகலின், அஃதே ஈண்டு நாயனார்பால் செய்யத்தொடங்கினனென்க.

எனவே, "தந்ததுமுன் தாராதே" என்றதும், "கொள்ளாமைக்கு உன்மனைவி கைப்பற்றி புனலின்மூழ்காதே" என்றதும் 'அளக்குநெறி' எனவும், "சிந்தைவலித்திருக்கின்றாய்" என்றது 'மனத்தை ஆய்ந்துகொள்வான்' எனவும், தில்லைவாழ் அந்தணர்கள் பேரவையில் மன்னுவன்" என்றது 'அடியவர் மேல்வினைதீர்த்து விளக்குதற்கு' எனவும் கொள்க.

மேல்வினைதீர்த்து விளக்குநெறி என்றது-நாயனார் கொண்டிருந்த ஆணைக்குமாறாக வேறொருவினையைச் செய்யச் செய்யாது, அவர்கொண்டிருந்த ஆணையை வலியுறுத்தற்கான செயலையே செய்யச்செய்து அவரது பிரபாவத்தை விளக்கங்காணத் திருவுளத்தெண்ணிய அருள்நெறி என்க.

சிந்தைவலித்திருக்கின்றாய் என்றது, நாயனாரது சிந்தை, இறைவன் தான்செய்யும் அளக்குநெறியால் அளந்தும் அருள்நெறி கடந்துபோகாது, அளக்குந்தோறும் அருள்நெறியில் வன்மைபெற்றிருந்த திறத்தைக் குறித்ததென்க. இவ்வுண்மைகளைப் பின்வரும் பாசுரங்களாற் காண்க.

இத் திருப்பாசுரத்தான், நாயனாரது பிரபாவத்தை இறைவன், தான் அளக்குநெறியால் அளந்து, விளக்குமுறையான் விளக்கத் தொடங்கினரென்று கூறப்பட்டது.

## நாயனார் வழக்கில் காதல்மேற்கொண்டு சபைக்குச்செல்லல்.

நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் துறைபோனார்
தில்லைவாழ் அந்தணர்கள் வந்திருந்த திருந்தவையின்
எல்லையிலான் முன்செல்ல இருந்தொண்டர் அவர்தாமும்
மல்குபெருங் காதலினால் வழக்குமேல் இட்டணைந்தார்.

(இ-ள்.) (இறைவன்சொல்லியபடியே) வைதிகசைவ ஒழுக்கத்தில் தவறாது முதன்மையாக நிற்கின்றவர்களும், நான்குவேதங்களினாலுங் கூறப்படும் அறத்துறைகளை ஆராய்ந்து சென்றவர்களும் ஆகிய தில்லைவாழ் அந்தணர்கள், கூடியிருந்த திருத்தமாகிய சபையின்கண், அளவையும் இல்லாதவனாகிய இறைவன் வழக்கைமேற்கொண்டு முன்புசெல்ல, பெரியதொண்டனாகிய நாயனாரும், மேன்மேற் பெருகும் ஆசையினால் (அவர்பின்னே) போயினர் என்பதாம்.

வழக்கை மேற்கொண்டு வருவோரது வழக்கினைத் தீர்ப்போர் - நூல்வழக்கினும், ஆன்றோராகிய உலகவழக்கினும், ஆராய்ச்சியுடையோராய், † "சமன்செய்து சீர்தூக்குங்

* திருநாவுக்கரசர் தேவாரம். திருச்சோற்றுத்துறை. செ - ரு. † திருக்குறள் - நடுவுநிலைமை. செ - அ.

கோல்போல் அமைந்து ஒருபால், கோடாமை சான்றோர்க் கணி" என்றுகூறிய இலக்கணமுடையோராய் இருப்பவரேயாவர் என்பார் நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் துறைபோனர் தில்லைவாழந்தணர் என்றார்.

அத்தகைச் சிறப்புடையோர் கூடிவந்திருக்கும் பெரியசபைக்கே இறைவ போயினன் என்பார் வந்திருந்ததிருந்தவை என்றார். அவ்விறைவன் இத்தன்மையனென்று அளவிடப்படான் என்பார் எல்லையிலான் என்றார். போனவர் இருவராயிற்றே, அவ்விருவரும் போனமுறை எவ்வாறு என்பார் எல்லையிலான் முன்செல்ல என்றார். இவர்முன் என்றதனால் தொண்டனார் பின்சென்றாரென்றாயிற்று. இறைவனை எல்லை இல்லான் என்றுகூறவே, நாயனார் எல்லையுள்ளார் என்றாயிற்று. அவ்வெல்லை தமது ஆணையைக்கடக்க எவ்வழக்குவரினும் தாம் கடவாமையாகியஎல்லை. நாயனார் ஆணையில் கடவாது நிற்க வன்மையுடையவராகவே, இறைவனார் அவரது ஆணையைக் கடப்பிக்க மேற்கொண்ட வல்வழக்கில் எல்லைஇல்லாதவராயினார். எனவே, அடியவரை வல்வழக்கிட்டு ஆள்வதை மேற்கொண்டவர் என்றபடி.

வழக்கை மேற்கொண்டவர் இறைவர் ஆகலின், அவர் முன்செல்வாராயினார். நாயனார் அவர் எவ்வளவு வழக்கிடினும், அவர்மேல் நீங்காத ஆசையுடையவர் என்பார் இருந்தொண்டர் அவர்தாமும் மலர்துபெருங்காதலினால் அணைந்தார் என்றார்.

இத் திருப்பாசுரத்தான், சபையாரது சிறப்பும், அச்சபையாரது வன்மைக்கேற்ப, வல்வழக்கை மேற்கொண்டுவந்த வல்லானனது சிறப்பும், அவ்வல்வழக்கிற்கு உடன்பட்டுவந்த நாயனாரது காதற்சிறப்பும் கூறப்பட்டன. (கூ௯)

## இறைவன் அந்தணர்முன் வழக்கைக் கூறல்.

அந்தணனும் எந்தைபிரான் அருமறையோர் முன்பகர்வான்
இந்தவேட் கோவர்பால் யான்வைத்த பாத்திரத்தை
தந்தொழியான் கெடுத்தானேல் தன்மனைவி கைப்பற்றி
வந்துமூழ்கி யுந்தாரான் வலிசெய்கின் றானென்றார்.

(எ - து.) (சபையைநோக்கி முன்சென்ற) அந்தணனாகிய எமதுபெருமானார், வேதியர்களுட்சிறந்த தில்லைவாழ் அந்தணர்களுக்கு முன்னே, (தாம் மேற்கொண்டுவந்த வழக்கைச்) சொல்லுகின்றார். (அந்தணர்காள்!) இதோ நிற்கின்ற வேட்கோவரிடத்தில், யான் பலிபாத்திரத்தைக் கொடுத்து வைத்தேன், அப்பாத்திரத்தை, (இப்பொழுது கேட்டால்) கொடுக்காமல் இருக்கின்றான். (ஏன் கொடுக்காமல் இருக்கின்றாய் என்று கேட்டால், வைத்த இடத்தில் காணோம் என்றான். அங்ஙனம்) காணதொழிந்தானாகில், (அதனை நான் உண்மையென்று நம்புவதற்கு) தனது மனைவியையைப் பிடித்துக் கொண்டு குளத்தில்மூழ்கியெழுந்து சொல்லுவாயென்றேன்; அந்தவண்ணமுஞ் செய்தானில்லை; அவன் தன்மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு என்மனத்தைத் துன்பப்படுத்துகின்றான் என்று கூறினார் என்பதாம்.

சிற்றம்பலவாணன் தங்களோடு ஒருவனாகப் பழகிவரப்பெற்றும், இப்பொழுது தம்முன்வந்தவனை அம்பலவாணனென்று அறிவதை மறந்து வேறோர் அந்தணனென்றே எண்ணினாராகலான், அத் தில்லைவாழந்தணரை மறையோர் என்றார்.

தில்லைவாழந்தணர்களே! இந்தவேட்கோவன் நாள்தோறும் உங்களால் காணப்பட்டு வருபவனேயன்றி வேறொருவ னல்லனென்பார் இந்தவேட்கோவன் என்றார்.

இவன் உங்கட்கெல்லாம் இல்லையென்னாமல் பாத்திரங்கொடுக்கும் சத்பாத்திரனென்று நான் என்னுடைய பலிபாத்திரத்தைக் கொடுத்துவைக்க, அதனைக் கேட்டால்

அது வொழிந்துபோயிற்று இல்லையென்றான் என்பார் யான்வைத்த பாத்திரத்தைத் தந்தொழியான் என்றார்.

யான் பாத்திரத்தை வைக்கும்பொழுது, இவன்கொடுக்கும் பாத்திரம்போல் எண்ணு தொழிதற்கு, "தன்னையொப்பரியது தலத்துத்தன்னுழை, துன்னியயாவையும் தூய்மை செய்வது, பொன்னினும் மணியினும் போற்றத்தக்கது" என்றேன். அங்ஙனம் யான் சொல்லியதை இவனுமறப்பவன், நீலகண்டத்தை மறப்பினன்றே இதனைமறப்பான் மறக்குந்தன்மையனல்லன் என்பதைப் பின்னர் அறியப்போகின்றீர். அதனை நானே விளக்கப்போகின்றேன். அதுநிற்க, ஓடு ஒழிந்துபோயிற்று என்பது உண்மையாயின், அச்சொல்லை உன்மனைவிகைப்பற்றி நீரின்மூழ்கிச் சொல்வாயென்றேன். அதற்கு எங்களில் ஓர்சபதம் உளது; அதனால் உடன்மூழ்க இசையாது என்றான். இதனால் ஒழிந்து போயிற்று என்றதை போயிற்றென்றே கொள்வதோ! உள்ளதென்றே கொள்வதோ! நீவிரேகூறுவீர். இது என்னைவலிசெய்யுமோ! செய்யாதொழியுமோ! நீவிரே எண்ணிப் பார்ப்பீர் என்பார் கெடுத்தானேல் தன்மனைவிகை பற்றி, வந்துமூழ்கியும் தாரான்வலி செயகின்றான் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார்பால் உண்டாக்கிய உடைமைவழக்கை சபையார் முன் சிவயோகியாய்வந்து கூறியதைக் கூறபபட்டது. (கூஉ)

அந்தணர்கள் நாயனுரைநோக்கி வழக்கைநீர் சொல்லுமெனல்.

நறைகமழும் சடைமுடியும் நாற்றோளும் முக்கண்ணும்
கறைமருவும் திருமிடறும் கரந்தருளி எழுந்தருளும்
மறையவன்இத் திறமொழிய மாமறையோர் உரைசெய்வார்
நிறையுடைய வேட்கோவர் நீர்மொழியும் புகுந்ததென.

(எ - று.) நறுமணங்கமழும் சடைமுடியினையும், சதுர்ப்புஜங்களையும், திரிநேத்திரங்களையும், கறையாகப்பொருந்தியிருக்கும் அழகிய நீலகண்டத்தையும், மறைத்துக்கொண்டு வேதியராய் வந்தவர், இவ்வகையாய்ச் சொல்ல, பெருமையிற்சிறந்த தில்லைமூவாயிரவர்கள், நற்குணங்களெல்லாம் நிரம்பப்பெற்றுள்ள நாயனுரைப்பார்த்துச் சொல்லுகின்றார்கள். வேட்கோவரே! உங்கள் இருவரிடத்தும் வழக்குண்டாகிய விதத்தை நீர் சொல்லுவீராக என்பதாம்.

புகுந்தது நீர்மொழியும் எனக்கூட்டுக.

இறைவன் அடி அடைந்தார்க்கு அவனது அனுதினிலைமையைக் காட்டுவது சடைமுடி. சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம் என்னும் நான்கினையும அவன் கொடுப்பதைக் காட்டுவது நாற்றோள். பாசஞான பசுஞான பதிஞானங்களை அவன் உணர்த்துந் தன்மையைக் காட்டுவது முக்கண். அவன் ஆணவமலத்தின் கொடுமையை அடக்கி ஆளும் ஆற்றலைக்காட்டுவது கறைமருவும் திருமிடறு.

இங்ஙனமான கோலத்துடன் வருவது கன்மமலமும் ஆணவமலமும் உடையார்க்கு. நாயனார் * அவ்விருமலமும் அற்றவராதலால் அக்கோலத்தை மறைத்து அன்பைவிளைவிக்கும் அருட்கோலங்கொண்டு வந்தனன் என்பார் சடைமுடியும், நாற்றோளும், முக்கண்ணும், கறைமருவும் திருமிடறும் கரந்தருளும் மறையவன் என்றார்.

---

* கன்மமலத்தைக்காட்டுவது - மாதரின்பம். ஆணவமலம் உளதென்பதைக்காட்டுவது-அடியார்க்கு ஆட்பட்டு அவராணைவழிநின்று அன்புபாராட்டா தொழிதல். நாயனார் மாதரின்பத்தை மறந்து மாதாளும்பாகனடியார்களுக்கு ஆட்பட்டு, ஆணவமலமொழிந்து அருட்பாத்திரராய் அவரிடம் பணியைச் செய்பவர். ஆகலான் இருமலமும் அற்றவராயினர்.

அம்பலவாணன் எத்திறம் நடிக்கின்றானோ அத்திறமே நடிப்பது அந்தணர்கள் திறம் என்பார் மாமறையோர் உரைசெய்வார் என்றார். நாயனார் காமம் வெகுளி மயக்கம் என்னும் முத்தீக்குணங்களும் ஒழிந்து, அவாவின்மை, பொறையுடைமை, அறிவுடைமை என்னும் முத்திசகுணங்களை நிரம்பப்பெற்றுள்ளவர் என்பார் நிறையுடைய வேட்கோவர் என்றார் இங்ஙனமான நிறையுடையார் குறையுடைய பொய்யுரை ஆடாராகலான் புகுந்தது நீர்மொழியும் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், தில்லைமாமறையோர், மறையவன்கூறிய வாய்மொழிக்கு, நாயனார்வாய்மொழி ஒத்துளதோ! வேறுபட்டுளதோ என்றெண்ணி அவரை வினவியது கூறப்பட்டது. (௯௯)

## நாயனார் ஓடுகாணாமற்போனதைக் கூறல்.

நீணிதியாம் இதுவென்று நின்றஇவர் தரும்ஓடு
பேணிநான் வைத்தஇடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்
பூண்அணிநூன் மணிமார்பீர் புகுந்தபரி சிதுவென்று
சேணிடையும் தீங்கடையாத் திருத்தொண்டர் உரைசெய்வார்.

(எ - து.) (இம்மையேயன்றி) அம்மையினும் தீமையென்பதை அடையப்பெறாதவராகிய திருநீலகண்டநாயனார் (தில்லைவாழந்தணர்கள் தம்மைநோக்கி, நடந்தவிவகாரத்தை நீர் சொல்லுமென்று கேட்டனராகையால் அவர்களைப்பார்த்து) பூணூலை அணியும் ஆபரணமாகப் பூண்டிருக்கின்ற அழகிய மார்பினையுடையவர்களே! இங்ஙனம் நிற்கின்ற சிவயோகியார், (தமது பாத்திரத்தை எடுத்து) இது பெரியநிதியாகும் என்று கொடுத்தனர். அங்ஙனம் அவரால் கொடுக்கப்பட்ட திருவோட்டை, நானும் போற்றி ஓர்காப்புள்ள இடத்தில் வைத்தேன். (இப்போது இவர்கேட்க நான் அவ்விடத்திற் சென்றுபார்த்தேன், பார்த்தபோது) அப்பாத்திரம் அவ்விடத்தில் இல்லாமல் மறைந்துபோயிற்று. (பின்னர் வேறு வேறிடத்திலும் தேடிப்பார்த்தேன்) எங்கும் அதனைக்காணேன்; இதுதான் நடந்தவிவகாரம் என்றுகூறினார் என்பதாம்.

சேணிடையும் தீங்கடையாத் திருத்தொண்டர் எனவும், பூணணிநூன் மணிமார்பீர் எனவும், நின்றஇவர், இது நீணிதியாமென்று தரும்ஓடு பேணிநான் வைத்தஇடம் பெயர்ந்துகரந்தது காணேன் எனவும், புகுந்தபரிசு இது என்று உரைசெய்வார் எனவும் கொண்டுகூட்டுக.

ஆன்மாக்களுக்கு, இம்மை மறுமை வீடு என்னும் மூன்றிடத்தும் தீங்கு அணுகுதல் உளதாகலின், அத்தீங்கு இவர்பால் இல்லையென்பார் சேணிடையுந் தீங்கணுகாத் திருத்தொண்டர் என்றார். மூவிடத்தும் வந்தணுகும் தீங்கென்னையோ எனின்,—இம்மையில் அறம் செய்யாமையால் பாவமும், மறுமையில் செல்வமிகுதியால் இறுமாப்பும், முத்திநிலையில் அடிமைத்திறத்தை மறத்தலால் வரும் ஆணவமலச்சார்புமாம். ஏனைய வெல்லாம் முன்னர்க்காண்க.

இத்திருப்பாசுரத்தான், சிவயோகியார் கூறியவற்றிற்கு, நாயனார்கூறியகூற்று மாறுபடாமையைக் கூறப்பட்டது. (௱)

## வேறு.

திருவுடை அந்த ணாளர் செப்புவார் திகழ்ந்த நீற்றின்
உருவுடை இவர்தாம் வைத்த ஓட்டினைக் கெடுத்தீர் ஆனால்
தரும்இவர் குளத்தின் மூழ்கித் தருகவென் றுரைத்தா ராகில்
மருவிய மனைவி யோடு மூழ்குதல் வழக்கே என்றார்.

(எ - து.) பரந்திருக்கும் இவ்வுலகினகண் யாவரானும் செய்தற்கு எளிய மெல்வினையென்றும், யாவரானுஞ் செய்தற்கரிய வல்வினையென்றும் இரண்டுவினைசொல்லப்படும். அவ்விரண்டினையும் சொல்லப்புகின் சிவதன்மமென்று சொல்லப்படும்; எனவே பிறவிக்கிடஞ்செய்யும் கன்மங்களினின்றும் நீங்கவேண்டுமென்பார்க்கு நீங்கும்வகையாக ஆகமங்களில் வகுக்கப்பட்டனவாகும். ஆகையினால் இவ்விரண்டில் எதனிடத்தில் உன் உள்ளஞ்செல்லுகின்றதோ அதனைச் செய்வாயாக என்பதாம்.

இத்திருவெண்பாவால் நல்லசிவதன்மம் இது என்பது கூறப்பட்டது.

ஈண்டு ஞானமொன்றே நானென்பதை யழிக்கும்வன்மை யுடையதென்னாமல், ஏனைச் சரியையாதிகளையும் உடன்தழுவிக் கூறினமையான் இச்சரியையாதிகளும் ஞான சம்பந்த முடையனவென்று அவற்றின் சிறப்பும், அச்சிறப்புடைமையான் ஞானத்தைச் சரியை கிரியா யோகங்களாற் பெறவேண்டுமென்றும், அந்தஞானத்தால் அன்பைப் பெறவேண்டும் என்றும் எண்ணவேண்டாம். அன்பைப்பெறுதற்கு ஞானம் ஏதுவாதல் போல் அந்த ஞானசம்பந்தமான சரியையாதிகளும் ஏதுவாகவே யுள்ளன என்று அவைகளின் ஆற்றலுந்தோன்ற—இவற்றில் சென்றதிலே செய்வாய்—என்றார்.

கள. ஆதியை அர்ச்சித்தற் கங்கமும் அங்கங்கே
தீதில் திறம்பலவும் செய்வனவும்—வேதியனே
நல்வினையா மென்றே நமக்குமெளி தானவற்றை
மெல்வினையே என்றது நாம் வேறு. (4)

(எ - து.) நான்முறை யுணரவல்ல மாணவகனே! நாம் (முன்னே) மெல்வினை நல்வினை யென வேறுவேறாகக் கூறிய இரண்டனுள் யாவர்க்கும் முதலாயுள்ள இறைவனை யர்ச்சிப்பதற்கு அங்கமாகக் கூறியுள்ளபடி அவைகளிற் றவறாமல் அர்ச்சித்தலாகிய கிரியாங்கமும், கிரியாவான்களுக்கு அங்கமாயுள்ள பூஜாத்திரவியங்களை அவைகட்கேற்பச் செய்வனவாகிய பணிகளும், இறைவன் வீற்றிருக்கும் ஆலயங்களில் செய்யத்தகுவனவாகிய திருவலகிடுதல் முதலிய திறமானபணிகளும், ஆகிய சரியாங்கமும், தீமையில்லாதனவாகலின் அவ்விரண்டும் நல்வினையாமென்றும், நாம் செய்வதற்கு எளிமையா யிருத்தலினால் மெல்வினையாமென்றும் கூறினாரென்பதாம்.

இத்திருவெண்பாவால் சிவதன்மம் இரண்டனுள் மெல்வினை இதுவென்பது கூறப்பட்டது.

எனவே சிவபெருமான் எங்கெங்கு திருக்கோயில்கொண்டிருக்கின்றனரோ, அங்கங்கும் திருவலகு திருமெழுக்கு திருவிளக்கு திருநந்தனவனம் திருப்பள்ளித்தாமம் ஆனந்தக்கூத்து தோத்திரம் ஆகிய இவைகளைச்செய்தல் சரியையெனவும், விதிப்படி செய்யத்தகும் சௌச ஸ்நானாதிகளால் புறச்சுத்தியுடையனாயும் அநுட்டான ஜபத் தியானாதிகளால் அகச்சுத்தி யுடையனாயும், பின்னர் பூதசுத்தி திரவியசுத்தி ஆத்மசுத்தி மந்திரசுத்தி இலிங்கசுத்தி முதலாகச்சொல்லப்பட்ட பஞ்சசுத்திகளைச்செய்து இறைவனை யர்ச்சித்தல் கிரியையெனவும், இவ்விரண்டும் எளிதாகச் செய்யப்படுவதாயிருத்தலானும், இறத்தல் பிறத்தல்களாகிய பெருந்துன்பங்களை மிக எளிதாய்ப் போக்கச்செய்தலினானும், அஃதேபோல் சஞ்சித பிராரத்தங்களுக்கு இடஞ்செய்யும் ஆகாமியவினைக்கு இடனில்லையாம்படிச் செய்தலினானும்,—மெல்வினையேயென்றும்,—இவ்வகைத்தான மெல்வினையான் சனனமரண துக்கத்தையும் ஆகாமியவினையையும்போக்கிச் சுகத்தைத்தருதலால்—நல்வினையாமென்றே—எனவும் துணிவுபடக்கூறினார்.

கரு. வரங்கள் தரும்செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினால் அன்றுகறி யாக்க—இரங்காதே
கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனவற்றை
வல்வினையே என்றது நாம் மற்று. (5)

(ஏ - து.) (முரணவகனே இனிநாம் வல்வினையென்றது (யாதெனின், பெருந் தொண்டைச்செய்து சிறுத்தொண்டரென்ற பெரியோர் தம்மையடைந்தார்க்கு) வரங் கொடுத் தந்தருளும் வயிரவகோலங்கொண்டு வந்தார்க்கு, அன்று பிள்ளைக்கறிசமைக்க (வேறொருவரை வேண்டாது,) சிறிதேனும். இரக்கமின்றித் தாங்களே தங்கள் கைகளி னால் கொல்லும் வினையையேசெய்த கொடியவினையாகிய அதனையே என்பதாம்.

நாம் வல்வினையென்றது, வரங்கள்தரும் செய்யவயிரவர்க்கு அன்றுகறியாக்க, தங் கள் கரங்களினால் இரங்காதே கொல்வினையே செய்யும் கொடுவினையே ஆனவற்றை எனக்கூட்டுக.

இரங்காதே என்பதன் ஏகாரம்—சிறிதும் இரக்கமின்மையையும், கொல்வினையே என்றதன் ஏகாரம்—செய்ததுகொலையேயன்றி வேறல்ல என்பதையும், கொடுவினையே என்றதன் ஏகாரம்—இதைப்போலுங் கொடுந்தொழில் வேறொன்றில்லை என்பதையும், வல்வினையே என்றதன் ஏகாரம்—இறைவனுக்குச் செய்யும் வன்றொண்டில் இதைப போலும் வன்றொண்டு ஒன்றில்லை என்பதையும் உணர்த்தியவாறும். மனைவியையும் தங்கொள்கைக்கு உடனாக்கிக்கொண்டியற்றியதனால் தாங்கள் என்றார்.

வயிரவகோலங்கொண்டுவந்தாரைத் தாம்பற்றும்பொருளாகப் பற்றி அவ்வழியாய்ச் செய்யத்துணிந்த அச்செயலைக் கொல்வினையாகக்கருதாது, சிவனை நானென்று முனைத்து நின்றெழுந்திருக்கச்செய்து பிரபஞ்சபபொருளை பற்றும்பொருளாக்கி விடாது பற்றச் செய்து, பிறப்பிறப்பிலாழ்த்தும் வல்வினையைச் செய்யவல்ல எனதென்னும் மமகாரத் தைக்கொல்லவல்ல கொடுவினையாகக் கொண்டனா என்பார்—கொல்வினையேசெய்யுங் கொடுவினையே ஆனவற்றை வல்வினையே என்றது—என்றார்.

உயிர்களால் அனுபவிக்கப்படும் பொருள்களெல்லாம் அவனுடைமையேயாக, அப்பொருள்களை நம்முடையனவாகக் கொண்டு ஆளவந்தது, நாம் அவன் பணிசெயது வேண்ட அவ்வேண்டுகோளுக்கிரங்கி, நாம் வேண்டியவாறே அவன் அளிக்கும் வரத் தால் அப்பொருளெல்லாம் நம்முடையனவாய் ஆயிற்றேயன்றி, அவைநமமுடையனவே யன்று என்பார்—வரங்கள்தரும் செய்ய வயிரவர்—என்றார்.

இறைவன் வேண்டியவாறு அவனுடைமையாயுள்ள பொருள்களை அவன்பர மாக்காது, தம்பரமாகவே வைத்துக்கொண்டிருக்கத்துணிதல் கொடுவினையேயாகிய கொல்வினையாமேயன்றி, அவனுடைமையை அவன்வேண்டியவாறே மகிழ்ந்தளித்தல் நல்வினையாகிய வல்வினையாமென்பார்—தங்கள் கரங்களினாலன்று கறியாக்கியது வல் வினையே—என்றார்.

இவ்வல்வினையைச்செய்ய இரங்குவாராயின் அது "ஏதங்கொண்டு ஊதியம்போக விடல்" என்னும் பேதைக்குணமாய் முடியுமென்பார்—இரங்காதே—என்றார். எனவே *"தனக்குக் கேடுபயப்பனவற்றைக்கைகொண்டு, உறுதிபயப்பனவற்றைக்கைவிடுதல்" என்ற பரிமேலழகர் உரையிற்காண்க. அஃதாவது - பேதைமைத்தன்மையான இரக்கங் கொள்வாராயின் கேடுபயப்பனவாகிய மமகாரத்தைக் கைக்கொண்டவராயும் ஆக்கந்தரு வனவாகிய அருளைக் கைவிட்டவராயும் ஆவான்றே என்பதாம்.

கக. பாதகம் என்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும்—சேதிப்பக்
கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தன்செயலால் தான். (6)

(ஏ - து.) இச்செயல் பாதகச்செயலென்றும், இச்செயலால் விளைவது பழியென் றும் எண்ணிப்பாராமல் தமக்குத்தந்தையாயும், பார்ப்பாராயம். இருக்கின்றவரை இரண்டு

*திருக்குறள். அ - ம பேதமை,

கால்களையும் வெட்டியெறிந்தனர். அவ்வரிய செயலுக்குரியராயிருந்த சண்டீசப் பெருமானை, ஈசனாகிய இறைவர்நோக்கி அவர்செய்தசெயலால் அவருக்குத் தாமேயாகும் சன்மானத்தைத் தந்தருளினர். மாணவகனே! இதனை நீ ஆராய்ந்தனையா என்பதாம்.

சண்டீசர்-தந்தையைச் சேதிப்பது பழியென்றும், வேதியரைத் துன்புறச்செய்வது பாதகமென்றும் அறியவல்ல கல்வியுடையவராயிருந்தும், கல்லாதார்போலத் தமது தந்தையினது காலிரண்டும் போம்படிவெட்டியதும், அப்பாதகச்செயலுக்குப் பதைதைக்கும் தண்டத்தைச்செய்து பாவரூபியாக்காது தாமாககித் தம்பரிசெலாம் கொடுத்து என்றும் சுகித்திருக்கும் வாழ்வைத்தந்து உலகெலாந் தொழவைத்ததும் ஆராயத்தக்கதென்றறிவித்தவாறும்.

சண்டீசர் தன்செயலால் ஈசர்கண்டு தாமாம்பரிசளித்தார் கண்டாயே எனக்கூட்டுக.

இனி, சிறுத்தொண்டப் பெருமானார்போல், சண்டீசப்பெருமானும் பேதமையொழிந்த "ஆவதறிவதாகிய அறிவுடையாரும், அஞ்சுவது அஞ்சலாகிய அறிவுடைய தொழிலாரும், எதிரதாக்காக்கும் பேரறிவாளரும் ஆகலான், தாதையைவேதியனைத் தாளிரண்டும் சேதிப்பது பாதகமன்றென்றும் பழியன்றென்றும் பாராதே, சேதித்தனரென்பார்— பாதகமென்றும் பழியென்றும்பாராதே தாதையை வேதியனைத் தாளிரண்டும் சேதிப்ப—எனவும், அங்ஙனமான வன்செயலக்கண்ட இறைவனார், அவ்வறிவிற்சிறந்த பெரியாருக்குத் தாம்செய்யத்தகும் அரியசெயல தாமாம்பரிசளிப்பதல்லது வேறு இல்லை என்பார்—சண்டீசர் தன்செயல் ஈசர்கண்டு தாமாம்பரிசளித்தார்—எனவுங்கூறினார்.

இதனால் "அரனடிக்கன்பிலாதார் புண்ணியம பாவமாகும், அரனடிக் கன்பர் செய்யும்பாவமும் புண்ணியமாகும்" என்ற சுருதியின் உண்மையைக் கடைப்பிடித்து நீ உய்வாயாக எனபார் - கண்டாயே—என்றார்.

எனவே, "அரனடிக் கன்புசெய்கை நல்லதோர் அறம், அரன்றன்பாதம் மறந்துசெய் அறங்களெல்லாம் வீண்செயல்." அஃதாவது, சிவனடியைக்குறித்துச் செய்யும் செய்கைகளே அறம். அவனடியை மறந்துசெய்யும் செய்கைகளே வீண்செயலாகிய பாவம் என்பதாம. ஏனெனில், இதுபாவம் இதுபுண்ணியம் என்றறிந்து அவைகட்குரிய பலன்களைக் கொடுப்பவன் சிவ னொருவனேயன்றி ஏனைத்தெய்வங்களல்ல. ஏனைத்தெய்வங்களல்ல என்பது எவ்வாற்றாலெனின், அத்தெய்வங்கள் வேதனைப்படும், இறக்கும், மேல்வருவினையும் செய்யும், தன்மையுடைத்தானவைக ளாகலான் தெய்வங்களாகா. ஆகவே, வேதனைபபடுதலும இறத்தல் பிறத்தல்களும் அப்பிறப்பிறப்புகள் மாறிமாறி மேன்மேல் வருவதற்கான இருவினைகளும் சேரா இறைவனொருவனே தெய்வமெனப் படுவான். இவ்விறைவனொருவன்றான் தெய்வத்தன்மையை இயற்கையாகவுடையவனும், தெய்வத்தன்மையை மாற்றும இருவினைகளில்லாதவனுமாம். இவனொழிந்தவரெல்லாம் செயற்கைவகையான் உடையவராயும், அத்தெய்வத்தன்மையை மாற்றுவதற்கான இருவினைகளையுடையவராயும் இருபபர். எனவே, அரனடிக் கன்புடையராய் அர்ச்சிப்பாராயின் அவ்வரன் அவ்வர்ச்சனையையேற்று தெய்வத்தன்மையைத் தந்து அவர்களுக்கு உலகினை ஆக்கல் காத்தலாதி அதிகாரங்களைக் கொடுத்து யாவராலும் வழிபடச்செயது வாழச்செய்வன். அரனடிக் கன்பினைமறந்து அர்ச்சனைச் செயலைச் செய்யா தொழிவாராயின் அக்கணமே அவர்களை அத்தெய்வத் தன்மையினின்று நீக்கி அத்தொழில்களையும் செய்யவொட்டாது ஒழித்து தம்மைவழிபடாதாரோடு ஒன்றாகச் சேர்த்து அலமரச்செய்வன்.

தெய்வம் அரனே; ஏனையரல்லர் என்பதை,—"அத்தேவர் தேவர் அவர்தேவர் என்று இங்ஙன் பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே" எனவும், "மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல், தேவரென்றே யிறுமாந்தென்ன பாவந் திரிதவரே" எனவும், அரனால் அவரெல்லாம் வாழ்வுபெறுதலென்பதை,—"வாழ்த்த

மதும் வானவர்கள் தாம்வாழ்வான் மனமின்பாற் றூழ்த்தலதும் தாமுயர்ந்து தம்மை யெல்லாந் தொழவேண்டி" எனவும், அதிகாரம்பெறுதல் என்பதை,—"இயக்கர்கின்னரர் யமனொடு வருணர் இயங்குதீவளி ஞாயிறு திங்கள் மயக்கமில் புலிவானர நாகம் வசுக்கள் வாணவர் தானவரெல்லாம் அயர்பபொன்றின்றி நின்றிருவடியதனை யர்ச்சித்தார்பெறும் ஆரருள்கண்டு" எனவும், வருவனவற்றாற்காண்க.

இதனால் அரனிடத்தும் அரனிடத்தன்புடையாரிடத்தும் செய்யத்தகுவனசெய் தலே அறமெனவும், அரனையும், அரனன்பரையும் மறந்தவரிடத்துச்செய்தலே வீண் செயல் (பாவம்) எனவும் வெளிப்பட்டன. படவே, மெய்த்தேவனுகிய அரனிடத்து அன்புசெய்யும் வித்தகராய் பொய்த்தேவரிடத்து அன்புசெய்தலையறியாத வல்லாளரா யிருக்கும் சண்டேசர், அரனிடம் அன்புஇழந்த அரன்பாலாகவேண்டிய ஆவின்பாலைத் தனது தந்தை, காலால் இடரச்செய்யவே, அவரது காலை வாளால் தாம் இடரச்செய்தல் அறமேயாமென்று எண்ணிச்செய்தனரென்க.

உ௦. செய்யில்உகுத்த திருப்படி மாற்றதனை
ஐய இது அமுது செய்கென்று—வையகத்தெந
தூட்டி யறுத்தவர்க்கே ஊட்டி அறுத்தவனை
காட்டியுரை செய்வதென்னோ நாம். (7)

(எ - து.) விளைநிலத்தின்கண்ணுள்ள கமரின்கண் சிந்தப்பட்டுப்போன செந்நெல் லரிசி, செங்கீரை, மாவடு என்னும் படிக்கட்டளையைக் கண்டு, என்னையனே! இவை யிற்றை இறைவனே! உட்கொண்டருள்வாயாக. நீ உண்டருளாதொழிவையேல், யான் உண்ணப்படும்பொருளுக்கு வழியாயுள்ள எனது ஊட்டியை நான் அறுப்பேனென்று அறுத்து, அவ்விறைவர்க்குத் தாம் வீழ்த்திய திருப்படிக்கட்டளையை, அக்கமரின்கண்ணே யிருந்து மெல்ல ஊட்டித் தமது பிறவிக்கிடஞ்செய்யும் ஊட்டியை அறுத்தவராகிய அரி வாட்டாயரை, நாம் இத்தன்மையரென்று நாடி, இவ்வுலகின்கண் அவரது புகழை காட்ட முடியுமோ முடியா என்பதாம்.

அபிடேகத் திரவியங்களாயுள்ள பலவும், நிவேதனத் திரவியங்களாயுள்ள பலவும் முறையாகக்கொடுத்தல் திருப்படியெனப் பெயர்பெறும். சண்டேசனார் சிவலிங்கமூர்த்தி யைக்கண்டு ஆவின்பாலை யாட்டினார். சிறுத்தொண்டனார் அடியாரைக்கண்டு தமது சிறுவை யூட்டினார். அரிவாட்டாயனார் தமது திருப்படியை யூட்டியது தாவரரூபமாகிய சிவலிங்கவடிவத்திலுமன்று, சங்கமரூபமாகிய அடியார் உருவத்திலுமன்று, அவ்விரண் டுருவத்திலும் அடங்காத ஓர்கமரின்கண். இறைவன் அக்கமரை வாக்காகக்கொண்டு தவறிவீழ்ந்த பதார்த்தங்களை உபசரித்து ஊட்டியதாக உட்கொண்டும், அவர் தமது ஊட் டியை அறுப்பதற்குத் துணிந்தபோது அவரது செவிப்புலனுக்குக் கேட்குமாறு மாவ டுவை வெடேரென்று கடித்து ஒலியையுண்டாக்கியும், அவர்புகழை காட்டியிருப்பாராயின் நாம் அவரதுபுகழை இவ்வுலகின்கண் காட்டுவதென்பது என்னேயோ என்பார் - காட்டி யுரைசெய்வதென்னோ நாம் -என்றார்.

இவை மூன்று திருவெண்பாவானும் வல்வினை கூறப்பட்டது

உக. செய்யுஞ் செயலே செயலாகச் சென்றுதமைப்
பையக் கொடுத்தார் பரங்கெட்டார்—ஐயா
உழவுந் தனுசும் ஒருமுகமே ஆனல்
இழவுண்டோ சொல்லாய் இது. (8)

(எ - து.) (இங்ஙனஞ்சொல்லிவந்த பெரியோரெல்லாம்) சரியாமார்க்கமாகவும், கிரியா மார்க்கமாகவும், செய்யத்தகும்செயல்களையே, சிவனுடனும் பேற்றுக்குச் சன்மார்க்கமாகிய ஞானமார்க்கத்தாற் செய்யப்படும் கேட்டலாதி செயல்களைப்போற்கொண்டு பொறிபுலன்

காரணுதிச் செயல்களையெல்லாங் கடந்துசென்று, அவைகளின் செயல்களுக்குத்தான்முதலாதல்போல்,தனக்குமுதல் இறைவனென்றுணர்ந்து, பின் தான்முதல் என்னும்பரத்தை அகண்டாகாரச் சச்சிதானந்தப்பிழம்பாகிய இறைவனது கடைநோக்கமாகிய அருள்நோக்கத்தில் கொடுத்தார் எவரோ, அவர் கருவிகரணச்சேட்டையற்று தன்னையாண்ட இறைவனேயாய், அவ்விறைவனிடத்துண்டாகும் அருளும் சிறிதுசிறிதாய்த்தோன்றிப் பின்பெருக்கமாய் அப்பெருக்கத்தில் வேருகாதிருக்கும் பயனைப்பெறுவர். எதுபோலெனின், கருவிகரணச் சேட்டையற்று, அப்பனே! உழுதற்குரிய இடமும், அதற்குரிய கருவியும், ஒருமுகமாய்க் கூடப்பெறுமாஞல், அவனுக்கு இழக்கத்தகும் பொருளும் உண்டோ. இதனை நீ சொல்வாயாக என்பதாம்.

"நல்லசிவதன்மம்" என்னும் திருவெண்பாமுதல் இத்திருவெண்பாவரையில் "சிற்பரச்செல்வர், "உள்ளமுருகி உடனுவரல்லது தெள்ளவரியர்" என்று உந்தியுட்போந்த கருத்தைச் சிற்பரச்செல்வர்களாகிய சண்டேசர் முதலாயினரது செய்தற்கரிய செயல்களால் விதந்துகூறப்பட்டது.

எங்ஙனமெனின்:—தன் பனையாட்டியுடன் தன்னிருகரங்களாலும் சிறிதும் இரக்கமின்றிக்கொன்று கரியாக்கிப் படைத்ததும், தந்தையைக்கொல்லுவது பழி என்றும், பாதகமென்றும், பாராது காலிரண்டும் போமபடி வெட்டியதும், விளைநிலத்தில் வீழ்ந்து சிதறிய செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் பாழ்பட்டுப் போகாவண்ணம் இறைவனே! நீ உண்டருளவேண்டும், உண்டருளாதொழிவீராயின் யான் எனது மிடற்றினை யறுப்பேனென்று சொன்னபடியேசெய்ததும் ஆகிய இவை செய்தற்கரிய செயல்களாம். யாவராலும் செய்தற்கரிய இவ்வல்வினைகள இவர்களுக்கு மெல்வினையாக முடிந்தது எதனுலென்றூராயின், உழவுத்தொழிலில் வன்மையும், அதற்குரிய கருவியும், ஒற்றுமைப்பட்டிருப்பின் அவன் உழவுத்தொழிலால எண்ணிய வினைப்பயன் கைகூடுமிதில் ஐயமில்லை. அதுபோல உருகும் எண்ணமுடையோராகிய அவர்களுக்கு உள்ளமும், ஏனைய கருவிகரணங்கள் யாவும் உருகத் தலைபபட்டமையான் வல்வினையும மெல்வினையாயிற்று. உள்ளமாத்திரம் உருகியும, ஏனைய கருவிகளெல்லாம உருகாமையுமாயிருப்பின் அதுசெய்தற்கரிய வல்வினையாகவே முடியும்.

இத்திருவெண்பாவான், நல்லசிவதனமமுதலாகச் சொல்லபபட்ட ஏழுசெய்யுளான், உள்ளமுதலனைத்தும் ஒன்றவுருக வந்தமையும், அங்கே யாமேனுங்காணு அரன் தலைப்பட்டமையும் விதந்து கூறியவற்றை, முடிந்ததுமுடித்தலென்னும உத்தியான் ஈண்டு முடித்துக் கூறப்பட்டது.

பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும பதிபசு பாசஙகளாகிய முபபொருள்களை ஆராய்ச்சிசெய்து அனுபவத்தான் உணர வல்ல ரல்லராகிய பூர்வபக்ஷிகளுடைய பக்ஷங்களினின்றும் நீங்கி, சன்மார்க்கமாகிய முத்திநெறிக்கண் செல்லவிரும்பும தீவிரதர பக்குவ முடையாரை வேறுநெறிக்கண் செல்லவொட்டாது, அந்நன்னெறிக்கண்ணே செல்லுமாறு உய்த்தலது இந்நூற்பொருளாமென்க.

அப்பொருள், "உள்ளமுருகி உடனுவரல்லது, தெள்ளஅறியர்" என்ற இவ்வுந்தியாற் கூறப்பட்டதேயாம். அஃதாவது, உள்ளமுதலிய தத்துவங்களெல்லாம் உருகினுல், சிவத்துடன் கலந்து சிவமேயாய், சிவானந்தம் எய்தப்பெறுவரே யன்றி, உள்ளமுதலிய தத்துவங்கள் உருகும்வகையைச் செய்யவறியாத, அவைகள் மாயாகாரியங்கள், முத்திநெறிக்கு விலக்கானவை, அவைகளின் றொடக்கு ஆகாவென விட்டு, ஞானத்தினுல் சிவத்தைக்கலந்து, சிவமேயாய் நிற்கப்பெறுவோம் என்று எண்ணுவாராயின் அவரெண்ணியபடியே நிற்கப்பெறுர். சிவன் அவர்களுக்கு அரியரே(எளியரல்லர்)என்பதாம்.

இதுதான் சித்தாந்தநூல்களால் சித்தாந்தமாகக்கூறப்படும் சித்தாந்தப் பொருளுமாம். இவ் வுண்மையறியாதார் கூறும் கூற்றெல்லாம் பூர்வபக்ஷங்களாம்.

சித்தாந்தநூல்களில் தலைமையாயுள்ள நூல்கள் சிவஞானபோதம் சிவஞானசித்தியார் சிவப்பிரகாசம் எனமூன்றன்றோ. அவைகளில் பொது உண்மை என்று இரண்டாக வகுக்கப்பட்டிருக்கின்றமை காண்கின்றோமன்றோ. அவ்விரண்டனுள் இந்நூலில் எடுத்துக்கொண்டது உண்மையிற் கூறப்பட்டுள்ள உண்மைப்பொருளேயாம். இவ்வுண்மைப்பொருளுக்குரிய அதிகாரிகள் † பொதுநீக்கித் தனை (சிவனை) நினையவல்லாராகிய தீவிரதர சத்திநிபாதமுடையவரேயாவர். அவர்களுக்கு என்றும் பெருந்துணையாய் எடுத்துக்கூறுவதாகும் இச்சித்தாந்தப் பொருளென்க. சித்தாந்தம் எனவே - சித்ரூபமாகிய சிவத்தையடைதற்குரிய முடிவுரைகளை யுடைத்தென்பதாம்.

அம்முடிவுரைகள் ஐந்து அவ்வைந்தினையும் முறையே அ-கூ-கம-கக-கஉ எனப்படும் (டு) சூத்திரங்களிற் கூறப்பட்டுள்ளன. (எ) ஆம் சூத்திரத்தில் அம்முடிவுரைகளுக்கு அதிகாரி ஆன்மாவெனக் கூறப்பட்டுள்ளது.

இனி அம்முடிவுரைகளாவன (1) சித்ரூபமாகிய சிவத்தையடைதற்குரிய "சாதனங்களும்" (2) அச்சாதனங்களால் "ஞானத்தினை யுணருமுறைமையும்" (3) அம்முறைமையினையுணர்ந்தமுறையான் "ஆன்மசுத்தி பண்ணுமாறும்" (4) ஆன்மசுத்தி பண்ணியபின்னர், "பரமேச்வரனது ஸ்ரீபாதங்களை அணையுமாறும்", (5) அணையப்பெற்றபின்னர் "அசிந்திதனாய்நின்ற பதியைச் சிந்திதனாக்கிக்கண்டு வழிபடுமாறு"மேயாம். இவ்வுண்மைப்பொருளையே எடுத்துக்கூறியதாகும் "உள்ளமுருகி" என்னும் இவ்வுந்தியாரென்க.

எங்ஙனமெனின்,—சாதனங்களைச்செய்ததற்குப் பிரயோஜனம் ஞானத்தினையுணர்தல், அதனை உணர்ந்ததற்குப் பிரயோஜனம் ஆன்மசுத்திபண்ணுதல், அதற்குப் பிரயோஜனம் ஸ்ரீபாதங்களை யணைதல், அடிகளை அணைந்ததனால் கிடைக்கப்பெறும் பிரயோஜனம் பதியைக்கண்டுவழிபடுதல் என்றாயிற்று. ஆகவே, அங்ஙனம் வழிபடுதலை மேற்கொண்ட மெய்ஞ்ஞானிகளுக்கு உள்ளமுதலிய தத்துவங்களின்றி வழிபாடு எங்ஙனம் கூடும். ஆதலான், இவ்வுந்தியின்பொருளை உபதேசவாக்கியமாகக்கொண்டு உபதேசிக்க வந்த திருக்களிற்றுப்படியாரும "உள்ளமுதல் அனைத்தும் ஒன்ற உருகவரின் உள்ளம் உருகவந்து உன்னுடனும்" என்றுகூறினார்.

இங்ஙனமான சித்தாந்தப்பொருளை யுணராதார் யாவரோ அவர்களே பூர்வபக்ஷிகளாவார். எனவே - முன்னுள்ளதாகிய பாசத்தை அடைந்திருப்பவராவர். எனவே, பாசஞானக் கொள்கையராயும், பசுஞானக் கொள்கையராயும இருப்பரென்க

இனி, "பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்" என்றதனுள் பொது என்றது - ஐம்புல உணர்வுருவாகிய அசத்தெனப்படும பாசம். அஃதாவது,—பாசம-ஐம்புல உணர்வுருவமா யிருப்பினும்; அவை தம்முள் ஒன்றனை ஒன்று அறியாத தன்மையினையுடைத்து. எனவே, கேட்கும அறிவினையுடைய செவி அறிவு-காணும் அறிவினை யுடையதாகாது. அஃதேபோல் காணும் அறிவினையுடைய கண்ணறிவு-பரிச அறிவினை யுடையதாகாது. இஃதேபோல் ஐயறிவுகளும் ஒன்றனையொன் றறியாத இயல்பினை யுடையன, ஆகலான், எல்லா அறிவுகளையும், அவ்வறிவுகளால் செய்யப்படும் செயல்களையும், ஒருங்கே அறியவும், ஒருங்கே செய்யவுமான அச்சிவத்தின்முன்னர் உணர்வுடைய சத்துப்பொருளாயிருப்பதற்கின்றி அப்பிரகாசப் பொருளாயிருக்குந் தன்மையினை யுடையதாயிருத்தலின் அசத்தெனவும்; சிவத்தின்முன் அசத்தெனப்படினும், அவைதம்மை நோக்குமிடத்து, கேட்கப்படுபொருளுக்கு கேட்கும் அறிவினையும், பார்க்கப்படு பொருளுக்குப் பார்க்கும் அறிவினையும, பரிசிக்கப்படும் பொருளுக்குப் பரிசிக்கும் அறிவினையும், சுவைக்கப்படும் பொருள்களுக்குச் சுவைக்கும் அறிவினையும, கந்திக்கப்படும் பொருள்களுக்குக் கந்திக்கும் அறிவினையும், உடையதாய்க் கூடியிருத்தலின் உணர்வுருவெனவும் சொல்

† திருநாவுக்கரசுகள் தேவாரம் திருத்தாண்டகம்.

லப்பட்டன. இவ்விருவகைத்தன்மையுடைய பாசம், சிவனறிவைப்போல் ஒன்றும் அறிந்தாங்கறியுஞ் சிறப்புத் தன்மைத்தன்றி, ஐயறிவாய் ஒன்றின்தன்மை ஒன்றெய்தப் பெறாது கூடியிருத்தலின் பொதுவெனப்பட்டது.

இனி, தனை என்றது - அறிகருவிகளாகிய ஐம்புலன்கள் தத்தம் தொழிலைச் செய்தற்கும், அவ்வைம் புலன்களை வேண்டியவாறு ஆளுந்திறமுடைய ஆன்ம அறிவுக்கும் இன்றியமையாத அகண்டாகார அறிவுவடிவாயிருக்கும் சித்தெனப்படும் சிவம். எனவே சத்தாகிய அச்சிவத்தையன்றி ஐம்புலன்கள் அறிதற்றொழிலைச் செய்யவும், ஐம்புல அறிவின் வழியாய் ஆன்மஅறிவு தனக்குரிய போகத்தை அறிந்து அனுபவிக்கவும் கூடா ஆகலான் அசைவித்தலும் அறிவித்தலுமாகிய சித்துத்தன்மையுடையது சிவமென்க.

இனி, நினையவல்லோர்க் கென்றது - ஐம்புல அறிவாகிய பாசஅறிவானும், ஆன்மா எனப்படும் தன்னறிவாகிய பசுவறிவானும், அச்சிவத்தை அறியநினையாமல் அச்சிவ ஞானமாகிய பதியறிவால் அறியநினைப்போர்க்கு.

இனி, அவர்களுக்கு என்றும் பெருந்துணையாய் எடுத்துக்கூறுவது இச்சித்தாந்தப் பொருளென்றதனுள், அவர்களுக்கு என்றது-ஐம்புல அறிவுகளை அப்பிரகாசப்படுத்த வல்ல சிவமாகிய சத்தறிவினாலும், நாமரூபங்களோடு கூடியுள்ள பிரபஞ்சபதார்த்தங்கள் தன்பிரகாசத்தால் பிரகாசிக்கச்செய்யும் வன்மை யுடைத்தானதாய, சிவமாகிய சத்தின் முன்னர் பிரகாசித்திருக்கும் வன்மை யுடைத்தான தன்றாயிருக்கும் அசத்தறிவினாலும், பிரகாசிக்கப்படுவதாயிருக்கின்ற அறிவினையுடைய ஆன்மாக்களுக்கு. எனவே, சத்தறிவினாலும், அசத்தறிவினாலும் பிரகாசிக்கப்படும் அறிவுடையோரா ஆன்மாக்கள் என்றாயிற்று. ஆகவே சிவமாகிய பதி சத்தென்றும், பிரபஞ்சமாகிய பாசம் அசத்தென்றும், இவ்விரண்டு மல்லாததாய இவ்விரண்டின தன்மையை யடைந்து அது அதுவாயிருக்கும் ஆன்மாக்கள் சதசத்தென்றும் சொல்லப்படும்.

இனி, அவ்வான்மாக்களுக்கு என்றும் பெருந்துணை என்றது-உள்ளமுதலிய தத்துவங்கள், ஆன்மாக்கள் ஆணவபாசத்தினின்றும் வேறுபட்டு அருள்வசப்பட, இறைவனால் ஆக்கப்பட்ட காரிய ரூபமாயுள்ளன அவ்வுள்ளமுதலிய தத்துவங்கள் இறைவனால் ஆக்கப்பட்ட காரியங்களெனவே ஆணவம் இறைவனால் ஆக்கப்படாததாய், அநாதியே ஆன்மாவோடு கூடியுள்ளது என்று அறியக்கிடக்கின்றது.

ஆகலான், அநாதியே கூடியுள்ள அப்பாசத்தை வேறுபிரிக்கவேண்டுமாயின் அவ்வாணவத்தோடெண்ணப்பட்ட கன்மமலமும் மாயாமலமும் ஒழியவேண்டும். அவையொழிய வருமாயின் ஆணவபாசம் ஆன்மாவுக்கு வேறாம் அம்முறைமையை இறைவன் திருவுளத்தெண்ணி, மாயாமலத்தினின்றும் உள்ள முதலிய தத்துவங்களைக் காரியப்படுத்தி அவைகளில் கன்மமலத்தைச் சம்பந்தப்படுத்தி அக்கன்மவழியாய்ச் சனனமரணத்துட்படுத்திக் கன்மமலத்தைப் பக்குவப்படுத்துவன் அவ்வழியானே ஆணவசத்தி குன்றுமாறு துன்ப இன்பங்களைப்பெருக்குவன் பின்னர் அவ்விரண்டினுமாறிமாறி யுழன்று அவைகளில் மொத்துண்ணச்செய்வன் மொத்துண்ணுதலால் ஓய்வுண்டாக்கி இருவினையொப்புவருவித்து ஒருவழிப்படச்செய்வன். அங்ஙனம் ஒருவழிப்பட்டவழி அவ்வின்பத்துன்பங்கள் எவ்வழியான்வந்தனவென்று நாடச்செய்வன. அங்ஙனம் நாடுங்கால் உள்ளமுதலியதத்துவங்கள் கன்மவசப்பட்டு உழன்றசெயல்வகையானென்று உணரச் செய்வன். அவ்வுணர்ச்சிவந்தபின்னர், உள்ளமுதலிய தத்துவங்களை இன்பத்துன்பங்களை விளைவிக்கும் கன்மமலத்தின்வழியே செல்லவிடாது, அவ்வின்பத்துன்பங்களை மாற்றும் நல்லகன்மங்கள் எவைகளோ அவைகளையறிந்து அவைகளைச்செய்யவேண்டுமென் ற அவாவையு[illegible]க்குவன், அஃதுண்டாதலே மலபரிபாகம் எனப்படும். அம்மல பரிபாகத்தை யுண்டாக்கியபின்னர் தானேகுருவாய் வருவன். வந்துசிவ ஞானத்[illegible]

செப்பமாட்டார்—என்றார். இதுகாறுந் தீண்டாமையைக் காத்த திருவருள் இன்று காவா தொழியுமோ, ஒழியா, ஏதேனும் பொருந்தியதோருபாயத்தை அதாவது தீண்டியதாகவும், தீண்டாமையாகவும் கொள்ளத்தக்க ஓர் உபாயத்தை நமது உள்ளத்தில் பொருந்தச் செய்யும் என்று தமது சுதந்தரமொழிந்து திருவருளோடும் துணிபுடையராகலான்—பொருந்தியவகையான் மூழ்கித் தருகின்றேனம் போதும்—என்றார் திருவருள்வசத்தராம்தவத்தனார்க்கு இறைவனும் அவர்வசத்தனாய பெருந்தவத்தனாய செல்வனாகலான்—பெருந் தவமுனிவரோடும்மனையைச்சார்ந்தார் —என்றார். தாம் கைப்பற்றிமூழ்கவேண்டிய மனையாள் வீட்டின்கண் இருத்தலான்—பெயர்ந்துதம்மனையைச்சார்ந்தார்—என்றனுமாம்.

இத்திருப்பாசுரத்தான், தாம் விரதமாகக்கொண்ட தீண்டாமையைக் காத்த திருவருளைநாடி, சிவயோகியாரைத் தம் மனைக்கு அழைத்துப்போனமை கூறப்பட்டது.

## தண்டின் தலையைப்பற்றி உண்மைகூறி மூழ்கல்.

மனைவியார் தம்மைக் கொண்டு மறைச்சிவ யோகி யார்முன்
சினவிடைப் பாகர் மேவும் திருப்புலீச் சரத்து முன்னர்
கனைமலர்ச் சோலை வாவி நண்ணித்தம் உண்மை காப்பார்
புனைமணி வேணுத் தண்டின் இருதலை பிடித்துப் புக்கார்.

(எ - து) (நாயனார் வீட்டுக்குச் சென்று) வீட்டுக்குரியாளை அழைத்துக்கொண்டு, கோபமுள்ள இடப ஊர்தியையுடைய வியாக்கிரபுரீச்சுரர் வீற்றிருக்கும் திருப்புலீச்சரமென்னும் திருக்கோயிலுக்கு முன்னர், அந்தணவடிவோடு சிவயோகியாய் வந்திருக்கின்ற அவரை முன்னே இருக்கச்செய்து, அவர்முன் இருக்கின்ற சோலைபோல் தேன்நிறைந்துள்ள மலர்கள்நெருங்கிய தடாகக்கரைக்கு வந்து, தாம் மனையாளைத் தீண்டாமையாகிய உண்மைநிலையைக் காக்கும் உபாயத்தை உள்ளத்துட் கொண்டு, (புறம்பே) அழகினையுடைய நீண்ட ஒரு மூங்கிற்றண்டினுடைய இருதலையை இருவரும் பிடித்துக்கொண்டு, நீரில்மூழ்குவதற்குப் புகுவாராயினார் என்பதாம்.

மனையாளைப் புறம்பே தீண்டாதொழியினும், அவரிட்ட ஆணைவழியால் அவரைத் தம்முள்ளத்துள் கொண்டிருத்தலின் அங்ஙனங் கொண்டு என்பார்—மனைவியார்தம்மைக்கொண்டு—என்றார் செய்யப்பிரமாணத்தை ஏற்றுக்கொள்ளற்குரிய பிராமணவடிவுடையவராய் வந்தனரென்பார்—மறைச்சிவயோகி—என்றார். தவமுடையாரிடத்துக் கணந்திற்குமேன் தமக்குளி ஆதலால் தவசீலராகிய நாயனாரிடத்து வரும்வண்ணம் தாம் எவ்வளவு செயலைச் செய்யினும் அதற்கு விடைகொடுக்கும் சிவதருமமாகிய விடையை உடையவரென்பார்—சினவிடைப்பாகர்—என்றார். வியாக்கிரபாதமுனிவரால் பூசிக்கப்பட்ட க்ஷேத்திரம் என்பார்—திருப்புலீச்சரம்—என்றார். மனையாளைத்தீண்டாமையாகிய உண்மையும், பாத்திரத்தைக் கள்ளாமையாகிய உண்மையும் காத்துக்கொள்ளும்பொருட்டு மூங்கிலைக் காவலாகக் கொண்டனரென்பார்—தம்முண்மைகாப்பார் வேணுத்தண்டின் இருதலைபிடித்து—என்றார். அந்நாள்காறும் பிறர் அறியாமல் காத்த தம் கொள்கையை அப்பொழுது குளத்திலிருந்து சொல்லத்துணிந்தார் என்பார்—வாவி நண்ணிப்புக்கார்—என்றார். இருதலை என்றது - தீண்டாமை, தீண்டுதல் என்னும் இருபொருட்டு. புக்கார் என்றது - துணிந்தார் என்னும்பொருட்டு. கனைமலர்ச்சோலை வாவி-என்றது மலர்கள் நிறைந்துள்ள சோலைசூழ்ந்த திருக்குளமெனினும்பொருந்தும்.

சிவயோகிகள் சந்நிதானமும், ஈச்வரசந்நிதானமும் பிரமாணத்துக்கு மிகச்சிறப்புடைத்தனமாகலின்—சிவயோகியார்முன், திருப்புலீச்சரத்துமுன் என்றனுமாம்.

நாயனார் செய்யத்துணிந்த பிரமாணம் உள்ளும்புறமும் ஒத்தபிரமாணமாகலின் மறைச்சிவயோகியென்றும், திருப்புலீச்சரமென்றுங் கூறினார். எனவே, நாயனார் உள்ளிருப்பவர் ஈசனார். அவரால் புறம்பேணப்பட்டவர் மறையவனார். ஆகலின் உள்ளிருப்பவரும், வெளியிருப்பவரும் ஒப்பவென்னும் பொருள்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் ஈச்வரசந்நிதானத்தின்முன்னும், சிவயோகியார் முன்னும் குளக்கரையில்நின்று பிரமாணஞ்செய்யத் தொடங்கினார் என்று கூறப்பட்டது.

தண்டிரு தலையும் பற்றிப் புகுமவர் தம்மை நோக்கி
வெண்டிரு நீற்று முண்ட வேதியர் மாதைத் தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீர் என்னக் கூடாமை பாரோர் கேட்கப்
பண்டுதஞ் செய்கை சொல்லி மூழ்கினார் பழுதி லாதார்.

(இ - ள்) மூங்கிற்றண்டின் இருதலையையும், நாயனாரும் அவர்மனைவியாரும் பிடித்துக்கொண்டு, நீரில் மூழ்கத் தலைப்பட்டபோது, வெண்ணிறமுடைய பன்னிரண்டு திரிபுண்டரதாரணராகிய சிவயோகியார் நாயனாரைப்பார்த்து, (வேட்கோவரே! உம்மை நான் உமதுமனையாட்டியைத் தீண்டி அவள்கையைப் பிடித்துக்கொண்டு மூழ்கச்சொன்னேனேயன்றி மூங்கிற்றண்டின் தலையைப் பிடித்து மூழ்கச்சொன்னேன்! இச்செயல் அழகிது, இது நான் ஒப்பத்தக்குந்தகைத்து. நான் சொன்னபடி) மூழ்கித்தருவீராக என்று கூறினார். பொய்ம்மையை அறியாதநாயனார், அங்குச் சூழ்ந்திருந்த உலகினரெல்லாங் கேட்கும்படியாக, முன்னாளில் தமக்கும் மனைவியாருக்கும் நிகழ்ந்தசெயலைச் சொல்லி, (அக்காரணத்தால் மறையவர்சொல்லியபடி, மனைவியின்கையைப் பிடித்து மூழ்குதற்குக் கூடாமையாயுள்ளேன் என்பதைவிளக்கி) நீரில்மூழ்கினார் என்பதாம்.

தண்டிருதலையும்பற்றிப் புகும்அவர் தம்மை வெண்திருநீற்று முண்டவேதியர், நோக்கி மாதைத்தீண்டிக்கொண்டுடன்மூழ்கீர் என்ன, பழுதிலாதார் பாரோர்கேட்கப் பண்டு தஞ்செய்கையெல்லாஞ்சொல்லி, கூடாமையை (விளக்கி) மூழ்கினார் என்று கொண்டுகூட்டுக.

நாயனாரும் அவர்மனைவியாரும் நீலகண்டம் என்னும் நீண்ட(பெரிய)தோர் ஆணையை நீண்டகாலமாகத் தலைப்பிடித்திருந்தார்களேயன்றி, கடையானதாகக் கைப்பற்றும் கடையாகிய காமத்தைக் கைப்பற்றினாரில்லையாகலான் அவ்வுண்மைதோன்ற—தண்டிரு தலையும்பற்றினார்—என்றார். அதுகாறும் வெளிப்படுத்தாதிருந்த நாயனாரது உள்ளம் பேதிக்குமாறு தாமசெய்த செயலெல்லாம் அந்நாயனார் தாமகொண்ட ஆணையில் பேதியாது திண்ணியராய் நிற்கவேயாகலான் அவ்வுண்மை அவருக்குத்தோன்ற—வேதியர் புகுமவர்தம்மைநோக்கி—என்றார். அங்ஙனம்நோக்கிய இறைவர் நோக்கதின்வழியே நிறுத்தவல்ல திருவருள் அவரது உள்ளத்தில் நீங்காதுநிற்றலால், அவ்வருளைத் தீண்டி (பற்றி) உன்செயலொழிந்து, யான்செய்யச்சொல்லும் செயலையே செய்வாயென்னும் உண்மைதோன்ற—மாதைத் தீண்டிக்கொண்டுடன்மூழ்கீர் என்ன—என்றார். இறைவனார் மூவாயிரம் அந்தணர்களைக்கொண்டு இச்சபதத்தை நம்மைச்செய்யச் செய்தது மூவுலகும்அறியத் திருவுளங்கொண்டனரேனும், திருநீலகண்டத்தாணை வழிநின்ற நாம், இனிச் சிவயோகியார் ஆணைவழிச்செய்வதும் நமக்கு இன்றியமையாத செயலென்று துணிந்தனரென்பதுந்தோன்ற—பாரோர்கேட்ப, பண்டுதஞ்செய்கைசொல்லி

---

நாயனாரது உண்மையை வெளிப்படுத்தக்கருதிய இறைவன் சிவயோகியாய் வெளிப்பாது, தாம் கருதியபடியே அவர் இசைந்து அவ்வழியேவர, தமது அருள் அவருள்ளத்தில் நீங்காதிருந்தாலன்றிக் கூடாதாகலான் அங்ஙனங் கூறியதென்க.

தோன்ற என்றதனால் தேவர்கள் இமையாநாட்டமுடையாரும், முனிவர்கள் தவமுடையாரும் ஆகலின் மலர்மழையில் காணப்படாதிருந்தவர் காணப்பட்டனரென்று பொருள்கொள்ளலுமொன்று.

இத்திருப்பாசுரத்தால், இறைவன் ஆணைவழிநின்று இன்பத்தை எய்தபெருந்தவர் இளமையிழந்து முதுமையடைந்து சாவில்மூழ்குகின்றனர் என்பதும், இந்நாயனார் ஆணைகடவாமையால் முதுமையையிழந்து இளமையையடைந்து இறவாத இன்பத்தில்மூழ்கி என்றும் இருப்பவராயினர் என்பதும் கூறப்பட்டன (கூக)

## சிவயோகியாரை விடபாரூடராய்க் காண்டல்.

அந்நிலை அவரைக் காணும் அதிசயம் கண்டார்எல்லாம்
முன்னிலை நின்ற வேத முதல்வனைக் கண்டார் இல்லை
இந்நிலை இருந்த வண்ணம் என்னென மருண்டு நின்றார்
துன்னிய விசும்பி னூடு துணையுடன் விடைமேற் கண்டார்.

(எ - து.) (மழையில் மீளமூழ்குவார் போன்று நின்ற) அந்நிலையில் அதிசயமாய்க் காணப்படுகின்ற அவர்களை, தரிசனஞ்செய்தவரெல்லாம், (பின்னர் இவர்களை மூழ்கச் செய்த சிவயோகியார்) நாமெல்லாம் காணும்படி முன்னே நின்றனரே அவரெங்கே யென்று காணும்பொழுது, வேதமுதல்வனாகிய அவரை ஒருவருங்கண்டாரில்லை. (காணமற்போகவே, அவரெல்லாம், சிவயோகியார்) முன் காணநின்றவண்ணமும், இப்பொழுது காணமற்போனவண்ணமுமாகிய இந்தநிலை, என்னவென்று ஐயமுற்று, (நினைக்குநினைவும் செய்யும்செயலும்) அற்று அடங்கி நின்றனர். (அங்ஙனம்நிற்கும் பொழுது) தேவர்கள்முதலாயினோர் நெருங்கியிருக்கின்ற ஆகாயத்தின் கண் பார்வதிசமேதராய் இடபாரூடராயிருக்கக் கண்டனர் என்பதாம்

இருவரும் குளத்தினில் மூழ்கி யெழுந்தபொழுது, இருவருக்கும் யாவராலும் காணப்பட்ட முதுமைப்பருவம்போய ஆணைநிகழ்ந்த அக்காலத்து இருந்த இளமைப் பருவம் வந்து நிற்கின்ற அதிசயத்தை யாவரும் கண்டனரென்பார் —* அந்நிலை யவரைக் காணும் அதிசயங் கண்டாரெல்லாம்—என்றார். அங்ஙனங் கண்டவரெல்லாம் குளத்தினில் மூழ்கச்சொல்லி அவர்களது முதுமைப் பருவத்தைப் போக்கி, பின்னர் அந்நீரினின்றும் எழுந்திருக்கும்போது, அவர்களது இளமைப் பருவத்தையும் உடனெழச்செய்வதுபோல் எழுந்திருக்கச்செய்த இறைவர் காணதொழிந்தனர் என்பார்—முன்னிலைநின்ற † வேதமுதல்வனைக் கண்டாரில்லை—என்றார் நாயனார் முதுமைப் பருவமாகிய அந்நிலையொழிந்து இளமைப்பருவமாகிய இந்நிலைமையைப் பெற்று இவ்வண்ணம் இருக்கும் பொழுது, இவர்பால் வல்வந்தாகிட்டவராகிய சிவயோகியார் அந்தயோகநிலையைவிட்டு இப்பொழுது எந்தநிலையராய் எவ்வண்ணம் எங்கிருக்கின்றனரோ என்று மயங்குகின்றனர் என்பார்—இந்நிலையிருந்தவண்ணம் என்னென மருண்டுநின்றார்—என்றார். அவர்களது மயக்கம்நீங்க, தாம் உமாதேவியோடு கூடிநிற்கின்ற நிலையினரென்றும், சிவதருமத்தை மேற்கொண்டவருக்கு அதர்மரூபமாகிய விடையைத் தெரிசிக்கும்படிச் செய்கின்றவரென்றும், எப்போதும் சிதாகாசமாகிய சிற்றம்பலத்தில் காட்சிகொடுக்கின்றவரென்றும் அறியச்செய்தனர் என்பார்—துன்னியவிசும்பினூடு துணையுடன் விடைமேற் கண்டார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் முதுமை பருவத்தைப்போக்கி முன்னுள்ள இளமைப்பருவத்தைக் காட்டிய அதிசயம்போலும், இறைவனார் சிவயோகி வடிவத்தைப் போக்கி, முன்னுள்ள அருளுருவத்தைக் காட்டிய அதிசயங்கூறப்பட்ட (கூ)

* அந்நிலை என்பது-இருவரும்சபதஞ்செய்துகொண்ட அக்காலம். † வேத ஆராய்ச்சி செய்வோர்க்கு முன்தோன்றுவதுபோல் தோன்றி, சொரூப ஆராய்ச்சியில் தோன்றாததுபோலத் தோன்றிமறைந்தனராகலின் வேதமுதல்வர் என்றார்

## நாயனாரும் மனைவியாரும் போற்றுதல்.

கண்டனர் கைகள் ஆரத் தொழுதனர் கலந்த காதல்
அண்டரும் எத்தி னார்கள் அன்பர்தம் பெருமை நோக்கி
விண்டரும் பொலிவு காட்டி விடையின்மேல் வருவார் தம்மைத்
தொண்டரும மனைவி யாரும் தொழுதுடன் போற்றி நின்றார்.

(இ - ள்) சொல்லுதற்கரிய காட்சியைக்காட்டி விடையின்மேல் ஆகாயத்தின்கண் வந்த இறைவனை யாவரும் தெரிசனஞ்செய்தனர் இருகைகளும் பூமியிற்பொருந்த வீழ்ந்து வணங்கினர் நாயனாருடைய பெருமையல்லவோ இதுவென்று எண்ணி உள்ளத்தின்கண் கலந்தஆசையையுடையவர்களாய்த் தேவர்களெல்லாம் வாயாரப் போற்றினார்கள். (இவ்வண்ணம் தேவர்முதலாயினார் வணங்கவும் போற்றவுமாயிருக்கின்ற காட்சியோடிருக்கின்ற பெருமானை) நாயனாரும் அவர்மனைவியாரும் ஒருங்குநின்று தெரிசனஞ்செய்தனர் என்பதாம்.

(அதிசயங்கண்டாரெல்லாரும்) விடையின்மேல், விண்டரும் பொலிவுகாட்டி வருவார்தம்மை, கண்டனர், கைகளாரத்தொழுதனர், அண்டரும் அன்பர்தம் பெருமை நோக்கி, கலந்தகாதல் (உடையராய்) எத்தினார்கள், தொண்டரும் மனைவியாரும் தொழுதுடன் போற்றிநின்றார் எனக்கொண்டு கூட்டுக.

யாவரானும் காண்டற்கரிய காட்சியோடு நாயனாரையும், அவர்மனைவியாரையும் உடனாய் குளக்கரையில் நிற்கசெய்து, இறைவனாரும் தானும் தன் பெருமாட்டியுடன் ஆகாயத்தின்கண் விடையின்மேல் இருந்தகாட்சி யாவருக்குந் தோன்றியதாயிருந்ததென்பார்— விடையின்மேல்வருவார் காட்டிடபொலிவு விண்டரும் என்றார். இவ்வண்ணமான காண்டற்கரிய காட்சியைக் கண்களாரக் காணவும், கைகளாரத் தொழவும் வந்தது, நாயனார் செய்த அரியசெயலாலன்றோ என்று அன்புகலந்தநெஞ்சுடையவராய்த் தேவர்களெல்லாம் போற்றினார்கள் என்பார்— கண்டனர் கைகளாரத் தொழுதனர் கலந்தகாதல் அண்டரும் எத்தினார்கள் அன்பர்தம்பெருமை நோக்கி—என்றார். நாயனாரது அதிசயக்காட்சியைநோக்கி இறைவனையும், இறைவனது அற்புதக்காட்சியைநோக்கி நாயனாரையும் பார்ப்போரெல்லாம் பார்த்துக்கொண்டிருக்க, நாயனாரும் மனைவியாரும், இறைவன் முன் ஒருவனாய் வந்து, வேறுவேறிருந்தமையை உடனாக்கி, பின்னர் தாம் அங்ஙனம் உடனாக்கிய அருளுடனாய்த் தோன்றி, நாம் அவ்வருளேயாய் நிற்கக்காட்டிய காட்சி இக்காட்சியாமென்றுணர்ந்து, அருள்மயமாய்நின்று போற்றினார் என்பார்— தொண்டரும் மனைவியாரும் தொழுதுடன்போற்றிநின்றார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், பாசத்திற்கு விடைகொடாதவரும், பாசத்திற்கு விடைகொடுத்தவரால் காணப்பட்ட விடையுடையானைக் கண்டு அன்புகலக்கப்பெற்று எத்தப்பெற்றதும், வேறுவேறு இருந்ததொண்டரும் மனைவியாரும் உடனாய் நின்று தொழுது போற்றிநின்றதுங் கூறப்பட்டன.

அல்லதூஉம், இறைவன் உயிர்களோடு வேறாயிருந்தும் வேறாயிருப்பவனும் அல்லனாயும், ஒன்றாயிருந்தும் ஒன்றாயிருப்பவனும் அல்லனாயும், உடனாயிருந்தும் உடனாயிருப்பவனும் அல்லனாயும் இருப்பதுபோல், நாயனார் இருந்தனரென்ற உண்மையை விளக்கியதுமாம். எங்ஙனமெனின்; நாயனார் மனைவியாரது உடம்பைத்தொடாது உடம்புக்கு வேறாயிருந்தும் அவரிட்ட ஆணையில் ஒன்றுபட்டு அன்போடுகலந்திருந்தனராகலான் வேறாயிருந்தவரல்லராயினர். இருவரும் வேறுவேறிடத்திராது ஓரிடத்திருந்தும் இணைவிழைச்சு(புணர்ச்சி)யில் ஒன்றுபட்டிராது வேறுபட்டிருந்தனராகலான் ஒன்றாயிருந்தும் ஒன்றாயிருந்தவரல்லராயினர். இறைவன் செயலால் உடனாயிருக்கவந்தும் முன்னுள்ள சிற்றின்பத்தில் உடனாயிராது, பேரின்பத்தில் உடனாயிருப்பதற்கு உரியராயிருத்தலால் உடனாயிருந்தும் உடனாயிருப்பவரல்லராயினர் என்க. (சக)

## நாயனாரை மனையாளோடு தம்முடனிருக்கச்சொல்லி மறைதல்.

மன்றுளே திருக்கூத் தாடி அடியவர் மனைகள் தோறும்
சென்றவர் நிலைமை காட்டும் தேவர்கள் தேவர் தாமும்
வென்றவைம் புலனான் மிக்கீர் விருப்புடன் இருக்க நம்பால்
என்றும் இவ்விளமை நீங்கா தென்றெழுந் தருளி னாரே.

(இ - ள்) சிற்சபையின்கண்ணே, ஒருவராலும் மதித்தற்கரிய அற்புதக்காட்சியோடு நடனஞ்செய்து, தமது அடியவர்களுடைய வீடுகள்தோறும்சென்று, அவர்கள் கொண்டிருக்கும் தமது திருத்தொண்டில் நிலையாகநிற்கும் நிலைமையை யாவரும் அறியும் வண்ணம் செய்தருளும் பெருமானாகிய இறைவனும், (தம்மைப்போற்றிநிற்கும் நாயனாரையும், அவரது நாயகியாரையும்நோக்கி) வெற்றிப்பாடுடைய ஐம்புலன்களினால் மேம்பாட்டினை யடைந்தவர்களே! நம்மிடத்தில் (நீவிர் இருவரும்) எக்காலத்தும் இப்பொழுது அடைந்திருக்கும் இளமைப்பருவத்தினின்றும் நீங்காமல் விருப்பத்துடன் இருக்கக்கடவீர்களென்று அருள்செய்து திருவுருக்கரந்தனர் என்பதாம்.

நம்பால், என்றும் இவ்விளமைநீங்காது, விருப்புடன் இருக்க, என்று எழுந்தருளினார் எனக்கூட்டுக.

சிற்சபையின்கண்ணே, தாம்நின்று ஆடும்ஆட்டத்தின் பொருளும்பயனும் காட்டுவோர் அடியவர்களாக இருத்தலால் அவ்வுண்மையாவரும் உணர—மன்றுளே திருக்கூத்தாடி அடியவர் மனைகள்தோறும் சென்று—என்றார். தேவர்கள் தம்மைத் தேவரென்றெண்ணி இறுமாந்திருப்பதற்கின்றி அசுரர்கள் படுத்தும்பாட்டினால் தமது தெய்வத்தன்மையொழிந்து தம்மை அடைந்து பணிந்துபோற்ற அவரது துன்பங்களையொழித்துமீளவுந்தேவர்களாக வாழச்செய்யும் தெய்வமாக இருத்தலால் தேவர்கள் தேவர் என்றார். அறிவின்மிக்கார் யாவருந் தம்மைவெல்லக்கருதாது அவர்வழிப்படாது, அவர்களைத் தம் வழிப்படுத்தும் வெற்றிப்பாடுடைய ஐம்புலன்கள், நாயனார் வழிப்பட்டு அவராணைவழிநிற்கும் மேம்பாடுடையராயிருத்தலால்—வென்றஐம்புலனான்மிக்கீர்—என்றார். ஐம்புலன்வழிநுகரும் சிற்றின்பத்தைச் சிற்றின்பமாகவே சிதறவிட்டு, அன்றளவும் பேரின்பத்தைப் பேரின்பமாகவே யாருந் (நீங்காது) அனுபவித்துவந்தவராயிருத்தலால் "என்றும் இவ்விளமைநீங்காது விருப்புடன்" (அப்பேரின்பத்துடன்) "நம்பால்" (பேரின்பமென்னும் வரம்பிலின்பமுடையராகிய நம்மிடத்தில் "இருக்க" (நீவிர் இருவரும் நீங்காதிருக்கக்கடவீர்களாக என்று), (அவர்களுடன்) எழுந்தருளினார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், இறைவன் தமது பஞ்சகிருத்திய நடனத்திற்குச் சிற்சபையை இடமாகக்கொண்டிருத்தல்போல், பஞ்சகிருத்தியத்தின் பொருளையும், அவற்றின் பயன்களையும் விளக்குதற்கு அடியவரிடங்களை இடமாகக்கொண்டிருப்பவரென்பதும், தெய்வங்கட்குத் தெய்வத்தன்மையைக்கொடுக்குந்தெய்வமென்பதும், யாவரையும் வெற்றிகொள்ளும் ஐம்புலன்களைவெற்றிகொள்ளும் வெற்றிப்பாடுடையவராய் நாயனார் "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறிநின்றாராய்" நீடுவாழ்வாராயினர் என்பதும் கூறப்பட்டன. (௬௨)

## இருவரும் இளமைபெற்று பேரின்பம் பெற்றமை கூறல்.

விறலுடைத் தொண்ட னாரும் வெண்ணகைச் செவ்வாய் மென்றோள்
அறலியற் கூந்த லாளாம் மனைவியும் அருளின் ஆர்ந்த
திறலுடைச் செய்கை செய்து சிவலோகம் அதனை யெய்திப்
பெறலரும் இளமை பெற்றுப் பேரின்பம் உற்றார் அன்றே.

(ப - ரை) ஐம்புலன்களை ஒருங்கேவென்ற வெற்றிப்பாடுடைய நாயனரும் வெள்ளிய நரைதிரைகளையும், (வளைபோன்ற) செவ்வந்தவாயினையும், மெல்லியதோள்களையும், கருமணல்போல்கூந்தலையும் உடைய மனைவியும், திருவருளினல் நிறைந்துள்ள செய்தற்கரிய செயலைச்செய்து, சிவலோகத்தை அடைந்து, பெறுதற்கரிய இளமைப்பருவத்தைப் பெற்றுப் பேரின்பத்தை என்றும் உடையாயினர் என்பதாம்

இத்திருப்பாசுரத்தால், நாயனரும் அவர் மனைவியாரது செயலும் செய்தற்கரிய வல்வினைசெயல்களென்றும், அச்செயல்களில் திருவருளின்செயல் வன்மை பெற்றிருந்ததென்றும், அவர்களடைந்த திருவுருவம் இருவினைவசப்பட்டு எண்பத்துநான்குலக்ஷம் பேதப்பட்டுள்ள சரீரங்களைப் போல அழியாத சரீரமாதலால் அச்சரீரத்தோடு கூடியிருத்தற்குரிய சிவலோகத்தைப் பெற்றனரென்றும், அவ்வுலகத்தில் அவர்கள் பெற்றபேறு சிவானந்தநிறைவும் சிற்றின்பத்தைப்பெருது, பல்லாண்டென்னும் பதங்களைக்கடந்த இளம்பருவத்தைக்குறிப்பாயிலின்பத்தைப்பெற்றரென்றும் கூறப்பட்டன. (௪௩)

அயலறி யாத வண்ணம அண்ணலார் ஆணை யுய்த்த
மயலில்சீர்த் தொண்ட ஞரை யான்அறி வகையால் வாழ்த்திப
புயல வளர் மாடநீடும் பூம்புகார் வணிகர் பொய்யில
செயல் இயற் பகையார செய்த திருத்தொண்டு செப்ப லுற்றேன்.

(ப - ரை.) திருநீலகண்டனை திருவாணைப் பெற்றார் அறியாவண்ணம் பாதுகாத்த, மயக்கமற்ற சிறப்பினையுடைய தொண்டியாறிப் பெரியாரை அவரது பெருமையைக் கொண்டுள்ள யானளைந்த சிற்றறிவான அறிந்தவகையால் வாழ்த்தி, (இனி) மேகங்கள் கண்வளர்கின்ற சிறப்பினையுடைய மாளிகைகள் நிறைந்துள்ள, காவிரிப்பூம்பட்டினத்தில், வணிகர்குலத்தில் அவதரித்தருளிய பொய்மையில்லாத செயலுடைய இயற்பகைநாயனர் செய்த திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன் என்பதாம்

அண்ணலார் ஆணை, அயலறியாத வண்ணம் உய்த்த எனக்கூட்டுக

உயிர்க்கு நுகர்ச்சிப்படுவனவாகிய சொற்களும் செயல்களும் உறுதிப்பாடுகளும் சிவனருட்படாதனவாக அறிவரிய அரசுமுதற் காரணமாதலின் —அண்ணலார் ஆணை அயலறியாதவண்ணம் உய்த்த—என்றார் இறைவன் பாசாசத்திற்காகச்செய்யும் திரோதசத்திச்செயலிலும் படிந்தாற்போலத் திறப்பற்றிப் பாசநீக்கமும் சிவப்பேறும் எய்தப்பெற்ற பெரியோராகலின்— மயலில்சீர்த்தொண்டர்- என்றார் இறைவனருளினும், நாயனருள்ளுந்திரோதம், அருள் என்னும் இருசத்திகளும் ஒன்றியற்றிய செயல்களில் என்னறிவு உட்பட்டிருக்குமாயின், தொண்டனரது செயல்வகையெல்லாம் சொல்லும் வன்மையுடையவனுவேன், அங்ஙனமான முறையில் உட்படாத சிற்றறிவினையுடையனாகலின் "யானறிவகையால்வாழ்த்தி" என்றார்

இத்திருப்பாசுரத்தான், ஆசிரியர் சேக்கிழார், திருநீலகண்டநாயனரது சரித்திரத்தைச் சொன்னேனல்லேன், ஏனெனில்; அது என்னறிவுட்படாதது. ஆகலின் யான் அவரது புகழை அறிந்தவகையால் வாழ்த்தினேன் என்றதும், அஃதேபோல் இயற்பகையாரது சரித்திரமும் என்னறிவால் உணர்ந்து சொல்லக்கூடாத இயல்புடைத்தாகலின் அவரியற்றிய தொண்டைச்சொல்லலுற்றேன் என்றதும் கூறப்பட்டன. (௪௪)

திருநீலகண்ட நாயனர் புராணம் முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

அநகாயநம:

# திருத்தொண்டத்தொகை.



திருநீலகண்டத்துக்குயவனார்க்கடியேன்.

## திருத்தொண்டரந்தாதி.

சொல்லச் சிவன்திரு ஆணைதன் தூமொழி தோள்நசையால்
ஒல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப் புரைநுதலாளொடிளமை பெற்றின்ப மிக்கான்
தில்லைத் திருநீலகண்டக் குயவனாம் செய்தவனே.

"பொற்கொடியனையார் தம்மைப் புறமனை அயலே போயினர்" ஆதலால், "தூமொழி தோள்நசையால்" என்றும், அத்திருத்தொண்டர் பிணக்கொழிய 'வேண்டுவ இரந்துகூறி'னாராதலான், 'சொல்ல' என்றும் நாயனார் பலகாற் கூறியும் அவ்வம்மையார் பிணக்கொழியாது எம்மைத்தீண்டுவீராகில் "திருநீலகண்டம்" எனக்கூறினாராதலான், "சிவன் திருவாணை சொல்ல" என்றும், அவ்வார்த்தை செவிப்பட்ட நாயனார், அவரைவிட்டு ஒதுங்கிவந்து "ஏதிலார்போலநோக்கி எம்மை என்றதனால், மற்றைமாதரார் தமையும் என்றன் மனத்தினுந் தீண்டேன்" என்றாராகலான், "ஒல்லைத் துறந்து" என்றும், ஆணையில்நின்ற அவர்கள் இளமையில் மிக்காராய் அளவிலா ஆண்டுகள் போற்றி ஆண்டுகள் பலவும்செல்ல வளமலி இளமைநீங்கி வடிவுறு மூப்புவரப்பெற்றாராகலான், "உருமூத்ததற்பின்" என்றும், அக்காலத்தில் இறைவன் வந்து திருவோட்டை ஒளிப்பிக்க, அது மறைந்துபோக, அதற்குப் பிரமாணஞ் செய்யச் சொல்ல இருவரும் கோல்பிடித்துச் சொல்லி குளத்தினில் மூழ்கி எழுந்திருக்கும்போது, அவனருளால் மேவிய மூப்புநீங்கி விருப்புறும் இளமைபெற்றாராகலான், "உமைகோன் அருளால் வில்லைப் புரைநுதலாளொடு இளமைபெற்று" என்றும், அங்ஙனம் இளமைபெற்றபின்னர் இறைவன் அவர்களைநோக்கி "வென்றஐம்புலனுன் மிக்கீர் நம்பால் என்றும் இவ்விளமை நீங்காது விருப்புடனிருக்க" என்றருளியபடியே சிவலோகம் அதனை எய்தி பெறலரும் இளமைபெற்றுப் பேரின்ப முற்றாராகலான், "இன்பமிக்கான்" என்றும், அவரது அருட்டிறத்தின் செயலையும், அச்செயலால் அவர்பெற்ற இன்பப்பெருக்கினையும் கூறி, "வேதியர் தில்லைமூதூர் வேட்கோவர் குலத்து வந்தார்" என்றபடி அவரது பதியும் அவரது திருநாமமும் அவரது குலமும் அறிய "தில்லைத் திருநீலகண்டக் குயவனாம் செய்தவனே" என்றுங் கூறினார்.

### புராணசாரம்.

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்தராகித் தீண்டிலெமைத் திருநீலகண்டம் என்று, சொல்லுமனை யாள்தனையே யன்றிமற்றும் துடியிடையார் இடையின்பந் துறந்து மூத்தங், செல்லையிலோடிறைவைத்து மாற்றிநாங்கள் எடுத்திலமென் றியம்புமென இழிந்துபொய்கை, மெல்லியலாள் உடன்மூழ்கி இளமை எய்தி விளங்குபுலீச் சரத்தானை மேவினாரே.

இறை ஓடு வைத்துமாற்றி நாங்கள் எடுத்திலம் என்று இயம்பும் என மெல்லியலாள் உடன் பொய்கைஇழிந்து மூழ்கி எனக்கொண்டு கூட்டுக.

(எ - து.) -தில்லைநகரின்கண் வேட்கோவர்குலத்துவந்த திருநீலகண்டநாயனார், நற்குணங்களை உள்ளடக்கி மேற்கொண்டுவரும் காமகுணத் துட்பட்டவராய், தீண்டப் படாத பொதுமகளைத்தீண்டி, தனது மனையாட்டியைத் தீண்டவரும்பொழுது, அருந் ததிக் கற்பின் மிக்காராய்த் திருவினும் உருவின்மிக்காராய்ச் சிவனது திருநீலகண்டத் தையே சிந்தித்து அரற்றும் திருவாக்கில் மிக்கராய்ச் சிறந்திருக்கும் சிறப்புடை அம் மனையாட்டியார் அவரைநோக்கி எம்மைத் தீண்டில் "திருநீலகண்டம்" என்று ஆணையிட் டுக்கூறினர், அவ் வாணைமொழிகேட்ட பெரியார் இதுகாறும் நமது மனையாட்டி திருநீலகண்ட முடையானைத் தீண்டி நம்மையுந் தீண்டும் சீலமுடையவராயிருந்து, இன்று நாம் திருநீலகண்டமுடையானைத் தீண்டும் சீலமில்லாத ஒருத்தியைத் தீண்டி வந்தமை யுணர்ந்து தமது சீலங்கெடாவண்ணம் இவ்வாணைமொழியால் நம்மைத் தடுத்துச் சீலந்தான் பெரிதும் உடையாளாகிய நீலகண்டனைக் கூடல் பேரின்பமென வும், நம்மைக்கூடல் சிற்றின்பமெனவும் கருதி அத்திருநீலகண்டனைக் கூடினாள். இனி நாம் சிற்றின்பத்தையும், அச்சிற்றின்பத்துக் கிடனாயுள்ளமாதரையும் மனத்தி னாலும் தீண்டாதொழிவேமென்று செய்துகொள்வதே நாம் செய்யத்தகும் ஆணை யென்று தெளிந்து "எம்மை என்றதனால் மற்றையாதரார் தமையும் என்றன் மனத்தினுந் தீண்டேன்" என்று சபதமொழிகூறிச் சிற்றின்பத்தைத் துறந்து, இள மைப்பருவத்தையும் கடந்து மூப்பினையடைந்திருந்தனர். அத்தருணத்தில், சிவனார் சிவயோகியராய் அவர்பால் வந்து, ஓர் திருவோட்டினைக் கொடுத்து, "நம்பீ! இத் திருவோட்டினை உன்னை நம்பி கொடுக்கின்றேன், இதனை நாம் எப்போதுவந்து கேட் கின்றோமோ, அப்போது நீ கொடுக்கவேண்டும்" என்று கூறிச் சென்று, பின்னர் அத மறைந்துபோம்படிச்செய்து, நெடுநாள் கழித்துவந்து நாயனாரைநோக்கி "நான் கொடுத்த வோட்டைக் கொடு" என்று கேட்க, நாயனார் ஓட்டைக்காணமல் 'ஓடில்லை'யென்று சொ ல்ல, 'அது எப்படி யில்லாமற்போகும்? நீ எடுத்துக்கொண்டனை' என்று சிவயோகியார் சொல்ல, நாயனார் "எடுக்கவில்லை" என்றுசொல்ல, யோகியார் "நீயெடுக்கவில்லையென் பது பொய்" என்று கூற, நாயனார் சிவயோகியாரைப் பார்த்து "நான் சொல்லியது பொய்யல்ல, மெய்யே" என்றுசொல்ல, யோகியார் "அதுவுண்மையானால் நாங்கள் எடுத் திலம் என்று மனையாளைப் பிடித்துக்கொண்டு குளத்தில் மூழ்கிச் சொல்லுவா"யென்று சொல்ல, அவரானை கடவாமலும் தாம் கொண்டிருந்த ஆணை விடாமலும் ஓர் மூங்கிலின் இருதலையையும் இருவரும்பிடித்துக்கொண்டு தமது சபதத்தையாவரும் அறியச்சொல்லிக் குளத்தினில் மூழ்கி எழுந்திருக்கும்போது முன்கழிந்துபோன இளமைப்பருவத்தை யுடையவராய் வியாக்கிரபுரீசுவரராகிய சிவபெருமானது சிவலோகத்தை அடைந்து என்றும் இறவாத இன்பத்துடன் வாழ்ந்திருந்தனரென்பதாம்.

இப்புராணசாரத்தால் எண்ணரும் தவம் தானங்கள் பட்டினிகிடத்தல் யாகஞ் செய்தல் முதலிய பாசதரும முடையோராலும், பசுக்களாகிய ஆன்மாக்களைப் பதியா (தெய்வங்களா)க எண்ணி வழிபடுவதாகிய பசுதரும முடையோராலும், காமத்தை ஒரு சிறிதும் வெல்லமுடியாதென்பதும், சிவதருமத்தால் சிவனருள் பெற்று அன்புடைய ராய் அடியார்கட்கு உட்பட்டொழுக வல்லராயின், அவர் காமத்தால் வருந்தாமல் மிக எளிதாய் வெல்லவல்லவரென்பதும் கூறப்பட்டன.

திருநீலகண்டநாயனார் புராணசாரம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

அபீஷ்டப்ரதாயநம:

# யறபகை நாயனார் புராணம்.

## நகரச்சிறப்பு.

சென்னி வெண்குடை நீடநபாயன் திருக்குலம்புகழ் பெருக்கிய சிறப்பின்
மன்னு தொல்புகழ் மருதநீர் நாட்டு வயல்வளந்தர இயல்பினி னளித்துப்
பொன்னி நன்னதி மிக்கநீர் பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக் குவதோர்
நன்னெடும்பெருந் தீர்த்தமுன் னுடைய நலஞ் சிறந்தது வளம்புகார் நகரம்.

(எ - து) சோழர்குலத்திற் றோன்றினவரும், வெண்கொற்றக் குடையையுடையவருமாகிய அநபாயசோழமகாராஜாவினது அதிசயமிக்க அரியகுலத்தில், வந்தவரெல்லாம் புகழை அதிகரிக்கச்செய்துவந்த சிறப்பினால், அநாதியாய் நிலைபெற்று புகழினையுடைய மருதநிலஞ்சூழ்ந்த சோழநாட்டின்கண்ணுள்ள வயல்கள், தம்மாட்டு விளையப்படும் பொருள்கள் செழுமையுடன்தோன்ற, காவிரிநதியானது மாறுபாடின்றிப் பெருக்கெடுத்து, அவ்வக்காலங்களிற்பாய்ந்து, பின்னர் கடலின்கட்சென்று, அக்கடலினையும், புனிதத்தஞ்செய்து, காவிரிச்சங்கமமென்னும் ஒப்பற்றதாகிய ஓர் நல்லதீர்த்தரூபமாய், முன்னாகவிளங்கப்பெற்றது. அந்நலத்தால் வளபாத்தின்மிக்க பூம்புகார்நகரம், எல்லா நகரத்தினுஞ் சிறந்ததாயிற்று என்பதாம்

நீர்வளமொன்றினால் நிலவளம் குடிவளம் முதலிய எல்லாவளப்பங்களும், குடிபுகுந்து நிரம்பப்பெற்ற நகரமென்பார் "வளம்புகார் நகரம்" எனவும், எல்லாவளப்பங்களையும் புகச்செய்த அந்நீர் காவிரிநதியென்பார் "பொன்னிநன்னதி" எனவும், அந்நதியானது தன்னால் விளையத்தகுவனவாகிய பொருள்களையெல்லாம் தனக்குரியநிலத்தின்கண் அளவில்லனவாக விளைவித்து அப்பொருள்களாலேயே அந்நகர் வளம்படச்செய்த சிறப்புடைத்தென்பார் 'மருதநீர்நாட்டு வயல்வளந்தர மிக்கநீர்பாய்ந்து இயல்பினின் அளித்து' எனவும், நிலவளந்தரும் தனக்கு நீர்வளந்தந்த கடலின்உபகாரத்தை நாடி அதற்கு ஓர் சிறப்பினைச்செய்வான் கருதி அதன் உவர்ப்பைப்போக்கித் தன்னிடத்தில் எக்காலத்தும் யாவரும் நீராடுவதுபோல் அக்கடலிடத்தும் ஆடும்படி அதனிடத்துப்பாய்ந்து கலந்து ஓர்தீர்த்தமாய்விளங்கும் பெருஞ்சிறப்பினை யுடைத்தென்பார் "புணரிதன்னையும் புனிதமாக்குவதோர் நன்னெடும் பெருந்தீர்த்த முன்னுடைய" எனவும், இந்த நலமெல்லாம் உடையது காவிரியேயாயினும், அந்நதியைத்தன்மாட்டு உடைத்தாய்ச் சிறந்திருக்கும் பெருமையும் உடைத்து அந்நகரம் என்பார் "நலஞ்சிறந்தது வளம்புகார் நகரம்" எனவும், நலங்களெல்லாம் சிறந்துவளர்ந்திருப்பதற்குக்காரணம் சோழகுலத்திற்பிறந்த ஒவ்வொருஅரசர்களும் தாங்கள் செய்யத்தகுவனவாகிய புண்ணியந்தரும் அறங்களையெல்லாம் விடாதுசெய்துவந்த சிறப்பாலென்பார், 'திருக்குலம் புகழ் பெருக்கிய சிறப்பின்' எனவும், வம்சபரம்பரையும், அவ்வம்சத்தவரால் செய்யப்பட்ட நிலைபெற்றபுண்ணியங்களும் குன்றாதுவருதற்கான ஆற்றலுடைய அரியசிவபுண்ணியத்தைச்செய்த பேரரசர் அநபாயரென்னும் சிறப்புப்பெயரினரென்பார் "சென்னிவெண்குடை நீடநபாயன்" எனவுங் கூறினார்.

வர்என்பார் 'குலக்குடி முதல்வணிகர்' என்றும், வைசியரது குலதருமம் எவ்வெக்காலத்து எவ்வெவ்வழியில் எவ்வெப்பொருளில் பொருள்வருவாயுண்டாகுமோ, அவ்வக்காலத்து அவ்வவ்வழியால் அவ்வப்பொருளால் பொருள்வரும் வகையைச்செய்து அதனால், வளம்பட என்றும் செல்வமுடையவராய் வாழ்ந்திருத்தல், அக்குலத்தவரது சிறப்பென்பார் அளவில்செல்வத்து வளமையின் அமைந்தார்" என்றும், இவர் வழிபடுந்தெய்வம் சந்திரசேகரனாகிய பெருந்தெய்வமே என்பார் "செக்கர்வெண்பிறைச் சடையவரடியர்" என்றும், அறநெறிமுறைப்படி இல்லையென்று சொல்லத்தகும் பொருளையும், அடியார்பால் இல்லையென்னதேகொடுக்கும் பணித்திறத்தில் மேம்பட்டவராயினாரென்பார் "அடிமைத்திறத்தினில்மிக்கவர்" என்றும், வேதச்சிலம்பு ஒலிக்கும் அடிக்கு அடிமையுடையார் எக்குலத்தவராயினும் அடிமைத்திறத்தில் மிகுந்திருப்பாராயின் அவர் மேலோர் அடியாராகக்கொள்ளுதல் அவரது பேரன்பின் திறமென்பார் 'மறைச்சிலம்படிபரா மிக்கசீரடியார்கள் யாரேனும்' என்றும், தம்மாட்டுள்ள பொருள்கள் எவையாயினும், அவையெல்லாம் அடியவர்களால் விரும்பியாளப்படும் பொருள்களேயாம் என்னும் திண்ணியஞானத்தில் நிலைபெற்று, அந்நிலைப்படியே விரைந்துகொடுக்கும் இயல்பினர் என்பார் "அடியார்கள் வேண்டுமவையும் இல்லையென்னதே முனைகொடுக்கும் இயல்பினின்றவர்" என்றும், இங்ஙனம் இல்லையென்னத நிலையில் உலகியற்கையாதன்ற இந்நிலையே, சிவசம்பந்தம் வேண்டும் அடியவரெல்லாம் சிவனையாளும் நிலையென்றுணர்ந்து அந்நிலையிலேயே நின்றுவாழ என்பார் "இக்கடற்படிநிகழ" என்றுங்கூறினர்.

அன்றியும் சேதனசேதனங்களெல்லாம் இறைவனுடைமையென்னும் உண்மைப்புணர்ப்பெற்றவரே தம்மை அவ்விறைவனுக்கு அடிமையென்றுணர்ந்து அவனுக்காளாய் எல்லாப்பொருளையும் அவனுடைமையாக எண்ணியாள்வரேயன்றித் தம்முடைமையாகப் பற்றிவாழாரென்பதும், அந்நிலையில் வாழ்கின்றவர் இறைவனுடைய உடைமைப்பொருள் அவ்விறைவனடியார்க்கே உரித்தாவனவன்றித் தமக்குரித்தாவன அன்றென்பதும் உணர்ந்து, உணர்ந்த அவ்வழியே செய்யும்செயலும் உடையோரில் இவர் மிக்க திறமுடையவர் என்பது தோன்ற, "அடிமைத்திறத்தினில் மிக்கவர்" என்றார். தம்மால் படைக்கப்பட்ட உயிர்கள் தமக்கு அடிமையாயிருத்தலன்றி வேறன்மையான் அவ்வுயிர்களை வேற்றுமை கருதாது இறைவன் அடிமைகொண்டிருக்க அவர்களில் இவர் உயர்ந்தோர், இவர் தாழ்ந்தோர் என்று, தம்மனத்தாற்கருதிச் சிலரைப்பணிந்து வேண்டுவன தருதலும், சிலரைப்பணியாது வேண்டுவன கொடாதும் போதல் சிவதன்மமுறையாகா வென்பதுதோன்ற "யாரேனும் வேண்டும் பாவையுமெகாடுக்கும் இயல்பில் நின்றவர்" என்றார். இவ்வுண்மை உயிர்களுக்கு உணர்த்தி உடலிங்கமே வந்தவரென்பது தோன்ற "இக்கடற்படி நிகழ" என்றார்.

இத்திருப்பாசுரத்தான், இயற்பகையாராகிய நம்பெரியார் வணிகர்குலத்தில் வந்தவரென்றும், அக்குலத்திற்கேற்ப பொருட்செல்வத்திலும் சிறந்திருந்தனரென்றும், குலச்சிறப்பும் செல்வச்சிறப்பும் தாமேயுடைமைப்பெற்றார் அவ்வளவில் மகிழ்ந்தொழிவதுபோல் ஒழியாது, அடைதற்கரிய செல்வன்கழலேத்தும் செல்வத்தைப் பெறுமாறு வெண்பிறைச்சடையவர் அடிமைத்திறத்தில் மிக்கிருந்தனரென்றும், செல்வன் கழலேத்துஞ் செல்வத்துக்கே இப்பொருட்செல்வம் வாய்க்கப்பெற்றதென்று அப்பொருளை அடியார் வேண்டியாங்கு கொடுத்து மகிழும்நிலையில் நிலைபெற்ற வள்ளலென்றுங் கூறப்பட்டன.

இல்லறத்தில் அமையும் மகிழ்ச்சி.

ஆறு சூடிய ஐயர்மெய் யடிமை அளவி லாததோர் உளநிறை அருளால்
நீறு சேர்திரு மேனியர் மனத்து நினைத்த யாவையும் வினைப்பட முடித்து
மாறி லாதநன் னெறியினில் விளங்கு மனைப்ப றம்புரி மகிழ்ச்சியின் வந்த
பேறெ லாம்அவ ரேவின செய்யும் பெருமையேயெனப் பேணிவாழ் நாளில்.

(எ - து.) கங்காதரனாகிய இறைவனுக்கு மெய்ம்மையாகிய அடிமைசெய்வதற்கு இயற்பகையாரது உள்ளத்தின்கண் அரிய திருவருளானது நிறைந்திருந்தபடியினால், திருநீறணிந்த திருமேனியராகிய அடியவர்கள் மனத்தால் நினைக்கப்பட்டவை யெல்லாம் அவர்நினைத்தவண்ணமே செய்துமுடித்து; எக்காலத்தும் மாறுபடுதலையறியாத நல்லவொழுக்கநெறியில் பிரகாசிக்கும் இல்லறத்தை நடத்தும்வகையால் உண்டாகும் மகிழ்ச்சியினால்வந்த பிரயோசனங்களவையோ, அவையெல்லாம் அவ்வடியவர்களால் ஏவப்படும் ஏவல்களைச் செய்வதனாலுண்டாகும் பெருமையேயாகும் என்று அதனைவிரும்பி வாழ்ந்துவருகின்றநாளில் என்பதாம்.

அளவுட்படாத வெள்ளத்தை இறைவன்தமது முடியில் அடக்கியிருப்பதுபோலும், நாயனாருள்ளத்தில் அளவுட்படாத அருள் அடங்கியிருக்கும் அருமைதோன்ற, "ஆறு சூடிய ஐயர்மெய்யடிமைஅளவிலாதன உளநிறை அருளால்" என்றார்.

இதனால் அடியார்வேண்டுமெ பொருள், மனத்தாலியன்றது, வாக்காலியன்றது, காயத்தாலியன்றது என்று இனமையை வெளிப்படுத்தக்கூறும் அச்சொல், அருள்பெறாதவர்க்கு முன்வந்து வஞ்சிக்கச்செய்யுமேயன்றி, அருள் உள்ளத்தில் நிரம்பப்பெற்றவர்க்கு எல்லாப்பொருளும் உள்ளனவென்ற மனமுதலிய முக்கரணங்களும் நினைத்தற்கும், நினைந்தவண்ணமே சொல்லுவதற்கும், சொல்லியவண்ணமே செய்தற்கும் முற்பட்டு மாறுபடாது முன்வந்து நிற்குமென்று அறியக்கிடக்கின்றது.

இத்திருப்பாசுரத்தான், அளவில்லாத கங்கையை இறைவன் திருச்சடையில் அடக்கியிருப்பதுபோலும், அடியவர் தமதுள்ளத்தில் அளவில்லாத அருளை நிறைத்திருப்பவரென்றும், அருளைக் குறைவறப்பெற்றிருப்பதனால், "நீறு சேர்திருமேனியர் மனத்து நினைத்தயாவையும் முற்றுப்பெறமுடிப்பதில் மிக எளிமையாயினரென்றும், அங்ஙனம் முற்றுப்பெறச் செய்வதில் என்றும் மாறுபடாதிருத்தற்கே இல்லறநெறியில் மகிழ்ந்திருப்பவரென்றும், அம்மகிழ்ச்சியினால் உண்டாகும் சுகம் அடியார் ஏவினவற்றைச் செய்தலேயாம் என்றும், அங்ஙனம்செய்தலே அழிவிலாப்பெருமையாகக்கொண்டிருப்பவரென்றுங் கூறப்பட்டன. (௯)

இறைவனார் தூர்த்தவேதியராய் வருதல்.

ஆயு நுண்பொரு ளாகியும் வெளியே அம்ப லத்துள்நின் றாடுவார் உம்பர்
நாய கற்கும்அஃ தறியவோ பிரியா நங்கை தானறி யாமையோ அறியோம்
தூய நீறுபொன் மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்றவே தியராய்
மாய வண்ணமே கொண்டுதந் தொண்டர் மறாத வண்ணமுங் காட்டுவான் வந்தார்

(எ - து) (நூலுணர்வினால் உண்டாகும் ஞானத்தினால் ஆராயத்தொடங்குவார்க்கு) ஆராய்தற்கே இடஞ்செய்யும் நுண்ணியபொருளையாகியும், (ஆராய்வதைவிட்டு மெய்த்தவத்தினால் உண்டாகும் அருளால், அறியவல்லவர்க்கு) சிதாகாசமாகியவெளியில் நின்று நடனஞ்செய்வோரும் ஆகிய இறைவனார், தமது தொண்டராகிய இயற்பகையார், (மாயாகாரியமாகிய அவன் அவள் அதுவாய்க் காணப்படும் நாமரூப பதார்த்தபேதங்கள் கோசரப்படினும், அவைகளால் அவ்விறக்கப்பெற்ற அருள்நிலையில்) மாறுபடாத ஞானத்தை (அறிவை)யும் கிரியை(செயலை)யும் உடையவர், என்னும் அவரது அருள்நோக்கத்தின் வண்ணமும், (அவ்வண்ணத்தை வெளியாக்கப்) பொன்மயமாகிய திருமேனியில், (அடியார்க்குரிய) சுத்தமாகிய திருநீறும், அதனோடுதூர்த்தராகிய காமாந்தகர்க்குரிய வேடமும், (விளங்கக்கொண்ட திருவுருவத்தின் வண்ணமும்) அருள் நோக்குடையார்க்கெல்லாம் தோன்றுமாறு, மாயாவுருவத்தையே கொண்டு வேதியராய்ப்புறப்பட்டு வந்தனர். (அக்கோலமானது தம்மைவிட்டுப்பிரியாத) பராசத்தியாகிய அருட்சத்திக்கும், அத்திருவுருவத்தின் செயல் இத்திறமென்று தெரியவோ, அவ்வருட்சத்தியைப்பிரியாத திரோதானசத்திக்கு அத்திருவுருவம் தெரியாமலிருக்கவோ, நாம் அறியோம் என்பதாம்.

ஆயும் நுண்பொருளாகியும், வெளியே அம்பலத்து நின்று ஆடுவாரும் (ஆகிய இறைவர்) தம்தொண்டர்மரூத (தன்மையின்) வண்ணமும், தூயநீறுபொன்மேனியில் விளங்கத்தூர்த்த வேடமும்தோன்ற, மாயைவண்ணமேகொண்டு, வேதியராய் காட்டுவான் வந்தார். அஃது உம்பர்நாயகிக்கும் அறியவோ, பிரியாநங்கைதான் அறியாமையோ, அறியோம் எனக்கொண்டு கூட்டுக.

"சொற்பதங் கடந்ததொல்லோன்" "சித்தமும் செல்லாச் சேட்சியன்" "அரியதில் அரிய அரியோன்" ஆகலின், "நாலுணர்வுணரா நுண்ணியோன்" என்ற திருவாசகத்தின் உண்மை தோன்ற, "ஆயும் நுண்பொருளாகியும் என்றார். நல்ல சிவதன்மமாகிய சரியை கிரியைகளின் வழிமுயன்ற தவமுதிர்ச்சியானும், நல்ல சிவயோகத்தின் வழிநின்ற நிலையானும் தோன்றுவதாகிய அருள்ஞானத்தால் தன்னைக்காணும் விருப்பமுடைய அன்பாளர்கள் காண பக்திவலையிற் படுவோனாகிய இறைவன் மிக எளிமையாய் வருவான் என்னும் அவ்வுண்மைதோன்ற வெளியே அமபலத்து நின்றாடுவார் என்றார்.

இறைவன், தாம் பரிக்கிரக சத்தியாகிய மாயாசத்தி வடிவங்கொண்டு மாயாசத்தியின் செயலைச்செய்யாது அருட்சத்தி வடிவங்கொண்டு செய்யுஞ்செயலையே செய்தலை உம்பர்நாயகியாகிய ஞானசத்தி யறியாளாகையால் அதனை அந்த ஞானசத்தி யறியவோ, அருட்சத்திவடிவங்கொண்டு அவ்வடிவத்தின் மாயாசத்தி வடிவத்தை மாத்திரங்காட்டி அருட்சத்தியின்செயலையே நடத்தலை பிரியாதா ஈ சத்தியாகிய கிரியாசத்திஅறிவாளாயின் அச்செயலைத் தடுப்பாளாகலின் அக்கிரியாசத்தி அறியாதிருக்கவோ என்பார் "உம்பர் நாயகிக்கும் அஃதறியவோ, பிரியாநங்கைதான் அறியாமையோ" என்றார்.

ஞானசத்தி அறிவித்தால அறியும் சத்தியாகவும், கிரியாசததி செய்வித்தால் செய்யுஞ் சத்தியாகவும் இருபபின், அவனது இச்சாசத்தியின்திறத்தை நாமறியுஞ் சத்தனல்லேன் என்பார் அறியோம் என்றார்.

அருட்சத்தியின் வடிவத்தை விளக்கவல்ல தூயநீற்றையும், மாயாசத்தியின் வடிவத்தைத் தோன்றச்செய்யவல்ல தூர்த்த வேடத்தையும் ஒருங்கே கொண்டனன் என்பார் "தூயநீறு பொன்மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்ற" என்றார். இரண்டுவடிவத்தையும் ஒருங்கே கொள்ளினும் அவ்வடிவத்தில் பிரகாசிக்கும் செயல் அருட்செயலேயாகலான் அருள்வடிவத்தைககாட்டும நீற்றை 'விளங்க" என்றும், மாயை - செயலின்றி உருவமாத்திரங் காணுமபடி யிருத்தலால் "தோன்ற" என்றுங் கூறினர். அருள்வடிவத்தைக் காட்டிய திருநீற்றுங் கண்டிகையும் அணிவதேயன்றி அவற்றிற்கு வேறாகிய சமயச்சின்னங்களேயும் ஒன்றுசேர்த்தணிபவர் அவைதிகமறையோர் என்பார் "வேதியராய்" என்றார். மாயாசத்தி வடிவத்தைக்கொண்டு அருட்சத்தியின் செயல் மாறுவண்ணம் தாம்காட்டியதுபோல், நாயனாரும் மறக்கும் மாயையின் செயலையொழித்து மறக்காத அன்பின் செயலையே காட்டும் தொண்டின்திறத்தைத் தொண்டர்களுக்காட்ட இறைவன் அக்கோலங்கொண்டு வந்தனனென்பார் "மாயவண்ணமேகொண்டு தம்தொண்டர் மருதவண்ணமும் காட்டுவான் வந்தார்" என்றார்.

அல்லதூஉம, பிரகிருதிமாயா சம்பந்தப்பட்ட பிராகிருதருககு பிரகிருதி மாயா வுருவ முடையனாய் அந்தப்பிரகிருதி மாயாகாரியமாகிய பிரபஞ்ச போகானுபவங்களையும், பிரகிருதிமாயா மயக்குநீங்கி முத்திநெறியை அவாவும் வைநயிகருக்கு திரோதானசத்தி வுருவுடையனாய் வந்து சிவஞான போகானுபவங்களையும், மெய்த்தவமுதிர்ச்சியினால் அன்பின்வழிவந்த சாம்சித்தருக்கு அருட்சத்தி வுருவங்கொண்டுவந்து அன்பான்விளையும் சிவானந்தானுபவங்களையும் இறைவன் அனுக்கிரகஞ்செய்வது முறைமை. அங்ஙனமிருக்க, சாம்சித்த நிலையினை யுடையவராகிய இயற்பகையார் முன்னே மாயா உருவமே கொண்டுவந்தது என்னமுறையோ வெனின், அருட்சத்தியின் வசப்பட்டார் பிரகிருதி, திரோதம் என்னும் இருசத்தியின் செயல்களால் மயங்காது அருட்சத்தியின்

செயல்வழியே நிற்பரென்னும் அரியசெயலை யாவரும் உணர்ந்துய்ய அருட்செயலின் வழியேநிற்கும் இயற்பகையாரால் அச்செயலைவிளக்குவிக்க "மாயைவண்ணமேகொண்டு தம்தொண்டர் மறுதவண்ணமும் காட்டுவான் வந்தார்" என்றார்.

இத்திருப்பாசுரத்தால், இறைவன் ஆராய்வோருக்கு நுண்ணிய பொருளாய் அரியனாயிருப்பனென்பதையும், ஆராய்தலைவிட்டுப் பத்தியிற்றலைப்படுவோருக்கு எளிமையாய் வெளிப்படுவனென்பதையும், அப்பத்தியுடையார்க்கு வெளிப்பட்டு அனுக்கிரகஞ் செய்யுமுறையில் ஞானசத்தி கிரியாசத்திகளை ஆளுந் முறைமை இத்தன்மைத்தென்பதையும், அம்முறைமைக்கேற்பக் கொள்ளுந் திருமேனியின்வண்ணம் இவ்வண்ணமென்பதையும், அவ்வண்ணத்தைக் கண்ட அடியார்கள் அவ்வண்ணத்துக்கேற்பச் செய்யுந் தொண்டின் திறத்தையும் கூறப்பட்டன. (௬)

## வேதியனை வழிபடுதல்.

வந்துதண் புகார் வணிகர்தம் மறுகின் மருங்கி யற்பகை யார்மனை புகுத,
எந்தை யெம்பிரான் அடியவர் அணைந்தார் என்று நின்றதோர் இன்பவா தரவால்,
சிந்தை அன்பொடு சென்றெதிர் வணங்கிச் சிறப்பின் மிக்கஅர்ச் சனைகள்முன்
செய்து, முந்தை யெம்பெருந் தவத்தினா லென்கோ முனிவர் இங்கெழுந்
தருளிய தென்றார்.

(இ - ள்.) நீர்வளத்தால் குளிர்ச்சியினையுடைய பூம்புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினத்தில், வைசியர்களிருக்கும வீதியின்வழியேவந்து, இயற்பகையார் வீட்டிற்குள்ளேபுக, இயற்பகையார் அவரைக்கண்டு, எமதுதந்தையாகிய இறைவனுருடைய அடியவர் எழுந்தருளினரென்று, மனசித்தத்துள் நின்ற இன்பமயமாகிய ஒப்பற்ற ஆசையினால் அன்போடு எதிரே சென்று வணங்கி, சிறப்பினால்மிக்க அர்க்கியபாத்திய ஆசமனமுதலிய பூசைகளை முன்னேசெய்து, அதன்பின்னர் முனிவராகிய தேவரீர இங்கெழுந்தருளியது முற்பிறப்பில் யாங்கள்செய்த பெருந்தவத்தினாலென்று சொல்லுவேனோ! என்றார் என்பதாம்.

தண்புகார் வணிகர்தம் மறுகில் மருங்குவந்து என்று கூட்டுக.

நாயனார் உள்ளத்தில் நிலைபெற்றுநின்ற இன்பம் அடியவர்களைக்காணும் இன்பமேயன்றி வேறு பேரின்பம் இல்லை என்பார் "நின்றதோரின்ப" என்றார்.

இத்திருப்பாசுரத்தால், நாயனாரது உள்ளத்தில் அடியவரன்பே நிறைந்துள்ளதென்றும், அவ்வன்பால் அதிகரித்தபத்தியுடையவரென்றும், அப்பக்தி மிகுதியினால் ஒருகணமேனும் அடியவரைக்காணுதிருப்பாராயின் துன்பமுடையராய் வருந்துவரென்றும், காணப்பெற்றால் யாம் காணப்பெற்றோமே என்று காணுந்தோறும் எதிர்சென்று ஆசைதீர அவரடிகளிற் பொருந்தவணங்கி, இன்பமயமாகிய ஆசையுடையவராய்க் காயத்தாற் செய்யத்தகும்பணியைச் செய்யக்கருதி அவர்களைச் சிவனெனவே பூஜைசெய்வரென்றும், இங்ஙனமான மகேசுரபூஜை செய்யப்பெற்றது யாங்கள் முற்பிறவிகளிற் செய்துவந்த பூஜையின் பயனென்றும் எண்ணும் சைவசித்தாந்த நெறியினையுடைய சிவஞானச்செல்வரென்றுங் கூறப்பட்டன. (௭)

## நாயனாரைச் சம்மதி வினாதல்.

என்று கூறிய இயற்பகை யார்முன் எய்தி நின்றஅக் கைதவ மறையோர்
கொன்றை வார்சடை யாரடி யார்கள் குறித்து வேண்டின குணமெனக்கொண்டே
ஒன்று நீரெதிர் மறுதலுவ் தளிக்கும் உண்மை கேட்டுநும் பாலொன்று வேண்டி
இன்று நான்இங்கு வந்தனன் அதனுக் கிசைய லாமெனில் இயம்பலாம் என்றார்.

(இ - ள்.) (முனிவர் இங்கெழுந்தருளியது, முந்தைஎம்பெருந்தவத்தினாலென்கோ என்று)சொல்லிய இயற்பகைநாயனார்முன் எழுந்தருளிவந்துநின்ற படிற்றுருவ

முடைய மறையவர், (நாயனாரைநோக்கி) கொன்றைமாலையணிந்த நீண்டசடையினை யுடைய சிவபெருமான் அடியார்கள், தங்கள் தங்கள் உள்ளத்தில் குறிப்பிட்டு வேண்டும் பொருள்கள் (குணமற்றனவாயினும் அவைகளைக் குணமுள்ளனவென்றே உம்முடைய உள்ளத்திற்கொண்டு, ஒன்றேனும் அவரெதிரில் மறுக்காமல்நீர்மகிழ்ந்து கொடுக்கின்ற உண்மைநெறியைக் கேள்விப்பட்டு, உம்மிடத்தில் நானொன்றைவிரும்பி உமதுவீட்டிற்கு இன்றுவந்தேன், நான் விரும்பி வந்த அந்தப்பொருளைநீர்கொடுத்தற்கு உடன்படுவதாக இருந்தால் அதனைநான் சொல்வதற்குக்கூடும் என்றருளிச்செய்தனர் என்பதாம்.

பொய் களவு வஞ்சனை சூது என்னும் படிற்றொழுக்கமற்ற தூயநாயனார்பால் தூய வெண்ணீற்று மேனியருடைய ஒருதலையன்றி படிற்றொழுக்கமும் தோன்றவந்தனராகலின் "கைதவமறையோர்" என்றார். வேதநடைபோல அறநூல்களுட் கூறப்படுவதல்லாமல் வேண்டுவார்வேண்டும் பொருள்களை தாமாகவேனும், அன்றி அவராலேனும், அறிந்து, மறுக்காது செய்யுந்தன்மைத்தாகிய ஒப்புரவறிதலை அறிந்தவர் நீர் என்பார் "அடியார்கள் குறித்து வேண்டிய குணமெனக்கொண்டே, ஒன்று நீர் மறாது எதிர் உவந்து அளிக்கும் உண்மைகேட்டு நும்பால்வந்தனன்' என்றார்.

எனவே, இன்ன இன்னபொருள் கொடுக்கத்தக்கது என்று வேதமுறைப்படி அறநூல்களுள் கூறப்பட்ட பொருள்களைக்கொடுப்பதேயல்லாமல், உயர்ந்த நடையினையுடையவராகிய தகுதியாளர் (அடியார்கள்) விரும்பும் பொருள்களைத் தாமேயறிந்தும் தாமேஅறிவதற்கமையாதனவற்றை அவர் அறிவிக்க அறிந்தும், தாம் முயற்சிசெய்து சம்பாதித்த பொருள் முழுதும் உதவிபுரிவோர் எவரோ, அவரே ஒப்புரவு அறிந்தவராகலான், அவ்வொப்புரவின் இலக்கணங்களையெல்லாம் நீர் உண்மையாகவுடையவராய் அடியார்கள் குறித்து வேண்டியனவற்றை மறுக்காமல் அகமகிழ்ந்துகொடுக்கும் உண்மையைக்கேட்டு நானொன்றுவேண்டி உமதிடம் வந்தேனென்பதாம்.

ஒப்புரவின் இலக்கணங்களாவன:— "ஊரின்கண் வாழ்வார் தண்ணீருண்ணும் குளம் நீர்நிறைந்தாற்போலும்" "யாவர்க்கும் பயன்படும் மரம் ஊர் நடுவே பழுத்தாற்போலும்" "எல்லாவுறுப்பும் நோய்களுக்கு மருந்தாகித்தப்பாது உதவியாகும் மரத்தைப் போலும்" என்று கூறப்படுவனவாம். இவற்றைத் திருக்குறள் ஒப்புரவறிதலென்னும் அதிகாரத்திற் காண்க.

இதனால், இங்ஙனமான ஒப்புரவு அறிந்தவர் அறநூல்களுள் கொடுக்கும் பொருள்களாகக் கூறப்படாதனவற்றை, உயர்ந்தோர் கொடுக்கும் பொருள்களாகக் கேட்பாராயின், அதனைக்குற்றமாகக்கொள்ளாது குணமாகவேகொண்டு, ஒப்புரவறிதலென்னும் நீதியுள் வைத்துக் கொடுக்கும்பொருள்களாகவே மகிழ்ந்து, மறுக்காமலும், ஒளிக்காமலும் எதிர்ந்துகொடுப்பராகலான் அந்நீதியறிந்து கொடுப்போர் நீரென்றும், அறநூல்களுள் கூறப்பட்டதைக்கொடுத்தல் அறமேயன்றிக் கூறப்படாததைக்கொடுத்தல் அறமாகாதென்றெண்ணி, ஒப்புரவறிதலென்னும் அறத்தைக்கைவிட்டு, அதனோடு உயர்ந்தோர் வேண்டுகோளையே ஒழுக்கமாகக்கருதுவதையும் ஒழித்து, அவர்களையும் கைக்கொள்ளாது விடுவர். நீர் அவர்கள்போலன்றி, தூயநீறுபொன்மேனியில் விளங்கும் உயர்ந்தோர்கள், அற நூலுட்கூறப்பட்ட குணமுடையபொருளையாயினும், கூறப்படாத குற்றமுடையபொருளையாயினும், விரும்பிக்கேட்பாராயின் அதனையே கொடுக்கும் பொருளாகத் துணிந்துகொடுத்து அவர்களைக்கைக்கொள்ளும் அரியசெயலுடையீர் நீரென்றும் இங்ஙனம் யான் கூறிவந்த ஒப்புரவறிதலையுடைய நீர் அறநூல்களுட் கூறப்படாததைக் குணமாகக்கொண்டு இதுகாறும் செய்ததாகத் தெரியவில்லை. அங்ஙனம் செய்யாதொழிந்ததின் நீர்கொண்ட ஒப்புரவிற்குக் குறையுளதாமாகலின், அக்குறையொழித்தற்கு இதுவே சமயமாகவும், குற்றமுடையதைக் கேட்க யானே உரியனாகவும் உமதுள்ளத்தில் நிச்சயித்து அதனைச்செய்ய இப்பொழுது இசைவீராஞல் சொல்வீராக, சொல்வீரேல் நானும் துணிந்துசொல்லலா மென்றும் உணர்த்தியவாறும்.

*இத்திருப்பாசுரத்தான், நாயனார் ஒப்பு உவமையிலி தலை அறிந்தவரென்றும், அறிந்தபடியே அவ்வரியசெயலைச் செய்தற்குரியாரென்றும், இவ்வுண்மையை உலகினரறியுமாறு இறைவன் திருவுளத்தெண்ணி தூயநீறுபொன்மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்ற வேதியராய் வந்தாரென்றும், வந்து தமது வேண்டுகோளுக்கு அவரது உடன்பாட்டைக் கேட்டனரென்றும் கூறப்பட்டன* (௬)

## மறையவர் மாதினைக்கேட்டல்.

*என்ன அவ்வுரை கேட்டியற் பகையார் யாதுமொன்றும் என் பக்கலுண் டாகில், அன்ன தெம்பிரான் அடியவ ருடைமை யைய மில்லைநீர் அருள்செயும் என்ன, மன்னு காதலுன் மனைவியை வேண்டி வந்த திங்கென அங்கணர் எதிரே, சொன்ன போதிலு முன்னையின் மகிழ்ந்து தூய தொண்டனார் தொழுதுரை செய்தார்.*

(எ-து.) (முன்னு வேண்டிப் படைத்த தன்மை, அச்சு வருக இசையலாம் எனில் இயம்பலாம்) என்று சொல்லிய அந்த வார்த்தையை இயற்பகைநாயனார் கேட்டு, (ஐயரே! நீர் என்னிடத்தில் கேட்க விரும்பிய பொருள்) என்னிடத்தில் உள்ளதாயிருக்க வேண்டும், அங்ஙனம் இருக்குமானால், அது எவ்வளவுதான் சிறப்புடைத்தாயிருப்பினும், அதுபோலும் எனக்கு வேறொன்றில்லையாயினும், அப்பொருள் எமது பெருமானாகிய சிவபிரானது அடியவர்களுடைய உடைமையேயாகும்; என்னுடையதல்ல; இச்சொல்லில் சந்தேகமில்லை. (ஆதலால் நீர்) யாதொன்றை விரும்பினீரோ அதனைச் சொல்லும்" என்று கேட்க, (மறையவர் நான் உமமிடத்திற்கு வந்தது, உமது ஆசை நிலைபெற்றிருத்தற்குரிய மனையாளை எனக்குண்டாயிருக்கும் ஆசைதீர்த்துக் கொள்ளுதற்கு நீர் கொடுக்கவேண்டுமென்று விரும்பிவந்ததாகும் என்று அங்கணனாகிய இறைவன், அவர் மனையாளைக்கேட்டனர். அங்ஙனம் கேட்கப்படாததைக் கேட்டபோது அவர் மறையவரைக்கண்டகாலத்தது உண்டாகிய மகிழ்ச்சியினும் மிக மகிழ்ச்சியடைந்து வணங்கிச்சொல்லுவாராயினார் என்பதாம்.

அடியவர்கள் தம்மிடத்து வருவதைப் பேறாகவும், அவர்கள் வேண்டியவற்றைத் தாம் கொடுப்பதைச் சிறந்தாகவும் எண்ணும் சீலமுடைய அவரிடத்து, அடியார்கள் வேண்டிய பொருளைச் சொல்லுவதாகிய "இசையலாம் எனில் இயம்பலாம்" என்னும் சொல்லை அதற்குப் பொருந்தாதில்லை என்பதன, அன்றி அச்சொல் அவர்க்கு, அதிசயத்தை விளைவித்திருத்தலால் தானறு "என்ன அவ்வுரை கேட்டு" என்றார்.

உயர்ந்தபொருள் ஒன்றேயுடைப்பேறும் பலவிருப்பினும் அவை யான் அனுபவித்தற்கென்றும், உயர்ந்தபொருள்கள் அல்லாதன அடியார்க்கென்றும் வைத்திருப்பேனாயின் முன் எனது இசைவுதெரிந்து, பின் சொல்லவேண்டும், யானோ உயர்ந்தபொருளாயினும், அஃதல்லாதனவாயினும், அவையெல்லாம் அனுபவித்தற்குரியார் அடியவர்களே என்று வைத்திருப்பவனேயன்றி, எனக்கென்று ஒருபொருளும் வைத்திருப்பவனன்று, இது உண்மை என்பது தோன்ற "யாதும் ஒன்று என்பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் அடியவருடைமை ஐயமில்லை" என்றார்.

தூயநீறு பொன்மேனியில் விளங்க, தூர்த்தவேடமுந்தோன்ற வேதியராய் வந்த தேவரீரிடத்தில், தூயநீறுபொன்மேனியைப்போற்றாது, தூர்த்தவேடத்தைக் கருதியிருப்பேனாயின் நீர் என்பால் ஐயங்கொண்டு என்னிசைவுபெற்றுச் சொல்ல எண்ணி வந்ததைச் சொல்லவேண்டும். தூர்த்தவேடத்தைக் கருதாது, தூயநீறுபொன்மேனியையே கருதுகின்றேனாகலின் நீர் ஐயமுறாது எதனை வேண்டிவந்தீரோ அதனையே யான் உய்யுமாறு விரைந்து சொல்லவேண்டும் என்னுங் குறிப்புத்தோன்ற "நீர் அருள் செயும் என்ன" என்றார்.

தூர்த்தவேடத்தைக் கருதுவதொழிந்து, தூயநீற்றைக் கருதுவதாகிய நாயனாரது மனத்தூய்மையும், அதற்கிணங்கக் கூறிய இழுக்குப்படாத சொல்லையும், அவர்பால் நிலை நாட்டும்பொருட்டு அவரது நிலையை அப்பொழுதுதான் கருதிச்சொல்லத் துணிந்தவர் போலுங் கருதிச்சொல்லத் தொடங்கினரென்க.

அப்பொழுது கருதியதாவது, இயற்பகையார். தூயநீற்றுப் பொன்மேனிக்குப்பகையாகிய தூர்த்தவேடத்தையும், தூர்த்தவேடத்திற்குப் பகையாகிய தூயநீற்றுமேனியையும், ஒருங்கே யுடையோமாய் வந்த நம்மைக்கண்டபோது, இவ்வடியவர் ஒன்றுக்கொன்று மாறுபட்ட வேடமுடையவராய் வந்தவரிவர் யாவரென்று எண்ணவேண்டியதாயிருக்க, அதனையெண்ணாமல் தூர்த்தவேடம் பாசத்தொடர்பினைத் தப்புதற்குக் கொள்ளும் நிக்கிரககோலமெனவும், தூயநீற்றுக்கோலம் அப்பாசம் நீக்கி அருள்செய்தற்குக் கொள்ளும் அனுக்கிரககோலமெனவும், அவ்விரண்டு கோலத்துக்குந் தரியார் இறைவனொடு ஏகனாகிற்கும் அடியவரெனவும், அவ்வடியவருந் தனித்தனி இவ்விருகோலமும் ஒருங்கேயுடையராய் வரும் அடியவர் அரியரினும் அரியரெனவும், பாசநீக்கம் உண்டானாரிடத்து அடியவர் தூயநீற்றுமேனியராய் சிவப்பேறளிக்க வருவரெனவும், பாசமுடையாரிடத்துத் தூர்த்தவேடத்தராய் பாசப்பொருளை பறிக்க வருவரெனவும், பாசநீக்கமும் சிவப்பேறும் ஒருங்கே நிகழவேண்டியவரிடத்துத் தூயநீற்றுமேனியராய் தூர்த்தவேடமும் உடையவராய் வருவரெனவும், இவ்வாறு அடியவர்களின் சிறப்பினைநாடி, இவர்நமக்குப்பாசநீக்கத்தையும் சிவப்பேற்றையும் ஒருங்கே செய்தருளுவான் வந்தனர்போலுமென்று ஆராக்காதல் கொண்டு "யாதும் ஒன்றும்" (நீர் வேண்டியபொருள் எப்படிப்பட்ட பொருளாயினும்) "என்பக்கல் உண்டாகில்" (என்னிடத்தில் இருக்குமாயின்) அவ்வரியபொருள் எமதிறைவனுடைய அடியார்களுக்கு உரிமையாயுள்ள பொருளென்று அவைகளைப் பாதுகாத்து வைத்திருக்கும் அடிமையாளாகலின், அடியாராகிய உம்முடைய பொருளை நீர் கேட்பதற்குச் சந்தேகமேன், ஆகலான் இப்பொழுது என்னிடத்திலுள்ள பொருளில் எதுவேண்டும் சொல்லுமென்று கேட்டனர் என்று சிவனாகிய அடியார் திருவுளத்தெண்ணித் துணிந்தவராய் "மன்னுகாதல் உன்மனைவியை வேண்டி வந்தது இங்கு" என்றார்.

"ஒன்றுவேண்டி நும்பால்வந்தேன்" என்றும், "இசையலாம் எனில் இயம்பலாம்" என்றும், அஞ்சுதலுடையார் போன்று மறைபொருளாகச் சொன்னவேதியர், "யாதுமொன்றும் என்பக்கலுண்டாகில், அன்னது எம்பிரான் அடியவருடைமை ஐயம் இல்லை நீர் அருள்செயும்" என்றுசொல்லிய மாத்திரத்தில் மிக்கவிரைவுடன் வெளிப்படையாக அஞ்சாது கூறினாராகலான் "அர்ச்சனை எதிர்மொழிந்தபோதிலும்" என்றார்.

எனவே, "யாதும் ஒன்றும்" என்றற்றொடக்கத்தனவாய் நாயனார்கூறிய அச்சொற்கள் * "ஈரம் அளைஇப் படிறிலவாம் செம்பொருள் கண்டார்வாய்ச்சொல்" அஃதாவது, அன்போடுகலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார் வாயிற்சொற்கள் ஆகலான், அவ்வினியமொழிகளைக் கேட்டவுடன் வேதியர், இச்சொற்கள், "சிறுமையுள் நீங்கிய இன்சொல், அஃதாவது,—தாம் நாயனாரைக்கேட்கக்கருதிய அப்பொருள் அவருக்கு நோய்செய்யாது, இன்பத்தையே செய்வது என்னும்பொருளை ஐயமறவெளிப்படுத்திய சொல் எனக்கருதி உன்மனைவியை வேண்டிவந்தது என அஞ்சாது கூறினார் என்க.

வேதியர் மொழிந்ததைக்கேட்ட நாயனார், இவ்வேதியர், "தேராதவனுடைய தெளிவுந் துன்பந்தருதலைப்போல், தெளிந்தவன்கண் ஐயுறவுகொள்ளலும் தீராவிடும்பைதரும்" என்ற † "பொய்யாமொழிபோல் ஐயமில்லையென்று ஐயம் ஒழிவதற்கு நாம் கூறிய அம்மொழியினும் இவ்வையர் ஐயமுடையாராய் தமதுள்ளக்கருத்தை வெளிப்படக் கூறாரா

---

* திருக்குறள் ௯௧, அ—ம் இனியவை கூறல். † திருக்குறள் ௫௱௰, அ-ம், தெரிந்து தெளிதல். "தேரான்தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும், தீரா விடும்பை தரும்."

யின் அது நமக்குத்தீராத துன்பந்தருமாகலான் அத்துன்பத்துக்கிடஞ்செய்யாது, நமக்கு இன்பத்தையே தர, நாம் வேண்டிக்கொண்டபடி நம்பக்கல் உள்ளபொருளேயே கேட்டனராகலான், "இவரினுஞ் சிறந்தார் யாவரென்று" உளங்களிகூர்ந்து "அடியார்கள் குறித்து வேண்டுவன குணமெனக்கொண்டே, உண்மைகேட்டுவந்தனன்" என்றுசொல்லிய அப்போதுண்டாகிய மகிழ்ச்சியினும் அதிகமான சந்தோஷத்தை யடைந்தனராகலான், "முன்னையின் மகிழ்ந்து" என்றார்.

அடியரல்லாதாரிடத்து குணத்தைக்கண்டால் அதனைக்குணமாகக் கொள்ளாதொழிதலும், அடியராஞரிடத்து குற்றத்தைக் கண்டால் அதனைக் குற்றமாகக் கொள்ளாதொழிதலுமே தூய்மை. எனவே, அடியரல்லாரிடத்துக் காணப்படும் குணம் இறைவனுக்குவேண்டிய அன்பை விளைவிப்பதில்லை, அடியரிடத்துக் காணப்படும் குற்றம் அரனுக்குவேண்டிய அன்பைக்கெடுப்பதில்லை ஆகலான் அது தூய்மையாயிற்று. ஆகவே, நாயனார் வேதியர் தூர்த்தவேடத்தோடு வந்தகாலத்திலும் மகிழ்ந்து, பின்னர் குற்றம் விளைவிப்பதைக் கேட்டகாலத்திலும் மகிழ்ந்தனர் ஆகலான், "தூயதொண்டனார்" என்றார்.

அடியாரிடத்துக் குற்றத்தைக்கண்டு குணமாகக்கொள்ளலால் வரும் பயனை அன்று அவரால் அடையப்பட்டனராகலான், "தொழுதகைசெய்வார்" என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் தமக்குள்ளனவாகிய எல்லாப்பொருளேயும் அடியவருடைமையாக எண்ணியதினும், அதுபோல் அடியவர்கட்குக் கொடுப்பதினும், மிக மகிழ்ச்சியுடையவரென்றும், அதில் ஐயமில்லை என்று யாவரும் அறிந்துய்ய நாயனாருக்கு நாயகனாகிய இறைவன் அவரது நாயகியைக் கேட்டனரென்றும் கூறப்பட்டன (எ)

மறையவரிடங்கூறியதை மனைவியிடங்கூறல்.

இது எனக்குமுன் புள்ளதே வேண்டி எம்பிரான் தந்த பேறெனக்கென்னுக்,
கதுமெனச்சென்று தம்மனே வாழ்க்கைக் கற்பின் மேம்படு காதலி யாரை, விதிமணக்குல மடந்தையின் றனேயிம் மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனன் என்ன,
மதுமலர்க்குழல் மனைவியார் கலங்கி மனந்தெளிந்தபின் மற்றிது மொழிவார்.

(எ-து.) (வந்தவேதியர், உன் மனைவியை வேண்டிவந்தது என்று சொல்லிய போது) இவர் கேட்டதாகிய இப்பொருள் எனக்கு முன்னமே உள்ளதாயிருக்கின்ற பொருளல்லவா அதனைத்தானே இவ்வேதியரும் விரும்பினர். (இப்படி என்னிடத்துள்ள பொருளேயே இவர் இச்சிக்கும்படியாகச் செய்தது) எமது பெருமானாகிய இறைவன் எனக்குக் கொடுத்த பாக்கியமல்லவா? என்று சொல்லி (உடனே அவ்விடத்தினின்றும் நீங்கி) சீக்கிரமாக வுள்ளேசென்று, தமது இல்லறவாழ்க்கைக்கு உரியவராயமைந்துள்ள கற்பிற்சிறந்த மனைவியாரை (நோக்கி) நான் வேதவிதிப்படியே கலியாணஞ்செய்துகொண்ட நற்குலத்திற்பிறந்த பெண்ணல்லவா? உன்னை இன்றைக்கு இந்த மெய்த்தவராகிய வேதியர்க்கு நான் கொடுத்துவிட்டேன் என்றுசொல்ல, தேன்பொருந்திய மலரணிந்த கூந்தலையுடைய அவர் மனைவியார்கேட்டு மனங்கலங்கிப் பின்னர் தெளிவடைந்தவராய், இதனைச் சொல்லுவாராயினர் என்பதாம்.

வேதியரே! எம்பெருமானாகிய இறைவனிடத்து யான் நாடோறும் வேண்டும்பாக்கியம் ஒன்றுளது, அஃது உனது அடியார்கள் வேண்டும்பொருள் எதுஎதுவோ அவையெல்லாம் என்னிடத்தில் இருத்தல்வேண்டும்; அவர்களால் விரும்பப்படாத பொருள் ஒன்றேனும் வேண்டாம் என்பதேயாம், அப்பாக்கியத்தை எனதிறைவன் இன்று தேவரீரால் கொடுக்கப்பெற்றனன். எவ்வாறென்றால் என்னிடத்தில் இல்லாத பொருளைத் தேவரீரைக் கேட்கச்செய்யாது என்னிடத்தில் முன்னமே அமைந்துள்ள பொருளேயே கேட்கச்செய்ததேயாம் என்பார். "இது எனக்குமுன்பு உள்ளதேவேண்டி, எம்பிரான் தந்தபேறு எனக்கென்னு" என்றார்.

தாம் எண்ணிய பாக்கியத்தை மாறுபடாது, எண்ணியபடியே பெற்றபெருமகிழ்ச்சியினால் அப்பாக்கியத்தைப்பார்க்க அதிசீக்கிரமாகச்சென்றனர் என்பார் "கதுமெனச் சென்றார்" என்றார். "பெண்ணிற்பெருந்தக்க யாவுளகற்பென்னுந், திண்மையுண்டாகப் பெறின்" என்று தெய்வநூற்கூறியபாக்கியம் எதுவோ, அந்தகிடைத்தற்கரியபாக்கியத்தை விரைந்துசென்றுகண்டனரென்பார் "தம்மனைவாழ்க்கைக்கற்பின் மேம்படுகாதலியாரை" என்றார். அடியார்களுக்கு இல்லையென்னாது கொடுத்தற்குப் பதுமநிதியாயுள்ள தமது மனையாட்டியைநோக்கி, வேதமுறைப்படி என்னோடிருக்கவந்த குலப்பெண்ணல்லவா நீஎன்பார் "விதிமணக்குலமடந்தை" என்றார். நீ என்னோடிருக்கவந்த அன்றுமுதலாக உன்னை நான்பாக்கியமாகப் பெற்றுள்ளதற்குப்பயன் இன்றுதான் கண்டேன் என்பார் "இன்று" என்றார்.

அது என்னை என்பையேல், அடியார்க்கு இல்லையே என்னாத எனது தவத்தை மெய்மையாக்கவந்த இவ்வேதியருக்கு உன்னை அவர்வேண்டியபடியே கொடுத்தனன். நீ இல்லையாயின் "பெண்ணிற்பெருந்தக்க யாவுள" என்னும் தெய்வச்சொல்லும் பொய்த்து, உன்னைப்பாக்கியமாகப்பெற்றதற்கு நான்பெறவேண்டியபயனும் பொய்த்து, நல்லகுலத்திற்பிறந்தான் இலன் என்னும் எவ்வம் (இல்லையென்று சொல்லுகின்றகுற்ற)த்துக்கும் ஆளாய், "மேல் உலகம் இல்லெனினும்" (உயர்ந்த நடையினை யுடையாராகிய அடியார்க்கு) "ஈதலேநன்று" என்றுகூறிய பெரிய நன்மையையும் இழந்தவனுவனல்லவா? அங்ஙனம் ஆகாவண்ணம் நான்பெற்ற பாக்கியமாகிய உன்னை இவ்வேதியருக்குக்கொடுத்து இல்லையே என்னாத தவத்தையும் பெற்றேன். அத்தவத்தாற்பெறத்தகும் பயனும் பெற்றேன். எனது குலத்துக்கு வருங்குற்றமும் ஒழித்தேன். ஈதலாகிய நன்மையும்பெற்றேன் இவையனைத்தும் நான்மிக எளிமையாய்ப்பெற உன்னைக்கொடுத்தனன் என்பார் "உனை இம்மெய்த்தவர்க்கு நான்கொடுத்தனன் என்ன" என்றார்.

இவையெல்லாங்கேட்ட அவர்மனைவியார், நமதுநாயகராகிய இவர்-பெறவேண்டிய பேறுகளுக்கெல்லாம் துணையாகவோ ஆளாகவோ விற்கவோ நாம் இருப்பதே நாம் பெறும்பேறாக அன்றே எண்ணி ஆட்பட்டிருக்க இவ்வேதியருக்கு இன்றுதானாத்தந்தேனென்று கூறினார். முன்வேதியரிடத்து "யாதும் ஒன்று என்பக்கல் உண்டாகில் அன்னது எம்பிரான் அடியவருடைமை ஐயமில்லை" என்றார். இவ்விருசொல்லையும் ஆராயுமிடத்து, நாமொழிந்தவனையவெல்லாம் அடியவருடைமையாக முன்னமேவைத்தனரென்றும், இன்று அவ்வேதியர் கேட்டபடியினால் அதுநோக்கி நம்மை இன்றுதான் அடியவருடைமையாக்கினரென்றும் தெரியவருகின்றன. முன்னமே நம்மை அடியவருடைமையாக எண்ணாததற்கு நம்பாலிருந்தகுற்றம் யாதோ என்று சிறிது கவலைகூர்ந்தனர் என்பார் "மதுமலர்க்குழல் மனைவியார்கலங்கி" என்றார்.

இதுகாறும் இவரால் குற்றம்பாராட்டியிருந்த நம்மை, இன்று இம்மெய்த்தவர் நம்மை விரும்பினும் தேவரீர் விரும்பியபொருள் குற்றமுடைய பொருள் அது உமக்கு ஆகாவெனக்கூறி நம்மைவிலக்காது, கேட்ட அவ்வேதியரது வேண்டுகோளையும், இல்லையென்னாத தமது தவத்தையுமே பெரிதாகஎண்ணி நமது குற்றத்தை அக்கணமேமறந்து இன்று நம்மை அவருக்குக்கொடுக்கத் துணிந்தனரே இது நாம்செய்த அழிவிலாப்பாக்கியமென்பார் "மனந்தெளிந்த" என்றார்

உன்னைநான் கொடுத்தனன் என்றுதுணிந்து சொல்லிய நமது கணவனார், சொலத்துணிந்ததுபோல் அவர்பால் நம்மை ஒப்புவிக்கத்துணியாதது, நாம் சிறிது கலங்கிய கலக்கத்தைக் கண்டுபோலும் என்று எண்ணி, அக்கலக்கம் அவருக்கு அகலுமாறு, சொலத்துணிந்ததுபோலும் என்னைக் கொடுக்கத்துணியாதகாரணம் என்னையென்று அவர் துணிவதற்கானசொல்லைப்பின் சொன்னாரென்பார் 'பின்மற்றிதுமொழிவார்" என்றார்.

அறிவற்ற தாவரப்பொருளாகிய பொன்மணி முதலியவற்றைச் சுதந்தரமாகக் கொடுக்கக்கூடுமேயன்றி, அறிவுடைய சங்கமப்பொருளை அதுபோலக் கொடுத்தற்கு

யாவராலும் இசையா, அங்ஙனமிருக்கத் தாவரப்பொருள்போல் மனையாட்டியைத்தானே சுதந்தரமாகக்கொடுக்கத் துணிந்ததற்குக்காரணம், சொற்றிறம்பாமையாகிய கற்பே மேன்மையான கற்பென்னும் கற்பின் திறமுடையவர் அவர்மனைவியார் என்னும் அச்சிறப்புத் தோன்ற "கற்பின் மேம்படுகாதலியார்" எனவும், தூயநீற்று மேனியோடு தூர்த்தவேடமுங்கொண்டுவந்த இச்சிறந்தஅடியார்க்கு, விதியாகக்கொண்ட சத்பாத்திரமாகிய உன்னை நான்கொடுத்தல் இல்லேற்பு ளைஞருத எனதுதவத்திற்கு சிறந்ததென் றெண்ணிக்கொடுத்தனன் என்பதுதோன்ற "விதியுணக்குலமடந்தை உனைநான் கொடுத்தனன்" எனவும் பொருள்கொள்க.

இத்திருப்பாசுரத்தான், அடியார்களுக்கு வேண்டும்பொருளை உடைத்தாயிருக்கப் பெறுதலே பாக்கியமுடைமை என்றும், அப்பாக்கியத்தை முற்றுப்பெறுதற்குப் பெருந்துணை மனையாட்டி என்றும் கூறப்பட்டன (அ)

மனைவியார் மாதவர்பால் நிற்றல்.

இன்று நீரென்னை அருள்செய்த திதுவேல் என்னுயிர்க்கொரு நாதனீர் உரைத்த,தொன்றை நான்செயும் அதனை அல்லால உரிமை வேறுளதோ எனக்சென்று, தன்த னிப்பெரும் கணவரை வணங்கத் தாழ்ந்து தொண்டனார் தாம் எதிர் வணங்கச், சென்றுமாதவன் சேவடி பணிந்து திகைத்துநின்றனள் திருவினும் பெரியாள்.

(எ - து.) எனது ஆத்மாவுக்கு ஒப்பற்ற நாதனாயுள்ளவனே, இன்றைக்கு அடிமையாகிய என்னைநோக்கி அருள்செய்தது இத்தன்மைத்தா யிருக்குமானால், நீர் கட்டளையிட்டதொன்றை அடியேன் செயவதேயல்லாமல், எனக்கென்று செய்யத்தகும் காரியம் வேறொன்றுளதோ என்று, தனது ஒப்பற்ற நாயகரை வணங்கினர். (அவர் வணங்கிய போது, நாயனார் வேதியர்க்குரிமையாக்கிய அவரைத் தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கி நின்றனர். (அவர்வணங்கி நிற்பவே) இலக்குமியினும் சிறந்த அழகினையுடைய அவ்வம்மையார், (தம்மை யாளவிரும்பிய) மாதவராகிய அடியவரிடத்துத் தாமேசென்று அவர் திருவடிகளைவணங்கி, திகைபபுற்று நின்றனர் என்பதாம்.

என்னுயிர்க்கு ஒருநாத இன்று நீர் என்னை அருள்செய்தது இதுவேல் எனவும், திருவினும் பெரியாள் சென்று மாதவன் சேவடிபணிந்து எனவும் கொண்டு கூட்டுக.

உடம்பால் அடையப்படும் சிற்றின்பானுபவத்திற்கு நாயனார் நாயகராயிருந்ததேயல்லாமல் உயிரான் அடையப்படும் பேரின்பானுபவத்திற்குரிய நாயகனையும் காட்டத்தாமே நாயகராக இருந்தனரென்பது தோன்ற 'என்னுயிர்க்கொருநாத'என்றார். நீர்-நினைக்கும் செயலுக்குரிய கர்த்தாவாயிருப்பவர். நான் அச்செயல்வழிமாறாது நடத்தற்குரிய அடியாளாயிருப்பவள். இவ்வடிமைத்தன்மை உமக்கு ஆட்பட்ட அன்றுமுதல் உடையவள். ஆதவே, இன்று என்னை இவ்வேதியருக்கு ஆட்படுத்துவதாகிய இதுவே அடியாளுக்குச் செய்யத்தகும் அருளாயிருக்குமாயின், அவ்வருட்பணியை அகமகிழ்ந்து அவ்வழி மாறாதொழுகும் அந்த நன்னெறியொன்றே நான்கடமையாகச்செய்யும் செயலாகக்கொண்டிருப்பதல்லாமல் எனது உரிமையாகிய கற்புநிலைக்கு வேறொருசெயல் உளதென்பது உண்டோ, இல்லை இது பொய் மொழியன்று. வாய்மை மொழியேயாம் 'என்னும் அவ்வுண்மைதோன்ற "நீர் இன்று என்னை அருள் செய்து (உரைத்தது) இதுவேல், (அவ்)வொன்றை நான் செயும் அவ்வளவேயல்லால், எனக்கு உளதோ வேறு உரிமை என்று தன் தனிப்பெருங்கணவரை வணங்க" என்றார்

நம்மை வணங்கிய இவரோ - இலக்குமியினும் பெரியார். இவரைக் காதல்கொண்டு வந்த வேதியரோ-பெரியாரினும் பெரியார். அப்பெரியாருக்கு நம்மைவணங்கிய இவரை இனிக்கொண்டுபோய்க் கொடுப்பதாக இருப்பின் இவருடைய வணக்கத்தை நாம் ஏற்றுக்கொள்ளலாம் அங்ஙனமின்றே "நான் இன்று இம்மெய்த்தவர்க்கு உன்னைக்கொடுத்

னன்" என்றோம். எனவே, கொடுத்துவிட்டு உன்னைக்கொடுத்தேன் என்றுசொன்னோ மேயன்றி, இனி உன்னைக் கொடுக்கப்போகின்றேன் என்றுசொன்னதில்லையே, அதனை இவர்யோசித்து வணங்கினவரல்லர். கொடுத்தேன் என்றபோது இவர் அவரடிமையாயி னார். அவரடிமை யாயினாருக்கு நான் அடிமையாதல் முறையா? அவரடிமையாயினார் எனக்கு அடிமையாதல் முறையா? இதுமுறைமை அன்றே. அம்முறைமை அவ்வம் மையாருக்குத்தோன்ற "தொண்டனார் தாம் எதிர்தொழுது வணங்க" என்றார்.

அம்மையார் நாயகனாகிய நாயனார் தம்மை எதிர்வணங்கியமாத்திரத்தில் அவர்வணங் கிய எண்ணத்தை அக்கணமே அறிந்தவராய், வேதியர்பால் போவோமென்று நாயனா ரிடத்திற்சொல்லாது, தாமே வேதியர்பாற்சென்று அவரடிக்காட்பட்டு வணங்கி இல் லையே என்னாதநாயனாரது விரதத்தைப் பாதுகாத்த சிறப்புத்தோன்ற "சென்றுமாதவன் சேவடிபணிந்து" என்றார். வேதியர் தம்மை அன்புடன் பணிந்த அம்மையாரை நோக் காது நாயனாரையே நோக்கி இருப்ப, அதனை அம்மையார்நோக்கி, நம்மை நோக்கிவந்த இவ்வடியவர் உள்ளத்தில் நோக்கியபடியே அவர் நோக்கத்திற்கு நாம் எதிர்ப்பட்டும் நாம் எதிர்ப்படாமைபோல் நாயனாரை நோக்குகின்றனரே நம்பால் என்ன குற்றங்கண்ட னரோ! அக்குற்றம் புலப்படவில்லையே இதற்கு நாம் என்செய்யக் கடவோமென்று அறிவுகலங்கினாரென்பது தோன்ற "திகைத்துநின்றனள்" என்றார்.

இலக்குமி தம்மைப் பெற்றார்க்கு பொருட்செல்வத்தைக் கொடுக்க அறிவாளே யன்றி, அன்புவருவதற்கான அருட்செல்வத்தைக்கொடுக்க அறியாள். இவ்வம்மையாரோ தம்மைப்பெற்ற நாயனாருக்குப்பொருளையும், அருளையும், அன்பையும் கொடுத்தனராக லின் இவரது சிறப்புத்தோன்ற "திருவினும் பெரியாள்" என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் தமது இல்வாழ்க்கைத்துணையுடைய மாண்பினால், இல்லையே என்னாத தமது விரதத்தைக் காத்துக்கொண்ட சிறப்புக்கூறப்பட்டது. (க)

நாதனாரைப் பணி வினாதல்.

மாதுதன்னைமுன் கொடுத்தமாதவர்தா மனமகிழ்ந்துபே ருவகையின்மலர்ந்து
யாது நானினிச் செய்பணி தானென்றிறைஞ்சி நின்றவர்தம்மெதிர் நோக்கிச்
சாதி வேதிய ராகிய தலைவர் தையல் தன்னையான் தனிக்கொடுபோகக்
காதல் மேவிய சுற்றமும் பதியும் கடக்க நீதுணை போதுக என்றார்.

(எ - து.) (வேதியர் தன்மனைவியாரைக்கேட்க) அம்மனைவியாரைத் (தான் கொடுத் தற்கு) முன்னேவைத்துள்ள பொருளாகக்கொடுத்த பெரியதவசீலர், மனமகிழ்ச்சியடை ந்து பேரானந்தத்தினால் முகமலர்ந்து, (சுவாமிகாள்!) இனி அடியேன் செய்யத்தக்க பணியாதிருக்கின்றது (அதனைக் கட்டளையிட்டருளல்வேண்டும்) என்றுவணங்கி அவர் எதிரே நின்றனர். (அங்ஙனம் நிற்கின்ற அவரை) தேவசாதியில் வேதியராகிய இறைவ னார் பார்த்து, இங்குநிற்கின்ற பெண்ணை, (யான் எப்படி) தனியே அழைத்துக்கொண்டு போக முடியும், (ஏனெனில் இங்குள்ளவர் இவளிடத்தில்) ஆசையுடைய சுற்றத்தார்க ளாக இருக்கின்றனர், (ஊரும்) இவளுடைய ஊராகவிருக்கின்றது, (ஆகலான்) சுற் றத்தாரையும் ஊரையும் யான்கடந்து போமளவும் நீதுணையாக வரவேண்டும் என்று கூறினர் என்பதாம்.

தவத்தில் அவாவுள்ளவர்கள், பெண் பொன் மண் முதலியவைகளையும், பொறி புலன் கரணங்களையும் தவத்துக்குப் பகைப்பொருள்களென்றும், அவைகளை விலக்க வேண்டுமென்றும், வெல்லவேண்டுமென்றும் எண்ணி எண்ணி விலக்கவும் வெல்லவும் முயல்வார்போன்று விலக்குவதுமற்று, வெல்லுவதுமற்று, அவைகளைப்பழித்தும், பகை த்தும், தங்களை யிழித்தும் வெறுத்தும், அருள்வழியறியாது தற்போத வழிப்பட்டுத்

தவத்தை வாளாவிழக்கின்றனர். நாயனர் இறப்பில் (அழிவில்லாத) தவமாகிய சரியை யாதிகளில் அவாவுடையவராய்ப் பெண்முதலிய எல்லாப்பொருள்களும், பொறிமுதலிய தத்துவக்கூட்டங்களும், இறைவனால் படைக்கப்பட்டனவாய், அவனேவல் வழிநின்று செல்லுவனவாய் நிற்பனவென்றுணர்ந்து, தற்போதவழி யொழித்து அருள்வழியே சென்று, அவ்வழியில் எதிர்ப்படும் அருளாளராகிய இறைவனார் அடியவருருக்கொண்டு வந்து பெண்பொன் முதலியபொருள்களில் எதுகேட்கின்றனரோ அதனைக்கேட்பதற்கு முன்னமே அவர்பொருளென்று கொடுக்குந்தவமுடையார். எனவே, பற்றற்றான் பற் றினைப் பற்றவொட்டாது தடுக்கவல்ல இப்பொருள்கள், அப்பற்றற்றானால் பற்றும் பொருளாய் அவனால் பற்றப்படுமானால் நாம் அவனைப்பற்றுவதற்குத் தடைசெய்யும் பொருள் யாவுள (எவையிருக்கின்றன) என்று மகிழ்ந்து முற்பட்டுக்கொடுக்கும் பெருந் தவமுடையராய், அத் தவவிசேடத்தான் கொடுத்தபொருளைபபற்றிய இறைவனைத் தான் பற்றும் பொருளாகப் பற்றிப் பேரானந்தப்பெருங்கடலில் உள்ளமகிழ்வர் என்பார் "மாது தன்னை முன்கொடுத்த மாதவர்தாம் மனமகிழ்ந்து பேருவகையின் மலர்ந்து" என்றார்.

நீ என்னைப் பற்றுவதற்குத்தந்த பொருளெல்லாம் என்னைப் பற்றியீர்த்து என்னை உன்வசமாக்கி அவைகளும் உன்வசமாகவே நின்றன. இனி எனக்குப் பணி(செயல்) இல்லை. அஃதாவது எனதெனப்பற்றும் பொருளில்லை. அது இல்லையாகவே யான் என்று முளைத்துவருவதற்கான அகங்காரமும்இல்லை. ஆகவே இனி உம்மிடத்து ஏகனாகி நிற்பதல்லது - (யான் எனதென்னுஞ் செருக்கற்று நான் உமது அருளாகிய ஸ்ரீபாதத்தை அணைந்திருப்பதல்லாமல்) வேறில்லை. இங்ஙனம் ஏகனாக நிற்கப்பெற்ற யான் இனிச் செய்பணியுளதேல் அதனைக்கட்டளை யிட்டருளவேண்டும் என்பார்—"நான் இனிச் செய்பணியாது என்று இறைஞ்சிநின்றனர்', என்றார்.

அங்ஙனம் யான் எனதென்பது அற்றிருத்தலாகிய ஆன்மசுத்தியைப பெற்றபின் னர், அங்ஙனம் ஏகனாகி நிற்றலைத் தடைசெய்யவல்ல உடற்சம்பந்தமாகிய பாசச்செயல் கள் வந்து தாக்குமாகலான் அவைகளை வெட்டிச் சாப்பபதற்கான செயலைச் செய்ய அரு ளைத்துணையாகப பற்றிக்கொண்டு போவாயாக. அதுவே நான் எனதென்பதற்றநீ செய் யத்தகும்பணி என்பார்—"நின்றவர்தம் எதிர்நோக்கிக் காதன்மேவிய சுற்றமும் பதியுங் கடக்க நீதுணைபோதுக என்றார்"—என்றார்.

இதனால், நாயனார், பசுபுண்ணியத்தைக்கடந்த பதிபுண்ணியததைச் செய்யவல்ல மா தவத்தினரென்றும், பதிபுண்ணிய முடையராயினாராகலான் பசுபுண்ணிய முடையா ரால் விடுதற்கரிதான பாசபதார்த்தங்களை மிக எளிமையாய்விட்டு ஆன்ம சுத்தியைப் பெற்று இறைவனோடு ஏகனாகி நிற்கபெற்றனரென்றும், அங்ஙனம் நிற்கப்பெற்றபின் னர் பாசக்ஷயம் பண்ணுவதிலும் மிகவன்மை யாளராயினரென்றும் அறியக்கிடக்கின்ற மைகாண்க.

ஆன்மாவாகிய பசுவும் அறிவுவடிவமே, பரமான்மாவாகிய பதியும் அறிவுவடிவமே அறிவுஎன்பதில் இரண்டும் ஒருசாதியாயினும் பரமான்மா அறிவிக்கும் சாதியும், ஆன்மா அறியும் சாதியும் ஆகலான், அறியுஞ்சாதியாகிய ஆன்மா, அறிவிக்கும் சாதியாகிய பர மான்மாவோடு ஏகனாகி நிற்பினும் ஆன்மா அறியுஞ்சாதியாகவே யிருப்பவன். பரமான்மா அறிவிக்கும் சாதியாகவே யிருக்கின்றவன் ஆகலின்"சாதிவேதியராகிய தலைவர்"என்றார். எனவே, அறிவிக்குந் தொழிலுடையவர் வேதியரெனவும், ஏனையோர் அவர் அறிவிக்க நின்றவர் எனவும் தருமநூலுட் கூறப்படுதல்காண்க. அதனால் அறிவிக்குந் தொழிலை யுடைய இறைவனை "வேதியர்சாதி" என்றாரென்க. நாயனாரது மனைவியார் - பாசத் திற்கு அடையாளப்பொருளாகவும், அவரைச்சேர்ந்த சுற்றத்தினரை பாசகாரியத்திற்கு

இத்தொடக்கத்தனவெல்லாம் சிவஞானபோதம் ௲ - ஆம் - சூ்ம், (க)ஆம் அதிகர ணம், (2) ஆம் அதிகரணப்பொருளில் வைத்துக்காண்க.

இனி, நல்லசிவயோகத்தின் இயல்பை வகுத்துக் கூறுவான் றொடங்கினர். (எ)

அ. ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று
மீதானத்தே செல்க உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற.

(எ - து.) உ - ர் என்சொல்லியவாறோவெனின். உள்ளமுருகுதலைச் செய்யவல்ல நல்ல சிவயோகத்தைச்சொல்லிற்று.

(இ - ள்.) ஆதாரயோகத்தினால் நிராதாரயோகத்திற்சென்று, மேலிடமாகிய திருவருள் நிலயமாகிய சிதாகாசத்தில் போவாயாக (அவ்விடமே) மலரகிதனாகிய சிவபெருமானுக்கு இடம் என்க.

* ஆதாரம்-ஆதாரயோகம். அஃதாவது, மூலாதாரம் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆக்ஞை என்ப சொல்லப்பட்ட ஆறிடங்களிலும் விநாயகர் பிரமன் விஷ்ணு உருத்திரர் மகேஸ்வரர் சதாசிவர் என்னுமூர்த்திகளை முறையே அவ்வவ்விடங்கட்குரியவராகக் கற்பித்துக்கொண்டு தியானித்த, தியானித்த அம்மூர்த்திகளின் வழியாகவே கருவிகரணச் சேட்டையற்ற அந்தந்தவிடங்களில் அந்தந்தமூர்த்திகளின் மயமாயிருத்தலாம்.

நிராதாரம்-நிராதாரயோகம். அஃதாவது, ஆதாரங்களில் ஆன்மபோதத்தால் கற்பிக்கப்பட்ட மூர்த்திவடிவங்களைப்போல் கற்பிக்கப்படாததாய், கற்பிக்கப்பட்ட அவ்வடிவங்களில் தியானிக்கப்பட்ட அத் தியானார்த்த ரூபமாய், அத் தியானங்கட்குரிய பயன்களைக் கொடுத்து, அவ்வடிவங்களுங் கடந்து, அடலாயநிற்கும் ஞானசொரூபமாகிய அந்தப் பொருளுடன் ஆன்மபோதங்கலந்து அதுவாயிருத்தலாம்.

மீதானம் - காண்பான், காட்சி, பொருள் என்னும் முப்புடியுங் கடந்த மெய்ப்படிவமாம். விமலற்கிடம் - ஆதாரயோகத்தாலும், நிராதாரயோகத்தாலும், கரணச்சேட்டையும் தற்போதச் சேட்டையுங் கடந்து தன்னைக் கூடிய ஆன்மாவுக்குத் தன்னைக் கொடுத்துச் சிவம் பிரகாசிக்குமிடம்.

இததிருப்பாட்டான், ஆதாரயோகம் இத்தன்மைத்தென்பதும், நிராதாரயோகம் இத்தன்மைத்தென்பதும், இவ்விரண்டாதாரமுங் கடந்த மீதானம் இத்தன்மைத்தென்பதும், அந்த மீதானமே இறைவனுக்கு இடமென்பதும், அவ்விடத்தைச்சேர்ந்த ஆன்மாவுக்குத் தன்னைக்கொடுக்கும் இடமும் அதுவே என்பதுங் கூறப்பட்டன.

இத்திருவுந்தியாரை - ஆதாரத்தாலே நிராதாரத்தேசென்று மீதானத்தேசெல்க என ஒருமுடிபாகக் பொருள் படுத்தின் இப்பொருள் பற்றிவரும் திருக்களிற்றுப்படியில் "ஆதாரயோக நிராதாரயோகமென மீதானத்தெய்தும் விதியிரண்டே" என்று கூறப்படுதலின் அது பொருந்தாமையறிக. அஃதாவது இரண்டென்றது இரண்டே எனவும் விதி எனவும் கூறுவதனாலென்க.

திருக்களிற்றுப்படியார்.

உஉ. ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே—யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றாம்.

(எ - து.) (உள்ளமுருகுதலைச் செய்யுஞ் செயலை மேற்கொண்ட திருவருளுக்கிடமாகிய) மீதான ஸ்தானத்தைச் சென்று அடைதற்கு விதித்திருக்கும் மார்க்கம் இரண்டு. அம்மார்க்கமாவது ஆதாரயோகமார்க்கம் நிராதாரயோகமார்க்கம் என்ப. (அவற்றுள்) ஆதார

---

ஆதாரம் - பற்றுதற்குரிய இடம்.

மார்க்கமாவது - யோகசாதகனானவன் தனது தியான அறிவால் ஆறாதாரங்களில் ஆக்கப் படுவதாகிய மூர்த்திகளில் தன்னையாக்கி அப்பொருளாயிருப்பது. நிராதார மார்க்க மாவது - ஆக்கப்படும் மூர்த்திவடிவங்களைவிட்டு அவ்வடிவங்களிலுள்ள மூர்த்தியாய் நிற்கும் ஆக்கப்படாத ஞானமூர்த்தியாயிருப்பது என்பதாம்.

நல்லசிவதன்மம் என்றெடுத்துக்கொண்ட பதினோராவது திருவெண்பாவில், சரியை கிரியைகளாகிய நல்லசிவதன்மத்தால் நான் என்னும் தற்போதம் அழியுமாறும், * சரியை கிரியைகள் அன்புக்கு நிலைக்களம் ஆமாறும் விளக்கியதுபோல், இத்திரு வெண்பாவால் நல்ல சிவயோகமும் அன்புக்கு நிலைக்களமாமாறு கூறப்பட்டது.

இத்திருப்பாட்டான உந்தியுள் "ஆதாரத்தாலே நிராதாரத்தே" என்று கூறப்பட்ட தனை - ஆதாரயோக நிராதாரயோகமென இரண்டென்றும், இரண்டனுள், ஆதார யோகம் இத்தன்மைத்தென்பது தோன்ற - ஆதாரத்து ஆக்கும் பொருளாலே ஆக்கும் பொருளாம் என்றும், நிராதாரயோகம் இத்தன்மைத்தாமென்பது தோன்ற ஆக்காப் பொருள் என்றும், "மீதானத்தேசெல்க" என்றதனை மீதானத்தெய்தும் விதி என்றும் கூறப்பட்டன. (அ)

௯ ஆக்கில் அங்கே உண்டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கில் பரம தென்றுந் தீபற
பாவனைக் கெய்தா தென்றுந் தீபற.

(எ - து.) உ - ர் என்சொல்லியவாறோவெனின்; ஆதாரயோகமுறையைக் கூறிற்று.

(இ - ள்) பாவித்துக் கற்பித்தால் அங்குத்தோன்றுவதாய், பாவனைவிடில் தோன்றாத தாய்ப் போம். (பாவனாமூர்த்திகளைவிட்டு) அறிவின்கண் பார்க்கில், அங்ஙனந்தோன்றும் அதுதான் சிவசொரூபம். அதுபாவிக்க அமையாது என்க

ஆக்கில் - மேலேகூறிட ஆறு ஆதாரங்களில் அவ்வாதாரங்கட்குரிய மூர்த்தி வடி வங்களைப் பாவித்துக்கொள்ளில்.—"அங்கேயுண்டாய்"—அவ்வடிவங்கட்குரிய மூர்த்தி கள் அவ்வவ்வடிவங்களில் உண்டாகின்றவர்களாய்—"அல்லது அங்கு இல்லையாய்"— பாவனைசெய்யாவிடில் அவ்வாதாரங்களில் அமமூர்த்திகள் இல்லாதவராய்ப் போகின் றனர். பார்க்கில் - அப்பாவனாவடிவங்களைவிட்டுப் பாவித்த தன்னறிவின்கண் அப பொருளைப்பார்க்கில்—அது பரம்— அது தான் சிவசொரூபம்.—பாவனைக்கு எய்தாது - அச்சொரூபம் அதுபோல் பாவனைசெய்ய வாராது.

எல்லாவடிவங்களையும் பாவிக்கவல்ல அறிவே சிவசொரூபத்துக்கடவுளாமபோது பாவிப்பது எது? அது இல்லாதபோது வருவது எது? இரண்டுமில்லை என்றபடி.

## திருக்களிற்றுப்படியார்.

உரு. ஆக்கி யொருபொருளை ஆதாரத் தப்பொருளை
நோக்கி அணுவில் அணுநெகிழப் - பார்க்கில்
இவனுகை தானொழிந்திட் டேகமாம் ஏகத்
தவனுகை ஆதாரம் ஆம். (1)

உ௪. கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயில்
கொண்டவனும் அப்பரிசே கூறுபடும் - கொண்ட
இருபொருளும் அன்றியே இன்னதிது என்னா
ஒருபொருளே யாயிருக்கும் உற்று. (2)

---

* சரியை - புறத்தொண்டு எனவும், கிரியை - அகப்புறத்தொண்டெனவும், யோகம்- அகத்தொண்டெனவும் அறிக. சரியை கிரியைகள் வல்வினை மெல்வினையென இரண் டாக வகுக்கப்பட்டமைபோல், யோகமும் - ஆதாரம் நிராதாரம் என இரண்டாக வகுக் கப்பட்டமை காண்க. இவற்றுள், மெல்வினை—ஆதாரயோகம். வல்வினை - நிராதார யோகம் என்க.

(எ - று.) (ஆறு தாரங்களில் அவ்வவ்வாதாரங்கட்குரியவராகச் சொல்லப்பட்ட அந்தந்தமூர்த்திகளை) ஆக்கி (கற்பித்துக்கொண்டு) அந்த ஆதாரமூர்த்திகளை அறிவால் நோக்கி, அந்த கண்டமாகிய வுருவங்களில், தனது சிற்றறிவு கரையும்வகையாகப் பார்ப்பானேயாயின், பார்க்கின்ற இவன் தோன்றாது, பார்க்கப்பட்ட அப்பொருளேயாய்த் தோன்றுவன். அங்ஙனம் ஆதுவாதலே ஆதாரயோகமாம். (1) (ஆறுதாரமூர்த்திகளாகப் பாவித்த அவ்வடிவங்கள் தடத்தவடிவங்களாதலால் அவ்வடிவங்களில் சொரூபவடிவத்தைக் காண்பதுவே யோகத்தின் பயனும் அச்சொரூபவடிவத்தைப் பார்க்கத் தொடங்கில் அவ்வடிவம் அதிசூக்குமமாதலின் அச்சூக்குமவடிவத்திற்கு) இடமாகக்கொண்டு, தியானிக்கப்பட்டதாகிய தடத்தவடிவங்களை, பரமாணுவினும் நுண்ணியதாகப் பாவிக்கின், பாவிக்கின்ற இவன், அதனினும் நுண்ணியனாகப்போவன், (போகவே) பாவித்த இவனிடத்தும் பாவிக்கப்பட்ட அவ்வுருவத்தினிடத்தும் இதுவென்றறியக்கூடாது நிற்கும் அந்த நுண்ணியவொருபொருள், அந்தத் தடத்தவடிவத்தைப்போலும் பாவிக்கப் பொருந்தாதாகலின் அந்தநுண்ணியபொருள் தானாகவே யிருக்கப் பொருந்தியிருப்பன் (2) என்பதாம்.

'ஆதாரத்த அப்பொருளை' என்றது—ஆறுதாரங்களுக்குச் சொல்லப்பட்ட மூர்த்திகளைனவும், 'ஆக்கிஒருபொருளை' என்றது - அந்தமூர்த்திகளை ஒவ்வொரு ஆதாரங்களுக்கு ஒவ்வொருமூர்த்திகளாகவும், அணு அணுவாகவுங் கற்பித்துக்கொண்டு எனவும், 'நோக்கி' என்றது - அந்தமூர்த்திகளைத் தனது அறிவால்பார்த்து எனவும், 'அணுவில்' என்றது - அணுஅணுவாகக் கற்பித்துக்கொண்ட அம்மூர்த்திவடிவங்களில் எனவும், 'அணு நெகிழப்பார்க்கில்' என்றது - தனதுசிற்றறிவெனப்படும் அணுவானது அதனைப்பார்க்கும் பார்வையில் கரையுந் (தோன்றாத) படி பார்த்தால் எனவும், 'இவனுகை தானொழிந்திட்டு' என்றது - இவனறிவென்று ஒன்று முதலாகத் தோன்றும் அத்தோற்றமொழிந்து எனவும், 'ஏகமாம்' என்றது - இவனால்காணப்பட்ட அப்பொருளோடு ஏகமாய் எனவும், 'ஏகத்து அவனாக' என்றது - ஏகமாய்நின்ற அந்நிலையில் அவ்வுருவாகாரமாகவே நிற்கை எனவும், 'ஆதாரமாம்'என்றது - இந்நிலைதான் ஆதாரயோகமென்று சொல்லப்படுமெனவுங் கொண்டு கூட்டிப் பொருள்கொள்க.

'கொண்டது ஒருபொருளை' என்றது - தியானித்தற்காக அணுவாகக்கொண்ட மூர்த்திகளை எனவும், 'கோடிபடக்கூறுசெயின்' என்றது - ஓர் அணுவாகக்கற்பித்துக்கொண்ட அந்தவடிவத்தைப் பரமாணு அளவாகக் கோடிபங்காகப்படுத்திப் பாவித்தால் எனவும், 'கொண்டவனும் அப்பரிசேகூறுபடும்' என்றது—கோடிபங்காகப்படுத்திய அவ்வுருவங்களில் அங்ஙனம்பாவித்த அவனும் அவ்வணுவினும் நுண்ணியனாய்ப் பிரிக்கப்படுவான் எனவும், 'கொண்ட இருபொருளுமன்றியே' என்றது - காணப்பட்ட அத் தியானப்பொருளும், தியானிக்கின்ற இவனும், இரண்டுமுதலாகத்தோன்றும் தோற்றமேயற்று எனவும், 'இன்னது இதுவென்னா ஒருபொருளேயாய் இருக்கும், என்றது - இது காணப்பட்டது, இதுகாண்பது என்று வேறுபிரித்துத் தியானிக்கும் அச்செயலொழிந்து காணப்பட்ட அவ்வொரு பொருளேயாய் ஆன்மா பொருந்திநிற்பனெனவுங்கொண்டு கூட்டிப் பொருள்கொள்க.

இவ்விரண்டு திருப்பாட்டான் உந்தியுள் 'ஆக்கில் அங்கேயுண்டாய் அல்லது அங்கில்லையாய் பார்க்கில்' என்றதனை - ஆக்கியொருபொருளை ஆதாரத்தப்பொருளை, நோக்கி அணுவில் அணுநெகிழப்பார்க்கில் என்றும், 'பரம்' என்றதனை - இவனுகைத்தானொழிந்திட்டு ஏகமாம், ஏகத்து அவனாகை என்றும், 'பாவனைக்கு எய்தாதது' என்றதனை - கொண்டதொருபொருளை * * * இருபொருளுமன்றி இன்னது இது என்னா, ஒரு பொருளேயாயிக்கும் உற்று என்றும் கூறப்பட்டன. இவ்வுந்தியானும் களிற்றுப்படியாறு ஆதாரயோகமுறை கூறப்பட்டன. (௬)

௪௦. அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
தூய்ய பொருள்ஈ தென்றுந் துந்தீபற.

(எ - து.) உ - ர் என் சொல்லியவாறேவெனின்,— ஆதாரயோகத்தா லுண்டாகும் பயன் கூறிற்று.

(இ - ள்.) (முன்னர்) பஞ்சாக்கரமே ஐந்தக்கரத்தின் பொருளாயுள்ள சிவசக்திகளாக வுணர்ந்து, (பின்னர்) சீவனே சிவமாக, அந்நிலை மறவாது உணர்ந்திருப்பாயாக; இதுதான் சிவமாந்தன்மையாகிய உண்மைப்பொருள் என்க.

அஞ்சே அஞ்சாக உணர்ந்து, அறிவே அறிவாக துஞ்சாது இருந்து, ஈது தூய்ய பொருள் எனக்கூட்டுக.

மேற்கூறிய பாவஞதீதமாகிய சிவமறிவின்கண்ணதாக என்றுணரப்பெற்றதனால் இனி அறிவு சிவமாகும் முறைமை இதுவென்றமையென்க.

அஃதாவது, பஞ்சாக்கரம் - சிவன், அருள், ஆவி, திரோதம், மலம் என்றுமெழுத்து வகையான் ஐம்பொருளாய், பதவகையால் பதி பசு பாசம் என்னு முப்பதங்களாய், பொருள் வகையால் சிவம் சத்தி என்னும் இருபொருளாய், அனுபவ வகையான் சிவம் என்னும் ஒரு பொருளேயாய்,இருக்குமுறைமையை ஆன்மாவாகிய சீவன் ஆசிரியரிடத்து உபதேசக்கிரமத்தா லுணர்ந்து, பின்னர் ஓதுமுறைமையினும், உணருமுறைமையினும், நிற்குமுறைமையினும் தளராது நின்று, சிவனருளால் சிவமாந்தன்மை என்க.

இதுவே முத்திசாதனமாயும் முத்திநிலையாயும் முத்தியனுபவமாயும், அத்வைத நிலையாயும் இருத்தலால் 'தூய்ய பொருள் ஈது' என்றமையென்க.

## திருக்களிற்றுப்படியார்.

௨௫. அஞ்செழுத்தே யம்மை அப்பர்தமைக் காட்டுதலால்
அஞ்செழுத்தை யாருகப் பெற்றறிந்— தஞ்செழுத்தை
யோதப்புக்குள்ள மழியுங் கெடிலுடைகோன்
கேதமற வந்தளிக்குங் கேள்.

(எ - து.) பஞ்சாக்கரமே சத்திசிவங்களைக் காணும்படி அறிவித்தலால், அந்த பஞ்சாக்கரத்தைத் (தாங்கள்) முத்திக்கு மார்க்கமாக உபதேசிக்கப்பெற்று, அதன்பொருளையுணர்ந்து, (பின்னர்) அப்பஞ்சாக்கரத்தை ஓதத் தலைப்பட்டு, யானென்பதும் எனதென்பதும் கெடுமாயின் (அவர்களுக்குப்பிறவித்துன்பம் நீங்குமாறு) பாவதிநாதனாகிய இறைவன்வந்து, தனது திருவருள் ஞானத்தைத் தந்தருளுவன் இதனை நீ கேட்பாயாக என்பதாம்.

எல்லாவுயிர்களிடத்தும் வசிக்கும் சிவத்தையும், பாசத்தில்வசிக்கும் ஆன்மாவை அப்பாசத்தைநசிக்கி அதனினின்றும் வேறாக்கி சிவத்தோடுவசிக்கச்செய்யும் அருளையும் காட்டுவது பஞ்சாக்கரமன்றி வேறெழுத்தில்லை என்பார 'அஞ்செழுத்துமே * அம்மை அப்பர் தமைக்காட்டுதலால்' என்றார். அங்ஙனமான அஞ்செழுத்தின்பொருளை ஆசிரியன் உபதேசிக்கும் உபதேசவழியான் உணர்வார்க்கே உணரவருமன்றி, தாமாகவே உணரவல்லார்க்கு உணரவராதென்பார் 'அஞ்செழுத்தை ஆருகப் பெற்றறிந்து' என்றார். ஆசிரியன் வழியாய் கேட்டல் சிந்தித்தல் தெளிதலைப்பெற்று நிட்டைகூடி அம்மையப்பரோடு ஏகமாய் நிற்கும் அவ்விடத்தும் அஞ்ஞானமும் கன்மமும் பிரவேசித்து

---

* அம்மையப்பர் நடுவிலிருக்கும் செயலற்ற இளங்குழவியைப்போல ஆன்மாக்கள் பரப்பொருள்களாகிய சத்திசிவங்களிடை நிற்கப் பெறுதலால் அம்மையப்பரென்றார்.

உயிர் உணர்வு உளதாய்த் தோன்றுமென்பார் ‘அஞ்செழுத்தை ஓதப்புக்கு உள்ள மதி’ என்றார். அங்ஙனம் உள்ளந் தோன்றுமிடத்து “நாமல்லவிந்திரியம் நம்வழியின் அல்லவழி, நாம் அல்ல நாமும் அரன் உடைமை” அஃதாவது - இந்திரியங்கள் நாம் அல்ல - எனவே வினைகளை அனுபவித்தற்கும், வினைகளைச் சம்பாதிப்பதற்கும் கருவியாகிய இந்திரியங்கள் யாமாவன அல்ல, நம்வழியின் அல்ல - எனவே அவ்விந்திரியங்கள் தொழிற்படுதலும், இறைவன் வயத்தனவன்றி நம்வயத்தனவல்ல, என்று சிந்தித்துச் சிந்தித்து உயிர் உணர்வு தோன்றவண்ணஞ் செப்ப, அவ்வழியே அஞ்ஞானமும் கன்மமும் அழியில் என்பார் ‘கெடில்’ என்றார்.

இந்திரியம் நாமல்ல என்றும், இந்திரியங்கள் நம்வழியின் அல்ல என்றும் உணரப்பெற்ற அவ்வழியே நாமும் அரன் உடைமை என்றுணரவரும் - எனவே இந்திரியங்களோடு கலந்துநின்ற நமது ஞானச்செய்திகளும், இறைவன் விளக்கிய வழி விளங்கி அவன் விளக்காதவழி விளங்குமா றின்மையான் நாமும் அவ்விறைவன் வயத்தாராவமே யல்லது சுதந்தரராவேமல்லேம் என்றறியவரும். என்றிங்ஙனம் பசுபாசங்களது இயல்பை உள்ளவாறு உணர்ந்து, நாம் செய்வனவெல்லாம் அவனருளின்வழி நின்று செய்யும் செயலாகக் கண்டுகொண்டு அங்ஙனங் கண்டுகொண்ட அதனால் நாமும் இவ் வடிமைத்திறமுடையேமென்று அடிமையில் நிற்பவே - சாரந்தாரைக் காத்தல் தலைவர் கடன் ஆதலால், அடிமைத்திறத்தில் நிற்கும் அவ்வாரைத் தன்னைப்போல் ஆகாமியவினை இலாகச்செய்து காப்பனென்பார் ‘உமைகோன் கேதமற வந்தளிக்கும்’ என்றார். இப்போது நாம் சொல்லிவந்ததை உண்மை என நம்புவாய் என்பார் ‘கேள்’ என்றார்.

இத்திருப்பாட்டான் உந்திபள் ‘அஞ்சேயஞ்சாத அறிவே அறிவாகத், துஞ்சாது உணர்ந்திருந்து’ என்று கூறப்பட்டதனை - அஞ்செழுத்துமே அம்மை அப்பர்தமைக் காட்டுதலால், அஞ்செழுத்தை ஆருகப்பெற்றறிந்து, அஞ்செழுத்தை ஓதப்புக்கு உள்ள மதியுங் கெடில் என்றும், ‘துப்பபொருள் ஈது, என்றதனை - கேதமற வந்தளிக்கும் என்றும் கூறப்பட்டன.

எனவே, அஞ்சு ஐந்து இந்திரியங்களாதம், அஞ்சேயாக - பஞ்சாக்கரப்பொருளாகிய இறைவன் வயத்தனவாட உடைமைப்பொருளாயிருப்பனவேயாக, அறிவு - அறிவுடைய ஆன்மா, அறிவேயாக - அறிவாகிய சிவத்துக்கு அடிமையாகவே நிற்க, துஞ்சாது உணர்ந்து - உடைமை அடிமை என்னும் இவ்விரண்டுபொருளையும் ஆசிரியர் முகமாய் அஞ்ஞானவசப்படாது உணர்ந்து, இருந்து - உணர்ந்தவழியே அடிமைத்திறத்தில் நிலைபெற்றிருந்து (இறைவனைச் சாராது ஏகனாகவே, இறைவன் தன்னைப்போலாக்குவன்) ஈது துப்பபொருள் - இவன் இறைவனோடு ஏகனாதலும், இறைவன் ஏகனை அவனைத் தன்னைப்போலாக்கலுமான இதுவே நல்ல சித்தாந்தப் பொருள்என்க.

கக. தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரன்
நோக்கில் குழையுமென் றுந்தீபற
நோக்காமல் நோக்கவென் றுந்தீபற.

(எ - து) உ - ர் என்சொல்லிய வாறோவெனின், நிராதாரயோகத்தைக்கூறிற்று.

(இ - ள்.) முன் ஆதாரமூர்த்திகளாகவே பொருந்தியிருந்து, பின் அவ்வாதார மூர்த்திகளாகாது மூர்த்திகளைப்பாவித்த அவ்வறிவாய் நின்ற அச் சிவசொரூபத்தைப் பார்க்கத் தொடங்கில் பார்க்கவாராது (ஆகலின்) பாராமல் பார்ப்பாயாக என்க.

‘தாக்கியே’ - முன் ஆதார யோகத்தின்கண் ஆறுதாரங்களில் பாவிக்கப்பட்ட அப் பாவனாமூர்த்திகளாகவே பொருந்தி. ‘தாக்காது நின்றதோர் தற்பரன்’-பின் பாவித்த

* உயிர் உணர்வு என்றது - உள்ளமதி என்க. இதனைச் சிவஞானபோதம் (க ) ஆம் சூ - ம் “நான் அவன் என்று எண்ணினர்க்கு நாடும் உளம் உண்டாதல்” என்றதற்குக் கூறும் உரையாற்காண்க.

அவ்வறிவின்கண் பார்க்குமிடத்து அப் பாவனாமூர்த்திகளாகப் பொருந்தாது அவ்வறிவாகவே நின்ற பரசிவனை. 'நோக்கில் குழையும்' - தன்னறிவுக்கு வேறாகப் பார்க்கத் தொடங்கில் வேறாகக் காணப்படாது. 'நோக்காது நோக்க' - உடனாயிருந்து பார்ப்பாயாக என்க.

'தற்பரன்' - தன்னறிவின்கண் அறிவாய்விளங்கும் தத்பதப்பொருளாகிய அப்பரசிவம். அச்சிவத்துக்குத் தடத்தம், உண்மை என வடிவம் இரண்டு. அவற்றுள் தடத்தம்-ஆறாதாரங்களில் தன்னறிவினாற் கற்பிக்கப்பட்ட வடிவங்களிற்காணப்படும் மூர்த்திபேதங்கள். உண்மை-மூர்த்திபேதங்களிற் சென்ற அறிவின்கண் காணப்படும் பேரறிவின் சொரூபம் ஆகவே பாவித்தால் தோன்றுதலும், பாவனைவிடில் தோன்றாமற்போதலுமாகிய தடத்தடிவங்களைப் பாவித்தலாகிய ஆதாரயோகத்தை முன்னே சொல்லி முடித்து இப்போது தன்னறிவிற்கண்ட அறிவைத் தன்னறிவினாற் பாராது காணப்பட்ட அவ்வறிவே கண்ணாக உடனாயிருந்து பார்த்தலாகிய நிராதார யோகமுறையைக் கூறிற்றென்க.

தடத்தம் பாவித்தால் தடத்த முபவேது; அது தூலம். உண்மை - அறிவின்கண் பாவிக்காமலே நீக்கமற நிற்பது; அது சூக்குமம்.

திருக்களிற்றுப்படியார்.

உசு. ஆக்கப் படாத பொருளாய் அனைத்தினிலும்
தாக்கித்தான் ஒன்றோடும் தாக்காதே - நீக்கியுட
னிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம்.

(எ - து.) (ஆதாரயோகத்தின்கண் தான்கற்பிக்கப்பட்ட) மூர்த்திபேதங்கள் அனைத்தினும் பொருந்திநின்று, (அந்த ஆதாரயோகமுடிவில்) தன்னாற்கற்பிக்கப்படாத பேரறிவாய், (தன்னறிவின்கண் தோன்றினமையால்) பின்னர் ஆதாரமூர்த்திகளில் கலந்துநின்ற தன்னறிவை, அம்மூர்த்திகளொன்றோடும் பொருந்தாவண்ணம் அவைகளினின்று நீக்கி, தன்னறிவின்கண் வேறாகாது, உடனாய்த்தோன்றி நிற்கும்பேரறிவாகிய அப்பொருளுடனே (மாணவகனே!) நீவேறாகாது உடனாய்நிற்கும் (அறிவாய்) நிற்கையே, நிராதாரயோகமென்று சொல்லப்படும் என்பதாம்.

அனைத்தினிலும் தாக்கி, ஆக்கப்படாதபொருளாய், தான் ஒன்றோடுந்தாக்காதே நீக்கி, உடன்நிற்கும்பொருளுடனே, உடனாய் நிற்கும்பொருளாய் நிற்கை, நிராதாரமாம் எனக்கொண்டு கூட்டுக.

அனைத்தினிலும் என்றது - கற்பிக்கப்பட்ட ஆறாதாரமூர்த்திகள், ஆக்கப்படாத பொருள் என்றது - கற்பிக்கப்படாதபேரறிவு.

இத்திருப்பாட்டான், உந்தியில் 'தாக்கியே' என்றதை - அனைத்தினிலும் தாக்கி என்றும், 'தாக்காதுநின்றதோர் தற்பரன்' என்றதை ஆக்கப்படாதபொருளாய் என்றும், நோக்கில் குழையும், என்றதை-தான் ஒன்றோடும் தாக்காதே நீக்கிஎன்றும், 'நோக்காது நோக்க' என்றதை - உடன்நிற்கும் பொருளுடனே நிற்கும்பொருளுடனாய் நிற்கைஎன்றும்கூறி, இது நிராதாரயோகமென்று கூறப்பட்டன. (கக)

கஉ. மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற.

எ - து. உ-ர் என்சொல்லியவாறோ எனின், ஆதாரத்திலிருந்து நிராதாரத்துக்குக் கொண்டுவந்த ஆசிரியரைப் புகழ்ந்து கூறிற்று.

(இ - ள்.) ஆதாரத்தானங்களில் அவ்வம்மூர்த்திகளாக இருந்தவரை, மூலையில்லாத அறிவினிடத்தே பார்க்கவிட்ட ஆசிரியரே மிகப்பெரியராவர்; அவரேதபசிகளில் தலைவரெனப்படுவரென்க.

'மூலை'-தூலதேகத்தின்கண் ஆறுதாரங்களாகக் காணப்படும் ஒவ்வொருமூலைகள். 'இருந்தாரை'-அந்த ஆறுதாரமூர்த்திகளாக இருந்தபரசிவத்தை, 'முற்றத்தேவிட்டவர்' - தட்டில்லாதவெளியிடமாகிய அறிவினிடத்தில் அறிவு சொரூபமாய்விளங்கும் சிவத்தைக் காணும்படிவிட்ட ஆசிரியர். 'சாலப்பெரியர்' - இவர்ஞானசாரியராதலால் யாவரினும் பெரியோர். 'தவத்திற் றலைவர்' - சொரூபஞானவிசாரமுடையார்க்கு நாயகராயுள்ளவர்.

ஆறுதாரங்களை மூலையென்றது - தேகத்தின்கண் தனித்தனி எல்லைகளையுடைத் தானதாயும் ஒன்று மற்றொன்றுகாமையானுமென்க. அறிவை முற்றம் என்றது-ஆதார நிலைகள்போல் ஓரிடத்தைத் தனக்கிடமாகக்கொள்ளாமல் ஆறுதாரத்தையும் இடமாகக் கொண்டு அதனையுங்கடந்து வெளியாயிருத்தலாலென்க. ஆசிரியரைச் சாலப்பெரிய ரென்றது-சொரூபசிவத்தைத் தன்னறிவின்கண் காட்டவல்ல பேராற்றலையுடையரா யிருத்தலால் என்க. தவத்திற்றலைவரென்றது-சொரூபசிவத்தை இத்தன்மையதென்று காட்டியதேயல்லாமல் அதற்கிடமெனப்படும் அருளாகிய மீதானத்தின் கண் நிலைபெறு வித்தலா லென்க.

## திருக்களிற்றுப்படியார்.

௨௭. காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்—காண்கின்றா
காண்பானுங் காணப்படும் பொருளும் அன்றியே
காண்கையினாற் கண்டனரே காண். (1)

(எ - து.) ஆறுதார மூர்த்திகளாகக் காண்கின்ற கண்ணுதலாகும ஒருபொருளை, (ஆதாரமூர்த்திகளாகக் காணப்படும்) காட்சியற்று, நிராகாரமாகிய பேரறிவாய்க் காண்கின்ற சிவயோகிகளே, காண்கின்றவாகளாவா. (எவ்வாறு) காண்கின்றாரென்னில், காண்பானாகிய தானும், காணப்படும்பொருளாகிய பேரறிவும் வேறல்லாமல் உடனாய்க் காண்கின்றமையினால், (அவர்கள்தான்) கண்ணுதலைக்கண்டவர்கள், இதனை அறிவா யாக என்பதாம்.

காண்கின்ற (கண்ணுதலாகிய) ஓர்பொருளை, காட்சியறக்காண்கின்ற யோகிகளே கண்ணுற காண்கின்றார். (எங்ஙனம் காண்கின்றா என்னில்) காண்பானும் காணப் படும் பொருளும் அன்றியே, காண்கையினால், கண்டனரே காண் எனக்கொண்டுகூட்டுக.

௨௮. பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான்—பேசாதே
எண்ணொன்றும் வண்ணம் இருக்கின்ற யோகிகள்பால்
உண்ணின்றும் போகான் உளன். (2)

(எ - து.) பேசாமையைச் செய்யவல்ல பேரறிவைப்பெற்று, அதனிடத்தில் பேசா மையாகிய உடனாந்தன்மையைப்பெற்றவரை, (பேரறிவாளனாகிய அவ்விறைவன் உடனா யிருக்குந்தன்மையைப்பெற்ற அவரை) தன்னின்வேறாகாது தன்னுடனாகவே நிற்கச் செய்யவல்ல பெருந்தன்மையாளன், (அப்பெருந் தன்மையாளன்செய்த அந்நிலையில்) நான் என்றும் அவன் என்றும் எண்ணும் சுட்டறிவொழிந்து, அவ்வறிவு பேரறிவோடு பொருந்தியிருக்கும் வண்ணம் செயலற்றிருக்கின்ற சிவயோகிகளிடத்தில், அவருடைய உள்ளத்தில் "கலந்தபின் பிறிவதில்லை" என்றவேதமொழிப்படி, ஒருபொழுதும் வேறா கப்பிரிந்திரான், உடனாகவேயிருப்பன் என்பதாம்.

இவ்விரண்டு திருப்பாட்டனுள் முதற்பாட்டால் 'உந்தியில்' மூலையிருந்தாரை என் றதனை-காண்கின்றதோர் பொருளையென்றும், எனவே - ஆறுதாரங்களாகிய மூலைகளில் இருந்த ஒவ்வொரு மூர்த்திகளை என்றும், 'முற்றத்தேவிட்டவர்' என்றதனை - காண்பா னும் காணப்படும்பொருளும் அன்றியே காண்கைஎன்றும், எனவே-நாம்காணும்பொரு ளென்றும், அது காணப்பட்டபொருள் என்றும் காண்டலாகிய அத்தன்மையன்றி அது வாகவே காணலாகிய நிராதாரமாகிய வெளியிடத்திலே இருக்கச்செய்தவர் என்றும்,

'சாலப்பெரியர்' என்றதனை கண்ணுதல் என்றும், எனவே-ஏனையதேவரெல்லாம் ஊனக் கண்ணால் காணத்தக்கவர், கண்ணுதலாகிய சிவனொருவனே நிராதாரயோகத்தில் காணத் தக்கவர், அவரை அங்ஙனம் அந்த நிராதாரயோகத்தில் காணச்செய்ததனால் அப்பெரி யோர் என்றும், இரண்டாம் பாட்டால்-'தவத்தில் தலைவர்' என்றதனை-(சாலப்பெரியோ ராகிய அவர்) பேசாமைபெற்று, பேசாமைகண்டு அதனிற் பேசாமைசெய்தனராகலின் பெரும்பெருமான் என்றுங் கூறினார்.

முற்றத்தேவிட்டவர் என்றதனால் யாவரை எனவும், எவ்வாறு கண்டனரெனவும், கண்ட அவரிடம் இறைவன் எவ்வாறிருப்பனெனவும் வினாவிநிற்றலின், அவ்வவாய் நிலைபற்றி 'காண்கின்ற யோகிகள்' என்னும், 'காட்சியராய் காண்கின்றாராய்க்கண்டனர்' என்றும், 'பேசாதே எண்ணொன்றுங் கண்ணாய் இருக்கின்ற யோகிகள்பால் உண்ணின் றும் போகான் உளன்' என்றும் விரித்து கூறினார்.

உந்தியில் சாலப்பெரியோர் என்றதனை முதற்பாட்டானும், தவத்திற்றலைவர் என் றதனை இரண்டாம்பாட்டானும் பிரகாசப்படுத்தியவாறுமெனக். (௯௨)

௧௩. ஒட்டற்று நின்ற வுணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடஞ்சிவம உந்தீபற
தேடும் இடமதன் றுந்தீபற.

(இ-ள்) உட்ட என்சொல்லிய வதென்மெனின், சிவத்துக்கு மீதானமாகிய இடம் ஆன்மா என்று சொல்லிற்று.

((ஒ-ள்.) ஆறாதாரங்களிற் செலலுதலொழிந்துநின்ற அறிவே, இடமெனப் பொருந்தி, பின்தேடுதலொழிந்தவிடமே சிவத்துக்கிடமென (நிற்பதாக). அது தேடு மிடமாகாது என்க.

'ஒட்டற்று'-மூர்த்தித்தியானஞ் செய்யத்தொடங்கிய அறிவானது, ஆறாதாரங் களினுஞ் சென்று சென்று கற் 'றமூர்த்திகளைக் கண்டு தேடன்றி, கற்பனைகடந்தசோதி யைக்காணுதொழிந்தமையான், அவ்வாதாரங்களிற் செல்லுதலைவிட்டு,'நின்றஉணர்வுபதி முட்டி'-மூர்த்திதியானமாத்திரமாய் நின்ற அறிவு, அத தியான முதிர்ச்சியின் விசே டத்தால் தியானஞ்செய்துவந்தமேற்றிவாகிய சிவமூர்த்திக்கு இடமாம் என்றுணர்ந்து, அவ்விடத்தைப் பற்றிமுட்டியிருப்பதாக (அவ்விடத்தைவிட்டுப் போதலொழிக. ஏனெ னில், அவ்விடம்) "இடஞ்சிவம்" சிவத்துக்கிடம், (ஆகலான்) தேட்டற்று-முன் போல் இது இது என்று தேடுதலொழிக (ஏனெனில்) தேடும் இடமது அன்று' அவ் விடம் நீதேடும் இடம் அல்ல என்க. எனவே உன்னறிவே எங்கும் வசித்திருக்கும் இயல்பினையுடையது என்னும் பொருளைதரும சிவத்துக்கிடமாயிருத்தலால் நீ தேடு மிடம் வேறில்லையென்க. இவ்விடந்தான் ஆதாரநிராதாரங்களைக் கடந்தமீதானமென்று சொல்லப்படும்.

ஆதாரம்-மூர்த்திகளை ஆறாதாரங்களிடமாகப் பாவிக்கும் மூர்த்திபாவனை. நிராதா ரம்-அவ்விடங்களைவிட்டுச் செய்யும்மூர்த்திபாவனை. மீதானம் மூர்த்திகளைத் தியானித்த அறிவாகிய இடம்.

## திருக்களிற்றுப்படியார்.

௨௩. ஒட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற்று நின்ற இடஞ்சிவமாம் - நாட்டுற்று
நாடும் பொருளனைத்தும் காணு விதமாகத்
தேடுமிட மன்று சிவம்.

(எ - து.) (உன்னையே இடமாகக்கொண்டிருக்கின்ற சிவனது இயல்பினுள்) யாதானும் ஒன்றைக்கருதி அதனை அறியவேண்டுமென்று எண்ணும் எண்ணத்தை எண்ணுதொழிக, (எண்ணுதலொழியவே) இனி ஒருசேட்டையுமற்று அச்சிவசொரூபத்தில் அழுந்திக்கிடப்போமென்றெண்ணிச் செயலற்று அழுந்திக்கிடத்தலும் ஒழிக. எண்ணுவதுமற்று அழுந்துவதுமற்று இருப்பதுதான் சிவானந்தமென்றெண்ணி, அந்த ஆனந்தத்தில் இருத்தலுமொழிக. இதுவும் ஒழியவேண்டுமென்றால், செய்யத்தகுவது யாதெனின், உணரவேண்டும், உறங்கவேண்டும் உன்னிப்புணரவேண்டும் என்று எண்ணுவதுமற்று, எண்ணுதிருப்பதுமற்று, நீ-காலங்கள் செல்லாத உணர்வரிய காலத்தையுடைய காலாதீதனோடு கலந்து, பொதுவாயிருப்பையே யானால், இறைவன் உணருங்காலம், உறங்குங்காலம், புணருங்காலம் என்னு மூன்று காலமும் நீ காணும்படிச் செய்வான். அதனைக் கண்டிருப்பாயாக. எனவே, ஏகாந்தத்தானத்தில் நாயகன் வசப்பட்டுக்கிடக்கும் கற்புடைநாயகி, இல்லறத்துக்குரிய அறங்களை எண்ணுவளோ, எண்ணுஞ் செயலற்றபடியினால் அங்கு உறங்குவளோ, அன்றித் தானே நாயகனின்பத்தை அநுபவிக்க முயல்வளோ, இவையெல்லாம் விட்டு அவனையே நோக்கிநிற்பள் அதுபோலென்க என்பதாம்.

காலங்கள் செல்லாத காலத்துடன், காலங்கள் மூன்றினையுங்கண்டு இருத்தி எனக் கூட்டுக.

இத்திருப்பாட்டான், உந்தியில் - 'கிடந்த கிழவியைக் கிள்ளியெழுப்பி, உடந்தையுடனே நின்று, உன்னையே கண்ட'தாகிய முறைமையைக் கூறப்பட்டது.

எங்ஙனமெனின், ஆணவத்தில் அழுந்திக் கிடந்தவுனக்கு உணர்ச்சியுண்டாம் வண்ணம் கிள்ளியெழுப்பி, உன்னுடனுடன்நின்று, இப்பொழுது உன்னையே இடமாகக் கொண்டுநின்றதாகிய இச்செயல் நீவேண்டிச்செய்ததோ! நீ யாதொன்றும் அறியாது அந்தகாரத்திற்கிடக்க, உன்னை அவ்வந்தகாரத்தினின்றும் எடுத்து உனது ஞானக்கிரியைகளைப் பிரகாசப்படுத்தி, சுயம்பிரகாசமாயிருக்கின்ற தனக்கு இடமாக்கிக்கொண்டனனன்றோ! இது அவன்கருணையன்றோ!

ஆகலான், இனி உனக்குத் தனதுகுணவிசேடங்களைத் தெரிவித்துப் பின் உன்னைத் தன்னோடு உறங்கச்செய்து புணரவேண்டியது, அவனது கடமையாகவே இருக்க, நீ எண்ணுவது எற்றுக்கு? எண்ணவேண்டுவது யாதெனில், நீ என்னை யாதுசெய்யினும் செய்க, நான் உனக்கு இடமாயினதொன்றே சாலும் (போதும்) என்னும் அந்நிலையில் நிற்பதேயாம். 'பொதுவே நிற்கில்' என்றதும் அது.

நான்பொதுவில் நிற்கப்பெற்றதனால், உணர்தல், உறங்கல், புணர்தல் என்னும் அந்தமூன்றினையும் நீ செய்வையாயின் அதனை நான் மறப்பதும் அறியேன். நீ செய்யாதொழியின் நான்உன்னைவிட்டுப்போவதும் அறியேன் என்பதாம். (கஎ)

கஅ. பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை யறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராதென் றுந்தீபற

(எ - து.) உ - ர்.—என்சொல்லியவாறோவெனின், தன்னறிவின் கண்ணே சிவனைக் காணப்பெற்றும் தான் சிவனுக்கிடமென்றறியவந்தும் நான் என்னும் போதம் ஒழியாது, உணரவேண்டும், உறங்கவேண்டும், புணரவேண்டும் என்று முனைப்பதால் அங்ஙனம் முனைத்தெழுவதாகிய போதப்பற்று ஒழிவதற்கு "நீபொதுவேநில்" என்று கூறினும் அதுபோல் நிற்றல் அரிதாகலின் அதற்கோருபாயம் சொல்லிற்று.

(இ - ள்.) தன்னைவிடாது பற்றியிருக்கும் நானென்னும் பற்றை, அறுக்கவல்ல திருவருளாகிய ஓர்பற்றினைப் பற்றினால், அந்த நான் என்னும்பற்றை அறுத்துவிடுவர். அந்த நான்என்னும் பற்றைத் திருவருளால் அறுத்துவிடாமல் சிவத்தைப் பாவிப்பாராயின் அச்சிவம் இவன் பரமாகவாராதென்க.

இதனால் மருட்போதமாகிய தற்போதத்தைப் போக்கவேண்டின், சிவபோதமாகிய அருட்போதத்தைப் பற்றவேண்டுமென்று கூறியதாகும்.

'பற்றையறுப்பதோர் பற்றினை'- * மலமாயாகன்மப்பற்றுக்களை அறவேயொழிக்கவல்ல சிவனது ஞானசத்தியை. 'பற்றில்' - தனதுஞானசத்தியினால் பற்றிக்கொண்டால், அப்பற்றை அறுப்பர்-மேற்கூறிய மலகன்மப்பற்றுக்களை யொழிக்கவல்லவராவர். 'பாவிக்கவாராது' - அச்சிவஞானசத்தி - தனதுஞானசத்தியினால் வாராதுஎன்க.

## திருக்களிற்றுப்படியார்.

௬௬. பற்றினுள் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து
பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற—பற்றதனைப்
பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்
மற்றம்இது சொன்னேன் மதி.

(எ - று.) ("காலங்கள் மூன்றினையுங்கண்டு இரு" என்று சொன்னதேயல்லாமல்) மற்றொன்று கூறுகின்றேன், பற்றுக்களினுள்ளே உட்பற்றாயிருக்கின்ற நான்என்னும் பற்றை, பரிந்து தன்னுடனிருந்து துடைக்கும் வகையைப்பார்க்கின்ற ஓர்பற்றை அறிந்துபற்றி, நான் என்பதனைப்பற்றும் பற்றினைவிட்டால் அந்நிலையிலேயே சிவம் தானே உன்பரமாய்விடும். இதுதான் முடிந்தவுண்மை. இதனை உனக்குச் சொன்னேன் சிந்தித்து அறிவாயாக என்பதாம்.

மற்றும், பற்றினுள் பற்றை, பரிந்திருந்து துடைப்பப் பார்க்கின்றதொரு பற்று, அறிந்து பற்றி, பற்றதனைப் பற்றுவிடில், அந்நிலையேதானே, பரமாகும், இதுசொன்னேன் மதி எனக்கூட்டுக

பற்றினுட்பற்றாவது - நானென்னும் அகங்காரம். துடைப்பதொரு பற்றாவது - திருவருள். பரிந்திருந்து துடைப்பப் பார்க்கின்றதாவது,— அத்திருவருளானது, அறிவாகிய ஆன்மா அகங்காரத்தினின்று நீங்கி, சுத்தனாய் சிவமயமாக வேண்டுமென்று அனுதிதொட்டு, மிக்க அன்போடு நீங்காதிருந்து, பரிபாகம்வரும் வகையைப்பார்த்து, மலத்தைப்போக்கிக் கொண்டுவருதல். அறிந்துபற்றி - இவ்வாறுதனக்குத் தெரியாமலே அனுதிமுதல் செய்துவருவதாகிய உபகாரத்தை நன்றாயறிந்து அத்திருவருளை விடாதுபற்றி. பற்றதனைப்பற்றுவிடில் - அவ்வருளால் நான் என்பதனைப்பற்றும் பற்றும், அந்த அகங்காரத்தையேவிடாது பற்றிவரும் அனுதிபழக்க வாசனையும் விட்டால். அந்நிலையே - பற்றும் வாசனையோடு தற்போதம் போகப்பெற்ற அவ்வரியநிலையே. தானே பரமாகும் - தற்போதம்போதற்கு பழக்கவாசனையைப் போக்கமுயல்வதுபோல், சிவன் தன்பரமாதற்கு வேறுமுயற்சி செய்யவேண்டுவதில்லை. அச்சிவனும் முயலவேண்டுவதில்லை. தற்போதமபோனநிலையே சிவனதுநிலையாம். மலர்மிசையேகினான் என்றதுபோல.

இத்திருப்பாட்டான், உந்தியாரில்-'பற்றை' என்றதை - பற்றினுள் பற்றை என்றும், 'அறுப்பதோர்பற்றினை' என்றதை பரிந்திருந்து பார்த்துத் துடைக்கின்றதொரு பற்றென்றும், 'பற்றில்' என்றதை - அறிந்து பற்றில் என்றும், 'அப்பற்றையறுப்பர்'

* மலமாயாகன்மப் பற்றாவது - தனுகரணபுவன போகங்களால் உண்டாகும் பற்றுக்கள். அறுப்பதோர்பற்றாவது - ஆணவத்திற்கிடந்த ஆன்மசத்தியைக் கிள்ளியெழுப்பியதும், பின்னர் தனுகரணதிகளோடு கூட்டியதும், ஆகிய சிவசத்தியாகிய திரோதானசத்தி. (அப்பற்றினைப்) பற்றில் - அத்திரோதானசத்தி, கருணையுருவாய் அப்பற்றுக்களை ஒழிக்கத்தொடங்கினாலன்றி அவைநீங்கா; ஆகலான் அவ்வருட்சத்தியைத் துணையாகக்கொண்டால். அப்பற்றையறுப்பர் - தனுவாதிகளாகிய பற்றுக்களைப்பற்றி நானென்று வெளிவருவதாகிய அகங்கார மமகாரப்பற்றுக்களை யொழிக்கவல்லவராவர். பாவிக்கவாராது - அவ்வருட்சத்தி, அச்சத்தியுடையானால் வருவதல்லது தனதுமுயற்சியினால் வருவதன்று எனஅறிக.

என்றதை பற்றதனைப் பற்றுவிடில் என்றும், 'பாவிக்கவராது' என்றதை அந்நிலையே தானே பரமாகும் என்றுங் கூறப்பட்டன.

மற்றும் இதுசொன்னேன் மதி என்றது - இந்நூலாசிரியர் கூற்று. (கடு)

கசு. உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்றேடும்
தழுவாமல் நிற்பரென் றுந்தீபற
தாழ்மணி நாவேபோல் உந்தீபற.

(எ - து) உ-ர்.—என்சொல்லியவாறேவெனின், தற்போதத்தைவிட்டுச் சிவயோகிகள் நிற்கும்நிலையைச் சொல்லிற்று.

(இ - ள்.) (தற்போதமானது, அலைக்குந் தன்மையுடைத்தாகலின் அதன்வசப் பட்டு) அலையாமல் (அதனைவிட்டு,சிவத்தை) அறிகின்றவர்களாகிய யோகிகள், தற்போதந் தோன்றுதற்கிடமாகிய ஒருசெயலோடுஞ் சாராது பாவனாதீத நிலையில் நிற்பார்கள். எதுபோலெனின், பூமியில் வைத்துள்ள மணியைப்போல் என்க.

ஆதார நிராதார யோகங்களில் உழலும் செயலற்று, மீதானத்தையுணரும் நிலையினரென்பார் உழுவாதுணர்கின்ற யோகிகள் என்றார். பெத்தநிலையின் கண்ணேயன்றி முத்திநெறியாகிய ஞானநிலையின்கண்ணும் நான் உள்ளேனென்று முனைத்துவரும் ஆற்றலுடையது தற்போதமாகலின் அப்போதந் தோன்றும்செயல்களை அலைவென்று ஒழிப்பரென்பார் ஒன்றேடுந் தழுவாமல்நிற்பார் என்றார்.

அங்ஙனம்நிற்குநிலை - பூமிஆதாரவற்று அந்தரத்தில்நிற்கும் மணி அசைக்க அசையுமேயன்றி, பூமிஆதாரத்தில் நிற்கப்பெற்றமணி அசைக்கவாராததுபோல் என்பார்-தாழ்மணிநாவேபோல் என்றார்.

இதனால் சிவத்துக்கிடம், தன்னறிவென்று கண்டபின்னர், அவ்விடத்திற்றனே அச்சிவத்தைக்கண்டு அசைவற இருப்பர், மீண்டும் மற்றொரு இடத்தைக் காணார், அறிவாற்றேடும் அசைவினை யறியார் என்று கூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

௬௨. அறிவறிவாய் நிற்கில் அறிவு பலவாமென்று
அறிவில் அறிவவிழ்த்துக் கொண்டங்—கறிவினராய்
வாழ்ந்திருப்பர் நீத்தவர்கள் மானுடரின் மாணவக
தாழ்ந்தமணி நாவே போற்றன்.

(எ - து.) மானுடர்களிற்சிறந்த மாணவகனே! (ஆதார நிராதாரயோகங்களை நீத்துவந்த சிவயோகிகள் மீதானத்தில் எப்படியிருப்பரெனின்,) சிவத்தைநோக்கத் தலைப்பட்ட தமது அறிவானது, தற்போத அறிவின்வசப்பட்டுநிற்குமானால், அவ்வறிவு பலவழிப்பட்டுப்போம் என்றுணர்ந்து அதன்தன்மையை சிவசொரூபத்தில் ஒற்றுமைப்படுத்தும் சிவஞானமாகிய அறிவைப்பற்றி, அவ்வறிவினால் தன்னைப்பிணித்திருக்கும் தற்போதக்கட்டை அவிழ்த்துக்கொண்டு அருட்போதமுடையராய், யாதொரு செயலுமற்று, சும்மாயிருப்பர். (எதுபோலெனின்) பூமியில் வைத்திருக்கப்பெற்ற மணியினது நாவானது அசைவதற்கின்றி வைத்தவண்ணம்போல் எப்படியிருக்குமோ அப்படிப்போலாம் என்பதாம்.

மானுடரின் மாணவக, அறிவு அறிவாய்நிற்கில் எனக்கூட்டுக.

'அறிவறிவாய் 'என்றதில், முன்னையது ஆன்ம அறிவு. பின்னையது தற்போத அறிவு. 'அறிவுபலவாம்' என்றதும், 'அறிவு அவிழ்த்து' என்றதும் ஆன்மஅறிவே. 'அறிவில்' என்றது சிவஞானம். 'அறிவினர்' 'நீத்தவர்கள்' என்றது சிவயோகிகள். 'தாழ்ந்த மணி நாவேபோல்' என்றது அசையத்தக்கநாவிருந்தும், நாவானது தாக்கற்குரிய மணியிருந்தும், எடுத்துஅசைவிப்போன் அசைக்கா தொழிந்ததனால் நாவும்அசைவற்று, மணியும் அசைவற்றிருந்தது போலென்க.

இத்திருப்பாசுரத்தான், உந்தியாரில் 'உழவா துணர்கின்ற' என்றதை - அறிவு அறிவாய்நிற்கில் அறிவுபலவாமென்று அறிவில் என்றும், 'ஒன்றேயும் தழுவாமல் நிற்பர் யோகிகள்' என்றதை - அறிவு அவிழ்த்துக்கொண்டு அங்கு அறிவினராய் வாழ்ந் திருப்பர் நீத்தவர்கள் என்றுங் கூறப்பட்டன. தாழ்மணிநாவேபோல்" என்னும் உவமை ஈண்டும் வந்திருக்கின்றமை காண்க.

இதனால், தற்போதவழியில் நின்றால் அது உழல்வதற்கிடமாயுள்ள தேகேந்திரி யாதி விடயங்களில் கொண்டுபோய் உழலச்செய்யும். அங்ஙனம் செய்யுமாயின் ஆதார நிராதார யோகங்களிற் கூடுவதெங்கே மீதானநிலையில் நிற்பதெங்கே ஒன்றும் இல்லை யாய்ப்போம். ஆகலின்,ஒன்றேயுந்தழுவாமல் நிற்குநிலையைவலியுறுத்தியதென்க. (௬௬)

௬௭. திருச் சிலம்போசை யொலிவழியே சென்று
நிருத்தனைக் கும்பிடென் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற.

(எ - து.) உ-ர்.—ஏன்சொலலிய வாறேவெனின், தற்போதச்செயலுக்கு அருட் போதப்பற்றால் உண்டாகும் அதிசயத்தைச் சொல்லிற்று.

(இ - ள்.) (அருட்போதத்தால் கருவிகரணங்களுடைய ஓசையைவிளைவிக்கும் தற் போதமானது, தாழ்மணிநாவேபோல் அடங்கிநிற்க, அருட்போதப்பற்றால் கேட்கப் படும் பரவிந்து சொரூபமாகிய) திருச்சிலம்பின்கணின்று ஒலிக்காநின்ற பரநாதவொலி வழியே உன்னறிவைச் செலுத்தி நீயுஞ்செல்வாயாக. சென்று, (அவ்வோசையுண் டாகும் இடம் எதுவோ, அவ்விடம்) எதிர்ப்படும்வண்ணம் அவ்விடத்திலேயே நிலை பெற்றிருப்பாயாக. நிற்பையாயின், (திருச்சிலம்போசையை யுண்டாக்கும் நடராஜன் தெரிசனமாவான். அப்பொழுது நீ) அவனைக் கும்பிடுவாயாக என்க.

திருச்சிலம்போசை யொலிவழியேசென்று, நேர்பட அங்கேநின்று, நிருத்தனைக் கும்பிடு எனக்கொண்டு கூட்டுக

இதனால், நிராதாரயோகமுடிவில் தன்னறிவின்கண் அறிவாய்விளங்கும் சிவ சொரூபத்தைக் காண, அருட்போதவசப்பட்டு அவாவிநிற்கவே, எவரானும் அறிதற்கரி யானும், எவற்றானும் அடைதற்கரியானுமாகிய அருளாளன் கூத்தாடிக்கொண்டு வருவான் என்று கூறிற்றென்க. எனவே, தற்போதமேலிட்டுக் காணவேண்டினார்க்குக் காண அரியான்என்றும் தற்போதமடங்கி அருட்போதமேலிட்டுக் காணவேண்டினார்க் குக்காண எளியான் என்றும் விளக்கியவாறும்.

## திருக்களிற்றுப்படியார்.

௬௬. ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின்
ஓசை வழியேசென் றொத்தொடுங்கில்—ஓசையினில்
அந்தத்தா னத்தான் அரிவையுடன் அம்பலத்தே
வந்தொத்தா னத்தான் மகிழ்ந்து.

(எ - து.) தற்போதத்தினுடைய கருவிகரணச்சேட்டைகளின் ஓசை அனைத்தும், அருட்பற்றால் அடங்குமானால், பரவிந்துவாகிய திருச்சிலம்பி னின்றும் ஒலிக்கும் பர நாதமாகிய ஒலிகேட்கும், அந்தநாதவழியே சென்று, தற்போதத்தின்வழியே துடிக் கும் உனது துடிப்பும் 'அவ்வோசையிற்பொருந்தி ஒடுங்குமேயானல், அந்த நாதாந்தத்தை யிடமாகவுடைய நடராஜன் தனதுஅருட்சத்தியோடு நீ ஒடுங்கிக்கிடக்கும் அந்த சிதா காசத்தில் வந்து ஒடுங்கிக்கிடக்கும் உன்னைக்கண்டுமகிழ்ந்து உன்னைப் பொருந்தின வனாயிருப்பான். (பிரியான்) என்பதாம்.

ஓசையெலாம் அற்றால் திருச்சிலம்பின் ஓசைஒலிக்கும், (அந்த) ஓசைவழியே சென்று (தன்னுடைய ஓசை) ஒத்து ஒடுங்கில் ஓசையினில் அந்தத்தானத்தான், அரிவையுடன் அம்பலத்தேவந்து, அத்தான்மகிழ்ந்து ஒத்தான் என்றுகொண்டுகூட்டுக.

திருச்சிலம்பினோசை ஒலிக்குங்காலம் இதுவென்பார், 'ஓசையெலாமற்றால்' என்றார். அக்காலத்தில் நீ கேட்கும்வகை இவ்வகையாமென்பார், 'ஒலிக்கும்திருச்சிலம் பின் ஓசைவழியே சென்று ஒத்து ஒடுங்கில்' என்றார். அந்தவோசையை விளைவித்து அதில்நின்று நடனஞ்செய்யும் நடராஜனுக்கும் இடம் அதுவேஎன்பார், 'ஓசையினில் அந்தத்தானத்தான்' என்றார். சேட்டையோடுகூடிய வாயுவாதி பூதங்கள் ஒடுங்கும் இடமே ஆகாசமாதல்போல், உனது கரணச்சேட்டையெல்லாம் ஒடுங்கிய அந்தஇடமே சிதாகாசவெளியென்பார், 'அம்பலத்தே' என்றார். அவ்வம்பலத்தின்கண் உன்னை ஆளும் அருட்சத்தியுடன் உன்னை யாள விரைந்து வருவானென்பார், 'அரிவையுடன் வந்து'—என்றார். அங்ஙனம்வந்த இறைவன் நீ அருள்மயமாயிருக்கும் அந்தநிலைமையினால் மகிழ்ந்து, உன்னிலேயே தன்னிலையாகப் பொருந்தியிருப்பனென்பார், 'அத்தான் மகிழ்ந்து ஒத்தான்'—என்றார்.

இத்திருப்பாட்டான், உந்தியாரில் "திருச்சிலம்போசை" என்றதை-ஓசையெலாம் அற்றால் ஒலிக்கும் திருச்சிலம்பின் ஓசையென்றார், 'நேர்பட அங்கேநின்று, ஒலிவழியே சென்று நிருத்தனைக்கும்பிடு' என்றதை - அவ்வோசைவழியேசென்று என்றும், அங்ஙனம் செல்வதேயல்லாமல் "அங்குஒத்து" என அவ்வோசையினில் ஒத்திருத்தலை யும், ஒத்திருக்கும் அந்தத்தானம் உன்னறிவின்கண் கண்ட அறிவாகிய அச்சிவத்துக்கு அம்பலமாகிய இடமென்றுணர்த்த அந்தத்தானத்தான் எனத் தானத்தையும், அது அவ னிருக்கும் அம்பலத்தானமாகவே அவ்விடத்திலேயே ஒடுங்கியிருந்தால் அவனைக்காண லாம் என்பதுதோன்ற ஒடுங்கின் எனக் காணுங்காலத்தையும், ஒடுங்கிநிற்கவே நீபற்றி யிருந்த அருட்சத்தியுடன் 'நேர்பட வருவான்' என்பது தோன்ற அரிவையுடன் வந்து என அவனவருதலையும், வந்து பின்னர் உன்னைக் கண்டுமகிழ்ந்து உன்னைப் பொருந்தி யிருப்பான் என்பது தோன்ற மகிழ்ந்து ஒத்தான் என அவன்வந்து பொருந்தியிருத் தலையும் விளக்கி, இப்படிப் பொருந்தியிருக்கக்கண்டு கும்பிடுங்கும்பிடே நேர்படக் கும்பிடலாகும் எனக் கும்பிடுதற்குரிய முறைமையெல்லாமும் எடுத்துக்காட்டி யுணர்த் தியவாறு காண்க. முற்கூறியுள்ள 'கிடந்தகிழவி' என்னும் உந்தியாரினும், "உணராதே" என்னும் திருக்களிற்றுப்படியினும் இப்பொருள்போந்தவாறுணர்க. (கஎ)

கஅ. மருளும் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவாதே உந்தீபற
அதுவே யிங்குள்ளதென் றுந்தீபற.

(எ - து) உ - ர்.—என்சொல்லியவாறோவெனின் சிவனால் ஆளப்படும் காலத்தும் அருளைமறவாமையைக் கூறிற்று.

(இ - ள்.) இருளும் ஒளியும் அறியாதவனாகிய நடராஜமூர்த்தியின்கண் அருளைமற வாதிருப்பாயாக. ஏனெனில், நடராஜனைக் காணப்பெற்ற அவ்விடத்திலும் இருப்பது அதுவொன்றேயாம் என்க.

இருளையறிகின்ற தன்மையை யுடையவன் ஒளியையறியுந் தன்மையுடையவ னாவான். எப்பொழுதும் ஒளியாயுள்ளவன் எப்பொழுதும் இருளையறிபவே யறியான். தனக்குவேறாக வேறொருவொளியையும் அறியான். இத்தன்மையையுடையவன் இறை வன். இவ்விறைவன் எல்லாம் அறிந்தும் அறியாதவன், எல்லாஞ்செய்தும் செய்யாதவன் என்று பிரமாணங்கள்கூறுகின்றன. அதன்கருத்து யாதெனின், எல்லாம் அறிவதும்,செய் வதும் இறைவனது அருட்சத்தியாம். அவ்விரண்டும் அறியாதவன் அச்சத்தியையுடைய சத்தனாகிய இறைவனும். இவ்வுண்மைதோன்றவே, மருளும் தெருளும் மறக்கும் அவன் இறைவனும், அவ்விரண்டையும் அறிவது அவன் கண்ணுள்ள அருளுமாகலான் அருளை மறவாதே என்றார். அஃதாவது, பெத்தநிலையின்கணிருந்து பெத்தானுபவத்தை யனு பவிக்கச்செய்து அவ்வின்பத்தை யூட்டியதும் அருளே! ஆதாரநிராதாரயோகங்களில் முறையாக நிறுத்திப்பின்னர் மீதானமாகிய உன்னறிவின்கண் கொண்டுவந்து உன்னறி

வின்கண் அறிவாய்விளங்கும் அறிவே சிவனென்றுணர்த்தியதும் அருளே! பின்னர் அவ் விறைவனோடு நீகூடுதற்கு உன்னுடைய போதமாகிய தற்போதத்தை யடக்கியதும் அருளே! தற்போதப்பற்றொழிந்து நீஒடுங்கிநிற்கும் இடத்தில்திருச்சிலம்போசை உனக் குப்புலனாம் (அறியு)மாறு செய்ததும் அருளே! அங்ஙனம் அறியுமாறுசெய்து அந்நிலையில் நீ நிற்கும் வன்மையை உனக்குத்தந்து அவ்விடத்தில் நடராஜனைக் காணும்படிச்செய்து அப்பெருமான் உன்னைப்பிரியாது பொருந்தும்படிச் செய்ததும் அருளே. இம்முறை யான் பெத்தநிலைதொட்டு இந்நிலைபரியந்தம் உபகரித்துவந்தது வேறொன்றன்று, அருளே என்று கண்கூடாகத் தெரிகின்றபடியால், 'அருளை மறவாதே' என்றார்.

அன்றியும், பெத்தநிலையில் உன்னுடனாய்நின்று அவ்வனுபவத்தை நவநவமா (புதிதுபுதிதா)ய் உன்னைஅனுபவிக்கச்செய்ததுபோல் இந்தயோகநிலையினும் அவ் வருள் உன்னுடனாய் நின்று உன்னுடனாயிருக்கும் சிவானுபவத்தை நவநவமாய் அனு பவிக்கச் செய்தாலன்றி, நீயே அனுபவிக்குஞ் சுதந்தரமுடையனன்றாகலான் 'அதுவே யிங்குள்ளது' என்றார்.

இப்பாட்டான், சிவன் தானே ஆன்மாவை அனுபவியான்; ஆன்மாவும் சிவனைத் தானே அனுபவியான். சிவன் அவனையும், அவன் சிவனையும் அனுபவிக்கச்செய்தல் அருளேயாமென்று வலியுறுத்தியதா மென்க. இவ்வுண்மையால் அருள் எப்பொழுதும் துணையாய் நின்றாலன்றி, இவன்எதையும் அனுபவிக்கும் அனுபவியும் ஆகான், எவையும் இவனால் அனுபவிக்கப்படுபொருளும் ஆகா என்னும் உண்மையும் வெளிப்படுத்திய வாறுமென்க.

திருக்களிற்றுப்படியார்.

சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் என்றமையால
சார்புணர்தல் தானே தியானமுமாம்—சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம் கேதப
படவருவ தில்லைவினைப் பற்று.

(எ - து.) சார்புணர்ந்து - அருள் சார்ந்திருக்கும் இடத்தை யறிந்து அஃதாவது மருளும்தெருளுமறக்கும் சிவன் கண் அருளுள்ளதென்று அறிந்து, சார்புகெட - ஆதார நிராதாரயோகங்களில் மனமுதலியகரணச்சார்பும் தற்போதச் சார்புமிருத்தலால் அப போதச் சார்பு கெட, ஒழுகின் என்றமையால் - தற்போதத்திற் கிடமாகிய தன்னறி வின்கண் அறிவாகி(சிவமேயாய்) நிற்றலைச்செய்யவல்ல அருள்வழியிற் சென்றால் என்று ✻ திருவள்ளுவநாயனார் கூறியபடியால், சார்புணர்தல்தானே தியானமாம் - சுட் டறிவுக்கிடஞ் செய்யும் அறிவின்சார்பொழிந்து சிவமேயாய்நிற்றற்கு அவ்வருளே துணையென்று அதைப்பற்றலே தியானமுமாகும், அந்தத்தியானமுதிர்வினால் சார்பு கெட ஒழுகின் நல்லசமாதியுமாம் - தற்போதச்சார்பும் அவைகாரணமாகவரும் யான் எனதென்னும் சார்புகளும்கெட அருளொக்கத்தில் நிற்கப்பெறின் அதுவே நல்ல சமாதியுமாம், கேதப்படவருவ தில்லை வினைப்பற்று-அவ்வருளாகிய தியானமும் இந்தச் சமாதியும் நீங்காதிருக்குமாயின் துன்பப்படவருவதாகிய வினைபபற்றுக்கள் இல்லையாய் விடும் (அழிந்தேவிடும்) என்பதாம்.

இதனால், உந்தியார் 'அருளை மறவாதே' என்றதைத் தியானமெனவும், 'அதுவே இங்குள்ளது' என்றதை சமாதி எனவும் அறியக்கிடக்கின்றன. (௧௮)

௧௯. கருது வதன்முன் கருத்தழி யப்பாயும்
ஒருமகள் கேள்வனென் றுந்தீபற
உன்ன அறியனென் றுந்தீபற

(எ - து.) உ - ர்.—என் - எனின், அருளையே துணையாக நினைப்பார்க்கு அவரு ளத்தில் இறைவன் தானே வந்து குடிபுகுவான் என்று கூறிற்று.

✻ திருக்குறள் ௩௬-அ-தி. மெய்யுணர்தல் - ௩௯து செய்யுள்.

(இ - ள்) அன்றும் இன்றும் இனி என்றும் நமக்குத் துணையாயுள்ளது அருள் என்று நினைப்பாராயின் அப்படி அவர் நினைப்பதற்குமுன், அவருள்ளமுருக நினைத் தற்கரியனாகிய சிவகாமிநாதன் அவருள்ளத்தில் விரைந்து செல்வான் என்க.

இதனால் இறைவன் தன்னருளைக் கருதித் தன்னை நினைப்பாரபால் தான் விரைந்து சேறலும், தன்னைக்கருதி அருளைத் துணையாகக் கருதாரபால் எப்பொழுதும் தான் சேருதற் கெணுமையும் தனக்கு இலக்கணமாக வுடையானென்று கூறியவாறும்.

அருளும், சிவத்தைவிட்டு வாராததன்மைத்தாகலின் சிவப்பேறுவேண்டித் தன்னை நினைத்தவனுக்கு தன்னையுடையானாகிய சிவத்தோடு தன்னைக்கொடுக்கு மென்பது தோன்ற - 'ஒருமகள்கேள்வன் கருத்தழியப்பாயும்' என்றார்

திருக்களிற்றுப்படியார்.

௩௬. அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடியே நிற்க முன்னிற்கும்—சென்று
கருதுவதன் முன்னம் கருத்தழியப் பாயும்
ஒருமகள்தன் கேள்வன் உனக்கு.

(ஈ-து) அன்றி இங்ஙனஞ்சொல்லிவந்த சுட்டுணர்வேயல்லாமல், வரும் ஐம்புலனும் - உன்னைவிடாது வரும் ஐம்புலன்களும், அசையாதே தத்தம்செயற்கையினின்றும் இயற்கையினின்றும் ஒருசிறிதும் நீங்காமல், நின்றபடியே நிற்க செயற்கையும் இயற்கையும் முன்னிருந்தபடியே நிற்கவும், நீயும்சென்று கருதுவதன்முன்னம் இவைகளுக்கெல்லாம் வேறாயிருக்கின்ற ஆன்மாவாகிய நீயும் ஐம்புலன்களையுமதற்போதத்தையுங்கடந்து சென்று உனக்குத் தலைவனாகிய சிவனைக்கூட எண்ணுவதற்கு முன்னம், ஒருமகள் தன் கேள்வன் உனக்கு முன்னிற்கும்-சிவகாமிநாதனாகிய நடராஜன் உனக்கு முன்னேவந்து நீகாணும்படி நிற்பான், கருத்தழியப்பாயும் நின்றபின் உனதுஉள்ளம் உருகும்வண்ணம் உன்னுள்ளத்துள்ளே குடிபுகும் என்பதாம்

அன்றிவரும் ஐம்புலனும் அசையாதே நின்றபடியே நிற்க, நீயும்சென்று கருவதன்முன்னம், ஒருமகள்தன்கேள்வன், உனக்கு முன்னிற்கும் கருத்து அழியப்பாயும் எனக்கொண்டு கூட்டுக

இதனால், ஐம்புலன்களும் தற்போதமும் கெட்டு ஒழியவேண்டும்; ஆன்மாவும் இவைகளுக்கு வேறாகித்தன்னைநினைந்து உருகவேண்டும்; இவ்வாறு புலன்களும் ஒழிந்து ஆன்மாவும் உருகவருமானால் இறைவன் தரிசனமாவதும், பின் அவனுள்ளத்தில் குடிபுகுதலுமுறை. இம்முறை, அருளை எக்காலத்தும் விடாமல் துணையாகப்பற்றவேண்டும் என்று எண்ணினார்மாட்டு அவ்வளவிலேயே ஐம்புலச்சேட்டைகளையும் நோக்கான், ஆன்மா உருகினதோ இல்லையோவென்பதையுமநோக்கான். தானேவந்து உள்ளத் துள்ளே குடிபுகுவான் என்று அருள்விசேடத்தைக் கூறியவாறுமென்க

"கருதுவதன்முன்னம் கருத்தழியப்பாயும்" என்றகருணையின் விசேடத்தை இச்செய்யுளாற் கூறியதாகும் அஃதாவது, கருதவேண்டியவற்றைக் கருதாது தன்மாட்டு கருதத்துருகச்செய்யும் பெருங்கருணைச் சிறப்பு இதுவென விளக்கியதாகும். (கக)

௨௦. இரவு பகலில்லா இன்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற.

(எ - து.) உ - ர.—என்-எனின், இறைவன் குடிபுகுந்தபின்னர் விளையும் பேரின்ப இலக்கணங் கூறிற்று.

(இ - ள்.) சுழுத்தியவஸ்தையில் கலந்துகலந்துநின்று அறியாதனுபவிக்கும் இன்பத்தைப்போலும், சாக்கிராவஸ்தையில் விரைந்துவிரைந்து நின்று அறிந்தனுபவிக்கும்

அடையாளப் பொருள்களாகவும் கொண்டு, பாசமாகியமனைவியை இறைவனிடத்துச் சேர்த்து நாயனார் பாசமற்று இறைவனோடு ஏகனாகிநிற்கப் பெற்றதுபோல், பாசகாரியத்தையும் ஒழித்துத் தடையற்றுச் சிவானந்தத்திற்கு ஆளாகவேண்டியவ ராகலான் “காதன்மேவிய சுற்றமும் பதியுங் கடக்க” என்றார்.

இத்திருப்பாசுரத்தான், “மாதவர்தாம், மாதுதன்னைமுன்கொடுத்து மனமகிழ்ந்து பேருவகையின்மலர்ந்தார்” என்றது “இறைவனோடு ஏகனாகிநிற்றல்” என்னும் முதல் அதிகரணப்பொருளைக் குறித்ததெனவும், “நானினிச் செய்பணிதான் யாது, என்று இறைஞ்சிநின்றனர்” என்றது ஏகனாகிநின்ற காலத்தும் பணியில்லை என்பது இல்லை, பணியுளது என்பதைக்குறித்ததெனவும், (இறைஞ்சினவரை) “எதிர்நோக்கி, காதன் மேவிய சுற்றமும் பதியுங் கடக்க நீதுணைபோதுக” என்றது “இறைபணி வழுவாது நிற்றல்” என்னும் இரண்டாம்அதிகரணப்பொருளைக் குறித்ததெனவும் கொள்க.

### நாயனார் போர்க்கோலங் கொள்ளல்.

என்றவர் அருளிச் செய்ய யானேமுன் செயகுற் றேவல்
ஒன்றிது தன்னை என்னை உடையவர் அருளிச் செய்ய
நின்றது பிழையாம் என்று நினைந்துவே றிடத்துப் புக்குப்
பொன்றிகழ் அறிவை சாத்திப் பூங்கச்சுப் பொலிய வீக்கி.

(எ - து.) ‘சுற்றமும் பதியுங் கடக்க நீதுணை போதுக) என்று வேதியர் கட்டளையிட, இது இவர் சொல்வதற்கு முன்னம் யானே அறிந்து செய்யத்தக்க சிறியபணி. இப்பணியை என்னை ஆளாகவுடையவராகிய இவ்வடியவர் நீஇதுசெய்யென்று சொல்லுமளவும்தாமதித்து நின்றது பெருங்குற்றமாம் என்று நினைத்து, (அங்குநின்றும் நீங்கி) வேறோரிடத்துக்குப் போய்ப் பொன்னுடையை உடுத்து, (அதன்மேல்) அழகிய அரைக்கச்சை இடையில் இறுகக்கட்டி என்பதாம்.

வேதியர் வேண்டியபடியே மனைவியாரைக், கொடுக்கும்பொருளாகவே நாம்எண்ணினோம். அவளும் அப்படியே தடையின்றியாயினாள். இவ்வளவில் நமதுபணி முற்றுப் பெற்றது என்று எண்ணியிருந்தோம். வேறுதடையுளதென்பதையும் இலதென்பதையும் அறிந்து தடையுளதேல் அதனைப் போக்குதல் நமது கடமையாயிருக்க, அதனையும் எண்ணாது, கொடுத்த அளவில்மகிழ்ந்து அவர்சொல்ல நின்றனம். இது நமது குற்றமாமென்று எண்ணினார் என்பார்யானே முன் செயதற்றேவல் இதுதன்னைச் (செய்யாது) நின்றது பிழையா மென்று நினைந்து என்றார்.

ஒன்றிது தன்னை என்றது - வேதியர் தடை யென்று எண்ணிய இது மிகச்சிறியதொன்று, இது பெரிதான தன்று என்னும்பொருளைக்குறித்தது. நமக்குச் சிறிதாயினும் வேதியர் பெரிதாக எண்ணினா ராகலான் அத்தடையை யொழித்தல் நாம் செய்யத்தகும் பணியில் இது இன்றியமையாத செயலாமென்றெண்ணி அச்செயலைச் செய்ய அக்கணமே துணிந்தனரென்பார் வேறிடத்துப்புக்கு என்றார். புக்குப் பின்செய்த செயல்களை இனிவரும் பதின்மூன்று செய்யுளாற் காண்க.

இத்திருப்பாசுரத்தான், மூலமாகிய பாசம் இறைவன்வசப்பட்டு, தான் ஏகமாகி நின்றகாலத்தும் பாசகாரியங்கள் அங்ஙனம் நிற்கவொட்டாது உடனுழாய்வந்து வழுப்படச் செய்யு மாகலின், அவ்வழு நீங்கற்குரிய பணியையும் செய்தல் இன்றியமையாத செயலென்று கூறப்பட்டது. (கக)

வாளொடு பலகை யேந்தி வந்தெதிர் வணங்கி மிக்க
ஆளரி யேறு போல்வார் அவரைமுன் போக்கிப் பின்னே
தோளிணை துணையே யாகப் போயினார் தன்னி னாரை
நீளிடைப் படமுன் கூடி நிலத்திடை வீழ்த்த நேர்வார்.

---

சிவஞானபோதம் கo - ஆம் சூத்திரத்தில் இதன்விரிவெல்லாம் காண்க.

(எ - து.) (நாயனார் இடையில் அரைக்கச்சை இறுகக்கட்டியபின்னர்) வாளாயுதத்தோடு * கேடகத்தையும் கையிற்றாங்கிக்கொண்டு வேதியருக்கு எதிரா(முன்னா)க வந்துவணங்கி, அவரை (தன்மனையாட்டியுடன் புறப்பட்டு) வீதியில் முன்னே போகும்படிச்செய்து, (அங்ஙனம் அவ்விருவரும்போகும்போது போரைக்குறித்து, எதிரேவருஞ்சுற்றத்தவர்களை) நீண்டதூரத்திலேயே கண்டு அங்ஙனே முன்சென்று (அவர்கள் வேதியரைவந்து நெருங்கா வண்ணம் தடுத்து வளைத்துத் துண்டந்துண்டமாக்கிப்) பூமியில் வீழ்த்தும்படியாக எண்ணங்கொண்டு, மிகுந்த வன்மைபொருந்திய ஆண்சிங்கம்போன்ற பராக்கிரமமுடையவராய், தன்னுடைய இரண்டு தோள்களை இரண்டுபக்கத்திலும் நெருங்கிவரும் படைத்துணையாகக் கருதி, அவ்விருவருக்கும் பின்னே போயினாரென்பதாம்.

வாளொடு பலகையேந்தி வந்தெதிர்வணங்கி, அவரை முன்போக்கி, துன்னினாரை நீளிடைப்பட முன்கூடி நிலத்திடைவீழ்க்க நேர்வார் தோளிணை துணையேயாக மிக்க ஆளரிபோலும் போல்வார் பின்னே போயினார் எனக்கொண்டுகூட்.

தமது உள்ளப்பற்றாய் வருஞ் சார்புகளைச் சேதிப்பதற்கு வாளையும், புறப்பற்றாய் வரும் சார்புகளைத் தடுப்பதற்குக் கேடகத்தையுங் கொண்டனரென்பார் வாளொடு பலகையேந்தி என்றார். எனக்கு உட்பற்றும், புறப்பற்றும் உன்னையன்றி வேறில்லை என்பார் எதிர்வணங்கி என்றார். கேள்வியின் வன்மை, சிந்தனையின் வன்மை என்னும் இவ்விரண்டின் துணையைக்கொண்டே உட்புறம்பாகிய பாசங்கள் வந்தணுகாவண்ணம் ஒழிக்கவேண்டுமென்பார் தோளிணைதுணையேயாக என்றார். கேட்டல் சிந்தித்தலால் இருவகைப்பற்றுக்களையும் ஒழிக்கவல்லார்க்கு, மேன்மேல் பிறத்தலுக் கிடஞ்செய்யத் துள்ளித்துள்ளி முனைத்துத் தோன்றும் ஆணவத்தின்சத்தியைத் தெளிதலால் கீழ்ப்படுத்த முயல மிகஎளிதென்பார் துன்னினாரை நீளிடைப்பட முன்கூடி நிலத்திடை வீழ்க்க நேர்வார் என்றார். தெளிதலால் ஆணவசத்தியைக் கெடுக்கவல்லார் இறைவனை நிட்டையினால் முற்பட்டுவரச் செய்வார் என்பார் அவரைமுன் போக்கி என்றார். நிட்டையினால் இறைவனை முற்படச்செய்வாரை அருள் அவர்களைத் தன்வசமாக்கி இறுமாந்திருக்கச் செய்யும் என்பார் ஆளரியேறுபோல்வார் என்றார்.

இத் திருப்பாசுரத்தான், நாயனார் யுத்தகோலத்தாராய்த் தமது பத்தினியுடன் வேதியரை முன்னேபோகவிட்டுத் தாம் பின்போக தம்மைவேண்டியும் தமது பத்தினியாரை வேண்டியும் வரும் சுற்றத்தினரையெல்லாம் நிலத்தில் வீழ்த்தும்படி ஆண்சிங்கம்போலும் சென்றாரென்று கூறப்பட்டது.

அல்லதூஉம், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நால்வகை ஞானத்துள், உட்புறம்பாகிய பற்றுக்களை யொழித்தற்குகேட்டல் சிந்தித்தலைத் தோள்வலியைப்போல் கொண்டனரென்பதும், தெளிதலின்வலியால் ஆணவசத்தியைக் கெடுக்கத் துணிந்தனரென்பதும், நிட்டையின்வலியால் தன்னைப் பிற்படுத்தி, இறைவனை முற்படச்செய்து, அருள்வசத்தராய்ப் பாசப்பற்றற்று ஆண்சிங்கம்போன்று உலாவத் தொடங்கினரென்பதும் கூறப்பட்டன. (கஉ)

## சுற்றத்தினர் மறையவரைச் சூழ்தல்.

மனைவியார் சுற்றத் தாரும் வள்ளலார் சுற்றத் தாரும்
இனையதொன் றியாரே செய்தார் இயற்பகை பித்த னானல்
புனையிழை தன்னைக் கொண்டு போவதாம் ஒருவ னென்று
துனைபெரும் பழியை மீட்பான் தொடர்வதற் கெழுந்து சூழ்வா

---

* ஆயுதவகைகளைத் தடுப்பதற்குக் கொள்ளும் விருத்தாகாரமாயுள்ள ஓர் பலகை.

(எ - து.) (வேதியரும் நாயனார் மனைவியாரும் முன்னும், அவ்விருவர்பின்னே நாயனாரும் வீதியின் கண்ணே யாவருங் காண அஞ்சாது போதலைக்கண்டு) நாயகனுக்குப் பின்னேவரவேண்டிய நமது பெண் முன்னே போகவேண்டிய காரணம் என்னையென்று மனைவியார் சுற்றத்தாரும், மனையாட்டிக்கு முன்னேபோக வேண்டிய நமதுசெட்டியார் பின்னேவரவேண்டிய காரணம் என்னையென்று நாயனார் சுற்றத்தாரும், ஆலோசனைசெய்யும்போது, (மனையாட்டியை வேதியருக்குக்கொடுத்த செய்தியைக் கேட்டு) அந்தோ! மனைவியை வேண்டுவதும், அவளைக் கொடுப்பதுமாகிய இச்செய்தியை இதுகாறும் யாவர்செய்ததுள்ளார் (இது அறமாமோ) இந்த இயற்பகை பித்தன் போலும், இவன்பித்தனானாலும் ஆகுக. ஆபரணங்களைப் பூண்டிருக்கின்ற இப்பெண்ணைப் பிராமணனொருவன் கொண்டுபோவது அறமாகுமோ என்று சொல்லிப் (பின் அந்தப் பாதகனை விட்டு ஒருவரையொருவர் பார்த்து, பழியற்ற நமது குடும்பத்திற்கு இதுபொழுது பெரும்பழி வந்துவிட்டதே,) இந்தப்பழியை நாம் நீக்கிக்கொள்ளவேண்டுமல்லவா என்று (மீட்பதற்குத் துணிந்தவர்களாய் இருவர் சுற்றத்தாரும் முன்னே வருகின்ற வேதியனைச்செல்லவொட்டாது) தடுக்கவேண்டுமென்று யாவரையும் அழைத்துக்கொண்டுபோர்செய்வதற் கெழுந்து சூழ்ந்துகொண்டனர் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தால், நாயனார் மற்றவனொருவன்பின்னே தனமனையாளைக் கூட்டியனுப்புவதைச் சுற்றத்தினரெல்லாங் கண்டு, இந்த இயற்பகை அடியார்களுக்கு இல்லையென்னாது கொடுக்கும் விரதத்தை மேற்கொண்டவனாயிருப்பினும், அவ்விரதத்துக்கு, தன்மனையாட்டியைக் கொடுப்பது பழியை விளைவிக்குமல்லவா? இந்தப் பழியையாற்ற எந்தவிரதம் இருக்கின்றது, எந்த அறம் இருக்கின்றது; அன்றியும், முன் அறஞ்செய்த பெரியோர் இப்படி செய்திருக்கின்றனரா; இவன்செய்தது பித்துடையார் செய்யும் அறமாகும், இவன் பித்தனானாலும், இவன் மனையாளை அஞ்சாது கொண்டுபோகத் துணிந்தவனைப் பார்த்தாலோ வேதியனாகவும், சிவனடியாராகவும் காணப்படுகின்றான், பிறன்மனைவிழைதல் எக்காலத்தும் அழியாத பழியை விளைவிக்கின்றதல்லவா! இங்ஙனமானபழியை வேதியனாயுள்ளவனும் அடியவனாயுள்ளவனும் செய்யத்துணியலாமா? இனி அந்தப்பித்தன் செய்கையும், கூடாவொழுக்கமுடைய இந்தவேதியன் செய்கையும் எண்ணிக்கொண்டிருப்போமானால் இப்போது யாவருங் காண வந்தபழிக்கு நாம் என்னசெய்ததுபோலாகும். இனிப் பேசுவதை விடுங்கள்; அந்தப்பிராமணனை எவ்வழியானும் போவதற்கிடமில்லாமல் தடுக்கவேண்டுமென்று சூழ்ந்துகொண்டனரென்று கூறப்பட்டது. (௧௫)

வேலொடு வில்லும் வாளுஞ் சுரிகையும் எடுத்து மிக்க
காலென விசையிற் சென்று கடிநகர்ப் புறத்துப் போகிப்
பாலிரு மருங்கும் ஈண்டிப் பரந்தஆர்ப் பரவம் பொங்கி
மால்கடல் கிளர்ந்த தென்ன வந்தெதிர் வளைத்துக் கொண்டார்.

(எ-து) (வேதியரைத் தடுப்பதற்கெழுந்தவர்கள் எவ்வாறு சூழ்ந்தார்கள் என்றால்) வேலாயுதத்தோடு வில்லையும் உடைவாளையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு, பெருங் காற்றைப்போல விரைந்து நாற்புறமும் பரந்து சூழ்ந்து சென்று, காவலோடுகூடிய அந்நகர்ப்புறத்திலே போய், வலம்இடம் என்னும் இரண்டுபக்கத்திலும் நெருங்கிப், பரந்துகிடக்கும் பெருங்கடலானது பொங்கியெழுந்ததுபோலப் பெருங்கூச்சலிட்டு வேதியர் எதிரிலேவந்து வளைத்துக்கொண்டனர் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தால், வேதியரைச் சூழ்ந்துகொள்ளத் துணிந்த சுற்றத்தினரெல்லாம், வேல் வில் வாள் கத்தி என்னும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, பெருங் காற்றைப்போல் வேகமாய் நகர்ப்புறத்தே சென்று, வேதியருடைய இரண்டுபக்கத

திலும நெருங்கி, கடலொலியைப்போல பெருங்கூச்சலிட்டு அவ்வேதியரைப் போகவிடாமல் எதிரேபோய வளைத்துக்கொண்டாரக ளென்று கூறப்பட்டது. (கச)

## குலப்பழிநீங்கக் குலக்கோடியை விடுகேனல்.

வழிவிடும துணைபின் போத வழித்துணை யாகி யுள்ளார
கழிபெருங் காதல காட்டிக் காரிகை யுடன் போம போதில்
அழிதகன் போகேல எண்ட அருங்குலக் கொடியை விட்டுப்
பழிவிட நீபோ என்று பகாந்தெதிா நிரைந்து வந்தார.

(இ - ள்) (இருவாசுற்றத்தாாகளும சூழ்ந்து, போகவிடாமல் தடைசெய்தபோதிலும அத்தடையைநீக்கி) வழிவிடுதற்குரிய துணையாக இபற கைநாயனா பின்னேசெல்ல, (சீவன்முத்திநிலைக்கண் பாசக்ஷயஞ்செய்யு (ரா)க்கிற்ந்த) துணையாகியுள்ள இறைவனாகிய வேதியா, தமது பெருங்கருணைத்திறத்தை நாயனாருக்கு புலப்படுத்திக்கொண்டு அவா மனையாட்டியுடன போதும்பொழுது (எதிரேவந்து வளைத்துக் கொண்ட சுற்றத்தவாகள அவரைநோக்கி ஓ கொடியமனே! பிறன மனைவியை விரும்பிக் கவாந்துகொண்டுபோதல் உனக்குத்தகுதியாகுமோ?) தகுதியற்றவனே! இனி நீ எங்களைக்கடந்துபோதலை யொழிக, (நீ எங்களகுடிக்குச் சீங்காப் பழியைத் தேடிவிட்டனை) அப்பழி எங்களைவிட்டு நீங்க, இப்பொழுது எங்கள அரிய குலத்திற்குக் கொடி போனறிருக்கும இவளை (எங்களிடத்தில) விட்டு நீ (உனதூருக்கு) ஏகுவாய் என்றுகூறி அவ்வேதியருக்கு எதிரே அணியணியாய ஒருவாபின ஒருவராக வந்தன என்பதாம

சிவபெருமானைத்தொடாவதற்கு வழிவிடும் அன்புமாாக்கத்தைத் துணையாகப் பற்றிப பாசபபற்றைவிடச் செல்லவேண்டியவா நாயனாராகலான அவரை வழிவிடுந் துணை எனவும, பாசத்தொடாபறுக்க அன்பினவழியேதனனைத்தொடாந்துவருகின்ற வாக்கு, அருள்வழிகாட்டுதற்குத் துணையாயுள்ளவா இறைவனாகலின அவரை வழித் துணையாகியுள்ளார் எனவும், அவாகாட்டும அருளவழி - அனபினவழியே பக்தியும் அப்பக்திவழியே காதலுமாகலான கழிபெருங்காதற்காட்டி எனவுங் கூறினா

தகவு அழிந்தவாஎனபது - அழிதகனென மாறிநின்றது கொடி - படருந்தன்மை யுடையதுபோல், குலம பரவுதற்குரியாா மங்கையராகலின் 'குலக்கொடி' என்றாா

அல்லதூஉம, நிட்டைகூடினா, பாசமாாக்கத்தினின்றும தம்மை விடுவிக்கவல்ல அருளைத் துணையாகப்பற்றி, அவவருள செலலுமவழியே பினபற்றிச் செல்லும நெறி யுடையவர் எனபதுதோன்ற வழிவிடும்துணைபின்போத எனறா அருளைப் பின்பற்றி வருவார்க்கு அவ்வருளுடையானாகிய இறைவன், தனனனுபவமாகிய சிவானுபவம வருதற்கான நெறிக்குத் துணையாயுள்ளவ னென்பதுதோனற வழித்துணையாகியுள் ளார என்றா. சிவானுபவமாகிய தன்னனுபவம வருதற்குத் தன்பால ஆவாகளுக்கு ஆசை மீதூருமவகையைக் காட்டினுவன்றித் தனஅனுபவங் கூடாதாகலின அவவாசையை உள்ளத்தின்கண் உதிப்பிப்பன் எனனும் அவவுண்மைதோன்ற கழிபெருங்காதல் காட்டி என்றார். சிவானுபவத்திற்குரிய கழிபேருவகையை உள்ளத்தினகண உதிப

---

உள்ளத்தினகண கழிபேருவகையை உதிப்பிப்பனெனபதை திருவாசகம திருச்சதகம் "பேசப்பட்டேன் நின்அடியாரிற் திருநீறே, பூசப்பட்டேன் பூதலரால் உன் அடியேன் என்று, ஏசப்பட்டேன் இனிப்படுகின்ற தமையாதால, ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன் உன்அடியேனே" எனவும, "அடியேன அல்லேன் கொல்லோ தான் எனையாட்கொண்டிலைகொல்லோ, அடியாரானா எல்லாரும வந்துன்றாள சோந்தாா, செடிசேருடலம இதுநீக்கமாட்டேன் எங்கள்சிவலோகா, கடியேன் உன்னைக்கண்ணாரத் தானுமாறென் காணேனே" எனவும் வருவனவற்றாற் காணக.

பிக்கின்றபொழுது அவர்கள் "சிவன்தோற்றம் ஒன்றுமேகாண்பார்" என்றபடி பிரியாப் பிரியத்திற் கிடமாகிய பொருள்தோற்றத்தைக் காணார், என்ற சித்தாந்தவசனப்படி நாயனார் பிரியத்துக்குரிய மனையாட்டி தன்முன் செல்லுகின்றவராயிருந்தும் அவரைக் காணாது, அவருக்கு முன்செல்லும் மறையவராகிய சிவன்தோற்றம் ஒன்றனையே கண்டுசென்றார் என்பதுதோன்ற, (இறைவன்) மாதையுடன்போகப்போதிர் என்றார். சிவத்தோற்றம் ஒன்றையே காணப்பெற்றாராமாட்டு மாயாகூட்டமாகிய "சுற்றமென்னும் தொல்பசுக்குழாங்கள்" தத்தமக்கேற்ற காரியங்களைச்செய்யத்தொடங்கிச்சிவத்தோற்றங் கெடுமாறு அச்சிவத்தோற்றத்தைப் பழித்தவாயுயலப்பெனபது தோன்ற, அமிர்தகன் போகேல் மண்டை அருங்தலக்கோடியைப் பிடுப்ப, பழிவிட் டீர் எனறு பகர்ந்து எதிர்நிரைந்துவந்தார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் உருளைப் பட்டு அவ்வருளாழியே போனா ரென்பதும், இறைவனார் அவருக்குத் துணையாகி, சிவானுபவத்துக்குரிய ஆசையை மேன்மேல் விளைவித்தாரெனபதும் வசமாத்தியப் பசங்கூட்டங்கள் தத்தஞ்செயல் களைச் செய்யத்தொடங்கின வென்பதும் கூறப்பட்டன.

### நாயனாரும் மனைவியாரும் இறைவன் அஞ்சாவண்ணங்கூறல்.

மறைமுனி அஞ்சினான் போல மாதினைப் பார்க்க மாதும்
இறைவனே அஞ்ச வேண்டாம் இயற்பகை வெல்லு மென்ன
அறைகழல் அண்ணல் கேளா அடியனேன் அவரை எல்லாம்
தரையிடைப் படுத்து கின்றேன் தளர்ந்தருள் செய்யேல என்று.

(எ - து.) (அணியணியாய் வருகின்ற சுற்றத்தினரை) வேதியர்கண்டு (நாம என் செய்யக்கடவோ மென்று) பயந்தவர்போல (தமபின்னேவருகின்ற) நாயனார்மனைவி யைப்பார்த்தனர். பார்க்கவும் (அம்மனைவியாரும் வேதியரைப்பார்த்து என்னை அடி மைகொண்ட) இறைவரே! அஞ்சுதலையொழிக நீர் பயப்படும்படி வருகின்ற சுற்றத் தவர்களை இயற்பகை வெல்லுவார் என்றுசொல்ல (அச்சொல்லை) வீரக்கழலணிந்த நாய னார்கேட்டு) வேதியரைநோக்கி தேவரீர் அஞ்சுவது யாதொன்றுமில்லை, (அஞ்சவருவது மில்லை) அடியேன் (எதிரே) வருகின்றவர்களையெல்லாம், இத்தரையின்கண் (இப் பொழுதே) வெட்டிக் கீழேவீழ்த்துகின்றேன், (இதற்குத் தூரத்தேவிடமுடைய நீர்) மனங்கலங்குதல்வேண்டாம் என்று சொல்லி என்பதாம்.

பொன்வெள்ளி இரும்பினாலாகிய திரிபுரத்தை அஞ்சாதுசிரித்தெரித்தவீரன், அத் வீரத்தைமறைத்து உலகிலுள்ள தூர்த்தரைக்கண்டு, அஞ்சுகின்ற மானிடமுனிவரைப் போல்அஞ்சினான்என்பதுதோன்ற மறைமுனிஅஞ்சினான்போல் என்றார். நாயனார் மனைவி யார் அஞ்சுகின்ற தம்மைக்கண்டு பொறாது அஞ்சுகின்றார்,சுற்றத்தார் வந்துவிட்டனரே நம்மை என்செய்வரோ என்று தன்னையெண்ணி அஞ்சுகின்றார் என்று அவரதுமனநிலை மையைநோக்க அவரைநோக்கினார் என்பார் மாதினைப்பார்க்க என்றார் தனது மனநிலை மையை அறியநோக்கிய அக்குறிப்புணர்ந்து, உமக்கு அஞ்சுகின்றேனே யன்றி, சுற்றத் தாருக்கு அஞ்சினேனல்லன் என்பதுதோன்ற மாதும் இறைவனே அஞ்சவேண்டாம் இயற்பகைவெல்லும் என்றார். இறைவனாரது போலியச்சத்தை போக்கவும், மனைவியா ரது உண்மையான உறுதிமொழியை உறுதிப்படுத்தவும (உலகு) இயற்பகை என்னும் தனது நாமச்சிறப்பைச் சிறப்பிக்கவும் துணிந்தனர் என்பதுதோன்ற அடியனேன் அவரையெல்லாம் தரையிடைப்படுத்துகின்றேன் என்றார். பாசவீடுசெய்யவும் சிவப் பேறெய்தவும் எனக்குத் தளராது அருள்செய்யவந்த தேவரீர் தளர்வீரானால யான் அவ்விரண்டையும பெறுமாறெங்ஙன் என்னைக்கைவிடேல் என்று தன் அஞ்சுதல் தோன்ற தளர்ந்தருள்செய்யேல் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், வேம்பின்கண் வாழ்ந்தபுழு, கரும்பினை நுகரவருங்காலத்தும், முன் வேம்பினை விரும்பிய தோற்றம்தோன்றுதல் இயற்கையாமாறுபோல, பெத்தநிலைக்கண் பழகிய ஆன்மாவிற்கு, முத்திநிலைக்கண்ணும் அப்பழக்கம் தோன்றும். அஃதாவது, * "பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு, நெஞ்சாய துயர்கூற நிற்பேன்," என்றும், "கொந்துகுழற் கோல்வளையார்குவிமுலைமேல் வீழ்வேனை" என்றும், "தையலார்மையலிலே தாழ்ந்துவிடக்கடவேனை" என்றும் தோன்றுதலாம். ஆகலின், அத்தோற்றம் நாயனாருக்குத் தோன்றியதில்லை என்பதும், அவர் மனைவியாரும் அங்ஙனம் தோன்றும்நிலையில் நின்றிலரென்பதும், இருவரும் பெத்தானுபவத்தை யொழிக்கும் நிலையிலேயே நிலைபெற்றுநின்றார் என்பதும், தங்களைப பெத்தநிலையினின்றும் நீக்கி முத்திநிலையில் கொண்டுவந்த இறைவனை நோக்கிச் சிவானந்தானுபவம் நாங்கள் பெறுதற்கான செய்கையில் நீ தளரா திருத்தல்வேண்டுமென்று வேண்டினரென்பதும் கூறப்பட்டன.

எவ்வாறெனின் மாதானவர் மயக்குநிலையில் நிற்கின்றனரோ, மயக்கைநீக்கும் நிலையில் நிற்கின்றனரோ என்றுஉணரமாதினைப்பார்க்க என்றும், அங்ஙனமான ஐயவுணர்வு அவருக்குநீங்க, அவ்வம்மையார இறைவனே அஞ்சவேண்டாம் இயற்பகைவெல்லும் என்றும், அஃதேபோல் நாயனாரும் மயக்கினைக் கழித்தொழிக்கும் நிலையில் நிற்கின்றேனே யன்றி, மயக்கில் மயங்கிநிற்கும நிலையினனல்லேன் என்று உணர்த்த- அடியேன் அவரையெல்லாம தரையிடைபபடுத்துகின்றேன் என்றும, இங்ஙனம் மயங்காநிற்கும் நிலையில்நிற்பேனுக்குச் சிவானந்தானுபவத்தை நான் கூடுமாறு செய்யும்செய்கையில் நீதளரவேண்டாமென்று உணர்த்ததளர்ந்தருள்செயயேல் என்றும் கூறியவாறும். (கசு)

## சுற்றத்தாரைநோக்கி வீரமொழி கூறல்.

பொருவிற லாளி யென்னப் பிறங்கெரி சிதற நோக்கிப்
பரிபவப் பட்டு வந்த படர்பெருஞ் சுற்றத் தாரை
ஒருவரும் எதிர்நில் லாமே ஓடிப்போய்ப் பிழையும் அன்றேல்
எரிசுடர் வாளிற் கூறாய்த் துடிக்கின்றீர் என்று நேர்ந்தார்.

(பொ - நு.) (வேதியரை மனந்தளரவேண்டா மென்று சொல்லியபின்னர்) தங்கள் குலத்துக்கு அவமானம் வந்ததென்று மானம்பொறாது போர்செய்வதற்குச் சூழ்ந்து பரவிவந்த பெரியசுற்றத்தாரை, மிக்கவன்மையுடைய ஆண்சிங்கம்போல, கோபாக்னி சிதறும்படியாகப் பார்த்து, (நீங்கள் உயிர் பிழைத்திருக்கவேண்டுமானால்) என்னெதிரில் ஒருவரும் நில்லாமல் ஓடிப்போய்ப் பிழையுங்கள். நீங்கள் உயிர் இழக்கவேண்டுமானால், (என்கையிலிருக்கின்ற) ஒளிவீசுகின்ற இவ்வாளினால், உங்களை இருகூறாக்கிப் பூமியில் வீழ்ந்து துடிக்கும்படியாகச்செய்வேன். (நீங்கள்) துடிப்பீர்களென்று அவர்களைக் கிட்டினார் என்பதாம்.

பரிபவப்பட்டுவந்த படர்பெருஞ்சுற்றத்தாரை, பொருவிறலாளியென்னப் பிறங்கெரிசிதறநோக்கி எனக்கூட்டுக.

இத் திருப்பாசுரத்தான், "சுற்றத்தாரைத் தரையிடைப்படுத்துகின்றேன்" என்று வேதியரிடத்திற் சொன்னபடியே, வேதியரைச் சூழ்ந்துகொண்ட சுற்றத்தார்களை நோக்கி, நீங்கள் உயிரோடு வாழவேண்டில் ஓடிப்போங்கள். உயிரிழக்க வேண்டில் எனதுவாளிற்கு இறையாகுங்கள் என்று அவர்களை எதிர்த்தனர் என்றுகூறப்பட்டது.

* வாதவூரடிகள் ஆசிரியராகலான் சீவன்முத்தர்களுக்கறிவுறுத்த அங்ஙனங் கூறினாரென்க,

அல்லதூஉம், இறைவனாருக்குத் தமது நிட்டையினால் உண்டாகிய ஞானத்தால் விளைந்த சிவானுபவத்தில் அவாவுடையேனையன்றி இனி விஷயானுபவத்தில் அவாவைச் சிறிதுஞ்செல்லவிடேன், அவைகள் எதிர்ப்படின் அஞ்சேன், அவைகளை அஞ்சும்படிச் செய்வேன் என்று சிவானுபவத்தில் தமக்குள்ள தீவிரதர பக்குவத்தை விளக்கியவாறுங் கூறப்பட்டது. (௬௭)

௯௱ நீ என்செய் தாயால் இத்திறம் இயம்பு கின்றாய்
நாடுறு பழியும் ஒன்னார் நகையையும் நாணாய் இன்று
பாடவம் உரைப்ப துன்றன் மனைவியைப் பனவற் கீந்தோ
கூடமவ மடிவ தன்றிக் கொடுக்கயாம் ஒட்டோம் என்றார்.

(எ - து.) எடா இயற்பகையே! நீ இங்கு என்னகாரியஞ்செய்தனை (ஒருவரும் எதிர்நில்லாமே யோடிப்போய்ப் பிழையும் அன்றேல், எரிசுடர் வாளிற்கூறாய்த் துடிக்கின்றீர், என்று) இத்திறமான வீரமொழிகளைச் சொல்லுகின்றாய், (நீசெய்யும் இக்காரியத்தால்) நாட்டில் உள்ளவரெல்லாம் பழிப்பாரகளல்லவா? அப்பழிக்கும், நமக்குப் பகையாயுள்ளவரெல்லாம் சிரிப்பாரகளல்லவா? அச்சிரிப்புக்கும் (சிறிதும்) நாணமற்றவனா யிருக்கின்றாய், உன்னுடைய மனையாளை இந்தமறையவனுக்கு நீ இன்றுகொடுத்தனையே, அதனாலோ, இந்தச்சாமர்த்தியமொழிகளைச் சொல்லுவது, (நாங்கள் உன்னைப்போலும் மானங்கெட்டவர்களல்லர். மானங்கெடவரின் உயிரை ஓர்பொருளாகமதித்து இப்பூதவுடலோடுகூடி வாழோம், இந்த உடலைவிட்டு என்றுமுள்ள புகழுடம்போடுகூடி வாழ்வோம். (ஆகலின்) உன்னுடன்போர்செய்து உனனோடுநாங்கள் இறத்தலேயல்லாமல, (இறப்புக்கஞ்சி) இந்தமறையவனுக்கு இப்பெண்ணைக் கொடுக்கச் சம்மதிக்கமாட்டோம் என்றார் என்பதாம்.

உன்றன்மனைவியைப்பனுவற்கீந்தோ பாடவம உரைபபது எனக்கூட்டுக.

இத்திருப்பாட்டான், நாயனாாகூறிய வீரமொழியைச் சுற்றத்தாாகள் ஓர்பொருளாகமதிக்காமல், அவரைநோக்கி, பழிக்கும், பகைவர்சிரிப்புக்கும் அஞ்சாத உனக்கு இவ்வீரமொழிசெல்லுமா, எங்களையெல்லாம் வெல்லவல்ல வீரமுடையவனாயின், உன் மனையாளைக் கேட்ட இவ்வேதியனை வென்றிருப்பையல்லவா, சிறிதும் வீரமில்லாமல் அவன்கேட்டபடியே மனையாளைக்கொடுத்து அவன்பின்னேயும் வரத்துணிந்தனையே பிராஹ்மணனுக்கு மனையாளைக்கொடுத்த நீ சொல்லால் வீரத்தைக்காட்டினையே நாங்கள் உன்னைப்போலன்று, செய்கையால் வீரத்தைக்காட்டுவோம். அஃதாவது, உன்மனையாளை இந்தமறையவன் கொண்டுபோகவொட்டோம், இறந்தாலும் இறப்போமென்று கூறப்பட்டது.

அல்லதூஉம், * "என்புநைந்துருகி நெக்குநெக்கேங்கி, அன்பெனும் ஆறுகரையது புரள, நன்புலனொன்றி நாதவென்றரற்றி, உரைதடுமாறி உரோமஞ்சிலிர்ப்பக், கரமலர் மொட்டித்து இருதயமலரக், கண்களிகூர நுண்டுளியரும்பச்,சாயாவன்பினை நாடொறுந் தழைப்ப (வரை) சகம்பேயென்று சிரிப்ப"ரென்பது ஞானநூற்றுணிபாதலின், அஃதேபோல் சுற்றத்தினர் கூறினரென்பதும் கூறப்பட்டது. (௬௮)

சுற்றத்தவரை மேலுலகேற்றி நற்றவரை ஊருக்குப் போகவிடுவேனெனல்.

மற்றவர் சொன்ன மாற்றம் கேட்டலும் மனத்தின் வந்த
செற்றமுன் பொங்க உங்கள் உடற்றுணி எங்கும் சிந்தி
முற்றும் உயிரை எல்லாம் முதல் விசும் பேற்றிக் கொண்டு
நற்றவர் தம்மைப் போக விடுவனென் றெழுந்தார் நல்லோர்.

* திருவாசகம் - போற்றித்திருவகவல்.

(எ - து) நல்லோராகிய இயற்பகையார், (தமது கொள்கைக்கும் செய்கைக்கும் மாறாக) உறவினர் கூறிய சொல்லைக்கேட்டவுடனே, கோபமானது முற்பட்டு முன்னே உதித்து அதிகரிக்க, (அதனால் அவர்களைப்பார்த்து) முதலில் உங்களுடைய உடம்பினைத் துண்டு துண்டாக்கி எவ்விடத்தும் எறிந்து, (அதன்பின்னர்) உங்கள் எல்லாருடைய உயிர் முழுவதும் விண்ணுலகடையும்படிச்செய்து, (அதன்பின்னர்) முன்போகின்ற நல்லதவத் திற்சிறந்த வேதியரை (எள்ளளவு கொடுக்கப்பட்ட இப்பெண்ணை யாதொருதடையில் லாமல்) அழைத்துக்கொண்டு போகும்படிச்செய்வேன் என்று போருக்கெழுந்தனர் என்பதாம்.

இத்திருப்பாட்டான், தம்மை வீரமற்றவராகவும், அவர்களை வீரமுடையவர்களாக வும் கூறிய சுற்றத்தினரைநோக்கி, உங்களுக்குள்ள வீரமெல்லாம் உங்களுடைய உட லுக்கேயாகலான் அவ்வுடலை, என்னுயிரைக்காப்பதில் வீரமுடைய நான்செலுத்தும் வீரச்செய்கையால் போகவிடுதலுக்கொள்ளாமல் காத்துக்கொள்ளுங்கள். இப்பொழுதே உங்கள் உடலைத் துண்டமாக்கி உங்கள்உயிரை உங்கள் வசமாகவைக்காமல் மேலுலகத்தில் ஏற்றிவிடுகிறேன். பின்னர் எனது உயிர்நாதனை யாதொரு துன்பமு மின்றிப்போகச்செய்கிறேன் என்று வீரத்தோடு எழுந்ததைக் கூறப்பட்டது.

அலலதூஉம், "மதிக்குந் திறலுடைய வல்லரக்கன்தோள்நெரிய, மிதிக்குந்திரு வடியென்றலைமேல் வீற்றிருப்பக், கதிக்குப் பசுபாசம் ஒன்றுமிலோம், எனக்களித்து இங்கு, அதிர்க்குங் குலாத்தில்லை ஆண்டானைக்கொண்டன்றே" என்றதிருவாசகப்படி, தில்லையாண்டானைக்கொண்டு பசுபாசமற்றவர் பாசமுடைய பசுக்கள்கூறும் சொல்லுக் குக் கோபங்கொண்டு அவரை யடக்குவரென்பதும், தாங்கொண்ட கோட்பாட்டை மேலோங்கச் செய்வரென்பதும் கூறப்பட்டன. (கக)

## வேதியரைத் தடுத்தல்.

நேர்ந்தவர் எதிர்ந்த போது நிறைந்தவச் சுற்றத் தாரும
சார்ந்தவர் தம்முன் செல்வார் தையலைக் கொண்டு பெற்றம்
ஊர்ந்தவர் படிமேற் செல்ல உற்றெதிர் உடன்று பொங்கி
ஆர்ந்தவெஞ் சினத்தான் மேற்சென றடர்ந்தெதிர் தடுத்தார் அன்றே.

(எ - து.) (போருக்கெழுந்த) நாயனர் (பகைவராயவந்த) சுற்றத்தாரை நெருங்கிய சமயத்தில், வெற்றிடமில்லாமல் நெருங்கிய அவ்வுறவினரும், (தமமுன்னெருங்கிய) நாயனருக்கு முன்னே போனாதவராய், இடபவூர்தியின்மேற் செல்லுகின்ற இறைவன் (நாயனர்) மனைவியை அழைத்துக்கொண்டு பூமியின்மேற் (போவாராய்ச்) செல்ல (அங்ஙனஞ் செல்லுகின்ற) வேதியர்முன்னே பகைமேற்கொண்டு உள்ளத்துள்ளே நிறைந்தெழுந்த கொடியகோபத்தால் மேற்கொண்டுசென்று சமீபத்தில் நெருங்கி எதிர்த்துநின்று, போகவழிவிடாமல் நின்மின்நின்மினென்று தடுத்தார்கள் என்பதாம்.

இத்திருப்பாட்டான், நாயனர் சுற்றத்தாரைநோக்கி, முன்னர் உங்கள் உடலைத் துண்டுசெய்து, இரண்டாவது உங்களுயிரை விண்ணுலகேற்றி, மூன்றாவது வேதிய ரைத் தையலுடன் அனுப்புகிறேன் என்று வீரமொழிகூறினாராகையால், சுற்றத்தாரும் வீரங்கொண்டு முன்வேதியரைத்தடுத்து அவனைத் தனியேவோட்டி, இரண்டாவது நமது பெண்ணை நம்வசப்படுத்திக்கொண்டு, மூன்றாவது பித்தனுகிய இயற்பகையோடு பகைத்துப் போர்செய்வோமென்று எண்ணி, எண்ணியபடியே முன்னே வேதியரைத் தடுத்தற்குத் துணிந்தார்களென்று கூறப்பட்டது.

அல்லதூஉம், இறைவன்வசப்பட்டு அவனருட்செயலின்வழியே செல்லுவோ ரிடத்தும் உடல்ஊழாய்க் கழியத்தக்கனவாகிய பிராரத்தவினைதாக்கி அதுசெய்யுஞ் செயலைச் செய்யும் என்பது சித்தாந்தநூற் றுணிபாகலான், அஃதேபோல் நாயனு ருடைய சுற்றத்தாரது செயல் மேற்பட்டெழுந்ததென்று கூறப்பட்டது (உ0)

நாயனார் சுற்றத்தினரை மாய்த்தல்.

சென்றவர் தடுத்த போதில் இயற்பகை யார்முன் சீறி
வன்றுணை வாளே யாகச் சாரிகை மாறி வந்து
துன்றினர் தோளும் தாளும் தலைகளும் துணித்து வீழ்த்து
வென்றடு புலியேறென்ன அமர்விளை யாட்டின் மிக்கார்.

(இ - ள்.) (சுற்றத்தார்கள் தாங்கள் எண்ணியபடியே) வேதியர் எதிரேசென்று, அவரைப்போகவொட்டாமல் தடைசெய்தபோது, (அதனைக்கண்ட) நாயனார், (அவருள் நுழைந்து) வேதியருக்கு முன்னேநின்று, (சுற்றத்தாரைநோக்கி) அவர்களைக்கோபித்து (சுற்றத்தார் பலரோடும்தாம் ஒருவரே போர்செய்யத் துணிந்ததமக்கு) வன்மையுடைய பெருந்துணை கையிலேந்தியிருக்கும் வாளேயாகக்கொண்டு (அவர்களைப்பின்னே மனைவியாரைப் போகவொட்டாது) இடம்வலமாக பன்முறை மாறிமாறிச் சுற்றிச் சுற்றிவந்து, (அப்போதைக்கப்போது) நெருங்கினவர்களது தோள்களையும் கால்களையும் தலைகளையும் வெட்டிவெட்டி பூமியிற்றள்ளி, எவ்வகைப்பட்ட மிருகங்களையுங் கொல்லவல்ல ஆண்புலியைப்போல, போர்செய்யும் விளையாட்டில் தளர்ச்சியில்லாதவராயினர் என்பதாம்.

பாய்ந்துபாய்ந்து போர்செய்வதில் திறமுடைமையும், அதில் தளர்ச்சியின்மையும் உடையது ஆண்புலியாகலான், அதுபோல் நாயனார் செய்தனர் என்பதுதோன்றப் புலியேறு என்றார். போர்செய்வதற்கிடனில்லாமல் முன் தோள்களையும் பின் தாள்களையும் வெட்டிக்கீழே வீழ்த்தித் துடிதுடிக்கச்செய்து அவர்களுக்குத் தமதுவீரத்தைக் காட்டிப் பின் தலைகளை வெட்டுவார் எனனும் அவரது வீரத்தன்மைதோன்ற தோளுந் தாளுந் தலைகளுந் துணித்துவீழ்த்து என்றார்.

இத்திருப்பாட்டான், சுற்றத்தார் நாயனாரிடத்து வருவதைவிட்டு வேதியரிடத்துச்செல்ல, அதைக்கண்டநாயனார் பொறுத்து பெருங்கோபங்கொண்டு அவர்களை எப்புறத்தும் போகவொட்டாது வளைத்து, அவர்களைக்கொல்வதற்குத் தக்க வலியதுணை தனதுதோள்களாகவே கொண்டு, ஆண்புலியைப்போலும் போர்செய்யத்தொடங்கினரென்று கூறப்பட்டது.

அல்லதூஉம், சீவன்முத்திநிலையுடையார் தம்மைச்சூழ்ந்துள்ள பாசக்கூட்டங்களைத் தம்மையொழிக்கவேண்டுமென்று மற்றொருவரைத் துணையாகக்கொண்டொழித்தல் கூடாதாகலான் நாயனார் ஒருவரே போர்செய்யத்துணிந்தாரென்றும், "சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடன்" என்றபழமொழிப்படி, இறைவன் தன்னோடு ஏகமாகிநிற்கும் நிலையைப்பெற்ற சீவன்முத்தர்களிடத்துத் தான் வேறாகநில்லாமல் அவர்களேயாய், அவர்கள்செய்யும் பாசநீக்கச்செயலையும் தன்செயலேயாகக்கொண்டு துணையாய்நிற்பன் என்னும் அவ்வுண்மைப்படியே, நாயனார் உடையராகலின் வன்றுணைவாளேயாக அமர்விளையாட்டின் மிக்கார் என்றுங் கூறப்பட்டன.

ஈண்டு, வன்றுணை வாளென்றது இறைவனென்னும் பொருளைக்குறித்ததென்க. எனவே இறைவன்பாசங்களைக்களைவதில் வாள்போன்றவனாகலினென்க. (உக)

மூண்டுமுன் பலராய் வந்தார் தனிவந்து முட்டி னார்கள்
வேண்டிய திசைகள் தோறும் வேறுவே றமர்செய் போதில்
ஆண்டகை வீரர் தாமே அனைவர்க்கும் அனைய ராகிக்
காண்டகு விசையிற் பாய்ந்து கலந்துமுன் துணித்து வீழ்த்தார்.

(இ - ள்.) (நாயனார் இடசாரி வலசாரியாக ஆண்புலியைப்போல் போர்செய்யுங் காலத்தில்) அவர்முன்னே சுற்றத்தினர் மூண்டு பலராய்க்கூடி நெருங்கிவந்தும், தனித் தனியே வந்தும் அவருக்கு இடைவெளியில்லாமல் போர்செய்வார்கள். (இவ்வாறன்றி)

பட்டுத்திசைகளிலும் (தனித்தனியாகவும், கூட்டத்தினராகவும், தங்கள்தங்களுக்கு வேண்டியபடியே வேறுவேறு வகையாகப் போர்செய்வார்கள், இவ்வாறு போர்செய்கின்றபோது, ஆண்தன்மையிற் சிறந்த வீரராகிய நாயனார், தாம் ஒருவரே ஒருவராக னும் இல்லையென்று சொல்லுவதற்கில்லாமல் ஒவ்வொருவருக்கும் எதிர்நிற்பவராகி, ஒருவராலும் காணுதற்கரிய விசையோடும் பாய்ந்துபாய்ந்து அவரவரோடுங்கலந்து முன்போல்தோள்களையும் தாள்களையும் தலைகளையும் வெட்டிவெட்டிப் பூமியில் தள்ளினார் என்பதாம்.

நாயனார் ஒருவரே ஒவ்வொருவரிடத்தும் இருந்தார் என்றால் எங்ஙனம் இருத்தல் கூடும் என்னும் ஐயம்நீக்குதற்கு விசையிற்பாய்ந்து என்றார். எனவே - பாய்கின்ற அவ்வேகத்திலேயே வாளால் வீசிக்கொண்டு போவதேயன்றி நின்று போர்செய்ததா இல்லை என்று அவரது வாட்போரின் திறத்தைக் கூறினாரென்க.

இத்திருப்பாட்டான், போருக்குவந்தாரது திறத்தையும், அத்திறமுடையாரிடத்து நாயனார்செய்த போர்த்திறத்தையுங் கூறப்பட்டன.

அஃதேபோல், பாசக்கூட்டங்கள் நாயனார்பால்வந்து எதிர்த்ததிறத்தையும், அவர் அப்பாசக்கூட்டங்களை முன்போல் வன்மையுடையனவாகக் கருதாமல் இறைவன் செயலாகிய தன்செயலின் திறத்தால் வென்றதிறத்தையுங் கூறப்பட்டன. (உ௨)

சொரிந்தன குடல்கள் எங்கும் துணிந்தன உடல்கள் எங்கும்
விரிந்தன தலைகள் எங்கும் மிடைந்தன கழுகு மெங்கும்
எரிந்தன விழிகளெங்கும் எதிர்ப்பவர் ஒருவ ரின்றித்
திரிந்தனர் களனில் எங்கும் சிவன்கழல் புனைந்தவீரர்.

(எ - து.) (நாயனார் சுற்றத்தாரைத் தோள் முதலியவற்றை வெட்டித்தள்ளும்போது) எப்பக்கத்தும் குடல்கள் போர்ப்போராக நெருங்கிக் கிடந்தன, (அஃதேபோல்) துணிபட்டனவாகிய உடல்கள் எவ்விடத்தும்கிடந்தன, சிரங்கள் எவ்விடத்தினும் பரவிக்கிடந்தன, கழுகுகள் எவ்விடத்தினும் நெருங்கிக்கிடந்தன, (இவ்வாறு எதிர்ந்த சுற்றத்தினரை வெல்ல) சிவனாரது வீரகண்டையை யணிந்திருக்கும் நாயனாரது கண்களினின்றும் கோபத்தீயானது எப்பக்கத்தும் எரிந்துகொண்டிருந்தன (அக்கோபக் கண்ணோடு) தன்னை எதிர்த்துப் போர் புரிபவர் ஒருவருமில்லாமல் நாற்பக்கத்தும் திரிந்துகொண் டிருந்தனர் என்பதாம்.

இத்திருப்பாட்டான், சுற்றத்தாரெல்லாங் கூறிய வீரமொழிகளனைத்தும், சொரிந்தும், துணிந்தும், விரிந்தும்போக கழுகுகள் கொள்ளைகொண்டனவென்றும், நாயனார் கூறிய வீரமொழி சிவனது வீரகண்டையைக்கொண்டு வெற்றியுடன் எங்கும் பிரகாசித்ததென்றுங் கூறப்பட்டன. (உ௩)

மாடலை குருதி பொங்க மடிந்தசெங் களத்தில் நின்றும்
ஆடுறு செயலின் வந்த கிளைஞரோ டணைந்தார் தம்மில்
ஓடினார் உள்ளார் உய்ந்தார் ஒழிந்தவர் ஒழிந்தே மாண்டார்
நீடிய வாளும் தாமும் நின்றவர் தாமே நின்றார்.

(எ - து.) நாற்பக்கங்களினும் உதிரவெள்ளமானது பெருக்கெடுத்து அலைமோதிக்கொண்டு செல்லும் போர்க்களத்தில், போர்செய்யும் செயலை மேற்கொண்டு வந்தவரோடுகூடிவந்தவர்களில் அக்களத்தினின்றும் நில்லாது ஓடினவர்கள் எவர்களோ அவர்களே உயிரோடு பிழைத்திருப்பவராயினர், ஓடாது இருந்தவரெல்லாம் இறந்தேபோயினர், (இவ்வாறு சுற்றத்தாருள் இருந்தவர் இறக்க, போனவர் இருக்க, போர்க்களத்தில்) ஒருவருமின்றி நாயனார் ஒருவரே நீண்டவாளும் தாமுமாக நின்றனர் என்பதாம்.

இத்திருப்பாட்டான் மறையவரைபபோக்கி, மாதினைக்கைக்கொண்டு, நாயனரோடு போர்செய்யலாம் என்று எண்ணிநின்றாரெல்லாம் நில்லாதொழிய, மாதினை மறையவரோடு கூட்டிச் செல்லவிடுவேன் என்று வீரங்கொண்டு நின்றவரே இறைவனோடு நின்றனரென்று கூறப்பட்டது.

அஃதேபோல், ஒழிக்கவேண்டிய பாசங்களையெல்லாம் பற்றறப்போக்கி, இயல்பாகவே பற்றற்ற ஒருவனைப் பற்றி நின்மலசொருபராய்ப் பிரகாசித்தன ரென்றுங் கூறப்பட்டது. (உஅ)

திருவுடை மனைவி யாரைக் கொடுத்திடைச் செறுத்து முன்பு
வருபெருஞ் சுற்ற மெல்லாம் வாளினால் துணித்து மாற்றி
அருமறை முனியை நோக்கி அடிகள்நீர் அஞ்சா வண்ணம்
பொருவருங் கானம் நீங்க விடுவனென் றுடனே போந்தார்.

(எ - து.) திருவருட்செல்வமுடைய தமது இல்லறத்தாளை வேதியருக்குக்கொடுத்து (வீதியிற்போகவிடும்போது அதுகாரணமாய்) அவ்விடைவழியில் கோபித்துத் தமக்குமுன் எதிர்த்துவரும் அளவில்லாத சுற்றத்தினரெல்லாம், மாண்டுபோம்படி வாட்படையினால் வெட்டி உயிரைப்போக்கி (பின்னர்) சிறந்த வேதியரைப்பார்த்து, சுவாமிகாள்! (அஞ்சும்படியாக வந்தவரெல்லாரும் எனது வாளினால் மாண்டார்கள் இன்னமும்) நீர் அஞ்சாவண்ணம், காடுகளில் பெருங்காடாயுள்ள இந்தக்காட்டை (நீங்களிருவரும்) கடந்து போமளவும், (நான் துணையாய்வந்து) அங்குவிடுகிறேன் என்றுசொல்லி அவருடன் நாயனார்போயினார் என்பதாம்.

தமக்குச் சுற்றத்தாரெல்லா மாண்டாரென்று தெரியவரினும், வேதியருக்கு இன்னமும் யாவரேனுமொருவரோவென்று ஐயந்தோன்றுமாகலின், அவ்வையமொழிய "அடிகள் நீர் அஞ்சாவண்ணம் கானம் நீங்க விடுவன்" என்றார். எனவே, இன்னமும் யாவர்வரினும் அவர்களையும் வாளினால்வெட்டி இத்திருவுடையாளை நீர் கொண்டுபோம்படிச் செய்வேனென்பதாம்.

தனக்குப் பற்றாயிருந்த பாசபபற்றுக்களைத் தான் பதியாகப்பற்றியிருந்த நாயகனால் பற்றறத்தொடுத்து, அந்நாயகனால் பற்றியிருந்த பதியைப் பின்பற்றி அத்திருவாளனாகிய இறைவனால் பற்றப்பட்டாராகலின் திருவுடைமனைவியார் என்றார்.

இத்திருப்பாட்டான், வேண்டுதலும் வேண்டாமையும் அற்ற இறைவன், "மன்னு காதல் உன்மனைவியை வேண்டி வந்தனன்" என்றுகூறி வேண்டும்படிநின்ற திருவுடையராகிய தமதுமனையாட்டியை வேண்டிய அவ்விறைவர்பின் தொடர்ந்து செல்லும்படி விட்டு, தம்மைச் சூழவந்த பாசங்களையெல்லாம் ஞானமயமாகிய வாளினால்வெட்டிக் கழித்தனரென்பதும், தாம்கழித்த அப்பாசங்களில் மீண்டும் செல்லுவனோ என்னும் ஐயத்தால் உண்டாகத்தக்க அச்சமானது தம்மையாட்கொண்ட இறைவனுக்கு உண்டாமாகலின் அவ்வச்சம் அவருக்குநீங்க அடிகள் நீர் அஞ்சவேண்டாம் என்பதும், பாசாடவிக்குளே வாழ்கின்ற என்னுடன் நீ வேறாகாது உடனாயிருந்தும் உன்னையறியாதிருந்த எனக்கு உன்னையறிவித்தும், நான் உன்னுடனாய் வாசெய்தனை யாகலின், இனி, பாசங்கடந்த பரவெளியாகிய அருளிடத்தைக் கூடாது, பாசநீக்கமே அடையும்பேறெனக்கருதி இங்கு உன்னைவிட்டுப பிரிவேனாயின் அவ்வருளிடத்தை யான் யார்துணையாக வந்துகூடுவேன். ஆகலின், யான்கூடும் இடமாகிய அருளிடத்தில் உன்னை விடுவேனாயின் அஃதாவது அவ்வருளிடத்தில் என்போதவாசனையால் உன்னைச் சுட்டியறியும் அச்செயலையும் விடுவேனாயின் நீ என்னைவிட்டிராய் ஆகலான் கானம்நீங்க விடுவன் என்று உடனே போந்தனரென்பதுங் கூறப்பட்டன. (உகூ)

நாயனாரைப் போகச் சொல்லல்.

இருவரால் அறிய வொண்ணா வொருவர்பின் செல்லு மேழை
பொருதிறல் வீரர் பின்பு போதமுன் போகும் போதில்
அருமறை முனிவர் சாய்க்கா டதன்மருங் கணைய மேவித்
திருமலி தோளி னாரை மீளெனச் செப்பி னாரே.

(எ - து) பிரம விஷ்ணுக்களால் மேலுங்கீழும் தேடியுங் காணக்கூடாத பெரியோன் பின்னே, (முடியையும் அடியையுங்கண்டு செல்லுகின்ற) அம்மையார் பின்னர், போர்த்திறத்தில் வல்ல வீரராகிய நாயனார்போக, (அம்மையாருக்கு) முன்னே அரிய மறைமுனிவராகிய வேதியர் போகும்போது, திருச்சாய்க்காடென்னுந் தலத்தின் சமீபத்தை யடைந்து அங்குநின்று, விஜயலக்ஷ்மி பொருந்தியிருக்குந் தோளையுடைய நாயனாரைப பார்த்து, (நீர்) உமதுவீட்டிற்குத் திரும்பலாம் என்றுகூறினார் என்பதாம்

இருவரால் அறியவொண்ணா ஒருவர்பின் ஏழைசெல்லும் எனவும், (அவர்) பின்பு பொருதிறல் வீரர்போத எனவும், (அவ்விருவர்முன்) அருமறைமுனிவர் போகும்போதில் எனவுங் கொண்டுகூட்டுக.

அறியவொண்ணாமற்போன பிரமவிஷ்ணுக்கள் இருவரும் தேவரினும் பெரியோர் அப்பெரியோர்களுக்கெட்டாத பெரியோன் ஏழைபங்காளனாகலின் அம்மையாராகிய ஏழைக்கும் எளியராளுரென்பார் ஏழைபின்செல்ல எனவும், சுற்றத்தாரைமாய்த்து முன்போல் பின்வந்தனரென்பார் வீரர்பின் போத எனவும், நாம்மீளவும் அழைக்கும் போதுவருவாயென்னுங் குறிப்புத்தோன்ற மீளெனச்செப்பினார் எனவுங் கூறினார்.

இத்திருப்பாசுரத்தான், ஆன்மாக்களுக்கு ஆணவபாசம் நீங்க, மாயா பாசகாரியங்களாகிய தனுகரண புவனபோகங்களை இறைவன் கொடுத்த உண்மையுணர்ந்தவர், உணர்ந்த அவ்வுண்மைவழியே ஆணவபாசமற்று, அருள்வழிப்பட்டு மாயாபாசங்களையெல்லாம் அவன்வழிப்படுத்தி இறைவனைக் காணப்பெறுவாராகலின், இறைவன் முன்னேபோக, அவர்பின்னே மனையாட்டியார்போக, அவர்பின்னே நாயனார் போயினாரென்பதும், பாசமாகிய காடுசாய்ந்தஇடமே இறைவன் நிற்கும் இடமாகலின் அக்குறிப்புத்தோன்ற சாய்க்கா டதன்மருங்கணைந்தா ரென்பதும், மாயாபாசத்தானும், அப்பாசக்கூட்டத்தானும், ஆணவபாசத்தின் வலியைச்சாராது, ஆணவபாசத்தின் வலியைக்கொண்டே, கன்மபாசங்களை வெட்டியெறிந்து அருள்வலியைப்பெற்றவல்லாளர் "எத்தனுவில்நின்றும் இறைபணியார்க் கில்லைவினை" என்ற சிவஞானபோதவசனப்படி இறைபணியில் நிற்பரேயன்றி, தனுவின்பணியில் சிறிதேனும் தாக்குற்று வருந்தாராகலான் அவ்வனுபவவுண்மைதோன்ற திருமலிதோளினாரை மீளெனச்செப்பினாரென்பதும் கூறப்பட்டது. (உசு)

தவமுனி தன்னை மீளச் சொன்ன பின்தலை யாலார
அவன்மலர்ப் பதங்கள் சூடி யஞ்சலி கூப்பி நின்று
புவனமூன் றுய்ய வந்த பூசுரன் தன்னை யேத்தி
இவனருள் பெறப் பெற்றேனென் றியற்பகை யாரு மீண்டார்.

(எ - து.) இறைவனார், தவமுனிவராகிய நாயனாரைப் பார்த்து நீ திரும்புவாயென்று சொல்லியபின்னர், அம்முனிவரது மலர்போன்ற பாதங்களைத் தமதுமுடியிற் பொருந்தும்படியாகச் சூடி, (பின்) இருகரங்களையுங் குவித்துநின்று, மூன்றுலகமும் உய்யவந்த அந்தவேதியரைப்போற்றி, (நான் - வந்த இடையூறுகளெல்லாம் ஒழியப் பெற்று) இம்முனிவரது அருளைப் பெறும்படியாகப் பெற்றேன் என்று இயற்பகையாரும் திரும்பினரென்பதாம்.

தவவேடத்தோடு தூர்த்தவேடமும உடையவராய் வந்து காதலுள்மனைவியை வேண்டி வந்தனனென்று கேட்க, கேட்டவாறே நாயனாகொடுக்க, மனைவியாரும் தன்பின் தொடர்ந்து, கணவனைநோக்காது தம்மையே நோககிவரவும், அவாபால் காதலைக்கருதாது முநிவருக்குரிய கருணையே கருதினாாதலால் தவமுனி என்றார். நாயனா அம் முநிவா அடியைச்சூடுவதற்குக கீழேவீழ்ந்து வணங்கவும், அவரடி தமதுதலையிற் படாது சிறிதுதூரத்திலிருபப அதுபொழுது அவ்வடி தலையிற்படும்படி தலையின்முயற்சியினாலே தீண்டிமகிழ்ந்தனரென்பாா தலையாலாா அவன்மலாப்பாதங்கள்சூடி என்றார். முடியில் திருவடிபடச சரீரமகிழ்ச்சியை யடைநததுபோலும், நமதுமனைவியாரைக கொண்டுபோக வந்தவரெல்லாம ஒழிந்து மனைவி பின்போக அவாசவலையற்று நம்மைத திருமபிபபோகலாமென்று கூறினாரே இதுவனறோ நாமபெறுமபேறு என்று உள்ளமும மகிழ்ச்சியடைநதனரென்பாா இவனருள் பெறப்பெற்றேன் என்றாா. இவ்வாறு சூடப பெற்றோமெனறு காயமகிழ்ச்சியும, மனையாளை அவாகொள்ளபபெறறோமென்று மனமகிழ்ச்சியும், இவ்விருமகிழச்சியும் வாயினால் எடுத்துககூறி வாக்கின்மகிழ்ச்சியும் உடையராயத் திருமபினரெனபாா - இயற்பகையாரும் மீண்டார் என்றாா.

இததிருபபாசுரததால் நாயனாா, மனைவியையும் சுற்றத்தாரையும் இழக்கவந்தோமே, என்று மயககச்செயயவலல மாயையினசெயலற்று, அடியாா வேணடியவற்றை இல்லைஎனச சொல்லவரும மாயாபாசதசாாபுகளும மடியபபெறறு, அடியாா யாது வேணடினும இல்லையெனறுதே கொடுககுமபேறு இனறு நிலைபெறபபெறறோம என்று அவா மகிழ்ந்தமை கூறபபட்டது (௨௭)

நாயனாரை மீள அழைத்தல்.

செய்வதற கரிய செய்கை செய்தநற றொண்டா போத
மைதிகழ் கண்டன் எணடோண் மறையவன் மகிழ்ந்து நோக்கிப்
பொய்தரும் உளளமிலலான் பாாககிலன் போனான் என்று
மெய்தரு சிநதை யாரை மீளவும அழைககலுறறாா.

(எ து.) யாவராலும செயதறகரிய செயகையைச செயத நல்லதொணடனாரகிய நாயனாா தமது மனைவியாரையும சிவனடியாரையும திரும்பிபபாராது, தமது வீட்டைநோககிப போக, நீலகணடததையும எட்டுத தோளையும் உடையசிவவேதியா, சநதோஷிததுபபாாதது, பொய்யைவிளைவிககும் மனமில்லாதவனாகலின், நம்மைத் திரும்பிபபாராது போகின்றானென்று, மெயயைவிளைவிககும சிநதையுடைய அவரை, திரும்பவும் அழைககத்தொடஙகினாா எனபதாம.

ஆன்மாககள், பிறவிககு வரததலைபபட்ட நாள்முதல இன்றளவும் விடாது மாறி மாறிப் பிறவிகளையெடுகதுவருகின்ற காரணம பாசபதார்த்தங்களாகிய பெண் பொன் முதலியவைகளில் உண்டாயவரும் பற்றேயாம அவ்வபபிறவிகளிலும் புத்திபூர்வகமாகவும், அபுததிபூாவகமாகவும செயயபபட்டுவரும தவவிரதமுதலிய யாவும் பாசபதார்த்தங்கள் தமமுடைமையாயிருததற்கேயாம. இவ்வாறு பிறவிதோறும் வன்மைபெற்று வந்துள்ள பாசபபற்றைச சேதிபபதற்கே, பரிபாகம் வரபபெற்றோா கேட்டுச்சிந்தித்துத தெளிந்து நிட்டைகூடுவதாகும, அஙஙனம நிட்டைகூடினும் "அம்மமம மனமாயை வெல்லவெளிதோ" என்று அபபாசங்களோடு போராடிபபோராடி ஓய்ந்துபோகின்றனா இபபோராட்டமொழிந்து, பறறற்றான் பற்றினைபபற்றிப பாசமொழிந்து நிற்கு நாள் எநதநாளோஎன்று ஏங்குகின்றனா இவ்வாறு ஏங்குகின்ற ஞானிகளாலும் செயதற்கரிய பாசச்சேதத்தை ஒரடியாாபொருட்டாக வாளோடுபலகையேந்தி, தோளிணை துணையேயாக தமமைச்சூழ்நது வளைந்து கொணட பாசத்தாராகிய சுற்றததினரையெல்லாம் துணித்து வீழ்த்தி, அகபபற்றையும புறபபற்றையும் மிகஎளிதாய்பபோக்கிய வல்லாளர் என்பாா செய்வதற்கரியசெயகை செய்தநற்றொண்டா என்றார்

தேவர்களுடைய சம்பந்தத்தால்வந்த வீடத்தால் கேட்டையடையாது பிரகாசித்ததுபோலும் நாயனார்சம்பந்தத்தால் வந்தசுற்றத்தாரால் தாமொருகேட்டையும் அடையாது பிரகாசித்தனராகலானும், நாயனாருக்குத்தனது எண்டோளையும் அவரறியாவண்ணம் துணையாகக்கொடுத்து எண்டிக்குகளிலும் சூழ்ந்துவந்த சுற்றங்களையெல்லாம் களைந்தனனாகலினானும், மைந்திகழ்கண்டன் எண்டோண்மறையவன் என்றார்.

தனது தோளிணையால் எண்ணிறந்த சுற்றத்தாரையெல்லாம் வென்றவராயிருந்தும், அவ்வெற்றியைத் தனதுதோள்வலியாலென் றெண்ணாமல் இது எண்டோளனுடைய வலியாலென்றுணர்ந்து மகிழ்ந்தனராகலின், அம்மகிழ்ச்சியை இறைவன் கண்டு மகிழ்ந்தனனென்பார் மகிழ்ந்துநோக்கி என்றார்.

நீங்காபபாசங்கள் நீங்கவந்தகாலத்து அப்பாசங்களில் நெடுங்காலமாய்ப் பழகிவந்த உள்ளமானது விளக்கு அணையும் பருவத்தைப்பார்க்கும் இருளைப்போல, அறிவற்றம் பார்க்குந் தன்மைத்தாகலின், அவ்வுள்ளம் இவர்பாலிருக்குமாயின் நம்மைப் பிரியாநங்கையாகிய நமது மனையாட்டி இன்று மறையவர்பால் எவ்வாறு வாழத்துணிவாள், நமது ஆணைக்கஞ்சி ஒருவாறு வாழத்துணிந்தாலும் அவளது கற்பு அவளைத்தடுக்குமே, அத்தடையை அவ்வேதியர் எவ்வாறு போக்கவல்லவராவா, ஆகலின் அவர்பின்னே போகின்ற நமதுமனையாட்டி நாம் அவளைப்பிரிந்துவரத் துணிந்ததுபோலும், நம்மைப் பிரிந்துபோவதில் துணிவுடையவளாய்ப் போகின்றனளா! மனங்கலங்கிப் போகின்றனளா! அக்குறிப்பைச் சற்றுநின்று திரும்பிப்பார்ப்போமென்று எண்ணுவனவாயிருக்கின்ற பாச எண்ணங்களை எண்ணும்படியாகச் செய்யும். அவருள்ளம் வேதியராய்வந்த சங்கரன்பால் ஆகி ஆசைநிறைந்த தன்மையால் சவிகற்பவழிப்படாது நிர்விகற்பநிலையராய்ப்போன தன்மையைக் கண்டனரென்பார் பொய்தரும் உள்ளமில்லான் பார்க்கிலன் போனான் என்றார்.

"உள்ளமுதல் அனைத்தும் ஒன்ற உருகவரின், உள்ளம் உருகவந்து உன்னுடனாம்" என்று திருக்களிற்றுப்படியாரிற் கூறியபடி, உள்ளமுதலனைத்தும் ஒன்ற உருகவருவதாகிய நிர்விகற்பநிலையராய்ச் செல்கின்ற அந்நாயனாரை, இறைவன் தமது உள்ளம் அவர்பால் உருகி உடனாயிருக்கத் துணிவரேயன்றி, வேறுபிரிந்திருக்கத் துணிவரோ, துணியார் என்பார் மெய்தருசிந்தையாரை மீளவும் அழைக்கலுற்றார் என்றார்.

பொய்தரும் உள்ளம் - பாசபதார்த்தங்களைப் பற்றுதற்கான ஆசையை விளைவிக்கும் தன்மையுடைத்தெனவும், மெய்தருசிந்தை அவ்வாசையை அரன்பாலாக்கி அவ்வரன்பால் அன்பைவிளைவித்துத் தன்னறிவு அழிந்திருக்கச்செய்யும் தன்மையுடைத்தெனவும் அறிக.

இத்திருப்பாசுரத்தான், இயல்பாகவே பாசங்களில் நின்றும் நீங்கியிருக்கும் இறைவன், இயல்பாகவே தன்னைவிட்டு நீங்காதபாசத்தைப் பகைத்தநாயனாரது பாசபதார்த்தங்களைத் தன்னுடைமையாக்கித் தன்வசப்படுத்திக்கொள்ளவும்; அவரைத்தான் ஏவும் ஏவல்வழிநிற்கும் அடிமையாளாகவும் ஆண்டருளவந்த காலத்து, அங்ஙனமே பாசபதார்த்தங்களை அவனுடைமையாக்கும் செயலிலும், தான் அவன்ஏவும் ஏவல்வழி மாறாது நிற்கும் அடிமைத்திறத்தில் திறம்பாத அரியசெயலிலும் நின்ற நற்றொண்டரென்பதும், தன்னுடைமையும், தன்னடிமையும் எவற்றாலும் தடைபடாது தன்பாலாக்கிய அச்செயலால் இறைவன்மகிழ்ந்து நோக்கினான் என்பதும், தாம் மகிழ்ந்துநோக்கிய அக்கருணைநோக்கிலேயே நாயனாரது நோக்கம் மாறாதிருத்தற்கு இறைவன் மீளவும் அழைத்தானென்பதுங் கூறப்பட்டன. (௨௮)

இயற்பகை முனிவா ஓலம் ஈண்டுநீ வருவாய் ஓலம்
அயர்ப்பிலா தானே ஓலம் அன்பனே ஓலம் ஓலம்
செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் என்றான்
மயக்கறு மறைபோ விட்டு மாலயன் தேட நின்றான்.

(எ - து.) ஆன்மாக்களுடைய அறியாமையை அறுக்கவல்ல வேதங்கள் ஐயா ஐயா வென்று ஓலமிட்டலறியும், அரிபிரமர்கள் கீழும்மேலும் தேடியும் அறியப்படாது நிற்கின்றவனாகிய இறைவன், இயற்பகைமுனிவனே! நான் உன்னடைக்கலம், நானிருக்கும் இந்த இடத்திற்குச் சீக்கிரமாகவருவாய் நான் உன்னடைக்கலம், அடியார்களுக்கு வேண்டியவற்றைச் செய்வதில் சோர்வில்லாதவனே நான் உன்னடைக்கலம். என்பால் அளவிலா அன்புடையவனே நான் உன்னடைக்கலம், செய்தற்கரிதாகிய செயலை மிக எளிதாய்ச் செய்த தீரபுருஷனே! நான் உன்னடைக்கலம் அடைக்கலம் என்று பேரோசையிட்டுக் கூவினர் என்பதாம்.

"மன்னுகாதல் உன்மனைவியைவேண்டி வந்தது இங்கு" என்று நான் சொல்லி உன்மனைபுகுந்தகாலத்தில் நீ என்னைக்கண்டு "முநனை நம்பெருந்தவத்தினல் எங்கோ முனிவர் இங்குஎழுந்தருளியது' என்று மகிழ்ந்தமகிழ்ச்சியினும், பெருமகிழ்ச்சி யடைந்தனையேயன்றி, மனைவியைக் கேட்டானே என்று முனியாதொழிந்த முனிசிரேஷ்டனே உன்னையன்றி எனக்குத்துணை யாவருள்ளார் என்பார் இயற்பகைமுனிவா வோலம் என்றார்.

மனையாட்டியைக் கொடுக்காபபொருளாகக் கருதாது, கொடுக்கும் பொருளாகவே கருதி, "இது எனக்கு முன்புள்ளதே வேண்டி எம்பிரான்தந்த பேறு எனக்கென்று உன்காதலிபாற் கதுமெனச் சென்ற"னையே உன்னைபபோலும் எனக்கு வேண்டியதை விரைந்துகொடுப்பவர் யாவருள்ளர் ஈண்டுநீ வருவாயோலம் என்றார்.

உன்னுடைய, "தையல்தன்னை யான் தனிக்கொடுபோகக், காதன்மேவிய சுற்றமும் பதியும் கடக்க நீ துணைபோதுக" என்று நான்சொல்லியபோது, "யானே முன் செய்குற்றேவல்ஒன்று, இதுதன்னை என்னையுடையவர் அருளிச்செய்யநின்றது பிழையும் என்று நினைந்து, பூங்கச்சுப பொலியவீககி, வாளொடுபலகையேந்தி, தோளிணை துணையேயாக, வருபெருஞ்சுற்றமெல்லாம் வாளினல் துணித்துமாற்றி" (என்னை நோக்கி) அடிகள் நீர் அஞ்சாவண்ணம், பொருவருங்கானம்நீங்க விடுவேனென்று (என்னுடனே வந்தவனே) உன்னைப்போலும் சோர்வில்லாமல் பாதுகாக்கும் திறமுடையவர் யாவருள்ளார் என்பார் அயர்ப்பிலாதானே ஓலம என்றார்.

திருமலிதோளனாகிய உன்னை நான் "மீளனச்செப" பியபொழுது, "பொய்தரும் உள்ளத்"தின்வசபபட்டு மனையாட்டியை ஆசையால் திரும்பிப்பார்ப்பதும் ஒழிந்து, பாராதவனாய்ப் போயினையே, அவ்வாறுபோனது என்பால் நீவைத்த "மெய்தரு சிந்தை"யினலல்லவா, உன்போல் என்பால் அன்புள்ளாரை நான் எங்ஙனங் காண்பேன் இல்லை இல்லை என்பார் அன்பனேஓலம்ஓலம் என்றார்.

உன்னை நான் மீளனச்செபப, நீ மீண்டபொழுது, மெய்தரும் சிந்தைவசபபட்டு, எனது மலர்ப்பாதத்தைப் பிரிவதற்கஞ்சி ஆராக் காதல்கொண்டு அப்பாதத்தை உனதுசிரம்பொருந்தும்படிச் சூடி, அஞ்சலிகூப்பிநின்று ஏத்தி, இவ்வருள் பெறப பெற்றேனென் றேகினையே, உன்னைபபோலும் இவ்வரிய செய்கையைச் செய்ததிரார் யாவர். அங்ஙனமான அரியசெய்கையைச் செய்த உன்னை நான் எங்ஙனம்பிரிந்திருபபேன் என்பார் செயற்கருஞ் செயகைசெயததீரனே ஓலம் என்றார்.

இவ்வாறு, நாயனரது * அறுவகைச்செயலையும் எடுத்துக்கூறியதே யல்லாமலங்ஙனங்கூறுந்தோறும் ஓலம்ஓலம்என்று ஓலமிட்டவன் யாவன் எனில்,—மறைகளெல்லாம் பனமுறை ஓலம் ஓலம்என்று கூறிஅழைபபினும் வாராதவனும், அரிபிரமர்கள் பன்னெடுங்காலம் காண்பதற்குத் தேடினும், காணப்படாது நின்றவனுமாகிய, ஐஸ்வர்யாதி ஷட்குணசம்பன்னனாகிய இறைவன் என்பார்—, மறையோலிட்டு மாலயன் தேடநின்றன் என்றார்.

* திரும்பிப்பாராது போனமை ஓர்செயலாகவும், அவ்வாறுபோனது அன்பு தங்கான்பால் வைத்தமை ஓர் செயலாகக்கொண்டு அறுவகை என்றும்.

இத்திருப்பாசுரத்தான், தீர்ந்தஅன்புடையாராகிய நாயனாரது அன்பின்திறத்தை இறைவன்பாராட்டி, அவர்பால் அவரினும் அன்பனாய் ஓலமிட்ட அன்பின்திறத்தைக் கூறப்பட்டது. (௨௬)

## நாயனார் வர இறைவன் மறைதல்.

அழைத்தபேர் ஓசை கேளா அடியனேன் வந்தேன் வந்தேன்
பிழைத்தவர் உளரேல் இன்னும் பெருவலித் தடக்கை வாளின்
இழைத்தவர் ஆகின் றாரென் றியற்பகை யார்வந்தெய்தக்
குழைப்பொலி காதி னானும் மறைந்தனன் கோலங் கொள்வான்.

(இ - ள்.) இயற்பகையாரானவர், தம்மை ஓலம்ஓலம் என்று அழைத்ததாகிய பேரோசையைக்கேட்டு, அடியேன் இதோ வந்துவிட்டேன், வந்துவிட்டேன் என்று எதிரோசைகாட்டி, முன்செய்தபோரில் தப்பிப்போனவர் இன்னமும் தேவரீரைத் தடைசெய்வதற்கு ஒளித்திருந்து இப்போது உளராகவருவாரானால், மிக்க வலியினையுடைய எனது நீண்ட கையினிடத்திருக்கும் வாளினால் செய்யப்படும் கொலைத்தொழிலுக்கு ஆளாகின்றார் என்று வீரமொழி கூறிவந்து சமீபித்தபோது, சங்ககுண்டலமணிந்திருக்கும் இறைவனும் தமது தெய்வவுருவத்தைக் கொள்ளும்பொருட்டுத் திருவுருக்கரந்தன ரென்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், பாசபபற்றற்றானாகிய தனது பற்றினைபபற்றி பாசப்பற்றற்றவர் நாயனார் என்னும் அவ்வுண்மை யாவரும்உணர ஓலம்ஓலம் என்று பேரோசையிட்டழைக்க, ஐம்புலஓசை யடைக்கிய நாயனார் அவ்வோசைவழியே மீண்டு, என்னை மீளாவடிமைகொண்டமெய்யனே வந்தேன் வந்தேனென்று வந்ததும், வந்து பாசக்கூட்டத்தையுங் காணாது, பாசக்கூட்டத்தைக் களைவதற்குத் தடஸ்தபபட்ட தடத்தவடிவையுங்காணாது, தனியராய் (அசத்துமாகாது, சத்துமாகாது) நின்றகாலத்து இறைவன் நாயனாரை சொரூபவடிவத்தைக் காணுமாறு மறைந்ததுங் கூறப்பட்டன. (௨௭)

## இறைவனை விடைமேற் காண்டல்.

சென்றவர் முனியைக் காணார் சேயிழை தன்னைக் கண்டார்
பொன்றிகழ் குன்று வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த தென்னத்
தன்றுணை யுடனே வானில் தலைவனை விடைமேற் கண்டார்
நின்றிலர் தொழுது வீழ்ந்தார் நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார்.

(இ - ள்.) இன்னமும் பகைவர் உளரென வருவாராயின் அவர்களை எனது கையிலுள்ள வீரவாளுக்கு இரையாக்குகின்றேன் என்று சொல்லிக்கொண்டே போனவராகிய இயற்பகைமுனிவர், (இயற்பகைமுனிவா வோலம் என்றுதம்மையழைத்த) பெரிய முனிவரைக்காணாமல், தனது மனைவியாரைமாத்திரங் கண்டனர், (நம்மையழைத்த முனிவர் எங்கே யென்று சுற்றுமுற்றும் பார்த்து மேலேபார்க்கும்போது) வெளியிடத்தில் பொன்மலையானது வெள்ளிமலையின்மேல் பிரகாசிப்பதுபோல, வெள்ளிய விடபவூர்தியின்மேல் தனது துணையாகிய உமாதேவியாரோடு இறைவனிருக்கக் கண்டனர். (கண்டமாத்திரத்தில் நின்றிருந்தவர்) நிற்கப்பெறாதவராய், பூமியில்வீழ்ந்து வணங்கி மீண்டும் எழுந்து இறைவனைக் கண்ணாரக் காணப்பெற்றார் என்பதாம்.

வானில் விடைமேல், தன்றுணையுடனே தலைவனைக் கண்டார் எனவும், நின்றிலர் வீழ்ந்தார் தொழுது எனவும் கூட்டுக.

பொன்றிகழ்பொருப்பு - சிவபெருமான், வெள்ளிபபொருப்பு - விடபவூர்தி என்க.

இத்திருப்பாசுரத்தான், மலசத்தியினின்றும் ஆன்மாக்கள் நீங்கத் தலைப்பட்டு நின்ற திரோதானசத்தியானது, அம்மலசத்தியைக் கெடுத்தபின்னர், அம்மலத்தோடு சாராது தனித்து நிற்றல்போல் தனித்துநிற்கும் தனது மனையாட்டியைக் கண்டாரென்

பதும், திரோதானசத்தியைக் காணப்பெற்றார்க்கு அருட்சத்திதெரிசனமும், அவ்வருட் சத்தியுக்தமாய் விளங்கும் சிவதரிசனமும் கிடைத்தல் அக்கணமே என்பதுபோல் தன் மனையாட்டியைக் கண்டபொழுதே, தன் துணையுடனே வானில் தலைவனை விடைமேற் கண்டாரென்பதும், விடாதிருந்த பாசத்திற்கு விடையால் விடைகொடுத்த தலைவனைக் கண்டவர் அவன்றாளே தாரகமாய் அவ்வருளில் வீழ்ந்துகிடப்பாரென்பதுபோல் நின் றிலர் தொழுது வீழ்ந்தார் என்பதும், அருள்வசப்பட்டார் அருளுடையானைக் காண்டல் வாழ்த்தல் முதலிய அருட்பணியில் தலைப்பட்டொழுகுவா ரென்பதுபோல் தொழுது வீழ்ந்தவர் மீளவும் எழுந்து வாழ்த்துவதற்கு நேர்ந்தாரென்பதுங் கூறப்பட்டன. (கூக)

## இறைவனைப் போற்றல்.

சொல்லுவ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லைவந் தருளி யென்னை வழித்தொண்டு கொண்டாய் போற்றி
எல்லையில் இன்ப வெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி யென்ன.

(எ - து.) இறைவனே! நீஎன்பால் மறைமுனிவனாய் வந்து இயற்றிய திருவிளை யாடலையும், இப்போது விடையின்மேல் கொடுக்கும் இக்காட்சியினையும் இத்தன்மைத் தென்று அறியுந் தரமுடையவனாவனே ஆகேன். அது அறியாதொழியினும், என்னைத் தன்வசப்படுத்திய இத்திருவுருவக்காட்சி நீடூழிவாழக்கடவது, இச் சிறியேன்பொருட் டாய்க் கொண்ட இப்பெரிய தோற்றத்திற்கு யான் வந்தனஞ்செய்கின்றேன், நான் உன்னைக் காணப்பெறாது பிறந்திறந்து வருந்தாவண்ணம் இப்பிறவியிலேயே உன்னைக் காணும்படி நீயே விரைந்துவந்து என்னை வழியடியனாகத் தொண்டுகொண்டனையே அப் பெருங்கருணைக்கு வந்தனஞ்செய்கின்றேன். இங்ஙனம் அடிமைகொண்ட இச் சிறிய அடிமையில் அளவுபடுத்தவொண்ணாத பேரின்பவெள்ளத்தை என்னுள்ளாக்கினை யே, அக்கருணைப்பெருக்குக்கு வந்தனஞ்செய்கின்றேன். தில்லையம்பலத்துள் நின்று நடனஞ்செய்தருளும் பொன்போன்ற திருவடிகளுக்கு வந்தனஞ்செய்கின்றேன் என் பதாம்.

இத்திருப்பாசுரத்தான், தில்லையம்பலத்துள் ஆடும் சேவடியுடைய நீ, ஆடுந்தோற் றத்தினாலே என்னை யடிமைகொள்ள நினையாமல் என்னைப்போலும் சங்கம வடிவ மாகிய தோற்றங்கொண்டுவந்து எனது இச்சை உன்வழிசார்ந்துநிற்க, எனது இச்சா ரூபமாகிய மனையாட்டியை உனது இச்சாரூபமாக்கிக்கொண்டும், எனது கிரியாரூப மாகிய செயலை உனது கிரியாசத்தியுட்படுத்தி பாசச்சேதம்செய்யும் வன்மையுடைய தாகவும், எனது ஞானரூபமாகிய அறிவை உனது ஞானசத்தியுட்படுத்தி, விடையின் மேல் வருவதாகிய இந்த ஞானசொரூபத்தைக் கண்டுகளிக்கவும் செய்தனையே இம் முறையை எடுத்துச்சொல்லி உன்னை நான்வாழ்த்துவேனா? எனது இச்சாஞானக் கிரி யைகளை வழிவழியாய் உனது இச்சா ஞானக் கிரியைக்குட்படுத்திக் கொண்டதேயல்லா மல் எனது தேகேந்திரியப் பிராணாதிகளையும், வணங்கவும் வாழ்த்தவும் காணவும் களிக்கவு மாகிய வழித்தொண்டில் ஈடுபடும்படி ஆளாக்கிக்கொண்டனையே! இவ்வதிசயத்தைச் சொல்லி வாழ்த்துவேனா, எனது தேகேந்திரியாதிகளும், இச்சையாதிகளும் தோன்றா விடத்துத் தோன்றுவதாகிய எல்லையில் இன்பமாகிய பேரின்பத்தை, தேகாதிகளும் இச்சையாதிகளும் குன்றாது தோன்றியிருக்கும் இவ்விடத்தில் தோன்றச்செய்து என் னைக் களிக்கச்செய்தனையே இவ்வருட்டிறத்தை எடுத்துச்சொல்லிவாழ்த்துவேனா? நீ என்னை உனது திருவாக்கினால்,—இயற்பகைமுனிவா எனவும், அயர்ப்பிலாதானே என வும், அன்பனே எனவும், செயற்கருஞ்செய்கைசெய்த தீரனேஎனவுங் கூறியதேயல்லா மல் உனக்கு அடைக்கலமா யிருக்கின்ற என்பால் நீ அடைக்கலமென்று ஆறுமுறைகூறி னையே அதனை நான் எண்ணுந்தோறும் என்னெஞ்சம் ஆறவில்லையே! அவ்வருமையை எடுத்துச்சொல்லி வாழ்த்துவேனா அங்ஙனிருந்ததை நான் எங்ஙனிருந்ததென்றெவ் வண்ணஞ்சொல்லுகேன், இவ்வண்ணம் நீ எனக்குச்செய்த செய்தற்கரிய செயல்களை

நான் எனனென்று சொலலஅறிவேன், அறியேன்! அறியேன அறியேனுயினும, இபபோது யான்கணட மாதினுடன் என்றும் நீ வாழநதிருகக வாழ்ததுகின்றேன், நீ அங்ஙனமே வாழ்ந்திருகக நான் இங்ஙனமே உன்னைத துதித்துக்கொண்டிருக்கப போற்றுகின்றேன் என்றுகூறபபட்டன. (கூ௨)

## இறைவன் இருவரையும் அழைத்தல்.

விண்ணிடை நின்ற வெள்ளை விடையவா அடியார தமமை
எணணிய உலகு தன்னில இபபடி நமபால் அன்பு
பண்ணிய பரிவு கண்டு மகிழ்நதனம பழுதி லாதாய்
நண்ணிய மனைவி யோடு நமமுடன போது கென்று.

(இ-ள்.) ஆகாயததின்கண வெள்ளை விடபவூாதியனுய நினறருளும இறைவன் நாயனுரைப(பார்த்து)இருவினை யீட்டுதற்கும, இருவினை நீககுதறகுமான கருமஙகளைச செயதறகுரிய இடம இககருமபூமியென் றெணணபபட்ட இநநிலததில, நமமிடததில் இபபடி நீ செயத பரிவான அனபினைககண்டு மகிழவடை நதோம நீ செயத அனபின் செய்கையில் முககரணஙகளாலும வரபபடும குற்றமிலலாதவனே, நமவசமாகநின்ற உனதுமனைவியோடும நமமுடன் வருவாயாக என்று அருளிசசெயது என்பதாம்

இததிருபபாசுரததான், இறைவன் நாயனுரைநோககி சொல்லுவதறியேன் என்ற அவ்வளவில் நீ நில்லாமல், நான மாதினுடன், என்றும வாழ்நதிருககவேண்டும என்றும அஙஙனம வாழ்நதிருககும் என்னை நீ என்றும துதித்துககொண்டிருகக வேண்டுமென் றும வாழ்ததிப போற்றினையாகலான, நீ வேணடியபடியே, உனமனையாளுடன் நீ நம் முடன் வருவாயாக என்று கூறபபட்டது (கூகூ)

## இறைவன் அம்பலம் ஏகல்.

திருவளர் சிறபபின மிகக திருததொண்டா தமக்குந தேறறம
மருவிய தெயவக கறபின் மனைவியார தமககுந தகக
பெருகிய அருளின்நீடு பேறளித திமையோ ரேததப
பொருவிடைப் பாகா மன்னும பொற்பொது அதனுட புககார.

(எ - ள்.) போரசெயயுந திறமுடைய இடபவூாதியையுடைய இறைவா (பிறக திறத்தலாகிய வறுமையை யொழிததது, பிறவாநெறியாகிய பெருஞ்செலவததைத கொடுககும் (சிறபபினுல மேமபட்ட திருததொண்டினை யுடையாராகிய நாயனுருககும, கற்பினில இதுவெனததெளியும தெளிவினையுடையராயத தெயவவழிபபட்ட அவரது மனைவியாருககும் தகுதியாகிய பேற்றைத தமதுளளததில் ஊற்றெடுககும் பேரருளி னுல் கொடுதது, தேவாகளெலலாரு துதிகக, எககாலததும் அழிவில்லாத † பொனனம பலமாகிய பொதுவினுள்ளே புகுநதருளினா எனபதாம்.

இததிருபபாசுரத்தான், திருவளா சிறபபினமிகக திருததொண்டராகிய நாயனு ரைபபோலும, தெயவசமபநதமுளள கறபினையுடைய அவரது மனைவியாரைபபோலும், இவ்வுலகுதன்னில் இபபடி இறைவனபால் அனபுசெயதார ஒருவரும இலலை ஆக

இராஜச, தாமச குணவிருததிகளோடு சாரநது தனதியல்கெட்டு அவற்றோடு ஒன்றுயும, அவைகளின்செயலைச செயது பின் அவற்றின்வேருயத தன்விருததிககுரிய செயலைசசெயதும் உழல்வதாகிய சாதவீககுணததோடு சாராது, திருநதிய சாதவீக குணமுடைவரெனனும அருமைதோன்ற - பழுதிலாதாய என்றா.

கயிலாயததை யடைந்தார என்னுது, பொற்பொது அதனுட் புககார் என்றது இறைவனுேடு அததுவிதமாவதாகிய சொரூப சாயுஜ்ஜிய முததி - இறைவனைக காணப பெற்ற அவ்வவ்விடங்களிலேயே கூடுமென்னும அவ்வுண்மைதோன்ற என்க. இத னைக் காஞ்சிபுராணம தலவிசேடபபடலததில் - யாம், பரவெளிப் பரபபின்வைகும் பண் பினேம், உலகமெங்கும விரவியே நிறைந்துநிற்பேம், விளங்கும் எம நாலாமபாதம் தரைமுதல் உலகாம் மூன்றுபாதம் வான்றலததுமேவும். எனவருதலாற் காண்க.

லான், அவர்கள் பண்ணிய பரிவினை இறைவன் கண்டு மகிழ்ந்து, அவர்கள்செய்த பேரன்புக்குத் தக்கபடி பேரருள்கொண்டு, உனது மனைவியுடன் நீ நம்முடன் வருவாயாக என்கிற பெரியபேற்றை அனுக்கிரகஞ்செய்து பொன்னம்பலத்தின்கண் எழுந்தருளினமை கூறப்பட்டது.

இதனால், சிவஞானம் எய்தற்குச் சாதனமாகக்கூறும் சரியை கிரியை யோகங்களைச் செய்வோர் அடைவனவாகிய சாலோக சாமீப சாரூபங்களாகிய அபரமுத்திகளை அடையப்பெறுதல், இறைவன் தடத்தவுருவங்கொண் டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீகயிலாயத்தின்கண் ணன்றி வேறிடத்தில்லை என்பதும், சிவஞானம் வரப்பெற்று, சிவனருள் வருதற்குச் சாதனமுறையாக மேற்கொண்டு சரியையாதிகளைச் செய்வோர் அடையத்தகும் சிவசாயுஜ்யமுத்தியாகிய பரமுத்தி, அங்கு இங்கு என்னுதபடி எவ்வுலகத்தும் சிற்பிரகாசமாய் நிறைந்து பிரகாசிக்கும் சொரூபசிவத்தின்கண்ணதாகலின், மனைவியோடு நம்முடன் போதுகென்று, பெருகிய அருளினீடு பேறளித்து, மன்னும் பொற்பொது அதனுட்புக்கார், என்று இங்ஙனமே சொரூபஐக்கிய அத்வைதானந்தமுத்தியைத் தந்தனரென்பதும் அறியக்கிடக்கின்றமைகாண்க.

இங்ஙனமான முத்திநிலை யறியாதபலர், நாயன்மார்கள் சரியையாதி தவங்களைச் செய்தவரென்றும், அவரவர் தவத்திற்கேற்றபடி இறைவனும் அபரமுத்தி எனப்படும் பதமுத்திகளைக் கொடுத்தனரென்றுங் கூறி, தாமும் இடர்ப்பட்டுப் பிறரையும் இடர்ப்படுத்துகின்றனர். சரியையாதிகளையும் வழுவாதுசெய்து,சிவனையுங்கண்ட நாயன்மார்கள் அடைந்த முத்தி அபரமுத்திஎன்று கண்டுபிடித்த இவரெல்லாம் அடையப்போவது தான் பரமுத்திபோலும் சரியையாதிகளை ஒருசிறிதும் ஒருநாளும் செய்யாதவராகியும், இறைவனைக் காணவேண்டுமென்னும் எண்ணமும் அற்ற இவர்கள்தான்போலும் பரமுத்தியடைதற்குரியார். அந்தோ இங்ஙனம் இவர் கூறவந்த பாவமொழியைப்போலும், அங்ஙனம் சொல்லவெண்ணிய பாவத்தைபோலும், மொழியும் எண்ணமும் வேறுண்டோ ஆகலின் இப்பாவக்கூற்று மொழிகளைச் செவியுட்புகுத்தாது உய்வாரெல்லாம் உய்ந்துபோவார்களாக.

இவ்விடயத்தை ஈண்டுவிரிக்கிற் பெருகும். முத்திவிடயம் ஆங்காங்கு வருமாகலின், ஆங்காங்கும் பூர்வபக்ஷ சித்தாந்தங்களை இனிது எடுத்துக்கூறுவாம். (கூச)

நாயனார் பேரின்பம் பெற்றுவாழ்தல்.

வானவர் பூவின் மாரி பொழியமா மறைக ளார்ப்ப
ஞானமா முனிவர் போற்ற நலமிகு சிவலோ கத்தில்
ஊனமில் தொண்டர் கும்பிட் டுடனுறை பெருமை பெற்றார்
ஏனைய சுற்றத் தாரும் வானிடை இன்பம் பெற்றார்.

(எ - து.) தேவர்களெல்லாம் கற்பகமலர்மாரியைப்பொழிய, வேதங்களெல்லாம் ஆரவாரித்துப் போற்ற, பாசஞன பசுஞான முடையோரெல்லாந் தோத்திரஞ்செய்ய, சிவமாந்தன்மையைக்கொடுக்கும் நன்மைமிகுந்த * சிவலோகத்தில் தொண்டின்திறத்தில் ஊனமில்லாமல் சிவபெருமானைக் கும்பிட்டுக்கொண்டு அச்சிவபெருமானுடன் அத்வைதமாயிருக்கும் பெருமையைப் பெற்றனர். இவருடைய சுற்றத்தாரெல்லாம் சுவர்க்கலோகத்தின்கண் இன்பம்பெற்று சுகித்திருந்தனர் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், ஒருவரும் தனக்கு மனையாட்டியாய் இப்பிறப்பில் இருப்பவளை எப்பிறப்பிலும் தனக்கே மனையாட்டியாயும் பிறபபொழிந்த முத்தியினும் வரும் விணையைச் செய்தாரில்லை. அஃதேபோல் தேவரும் தத்தம் மனையாட்டிகள் தம்மைப் பிரியாதிருக்கப்பெற்றதுமில்லை. இறைவனும் அத்தன்மையான வரந் தந்ததுமில்லை.

* சொரூப சிவமாந்தன்மையைப் பெற்றவர் - அச்சிவம் எந்த எந்த இடத்தில் இருப்பினும் அந்தந்த இடங்களில் அவனுணைப்படி அந்தந்த வுருவங்கொண்டிருப்பரென்னும் உண்மையை ஈண்டுணர்த்தியவாறுமென்க.

ஆகலான், நாயனார்பெற்ற அவ்வதிசயம்நோக்கி வானவா பூவின்மாரி பொழிந்தனரென்பதூம். இறைவனைகரும்பிட்டு அவனுடனுறையும பெருமைபொருந்திய சித்தாந்தமுத்தியைபபெருது, பசுஞானத்தால் தம்மையே பதியாகநினைத்துப பதிதராய்பபோன பசுஞானிகளாகிய முனிவர்கள், அவர்பெற்ற பதிஞானமுத்தியைத் தாமெல்லாம் பெறப போற்றினரென்பதூம், சிவஞானிகளால் தண்டிககபபட்டார் தீவினையாளராயினும் அவாகள் நரகத்தையடையாது சுவாக்கததையே யடைவாரென்பதூம் கூறபபட்டன. ()

இன்புறுந் தாரந் தன்னை ஈசனுக் கன்ப ரென்றே
துன்புறு துதவுந் தொண்டா பெருமையைத் தொழுது வாழ்த்தி
அன்புறு மனத்தால் நாதன் அடியவாக் கன்பு நீடும
மன்புகழ் இளைசை மாறன் வளத்தினை வழுத்த லுற்றேன்.

(எ - ரு.) சிவபெருமானுககு அன்பரென்றே எண்ணி, தனது இன்பத்துக்கு உறைவிடமாயிருநத மனைவியாரை, அவ்வனபருககுத தனதுசுற்றத்தாரால் சிறிதூந துன்பம்வராவண்ணம் அவாகளைபபோககிக கொடுக்கும இயற்பகைநாயனருடைய பெருமையைப போற்றி வணங்கி,பபுகழ்ந்து அன்பாாந்த மனததினல் சிவனடியார் களுககு அன்புமிகும, நிலைபெற்ற புகழினையுடைய இளையான்குடிமாறநாயனருடைய தொண்டின் வளததினைத துதிககததொடங்கினேன் என்பதாம

ஈசனுககு அன்பரென்றே, இன்புறுந்தாரந்தனனை, துன்புறுது உதவும தொண்டா எனககூட்டுக.

ஈசனுககினியராகிய அனபாககு, தமககுஇனியராயிருந்த மனையாட்டியைக கொடுபபதூம், அதனை மாற்றவநத பாசககூட்டஙகளை வெட்டியொழித்ததுமாகிய செயல் சங்கற்பமாத்திரததால் பஞ்சகிருததியஙகளையும ஒருகணகதுககுள் செயயவல்ல இறைவனே செய்தற்கரிய செயலென்றுமதித்து அவரைப பலவாற்ருன் புகழ்ந்து ஓலம ஓலமென்று அழைககும் பெருமையுடையாரை யான் வணங்கி வாழ்ததுவதன்றி அவாது பெருமைமுழுவதும் யான்சொல்லவல்லனே வல்லன் அல்லேன் அல்லேன. அஃதேபோல், இளையான்குடிமாற நாயனரது அன்பின்வளததையும போற்றததொடங்கினேன் என்று ஆசிரியாசேககிழாா இததிருப்பாட்டாற கூறினரென்க

எனவே, பிறபொருட் காதல்கொண்ட மனததால் அடியவாககு அன்புநீடும் புகழினை யடையாது பிறபொருட் காதலகொள்ளாத அன்புறுமனததால் அடியவாக்கு அன்புநீடும் மன்புகழ் பெற்றவா என்னும அருமைதோன்ற அன்புறு * * * மன்புகழ் இளைசைமாறன் என்ருா. இயற்பகையாா யாதும் ஒன்றும என்பககே உண்டாகில் அது அடியவருடைமை இதிலையமில்லை யென்று மனைவியாரைக கொடுததது, சுற்றததினரை வெட்டித்தொலைததது தொணடாயிற்று இளசைமாறரோ, தம்மிடததுள்ள செல்வம் மறைய, கடன் கொடுபபாரும அற்றிருககுஞ்சமயததில், சிறிதும மனந்தளராது, தம்மிடத்து எல்லாம உள்ளதுபோல அடியாாககு அமுதுபடைக்கவேண்டுமென்று எணணிய ஆசையைத தன்மனததுள் வளாந்துவரும் அன்பின் மிகுதியினல் தன் வறுமையைபபோகக வயலிலிட்ட விததினையும்வாரி, நிழல்தரும குடிசையிலுள்ள கொம்புகளையும் பிடுங்கி, குறும்பயிரைத தடவிபபறிததது, அமுதமைததது அன்பின் வன்த்தினலன்றிச செல்வத்தின் வளததினலன்ருகலான் *"இயற்பகையார் செய்த திருத்தொண்டுசெபபலுற்றேன்" என்றதுபோல் ஈண்டும் இளசைமாறன் தொண்டு செபபலுற்றேன் என்னது வளத்தினை வழுத்தலுற்றேன் என்ருா. அன்புநிலையுள்ளதாகலான் அதனல் வரும் புகழும நிலையுள்ளதென்பாா அன்புநீடும் மன்புகழ் என்ருா

## இயற்பகைநாயனர் புராணம் முற்றிற்று.

*திருநீலகண்டநாயனார்புராணம் - செய்யுள் ௪௯.

அலங்கிருதாயைநம:

# திருத்தொண்டத்தொகை.

"இல்லையேயென்னாத இயற்பகைக்கும் அடியேன்

இல்லையே என்னாத என்றதனால் - உலகதருமத்தைக்கருதி மனையாட்டியைக் கொடுப்பதில்லை என்று கூறாது, சிவதருமத்தைக்கருதி மனையாட்டியை இல்லையென்னாதே கொடுத்த என்றும், இயற்பகைக்கும் என்றதனால் - சிவதருமவியலைப் பகைக்கவந்தவர் சுற்றத்தவரேயாயினும் அவரைச் சுற்றத்தினராகக் கருதாது பகைவராகவே கருதி பகைக்குந்திறத்தில் நின்றவராகிய நாயனாருக்கும் என்றும், அடியேன் என்றதனால் - நீலகண்டனாகிய இறைவனுடைய ஆணையில்தளராது யான்நிற்க திருநீலகண்டநாயனாருக்கு ஆட்பட்டதுபோல் அடியார் வேண்டுவனவற்றை இல்லையென்னாது கொடுக்கவல்ல வள்ளற்றிறம் எனக்குண்டாகும்பொருட்டு அடியேனாகின்றேன் என்றும் கூறியவாறும்.

செய்தவர் வேண்டிய தியாதும் கொடுப்பச் சிவன்தவனாய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை ஈந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட்டி னத்துள் இயற்பகையே.

மிக்கசீரடியார்கள் யாரேனும் வேண்டும் யாவையும் இல்லையென்னாதே முன் கொடுப்பவராகலான் செய்தவர் வேண்டியது யாதுங் கொடுப்ப என்றும், அங்ஙனங் கொடுப்பவராகிய நாயனாரிடத்துத் தூயநீறு பொன்மேனியில் விளங்கத் தூர்த்த வேடமுந் தோன்ற வேதியராய், வந்தனராகலான் சிவன்தவனாய்(வந்தார்)என்றும், சிவனடியாராகத் திருக்கோலங்கொண்டு வந்தவர் அக்கோலத்துக் கேற்பனவற்றைக் கூறாது அதற்கு மாறாக, மன்னுகாதல் உன்மனைவியை வேண்டி இங்குவந்தது என்றாராகலான் நின்காதலியைத்தருகென்று கைதவம்பேசி என்றும், சொன்னமாத்திரத்தில் முன்னையின்மகிழ்ந்து " இது எனக்கு முன்புள்ளதே என்று கதுமெனச்சென்று தம் மனைவாழ்க்கைக்கற்பின் மேம்படுகாதலியாரைக் கொடுத்தனராகலான் என்றலுமே மைதிகழ் கண்ணியை ஈந்தவன் என்றும், கொன்றைவார் சடையார் அடியார்கள் குறித்து வேண்டின குணமெனக் கொண்டே ஒன்று நீர் மறாது உவந்து அளிக்கும் உண்மைகேட்டு நும்பால் இங்கு வந்தனன் என்றும், அயர்ப்பிலாதானே ஓலம், செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம் என்றும் பெருங்கடவுளாகிய இறைவனால் புகழ்ந்துரைக்கப்படும் பொருளமைந்த பெரிய புகழானது தன்பாலேவந்து பொருந்தியிருக்கப்பெற்றவராகலான் பெரும்புகழ்வாய்ந்த என்றும், பொன்னிநன்னதி மிக்க நீர்பாய்ந்து புணரி தன்னையும் புனிதமாக்குவதோர் நன்னெடும்பெருந்தீர்த்த முன்னுடைய நலஞ்சிறந்த வளப்பம்புகுந்த பூம்புகார்நகரம் நாயனார் அவதாரஞ்செய்த நகரமாகலின் காவிரிப்பூம் பட்டினத்துள் என்றும், அடியார்க்கு இல்லை என்று சொல்லும் சொல்லைப் பகைத்து நீறுசேர் திரு மேனியர்மனத்து நினைத்த யாவையும் வினைப்பட முடித்து வேண்டிய இயலில் பகையாராகலான் இயற்பகையே என்றும் கூறினார்.

இதனுல், இல்லையென்னுது கொடுத்ததே தவமென்றும், அத்தவத்துக்கு நின் காதலியைத் தருகென்று பெற்றதே இறைவன் செய்யும் அநுக்கிரகமென்றும், அவ் வனுக்கிரகத்தால் இயற்பகையார் என்று பெயர்பெற்றதே பெரும்புகழென்றும், அப் புகழ்வாய்ந்த அவரது நகரம் பூம்புகார் என்றும், அவரது நகரத்தையும் திருநாமத்தையும் பேற்றையும் தவத்தையும் வகுத்துச் சிறப்பித்தமைகாண்க.

## புராணசாரம்.

எழிலாரும் காவிரிப்பூம் பட்டினத்துள் இயல்வணிகர் இயற்பகையார் இருவர்தேட, அழலாய பிரான்தூர்த்த மறையோனுகி ஆயிழையைத் தர வேண்டி அணைய ஐயன், கழல்ஆரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக் காத லியைக் கொடுத்தமர்செய் கருத்தால் வந்த, பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்துமீளப் பிஞ்ஞகனுர் அழைத்தருளப் பெற்றுளாரே.

(எ - று.) "இயற்பகைநாயனுர்" நீர்வளமிக்க காவிரிநதியினுல், நிலவளம், குடி வளமுதலிய எல்லாவளப்பங்களும் நிறைந்து அழகுபெற்றிருக்கும் பூம்புகார் நகர மென்னு நகரத்துள், பிறர்பொருளையும் தம்பொருள்போலப் பாதுகாத்துக்கொடுக்கும் இயலினும், தமக்குப்பின்வரும் சந்ததியார்க்கு உதவியாகாது அழிந்துபோம் இயல் பினையுடைத்தாகிய நடுவுநிலைமையற்றவழியான் வரும்செல்வத்தை விரும்பாது, சந்ததி தோறும் அழிவின்றி உதவவல்ல நடுவுநிலைமையுட்பட்டுவரும் செல்வத்தை மாத்திரம் விரும்பும் இயலினும், சிறந்தவர்கள்குலமாகிய வணிகர்குலத்தில் அவதரித்தவர். அவர், நீறுசேர்திருமேனியராகிய அடியவர் தூர்த்தவேடமுடையராயினும், மற்றெவ்விதவேட முடையராயினும் அவர்வேண்டுவனவாகிய பொருள் எவையாயினும், இல்லையென்னுது கொடுக்கும் ஒப்புரவுடையோராகிய பெரியோரியல்பைப் பகையாத இயல்பினையுடையவர். சிவனடியார்கள் வேண்டுவனவற்றை இல்லையென்னுது கொடுத்தலாகிய செயற்கரிய செயலைச் செய்யும் இயல்பினைப் பகையாராகிய அப்பெரியாரது இயல் இவ்வுலகின்கண் விளங்கவும், அவ்விளக்கத்தான், செயற்கரிய செய்கையைச் செய்யலாகாதாராகிய உல கினரைநோக்கிக் கூறியுள்ளதாகிய "வேதநடைபோல அறநூல்களுட் கூறப்படுவ தன்று, அடியார்கள் வேண்டுவனவற்றை இல்லையென்னுது கொடுத்தலாகிய செயற் கரிய அச்செய்கை, இதுதாமே அறிந்துசெய்யுந்தன்மைத்து என்றுணரவும், உலகிற் குத் தனிமுதற்கடவுளாகியும், அரிபிரமர்கள்தேட அருளுருவங்கொண்டுவீராது அழ லுருவாய் நின்றவனுகியும் நூலுணர்ச்சியால் ஆராய்வோர்க்கு நுண்ணியனுகியும், அரு ளால் அடையவல்லார்க்குப் பொன்னம்பலத்தில் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நடனஞ் செய்பவனுகியும் உள்ள இறைவன், வைதிகமறையவர் வடிவங் கொள்ளாது, தாம் எண்ணியுள்ள செயலுக் கேற்பச் சொல்லும் சொல்லுக்குரிய தூர்த்தமறையவர் வடிவங்கொண்டு நாயனுர் தன்மனைவியாரைத் தனக்குக் கொடு க்கவிரும்பி அந்நாயனுர் வீட்டுக்குவர, நாயனுர் அவர் கோலத்தையும் கண்டு, அவர் வேண்டிச்சொல்லிய சொல்லையுங்கேட்டு, முனிவு, (கோபம்) கொள்ளாத முனிவராய் மிகமகிழ்ந்து, அவரது திருவடிகளைத் தமதுடம்போடு மனம்பொருந்த வணங்கி, தமது காதலுக்குரிய கற்பிற்சிறந்த மனையாட்டியை அவர் வேண்டியபடியே கொடுத்தவர். கொடுத்த மனையாட்டியை அம்மறையவர் கைக்கொள்ளாது விட்டுப்போகச் சுற்றத் தாரெல்லாம் போர்செய்யவேண்டுமென்னும் எண்ணத்தினுல் சூழ அக் கொடிய சுற்றத்தாரையெல்லாம் தமது தோள்வலித்துணைவழியேவந்து கூடிய அருட் டுணையால் வாள் கொண்டு துண்டந்துண்டமாக்கி மண்ணிற் கிடத்தினவர். தாம் மண்ணினிற்பிறந்ததனுற் பெறவேண்டிய பயனைப்பெற்று வீட்டைநோக்கித்திரும் பினவர். திரும்பியபோது,மறையவராகிய பிஞ்ஞகனுர், உனக்கு இயல்பாயுள்ள சுற்றத்தி

னரை என்பொருட்டுப பகைவராகக்கொண்ட முனிவாவோலம் என்று முதன்முறையும், இரண்டாம்முறை நீ வீட்டுக்குப்போகாமல் இங்கு நீ வருவாய் ஓலம் என்றும், மூன்றும் முறை போர்த்திறத்தில் அயாபபிலா தானே ஓலம் என்றும், நான்காம்முறை அன்பனே ஓலம் என்றும், ஐந்தாம்முறை பொய்தரும் உள்ளம் இல்லாதவனும் மெய்தரும் உள்ளம் உடையவனும் உனது நிலையைக் காத்துக்கொண்டவனே ஓலம் என்றும், ஆறும்முறை செயற்கருஞ்செய்கை செய்த தீரனே ஓலம் என்றும் அழைக்க ஓலம் என்னும் ஓசையை அறுமுறையுங்கேட்டவர். அத்தகைய நாயனர் மீளவும் திரும்பி அழைத்தவர்பால்வர, அபபாலுக்கபபாலனுகிய இறைவன் மறையவர்வேடத்தைவிட்டு அப்பாலாய், உமாதேவியோடு விடபாரூடனுய் ஆகாயத்தின்கண்தோன்ற அவ்வருட்கோலத்தைக்கண்டு வணங்கி வாழ்த்திநின்றவர். நின்ற நாயனரை மன்றுளாடியாகிய இறைவன்நோக்கி, நீ மண்ணினிற் பிறந்ததனுல் எனது சிருட்டித்தொழில் பயன்பெற்றது. நீறுசேர் திருமேனியர் மனத்து நினைத்த பாவையும் மறாது கொடுத்துவந்ததனுல் எனது திதித்தொழில்பயன்பெற்றது. நான் வேண்டியபடியே தையலைத்தந்து சுற்றத்தினரையெல்லாம் சங்கரித்ததனுல் எனது சங்காரத்தொழில் பயன்பெற்றது. நான் போவென்றுசொல்ல, அவ்வளவில் போயினையேயன்றி, நீ போகும்போது உனது மனையாளைக்கண்டு சிறிதும் மயங்காது சென்றனையே, அதனுல் எனது திரோபவத்தொழில் பயன்பெற்றது. மீளவும் நான் ஓலம் ஓலமென்று அழைத்தபோது வந்தேன் வந்தேன் இன்னும் பணியுளதேல் அபபணியைச்செய்ய ஆவலும் வன்மையும் உள்ளவனுயிருக்கின்றேன் என்று விரைந்து வந்ததனுல் எனது அனுக்கிரகத்தொழிலும் பயன்பெற்றது. இவ்வகையாய் எனது ஐவகைத்தொழிலும் பயன்படுமாறு செய்த உனது செய்தற்கரிய செயலுக்கு யாம் மகிழ்ந்தோம். நீதான் எமது ஐந்தொழிலாலும் அடையப்படும் பயனைப் பழுதிலாது பெற்றவன் என்று சொல்லப்பெற்றவர். பின்னர் அவ்விறைவன் நீ உனது மனைவியோடு பரமுத்திபெற்றோர் வாழும் எவ்வுலகுக்கும் அப்பாலாகிய வுலகத்திலிருந்து என்னையே கும்பிட்டு என்னுடன் என்றும் வாழ்ந்திருப்பாயாக என்றருள அவ் வாழ்வினைப் பெற்று அங்கு வாழ்ந்திருக்கப்பெற்றவரென்பதாம்.

இதனுல், அகப்பற்று புறப்பற்றுமுள்ள பாசப்பற்றுக்களை விடவல்ல ஆன்மாக்களே இறைவனைக்கூட வல்லாரே அன்றி அபபற்றுக்களைவிட அறியாதார் இறைவனைக்கூட வல்லரல்லரென்பதையும், அஃதேபோல் இறைவனும் பற்றுடையாரைத் தன்னை அணுகுமாறு அழையானென்பதையும் அறிவுறித்தியவாறும்.

அஃதாவது,- ஆன்மாக்களுக்கு இறைவனுல் கொடுத்திருக்கப்பட்ட தனுகரண முதலியனவெல்லாம் மாயாமலசம்பந்தமாயும், கன்மமல சம்பந்தமாயும் உள்ளன. இவற்றை யேன்கொடுததா னென்னில், ஆணவமலம் ஒழியவேயாம். மலம், மலத்தைப போக்குமோ எனில், அழுக்குடைய மெல்லிய ஆடையின் அழுக்கை உவர்மண் முதலிய அழுக்கைக்கொண்டு முழுவதும் நீக்குதல்செய்யும் வண்ணன்போல் மாயேயமாகிய தநுவாதிமலத்தினை மருந்தாகக்கொண்டு, ஏனை ஆணவாதிமலங்களைப் போக்கற்கென்க. இவ்வுண்மையுணர்ந்து இருவகைப்பற்றுக்களையும், இறைவனைப் பற்றுவதற்கு அமைக்கப்பட்டுள்ள பொருள்களாகக் கருதி அவனைப்பற்றி, அங்ஙனம்பற்றுவதை,* அப்பற்றுக்கள் தடுக்கமுயலின் அவை எவையாயினும் அவைகளை யொழிப்பதில் ஊக்கமுடையராயின், இறைவனும் அபபற்றுப் பொருள்களாலேயே அவர்களைத் தானும் பற்றுவன். தடுக்கும்பொருள்களைத் தடுக்காராயின் அப்பொருள்களோடு அவர்களையும் பற்றான் என்பதாம்.

இயற்பகைநாயனார் புராணசாரம் முற்றிற்று.

---

* சிவஞானசித்தியார் உ - ம், சூ - ம், செய்யுள் - ௩உ.

திருச்சிற்றம்பலம்.

ஆதர்சோத்பவாயநம:

# இளையான் குடிமாறநாயனார் புராணம்.

## வேறு.

நலச்சிறப்பு.

அம்பொன் நீடிய அம்ப லத்தினில் ஆடு வார்அடி சூடுவார்
தம்பி ரான்அடி மைத்தி றத்துயர் சால்பின் மேன்மை தரித்துளார்
நம்பு வாய்மையின் நீடு சூத்திர நற்கு லஞ்செய் தவத்தினால்
இமபர் ஞாலம் விளக்கினார் இளை யான்கு டிப்பதி மாறனார்.

(எ - து.) மாற்றுயர்ந்து அழகினைச்செய்யும் பொன்னம்பலத்தின்கண், ஆனந்த டனஞ் செய்தருளும் ஆனந்தநடராஜனது பொன்னடிகளைத் தமது முடியில் மலராகச் சூடுவர், அவ் வெம்பிரானது சிறந்த அடிமைத்திறத்தில் ஊக்கமுடையவராய் அதனால் வரும் மேம்பாட்டைத் தரித்துள்ளவர், இத்தகைச் சிறபபுடைய இளையான் குடிமாற ரென்னும் நாயனார், நம்புதலும் உண்மையிலும் மிக்க சூத்திரரென்னும் நல்ல வேளாள குலஞ்செய்த தவவிசேடத்தால் (அவதாரஞ்செய்து) இந் நிலவுலகத்தில் அந்த வேளாள குல நலமும் சைவநலமும் பிரகாசப்படுத்தினா ரென்பதாம்.

இளையான்குடிப்பதிமாறனார், நம்புவாய்மையி னீடுசூத்திர நற்குலஞ்செய் தவத்தினால், இம்பர்ஞாலம் விளக்கினார் எனக்கூட்டுக.

நிறத்தினும் ஒளியினும் மாற்றினும் மிக்க சாம்பூநதமென்னும் பொன் என்பார் நீடிய அம்பொன் எனவும், பொன் உலகினருக்குச் சிற்றின்பத்தைத் தருதல்போல் அப் பொன்னாலாகிய பொன்னம்பலம் பேரின்பசுகத்தைத் தரும் தகுதியுடைத்தென் பார் நீடியஅம்பலம் எனவும், ஆடுகின்றிலை கூத்துடையான் கழற் கன்பிலை யென்புரு கிப், பாடுகின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர், சூடுகின்றிலை சூட்டு கின்றது மிலை துணையிலி பிணநெஞ்சே, தேடுகின்றிலை தெருவுதோ றலரிலை செய்வ தொன் றறியேனே" என்று தேடும் சிற்பரச்செல்வர்க்குத் தேடும் அப்பணியெல் லாம் கைகூட ஆடுகின்றவரென்பார் ஆடுவார் எனவும், அங்ஙனமான ஆடலைக் கண்டு ஆடல் பாடல் முதலியன துணையாகப்பெற்றுப் பேரன்பால் அச்செயல்களைச் செய்து அவற்றின் பயனாக குஞ்சிதபாதத்தை முடியிற் கொள்வாரென்பார் அடி சூடுவார் எனவும், மண்ணினிற்பிறந்தார் பெரும்பயன் மதிசூடும் அண்ணலார் அடி யார்தமை அமுதுசெய்வித்தலாகலான் அப்பணியில் தளராத உரமுள்ள உள்ளமுடை யவரென்பார் தம்பிரான் அடிமைத்திறத்துயர் சால்பின்மேன்மை தரித்துளார் எனவும், அத்தகைய மேன்மையுடைய நம்பெரியார் வந்து அவதாரஞ்செய்தற்கு வேளாளர் குலம் தவஞ்செய்ததென்பார் சூத்திரநற்குலஞ் செய்தவத்தினால் எனவும், கடவுளை நம்புவதாகிய நம்பிக்கையிலும், பொய்மையில்லாது வாழ்வதாகிய வாழ்க்கையிலும் சிறந்த குலமென்பார் நம்புவாய்மையில் நீடுசூத்திரநற்குல மெனவும், † புகழ், பொறை,

---

† கண்ணடியில் உறபவமானவர்.

வானமும் திசையும் பொங்கும் புகழ்மையும் வானம்பேணும், ஞானமும் பொறை யும் குன்றா நன்றியும் ஊக்கப்பாடும், தானமும் கொடையும் அன்பும் வரிசையும் தகை சால் நண்பும், மானமும் தவஞ்செய்தீன்ற மகவுபோல் வளர்க்கலுற்றார்.

எனத் திருவிளையாடற்புராணம் நகரப்படலத்தில் வருதல்காண்க.

குன்றாநெறி ஒழுக்கப்பாடு தானம் கொடை நண்பு மானம் என்னும் குலவொழுக்கமும், ஞானம் அன்பு வரிசை என்னும் சைவவொழுக்கமும் இவ்வுலகின்கண் பிரகாசிக்கச்செய்தனரென்பார் இம்மாநாயனார் விளங்கினார் எனவுங் கூறினார்.

இத்திருப்பாட்டான் இளையான்குடிமாற நாயனார், அம்பலத்தான் அடியாகிய அருளை மேற்கொண்டு அருட்பணியில் முட்டுப்படாத உரம் உடையவரென்பதும், நற்குலமாகிய வேளாளர்குலத்தில் அவதாரஞ்செய்தவர் என்பதும், அவதாரஞ்செய்த அக்குலத்தின் மேன்மையும், அடியார்க் கமுதளிக்கும் அடிமைத்திறமும் உலகினர்க்கு விளங்க விளக்கினா ரென்பதுமாகிய அவரது பெருமையை முன்மொழிந்துகொண்டா ரென்பது கூறப்பட்டது. (க)

### நாயனார் இருவகைச் செல்வத்தின் பயன்கோள்பவ ரேனல்.

ஏரின் மல்கு வளத்தினால்வரும் எல்லை இல்லதோர் செல்வமும்
நீரின் மல்கிய வேணி யாரடி யார்தி றத்து நிறைந்ததோர்
சீரின் மல்கிய அன்பின் மேன்மை திருந்த மன்னிய சிந்தையும்
பாரின் மல்க விரும்பி மற்றவை பெற்ற நீடு பயன்கொள்வார்.

(இ - ள்.) பல ஏரினால் உழுதலைச்செய்யும் உழவின் வளத்தினால் விளைந்துவரும் அளவில்லனவாகிய ஒப்பற்ற தானியச்செல்வமும், நீர்வளமிக்க கங்கையைத் தரித்திருக்கின்ற சடையுடையனாகிய சிவபிரானது அடியார்திறத்தில் (கூட்டங்களில்) குறைவில்லாமல் ஒழுங்குபட நிறைந்த சிறப்பில் மேம்பட்ட அன்பின்திறமெல்லாம் திருத்தமாக அமைந்துள்ள சிந்தையும், இவ்வுலகின்கண் நிரம்ப அவ்விரண்டையும் அடையப்பெற்றதனால் அடையப்படும் பிரயோசனத்தை விரும்பிக்கொள்வாராயினார் என்பதாம்.

மற்றவைபெற்ற நீடுபயன் விரும்பிக் கொள்வார் எனக்கூட்டுக.

எல்லையில்லதோர் செல்வம் ஏனைய தொழில்முறைகளால் வராதென்பார் ஏரின் மல்கு வளத்தினால் வரும் என்றார் எனவே,— * "பலகுடைநீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர், அலகுடைநீழலவர்" என்று பெருநாவலர் கூறியவாற்றானறிக. அஃதாவது:— உழுதற்றொழிலான் நெல்விளை யுடையராகிய தண்ணளியுடையோர் தாமிருக்கும் நாட்டினையாளும் அரசர் குடைக்கீழே பலவேந்தர் குடைநிழலின்கண்ணுள்ள மண் முழுதினையும் வாழும்படிச் செய்பவர். இதனால் உழுதற்றொழிலுடைய வேளாளரை ஓர் அரசன் அடைந்திருப்பானாயின், அவர் அவ்வரசனுடைய ஆளுகையில் ஏனைய அரசர் வசமாயிருக்கும் பூமிமுழுவதும் வந்து சேரும்படிச் செய்வர் என்று கூறியதென்க.

இங்ஙனங் கூறியதனால் போந்தபொருள் யாதெனின்! எல்லாப்பொருளும் விளைவது பூமிஎன்பதும், அப்பூமியில் அவ்வப்பொருள்களைக் காலமறிந்து விளைவிப்போர் உழுதற்றொழிலையுடைய வேளாளர்கள் என்பதும், அவ்வேளாளரை ஓரரசன் ஒருபொருளையுந் தேடாது, அவர்களையே தான்தேடும்பொருளாக எண்ணித் தேடி அவர்களைப் பாதுகாப்பானாயின் அவர்கள் எல்லாப்பொருளையும் அவனுக்குள்ள பூமியில் உழுதலைச் செய்து விளைவிப்பாரென்பதும், அங்ஙனம் விளையும்பொருளை எந்நிலத்தவருங் கொள்ளத் தங்கள்தங்களுக்குள்ள பொருள்களைக் கொடுப்பதோடு நிலங்களையும் இவர்வசமாக்குவா ரென்பதுமாம்.

இங்ஙனமான அளவிறந்த பெருமையுடைய வேளாளர்குலத்தில் அவதரித்தனராகலின், அவரது செல்வத்தின் அளவு அளவுபடாததென்னும் அச்சிறப்புத்தோன்ற ஏரின்மல்கு வளத்தினால்வரும் எல்லையில்லதோர் செல்வமுமென்றார்.

* திருக்குறள். அதி - உழவு. செ - ௪.

வேதங்களிற் கூறப்படும் அறநெறிகளைக் காக்குங் கடப்பாடுடையார் அந்தணரென்றும், அவ்வறநெறியின் வழியே ஆஜ்ஞாரூபமாகிய செங்கோலைச் செலுத்தி உலகினரைக் காக்குங் கடப்பாடுடையார் அரசரென்றும், உலகினரால் தேடப்படும் பொருளைத் தம்பொருள்போ லெண்ணி அதனைப் பெருக்கும் வழியே பெருக்கி அப்பொருளை அவர்பாலாக்கி அவர்களைக் காத்துத் தம்மைக் காத்துக்கொள்ளுங் கடப்பா டுடையார் வைசியரென்றும், வைதிகசம்பந்தமான தருமநூல்களிற் கூறப்பட்டிருத்தல்போல் சைவசம்பந்தமான தருமநூல்களில் கூறப்பட்டுள்ள சரியைகிரியை யோகம் ஞானம் என்னும் இறைவனது மெய்ப்பணியைச் செய்வோராகிய மெய்யடியார்கள் - என்றும் அப்பணியைக் குன்றாது நடத்திவர, அவர்களை எதிர்கொண் டழைத்தலும், அவரடிமுடியிற்பட வணங்குதலும், ஆசனத்திருத்தி அருச்சித்தலும், அறுசுவையோடுகூடிய நால்வகை உண்டிகளை இடையிடையே செவியினூட்டததகும் இனியசொற்சுவைகளோடு உண்பித்தலு மாகிய சிவபணியில் சிந்தையை மாறுபடாது நிலைபெறுவித்து அதனை இயற்றுவதில் கடப்பாடுடையார் வேளாளர் என்று கூறப்பட்டிருந்தலால் அக்குலதருமத்தை இயற்றுவதில் குன்றாத சிந்தையுடையவரென்னும் சிறப்புத்தோன்ற அடியார்திறத்து நிறைந்ததோர் சீர்ம்மல்கிய அன்பின்மேன்மை திருந்தமன்னிய சிந்தையும் என்றார்.

எல்லையில்லதோர் செல்வமும், அடியார்திறத்து மன்னியசிந்தையும் ஒருங்கே எய்தப்பெற்றதனால் அடையப்படும் பிரயோஜனம் தாம்கொண்டிருக்கும் அச்சிவதருமத்தை உலகினரெல்லாங் கொண்டு அதனால் அடையப்படும் பிரயோஜனத்தை யடையும்படிச் செய்வதாகலான் அவ்வேளாண்தன்மையில் விருப்பமுடையவ ரென்னும் சிறப்புத்தோன்ற - மற்றவை பெற்ற நீடு வாழ் வேளாண்மையாரின் மிக்க என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் - எல்லையில்லதோர் செல்வமுடையாரென்றும், அடியார்திறத்து திருந்தமன்னிய சிந்தை யுடையாரென்றும், அவ்விரண்டையும் உலகினர்க்கெல்லாம் உபகரிக்கும் வேளாண்தன்மை உடையாரென்றும், அங்ஙனம் உபகரித்தலே தாம்கொள்ளும் பயனாக விரும்பி உள்ளாரென்றுங் கூறப்பட்டன. (உ)

## அடியவர் பூஜைமுறை கூறல்.

ஆரம் என்பு புனைந்த வையர்தம் அன்ப ரென்பதோர் தன்மையான்
நேர வந்தவர் யாவ ராயினும் நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள் குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி வெய்த முன்னுரை செய்தபின்.

(எ - து.) தம்மிடத்து நேரும் (எதிர்ப்படும்) படிவந்த அடியார்கள், எக்குலத்தவராயினும் எந்நெறி யுடையவராயினும், என்பினை ஆரமாகப்பூண்ட இறைவரது அன்பர்கள் என்று எண்ணவரும் அந்த வொப்பற்ற தன்மையினால், தம்மிடத்து என்றுமுள்ள அடியார் பத்தியானது, முற்பட்டுவந்து எதிர்கொண்டுசென்று, அவர்கள் எதிரே கைகுவித்துநின்று, அவர்கள் திருச்செவியிலே புகும்படியாக, குளிர்ந்த மென்மையாகிய மதுரமொழிகளை, இன்பங்கூற முன்னே கூறி, அதன்பின்னர் என்பதாம்.

பஞ்சபூதமயமாகிய உலகம் - கடவுள் ஒருவன் உண்டென்பதனை உணரவிரும்புவார்க்கு அதனை உணரும் வகையாகக் காணப்பட்டுள்ள அரியபொருள். அஃதாவது, - தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலை என்றும் உடைத்தாய் இவ்வுலகு காணப்படலால் இச்செயல் செய்வான் ஒருவனுளனாதல்வேண்டுமென் றுணரவருவதேயாம்.

அஃதேபோல்,—ஐயறிவோடுகூடி தோற்றமுதலிய முத்தொழிற்படும் அறிவுடைய உயிர்கள் - ஆணவாதி மலங்கள் உண்டென்பதனை உணரவிரும்புவார்க்கு அவற்றின் இயல் எல்லாம் உணரும்வகையாக உணரநிற்கும் அரியபொருள்கள். அஃதாவது:—உயிர்

கள் - அவனவளதுவாய் எதிர்பட்டு முன்னிலையாய் நிற்கவரும் உருவங்களிடத்து முனைத்துவந்து அவைகளைப்பற்றவரும் அவ்வவ்வறிவிடத்து ஆணவமலத்தையும், அவ்வுயிர்களுருவங்களைச் சுட்டிப் பற்றியபின்னர் அவ்வழியாய் வேண்டுதல் வேண்டாமை அந்நிகழ்ச்சியில் முனைத்துவந்து சுகதுக்கானுபவங்களைப் பற்றவரும் அவ்வச்செயல்களிடத்துக் கன்மமலத்தையும், அவ்வனுபவங்கட்கு உட்பட்டபின்னர் அவைகட்கு இடங்கொடுப்பதாகிய அவ்வத்தனுகரணங்களிடத்து மாயாமலத்தையும் உணர்நிற்பனவாம்.

அல்லதூஉம் - மாயாமல சம்பந்தமுள்ள தனுவாதிகளோடும், கன்மமல சம்பந்தமுள்ள செயலோடும், ஆணவமல சம்பந்தமுள்ள அறிவோடும் கூடியிருக்கின்ற அவ்வுயிர்கள்-உயிர்க்குயிராய் உள்ளிருக்கும் சிவனுருவத்தை உணர்விரும்புவார்க்கு அவ்வுருவத்தினியலை உணரும்வகையாக உணர்நிற்பன்றோர் அடையாளப் பொருள்களுமாம்.

சிவவுருவத்தின் இயல் யாதெனின்,—அன்பென்பதாம். அன்பு என்பது யாதோவெனின்,—மெய்யரும்புதல், விதிர்விதிர்த்தல், கைகளைத் தலைமேல்வைத்துத் தடுக்க அறியாத கண்ணீர்ததும்பல், வெதும்பல், உள்ளம் பொய்தவிர்ந்துப் போற்றல், என்புநெக்குருகல் முதலியபலவாம். இங்ஙனமான வழியான் மனவாக்குக் காயங்கள் உருகவருமாயின் அவ்வுயிர்களையே சிவன் தன்னுருவமாகக்கொண்டு வாழ்கின்றவனும். ஆகலின், அவ்வன்பை உணர்தற்குநிற்பது உடம்போடுகூடிய உயிர்கள் என்க. இனி இங்ஙனமான அன்பினை உடம்போடு கூடியிருக்கின்ற உயிர்கள் காட்டாவாயின் அவை உயிர்களன்றும் ஆனால், தோலாற் போர்த்திருக்கப்பட்ட என்பினாலாகிய உடம்பென்னும் சுமையைச் சுமக்கும் சுமையாட்களாம் அவர்கள் வாழ்கின்றனரேயெனின், அவ்வாழ்க்கை*வற்றல் மரம் தளிர்த்தற்று எனவே,—வலிய பாலநிலத்தின்கண் வற்றல் மரம் தளிர்த்தாற்போலுமாம் வற்றன்மரம்போல என்றதனால், என்பில்லாத வுடம்பை வெயில் காயந்தாற்போல, மரம்போன்ற அன்பில்லாத உயிர்களை அறக்கடவுள் காயும்.

அறக்கடவுள்காயும் வற்றல்மரம் என்றுசொன்னால் அவர்கள் இடத்தானும், செல்வப்பொருளானும், ஏவல்செய்வோரானும், மற்றவைகளானும் கூடியிருக்கப்பட்டவராகக் காணப்படுகின்றார்களே எனின், அவற்றான் பெறப்படும் பயன் அவர்களுக்கின்றும் மற்றென்னெனின் "அரிசனம்பூசி மாலை அணிந்து பொன்ஆடை சாத்திப், பரிசனம் பின்புசெல்லப் பார்கள் பரிக்கக்கொட்ட, வரிசினம் ஊதக்கொம்பல் வந்திட வுணர்வு மன்றி,பெரியவர் பேசுமன்னம் பிணமிருந்தலாற் பிணத்தோடொப்பர்" என்று சிவஞானசித்தியிற்கூறியபடி பயனொன்றுமில்லை என்க.

இன்னும், அசேதனமாகிய உலகம் - கடவுளை ஒருவன் உளன் என்பதைக்காட்டும் ஓர் அடையாளப்பொருளெனவும், சேதனமாகிய உயிர் அசத்தாகிய பாசத்தின் இயல்களையும், சத்தாகிய சிவத்தின் உருவமாய முத்திசாதனமாய விளங்கும் அன்பினையும், உணர்தற்கான ஓர் அடையாளப்பொருளெனவும், அன்பின் உருவம் இத்தன்மைத்து எனவும், அன்புடையாரே உயிர்களெனவும் அன்பிலாதார் என்பைப் போர்த்திருக்கும் உடம்புகளெனவும், அன்போடு பொருந்துவதற்கு வந்தது உடம்பென்றுணராது, புறத்துறுப்புகளை யுடையவராயிருப்பவர் அவ்வுறுப்புகளாற் பெறும்பயனைச் சிறிதும் பெறாரெனவும் கூறிப்போந்த உண்மைகளையெல்லாம் நன்குணர்ந்த பெரியோர் இந்நாயனார் ஆகலின், • அன்பு உடையரல்லாதாரை உயிர்களெனவும், அவ்வுயிர்கள் கூடியிருக்கும் உடம்பை உடம்பெனவும், அவர்கள் கொண்டிருக்கும் இடம் பொருள் ஏவல்கள் பயனுடையன எனவும் எண்ணாதவராய், அன்பினை உடையவரே உயிர்கள் எனவும், அவர்களுடைய உடம்பே உடம்பெனவும், அவர்களுடைய இடம் பொருள் ஏவல்களே

"கூடிக்கூடி உன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா, வாடிவாடி வழியற்றேன் வற்றல்மரம்போல் நிற்பேனோ" எனவரும் திருவாசகத்தானறிக

பயனுடையன எனவும் எண்ணி, மெய்யரும்பல் கண்ணீர் அரும்பல் முதலிய மெ பின்தன்மை எவரிடத்திற் காண்கின்றனரோ, அவர்களே சாதித்தன்மை கு தன்மை பிறப்பின்தன்மை ஒருங்கே எய்தப்பெற்ற சைவசீலர்கள் எனவும், இச்சிலர் களைத்தான் சமகூட பாகச் சிவன்கொண்டிருப்பன் எனவும் தெளிந்து, அவர்களுக்கே தாம் எக்காலத்தும் மறவாது கொண்டிருக்கும் பத்திமையச்செலுத்தும நியதியுடையாராம் முற்பட்டெருட் தன்மையரென்பார் ஆயின் அன்பு நிறைந்தமையால் அன்பர் என்பதோர் தன்மையால் நோவந்தவர் யாவராயினும் நிந்தராகிய பகுதிமுன் கூடவந்து என்றார்.

ஆணவமலத்தின் தன்மையைக் கெடுத்தவர் என்பார் எதிர்கொண்டு என்றார். கன்மமலத்தின் செயலைத் தடுத்தனர் என்பார் கைகளைக் குவித்துநின்று செவிப்புலத்து ஏமம் முன் மதுப்பதும பரிவையத முன் உரை செய்து என்றார்.

இதனால் ஆணவத்தின் தன்மையை நீக்க அறியாதார் அடியாரையும் அறியார், அவரையும் எதிர்கொள்ளார் என்பதும், கன்மமலத்தின் செயலைத் தடுக்க அறியாதார் கைகுவித்து நிற்றல்முதலிய செயல்களைச்செய்ய அறியார் என்பதும் அறிவுறுத்தினமை காண்க.

அன்பின்தன்மை அன்பர்பட்டதை அறிவது ஒழிந்து, அறம்வளராதார்க்கும், பாவம் தேயாதார்க்கும், அறியாமைநீங்காதார்க்கும், அழிதன்மாலையவாய இம்மை மறுமை இன்பங்களில் உவர்ப்புத் தோன்றாதார்க்கும், பிறவித்துன்பங்கள் தோன்றாதார்க்கும், வீட்டின்கண் ஆசையுண்டாகாதார்க்கும், பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகளையுடையார்க்கும், யோகமுயற்சி இல்லாதார்க்கும், மெய்யுணர்வு பெறாதார்க்கும், அகப்பற்றுப் புறப்பற்றாகிய இருவகைப்பற்றும் விடாதார்க்கும் கூறியுள்ளனவாகிய சாதியொழுக்கம் குலவொழுக்கம் பிறப்பொழுக்கங்களை அறிதல் சிவதருமநெறியில் நிற்போராகிய அடியார்களுக்குக் கூடாவாகலான் நோவந்தவர் யாவராயினும் யாதும் அன்பர் என்பதோர் தன்மை அறிவாரென்று அறிவுறுத்தியதெனக.

இதனை, "சாதிகுலம் பிறப்பு என்னும் சுழிப்பட்டுத் தடுமாறும் ஆதம(அன்பு)இலி நாயேனை" எனவும், 'பேதைகுணம் பிறர் உருவம் யான் எனதென்று உரைமாற்றி' எனவும், கூறிய திருவாசகத்தான் உணர்க.

என்னை ஆமாகப்புனைந்ததை "நங்காய் இதுவென்னதவம் நரம்போடெலும்பு அணிந்து, கங்காளந் தோண்மேல் காதலித்தான் காணேடீ, கங்காளமாமாகேள் காலாந்தரத்து இருவர், தங்காலஞ்செய்யத் தரித்தனன்காண் சாழலோ" எனவரும் திருவாசகத்தான் உணர்க.

இதனால், அன்போடு இயைவதற்குத்தந்த என்பைக்கொண்டு அரிபிரமர்கள் அன்போடு பொருந்தாதொழிந்தமையான் கண்ணாடியிற்கூட்டி ஐயிசுகியநிலையில் நிறுத்தாது, அவர்கள் அன்பற்றநிலையை யாவருங்காண தமது அங்கத்தில் என்பாகிய அங்கத்தை அணிந்தனரென்க. (௫)

கொண்டு வந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆதனத்திடை வைத்த அர்ச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தில் ஆறு சுவைத்திறத்தினில் ஒப்பிலா
அண்டர் நாயகர் தொண்டர் இச்சையில் அமுது செய்ய அளித்துளார்.

(எ - து.) தம்முடைய வீட்டின்கண்ணே, அவ்வடியார்களை அழைத்துக்கொண்டு வந்து, உள்ளே நுழைந்து, தாமரைமலர்போலும் பிரகாசிக்கின்ற அவர்கள் பாதங்களை நீராற்கழுவி, அதன்பின்னர் உள்ளத்துள் நிறைந்துவரும் ஆசையினால் அரிய ஆசனத்

தில் எழுந்தருளி யிருக்கும்படிச்செய்து, மலர்களைக்கொண்டு அருச்சனையாதி பூஜைகளைச்செய்து, அதன்பின்னர் உண்பன தின்பன நக்குவன குடிப்பனவாகிய நால்வகை உணவுகளையும், கைப்பு தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு என்றெண்ணப்பட்ட அறுசுவைப் பதார்த்தங்களையும் திருவமுதாகச்செய்யுந் திறத்தினால் செய்யப்பட்ட அவைகளைப் பரிகலத்திற்படைத்து, மஹாதேவனுடைய ஒப்பில்லாத அவ்வடியார்கள் இச்சையின்படியே திருவமுதுகொள்ளும்படி செய்துவருவாராயுள்ளவர் என்பதாம்.

எனதெனப்படும் மமகாரத்தைத் தன்னில் நின்றும் நீக்கினர் என்பார் — கொண்டுவந்து மனைப்புகுந்து எனவும், இருவினைகளையும் பற்றறக் கழுவினர் என்பார் — குலாவு பாதம் விளக்கியே எனவும், இருவினையின்வழி உழன்றுதிரியும் மனத்தை ஒருநெறிப்படுத்தினர் என்பார் — மண்டுகாதலின் ஆதனத்திடை வைத்து எனவும், அதுகாறும் மனத்தினால் விளைந்திருந்த சங்கற்பகோடிகளெல்லாம் பிறவிக்கு இடம் செய்யாவண்ணம் அவரடிக்கீழ்ப்படுத்தினரென்பார் — அருச்சனைசெய்த என்றும், தம்மை உண்பனவாகிய விடயத்தோற்றங்களையும், அத்தோற்றத்தின் வழிப்பாய்த் தம்அறிவைத் தின்பனவாகிய சுகதுக்கங்களையும், அச்சுகதுக்க அனுபவங்களில் கைப்புந்தான்றாது அவைகளில் மாறிமாறி உழன்று உழன்று நக்கச்செய்பவல்ல ஆசையினையும், அவ்வாசை வழியே தம்மை முற்றுங் குடிப்பனவாகிய சிற்றின்பத்தையும் நால்வகை உணவாக உண்பித்தனர் என்பார் — பின் உண்டி நால்வகைத்து எனவும், சிற்றின்பநுகர்ச்சியின்கண், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றுச் சுவைப்பதாகிய ஐவகைச்சுவையும், இவ்வைவகைச் சுவைகளையும் தனித்தனி அறிந்து சுவைப்பதாகிய ஓர்சுவையும், ஆகிய அறுவகை அறிவின் சுவைகளையும் அறுசுவையாக உண்பித்தனர் என்பார் - ஆறுசுவைத்திறத்தினில் அமுதுசெய்ய அளித்துளார் எனவுங் கூறினார்.

தேவரில் ஒருவனாகவும், மூவரில் ஒருவனாகவும் கூறப்படினும், அஃதேபோல் அவன் நிற்கப்பெறினும், போகிகளாகிய தேவர்கள் தங்கட்குரிய போகம் அவன்கொள்ளும் போகவடிவத்தாலன்றி அமையப்பெறாமையான தேவரில் ஒருவனாகாமையும், அரிக்கும் அயனுக்கும் அடியும் முடியும் அறியப்படாமையான மூவரில் ஒருவனாகாமையும் வெளிப்படலால் ஒப்பிலா அண்டர்நாயகர் என்றார்.

தேவரில் ஒருவனாகாதவனுமாய், மூவரில் ஒருவனாகாதவனுமாய் நிற்கும் ஒப்பிலா அண்டர்நாயகன் தம்மோடொன்றியெண்ணப்பட்டும், ஒப்பாய உடனிருக்கப் பெற்றும் உள்ளார் தொண்டராகலின் அப்பெரியோர்கள் தம்மால் படைக்கப்படும் நால்வகையுண்டியிலும், அறுசுவைத்திறத்திலும் இச்சைமீக்கூர்ந்து உட்கொள்ளச்செய்தல் பெரிய ஆற்றல் என்பார் - தொண்டர் இச்சையில் அமுதுசெய்ய அளித்துளார் என்றார்.

ஆணவத்தின் தன்மையைக் கெடுத்ததுபோலும், கன்மமலத்தின் செயலைத் தடுத்ததுபோலும் தொண்டர் இச்சையில் அமுதுசெய்விக்குந் திறமுடையவர் என்றதனால் மாயாமலத்தின் மயக்கினையுங் கடந்தாரென்று அறிவுறுத்தியவாறும் ஆயிற்று.

இதனால், — மாயாமலத்தின் மயக்கைக்கடக்க அறியாதார் அடியார்க்கு இவ்வாறுன அமுதுசெய்யவல்லரல்லர் என்பதும் கூறப்பட்டது.

இவை இரண்டு திருப்பாசுரத்தாலும், நாயனார் அன்பின்றன்மை உணர்ந்தவரென்பதும், அவருக்கு நேரவருகின்ற அடியார்களும் அன்பின்றன்மை உடையவர்களே என்பதும், அவ்வன்பர்கள் மும்மலங்களையும் கழுவினவராகலின், அவர்கள் வழியானே மும்மலப்பற்றுக்களையுங் களைந்து சுத்தராமவண்ணம், அவர்களை எதிர்கொண்டழைத்துவந்து மனையுட்புகுந்து, பின்னர் ஆசனத்திருத்தி அருச்சித்து அதன்பின்னர் அவர்கள் இச்சைகொண்டு உண்ணும்படி அமுதளித்தனர் என்பதும் கூறப்பட்டன. (௩)

## அடியவர் பூஜையால்வரும் செல்வத்தின் பெருமை கூறல்.

ஆளு நாயகர் அன்ப ரானவர் அளவி லாருள மகிழவே
நாளு நாளுநி றைந்து வந்து நுகர்ந்த தன்மையின் நன்மையால்
நீளு மாநிதி யின்ப ரப்பு நெருங்கு செல்வ நிலாவியெண்
தோளி னார்அள கைக் கிருத்திய தோழ னாரென வாழுநாள்.

(எ - து.) தம்மைஆளும் நாயகராகிய சிவபிரானுடைய எண்ணிறந்த அடியார்கள், நாள்தோறும் கூட்டம கூட்டமாகவந்து, உள்ளமகிழுமபடியாகத் திருவமுது உண்டு வந்த சிறப்பினால் உண்டாகிய சிவபுண்ணிய மிகுதியினால், பொன் மணி முதலிய பெரியசெல்வங்களின் தொகுதி எங்குங்காண விளங்கிற்று. அதனால், எண்தோளனாகிய இறைவன் அளகாபுரிக்கு அதிபதியாகவைத்த குபேரனென்று சொல்லும்படி வாழ்ந் திருந்தனர். அங்ஙனம வாழ்ந்திருக்குநாளில் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், தம்மைநோக்கி வருகின்ற அன்பர்களை நாடோறும் காத்து வருகின்றவனது வாழ்க்கை நல்குரவான் வருந்திக் கெடுமாறில்லை எனவே, அதனாற் பொருள் தொலையாது மேன்மேல் கிளைக்குமெனவும், முகம் இனியனாய்த் தக்கஅன்பினரை உபசரிப்பவனது இல்லத்தின்கண் திருமகள்மனமகிழ்ந்து வாழாநிற்கும் எனவும், முன்னே அன்பினரை உண்பித்துப் பின் மிக்கதனைத் தான்உண்பவனது விளைநிலத்திற்கு வித்திடுதலும் வேண்டுமோ வேண்டா எனவும் கூறியுள்ள * மெய்யுரைப்படி நாயனார் அளவிலாத அன்பர்கள் மகிழுமாறு தமதில்லத்தின்கண் நாடோறும் விருந்தோம்பி வந்தனரெனவும், அந்நெறியின் நன்மையால் பொன மணி முதலிய நிதியின் பரப்புகளெல்லாம நெருங்கிநிறைந்தன எனவும், அச்செல்வவிசேடத்தால் இறைவனது தோழனாகிய குபேரனைப்போல் வாழ்ந்திருந்தன ரெனவும் கூறப்பட்டன.

அல்லதூஉம், செல்வமிகுதி வேண்டுவோர் அன்பர்கள் அளவில்லராய் தம்மில்லத்தின்கண்வந்து நால்வகையுணவோடு அறுசுவைத்திறங்களால் உண்டருளல்வேண்டும் என்னும் நல்லெண்ணத்தை யுடையராதல் வேண்டும் என்றுங்கூறப்பட்டது. (ரு)

செல்வ மேவிய நாளில் இச்செயல் செய்வ தன்றியு மெய்யினால்
அல்லல் நல்குர வான போதினும் வல்ல ரென்றறி விக்கவே
மல்லல் நீடிய செல்வ மெல்ல மறைந்து நாடொறு மாறிவரு
தொல்லை யில்வறு மைப்ப தம்புக உன்னினார் தில்லை மன்னினார்.

(எ - து.) தில்லையின்கண் நீங்காதிருக்கின்ற இறைவனார், (நாயனார்) செல்வமெல்லாம் நிறைந்திருக்கப பெற்றகாலத்தில் அடியார்களுக்கு அமுதளித்துப் பூஜித்தலாகிய அருட்பணியைச் செய்வதேயல்லாமல், துன்பத்தைவிளைவிக்கும் வறுமைவந்து பொருந்தியகாலத்திலும், தமக்குள்ள உண்மை என்னும் நிதியினால் அவ்வடியார் பூஜையைச் செய்ய வன்மையுடையவரென்று (அன்பர்களுக்கெல்லாம்) அறிவிக்கும்பொருட்டாகவே, வளப்பத்தில் மிகுந்த செல்வங்களெல்லாம் நாள்தோறும் சிறிது சிறிதாக மறைந்து, அறிவின் நிலைமையைத் திரிந்துபோதலைச் செய்யவல்லதும், விரைந்துவருந் தன்மையுடையதுமான வறுமை அவாபால் பதமாகவரத் திருவுளத்தில் எண்ணினாரென்பதாம்.

தில்லைமன்னினார், செல்வமேவியநாளில், இச்செயல்செய்வது அன்றியும், அல்லல் நல்குரவானபோதிலும், மெய்யினால் வல்லா என்று அறிவிக்கவே, மல்லல் நீடிய செல்வம், நாடொறும் மெல்லமறைந்து ஒல்லையில் வறுமை மாறிவந்து பதம்புக உன்னினார் எனக்கொண்டு கூட்டுக.

திருக்குறள்—விருந்தோம்பல்.

செல்வம் நல்குரவு என்பன - ஈண்டு அறிவினது உண்மை யின்மைகளைக் குறித்து நின்றன. எனவே,—பொருளுடைமை - செல்வமுடைமை என்றும், அப் பொருளின்மை - வறுமை என்றும் குறித்தனவன்று. நுண்ணிய அறிவுடைமையே செல்வமுடைமை என்றும், நுண்ணிய அறிவின்மையே - வறுமை என்றும், குறித்தனவாம். இப் பொருள்தோன்றவே - * "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார், என்னுடைரேனும் இலர்" என்று கூறப்பட்டிருக்கின்றமை காண்க.

ஆகவே, நாயனார் அழிவிலாமையும், மாறுபடாமையும் உடைய மெய்ச்செல்வமாகிய எல்லாம் உடைய அறிவுடைமையை உடையவரென்பார் - செல்வமேவிய நாளில் இச் செயல் செய்வதன்றியும், அல்லல் நல்குரவு ஆனபோதினும், மெய்யினால் வல்லர் என்றார்.

இவ்வுண்மையை அறியும நுண்ணிய அறிவிலாதவர்க்கும், அரன்பால் அன்புடைய அறிவுடையார்க்கும, அவ்வுண்மையை அறிவித்துய்விக்க, இறைவன் எண்ணினர் என்பார் - அறிவிக்க என்றார். எனவே, நாயனார்செய்யும் அடியவர்பூசை தமக்குள்ள செல்வத்தைநோக்கிச் செய்பவராயின் வறுமைவந்தகாலத்து அப்பூசையும் வறுமைப்பட்டொழியும். வறுமையினுஞ் செல்வத்தினுங் குன்றாது என்றும் ஒருநிலையதாயிருக்கும் அறிவுடைமையாற் செய்பவர் என்று அறிவிக்க என்க.

அளவிலா அன்பாகள அமுதூண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியினால் அதிகரித்துவந்த பெருஞ்செல்வமன்றி, நல்வினையான் வந்த செல்வமன்றாகலான், அச்செல்வத்தினை மறைக்கத் தீவினைநினைந்ததில்லை, இறைவனே நினைந்தார் என்பார் தில்லை மன்னனார் உன்னனார் என்றார்.

சிவானுக்கிரகத்தான் வருஞ் செல்வத்தை அடியாரமாற்ற எண்ணுவாராயின் அச் செல்வம் அக்கணமே அழியுந்தன்மையுடைத்து. அடியவர் தமதுள்ளமகிழ்ச்சியினால் வந்த செல்வத்தை இறைவனாலும மாற்றல் அரிதென்பார் - மல்லல்நீடிய செல்வம் மெல்ல மறைந்து என்றார். அச்செல்வம மறையவேண்டுமென்று இறைவன் எண்ணினாராயினும் அது உடனே மறைந்துபோதற்குத் துணியவில்லையென்பார் நாடோறும் மெல்ல மறைந்து என்றார்.

செல்வம்நீங்க வருங்காலத்து விரைந்துவரத்தக்க வறுமையானது, நாயனார்பாலுள்ள செல்வம் உடனே போதலொழிந்து நாடோறும் மெல்லமறைந்து போகும் காரணம் என்னையோவென்று தானும் அச்சமுற்று † "இன்மை யெனவொருபாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும்" என்றாற்போல நாம் அவரது இன்பநிலையைக்கெடுக்கும் பாவியாகாது அவரிடத்துப் போதலைமாத்திரம் எண்ணிப் போவோமென்று அவர்பால் மாறிப் பதமாய்ப் போனதென்பார் - ஒல்லையில் வறுமை மாறி வந்து பதப்புக என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நீரிற் சுருட்டு நெடுந் திரைபோன்ற செல்வத்தைக் கொண்டு நாயனார் அடியவர்பூஜை செய்தவரன்று, நல்வினை தீவினை என்னும் இருவினையுட்படாத தமது மெய்யறிவென்னும் அழிவில் செல்வத்தாற் செய்தவரென்றும், அவர் பெற்றுள்ள செல்வம் அடியவர் பூஜையால் வந்த செல்வமாகலின், நல்வினையால் வரும் செல்வத்தை மாற்ற விரைந்துவரும் இயல்பினையுடைய வறுமை அவர்பாலுள்ள செல்வத்தை மாற்றஅஞ்சி, பதமாய் மாற்றவந்ததென்றும், அங்ஙனம் வரும் வறுமைக்கு அஞ்சி அவரதுசெல்வம் விரைந்து போனதில்லை என்றும், நிலையாயிருக்கவேண்டிய செல்வம் மெல்லமெல்லப் போகவும், விரைந்துவரத்தக்க வறுமை பதமாய்வரவும் இல்லைவாணன் நினைத்ததனாலேயன்றி அவைகளே அச்செயல் செய்வன அன்றென்றும், இங்ஙனமான செயலைச்செய்ய இறைவன் நினைத்தது நாயனாருக்காகவன்று, அறிவுடையார் இவ்வுண்மையை யுணர்ந்து வறுமையால் வருந்தாது, மெய்ச்செல்வமாகிய

---

* திருக்குறள். அதி - அறிவுடைமை. செ - க0.

† திருக்குறள். அதி - நல்குரவு செ - உ.

மெய்யறிவுடையாராய், செல்வ வறுமைகளால் தட்டுப்பட்டுழலாது என்றும் அடியவர் பூஜையைச்செய்து அளவில் செல்வத்தைபபெற்று வாழ்வே யாமென்றும் கூறப்பட்டன.

மெய்யினால் என்றதற்கு - நண்ணிய உணாவாகிய செல்வமென்றும், செல்வம் நாடொறும் மெல்லமறைந்து என்றதற்கு அச்செல்வம் அறிவுடை அடியார்களால் வந்ததாகலின், அடியாராகிய அவரைவிட்டுத் துணிந்து மறைவதற் கில்லாமல் மெல்ல மெல்ல மறைந்தென்றும், இதனுள் மறைந்து என்னும்சொல்லுக்கு - செல்வம், இவரைவிட்டுப போதல் என்பது இல்லாமல் இவரிடத்திலேயே மறைந்திருக்கச் செய்தனரென்றும் பொருள்கொண்டாம். நல்குரவு என்றது - அல்லல் நல்குரவு என்றது அதன் கொடுமை தோன்ற எனவே, "இன்மையின் இன்னாதது இயாதெனின் இன்மையின் இன்மையே இன்னாதது" அஃதாவது,—ஒருவனுக்கு வறுமைபோல் கொடிதானது யாதென்று கேட்டால், வறுமைபோலக் கொடிதானது வேறொன்றில்லை. என்ற குறட்பாவானறிக. (௬)

செல்வம்சுருங்கியும் பணி சுருங்கியதில்லையெனல்.

இன்ன வாறு வளஞ்சு ருங்கவும் எம்பி ரான்இளை யான்குடி
மன்னன் மாறன் மனஞ்சு ருங்குத லின்றி யுள்ளன மாறியுந்
தன்னை மாறியி றுக்க வுள்ள கடன்கள் தக்கன கொண்டுபின்
முன்னை மாறில திருப்ப ணிக்கண் முதிர்ந்த செய்கைய ராயினார்.

(ப - ரை.) இவ்வகையாகச் செல்வங்களோ செல்வத்தாலுண்டான வளப்பங்களும் சிவபிரானால் நாளுக்குநாள் மறைந்தவும், இளையான்குடிமாறா என்னும் எமது பெருமானாகிய தலைவனார், தமது மனம் அன்பினில்நின்றுஞ் சுருங்குதலில்லாதவராய், தம்மிடத்திலுள்ள பொருள்களையெல்லாம் விற்றும், தம்மை விற்றும் கொடுக்கத்தக்க தகுதியான கடன்களை வாங்கிக்கொண்டும், முன்செய்துவந்த அடியார்பூஜையாகி திருப்பணியில் ஒருசிறிதும் மாறுபடுதலில்லாமல் அவர்களுக்குச் செய்யவேண்டிய உண்டி விடயத்தில் ஊக்கப்பாடுடைய முயற்சியுடையவராய் பின்னரும் செய்துவருவா ராயினார் என்பதாம்.

இறைவனது சங்கற்பத்தால், விரைந்துசெறத்தக்க வறுமையானது விரைந்துவராமலும், அடியார் பூஜையில் அவர் கொண்டிருக்கும் இன்பத்தைச் கெடுக்க எண்ணாலும், பதமாய்ப் புகப்புக வறுமைவரின் போவதாகிய பெருஞ்செல்வமானது போகாமல் நாடோறும் மறைந்து வருதலுமான செயலில் செல்வ வறுமைகள் நின்றன என்பார் இன்னவாறு எனவும், மறைந்துபோகும் செயலிலே முனைந்துநின்ற செல்வமானது மறையத் தலைப்பட்டமையான், பதமாய்ப் புகத் தலைப்பட்ட வறுமையானது புகும் முயற்சியில் முனைந்துநின்று புகப்பெற்றமையான் செல்வத்தினால் உண்டாயிருந்த வளப்பங்களெல்லாம் குறுகிப்போயின என்பார் வளஞ் சுருங் கவும் எனவும், "இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல், குலனுடையான் கண்ணே யுள" அஃதாவது - யான் வறியன் என்று வறுமையான் சொல்லவரும் இழிவான சொல்லை, தான் பிறரிடத்துச் சொல்லாமையும், அந்த இழிவான சொல்லைத் தன்னிடத்துச் சொன்னவர்க்குத் தான் தடையின்றிக் கொடுத்தலும் இவையிரண்டும் நல்லகுடியிற்பிறந்தவனிடத்தே உண்டாவனவாம் என்று கூறியபடி இளைக்கும்படியான வறுமைவந்தகாலத்தும் ஈதலில் இளைக்காத நல்லகுடியிற்பிறந்த தலைவரிற் சிறந்தவர் இவர் என்பார் இளையான்குடிமன்னன் மாறன் எனவும், இந்நூலாசிரியர் யானும் அத்தன்மையுடைய வேளாண் குலத்திலே பிறந்து இப்புராணத்தைச் சொல்லவரும் புண்ணியம் உடையனானேன் என்பார் எம்பிரான் எனவும், குடிவகையினாலே வறுமைவந்தகாலத்தும் இல்லை என்று

திருக்குறள். அதி - நல்குரவு. செ - க. திருக்குறள். அதி - ஈகை. செ - ௩.

சொல்லும் இழிவான சொல்லைச்சொல்ல அறியாதவர், அறிவுடைமை என்னும் பெருஞ் செல்வமும் உடையராய் இருக்கின்றமையான், இவர் மனம்சுருங்கி இல்லை என்பதைத் தான் சொல்லத்துணியாரேயன்றி, ஈதலுக்கான செயல் எத்திறத்தனவாயினும் அவை யெல்லாம் செய்வதில் மிகத் துணிவும் மனவிரைவும் உடையவர் என்பார் - மனம் சுருங் குதல் இன்றி உள்ளனமாறியும், தன்னைமாறி பிறுக்கா்புள்ள கடன்கள் தக்கன கொண்டு எனவும், தம்மிடத்துள்ள பொருளை மாற்றியும் தன்னை அரசதண்டனைக்கு உட்படுத் தவுமான கடன்களைக்கொண்டது, முன் செல்வமுடைமையிற் கொண்டிருந்த மஹேசுர வராபூஜை செல்வம்சுருங்கிய பிற்காலத்தும், அபபூஜைகள் மாறுதலில்லாமல் செய்யவே என்பார் - முன்னைத் திருப்பணியில் பின்மாறில் (செய்யவும்) எனவும், அவர் அறிவு சிற்றறிவாயும், சிற்றின்பத்திற் கேதுவாகிய பொருட்செல்வத்தில் முனைத்துநிற்கும் இயல்புடையதாயும் இருப்பின் செல்வம்சுருங்கியகாலத்து அவர்செய்யும்பணி குன்றும், அவர் அறிவு - பேறறிவாயும், பேரின்பத்திற் கேதுவாகிய அருட்செல்வத்தில் முனைத்து நிற்கும் இயல்புடையதாயும் இருத்தலின், அவர் பெற்றுள்ள அறிவும் சுருங்குதலின்றி அவர்பணியும் மாறுபாடுதலின்றி பெருகுந்தன்மையில் தளராது அதிகரித்தன என்பார் - முதிர்ந்தசெயகையாயினர் எனவுங் கூறினார்.

இத்திருப்பாட்டான், இவ்வுலகின்கண் * இம்மானிடப்பிறவியும், இப்பிறவிக்கேற்ற செயல்களும், அச்செயல்களான் வரும் பொன் மணி முதலிய பல பொருள்களும், சங்கம ஆராதனை செய்வதற்கு இறைவன் கொடுத்ததேயன்றி, ஊழ்வகையான வரும் செல்வ வறுமைகளுக்கேற்ற செயல்களைச் செய்வதற் கன்றென்பதைத் தெள்ளிதின் உணர்ந்த பெரியோராகலின், வறுமையான் வரும் துன்பத்திற்குத் தன்னைவைத்திருக்க எண்ணாது, தன்னையும் மாறியிருக்கவுள்ள தக்க கடன்கள்கொண்டு, தமக்குக் குன்றாத மகிழ்ச்சியைக் கொடுக்கவல்ல மஹேசுவரபூஜையில் மகத்தான முயற்சியை யுடையவராய்த் தம்மை யிருக்க வைத்தனர் என்று கூறப்பட்டது. (எ)

## இறைவன் தபோதனராய் வருதல்.

மற்ற வன்செயல் இன்ன தன்மைய தாக மாலய னுனவக்
கொற்ற ஏனமும் அன்ன மும் தெரி யாத கொள்கையர் ஆயினார்
பெற்றம் ஊர்வதும் இன்றி நீடிய பேதை யாளுடன் இன்றியோர்
நற்ற வத்தவர் வேடமே கொடு ஞால முய்ந்திட நண்ணினார்.

(எ - து.) செல்வஞ்சுருங்கி கடன்கள் மேலிட்டும், அவை மேலிடுந்தோறும் அன்பு மேலிட்டும், அன்பு மேலிடுந்தோறும் அடியார்பூஜை மேலிட்டும் வருவதாகிய செய்கையில் ஊக்கமுடைய நாயனார்தன்மை இங்ஙனமாகவிருக்க, திருமால் பிரமனாகிய அந்த வெற்றிப்பாடுடைய வராகமும் அன்னப்பட்சியும், அடியும் முடியும் தெரிந்துகொள்வதற்குக் கூடாத கொள்கையை உடையவராய்நின்ற அவ்விறைவனார், இடபத்தின்மேல் ஊர்ந்துவருவது மில்லாமல், பேதைத்தன்மையை ஒருநாளும் மறவாத உமாதேவி உடனிருப்பதும் இல்லாமல், ஒப்புசொல்வதற்குக் கூடாத நல்ல தவத்தினையுடைய அடியார் வேடத்தையே கொண்டு, இவ்வுலகெல்லாம் உய்யும்பொருட்டு நாயனாரது வீட்டிற்கு எழுந்தருளினார் என்பதாம்.

நாயனாருக்கு இயல்பான குடியின்வண்மையான் முன் அமைந்துள்ள செல்வமானது அன்பென்னும் முளையை வெளிப்படுத்தி நாளுக்குநாள் முதிர்வித்துத் தழைவித்து அருள் என்னுங் கனியைத் தோற்றுவித்து, கனிவிக்க அடியார்பூஜை என்னும் அரும் பினை எங்கும் அரும்பச்செய்தது. பின் அமையவந்த வறுமையானது அவ்வரும்பினை

"மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயத்து, ஆனிடத்து ஐந்தும் ஆடும் அரன்பணிக்காக வன்றோ" எனச் சிவஞானசித்தியாரில் அருளின்மைகாண்க.

மலர்வித்து பிஞ்சாய்க் காயாய்க் கனியாய் வளரச்செய்தது; இவையன்றி வேறு பழி பாவங்களுக் கிடஞ்செய்த புகழ் அறங்களைக் கெடுத்ததில்லை என்பார் - பற்றவன் செயல் இன்றாநன்மையாக என்றார்.

மெய்யுணர்வினையுடையா (வாலறிவ) ன் என்றும், அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர்நினைந்த வடிவோடு விரைந்து சேருகின்றவன் என்றும், ஒரு பொருளையும விரும்புதலும வெறுத்தலும் இல்லாதவன் என்றும, மயக்கத்தைப பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டுவினைகளுஞ் சேராதவன் என்றும், கூறப்படு வனவாகிய இறைமைக்குணங்களை இயல்பாகவுடைய இறைவன் வேறொருவன் உளன் என்னும் உண்மையுணராது, அவைமுற்றவும தாமே உடையமென அரி பிரமர்கள் கருத, அக்கருததினால் அவர்களைப பன்றியாயும் பட்சியாயும் போகச்செய்து, எழுத்துக்களெல் லாம் அகரத்தை முதலாக உடையனபோல் உலகங்களெல்லாம் பகவானாகிய தன்னை முதலாக உடையன என்னுங் கொள்கையைத்தெரியாவகைசெய்த அரிய கொள்கை உடையவரென்பார்-கோறப்பழம் அன்னமுநதெரியாதகொள்கையாயினர் என்றார்.

ஆதிபகவானாகிய அவ்விறைவன் அறங்களெல்லாவற்றைபும் தனக்கு வடிவாக வுடைய அறவாழி யந்தணனாதலின், நாயனாரது அறத்தின் மிகுதியைக்கண்டு விரைந்து அருள்செய்யக் கருதி, தனக்கு இன்றியமையாத துணையாயுள்ள தேவியையும், எழுந் தருளுவதற்கு இன்றியமையாத ஊர்தியையும் மறந்து புறப்பட்டு வந்தனரென்பார், பெற்றம் ஊர்வதும் இன்றி, நீடிய மேனைபாகர் உடனின்றி நண்ணினர் என்றார்.

நாயனார் - திருவேடத்தைமெய் கண்டு சிவனெனமகிழும் இயல்புடையராகலினா னும், அவ் வேடமுடையாரே நல்லதவத்தினரென எண்ணும திண்ணிய அறிவுடைய ராகலினானும், அவ்வேடத்தையே தாமும கிடைகூர்ந்து கொண்டனரென்பார நற் றவத்தவர் வேடமேகொடு என்று .

ஈண்டு தரு முனரப்படாகிய நினை வாப - வினை - என்னது பெற்றம் (பசு) என்றது - தருமதேவனை நாயனார்பால் மிக்க இரக்கங்கொண்டுசென்றுங் குறிப்புத்தோன்றவும், வறுமை என்னும அசுததம் அவரைச் சாரவண்ணம் சுத்த நு செய்யயமேவண்டுமென்று எண்ணியதென்னுங் குறிப்புத்தோன்றவும், அக்கொ பா ப, உம்பிகையை, தேவி என் றது - தேவியாள் என்றது பயனார் ப தாயபோல் கருணையுடையளாயினாள் என் னும் குறிப்புத் தோன்றவும,அவர்பால் வறுமை என்னும ஒருபாவி வந்து விட்டனனே அவன் அவரை என்னபாடுபடுத்துவானோ என்று மனங்கலங்கினாள் என்னும் அக்குறிப புத்தோன்றவும் கூறியவாறுமென்க.

திருமால் வராகவடிவங்கொண்டு அடியைக காணாதவராயினும், பிரமன்போல் பொய்யுரைகூறாது காணாத உண்மையைக்கூறி, பொயயை வெற்றிகொண்டனராகலா னும், இறைவனும் வெளிப்பட்டகாலத்து அவரடிபணிந்து அவ்விறைவனால் இவ்வுல கில் திருக்கோயிலும் பூஜையும பாவராலும் வழிபடுந் தலைமையும் பெற்றனராகலானும், கோற்ற ஏனம் என்றார். கொற்றம் - வெற்றி, தலைமை

செல்வ வறுமைகளிற்பட்டு நீங்காதுழலும் அவ்வுழப்பு நீங்கி, அறிவுடைமை என்னும் பெருஞ்செல்வமுடையராய் அடியார் பூஜையை எக்காலத்தும் நீங்காதவராய் உய்ந்துபோம்வகையை உலகினர் உணரத் திருவுளத்து எண்ணினர் என்பார் - ஞாலம் உயந்திட என்றார.

முற்றுணர்வுடையான் தனது கணவன் ஒருவனே யென்று வேதாகமங்களெல் லாங் கூறுதலால், அத்தகைய சொல், தான் பேதமையுடையவள்போல் என்றும் இருந்தாலன்றி நிலைபெறாதாகலி னானும், அங்ஙனம் அச்சொல் நிலைபெறும்படிச் செய்

யாளாயின் * "தகைசான்ற சொற்காத்து" என்று சொல்லப்படும் கற்பிலக்கணம் தன்மாட்டு நிலைபெறு தாகலினானும், அச்சீலமுடைமை உணர்வார் உணர, சிவசந்நிதானத்தில் அங்ஙனம் இருப்பவர் என்பார் - நீடியபேதையார் என்றார்.

நாயனார்பால் வறுமைவந்தபோது அது அவரது அழிவிலா அறத்தைக் கெடுக்குமாகலின் அவ்வறங் கெடாவண்ணம் நடத்த அறக்கடவுளாகிய விடை அக்கணமே சென்றதென்னும் பொருள்தோன்ற பெற்றும் அங்கிலாது போயிற்றென்றும், அவ்வறுமை அவருள்ளத்தில் துன்பஞ்செய்யத் தலைப்படுமாகலின் அது தலைப்படாவண்ணம் அருளுருவாகிய அம்பிகை அவருள்ளத்தில் அக்கணமே புகுந்தாளென்னும் அவ்வருமைதோன்ற பேதையும் அங்கிலாது போயினாள் என்றும் பொருள்படுமாறு காண்க.

இத்திருப்பாசுரத்தான், "செல்வமென்னும் அல்லலிற் படாமலும், நல்குரவென்னும் தொல்விடம் ஏறாமலும் பிழைத்து, தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி, அத்தெய்வத்தின்பால் அன்புடையராய அடியவர்பூசையை பசுமரத்தாணி யறைந்தாற்போலக் கைக்கொண்ட நாயனாரது அரிய செயலால் இறைவன் ஊர்ந்துவரும் இடபத்தையும் விட்டு, பிரியாநங்கையாகிய உமாதேவியையும் விட்டு, தவவேடங்கொண்டு அவர்பால் மிக்க ஆவலுடன் வந்தாரென்பதும், அவரினும் விரைவாய தருமரூபமாகிய விடபமூர்த்தியும், அருளுருவாகிய அம்பிகையும் சென்றனவென்றுங் கூறப்பட்டன. (௮)

வேறு.

நாயனார் எதிர்கோள்ளல்.

மாரிக் காலத் திரவினில் வைகியோர்
தாரி யின்றிப் பசிதலைக் கொள்ளவந்
பாரித் தில்ல மடைந்தபின் பண்புற
வேரித் தாரான் விருந்தெதிர் கொண்டனன்.

(எ - து.) (தவவேடத்தனாய் இறைவன்வந்தது எங்ஙனமென்றால்) மழைக்காலத்தில் ஓர்நாள் இராப்பொழுதில், பெருகுகின்ற பசிநோய்கூடாக பசியானது மேற்கொண்டு வருத்த, அதனை அங்கீகரித்துக்கொண்டு, புறமனைவாயிற்கதவைத் தாளால் அடைத்து உறக்கமற்று நாயனார் இருந்தகாலத்தில், (மேலேசொல்லிய தவவேடத்தர் அடைத்த கதவினைத் தட்ட) தேன்சிந்தும் மாலையையணிந்த அந்நாயனார், (கதவைத்தட்டிய ஓசையைக்கேட்டு யாரோ விருந்தினர் வந்தாரென்று) மிக்கஆவலுடனும் விரைவுடனும் வந்து கதவைத்திறந்து எதிர்கொண்டு உள்ளே எழுந்தருளவேண்டும் எழுந்தருளவேண்டுமென்று அழைத்துக்கொண்டு போயினார் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், ஊர்ந்துவரும் விடையுமின்றி, பாங்கில்வரும் பார்வதியாருமின்றித் தனியராய்த் தவத்தினராய இறைவன் வந்தகாலம் மழைக்காலத்தில் ஓர்நாள் இரவில் என்றும், அவ்விரவில் நாயனார் உணவின்றிப் பசியினால் மிகவருந்திப் புறக்கதவைத் தாளிட்டு, உறக்கமுமின்றி இருக்கும் சமயமென்றும், அச்சமயத்தில் தாளிட்டிருந்த கதவை இறைவன் தட்டினாரென்றும், தட்டியவோசையைக்கேட்டு நாயனார் அடியார் யாரோவந்தாரென்று விரைந்துவந்து கதவினைத் திறந்து அடியவரைக்கண்டு அகமகிழ்ந்து, எல்லாம் உடையார்போல் எதிர்கொண்டு உள்ளே அழைத்துக்கொண்டு வீட்டுக்குள்ளே வந்தாரென்றுங் கூறப்பட்டன.

மாரிக்காலம் என்றது - நாயனாருக்குக் கருணைமழை பொழியவந்தகாலம் எனவும் இரவு என்றது — † "தெருளிடத்து அடியார்சிந்தையுட் புகுந்தசெல்வமே சிவபெருமானே இருளிடத்து உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்" என்றருளியபடி இறைவனைப்பிடிக்

* திருக்குறள். அதி - வாழ்க்கைத்துணைநலம். செ - ௬. † திருவாசகம் பிடித்தபத்து-௯

கும் அவ்விரவெனவும், வைகி என்றது பாசகாரியங்களுக்குச் செயலின்றி அருளாகிய சந்திரோதயப பிரகாசத்தில் தங்கிஇருக்கும்பொழுதில் எனவும், தாரிப்பின்றிப் பசி தலைக்கொள்வது என்றது † "பத்திலனேனும் பணிந்திலனேனும் உன் உயர்ந்த பைங்கழல் காணப, பித்திலனேனும் பிதற்றிலனேனும் பிறபபறப்பாய் எம்பெருமானே, முத்தனையானே மணியனையானே முதல்வனே முறையோ என்று, எத்தனையானும் யான்தொடாந்து உன்னை இனிப்பிரிந்து ஆற்றேனே" என்றும், "உரியேன் அல்லேன் உனக்கடிமை உன்னைப்பிரிந்து இங்கு ஒருபொழுதும், தரியேன் நாயேன்" என்றும், இறைவன் அருள்கூடஎண்ணி வருந்துவதாகிய அப்பசி தலைக்கொண்டது எனவும், பாரித்து இல்லம் அடைத்தபின் என்றது—"காணுமதொழிந்தேன் நின்திருப்பாதம் கண்டு கண்களிகூரப், பேணுமது ஒழிந்தேன் பிதற்றுமது ஒழிந்தேன் பின்னை எம்பெருமானே, தாணுவே அழிந்தேன் நின் நினைந்து உருகும் தன்மை என்புன்மைகளாற், காணுமது ஒழிந்தேன் நீ இனிவரினும் காணவும் நாணுவனே" என்று இங்ஙனம் கூறிவந்த முறைப்படி சிவனது உருவங்களாகிய அடியார்கூட்டங்களை மிகப்பெருக்கமாக வரக்கண்டு அவர்கள்பாதங்களையும் கண்டு களிப்பதுமுதலிய செயல்களுக்கு அமைந்துள்ள செல்வம்சுருங்கப்பெற்ற நான் நீ என்பால் யாதுகாரணத்தாலோ கொண்ட கருணைவிசேடத்தால் இச்சமயம் வரப்பெறினும் உன்னை எவ்வாறுகாண்பேன், எனவே அடியார்கள் வழிபாடுசெய்யப் பெறின் உன்னைக் காண பெறுவேன். அது சுருங்கியபடியினால் காணப்பெறேன், என்று கதவைத் தாளிட்டனரெனவும், விருந்து எதிர்கொண்டனன் என்றது ‡ "மொருந்து ஒரொருகால் நினைபாதிருந்தாலும், வேறுவந்து என்னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே" என்ற தேவாரத்தில் அருளியபடி, நாயனார் கதவடைத்து அடியார்க்கமுதளித்தலாகிய பணி கைகூடாதிருப்பதை எண்ணிஎண்ணி ஏங்கிய ஏக்கம் அகல இறைவன் அடியரராய்வந்து கதவைத்தட்ட, அடியவர் வந்தாரென்று அக்கணமே ஏக்கமெல்லாம் ஒழிந்தவராய், மிக்க ஊக்கங்கொண்டு கதவைத்திறந்து, எதிர்கொண்டனரெனவும் பொருள்கொள்ளக் கிடக்கின்றன.

பண்புற - என்றது. ஆவலும், விரைவுமாம். எதிர்கொண்டனன் என்றது - தூரத்தேவருகின்றவரைப்போலும் எண்ணி வருக, வருகவென்றழைத்தலுமாம். (௬)

மனைவியைப் பசிதீர்க்க வினுதல்.

ஈர மேனியை நீக்கி இடங்கொடுத்
தார வின்னமு தூட்டுதற் காசையால்
தார மாதரை நோக்கித் தபோதனர்
தீர வேபசித் தார்செய்வ தென்னென.

(எ - ள்) (உள்ளே அழைத்துக்கொண்டுபோனபின்னர்) மழையினால் நனைந்திருக்கும் அவ்வடியரது திருமேனியை வஸதிரங்கொண்டு துடைத்து, அவர் குளிரால் வருந்துதற்கில்லாத ஒருநல்லிடத்தைக் கொடுத்து, (பின்னா அவர் கொண்டிருக்கும் ஆராப பசியைக் கண்டு அந்தோ! பசித்திருக்கின்றனரே இதற்குநாம் என்செய்யக்கடவோமென் றேங்கி அவருக்குற்ற பசியை) நல்ல அமுதூட்டிப் போக்கவேண்டும் என்னும் ஆசையைமேற் கொண்டவராய் அமுதூட்டுவதற்கு, தனது மனையாளைப் பார்த்து, நம்பால்வந்த இத் தவச்சிரேஷ்டர், அடங்காப பசியுடையவராக விருக்கின்றார். (இவரது பசியைக் கண்டு நாம் சும்மாவிருப்பது நலமாகுமா?) இதற்கு நாம் செய்யத்தகும் செயலெது? நீ சொல்லுவாய் என்று வினவினர் என்பதாம்.

இன்று ஒருசிவனடியாரைக் காணப்பெறாது ஒழிந்தோமே என்று மனத்தின் கண் கொண்டிருந்த கவலையை ஒழித்தவரது திருமேனி மழையினால் நனையப்பெற்று நடுக்க

* பாசகாரியங்கள் - ஓய்ந்து ஒடுங்குங்காலம். திருவாசகம். † திருவாசகம் எண்ணப்பதிகம் ‡ சுந்தரமூர்த்திகள் தேவாரம்.

முடையதா யிருக்க, நாம் காணலாமோவென்று தம்மிடத்துள்ள ஆடையாற் போக்கினு ரென்பார் - ஈரமேனிநீக்கி எனவும், அன்பென்னும் நீர்நிறைந்த நினைவென்னும் தடா கத்தில் மலர்ந்திருக்கும் தமது இருதயகமலத்தில் அடியார் அடிகளே இருந்துவாழ இடங்கொடுத்திருப்பவர் அன்று அவ்வடியார்க்குத் தமதுள்ளமேயன்றி, புறத்திலுள்ள வீட்டிடத்தையுந் தந்தனரென்பார் - இடங்கொடுத்து எனவும், * "அப்பனே எனக்குஅமு தனே ஆனந்தனே அகம்நெக உள்ளூறுதேன், ஒப்பனே, (எனக்கூறும்) உனக்குரிய அன்பரில் உரியனாய் (யான்) உனைப்பருக நின்றதோர் துப்பனே" நீ பசித்திருக்கின் றனையே, என்னை, நீ உண்ணும் உணவாகக் கொள்ளுதற்கு உரிமையாவனோ, நான் எங்ஙனம ஆவேன்! ஆகேன் என்று அவர் திருமுகநோக்கிக்கூறிப் பின் அவரது ஆறாப் பசியையாற்ற இனிய ஆகாரத்தை ஆசையால் ஊட்ட எண்ணினா ரென்பார் - ஆசையால் ஆர இன்னமுது ஊட்டுதற்கு எனவும், அவர் ஊட்டஎண்ணிய அமுது தன்மனையாளை யன்றி அமையா தாகலான் அதுநோக்கி மனையாளை விரைந்துபார்த்தனர் என்பார் - தூய மாதனைநோக்கி எனவும், நாயனார் மிகவிரைவுடன் தம்மைநோக்கிய நோக்கின் குறிப் புணர்ந்த மனைவியாரிடத்து, தாம் அமுதூட்டஎண்ணிய ஆசையைக் குறிப்பான் உணர் த்த, என் அன்புடையாளே! இங்குவந்த இப்பெரியோர், பசியினால்வாடி யிருக்கத்தக்கவ ரன்று, இவரைப்போலும் தவத்தின்மிக்கார் ஒருவருமிரார், இங்ஙனமான அரியபெரி யோரை நாம் காணப்பெறுவோமோ! காணப்பெற்ற புண்ணியமுடைய நாம் இவரது பசியைத் தீர்க்க வேண்டும்: அதற்கேற்றசெயல் இப்போது எதுசெய்யத்தக்கதோ அதனை நீ எண்ணிச் சொல்வாயாக என்பார் - தபோதனர் தீரவேபசித்தார் செய்வது என்னென எனவுங்கூறினார்.

இத்திருப்பாசுரத்தான், மழையில் தமது வீட்டைநோக்கிவந்த அடியவரை உள்ளே அழைத்துக்கொண்டு வந்தபின்னர், அவரது திருமேனி நீரால் நனைந்திருப்பதைக்கண்டு, மனம்சகியாது ஆடையால்துடைத்து, உள்ளே ஓரிடத்தில் இருக்கச்செய்து, பின் அவருக்கு அமுதூட்ட ஆசைகொண்டு, அவ்வாசை முற்றுப்பெறுமாறு, தமது இல்லா ளைப்பார்த்து இத் தபோதனர்க்கு அமுதூட்டவேண்டும்; இதற்கு இப்போது என்ன செய்யலாமென்று வினவியதைக் கூறப்பட்டது. (கய)

நமக்கு முன்பிங் குணவிலை ஆயினும்
இமக்கு லக்கொடி பாகர்க் கினியவர்
தமக்கு நாமின் னடிசில் தகவுற
அமைக்கு மாறெங்ங னேயணங் கேயென.

(எ - து.) (அங்ஙனம் வினவியதன்றி மீண்டும்) தெய்வத்தன்மைவாய்ந்த நங்கையே நமது வீட்டில் உணவென்பது நமக்கு முன்னமே இல்லை. (அத்தன்மைத்தான வறு மை நம்மிடத்தில் குடிகொண்டதாயினும், இவ்வடியவர் இமயமலையரையன் குலத் துதித்த*பூங்கொடிபோன்ற உமாதேவியை ஓர்பாகத்திலுடைய சிவபெருமானுக்கு மிக வும் இனிமையாயுள்ளவர். (சிவபிரானுக் கினியராகிய இவ்வடியருக்கு) நாம் இனிமை யாகிய உணவைத் தகுதியாகச் சமைக்கும்வகை எப்படி என்று கேட்டனர் என்பதாம்.

நாயனார்,—"தபோதனர் தீரவேபசித்தார் செய்வது என்னென" என்று மனைவி யாரைக் கேட்டபோது, அவர் தமது நாயகர் தமக்குற்றிருக்கும் வறுமையை மறந்தவரா யிருக்கின்றா ரென்றும், அதற்குக் காரணம் தபோதனரைக் காணப்பெற்ற அருமையால் என்றும், அவ்வருமையால் இன்றுகாறும் அடியார்கள் தம்மிடத்தில் உண்டு களித்தி ருக்க, அவர்களைக்கண்டு களிக்கும் புண்ணியமுடைய நாம், இன்று இவ்வரிய தபோத னர் பசித்திருக்கக் காண்போமாயின் இளையான்குடிமாறன் என்னும் நமது பெயர்

திருவாசகம் சதகம். செ - கஅ.

என்னுமென்றும், எண்ணிய எக்கத்தால் அவர்பசியை மாற்றும்வகை தமது அறிவில் தோன்றாமல் நம்மைக்கேட்டனர் என்று நினைக்கின்றாரென்றும் பின்னர் † "இல்லவள் மாண்பானால் (நற்குண நற்செய்கைகளை உடையவளா யிருந்தால்) இல்லாதது ஒருபொருளும் இல்லை" என்று கூறப்பட்டிருத்தலால், "செய்வது என்னென" என்று அவர் நம்மைக் கேட்டனரே, அதற்கு நாம் செய்வதைச் சொல்வதா! செய்வதற்கு என்ன இருக்கின்றது ஒன்றுமில்லை என்று சொல்வதா! என்செய்ய எப்பொருள் இருக்கின்றது? என்று சொல்லுவோமாயின், † பெண்ணிற் பெருந்தக்கயாவுள, என்னும் மெய்யுரை நம்பால் பொய்யுரையாமன்றோ என்று எண்ணுகின்றாள் என்றும், மனைவியாரது குறிப்புணர்ந்து முன்பு இங்கு நாக்கு உணவில்லை என்பதை யான் மறந்தேனல்லேன் என்றும், அல்லனாயினும், நம்மை வாட்டுகின்ற பசி அவரை வாட்ட அதனால் மிகவும் அவர் வாடுகின்றாரே! அவர் நம்மைப்போன்றவராயின் நம்மைப்போல அவரும் பசியினால் வருந்தலாம். இவ்வடியவர் இமயத்துலக் கொடியாராகிய பார்வதிபாகருக்கு மிக்க இனியவராகக் காணப்படுகின்றார். ஆகலான் அவர்க்கு எவ்வகையினாலாவது நாம் இனிய அமுதூட்டவேண்டுவது அவசியம், அதற்கேற்ற வுபாயத்தை† "மனைத்தக்க மாண்பு உடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" என்றதனாலும் நீ அணங்காதலானும் இப்போதுள்ள அளவுககுத்தக்கபடி அமுதளித்தற்கு ஏற்ற உபாயம் உனக்குத் தோன்றும், அவ்வுபாயத்தை சிறிது எண்ணிச் சொல்வாயென்று மீளவும் கேட்டனரென்று இப்பாசுரத்தாற் கூறப்பட்டன. (கக)

மனைவியார் இன்மைகூறி உபாயங்கூறல்.

மாது கூறுவள் மற்றொன்றும் காண்கிலேன்
ஏதி லாரும் இனித்தரு வாரில்லை
போது வைகிற்று போமிடம் வேறிலை
தீது செய்வினை யேற்கென் செயலென்று.

(எ - ) (சமைக்கும்வகை எப்படியென்று நாயனார் மனைவியாரைக்கேட்டபோது) அவ்வம்மையார் நாயனாரைநோக்கிச் சொல்லுகின்றாள். அடியாருக்கு அமுதுபடைப்பதற்கான பொருள் ஒன்றேனும் நம்மிடத்தில் இருப்பதாக யான் கண்டேனில்லை. (நம்மிடத்தில் இல்லாதொழியினும்) கடன்கொடுப்பவாவது யாராவது உண்டோவென்று எண்ணிப்பார்த்தால் இனி ஒருவருமில்லை. (யாவருங் கடன்கொடுத்தவர்களே) வேறு யாராவது உண்டோவென்று பார்க்கவேண்டுமானாலும் நல்ல நடுராத்திரியாயிற்று, (அதனால்) இச்சமயத்தில் போகத்தக்க இடம் ஒன்றேனும் இல்லை. (இவ்வாறு) இல்லையென்று சொல்லும் கொடிய தீவினையுடைய எனக்கு உம்முடைய வேண்டுகோளின்படி செய்வதற்கான செயல் யாதிருக்கின்றது என்று கூறி என்பதாம்.

"தபோதனர் தீரவேபசித்தார் செய்வது என்னென" என்றும, "இமக்குலக் கொடிப்பாகர்க்கு இனியவர் தமக்கு, இன்னடிசில் தகவுற அமைக்குமாறு எங்ஙன்" என்றும் இரண்டுமுறை வினவிய வினாவிற்குத் தாம-மற்றொன்றுங் காண்கிலேன் என்றும், இனித் தருவாரில்லை என்றும், போமிடம் வேறில்லை என்றும் மும்முறை இல்லையென்று சொல்லும் பாவமுடையவளாயினனே, இனி இன்னசெயல் உளதென்று சொல்லும் அணங்காகும் புண்ணியமுடையவளாவனோ என்று உள்ளம் வருந்தினாரென்பார் - தீது செய்வினையேற்கு என்செயல் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், அம்மையார் - தமது நாயகரைநோக்கி, ஒருமுறைக்கு இருமுறை "செய்வது என் அமைக்குமாறு என்" என்று அடியாரைக் கேட்டபோதினும், செய்வதற்கும், அமைப்பதற்கும் நம்மிடத்தில் ஒருபொருளுமில்லை, இதுகாறும்

திருக்குறள். அதி - வாழ்க்கைத்துணைநலம். செ - ௩. ௪. ௧.

கடன்கொடுத்தவர் இனிக்கொடுப்பது மில்லை, புதிதாய் கடன்கொடுப்பாருமில்லை. ஆக லான் நம்மிடத்தில் இல்லை என்பதுதான் உள்ளது; உள்ளதென்பது இல்லை ஆகவே தீவினையேற்குச் சொல்லும் சொல்லும், செய்யும் செயலும் என்னையுள என்று கூறினு ரென்று கூறப்பட்டன. (கஉ)

செல்லல் நீங்கப் பகல்வித் தியசெந்நெல்
மல்லல் நீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்ல வாறமு தாக்கலும் ஆகுமற்
றல்ல தொன்றறி யேனென் றயர்வுற.

(எ - து.) (எனக்கென்ன செயலிருக்கின்றது என்று சொல்லிய மனைவியானவர் மறுபடியுங் கூறுகின்றார்.) நமதுபசித்துன்பம் நீங்கும்பொருட்டு, இன்றுபகல் நாற்றிடு வதற்கு சம்பாநெல் விதைத்திருக்கின்றோ மல்லவா, அந்நெல், தண்ணீரில் ஊறி முளை தோன்றியிருக்கும். அந்த வளப்பம்பொருந்திய நெல்முளையை ஓர் கூடையில் வாரிக் கொண்டு வந்தால், அதனை எனக்குத் தெரிந்தஅளவில் சமைக்கவும் ஆகும். இந்தவகை யன்றிப் பிறிதொரு வகையை யான் அறியமாட்டேன் என்று கூறித் துன்பப்பட்ட பொழுது என்பதாம்.

உளதென்றுகூறும் அணங்கல்லள இலதென்றுகூறும் தீதுசெய்வினையேன் என்று கூறிய கடுமொழியைக் கேட்டநாயனார், வறுமையான் வந்தடுக்கும் பசி நம்மோ டொழியாது, இமக்குலக்கொடிபாகர்க் கினியவராகிய இத்தபோதனரிடத்தும்சென்று வருத்துகின்றதே, நம்மிடத்தும் அவரிடத்தும் வந்து வருந்தச்செய்யவல்ல பசி, எவ் வகையான் மாற்றவேண்டுமோ அவ்வகையான வுபாயங்களெல்லாம் இயல்பாகவே யறியவல்ல மனையாளிடத்தும் எனக்கு என்செயலிருக்கின்றதென்பதும், இல்லையென் பதுமாகிய கடுமொழிகளும் வந்துவிட்டனவே, இனி நாம் என்செய்யக்கடவோம். "படமாடக்கோயில் பகவற்கு ஒன்றீயில், நடமாடக்கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா, நடமாடக்கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில், படமாடக்கோயில் பகவற்கு அது ஆமே" என்றபடி நடமாடக்கோயிலாக வுள்ள இத் தபோதனர் ஒருவர்க்கு நாம் அன்னம் படைப்போமாயின் அது இவர்க்குமாகி, எங்குமாயிருக்கின்ற சிவனுருக்கும் ஆகுமே, எனவே - இவருக்கு அமுதூட்டுவதாகிய இம் மஹேஸ்வரபூஜை யான் சிவபூஜை யும் ஒருங்கே செய்ததாக ஆகுமல்லவா? அவ்விருபூஜையும் இன்று நாம் இழக்கப்பெற் றோமோ என்றும்,—

"தண்டறுசிந்தை தபோதனர் தாமகிழ்ந்து, உண்டது மூன்றுபுவனமும் உண்டது" என்றபடி இவ்வொருவருக்கு அமுதுபடைப்போமாயின் வறுமையால் மஹேஸ்வரபூஜை குன்றியதென் றெண்ணியவருத்தம்போய், மூன்றுலகத்தார்க்கும் படைத் தோம் என்று பெருமகிழ்ச்சியை அடைவோமல்லவா ? அப்பெருமகிழ்ச்சியையும் அடை யாதொழிந்தோமே என்றும், சிந்தித்து,ஒன்றும் சொல்லஅறியாது நிற்கும் சமயத்தில், வினையேற்கு என்ற அம்மையாருக்கு அவரது சிந்தாகுலம் ஒழியுமாறும், இனிப் பிறக் கும்பிறவியல்லல் ஒழியுமாறும் திருவருளால் ஓர்செயல்தோன்றியதென்பார் - செல் லல்நீங்க என்றார்.

அங்ஙனந் தோன்றிய அச்செயல் நாயனாரால் ஆகவேண்டிய தாகலான், அவரை நோக்கி, இனிக் கவலைவிடுமின்கள், என்று தாம்எண்ணிய உபாயச்செயல்களை ஒருங்கே சொல்லத்தொடங்கினுரென்பார் - பகல் (இன்று) வித்திய செந்நெல் மல்லல் நீர்முளை வாரிக்கொடுவந்தால் வல்லவாறு அமுதாக்கலும் (எனக்கு) ஆகும் என்றார்.

இச்செயல்தான் தபோதனர்பசிதீர்வதற்கும், இம்மஹேஸ்வரபூஜை இன்று செய் வதற்கு இல்லாதொழிந்தோமே என்று தேவரீருக்கெழுந்த கவலைதீர்வதற்கும், கற்பழி

திருமந்திரம். மயேசுரபூசை. செ - க. உ.

வுக்கிடமாகிய இல்லை என்னும் சொல்லை இன்றுசொல்லவந்த எனதுகுற்றம் ஒழிவதற்கும் இச்செயலன்றி வேறொன்றில்லை என்பார் - மற்றல்லது ஒன்றறியேன் என்றார்.

நாயனார் கவலைதீரச்சொல்லிய அச்செயலில் தனது அன்பார்ந்த கணவரது செயல் மிகுதியாயும், முற்பட்டும் இருத்தலால் அச்செயலின் வருத்தநோக்கிச் சிறிதுகவலை கூர்ந்தனரென்பார் அயர்வுற என்றார். எனவே - நாயனாருக்குச் செயலற்று யாவும் தன் செயலாகவே முடிவதாகயிருக்குமாயின் அயர்வுறாரென்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் வேண்டியபடியே அடியார்க்கு அமுதளிக்கும் அப பணி அவருக்குக் கைகூடுமாறு அதற்குரிய செயலைச் சொல்லி * "இல்லவள் மாண்பானால் இல்லது என்" என்றுகூறியசொல்லைத் தனக்கு மெய்யாக்கிக்கொண்டனர் என்று கூறப்பட்டது. (௧௬)

நாயனார் வயலுக்குச்செல்லல்.

மற்ற மாற்றம் மனைவியார் கூறமுன்
பெற்ற செல்வம் எனப்பெரி துண்மகிழ்ந்
துற்ற காதலி னுலொருப் பட்டனர்
சுற்று நீர்வயல் செல்லத் தொடங்குவார்.

(ஈ - ள்.) நென்முளையை வாரிக்கொண்டு வந்தால் சமைக்கலாமென்று மனைவியார் கூற அச்சொல்லைக்கேட்ட நாயனார் அச்சொல்லைத் தாம் முன்னேபெற்ற செல்வம் கிடைத்ததுபோல எண்ணி மிகவும் உள்ளமகிழ்ந்து, அம்மகிழ்ச்சியினாற் பொருந்திய ஆசையினால் மனைவியார் சொன்னதுபோல் செய்வதற்கு மனம் ஒருப்பட்டவராய், நீர் சூழ்ந்த வயலின்கண் போவதற்குப புறபபடுவாராயினார் என்பதாம்.

† "இருநோக்கு இவள் உண் (மையுண்ட) கண் உள்ளது ஒருநோக்கு, நோய் நோக்கு ஒன்று அந்நோய்மருந்து" என்றபடி, இவள் சிற்றின்பத்திற்கு இரண்டுநோக்கு உடையாள்போல், இபபேரின்பத்துக்கும் உடையளா யிருக்கின்றாள். இது அதிசயம் அதிசயம் என்று உள்ளத்துள் பெரிதானமகிழ்ச்சி யடைந்தனரென்பார் - பெரிது உண் மகிழ்ந்து என்றார்.

அடியார்க்கு அமுதளித்தற்கான செயல் என்னிடத்தில் என்னஇருக்கின்றது என்கிற சொல்லைச் சொல்லி நமதுநெஞ்சத்தில் முற்கணத்தில் நோயுண்டாக்கிய இவளே, பிற்கணத்தில் அந்நோய் தீருமாறு, "பகல் வித்திய செந்நெல்முளை வாரிக்கொண்டு வந்தால், வல்வாறு அமுதாக்கலும் ஆகும்" என்கின்ற சொல்லைச் சொல்லி நமது மனநோயைத் தீர்த்தனளே, இச்செவிச் செல்வம், "பெண்ணிற் பெருந்தக்கயாவுள" என்றபடி முன்னமே இவளைப்பெற்ற செல்வத்தினாலன்றோ என்று எண்ணினாரென்பார் மற்றுஅம்மாற்றம் மனைவியார்கூற முன்பெற்ற செல்வம் என்றார்.

மனைவியார்கூறிய அச்சொற்செல்வத்தால் தாம் செய்யஎண்ணிய மஹேஶ்வர பூஜை முற்றுப்பெறும் என்னும் நிச்சயத்தான் ஆசைமீதூர்ந்து அக்கணமே அச்செயல் செய்யத்துணிந்தனரென்பார் - உற்றகாதலினால் ஒருப்பட்டு செல்லத் தொடங்குவார் என்றார் (௧௭)

வயலுக்குச்சென்றகாலத்தின்சிறப்பு.

பெருகு வானம் பிறங்க மழைபொழிந்
தருகு நாப்பண் அறிவரும் கங்குல்தான்
கருகு மையிருளின் கனங் கட்டுவிட்
டுருகு கின்றது போன்ற துலகெலாம்.

* திருக்குறள். அதி - வாழ்க்கைத்துணைநலம். செ - ௩.
† திருக்குறள். அதி - குறிப்பறிதல். செ - ௧.

(எ - து.) (நாயனார் வயலுக்குப்போகப் புறப்பட்டபோது) மேகக்கூட்டங்கள் நெருங்கி எங்கும் நீர்மயமாய் விளங்க, விடாது மழைபொழிந்தது, (அதுவல்லாமல்) வயலினது கரையும் அதனடிவும் அறிவதற்கில்லாமல் இருளும் அடர்ந்திருந்தது. (அவ்விருள் எத்தன்மைத்தாக இருந்ததோவெனின்) கருமையாகிய இருளின்கூட்டங்கள், நெக்குவிட்டு உலகமுழுவதும் உருகிப் பாய்ந்ததுபோலும் பரவியிருந்தது என்பதாம்.

வரம்பிலின்பம் உடையானாகிய இறைவன், நாயனாருக்கு அதனைக்கொடுக்க எண்ணினாராகலின், அப்பேரின்பத்திற்கேற்பப் பேரருளுஞ்செய்யத் துணிந்தனரென்னும் அவருள்ளக்குறிப்பை அன்றுண்டாகிய இருளால் அறியக்கிடக்கின்றமைகாண்க.

இதனால், முன் இன்பந்தரும் முயற்சி பின் துன்பந்தரும் எனவும், முன் துன்பந்தருமுயற்சி - பின் இன்பந்தரும் எனவும் அறிக. எனவே - முன்இன்பந்தருவது - சிற்றின்பம். முன்துன்பந்தருவது - பேரின்பம். (கூ)

எண்ணும் இவவுல கத்தவர் யாவரும்
துண்ணெ னும்படி தோன்றமுன் தோன்றிடில்
வண்ண நீடிய மைக்குழம் பாமென்று
நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து.

(எ - து.) (இன்னமும் அவ்விருள் எத்தன்மைத்தாயிருந்ததோ வெனின்). இவ்வுலகின்கண் அஞ்சாத அறிவுடையாரென்று மதிக்கத்தக்க யாவரும் அஞ்சும்படி இருளானது தோன்ற, அவ்விருளின் முன்னே (அஞ்சாது) செல்வாராயின், அந்தோ! இவ்விருளானது இருளன்று கருநிறமிக்க மையின்குழம்பாமென்று, அவ்விருளில் செல்வதற்குத் (துணியார்) அத்தன்மைத்தான இருளையுடைய நடுச்சாமத்தில் என்பதாம்.

இவைமூன்று திருப்பாட்டாலும், நாயனார் - நீர்நிறைந்திருக்கும் வயலைநோக்கிச் செல்லத்தொடங்கினாரென்றும், அக்காலத்து, பெய்யாது கெடுப்பதாகிய மழை மற்றுங்கே ;எடுப்பதற்குப் பெய்துகெடுக்கத் தலைப்பட்டது என்று அதன்பெருமையும் எடுத்துக் கூறப்பட்டன.

அஃதாவது - * "மடுத்தவாயெல்லாம் பகடன்னான் உற்ற இடுக்கண் இடுக்கட் படும்" என்றபடி எவ்வகைத்தான துன்பம்வரினும் அதனாலெல்லாம் துன்பமுறாது முயற்சியில் ஊக்கமுடையாரும், அஞ்சுமாறு இருட்கூட்டமானது, கட்டுவிட்டு மைக்குழம்பாய் உருகிப்பெய்வதுபோலும் இருந்ததன்றி நீராக இருந்ததன்று என்க. (கக)

நாயனார் வயலையடைந்தது.

உள்ளம் அன்புகொண் டூக்கவோர் பேரிடாக்
கொள்ள முன்கவித் துக்குறி யின்வழிப்
புள்ளு றங்கும் வயல்புகப் போயினார்
வள்ள லாரிளை யான்குடி மாறனார்.

(எ - து.) (அத்தன்மைத்தான நடுராத்திரியில்) இளையான் குடிமாறநாயனாராகிய வள்ளலாரது உள்ளத்தில் அன்பானது பந்தித்துக்கொண்டு செலுத்த, பெரிய ஒரு கூடையை எடுத்துத் தமது தலைமறையும்படி மூடிக்கொண்டு, தாம் முன்னேசென்று சென்றிருக்கின்ற பழக்கத்தினால் பழகிய மனக்குறிப்பின் வழியாகப் பறவைகள் உறங்கும் (தமது) வயலிடத்துப் போகப்போயினார் என்பதாம்.

வள்ளலார் இளையான்குடிமாறநாயனார், உள்ளம் அன்புகொண்டு எனக்கூட்டுக.(கஎ)

* திருக்குறள். அதி - இடுக்கணழியாமை. செ - ௭.

### நாயனார் நெல்முளைவாரி வருதல்.

காலி னால்தட விச்சென்று கைகளால்
சாலி வெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலி வாரி யிடாநிறை யக்கொண்டு
மேலெ டுத்துச சுமந்தொல்லை மீண்டனர்.

(எ - து.) (நாயனார் மனக்குறிப்பினால் வழியை அறிந்தவராயினும்,) இது நாம் செல்லும் வழிதானோ அல்லவோ வென்று) காலினால் தடவித்தடவி வயலிற்சென்று, நீர்வெள்ளத்தின் வழியே ஒதுங்கிப் போயிருக்கின்ற சம்பாநெல்லின் வெள்ளிய முளைகளைச் கைகளாற்சேர்த்து வாரி, மேலே கவிழ்த்துக்கொண்டுவந்த பெரியகூடையில் நிறைத்து அக்கூடையைத் தலைமேல்வைத்துச் சுமந்துகொண்டு (நேரமாய்விட்டதே என்று) அதிசீக்கிரமாக வீட்டுக்குத்திரும்பினார் என்பதாம்.

நீர்வழிச் சார்ந்தன(வாகிய) சாலி வெண்முளை, கைகளால் கோலிவாரி இடாநிறையக் கொண்டு எனக்கொண்டு கூட்டுக. (கஅ)

### வேறு.

### விறகுகோடுத்தல்.

வந்தபின் மனைவி யாரும் வாய்தலில் நின்று வாங்கிச்
சிந்தையில் விரும்பி நீரில் சேற்றினை அலம்பி யூற்றி
வெந்தழல் அடுப்பின் மாட்ட விறகில்லை யென்ன மேலோர்
அந்தமில் மனையில் நீடும் அலகினை அறுத்து வீழ்த்தார்.

(எ - து.) நாயனார் வீடுவந்து சேர்ந்தபின்னர், இவர் வருகையைப் பார்த்துக்கொண்டு வீட்டின்முகப்பிலே நிற்கின்ற மனைவியார் (அவரது சிரமத்தைக்கண்டு மனம்பொறாது) தலையிலிருந்த கூடையை வாங்கிக்கொண்டு, நாம் எண்ணியதுபோலும் நெல்முளை கிடைத்ததே என்று) சிந்தையில் மகிழ்ந்து மிக்கஆசையுடன் சேற்றுமயமாய்க் கிடந்த அந்தநென்முளையை நீரினால் அலம்பியூற்றி, அந்நென்முளையைப் பக்குவமாகச் சமைப்பதற்கு, அடுப்பிலே தீமூட்டுவதற்கு விறகில்லையே இதற்கென்செய்வதென்று நாயனாரைக்கேட்க, அப்பெரியோர், பழைய கூரையாயிருக்கும் தமதுவீட்டினுள்ள அலகினை (கொம்புகளை) அறுத்துத்தள்ளினார் என்பதாம்.

* "உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே, இடுக்கண் களைவதாம் நட்பு" என்பதாவது,— ஓர்சபையில் நின்றவனுக்கு இடையிலுடுத்த ஆடை நழுவின், அப்போதே அவனது கைசென்று அவ்வுடையை எடுத்துடுத்து, அவனது அவமானத்தைப் போக்குதல்போல், தனது நட்பாளனுக்கு ஓர்துன்பம் வருமாயின் அப்பொழுதே அதனை யொழித்தல் வேண்டுமெனபதாம் ஆகலின், வீட்டினுள்ளே யிருக்கும் நட்பாளருக்கு உண்டாயிருக்கும் பசித்துன்பத்தை அகலுமாறு போக்க அறியாதநாம் உள்ளே செல்வதனால் பயனென்னை! என்றும், அவரது துன்பத்தைப் போக்க நமது நாயனார் இருட்பெருக்கங்கொண்டு பெய்யும் இம்மழையிற்சென்றனரே அவரது செயல் எவ்வாறாகுமோ என்கிற ஏக்கத்தின்மிகுதியினால் இங்கு புறம்பென்றும், இவ்விடத்தில் தனித்து நிற்பதுபழுதென்றும் எண்ணும் எண்ணமற்று நின்றனரானாலும் அவ்வுண்மைதோன்ற மனைவியாரும் வாய்தலில் நின்று என்றார். தனது துன்பமும் அடியார்க்குற்ற பசியின் துன்பமும் ஒருங்கே ஒழியுமாறு நென்முளை வாரிக்கொண்டுவந்தனரே இதுநமது பாக்கியமன்றோ என்று அதனைஎற்றுக்கொண்டனரென்பதுதோன்ற - சிந்தையில் விரும்பி வாங்கி என்றார். (கக)

* திருக்குறள். அதி - நட்பு. செ - அ.

### கறிக்குச் சாகமின்றெனல்.

முறித்தவை அடுப்பில் மாட்டி முளைவித்துப் பதமுன் கொள்ள
வறுத்தபின் அரிசி ஆக்கி ஆக்கிய உலையில பெய்து
வெறுப்பிலின் அடிசில் ஆக்கி மேம்படு கற்பின் மிக்கார்
கறிக்கினி என்செய் கோமென் றிறைஞ்சினார் கணவ னாரை.

(இ - து) கற்பினிலையிலே மிருந்தமேம்பாடுடைய அவாமனைவியார், நாயனார் வெட்டித்தள்ளிய கொம்புகளை ஒடித்து அடுப்பில் பெருந்தீயுண்டாகும்படி மூட்டி, முளைத்திருக்கும் நெல் விதையானது அரிசியாகும் பதத்தை முன்னே கொள்ளும்படியாக வறுத்து, வறுத்தபின்னர் அதனைக்குத்தி அரிசியாக்கி, நீர்வார்த்திருக்கும் உலையில் அவ்வரிசியை இட்டு, விரும்பத்தக்க இனிய திருவமுதாகச்செய்து; (அங்ஙனம் அமுதாக்கிய பின்னர்) இனி இவ்வுணவுக்கேற்ற கறிவகைகளுக்கு ஒன்றுமில்லையே இதற்கென்செய்வது என்று நாயனாரைப் பணிந்தனர் என்பதாம்.

கற்பின்மிக்கார், முறித்தவை அடுப்பில்மாட்டி எனக்கொண்டு கூட்டுக.

முன் அடியார் பசியைப் போக்க, அரிசியில்லையே என்றும், அதன்பின்னர் எரிபட சுற்த விறகில்லையே என்றும் துன்புற்றோம் அவ்விரு துன்பமும் நீங்க - நென்முளையும் கூரைவீடும் இருந்தது. இன்னமும் இல்லையென்னும் துன்பம நம்மைவிட்டுப்போக வில்லையே என்று வருந்தித்தளர்ந்தனரென்பார் கறிக்கினி என்செய்கோம் என்று கணவனாரை இறைஞ்சினாரென்றார். (உ0)

### குழிப்பயிரைக் கோடுத்தல்.

வழிவரும் இளைப்பி னோடும் வருந்திய பசியி னாலே
அழிவுறும் ஐயன் என்னும் அன்பினில் பொலிந்து சென்று
குழிநிரம் பாத புன்செய்க் குறும்பயிர் தடவிப் பாசப்
பழிமுதல் பறிப்பார்போலப் பறித்தவை கறிக்கு நல்க.

(இ - து.) (மனைவியார், கறிவேண்டி, நாயனாரைப் பணிந்தபோது, அந்நாயனார் இன்னமும் சமையல் வேலைமுடியவில்லையே, நமதுசுவாமிகள் வழிநடந்து வந்ததனாலுண்டாகிய இளைப்பினோடு, வருந்துகின்ற பசிப்பிணியினாலே ஒன்றுந்தோன்றாது மனம்நொந்து வருந்துவாரே என்று எண்ணுவதாகிய அன்பினால் (தம்மைவாட்டும் பசிப்பிணி முதலியவற்றால் மெலிவிழந் திருத்தலின்றி) மிககதெளிவுடையவராய் வீட்டின் புறக்கடையிற்சென்று; குழியினின்றும் வெளிவராத புன்செய்களிலிருக்கும் சிறியபயிர்களைக் கையினால் தடவித்தடவி, பழியாகிய குற்றங்களை விளைவிக்கும் பாசமுதலைப் பறிப்பவர்போல; அப்புன்பயிர்களைப் பறித்துக் கறியமுதாக்கக் கொடுத்தனரென்பதாம்

என்செய்கோம் இல்லையென்னும் இக்கடுஞ்சொல் நென்முளையோடும் கொம்போடும் ஒழிந்தன என்றிருந்தோமோ, இன்னமும் இருக்கின்றனவே என்றுவருந்தி, அன்பினால் அடியவரது இளைப்பையும், பசியையும எண்ணி மனமாற்றாது மிக்கவிரைவுடன்குழியின்கண்ணுள்ள குறிய இலைக்கறிகளைப்பறித்து கொடுத்தனரென்று அமுதுபடைப்பதிலுள்ள ஆசையை இதனால் விளக்கியவாறும். (உக)

### கைத்திறத்தால் அமுதமைத்தல்.

மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் கறிக ளாய்ந்து
புனலிடைக் கழுவித் தக்க புனிதபாத் திரத்துக் கைம்மை
வினையினில் வேறு வேறு கறியமு தாக்கிப் பண்டை
நினைவினால் குறையை நேர்ந்து திருவமு தமைத்து நின்று.

(எ - து.) நாயனார், மனமகிழுமாறு கொடுத்த கறிவகைகளை மனைவியார் வாங்கிக் கொண்டு, அவைகளைச் செய்யும்வகையெண்ணி நீரினால் சுத்தமாம்படிகழுவி, பரிசுத்தமாகிய தகுதியான பாத்திரத்திலிட்டுத் தமது கைப்பாகத்தின் திறத்தால் எண்ணியபடி வேறுவேறு விதமான கறிகளாகச்செய்து (அந்தோ! பலகறிகளைக் கொண்டு பலபலவகையாகச் செய்வதொழிந்து, ஒருகறியையே பலவகையாகச் செய்யவும்வந்ததே இப்படியும் இருந்ததோ என்று) முன்னுள்ள செல்வத்தை நினைந்து. மனத்தில் குறையைக்கொண்டு திருவமுதைச் செய்துமுடித்து நின்றனர் என்பதாம்.

கொழுநர், மனமகிழ், தந்தகறிகள், மனைவியார், ஆய்ந்து எனக்கூட்டுக.

மனைவியார் - அவ்வப்பொழுது தாமவேண்டும்பொருள்களைத் தடைகூறாது கொடுத்துவந்த அருமையைநோக்கி மனக்களிப்படைந்தனர் என்பார் மனைவியார் கொழுநர் தந்த மனமகிழ் என்றார். அவரிடத்துள்ள செல்வப்பொருள்களுக்கெல்லாம் வந்தவறுமை அவரது ஆசாரசீலத்துக்கும், அவரது கைப்பாகத்துக்கும் வந்ததில்லை என்பார் - நறிகளாய்ந்து புனலிடைக்கழுவி தக்க புனிதபாத்திரத்து கைம்மைவினையினால் வேறுவேறு கறியமுதாக்கி என்றார்.

இதுகாறும் வந்த அடியார்களுக்கெல்லாம் அமுதுபடைப்பதில் ஆசாரமும் கைப்பாகமும் குன்றாதிருந்தமைபோல் வறுமையுற்றிருக்கும் இன்றும் அவ்விரண்டும் நம்மிடத்தில் குன்றாதிருக்கக்கண்டோம், முன்னிருந்தசெல்வம் ஒன்றுதான் குன்றக்கண்டோம் இது என்னகுறையோ இத்தபோதனரின் பொருட்டேனும் அக்குறை நம்பால் இல்லாதிருக்கலாகாதா! என்று சிறுது குறைபாட்டை எண்ணினார் என்பார் - "பண்ணை நினைவிறற் குறையைநேர்ந்து என்றார்.

வடிவுந்தனமும் மனமும் குணமும் குலமும் குடியும குடிபோகத்தக்க நம்பாலுள்ள இவ்வறுமையில் இந்நடுவிருளில் இம்மழையில் இங்ஙனமான அமுதமைக்க வந்தது அதிசயமே என்று அக்குறையகன்று மனத்தை அலையவிடாதிருந்தனர் என்பார் திருவமுதமைத்து நின்று என்றார் (௨௨)

## அடியவரைத் துயிலொழித்தல்.

கணவனார் தம்மை நோக்கிக் கறியமு தான காட்டி
இணையிலா தவரையீண்ட அமுதுசெய் விப்போம் என்ன
உணர்வினால் உணர வொண்ணா ஒருவரை உணர்த்த வேண்டி
அணையமுன் சென்று நின்றங் கவர்துயில் அகற்ற லுற்றார்.

(எ - து) (அமுதாக்கிய மனைவியார்) தமது கணவனாராகிய நாயனாரைப்பார்த்து, (தேவரீர் ஆசைப்பட்டபடியே அடியவருக்கு வேண்டிய உணவுகளெல்லாம ஆய்விட்டன) அவ்வுணவின் வகைகளையெல்லாம் வந்துபாருமென்று காட்டி, இவ்வமுதினை ஒப்பற்ற அடியவரைச்சீக்கிரமாக அமுதுகொள்ளும்படிச் செய்விப்போமென்று, உயிர் உணர்வினால் சுட்டியறியக்கூடாத இறைவரைத் திருவமுது ஆனசெய்தி அறியும் வண்ணம் செய்யவிரும்பி, அவரிருக்கும் இடத்திற்சென்று சமீபித்து அவர் முன்னே நின்று, அவர்கொண்டிருக்கும நித்திரையை நீக்கத்தொடங்கினார் என்பதாம்.

அடியவர் பசித்திருக்கக் காணப்பெற்றோமே இதுவன்றோ பாவமென்று வருந்திய கணவனாரது துன்பமும், தீதுசெய் வினையேற்கு என்செயல் என்று சொல்லவந்ததன்றோ பாவமென்று வருந்திய தமது துன்பமும் ஒருங்கேயொழிய உணவைச்செய்து முடித்தனராகலின் அம்மகிழ்ச்சி மிகுதியினால் தமது கணவனாரைநோக்கி நமதுவறுமையும் ஒழிந்தது, * "அகரம் ஆயிரம் அந்தணர்க்கீயிலென், சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென், பகருஞானி பகல் ஊண்பலத்துக்கு, நிகரிலை யென்பது நிச்சயந்தானே" என்ற பிரமாணப்படி, பரமஞானியாகிய இம்மகேஸ்வரரை உண்பிப்பதற்கான அமுதை

* திருமந்திரம் - மகேஸ்வரபூஜை.

அமைத்து வைப்பதற்கான ஒப்பில்லாத சிவபுண்ணியம் நம்பால்வந்துவிட்டது. இனிநாம் பெறும்பேறு வேறென்னை யிருக்கின்றது, இனி அடியவரைச் சீக்கிரமாக உண்பிப்போமென்று இன்மொழிகூறினர் என்பார் "காவலனார் தம்மைநோக்கிக் கறியமுதான காட்டி, இணையிலாதவரை யீண்ட அமுதுசெய்விப்போம் என்றார்.

"மா பரனாகிய மகேசுவரர் மன்னுயிர்க்கு அருளைவைப்பான், தாபர சங்கமங்கள் என்று இரண்டுருவில் நின்று பூசைகொள்வான், என்று சித்தாந்தங்கூறும் உண்மையில் நின்றுணரப்பெறாது, தாவரரூபத்தை மாத்திரம் சிவமாகவும், சங்கமர்களாகிய அடியவர்களை மானிடரேயாகவும் எண்ணவரும் அறிவினால் அறியக்கூடாத இறைவன் என்பார் உணர்வினால் உணரவோண்ணா * ஒருவனை என்றார்.

இதனால், தாவரவுருவத்தைக் காண்கின்றகாலத்து அவ்வுருவத்தைச் சிவனெனவே காண்பதுபோலும், சங்கம உருவத்தைக் காண்கின்றகாலத்தும் அவ்வுருவினரைச் சிவனெனவே காணவல்லார்க்கு உணரும்படியாயுள்ளவன் என்றுணரக்கிடக்கின்றது.

இங்ஙனமான உணர்ச்சியை இயல்பாகவே உடையராகலின் சங்கமஉருவினனாய் வந்த இறைவனுக்குத் தம்மால் முடிந்தசெயலை அணுக்கராய்நின்று அறிவித்தல் மிகஎளிதென்பார்-உணர்த்தவேண்டி முன்சென்று அணைய என்றார். சங்கமரைச் சிவனெனவே காணுதாரிடத்து உறங்குவதுபோலும், எங்கள்பால் உறங்குவது தகுமோ! நீர்வந்து உறங்குந்தன்மையே நாங்கள் உடையோமாயின் நீர் இங்கு எழுந்தருளுவீரோ! எழுந்தருளிவந்த கருணையைபபோல், இனி அமுதுண்டருளும் கருணையுஞ் செய்யவேண்டும் என்று பிரார்த்தித்தலாகிய பிரார்த்தனை மொழிகளைக்கூறி அடியவரது உறக்கத்தை நீக்கத்தொடங்கினர் என்பார் "நின்று அந்த அவர் பின் அயற்றுற்றார் என்றார்.

செல்லமேவியநாளில் என்பதுமுதல், கணவனார் தம்மைநோக்கி என்பதுஈறாகிய பதினெட்டுச் செய்யுளானும், இறைவன் நாயனார்பால் தனது அருட்சத்தியைத் திரோதான சத்தியாய் நிகழ்த்த, நாயனார் அத்திரோதசத்தியின் வலித்த செயல்வழியாகவே திரோதச்செயல்களின், அன்பின்திறத்தால் அருட்சத்திவசத்தராய் இறைவனைக் காணுந் தன்மையில் நின்ற முறைமை கூறிவந்தமைகாண்க

எங்ஙனமெனின்:—மறையுந்தன்மை யுடைத்தான தல்லாத செல்வத்தை மறையச் செய்ததும், அவர்பால வருந்தன்மை யுடைத்தான தல்லாத வறுமையை வரச் செய்ததும், அவ்வறுமையால் உள்ளபொருள்களை ஒற்றிவைக்கச் செய்ததும், தன்னை மாறியிறுக்கவுள்ள கடன்களைக் கொள்ளச்செய்ததும், ஓர் நாரிப்பின்றிப் பசி தலைக் கொள்ளச்செய்ததும், அவர்மனைவியார் மற்றொன்றுங் காண்கிலேன், எதிலாரும் இனித்தருவார் இல்லை, போதுவைகிற்று, போம்இடம் வேறிலை, தீதுசெய்வினையேற்கு என்செயல் ஒன்றறியேன் என்று அயர்ந்துசொல்லச் செய்ததும், வயலுக்குச் செல்லுங்காலத்து - உலகத்தவர் யாவரும் துண்ணென்று திடுக்கும்படி மைக்குழம்பைப்போலும் இருளுண்டாகச் செய்ததுமாகிய இவை - அருட்சத்தி திரோதசத்தியாய்ச் செய்தசெயல்களாம்.

அச்செயல்களை, பலவகையான் கடன்கள் மேலிட்டகாலத்தும், முன்னையினும் மாறில்லாமல் திருப்பணிகளில் முதிர்ந்தசெய்கையரானதும், நள்ளிருளில் கதவைத் தட்டிய அடியவரைத் தன்பசிவருத்தம் நோக்காது விருந்து வந்ததென்று எதிர்கொண்டு ஈரமேனியை நீக்கி நடுக்கமில்லாவிடத்திருத்தி, அவர்பசிக்கு மனம்வருந்தி மனைவியாரை நோக்கி நமக்கு முன்பு இங்குஉணவில்லை யாயினும், இமக்குலக் கொடிபாகர்க்கு இனியவர்தமக்கு இனிய அமுது தகுதியாக அமைக்குமாறு என்னென்றுகேட்டதும்,

* தாவரவுருவத்தி னிடத்திருக்கும் சிவனே சங்கமவுருவத்தினிடத்தும் இருப்பவனாகலின் ஒருவனை என்றார்.

அதற்கவர் பகல்வித்திய செந்நெல் நீர்முளை வாரிக்கொடுவந்தால் வல்லவாறு அமுதாக்கலும் ஆகும் என்றதும், அதுகேட்டு, அவர் முன்பெற்ற செல்வமெனப் பெரிதுண் மகிழ்ந்து, ஆசையினால் இருட்பெருக்கத்தையும் மழைப்பெருக்கத்தையும் போகும்வழி தெரியாத துன்பத்தையும் நாடாது, வயலில் நென்முளை வாரிக்கொண்டுவந்து மனைவியிடத்துக் கொடுத்ததும், அடுமெரிக்குக் கூரைவீட்டைப் பிடுங்கியதும், கறிக்குக் குழிப்பயிரைப்பறித்ததும், திரோதானச்செயல் அகற்றிய தாம். அவைகளைக்கொண்டு தமது கைத்திறத்தால் நல்லமுதும் நல்லபலகறிகளும் அமைத்ததும், அங்ஙனம் அமைத்தும் இவைதானோ இப்பெரியோருக்குச் செய்வது என்று மனக்குறை கொண்டதும், பின்னர் இருவரும் துணையிலாதவரைச் சீக்கிரத்தில் அமுதுசெய்விப்போமென்றதும் அன்பின்திறமாம். அடியவர்முன் சென்று அவர்துயில் அகற்றி அவரெழுந்து அமுதுண்ணவேண்டுமென்று கூவாவுடன் நின்றதே அருட்சத்தி வசத்தராணரென்பதாம். இனி இறைவன் நாயனார் திரோதானசத்தியால் நிகழ்ந்த அச்செயல்களினாலெல்லாம் அருட்செயலே மேலிடப்பெற்று அன்புடைமையில் திண்ணியராயினபின்னர் செய்த சிவானந்தச் செயல்களை மூன்று திருப்பாசுரத்தாற் கூறுகின்றார். (உகூ)

## சோதிவடிவங்கண்டு திகைத்தல்.

அழுந்திய இடர்நீங்கி அடியனேன் உய்ய என்பால்
எழுந்தருள் பெரியோய் ஈண்ட அமுதுசெய் தருள்க என்று
தொழும்பனார் உரைத்த போதில் சோதியாய் எழுந்து தோன்றச்
செழுந்திரு மனைவி யாருந் தொண்டருந் திகைத்து நின்றார்.

(எ - து.) (அடியவரை உறக்கத்தினின்றும் எழுப்பநின்ற அடியவர்,) அடியார்க்கமுதளிக்கப்பெறாத துன்பத்தில் அழுந்திக்கிடக்கும் அடியேன் அத்துன்பத்தினின்று நீங்கி உய்யும்வண்ணம் அடியேனை நோக்கி எழுந்தருளிவந்த பெரியோய், (அமுது செய்தாயிற்று, பசிதீரும்வண்ணம்) உண்டருளவேண்டும். (துயிலொழிந்து எழுந்திருத்தல் வேண்டும்) என்றுதொண்டனார் சொல்லியபொழுது, இறைவன் சோதிசொரூபமாய் மேலோங்கி எழுந்துதோன்றினான், அங்ஙனந் தோன்றியபொழுது, மங்கலகுணங்கள் நிறைந்துள்ள மனைவியாரும் நாயனாரும், இது என்ன அதிசயமென்று திகைத்து நின்றார்கள் என்பதாம்.

சோதியாய் எழுந்துதோன்ற, மனைவியாரும் தொண்டரும் திகைத்துநின்றார் எனவே,— மழையில் நனைந்து வந்து கதவைத்தட்டவும், ஈரத்தை ஆடையாற் போக்கவும் இவ்வறையிற்றங்கி உறங்கவுமாக் கண்ட திருமேனி அமுதுண்ணவேண்டிய சமயத்தில் அத்திருமேனியாகவே யிருந்துண்ணாமல் சோதிவடிவமாய்த் தோன்றிற்றே இதுஎன்ன அதிசயமென்று இருவரும் ஒன்றுந்தோன்றாது திகைத்தனர் எனவும், நாம்துன்பத்தில் ஆழும்படிப் பசியோடுவந்த திருமேனி இப்போது சமைக்கப்பட்டுள்ள அமுதையுண்டு நாங்கள்களித்து உய்யும்வண்ணம் செய்தருளவேண்டும் பெரியோய் என்று வேண்டிய காலத்தில் உண்பதற்கான திருவுருவமா யெழுந்தருளப்பெறாது, முன்கொற்றவனும் அன்னமும் அடியும் முடியுங் காணாமற் போகும்படி எழுந்தசோதியைப்போல் தோன்றிற்றே, நாம் கண்ட அவ்வுருவத்தை இனி கண்டு அமுதுபடைக்கும்வகை எப்படி என்று நின்றனர் எனவும், நாயனாரது உண்மையை விளக்கியவாறாம்.

அஃதாவது,—"இலங்காலம் செல்லாநாள் என்று நெஞ்சத்து இடையாதே யாவர்க்கும் பிச்சையிட்டு, விலங்காதே நெறிநின்று அங்கு அறிவேமிக்கு மெய்யன்பு புகப்பெய்து பொய்யைநீக்கித், துலங்காமெய் வானவரைக்காத்து நஞ்சம் உண்டபிரான் அடியிணைக்கே சித்தம் வைத்துக், கலங்காதே தொழும்அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்று தாண்டகவேந்து, அருளியபடி, அத்திருவாக்கின் உண்மை

அநுபவத்தைக்காணச் சான்றாய் நிற்பவர் - இந்நாயனார் ஆகலான், சிவசொரூபத்தை எளிதாய்க்காணவரும் அடியார் வடிவத்தைக்கண்டு அமுதளித்து அகமகிழ்வதைவிட்டு, "புறச்சமய நெறிநின்றும் அகச்சமயமபுக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரம, அறத்துறைகள் அவையடைந்தும அருந்தவங்கள் புரிந்தும் அருங்கலைகள் பலதெரிந்தும் ஆரணங்கள் படித்தும, சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேதச் சிறப்பொருளை மிகத்தெளிந்தும் சென்றால்" அடையத்தக்க சைவத்திறத்தால் உணர்வார்க்கும் உணர்வரிய, இச்சோதியைக்கண்டோமே, இச்சோதிவடிவம் அயன் அரிகளை மயக்கி அவர்களை யாவரும் சிற்றறிவினரென்றும், இவரைப்போலும் சிவபெருமானைக் காணாதவர் ஒருவரும் இல்லையென்றும் சொல்லுமபடிச்செய்ததன்றோ! இவ்வுருவம் சிவபெருமானை எளியனென்றும், தாமேயென்றும், தேவரில் ஒருவனென்றும் எண்ணுவாரது அகங்காரத்தையும், அறியாமையையும் அகற்றுதற்குத் தோன்றும் தோற்றமன்றோ! நாம் அங்ஙனமான எண்ணத்தை என்றும் எண்ணாதவராயிற்றே, இவ்வுருவத்தில் அமுதூட்டும்வகை எப்படி ? இருவரை அன்று பரம் அறிவதற்கின்றி மயக்கியதுபோலும், இன்று நமிருவரும் அமுதூட்டும் வகையை அறிவதற்கின்றி மயங்கும்படி வந்ததே என்று திகைத்துநின்றனர் என்பதாம்.

இத்திருப் பாசுரத்தான், இந்நாயனார் சிவசொரூபத்தினியல்பை உணரவேண்டிய முறைப்படியே யுணர்ந்து, பின்னர் அச்சிவசொரூபத்தால் அடையப்படும் ஆனந்தத்தை யடைய அடியாராகஅமுதளித்து ஆனந்திக்கும் இயல்புடையரென்றும், அவ்வியல்புக் கேற்ப இவர்பால இறைவன் அடியவராய் வந்தனரென்றும, அதுகண்டு தாம் வறுமையால் அடைந்திருந்த துன்பமெல்லாம் மறந்த, இந்நன்மையில் என்றுங் காணாதபேரின்பம இன்று மிகஎளிதாய்ப் பெறவந்ததே என்று அரியதினும் அரியதாய் அமுதாக்கினரென்றும், அதனை உண்பிக்கவந்தபோது, சிவசொரூபத்தினியல்பை உணரவேண்டினராகத் தோன்றும் சோதிவடிவாயினனே என்று திகைத்துநின்றனர் என்றும்கூறப்பட்டன.

## இறைவன் இடபாரூடராய்த் தோன்றல்.

மாலயற் கரிய நாதன் வடிவொரு சோதி யாகச்
சாலவே மயங்கு வார்க்குச் சங்கரன் தான்ம கிழ்ந்தே
ஏலவார் குழலாள் தன்னோ டிடபவா கனனாய்த் தோன்றிச்
சீலமார் பூசை செய்த திருத்தொண்டர் தமமை நோக்கி.

(எ - து.) திருமால் பிரமன் என்னும் இருவர்க்கும் காண்டற்கரிதாகிய இறைவன், ஒருசோதிவடிவமாய்த் தோன்றிநிற்க, (அவ்வுருவத்தைக்கண்டு, அடியராய் வந்தவர் கண்கூசும்படிச் சோதிவடிவமாயினரேஎன்று ஒன்றும் அறிவதற்கின்றி) மிகவும் மயங்கிக்கிடக்கும அவ்விருவர்க்கும் சுகஞ்செய்கிய இறைவன மகிழ்கூர்ந்து, நறுமணங்கமழுங் கூந்தலையுடைய உமாதேவியாரோடு இடபாரூடராய்த் தோன்றி, சித்தசுத்தியோடு அடியார்பூஜையைக் குறைவுபடாது செய்துவந்த அடியாரைப் பார்த்து என்பதாம்.

அமுதுண்ணற்குரிய பசியோடுங்கூடிவந்த அடியாரவடிவமே மால் அயற்கு அரிய நாதன் வடிவமென்று எண்ணியிருக்கும் நமபால அவ்வடிவம்-பசியும அறியாத, அமுதையும் வேண்டாத சோதிவடிவமாயிற்றே, நாம அமுதூட்டும் புண்ணியம ஒழிந்தோமே என்று மயங்கிநின்றனர் என்பார் வடிவொரு சோதியாகச் சாலவே மயங்குவார்க்கு என்றார் அங்ஙனம் திருவுருவங்காணாது மயங்குவார்க்குத் தமது தெய்வ வுருவத்தைக் காட்டினர் என்பார் - ஏலவார்குழலாள் தன்னோடு இடபவாகனனாய்த்தோன்றி என்றார். அசுத்தமாகிய பாசப்பொருள்களில் ஏதேனுமவேண்டி அப்பொருள்களை விரும்பிப் பூஜைசெய்யாது, பற்றற்ற சுத்தமாகிய அன்பினையேவேண்டி பற்றற்ற அடியர்பூஜையைச்செய்த ஆசாரமுடையவரென்பார் "சீலமார்பூஜைசெய்த திருத்தொண்டர்" என்றார்.

இத்திருப்பாசுரத்தான்,—அறிவைக் கொள்ளைகொள்ளும் சோதிவடிவத்தினும், அன்பினைக் கொள்ளைகொள்ளும் சங்கமவடிவத்தில் நீங்கா அன்புள்ள தமது அன்புக் கேற்றபடி தோன்றிய சங்கமவுருவங் காணப்பெறாது மயங்குவார்க்கு இறைவன் தெய்வ வுருவத்தைக் காட்டிய அருமைகூறப்பட்டது. (௨௭)

## நாயனாருக்குச் சிவலோகம் அளித்தல்.

அன்பனே அன்பர் பூசை யளித்தநீ அணங்கி னோடும்
என்பெருந் தலத்தை எய்தி இருநிதிக் கிழவன் தானே
முன்பெரு நிதிய மேந்தி மொழிவழி ஏவல் கேட்ப
இன்பமார்ந் திருக்க என்றே அருள்செய்தான் எவர்க்கும் மிக்கான்.

(எ - து.) யாவர்க்கும் மேலோனாகிய இறைவன், அன்பனே! அடியார்களுடைய பூசையைச் செய்துவந்த நீ, உன்மனையாளோடும் எனது பெரியசிவலோகத்தை யடைந்து, (அங்கு) நின்முன் குபேரனே சங்கநிதி பதுமநிதியாகிய பெரியநிதிகளை யேந்திக் கொண்டு, உன்னுடைய சொல்லின்வழியே எந்தவேலையைச் செய்யவேண்டுமோ அந்த வேலையைச் செய்வதற்குக் கேட்டுக்கொண்டிருப்ப, நீ பேரின்பத்தில் ஆழ்ந்திருக்கக கடவாய் என்று அருள்செய்தனன் என்பதாம்.

எவர்க்கு மிக்கான் அன்பனே அன்பர்பூசை யளித்தநீ எனக்கொண்டுகூட்டுக.

நீ - எவரேனுந்தாம் ஆக (எக்குலத்தவராயினும் ஆகுக, அவர்) இலாடத்து இட்ட திருநீறும் சாதனமும் (உடையவராயிருக்கக்) கண்டால் உள்கி, உவராதே யவரவரைக் கண்டபோது உகந்து அடிமைத்திறம் நினைந்து உருகி உவந்துநோக்கி, இவர்தேவர் அவர்தேவர் என்றுசொலலி இரண்டாட்டாது ஈச(னாகிய எனது) திறமேபேணிக், கவராதே தொழும் அன்பின் திறமுடைய அன்பன் நீ என்பார்-அன்பனேஎன்றும், அவ்வன்பினை யான் கண்ணாரக்கண்டு களிக்க அடியவர் வேடங்கொண்டுவந்தேன், அங்ஙனம்வந்த என்னை, உனதுகையால் ஈரம்போக்கி, அன்பருள்ளம்போன்றிருக்கும் ஒரு உள்ளிடத்தில் நான் இன்புற்றிருக்கவைத்தனை பின்னர் "இலங்காலம்" என்றபடி நான் காலமல்லாத கள்ளிருட்காலத்தில்வந்தும், நீ அக்காலத்தை வரத்தக்க நல்லபொழுதென்றே எண்ணியும், "செல்லாநாள்" என்றபடி, இவ்வடியவர் மிகப்பசித்திருக்கின்றாரேஎன்று எனது பசியைக்கண்டு, நமக்கு இப்பொழுது ஒருசெயலும் செல்லாத நாளாயிருக்கின்றதே என்று எண்ணி ஏங்குவதொழிந்து, எனது பசியை எண்ணிஎண்ணி உணவுக்கென்ன செய்யலாம் என்று எல்லாம் உடையவன்போல் பரிவுடையவனாய் மனையாளுடன்கலந்து அவளால் எல்லாம் உடையனாய் அமுதினும் இனிய அமுதமைத்து என்பால் வந்து என் துயிலொழித்து எனககமுதூட்டும் மகேஸ்வரபூஜையைச் செய்யவந்தனையே, நீ வந்தபோதே நான் உன் அன்புருவமாய் அன்பருள்ளத்திருக்கும் சோதிவடிவாய்த் தோன்றினேன், நீ அச்சோதி வுருவத்தை இருவரால் அறியவொண்ணாச் சோதிவடிவாக நினைத்து அமுதூட்டுவதற் கில்லாதொழிந்தோமேஎன்று வருந்தித்திகைத்தனை, அத்திகைபபு நீங்க இத்தெய்வ வுருவங்கொண்டு இப்பரமாகாசத்திற் றோன்றினேம்.

இதுகாறும் நான் சொல்லிவந்ததனால் நீ கொண்ட வருத்தம்நீங்கித் தெளியவேண்டியதொன்று. அது யாதெனின்:—திருநீற்றுடையாரைக் கண்டால் அவர் அடியாரென்றும், அவருக்கு நான் வேறென்றும் இரண்டாட்டாது எனது சொரூபத்திறத்தையே பேணி அமுதளித்து வந்தனையாகலான், அவ்வமுதெல்லாம் நாடோறும உண்டுவந்தவன் நானன்றோ, நீ என்னை வேறாக்கி; அடியருக்கு; அமுதளித்திருப்பையாயின் நான் இப பொழுது உன்னால் ஆக்கபபட்டிருக்கும் உணவை உண்ணவேண்டியவனே, இவ்வுண்மையால் நான் உன்பால் உண்ணவில்லை என்னும் கவலையையொழிக; யான் உண்டேன் உண்டேன் என்பார் அன்பர்பூசையளித்தநீ என்றும், அங்ஙனம் உண்டவன் நானென

படியினால் என்னையே அடியவராக நீ கண்டபடியினால், அடியவனாய்வந்த நானே அவருள்ளத்தில் நடுத்தறியைப் போன்றிருக்கும் சோதிவடிவத்தை நீ எளிதாய்க் காணக்காட்டினேன். இனி, அன்பாபூசையின் திறமுணர்ந்து செய்துவந்த நீ எனக்கு அமுதமைத்த தெய்வநங்கையோடும் அடியார்க்கு வேண்டிய செல்வமெல்லாம் நிறைந்துள்ள எனது பெரியக்ஷேத்திரத்தில் வந்திருக்கக்கடவாய் என்பார் 'நீ அவளுங்கிளேடும் என்பெருந்தலத்தைப் பொய்தி' என்றும், அங்கிருப்பையாயின் முன் என்னால் மறைந்திருக்கும்படிச்செய்த செல்வங்களெல்லாம் அங்கிருக்கின்றன; அவைகளை அச்செல்வங்கட்குரியவனாகிய குபேரனே நீவேண்டும்பொழுதெல்லாம் உன்சொல்வழியே உன்னிடம் கொடுக்கும்படியான ஏவலாளியாக வைக்கின்றேன் என்பார் - இருநிதிக்கிழவனேனே முன்பெருநிதியமேந்தி மொழிவழி ஏவல்கேட்ப என்றும், நீ படைத்திருந்த செல்வமெல்லாம் மகேஸ்வரபூஜைபால்வந்த செல்வமாகலின் அதனால் அடையப்படும் பேரின்பத்தில் திளைத்திருப்பாய் என்பார் ஓங்கிய பேரின்பத்தில் திளைத்திருக்க என்றும் இங்ஙனமான பேரருளைப்புரிந்தவன் எல்லா அடியார்க்கும் முன்னிற்கும் பெரியோனாகிய தில்லைவாழந்தணன் என்பார் எவர்க்குமிக்கான் அருள்செய்தான் என்றார்.

இத்திருப்பாசுரத்தால், சிவலிங்கமாகிய தாவரமூர்த்தியைக்காணும்போது சங்கமமூர்த்தம் வேறொன்றுண்டு என்றெண்ண வாராததுபோல் சங்கம மூர்த்தியைக்காணும்போது சிவபெருமானின்வேறு ஒருவனுண்டென்று எண்ணவாராத பேரன்புடையவன் நீ என்றும், அங்ஙனமான அன்பால அடியார்களுக்கு நீ ஊட்டிவந்ததாகிய அமுதை நான் உண்டுவந்தவனேயாதலால் இப்போது நான உண்ணவில்லையென்கிற ஏக்கத்தை விடுவாயென்றும், முன் உன் செல்வங்களெல்லாம் அடங்கிலபடியால் மறைந்து சிவலோகத்தில் வந்திருத்தலால் அவைகளை உனக்குக் குறிப்பறிந்து எடுத்துதவக குபேரனை வைக்கிறேனென்றும், நீ அனுபவிக்க வேண்டிய பேரின்பத்தை நான்கொடுக்கிறேன் என்றும் இறைவனருளியதைக் கூறப்பட்டன. (உசு)

இப்பரிசிவர்க்குத் தந்த வகையினா லின்ப நல்கி
முப்புரஞ் செற்றார் அன்பர் முன்பெழுந் தருளிப் போனார்
அப்பெரியவர் தந் தூய அடியிணை தலைமேற் கொண்டு
மெய்ப்பொருட் சேதி வேந்தன் செயலினை விளம்பல் உற்றேன்.

(ப - ரை.) இவ்வாறு இநாயனாருக்குத் தந்த வகையினால் சிவலோகத்தில் செல்வத்துக்கு நாயகராயிருக்கும் அதிகார இன்பத்தைக்கொடுத்து, அவ்வன்பருக்கு முன்னே திரிபுரங்களை யெரித்தவராகிய இறைவர் திருவுருக்கரந்தனர். அந்தப் பெரியவருடைய சுத்தமாகிய திருவடிகளை எனது தலைமேற் சூடிக்கொண்டு, சேதிநாட்டரசராகிய மெய்ப்பொருள் நாயனாருடைய திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன் என்பதாம்.

நாயனார்பெற்றிருந்த பொருட்செல்வம் அருட்செல்வமன்றி இவ்வுலகத்தில்தேடப்படும் செல்வம் அன்றாகலான், சிவலோகத்திலும் அச்செல்வத்துடனிருந்து, தம்மால் கொடுக்கப்படும் பேரின்பத்தையும் அனுபவிக்கச்செய்தது சிறந்தமேம்பாடாகலின் தந்தவகை என்றும்; இவ்வகைத்தான தகுதியமைந்த இன்பத்தை இறைவன்கொடுத்தது எவ்வுலகத்தினும் வாய்க்கப்பெறாத மகேசுர (உடையவர்) பூஜையை இம்மண்ணுலகில் இவர் வகையாகச் செய்தனராகலான், அவ்வகைக்கேற்பத் தகுதியாக, இறைவன் கொடுத்த பரிசாகலின் இவர்க்கு இப்பரிசு இன்பம் நல்கி என்றும், சோதிவடிவத்தால் ஆணவமலத்தையும், விடைவடிவத்தால கன்மமலத்தையும், அடியவர்வேடத்தால் மாயா மலத்தையும் முப்புரத்தை எரித்ததுபோலும் எரித்தாராகலின் முப்புரஞ்செற்றார் என்றும், முப்புரத்தையெரித்து அம்முப்புரத்தாரை அன்பர்களாக ஆண்டதுபோல் இவரை ஆண்டனராகலின் அன்பர் எனவும், தாவரவடிவத்தினிடத்தும், சங்கமவடிவத்தினிடத்தும் நின்றருளும் சிவத்தை சோதிவடிவமாய்க் கண்டபெரியோராகலின் அப்பெரியவர் என்றும், இரண்டுகாலினையுடையார் எங்குசெல்லினும், அவ்விரண்டுகாலுடன் செல்வரேயன்றி, ஒருகாலுடன் ஓரிடத்தும், இரண்டுகாலுடன் ஓரிடத்தும் செல்வதில்லை,

## புராணசாரம்.

மன்னியவேளாண்டொன்மை இளசை மாறர் வறுமையால் உணவுமிக மறந்து வைகி, உன்னருநள் ளிருண்மழையில் உண்டிவேண்டி உம்பர்பிரான் அணையவயல் உழுது வித்தும், செந்நெல்முளை அமுதுமனை அலக்கா லாக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து, பன்னலரும் உணவருந்தற் கெழுந்த சோதிப் பரலோக முழுதாண்ட பான்மை யாரே.

இளையான்குடிமாற நாயனார்,—உழுதலால்வரும் மெய்வருத்தம் நோக்கிப் பிறதொழில்களைச் செய்து திரிந்து மனம்வருந்திப் பின் கைக்கொள்ளும் தலையாய தொழிலாயும், பிறதொழில்களையே செய்பவருடையாரெல்லார்க்கும் தேருக்குரிய அச்சாணியைப் போன்றதாயுமுள்ள உழவுத்தொழில் உடையவராயும், அத்தொழிலா லுண்டாகும் உணவுக்குரிய அரிசியையும் கறிவகைகளையுங் கொண்டு பாற்கடலில் உதித்த அமுதினும் இனிய அமுதாக்கி "கனியினும் கட்டிபட்ட கரும்பினும், பனிமலர்க்குழற் பாவைநல்லாரினும், தனிமுடிகவித்தாளும் அரசினும்" இனியபொருளாகிய சிவக்கனியை உண்டுகளிக்கும் இனிய அடியார்களுக்கு உண்பித்து உண்மகிழும் மகிழ்ச்சியில் நிலைபெற்ற தொன்மையாயுள்ள வேளாண் குலத்தில் அவதரித்தவர் அவதரித்த அக்குலத்துக்கேற்ப வாழ்க்கைத் துணை எனப்படும் மனையாளோடு கூடி "இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" என்றற் றொடக்கத்தனவாய்க் கூறியுள்ளபடி இல்லறத்தில் இருக்கப் பெற்றவர்.

இல்லறமானது,—மனைவியோடும் வனத்திற்செல்லாது வீட்டின்கணிருந்து, தானியம், தனம் என்றற் றொடக்கத்தனவாகக் கூறப்படும் சம்பத்சொரூபமாகிய எல்லாப் பொருள்களையும் போற்றிவாழும் மனைவியைப் பெற்றுக்கொண்டு விருந்தினராகிய அடியார்களைப் பேணி அவர்கட்கு உபகாரஞ்செய்தலாகிய அறத்தைத் தலைமையாகக்கொண்டிருப்பது. அவ்விருந்தினரே தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்று இல்லறத்திற்கு அகத்துறுப்பாகக் கூறிய ஐந்தறங்களுள் நடுநிற்பவராகக் காணப்படுகின்றனர். நடுநிற்கின்ற இவர்களையே இல்லறத்தார் முன்னோற்றத்தக்கதென்று, இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணைநலம், புதல்வரைப்பெறுதல் அன்புடைமை என்னும் நான்கதிகாரங்களையும் முறையே கூறி அதன்பின்னர் ஐந்தாம் அதிகாரமாக விருந்தோம்பலைக் கூறியுள்ளார் நாயனார்.

இத்தகைத்தான சிறப்புடைய விருந்தோம்பலாகிய அறத்தையே மெய்யா இல்லறத்தைக் கைக்கொண்டு நடத்தினவர் இவர் யாரை அடியராகக்கொண்டார், அவர்களை எவ்வாறு வழிபட்டுவந்தார் எனின், தம்மை எதிர்ப்படுவோர் என்பை ஆரமாகப்புனைந்த ஐயர்தம் அன்பர்என்னும் தன்மையொன்று புலப்படுமாயின், அவர் யாவராயினும் அவர்களையே அடியராகக் கொள்பவர், அனிச்சப் பூ மோந்துழி யன்றிக் குழையாது, அவ்வடியரோ முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர். ஆகவே, இவரினும் மெல்லியாரில்லை. இங்ஙனமான மென்மை யுடையவரைத் தாம் செய்யும் வழிபாட்டினால் வன்மையுடையவராகச் செய்பவர். எவ்வாறெனின், அவர்களைத் தூரத்திற் கண்டபொழுதே தம்முளத்தில் நித்தமாக நிறைந்துள்ள பக்தியினால் எதிர்கொண்டு சென்று கைகுவித்து நின்று இன்முகத்தைக் காட்டி அவர்கள் அதனைக் கண்டு தம்மைச் சமீபிக்க, சமீபித்தவழி அவர்கள் செவியில் ஈரமென் மதுரப் பதமாகிய இனிய சொல்லைப் பரிவெய்தக் கூறி அங்ஙனங் கூறிய இன்சொல்லால் தமக்குடன்பட, உடன்பட்டவழி கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவு பாதம் விளக்கியே, மண்டுகாதலின் ஆதனத்திடைவைத்து அருச்சித்து அமுதுகொள்ளும்படிச் செய்து தமக்கு வேண்டுவனவெல்லாம் ஐயமின்றிக் கேட்கும் வன்மை யாளராக்கித் தம்மை வழியடிமையாய் ஆளும்படிச்செய்பவர். இங்ஙனமான நவபுண்ணியச் சிறப்பான் நவநிதிகளும் அதிகரித்துத் தனது இடமுற்றும் பரவிநெருங்கி எண்டிசையிலுள்ளாராலும் மதிக்கப்பட்டு நிதிபதியாயினவர்.

இவர் படைத்தநிதி உயிர்களிடத்து அருளும் அன்புமற்ற பூரியார்கண்ணும் உண்டாவதாகியசெல்வமன்று; சிவனருள்நிறைந்தஉள்ளமும் அன்புநிறைந்தஉயிரும் உடைய அறிவுடைச் சான்றோரிடத்து வரும் திருவருட் செல்வமாம். அவ்வுண்மையை உயர்ந்தோரெல்லாம் உணர்ந்து அடியாரல்லாத பூரியார் கண்ணேயல்லது, இல்லதாகிய செல்வத்தை வேண்டாது உயர்ந்தார் கண்ணேயல்லது இல்லாத அருட்செல்வத்தை வேண்ட அவர்பாலுள்ள செல்வத்தை மறைந்திருக்கச்செய்து வறுமையையறியாத அவர்பால் வறுமையாகியபாவியை இறைவனு வரச்செய்தனர். அவர்பால் வந்தவறுமை தவமிலிகள்பாற்சென்று பொருட்செல்வத்தைக்கெடுத்து இம்மை மறுமைப்பயன்களைப் போக்கச்செய்வதுபோல் அடியார்பூசையை இல்லையாகும்படிச்செய்ய, பலவகையானும் கடன்களை மிகுதிப்படுத்திப் பசியால் உடலும்வருந்தும்படிச்செய்தது. நாயனார்பெற்றிருக்கும் அறிவினாற்பெற்றசெல்வம் வறுமையாற் போக்கும் செல்வமன்றாகலான் அச்செல்வத்தான் அடியார்பூசையில் முதிர்ந்த செய்கையராகவே யிருந்தவர்

இவ்வரிய செய்கையைக் கண்ட இறைவனார் அவர்பால் தாங்கவொண்ணாத அருளுடையவராய் அவரால் விரும்பப்படும் அடியவர் வேடமே கொண்டு வருவாராயினர். விடையும் உமையுமின்றிவருகின்றவர் நடுராத்திரியில் அருண்மழையைமுன்னே பெருக்கெடுத்தோடச்செய்து தாமும் நனைந்து தீராப்பசியுடையவராய் அவர் வீட்டிற்குவந்து தாளிட்டிருக்கும் கதவைத் தட்டினர். பசியின் பெருக்கால் உறக்கமின்றிச் சயனித்திருக்கும்நாயனார், பேயுறங்கும் நடுராத்திரியில் நன்மழையில் நல்லடியார் யாரோ ஒருவர் நல்லபசியால் அழைப்பதற்கும் சக்தியின்றிக் கதவைத் தட்டினரென்று தன் பசியைக் கருதாது விரைந்துவந்து கதவைத்திறந்து அவரை நோக்கி நடுக்கமுற்று ஈரத்தால் நடுக்கமுற்றிருக்கும் அவரது தேகத்தைத் தமதாடையாற்போக்கி அவரது பசியை நோக்கி இவர் இப்பசி பொறுக்கலாகாது உண்டிவேண்டி வந்தனர்போலும். அந்தோ! பசியைப்போலும் துன்பஞ்செய்வது வேறொன்றுண்டோ? அதன் கொடுமையை நரமியாது அநுபவிக்கின்றோமே நம்மைப்போலும் பசியைத் தாங்கும் வன்மையாளராகக் காணப்படவில்லையே; இவர் இமயக்குலக்கொடிப்பாகர்க்கினியராகக் காணப்படுகின்றாரே என்று வறுமையினுங்குன்றாத அறிவுகலங்கி அழுதமைக்கும் உபாயத்தைத் தன்மனையாட்டியாரிடத்தில்கேட்க, அவர் இவரது அன்பும் அவாவும், நீரப்புமாறு அச்சமயத்துக் கேற்ற வுபாயத்தைக் கூறினர். கூறியபொழுதே அடியாரது பசியைப்போக்கினார்போல் இருளுக்கும் அஞ்சாது, ஒழியாது பெய்யும் மழையையும் எண்ணாது, வழிகாண்பது அரிதென்பதையும் குறிக்காது, மழையில் நனைந்து, மின்னலிற் கண்கூசியும், வழிமைக் காலாற்றடவியும், நீர்நிறைந்திருக்கும் வயலிற்சென்று, முளைத்திருக்கும் செந்நெல்லை பெருங்கூடையில் வாரிக்கொண்டுவந்து, மனைக்கூறையிலுள்ள அலக்கினால் பாகப்படுத்தி அன்னமாக்கிப் புஞ்சைப்பயிரினால் கறிவகைகளெல்லாம் ஆசாரத்துடன் இன்சுவையோடுஞ் செய்து சொல்லுதற்கரிய அவ்வினிய அரியவமுதை அடியார்க்கு உண்பிக்க அவர்பாற்சென்று அவர் போர் உறக்கங்கொண்டிருத்தலைக் கண்டு அத்துயிலை இனிய மொழிகளாற் போக்கி எழுந்திருக்கச் செய்யும்போது, அடியார் நித்திரையொழிந்து சோதியாய்த் தோன்றினர். தோன்றிய அச்சோதியார் அமுதுபடைப்பதில் இளையாமல் நிற்கும் பேரன்பினைக்கண்டு, அன்ப! நீ இங்கு பொருளையும், அருளையும், அடியரையும், எம்மையும் பெற்றனை, இனிப் பரலோகமுழுதும் பரவிக்கிடக்கும் பரமானந்தமாகிய பேரின்பத்தையும் பெற்று வாழக்கடவாயென்றருளினர். அவரது ஆணைப்படியே இவ் வுலகத்தைப் பொருள் முதலியவற்றால் ஆண்டதுபோல் அப் பரலோகத்தையும் பேரின்பத்தோடு முழுவதும் ஆளும்படியான பெருமையைப் பெற்றவரென்பதாம்.

சோதிப்பரலோகமுழுதாண்ட பான்மையார் என்றதனால், பரலோகத்தையாளப் பெற்ற நாயனாரது தன்மையே பெரும்பான்மையாகப் போற்றத்தக்கதன்றி ஏனைய

உலகங்களை ஆளப்பெற்றாரது தன்மை அதுபோலும் போற்றத்தக்கதன்றென்று அவரது சிறப்புக் கூறப்பட்டது.

அஃதாவது,—பரலோகம் பிரகிருதிசம்பந்தப்பட்ட உலகங்களுக்கும் சுத்தாசுத்த சம்மந்தப்பட்ட மாயாவுலகங்களுக்கும் சுத்த மாயாசம்பந்தப்பட்ட உலகங்களுக்கும் அப்பாற்பட்டது அவ்வுலகங்களிலுள்ள போகங்கள் விடயானுபவத்திற்குரிய போகப் பெருக்கம், மந்திராதிகாரப் போகப்பெருக்கம், பஞ்சக கிருத்தியாதி காரத்துட்பட்ட போகப் பெருக்கங்களாம். அங்குள்ளார் முறையே மும்மலத்தார் இருமலத்தார் ஒருமலத்தார். பரலோகத்திலுள்ளவர் பரசிவம் அங்குள்ள போகம் சிவபோகம். அங்குள்ளவர் விடையானுபவ போகப்பெருக்க முதலியன வேண்டாது நின்மலசிவானுபவப் பெருக்கை விரும்பும் சிற்பரசெல்வர்கள். அச்சிற்பரச்செல்வர் இந்நாயனாராகலின் பரலோக முழுதாளும் பான்மையராயினர்.

முழுதாண்டபான்மையார் என்றதனால் சிறுபான்மை ஆள்வாரும் உளர் என்றாயிற்று எனவே, முன்சொல்லப்பட்ட அவ்வவ்வுலகங்களில் உள்ளவர் அவ்வவ் வுலகங்களையும் அவ்வவ் வதிகாரப் போகங்களையும் அநுபவித்து ஆள்பவராயிருப்பதன்றி முழுதும் ஆளும் பான்மையுடையவராகார்; ஆகலின் அவரெல்லாம் சிறுபான்மையாளும் பான்மையுடையவரேயாவர். நாயனார் முழுதாண்ட பான்மை எங்ஙனமெனின், உலகம் என்னுஞ் சொல் அசேதனமாகிய வுலகத்தின்மேல் நிற்பதல்லாமல் சேதனமாகிய வுயிர்கண் மேலும் நிற்றல்போலும் பரலோகம் என்பது பரலோகமேயல்லாமல் ஈண்டு பரசிவத்தின்மேனின்றதெனக் ஆகவே, பரசிவத்தை முழுதாண்ட பான்மையைப் பரலோகமுழுதாண்ட பான்மையார் என்றார்.

அல்லதூஉம் எண்பத்துநான்கு லக்ஷயபேதமாயுள்ள சரீரமுழுவதும் ஆளச்செய்ய வல்ல ஆணவாதி மும்மலங்களையும் அகற்றினவராகலான பரலோகமுழுதாளும் பான்மையாரென்றலுமாம். அஃதாவது மேன்மேல் பிறவியை விளைவிக்கவல்ல ஆணவ மலம் அற்றவரென்பதனை விளைவுக்கிடமாகிய நென்முளையை வாரியதனாலும், அவ் விளைவுக் கேற்றவாறு புண்ணியபாவங்களைக் குன்றாது பரப்பவல்ல கன்மமலத்தைப் பறித்தவரென்பதனை குழிப்பயிரைப் பறித்ததனாலும், புண்ணியபாவங்கள் படாதற்குக் கொழுகொம்பாயுள்ள மாயாமலம் அற்றவரென்பதனை மனையில்நீண்ட அலகினையறுத்து வீழ்த்தியதனாலும் அறிவித்தனர். மும்மலவழியில் உழன்ற தற்போதத்தை அவற்றினின்றும் வேறுபடுத்தி முன் அவற்றோடு முளைப்பதிலும் படர்வதிலும் கொழுகொம்பாவதிலும் முனைத்துநின்றதுபோல் பின் முளையாதிருத்தற்கும், படராதிருத்தற்கும், கொழுகொம்பாகாதிருத்தற்கும்,முனைத்து நிற்கச்செய்து ஆன்மாவதனை இறைவனுக்கு உணவாக்கியும், பலபலபுண்ணிய பாவரூபமாயுள்ள கன்மமலத்தைப் பலபல கறிவகைகளாக்கியும் இக்கன்மமலம் படாதற்கேற்ற மாயாமலத்தைப் படாதற் கிடனின்றி நெருப்பிலிட்டுக்காட்டி, அதன்பின்னர் இங்ஙனம் முனைத்துநின்ற அத்தற்போதத்தை, முன் மும்மல விளைவாகிய போகப்பதார்த்தங்களைத் தான இன்புற்று அநுபவிக்கவிருந்ததுபோல் இப்பொழுது மும்மலநாசத்தாலாகிய போகத்தை (உணவை) இறைவன் இன்புற்றநுபவிக்க அவனையே நோக்கிநிற்கச் செய்தனராகலான், தத்பதப்பொருளாகிய பரசிவன் த்வம் என்னும் பதத்துக்குப்பொருளாகிய அவரை அசி(ஆனாய்)என்னும் பதப்பொருள்படியே நீ என்னை ஆளுந்தன்மையனாயினாய் என்னும் தத்வமசி மஹாவாக்கியப் பொருளை இவர்பாற் காணச்செய்ததுமாம்.

இதனால் இளையான்குடிமாறனார் ஆகலான் தன்குடிமுழுவதும் (தான் இளையாது குடிபுகுந்திருக்கும் ஆணவாதிக ளினத்தையும்) ஆண்ட (மும்மலமாகிய அவ்வுடைமையோடு அடிமையாகியதன்னையும் ஆட்கொண்ட) இறைவனுக்குமாற்றி, அவனுடைமையாகிய அருளையும் அவனாகிய சிவசொரூபத்தையும் கொண்டனரென்று கூறப்பட்டது

## இளையான்குடிமாற நாயனார் புராணசாரம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

உபவீததாரணாயநம:

# மெய்ப்பொருள் நாயனார் புராணம்.



## நாயனார் வம்சச்சிறப்பு

சேதிநன் னாட்டு நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக னன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார்.

(எ - து.) பெருமையின்மிக்க சேதிநாட்டின்கண் ணுள்ள திருக்கோவலூரில் நிலைபெற்றிருந்து, பார்வதிபாகராகிய இறைவனது அன்பின்வழி வருகின்ற மலையாளர்களுக்கு அரசர், வேதத்திற் கூறப்படும் நல்ல தருமநெறியின் உண்மை யாவரிடத்தும் பிரகாசமாய்ப் பிரகாசிக்க, அத் தருமநெறியில் தாம தவராது ஒழுகும் மேன்மையுடையவராய், சிவபெருமானிடத்து அன்புள்ள அன்பர்களிடத்து ஆசையுடையவராய் அவ்வன்பர்களுடைய உள்ளக்குறிப்புணர்ந்து அப்பணியைச் செய்கின்றவர் என்பதாம்.

இந்நாயனாரிடத்துள்ள அன்பு - அவரது வம்சத்தில் வழிவழியாய்வரும் அன்பென்பது தோன்ற - "அன்பின் வழிவரு மலாடர் கோமான்" எனவும், ஆசையுடையவராய் ஈசர்க்கன்பர் கருத்தறிந் தேவல்செய்வதே வேதத்திற் கூறப்படும் உண்மையாகிய நல்ல நெறியென்று யாவரும் அறியச் செய்தனரென்பார் - "வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட ஈசர்க்கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார்" எனவும், அவர் கருத்தின்படியே அவரது ஆளுகையில் உள்ளாரெல்லாம்அடியார்க் கேவல்செய்யும் பணியை மேற்கொண்டொழுகி இவரைப் போற்றினரென்பார் "மேன்மை பூண்டு" எனவும் கூறினார்.

வேதநெறியின் துறையாய் விளங்குவது சைவமாதலால், வேத நன்னெறியின் வாய்மை அன்பர் பணியென்ற குறித்தமைதன்க.

இத்திருப்பாசுரத்தான் - நாயனாரது நாடு - சேதிநாடென்றும், ஊர - திருக்கோவலூர் என்றும், வம்சபரம்பரை - இறைவன்பால் அன்புள்ள பரம்பரை என்றும், அவர் செங்கோல் முறையால் நடத்திய அறச்செய்கை - ஈசர்க்கு அன்பர் கருத்தறிந்து ஏவல் செய்வதென்றும், அவரடைந்த மேன்மை - தாம் செய்துவந்த அன்பர் பணியே வேத நன்னெறியின் வாய்மையாமென்று ய வரையும் அவ்வழிப்படுத்திய சிறப்பென்றும் கூறப்பட்டன. (க)

## அரசியலின் சிறப்பு.

அரசியல் நெறியின் வந்த அறநெறி வழாமற் காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகண் மாற்றி
உரைதிறம் பாத நீதி யோங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான் அன்பர் வேடமே சிந்தை செய்வார்.

(எ - து.) வேதநெறியின்வழியே அரசியலை நடத்தும் அந்த நன்னெறியின் வழியே விதித்துவந்த தருமங்களைத் தவறுமற்காத்து, பெரியமலைபோலும் படைத்துள்ள

தனது தோள்வலியால் பகைவரது படைமுனையை அழித்து வெற்றிகொண்டு, யாதொரு தன்மையானும் வாய்மையின் மிக்கனவாகச் சொல்லப்பட்ட பிறவறங்கள் இல்லையாகலான், அந்த வாய்மைச்சொல்லினின்றும் மாறுபடாத நீதியிற்சிறந்த குணங்களால் மிக்குயர்ந்தவர். அலையுடைய கங்கையை அணிந்திருக்கும் சடையுடையானாகிய இறைவன் அன்பாகளுடைய சிவவேடத்தையே (தாம அறியப்படுவதாயும் அடையப்படுவதாயு முள்ள மெய்ப்பொருளாகச்) சிந்தைசெய்பவர் என்பதாம்.

அறநெறி - அரசியலன்றி நடைபெறாது ஆகலானும், அரசியல் - அறநெறியே யாகலானும், † அறநெறி குன்றாது நடத்தலே செங்கோல் ஆகலானும், அறங்குன்ற நடத்தலே கொடுங்கோல் ஆகலானும், கொடுங்கோல் உடையனுயின் "ஆபயன்குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர" ஆகலானும், நாடோறும் நாடுகெடுமாகலானும், முன் தேடிய பொருளையும், பின் தேடுதற்கு ஏதுவாகிய குடிகளையும் சேர இழக்கும் ஆகலானும், "அரசியல்நெறிவந்த அறநெறிவழாமற்காத்து" எனவும், அங்ஙனங் காத்தற்கு வேண்டும்பொருள்கள் வருவழிகளை மேன்மேலுளவாக்க வேண்டுமாகலானும், உளவாய் வந்தவற்றை ஒருவழித் தொகுக்கவேண்டு மாகலானும், தொகுத்தவற்றைப் பிறர்கொள்ளாமற் காக்கவேண்டு மாகலானும், காத்தவற்றை அறம்பொருள் இன்பங்களின் பொருட்டு விடுக்கவேண்டு மாகலானும், அஃதாவது:—கடவுளர் அந்தணர் வறியோர் என்றிவர்க்கும், புகழ்தரும் கொடுத்தலாகிய அறப்பொருட்டாகவும், யானை குதிரை படை நாடு அரண் என்றிவற்றிற்குக் கொடுத்தலாகிய பொருட் பொருட்டாகவும், மண்டபம் வாவி செய்குன்று இளமரச்சோலை முதலிய செய்தற்கும், ஐம்புலன்களால் நுகர்வனவற்றிற்கும் கொடுத்தலாகிய இன்பப்பொருட்டாகவும், விடுவிக்க வேண்டுமென்க. அம்முறையால் காத்தலாதிகளைச் செய்ய முயலுங்காலத்துப் பகையுண்டாம் ஆகலினானும், அப்பகைகளை வெல்லக் கருதுங்காலத்து எத்துணைப் படைத்துணைக ளிருப்பினும் அவைகளும அழியவரு மாகலானும் அங்குத் தோள்வலியிருப்பின் பகைவனையும், அவன்சேனைகளையும் வெற்றிகொள்ளலா மாகலானும் "தோளால் வென்று மாற்றலர் முனைகள்மாற்றி" எனவும், வன்மைபெற்றதோள் பெருத்தன்றி சிறுத்திருப்பின் சிறப் புடைத் தன்றாகலான் "வளரநெடுந்தோள்" எனவும், பலகுடிகளால் பலபொருள் பெறுவ பெற்றுச் சுகமொன்றே அனுபவிப்பவன் அரசன், அரசனிடத்திற் சொல்லொன்றே பெற்று, பலஇன்பக்கூறுகளை அனுபவிப்பவர்குடிகள், அஃதாவது:—அரசனதுசொல் நீதிதவறி யிருக்குமாயின் துன்பத்தைக்கொடுக்கும், நீதிதவறா திருக்குமாயின் இன்பத்தைக்கொடுக்கும் ஆகலான் ‡ "நீதிவழாத உரை யோங்கு நீர்மையினின்மிக்கார்" எனவும், உலகில் தன்னுணையைச் செலுத்தவல்லோர் தன்னால் கொடுக்கப்பட்ட வேடத்தைத்தாங்கிப் போவதும், அவ்வேடத்தைக் கண்டவர்கள் தானெனவேகண்டு அஞ்சி அவரேவல்வழி நிற்பதுமேயன்றி, வேடத்தைக் கண்டு தானென்றெண்ணலும், அஞ்சாமலும், அவரநுகுலம் அறிவு செய்கைகளையுணர்ந்தபின்னர் அஞ்சுவது இல்லையாகலான் அதுபோலத் தாம, நரைக்கரையான் அன்பர் வேடமே சிந்தைசெய்வார் எனவும், சடையின் சம்பந்தத்தால் கங்கை சிறந்தசுத்தமும் சிறப்பும் எய்தப்பெற்றமைபோல் திருவேடத்தின் சம்பந்தத்தால் சிறந்தசுத்தமும் சிறப்பும உடையவர் அடியவராகலான் "திரைசெய்நீர் சடையான் அன்பர்" எனவும் கூறினர்.

---

† திருக்குறள். செங்கோன்மை கொடுங்கோன்மை என்னும் இரண்டதிகாரங்களில் இவற்றின் உண்மைகளை அறிக.

‡ ஆக்கமுங்கேடும் அதனால்வருதலானும், அறனும், பொருளும் அதனினூஉங்கு இல்லையாகலினானும், சொல்லின்கட் சோர்வு(உண்டாகாமல்)காத்து ஓம்பி, திறனறிந்து சொல்லவேண்டுவது அரசர்கடனென்க. இதனை, திருக்குறள் நாலமென்னும் அதிகாரத்திற் காண்க.

இத்திருப்பாசுரத்தான், இவரது அரசியல் - அறநெறியைச்சேர்ந்த தென்றும், பகைமை வெல்வது படைகளின் வலியாலன்று, தனது தோள்வலியாலே என்றும், யாங்கலத்துள்ள நூலும் அன்றாகிய (பிறநலம் எல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்க தாகிய) ஞானநலம் என்னும் நலன் உடைமையில் மிக்கார் என்றும், தனது அடையாள மாகிய வேடத்தை உலகங்கண்டு அஞ்சுவதுபோல், இறைவனது வேடத்தைக்கண்டு தான் அஞ்சுந்திறம் உடையவர் என்றும் கூறப்பட்டன. (உ)

சிவபுண்ணியபரிபாலனச்சிறப்பு.

மங்கைபங்கப் பாக மாக உடையவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி யேழிசைப் பாட லாடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கணா யகருக் கன்பர் தாளலால் சார்பொன் றில்லார்.

(இ - ள்.) உமாதேவியை ஒரு பக்கத்திலுடையவர் நிலைபெற்று வாழும் திருக்கோயில்கள் எவ்விடத்தும் அறுகால பூசைவிசேடபூசைகளும், எழிசையோடு கூடிய பாடல்களுடன் ஆடல்களும் அளவில்லன பாப அமைந்துள்ள திருவிழாச்சிறப்புகளும், எப்பொழுதும் குறைவின்றி நடந்துவரும்படி பாதுகாப்பு பரிபாலித்து வாழ்கின்றவர், தங்கள் நாயகராகிய சிவபிரானுக்கு அன்பராகிய அடியார்களது திருவடிச்சார்பல்லது மற்றொருசார்பும் இல்லாதவர் என்பதாம்.

இறைவன் தன்பொருட்டன்றி உயிர்களுக்கு போகத்தைப்புரியவே - உமாதேவியோடுகூடி போகியாயிருப்பவனென்பதுதோன்ற மங்கையைப் பாகமாக வுடையவர் என்றார். பூசையின்பயனைக் கொடுக்குங் கோயில் இம் மண்ணுலகத்திலன்றி மற்றொரு உலகத்திலும் இல்லையென்பதும், நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் சிறப்புவிதிகளெல்லாம் இம் மண்ணுலகிலன்றி ஏனையவுலகங்களில் இல்லையென்பதுந் தோன்ற மன்னுங்கோயில் என்றார். இந்திராதிதேவர்களுடைய அரசியல் தங்கள் தங்களுக்குரிய போகங்களைப் பாதுகாத்துக்கொள்ளுந் தன்மை யுடைத்தாய் நிற்பனவேயன்றி, சிவதன்மபரிபாலனங்கட்குரிமையுடைய தன்றென்பதூஉம், மண்ணுலகத்தாரது அரசியல் யோகபோக ஞானங்கட்குரிய சாதனசெயல்களைப் பாதுகாக்குந் தன்மையுடைத்தான தென்பதுந் தோன்ற - எங்கணும் பூசை நீடி ஏழிசைப்பாடல் ஆடல் பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்துவாழ்வார் என்றார். இத்தகைத்தான சிறப்புடன் நடத்தும் அரசியலுக்குத் தன் பெரும்பேறு சிவனடியாரது திருவடிச்சார்பன்றி மற்றொன்றில்லையென்பது தோன்ற தங்கள் நாயகருக் கன்பர் தாளலல் சார்பொன்றில்லார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், போகயோக ஞானப பிரயோஜனங்கள் சாதனங்களன்றி யமையாவாகலான் அச் சாதனங்கட்குரிய உலகம் இம்மண்ணுலகன்றி வேறில்லை என்றும், போகாதிகளுக்குரிய பிரயோஜனங்களைக் கொடுக்கும் இறைவனுக்கு இடம் இம் மண்ணுலகிலிருக்கும் கோயில்களன்றி வேறில்லை என்றும், போகாதி சாதனங்கட்கும், இறைவனுக்கும் இடமாயுள்ள இம் மண்ணுலகை ஆளும் அரசியலைப்பெற்ற அரசனன்றி இறைவனுக்குரிய சிறப்புகளெல்லாம் செய்யுங் கடப்பாடுடையவர் வேறொருவரன்று என்றும், அங்ஙனஞ்செய்யப்படும் சிறப்புகளால் அரசன் அடையப்படும் சிறந்த பிரயோஜனம் அடியாரடிச்சார்பன்றி வேறில்லை என்றுங் கூறப்பட்டன. (௩)

அன்பர்தானச் சிறப்பு.

தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகு மென்று
நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார்.

(ப - ரு) தாம் அரசியல்வழியாய்த் தேடிய திரவியங்களும், அவ்வழியாய்ப் பெருகிய வினைச்செல்வங்களும், தில்லையம்பலத்தின்கண் நடனஞ்செய்தருளும் சிவபெருமானது அன்பர்களுக்கே உரிமையானவைகளாம் என்று விரும்பிய எண்ணத்தோடு இருப்பவராதலால் அடியார் தம்மிடத்துக்கு எழுந்தருளும்போது, தமதுள்ளத்தில் பொருந்திய மகிழ்ச்சியானது மேலிட, அவ்வடியார்களுக்கு மறுபடியும் ஓர்குறையை யெண்ணி வேறோரிடம் குறித்துப் போகவொட்டாமல் வேண்டும்பொருளைக் கொடுத்து வருபவராயுள்ளவர் என்பதாம்.

அறநெறியே செலுத்தும அரசியலால் தேடிய செல்வமென்பார் தேடிய பாடு என்றும், இறைவனடியார் அடிச்சார்பால் வந்தசெல்வமென்பார் நீடுசெல்வமென்றும், இவ்வகைத்தான செல்வம் அன்பொழிந்த என்பதோல் போர்த்திருக்கும் உடம்புடையார்க்கு ஆகாதென்றும், ஏனெனின், அவர்கள் தாமதேடியபொருளையே ஈதலுவக்கும் இன்பம் அறியாது வைத்திழக்கும் வன்கண்ணராகலின் அவரை யொழித்து செல்வன் கழலேத்தும் செல்வராகிய அன்பர்க்கே ஆகத்தக்கதென்றும் எண்ணும் எண்ணமுடையவரென்பார் ஆடியபெருமான் அன்பர்க்காவனவாகும் என்று நாடிய மனம் உடையவரென்றும், அவ்வன்பர்கள் பலரும் அவராயினும் தம்முடைய செல்வம் பயன்பெற்றதென்று மிக்கமகிழ்ச்சியுடன் மீண்டும அவர்கள் ஒருவர்பால் போகாவண்ணம் ஒருவாற்றானுங் குறைவின்றிக் கொடுத்தருளும் பெருங்கொடையாளர் என்பார் - அம்மனத்தினோடு நாயன்மார் அணைந்தபோது கூடிய மகிழ்ச்சிபொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார் என்றுங் கூறினார்.

அல்லதூஉம், உயிர்க்குயிராயிருந்து உபகரிக்கும் இறைவன்பாற் சார்ந்திருக்கும் அன்பறியாது உடற்பற்றைச்சார்ந்து வருவார்பாற்செல்லும் அன்பு பாசமாமேயன்றி அன்பு அன்றென்பது தோன்ற மனமுள ஆடிய பெருமான் அன்பர் என்றார். அவ்வன்புடையாரே தம்மையாளும தலைவர் என்று எண்ணும் எண்ணமுடையார் என்பது தோன்ற நாயன்மார் (என்று) நாடியமனத்தின் என்றார். நாயகன் வரப்பெற்ற நாயகிக்கு மகிழ்ச்சிமேலிட்டு அவனைக் கூடத் தன்னைக் கொடுத்துக் களிப்புறுமாறுபோல வரும் களிப்பினையுடையவர் என்பது தோன்ற நாயன்மார் அணைந்தபோது குறைவறக் கொடுத்துவந்தார் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் ஆடும்பெருமானடியார் அன்பரானவே அன்புடையாரென்றும் அவர் குறைவகற்றவே தமக்கு அருளென்று அவர்க்கேகொடுக்கும் செல்வரென்றும் கூறப்பட்டன. (௬)

முத்தநாதன்பன்முறைதோல்வியடைதல்.

இன்னவா றொழுகு நாளில் இகற்றிறம புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடை யானை பொருபரி காலாள மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவம் பட்டுப் போனான்

(ப - ரு.) (திருவேடமே மெய்ப்பொருளாக எண்ணும மெய்ம்மையினையுடைய மெய்ப்பொருள்நாயனார்) ஆலயங்கள்தோறும் நடைபெற்றுவரவேண்டிய நித்திய நைமித்திகாதி பூசைகளைக் குறைவற நடத்தியும், அடியார்களுக்கு வேண்டியவற்றைக் குறைவறக்கொடுத்தும் வருநாளில், ஓர்அரசன் அவரோடு பகைத்துநின்று, அவரைக்கொல்ல வேண்டுமென்கிற ஆசையினால், அவரோடு போர்செய்வதை மேற்கொண்டு பொன்னாற் செய்த நெற்றிப்பட்டத்தை யுடைய யானைகளையும், போரில்வல்ல குதிரைப்படைகளையும் காலாட்படைகளையும் மற்றுள்ளனவாகிய படைகளையும் ஒருங்கே சேர்த்துக் கொண்டுவந்து போர் செய்துசெய்து அவைகளையெல்லாம் இழந்துஇழந்து போவான். இவ்வாறு ஒருமுறையன்று பன்முறையிழந்து தோற்று, அவமானம் அடைந்து போவானாயினன் என்பதாம்.

ஓர் மன்னன் இகல்திறம்புரிந்து எனக்கூட்டுக. மற்றும் என்றது தேருய்வீரரும், வரைநெடுந்தோளால் வென்று மாற்றலர் முனைகள்மாற்றி என்றுகூறியதனை ஈண்டறிக. எனவே - பகைவன் யானைமுதலிய படைகளை யுடையவனாயிருந்தும் தோள்வலி குன்றினவனாகலின் அவன் தோல்வியடைந்தானென்றும், நாயனார் படைவலியேயன்றி தோள்வலியில் வன்மைபெற்றிருந்தவராகலின் வெற்றிபெற்றாரென்றும் அறியக்கிடக்கின்றமை காண்க. ஓர் மன்னன் என்றதனால் பகைமையுள்ளவன் இந்த ஒருவனன்றி மற்றொருவரும் இல்லை என்க.

இத்திருப்பாசுரத்தான். பகைவனை பலமுறையும் தோற்கும்படிச் செய்வதேயன்றி தான் ஒருமுறையேனும் தோல்வியுற்றதில்லையென்று அரசரது போர்த்திறங் கூறப்பட்டது. (ரு)

முத்தநாதன் திருவேடங்கொண்டு வருதல்.

இப்படி இழந்த மாற்றான் இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்து வெண்ணீறு சாத்தும்
அப்பொருள் வேடங் கொண்டே அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான்

(இ - ள்) இவ்வாறு பன்முறையுந் தோல்வியடைந்து யானைமுதலிய பலபடைகளையும் இழந்துபோதலை யுடைய அப்பகைவரசன் படைகொண்டு போரினால் வெல்ல வலியில்லாதவனாகி, மெய்ப்பொருள் என்னும் அரசர் திருவேடத்தில் வைத்திருக்கும் சீலத்தையுணர்ந்து, (தானும் அவ்வேடத்தினால் எளிதாய் வென்று விடலாமென்கிற எண்ணங்கொண்டு) சரீரமுற்றும் நீறுபூசும் முனிவர்வேடமாகிய அப்பெரிய சிவயோகி வடிவங்கொண்டு அரசன் தனித்திருக்கும் சமயத்தில் வெற்றிகொள்ளக் கொலைசெய்ய வேண்டுமென்கிற எண்ணத்தை யுடையவனாய் சொல்லக்கூடாத செயலை யெண்ணினவனாய் அவ்வரசர்வாழும் திருக்கோவலூரிற் செல்வானாயினான் என்பதாம்.

போர்த்திறத்தில் வெற்றிவேண்டும் வீரத்தன்மையைவிட்டு எவ்வகையினாலாவது கொலையை வேண்டி கொலைபாதகனைப் போல் அத்தொழிலை மேற்கொண்டனன் என்பார் அற்றத்தில் வெல்வானாக என்றார். கொலைசெய்யுங்காலம் வாய்க்கப்பெறினும் அக்காலத்திலும் அவரைவெல்ல அரிதென்று அவ்வீரத்தைக்கருதி, * "பெற்றம் (பசு) வலியில்நிலைமையான் வல்லுருவம் (ஆகிய) புலியின்தோல் போர்த்து மேய்ந்தற்று" என்றதுபோலும் நீறுபூசிய உடம்புடையனாயினன் என்பார் வெண்ணீறுசாத்தும் அப்பெருவேடங்கொண்டே என்றார். பகைவனுக்கு வெண்ணீறு பொய்ப்பொருளாயினும், அவனுக்குப் பகைவராகிய நாயனாருக்கு மெய்ப்பொருள் வெண்ணீறன்றி வேறில்லை என்னும் உண்மையை உண்மைபட அறிந்தவன் என்பார் வேந்தன் மெய்ப்பொருள் சீலமறிந்து என்றார். அன்பால்வேடத்தை சிந்தைசெய்யுந் திறமுடையராய் சிந்தனைக்கும் அரியராகிய சிவனைச் சிந்திதனுக்கானும் சொல்லுதற்கரிய நிலையுடையவரேயன்றி, திருவேடத்தைவிட்டு சிவனைக்காணும் புல்லிய அறிவினை யுடையரல்லரென்னும் அவரது சிந்தனையின் தாண்மை இவன் நன்றாய்ச் சிந்தித்தனன் என்பார் செப்பருநிலைமை எண்ணி என்றார். அவரது சிந்தனையின்திறத்தை நன்றாயறிந்த திண்மையினால் பகையினால் வெல்லக்கருதாது வேடத்தால் மிக எளிதாய்வெல்லக்கருதி போர்க்களத்தை நாடாது அவரிருப்பிடத்தையே நோக்கிச்சென்றனன் என்பார் இகலினால் வெல்லமாட்டான் திருக்கோவலூரிற் சேர்வான் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், பகைவன் - தனது பகைவராகிய நாயனார் வெண்ணீற்றின் வேடங்கொண்டவரே மெய்ப்பொருளென்றும், நீற்றின் வேடங்கொண்ட அவர்பால் வேறுசெயலையும் குணத்தையுங்கண்டு அம்மெய்ப்பொருள் பாவனை மாறுபடுதல் இலம்

* திருக்குறள் அதி. கூடாவொழுக்கம் - செ. ௩.

அன்றென்று எண்ணுகலே சிலமேனரும், தெளிந்த செப்பரும் நிலைமையுடையவரா யிருக்க, இவரை இவ்வழியான் வெற்றிகொண்டு வாழ்வதொழிந்து வினையேயிடத்துக் கொள்ளும் பகைமையைபோல் இவரிடத்தில் கொண்டு பலகாலும் பலபடைகளாயிருந்து தோல்வியடைந்து வந்தோமே, அந்தோ! இதுகாறும் இவ்வுபாயத்தை எண்ணுதொழிந் தோமே என்று சற்று கவலையுற்றவனாய பின்னர் அக்கவலைவிட்டு வெண்ணீற்றின் வேடத்தைக் கொள்வதற்குத் துணிந்தனன் என்றும், அங்ஙனந் துணிந்தானாயினும், மீண்டும் நம்மைப பலமுறையும் அப்குளளார பலருமறிந்திருப்பாராகலான் ஒருவ ரும் அறியாவண்ணம் யாவருங் உறங்கும்சமயங்களிற்படும் காலத்தில் செல்வோமாயின் நமது எண்ணம் முற்றுப்பெறும அதில் ஐயமில்லை என்பம அபபா இருந்தும் திருக்கோவ லூருக்குச்சென்றனன் என்றுங் கூறப்பட்டன.

செப்பருந்நிலைமை எண்ணினன்றதனை, நாயனாரது மெய்ம்மை எண்ணத்திற்கும், பகைவனது பகைமை எண்ணத்திற்கும் பொருள் படுமாறுகாணக (௬)

மெய்யெலா நீறு பூசி வேணிகண் முடித்துக் கட்டி
கையினிற் படை கரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுட் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன்.

(எ - து.) முத்தநாதன் என்னும் அப்பகையரசன், தனது உடம்பு முழுதும் திரு நீற்றை நிறையப்பூசி, விரிந்திருக்கும் சடைகளை ஒன்றாகச் சேர்த்துக்கட்டி, தன்கையி னிடத்தில் சேதித்தற்குரிய ஆயுதங்களை உள்ளேவைத்து மறைத்த புத்தகக்கவளியைத் தாங்கிக்கொண்டு, கரியபுகையைத் தன்னுள்ளே வைத்திருக்கும்தீபம்போல மனத்தி னுள் தீமையாகிய கறுப்பைவைத்து, தவவேடத்தைப் பொய்மையாகக்கொண்டு சென்றனன் என்பதாம்.

அன்பர்கள் - மாயாமலத்தை நீக்கினவர் என்னும் அவ்வுண்மையைக்காண மெய் யெலாம் நீறுபூசியும், இறத்தல் பிறத்தல்கட்கு ஏதுவாகிய கன்மமலம் முற்றுப்பெற்ற வர், எனவே - இனி பிறப்பதற்கு கன்மமில்லாதவர் என்னும் அவ்வுண்மைவிளங்க விரிந்திருக்கும் சடையை முடித்துக்கட்டியும், * ஆணவமலத்தின் சத்தியைக்கெடுத்து அருட்சத்தியின் வழிநிற்பரென்னும் அவ்வுண்மையுணரக்கையினில் புத்தகக்கவளியைக் கொண்டும் இருத்தலே தவ்வேடமாதலால், அம்மெய்த்தவவேடத்தை இக்கைதவன் பொய்மையாகக் கொண்டான் என்பார், மெய்யெலாம் நீறுபூசி வேணிகண் முடித்துக்கட்டி கையினிற் புத்தகக்கவளியேந்தி. * பொய்த்தவவேடங்கொண்டு என்றார் மெய்த்தவ வேடத்திற்கு நீறும் சடைமுடியும், புத்தகக்கவளியும் கூறியதுபோல், பொய்த்தவ வேடத்துக்குப் படைகரந்த புத்தகத்தையும், மைபொதி விளக்கேயென்ன கறுப்புவைத்த மனத்தையும் அடையாளமாகக் கூறினர். அபவித்திர ஸ்தானத்தில் தோன்றும் புண் பவித்திரம் எனவும், அதத்வவாதிகள் தத்துவவாதிகள் எனவும் பெயர்பெற்றதுபோலும் முத்திக்குக் கடையாகிய இவன்முத்தநாதன் எனப் பெயர்பெற்றனனெனக.

இத்திருப்பாசுரத்தான், இருளுக்கிடமல்லாத சுடரொளி, இருளுக்கிடமாகிய தீப சம்பந்தப்பட்டதுபோல், மெய்த்தவத்திற்குரிய திருவேடம் பொய்த்தவன்பால் சம் பந்தப்பட்டதென்றும் "படைக்கலமாக வுன்னுமத் தெழுத்தைஞ்சு என்றனவிற்கொண் டேன்" என்றதுபோல் பாசமறுக்கும் படையாகிய புத்தகங்கள் கவளியில் படைகளா கவே புகுந்தனவென்றும், முத்தநாதன் என்னும் திருநாமம் பிறவிநாதன்பால் சென்ற தென்றுங் கூறப்பட்டன. பாடபேதத்தால் புத்திநாதன் என்பாருமுளர். (எ)

---

* வேடம்பொய்த்து, அவங்கொண்டு எனவும் மாற்றிப் பொருள் கொள்க.

### முத்தநாதன் அரசன்வாயிலை யணுகல்.

மாதவ வேடங் கொண்ட வன்கணன் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக் குழைக்கொடி யாட மீது
சோதிவெண் கொடிக ளாடுஞ் சுடர்நெடு மறுகிற் போகிச்
சேதியர் பெருமான் கோயில் திருமணி வாயில் சேர்ந்தான்.

(எ - து.) பெருமையினையுடைய தவவேடத்தைக் கொண்ட வன்னெஞ்சுடைய முத்தநாதன் மேல்மாளிகைதோறும் மலர்மாலைசூழ்ந்த கூந்தலையுடைய குழைந்தகொடி போன்ற மகளிர்கூத்தாட, ஒளியினையுடைய வெள்ளியகொடிகள் அசைந்தாடும் பிரகாசம்பொருந்திய பெரியவீதியிற்சென்று, சேதிநாட்டரசராகிய நாயனாரது அழகிய இரத்தினங்க ளழுத்திய அரண்மனைவாயலின்கண் சேர்ந்தனன் என்பதாம்.

இத்திருப்பாசுரத்தான், வன்னெஞ்சுடையார் மாதவவேடங்கொள்ளினும் வன்கண்ணரே என்றும், அரசர்பெருமான் இருக்குமவீதியில் அளகபாரக் குழைக்கொடிகள் மேல்மாளிகையினும், சோதிவெண்கொடிகள் மேல்வெளியிடத்தினும் ஒப்ப அசைந்து ஆடிக்கொண்டிருக்குமென்றும், அங்ஙனமான பிரகாசத்தோடும் விளங்குகின்ற அரசனுடைய வாயிலை முத்தநாதன் போயடைந்தானென்றுங்கூறப்பட்டன.

மங்கையர்—அளகபாரத்தை யுடையராயினும், கொடிபோன்றதன்மையை, மேலோங்கியிருக்கும் கொடிகளிடத்தில் கற்றனரென்றும், கொடிகள் அசைந்தாடுந்தன்மையை நடனஞ்செய்யும் மங்கையரிடத்துக் கற்றனவென்றும் அவ்வலங்காரந்தோன்ற மாடமீது தோறுங் குழைக்கொடியாட, வெண்கொடிகளாடும் என்றார். (அ)

### தடையிலாது வந்தவனைத் தத்தன் தடுத்தல்.

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
உடையவர் தாமே வந்தார் உள்ளெழுந் தருளும் என்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்
இடைதெரிந் தருள வேண்டுந் துயில்கொளும் இறைவன் என்றான்.

(எ - து) கடைவாயலில் காவல்கொண்டிருக்கின்ற காவலாளர்கள், (அந்த வஞ்சவேடத்தானைக் கண்டமாத்திரத்தில், நம்மை ஆளாகவுடைய அடியார் திருவுளங்கூர்ந்து வலிய எழுந்தருளினரென்று, கைகுவித்து வணங்கி தூரத்தில்நின்று, உள்ளே எழுந்தருளலாமென்று சொல்ல, (அந்த முதற்றடையை நடந்து அஃதேபோல் ஒவ்வொரு வாயிற்காவலாளர்கள் சொல்லத்) தடைகளெல்லாங் கடந்து உள்ளேசென்றபோது, அரசர்பெருமானுக்கு உயிர்க்காவலாய் நின்ற தத்தன் என்பவன், அரசரது சமயந்தெரிந்து உள்ளே தேவரீர் எழுந்தருளவேண்டும், இப்போது அரசனார் நித்திரைசெய்யும் சமயமாயிருக்கின்றது என்றான் என்பதாம்.

கடையுடைக்காவலாளர், உடையவர் தாமேவந்தார் (என்று) கைதொழுது ஏற நின்றே, உள்ளெழுந் தருளுமென்ன எனக்கொண்டு கூட்டுக.

இத்திருப்பாசுரத்தான் கடைக்காவல்முதல் தனிக்காவல் இறுதியாகத் தடைபடவேண்டிய முத்தநாதன் தடைபடாது சென்றமைக்குக் காரணம் அவன்கொண்டுவந்த திருவேடத்தாலென்றும், தனித் தடையாயுள்ள தத்தன், தடைபடுத்தாது உள்ளே செல்லவிடுந்தன்மையற்ற சிறந்தவனாயினும், அவ்விடம் அரசன் தன்மனைவியோடு தனித்திருக்கும் இடமாயிருத்தலினாலும், துயில்கொள்ளுஞ் சமயமாயிருத்தலினாலும், இடைதெரிந்து அருளவேண்டுமென்று சொன்னானென்றுங் கூறப்பட்டன.

காவலாளர்கள் தமதுகாவலுக்கு இடமாயிருக்கும் வாயிலின்கண் யாவர்வரினும் முன் தடைபடுத்தி, சமயமறிந்து பின்விடவேண்டியதுமுறையும், அரசனாணையுமாயிருக்க முத்தநாதன்பால் அவ்விரண்டையும் செய்யாதுவிட்டு, உடையவர் தாமேவந்தார் என்று

எண்ணத்தால் எண்ணியதும், கைகள் தலைமேலேற்றிக் காயத்தால் தொழுததும, உள் ளெழுந்தருளுமென்று வாக்கால் இன்சொல வழங்கியதும, அரசனுடைய ஆணையால் நடந்தன வன்றி அவர்கள்தாமே நடத்தினவ ரன்றாகலான் அவர்கள் அவனைத் தடைபடுத்தாது விட்டதும, தொழுததும முறையே யாயிற்றென்க

இதனால், அரசர் பெருமானாகிய தான அரசனாயினும மெய்த்தவமுடையார் ஆணையின் வழி தான் நிற்கவேண்டுமென்னும் அவாவுடையவரேயன்றி, அவர்கள் தன் ஆணையின் வழி நிற்கவேண்டுமெனனும அகங்காரமுடையவரன்றென்பதும் அவர் திருவேடமே மெய்ப்பொருளெனக் கொண்டிருக்குந்திறத்தில் திண்ணியரென்றும் கூறப்பட்டன (கு)

தனித்தடைதடுத்து பள்ளியறைக்குள் செல்லல்

என்றவன் கூறக் கேட்டே யானிவற் குறுதி கூற
நின்றிடு நீயு மென்றே அவனையு நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டில் புரவலன் றுயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல் மாதேவி இருப்பக் கண்டான.

(எ ரு) மெய்க்காவற்காரனாகிய தத்தன, அரசர் உறங்குகின்றார் என்றுசொல்ல, அதனைக்கேட்டே (எத்தந்தா இதுவரையில் ஆங்காங்குள்ள காவலாளிகள் எப்படி தடை செய்யாமல் விட்டனரோ, அப்படியே நீயும் தடைசெய்யாமல் என்னை உள்ளேவிட்டு இங்ஙனம் நிற்பாயாக, ஏனெனில்) யான் இவ்வரசனுக்கு உறுதியான உபதேசமொழி களை உபதேசிக்க (இப்போது வந்துள்ளேன், அதற்கு இதுதான் சமயம்) நீயும் இங் ஙனமே நிற்பாயாக என்று அந்தத்தத்தனையும தடைசெய்யாவண்ணம விலக்கி உள்ளே சென்று, பொன்னாற் பிரகாசிக்கின்ற சயனக்கட்டிலில் நாயனார் நித்திரைசெய்துகொண் டிருக்க, அந்நாயனார் அருகில், நறுமணங்கமழும் கூந்தலையும், மெல்லிய சாயலையுமுடைய பத்தினியாகிய மாதேவி யிருக்கப் பார்த்தனன் என்பதாம

எங்கும் தடையெனனும சொல்லைக் கேளாதவன அச்சொல்லைத் தத்தனால் கேட்ட னன என்பார் கேட்டு என்றது என்று அவன் கூறக்கேட்டே என்றார் உனது அரசன மனையாளோடுகூடிச் சிற்றினபத்தை அனுபவித்தற்குரிய சிறியோனன்று, அருளோடு கூடிப் பேரின்பத்தை அனுபவித்தற்குரிய பெரியோனாகலின அப்பேரின்ப விலக்க ணங்கூறும் நூலை உபதேசிக்கவந்த என்னை நீ தடுத்தல அரசனுக்கான செயலன்று என்றுகூறி அவனும் உள்ளே வாரா வண்ணம தடுக்க எண்ணினான் என்பார் நீயு நின்றிடு என்றான் என்றார் சிற்றினபானுபவத்துக்கேற்ற நறுமணங்கமழும் கூந்தலையும், மயில் போலுஞ் சாயலையும் உடையவளாயிருந்தும, அரசன உறக்கத்தைத்தவிர்க்க எண்ணாது அவன் உறக்கத்திற்கேற்ப வேண்டிய உபசாரங்களைச்செய்து நின்றனள் என்பார் புர வலன் துயில மாடே மாதேவி இருப்ப என்றார

மாதேவியாகிய உமாதேவி தனது நாயகனாகிய மாதேவன் ஒருசெயலுஞ்செய்யாது உறங்குகின்றவனபோல் சும்மாவிருக்கத் தானே பஞ்சகிருத்தியங்களையும செய்ய உறங்கா திருந்து உயிர்களுக்கேற்றதொழில்களை அவ்வப்பொழுது அம்மஹாதேவனைக்கொண்டே செய்தலால் மஹாதேவி எனப்பட்டார், அஃதேபோல அரசனாரது மனைவியார் அரசன உறங்குதல்செய்ய இப்பொழுது என்செயவருமோ அச்செயலைச் செயவிக்கவேண்டு மென்று விழித்திருந்தனராதலால மாதேவி என்றார

இத்திருப்பாசுரத்தான், வாயில்கள்தோறும தடையொன்று உளதென்று கூறக் கேளாதுவந்த பொய்த்தவன், அங்குத்தத்தனால இடைதெரிந்தருள வேண்டுமெனனும ஒருதடையான சொல்லைக்கேட்டனன் என்றும, தத்தனது தடை தடுக்கக்கூடாத தனித் தடையாகலின் அத்தடையுந்தடுக்க யான் இவற்கு உறுதிகூற வந்தனன் என்றும, அச் சொல்லான் தத்தன்மயங்கியதைப் பொய்த்தவன் குறிப்பானுணர்ந்து, துணிந்தவனை நீயும் என்னுடன் உள்வராமல் இவ்விடத்திற்றானே நின்றிடுஎன்றும, திருவேடத்தனு

யும், இவற்கு உறுதிகூற என்றுசொல்லிய சொல்லுக்கேற்பப் புத்தகக்கவளியை யுடைய வனும் காணப்படலால் தத்தன் அவனாணையைக் கடத்தற்கஞ்சிநிற்ப, அவனையும் நீக்கிப் புக்கானென்றும், புகுந்த அவன் அரசனார் உறங்கியிருத்தலையும் மனைவியார் விழித்திருத் தலையும் கண்டனன் என்றுங் கூறப்பட்டன. (க0)

### தேவிதுயிலுணர்த்த நாயனார் பொய்த்தவனை வணங்கல்.

கண்டுசென் றணையும் போது கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலை யானை யெழுப்பிட உணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனார் தொண்ட ராமெனக் குவித்த செங்கை
கொண்டெழுந் தெதிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று.

(இ-ள்.) பத்தினியார் அருகே யிருப்பதைக்கண்டு (அஞ்சாது) அரசனைச் சமீபித் துச்செல்லும்பொழுது, தேவியானவள் விரைந்து பதறிஎழுந்து, வண்டுகள் ஒலிக்கின்ற மாலையையுடைய அரசரையெழுப்ப அரசனும் துயில்விட்டெழுந்து எதிரேநிற்கின்ற வஞ்சவேடத்தானைக்கண்டு, இவர் தேவர்கள் தலைவனாகிய சிவபிரான் அடியவராமென்று எண்ணி, செவ்விய இரண்டுகைகளையும் அஞ்சலியாயகக் குவித்துக்கொண் டெழுந்து எதிரேசென்று வணங்கவேண்டிய முறைப்படி வணங்கிநின்று என்பதாம்.

தேவி கதுமெனஎழுந்து என்றும், மன்னன் அண்டர்நாயகனார் தொண்டராமென ணர்ந்து என்றும் கூட்டுக.

பொய்த்தவனாகிய பாதகன் அரசனார் உறங்குவதைக்கண்டு மனைவி விழித்திருப்ப தைக்காணாது தான் எண்ணிவந்த செயல் முற்றுப்பெறுவதற்கு நல்லசமயம் வாய்த்த தென்றெண்ணி அப்பொழுதே அச்செயலைச் செய்ய அரசர்பெருமானைச் சமீபித்தன னென்பார் கண்டுசென்றணையும்போது என்றார். புண்ணியசீலியாகிய அம்மனைவியார், அவன்விரைந்துவந்த செயலால் அவனெண்ணத்தைக்காணாது அவன்வேடத்தைக்கண்டு அஞ்சினவராய் அவன் விரைவினும் விரைந்தெழுந்தனர் என்பார் தேவி கதுமென எழுந்து என்றார். உலகநெறிகூறும் நூற்படி துயிலொழித்தலால் பாதகம் வருவது நிச் சயமாயினும் சிவதருமங்கூறும் நூற்படி அபபாதகம் புண்ணியமேயாகும் என்றும் இறை வனடியவராகிய இவருக்கு நமதிறைவனன்றோ உபசரித்து வேண்டியவற்றைக் கொடுத் தனுப்பவேண்டியவர் என்றும் துணிந்து துயிலொழித்தனரென்பார் வண்டலர் மாலை யானை எழுப்பிட என்றார்.

எழுந்த அரசனும், தன்முன் திருவேடத்தனாய்க் கண்ணிரம்பநிற்கும் கள்வனைக் கண்டு அந்தோ! இவர் தேவதேவனாகிய இறைவனடியாரென்று அறிந்தனர் என்பார் மன்னன் அண்டர்நாயகனார் தொண்டராமென உணர்ந்து என்றார். அப்பொய்த்தவவேடத் தான்வந்தகாலத்தையும், வந்துநின்ற இடத்தையும் சிறிதுஎண்ணி, இவன்யாவன் என்று ஐயுறாது, மெய்த்தவவேடத்தனே என்று நிச்சயித்து அதற்கேற்ப அடியார்களைக் கண்டவுடன் செய்யத்தக்க உபசாரங்களெல்லாம் விதிப்படி யாவும் முறையே செய்தன ரென்பார்—செங்கை குவித்துக் கொண்டெழுந்து எதிரேசென்று கொள்கையின் வணங்கிநின்று என்றார்.

அடியார்கள் தூரத்தே வரக்காணுங்காலத்து எதிர்கொண்டுசெல்வதே யன்றி, சமீ பத்தில் வருங்காலத்தும், மிகநெருங்கிய காலத்தும், நான்கடியேனும் மூன்றடியேனும் இரண்டடியேனும் ஓரடியேனும் எதிர்கொள்ளவேண்டுமென்பது விதியென்க. எனவே அடியாரைப் பூஜிப்பதாகிய * நவபுண்ணியத்துள் இஃதொன்றென்க. ஆகலின் அரசன் கட்டிலைவிட்டிறங்கி ஓரடிவைத்ததும் எதிர்கொண்டதாயிற்று. (கக)

* நவபுண்ணியம்:—எதிர்கொளல், பணிதல், ஆசனத்திருத்தல், தாள்கழுவல், அருச் சித்தல், தூபங்கொடுத்தல், தீபங்காட்டல், புகழ்தல், அமுதமேந்தல் என்பன.

ஸ்ரீபாதத்தை யணையப்பெறுதல் என்றும் அதன்மேற்பெறும்பேறு திருவேடமே மெய்ப்பொருளென்றும் மாறுபாடில்லாமற் கூறுவது ஆகமமேயாகலான் மாறில் ஆகமம் என்றார். அவ்வாகமத்தைத் தேவரீரால் உபதேசம் செய்யப்பெறின் அதனினும் அடியேன் பெறத்தக்கபேறு வேறொன்றுண்டோ இல்லை ஆகலான் - பேறெனக்கு இதன்மேல் உண்டோ என்றார். இதனை உபதேசம் செய்வதில் தேவரீரைப்போல் கருணையுடையார் ஒருவரும்இல்லை என்பதை இவ்விடத்தில் இச்சமயத்தில் வந்ததனாலேயே தெரிந்து கொண்டேனாகலான், தேவரீர் எண்ணியபடியே அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்பார். வாசித்தருள்செயயவேண்டுமென்ன என்றார். அங்ஙனம் சொல்லியபோது பொய்த்தவன் அரசனைநோக்கி, 'இது ஞானோபதேசமாதலால், இதற்கு உபதேசிக்கத்தக்க நானும், உபதேசம் பெறத்தக்க நீயும் வேண்டுமேயன்றி உபதேசத்தானமாகிய இங்கு மனைவியும் இருத்தல் முறைமையன்று" என்று கூறினன் என்பார் - மாதுதவிர நானும் நீயும் வேறிடத்திருக்கவேண்டுமென்று அவன் விளம்பஎன்றார்.

இத்திருப்பாசுரத்தான், செய்வினையைக்காட்டும் இவ்வுலகம் செய்வோன் ஒருவன் உளன் எனக் காட்டுவதால் அபபதியையும், அபபதி அறிவோனைவிட்டு இல்லையாகலான் அறிவோனாகிய பசுவையும், அறிவோனாயிருந்தும் அப்பதியை அறியாமலே கிடத்தலால் அங்ஙனம் அறியாமையைச் செய்வதாகிய பாசத்தையும், பிரமாணமுகத்தானும் இலக்கணமுகத்தானும் உணர்த்தவல்லதும், பின்னர் அறியாமையைச் செய்வதாகிய பாசத்தைப்போக்கி, அறிவாகிய ஆன்மாவைச் சிவஞானத்தினால் பிரகாசிப்பித்து, பிரகாசிப்பித்த அந்தஞானமே கண்ணாய் சிவசொரூபத்தைக் கண்டு பேரின்பப் பேற்றை யடையச்செய்வதுமாகிய ஆகமோபதேசம் தேவரீர்செய்ய அதனை யான் பெறுவதைப்பார்க்கிலும் எனக்குப்பேறு இதன்மேல் இல்லைஎன்றும், அத்தகைச் சிறப்புடைய ஆகமம் சிவபிரான் அருளியதாகலான் அதனைத் திருவேடத்தராகிய நீர்தான் உபதேசிக்கத்தக்க நல்லாசிரியர் என்று அரசனார் கூறினாரென்றும், அப்பொய்த்தவன் அரசர் பெருமான் வேண்டியபடியே நல்லாசிரியனைப்போலும், தனித்திருக்க வேண்டிய முறைமையைக் கூறினனென்றுங் கூறபபட்டன. (கக)

### மனைவியை அந்தப்புரத்துக்குப் போகக்கூறல்.

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
புரிவுடன் விரைய அந்தப் புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத் தானைத் தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி இனியருள் செய்யும் என்றார்.

(எ - து.) (அரசர்கோமான்) தமதருகே இலக்குமிதேவியைப்போல நிற்கின்ற தேவியாரை இனியவிருப்பத்தோடு பார்த்து, நீ சீக்கிரமாக உனது அந்தப்புரத்தில் செல்லக்கடவாய் என்று போகச்செய்து, தனக்கு மெய்ப்பொருளைத் தரவந்த தவவேடமுடையானை அங்குள்ள ஆசனத்தின்மேல் இருக்கச்செய்து, தாமும் ஆசனமின்றி பூமியிலிருந்து துதித்து (யான் தனித்திருக்கின்றேனாகையால்) இனி ஆகமத்தை அருள் செய்யுமென்று கூறினார் என்பதாம்.

திருமாலை எக்காலத்தும் நீங்காத இயல்பினையுடைய இலக்குமியைப்போலத் தன்னைவிட்டுநீங்காத மனையாட்டி என்பார்—திருமகளென்னநின்ற தேவியார் என்றார். செல்வத்தலைவியாய் நிற்கின்ற தேவியை இவ்விடத்தில் நில்லாமற்போ என்றுசொன்னால் நம்மிடத்திருக்கும் செல்வத்தைப் போவென்றுசொல்வதனோ டொக்குமாகவின், அக்கடுமொழிகூறத் துணியாது, இவ்விடத்தினும் அரியகாவலிடத்தில் என்னால் விரும்பப்படும் அரிய பொருள்போன்ற நீ வேறிடத்தில் போகாது அங்ஙனே போயிருத்தல் வேண்டும் என்று மிக்கபரிவுடன் கூறினார் என்பார் தம்மைநோக்கிப், புரிவுடன் விரைய அந்தப்புரத்திடைப் போகஏவி என்றார். தவவேடத்தில் இச்சையையும், ஆகமத்தால்

திரத்தை உணரத்தக்க ஞானத்தையும், அதனைக் கேட்பதில் விரைந்தமுயற்சியை (கிரியை) யும, ஒருங்கேதரவல்ல சிவவேடம் உடையவன் என்பார் தூநதவவேடத்தானை என்றார். பொருட்செல்வியை அந்தப்புரத்திடைப் போகச்செய்து ஞானச்செல்வி தனதுஉள்ளமாகிய அந்தப்புரத்தில் அமர்ந்திருக்க ஆசனந்தந்தனர் என்பார்—த.பிசின் மேலிருத்தினென்றார். ஞானச்செல்விக்குத் தமது உள்ளத்தை ஆசனமாக்கி அதில் இருத்தியபின்னர் அந்தஞானச் செல்வியால் ஆக்கப்பட்டு ஊட்டப்படும் செவியுணவை உண்பதற்கும், உண்டு பசிதீர்வதற்கும், கேட்டல் சிந்தித்தல்களுக்கு இடங்கொடுத்திருந்தனர் என்பார் தாமும்இருநிலத்திருந்து என்றார். யான் கேட்டுச் சிந்தித்த பொருள்களைக் காக்குந் தன்மையுடையேன் என்பார் போற்றி என்பர, நீர் உபதேசிக்கும் பொருள் பாழ்பட்டுப் போகாவண்ணம் காக்குந்தன்மை யுடையனாயிருத்தலின் இனி ஐயுறாது உபதேசிக்கலா மென்பார் இனி அருள்செயயும் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், பொருட்செல்வியாகியதேவியை அந்தபபுரத்திலும் ஞானச்செல்வியைத் தனது உள்ளத்திலும் இருக்கச்செய்து, கேட்டலாதி ஞானச்செயலில் முயற்சி யுடையவராயினா ரென்றுகூறப்பட்டது. (௪௭)

நாயனாரது வெற்றித்திறங்கூறல்.

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப் பொருளெனத் தொழுது வென்றார்.

(எ - து.) (இனி அருள்செய்ய வேண்டுமென்று நாயனார் கூறவும், அவ்வஞ்சகவேடத்தன்) தனது கைத்தலத்திலிருந்த வஞ்சகமாகிய புத்தகக் கவளிகையைத் தனது மடியின்மேல் வைத்து, கவளிகையை அவிழ்த்து அதனுள்ளிருக்கும் புத்தகத்தை எடுபவனைப்போல, (அபிநயச்செய்கையைக் காட்டினன். காட்டும்போது) அரசன் நீங்காத அன்புடன் அவன்காலில் வீழ்ந்துவணங்கினர், அங்ஙனம் வணங்கும்போது, அப்பாதகன் கவளிக்குள் இருந்த உடைவாளையெடுத்து, தான் முன்எண்ணிவந்த எண்ணப்படியே செய்தனன். (அரசனார் அவன்செய்கையையும், அச்செய்கையான் அவன் தன் பகைஞன் என்பதையும் உணர்ந்தவராய், அவனது வஞ்சச்செயலையும் அவனையும் பொருளாகக்கருதாது,) அவன்கொண்ட மெய்த்தவவேடத்தையே மெய்ப்பொருளெனத் தெளிந்து அவ்வேடத்தைத் தொழுது அவனைவென்றனர் என்பதாம்.

அவர் வணங்கும்போதில், கைத்தலத்திருந்த வஞ்சக்கவளிகை மடிமேல் வைத்து, புத்தகம் அவிழ்பபான் போன்று புரிந்து, பத்திரம்வாங்கி எனக்கொண்டுகூட்டுக.

உபதேசம்பெறுவதில் அவரது தீவிர முடைமைதோன்ற வணங்கினரென்றும், வணங்கி யெழுந்திருப்பாராயின் தனதெண்ணம் முற்றுப்பெறுதல் அரிதென்றெண்ணித் தீவிரமுற்று அதற்குரியசெயலைத் தொடங்கினன் என்பதுதோன்ற வஞ்சக்கவளிகை மடிமேல்வைத்து, புத்தகம் அவிழ்ப்பான்போன் றுபுரிந்து, பத்திரம்வாங்கி என்றும், கவளிகையினின்றும் வாளை வாங்கியதுபோல் அவர்உயிரையும் தான்முன் எண்ணியதுபோல் வாங்கத் துணிந்தனன என்பதுதோன்ற தான்முன் நினைந்த அப்பரிசேசெய்ய என்றும், அப்பாதகன் தான் முன்நினைத்தபடி செய்ததுபோலும், அந்நாயனாரும் அவனதுவேடத்தை மெய்ப்பொருளெனத்தான்முன் எண்ணியதுபோலும் வணங்கினரென்பது தோன்ற மெய்த்தவவேடமே மெய்ப்பொருளெனத் தொழுது என்றும், பொய்த்தவன் மெய்த்தவ வேடத்தைக்கொள்ளாது தம்முன்வந்து தம்மிடத்து அவன் செய்யவெண்ணியதைச் செய்திருப்பானாயின் வெற்றி அவனுடையதே, அங்ஙனமின்றி அரசனார் மெய்ப்பொருளாகக் கொண்டிருக்கும் மெய்த்தவ வேடங்கொண்டுவந்து அவனெண்ணியதைச் செய்தனனாகலின் அச்செயலால் வந்த வெற்றி மெய்த்தவவேடத்தே என்பதுதோன்ற வென்றா என்றுங்கூறினார். (௪௮)

மறைத்தவன் புகுந்த போதே மனம்அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி வாளினல் எறிய லுற்றன்
நிறைத்தசெங் குருதி சோர வீழ்கின்றர் நீண்ட கையால்
தரைப்படும் அளவில் தத்தா நமரெனத் தடுத்து வீழ்ந்தார்.

(எ - நு.) மெய்த்தவத்தால் பொய்த்தவத்தை மறைத்துவந்த முத்தநாதன் அரசனர் படுக்கையறையில் புகுந்தபோதே, தனதுமனத்தை அவ்வுள்ளிடத்தில் வைத்த தத்தன் என்னும் மெய்க்காவற்காரன் (அவ்வஞ்சகன்செய்த அச்செய்தியைக்கண்ட அக்கணமே (துணுக்கென) உள்ளேசென்று தனது வாட்படையால் அவ் வஞ்சகனை வெட்டத் தொடங்கினன். (அப்பொழுது) பொங்கிவருகின்ற உதிரவெள்ளமானது சரீர முற்றும் பரந்து வழிய நிலத்தில்வீழ்கின்ற நாயனர், அங்ஙனம் வீழ்கின்ற அந்தச்சமயத்தில தமது நீண்டகையினல் தத்தா! அவரை நீ வெட்டவேண்டாம், நமது சுற்றத்தாராகிய அடியவர் என்று தடுத்துப் பூமியில் வீழ்ந்தனர் என்பதாம்.

நிறைத்த செங்குருதிசோர வீழ்கின்றர் தரைப்படும் அளவில் நீண்டகையால் தத்தா நமன் தமர் எனத்தடுத்து வீழ்ந்தார் எனக் கொண்டு கூட்டுக.

தனது தீய எண்ணத்தைத் திருவேடத்தால் மறைத்துவந்தனன் என்பார் - மறைத்தவன் என்றர். தத்தன் மெய்க்காவற்காரனுகலின் அத்தீயோன் கொண்ட வேடத்தின் மெய்ம்மையினையும், அவன் யாதுசெய்ய இச்சமயம் வந்து உள்ளே புகுந்தான் என்று அதன் மெய்ம்மையினையும்,பள்ளியறையில் அவனது மெய்வேடத்தைக்கண்டு நமதரசன் செய்யப்போகும் செயல் யாதென்று அச்செயலின் மெய்ம்மையினையும், காணத் தன் மனத்தை வேறு செயலின்கண் போகவிடாது, பொய்யனிடத்தும், அரசர்பெருமானகிய மெய்யரிடத்தும், இருவரிடத்தும் நிகழப்போவதாகிய செய்கையினிடத்தும் நிலைபெறவைத்தனன் என்பார் - மனம் அங்குவைத்த தத்தன் என்றர். இருவர் மெய்ச்செய்தியும் அங்குவைத்த மனத்தால் அறிந்து தான் செய்யவேண்டிய மெய்ச்செய்தியை அக்கணமே செய்யத் துணிந்தனன் என்பார் - இறைப்பொழுதின்கண் கூடி வாளினல் எறியலுற்றன் என்றர் மெய்வேடங்கொண்டவனது மெய்ச்செய்கையினையும், மெய்க்காவற்காரனது மெய்ச்செய்கையினையும், கண்டறிந்த அரசர்பெருமான் மெய்வேடத்தில் தாம் வைத்திருக்கும் மெய்ம்மைச் செயலையும், மெய்ம்மையாகச் செய்தனன் என்பார் தருதிசோர வீழ்கின்றர் தரைப்படும் அளவில், (தமது) நீண்ட கையால் தத்தா (இவர், நமரெனத் தடுத்து வீழ்ந்தார் என்றர். (கக)

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனுந் தத்தன் றனும் தலையினல வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கேன் என்ன எம்பிரான் அடியார போக
மீதிடை விலக்கா வண்ணம கொண்டுபோய் விடுநீ என்றர்.

(எ - நு.) (அப்பாதகனல்) வேதனைப்பட்டு பூமியில் வீழ்ந்த அரசர்பெருமானல் தடுக்கப்பட்டுநின்ற சேவகனகிய தத்தனும் (தனது செயலைத்தடுத்த அரசரது எண்ணத்தையறியப்பெற்று அவரைத்) தலையினல் வணங்கி, பின்னர் நாயனரது சிரத்தைத் தனது கரத்தால் தாங்கி, இனி யான் செய்யவேண்டிய பணி யாது அதனைக் கட்டளையிடவேண்டும் என்று கேட்க. மெய்ப்பொருளார், எமது பெருமானடியாராகிய இவர் இனி வெளியே போவாரல்லவா! அவர் போகும்போது நீயும் அவருடன்போய் இடை இடையே அங்கங்குள்ள காவலாளிகள் இவரைத் தடைபடுத்தும் தடைகளையெல்லாம் விலக்கி இவர் போகுமிடத்திற் கொண்டுபோய் நீவிடுவாயாக என்று கூறினர் என்பதாம்.

வஞ்சனைசெய்த வஞ்சச்செயலால் மெய்வருத்தமுற்றனர் என்பது தோன்ற வேதனை எய்திவீழ்ந்த வேந்தர் என்றார். உடம்பாகிய மெய்யிற்குத் துன்பம் வரக் கண்டதுபோல், தாம் கொண்டிருக்கும் மெய்ப்பொருளுக்குத் துன்பம் வரக் காணுமல் இன்பம் வரக்கண்டமையால் இன்பம் வரச்செய்தவனைத் துன்பமுறச் செய்தல் மெய்ப்பொருள் கொண்டார்க்கு முறையன்றென்பது தோன்ற - வேந்தரால் விலக்கப்பட்ட என்றார். சொன்னதைச்சொல்லும் கிளிப்பிள்ளைபோலும், செய்யென்றதைச் செய்யும் நெறியுடையான் தத்தன் என்பது தோன்ற தாதனுந் தத்தன் என்றார். தனது அரசர்பெருமானுர் மெய்யில் வேதனை யெய்திப் பூமியில் வீழுந்தருணத்திலும், தாம் கொண்ட மெய்ப்பொருளை வீழ்த்தாது தன்னைத் தடுத்த பேராற்றலை எண்ணி அஞ்சினுனென்பது தோன்ற - தலையினுல் வணங்கி என்றார். மெய்பொருளை வீழ்த்தாது தாங்கிய தனது அரசன் மெய்யைத்தாங்குதலே நாம் பெறும் பேறும், நாம் செய்யத்தகும் சேவகமும் ஆம் என்பது தோன்ற - தாங்கி என்றார். தேவரீர் திருவுள்ளக்குறிப்புணராது மெய்வேடங்கொண்டாரைத் தீங்குசெய்யத் துணிந்தேனுகலான் அப்பிழை நீங்குமாறு யான்செய்யத்தகும் பணியாதோ என்றுவினவினன் என்பதுதோன்ற - யாதுநான் செயகேன் என்ன என்றார். அம் மெய்வேடத்தார் இங்கு வந்தபோது அடியராகக்கண்டது போலவே, அவரெண்ணியதை என்பால் செய்து முடித்தபின்னரும் அடியவராகவே காண்கின்றேன். ஏனெனில், இம் மெய்வேடத்தார் இங்கு எழுந்தருளியபோது நான் இவரை யாதுவேண்டி என்பால்வந்தது என்று கேளாமல் இங்குவந்தது என் என்று கேட்டனனன்றே, அச்சொல் ஏன் இங்குவந்தீர் என்னும் பொருளைத் தருகின்றதன்றே, அப்பொருளைத் தரும் கடுஞ்சொல்லைச் சொன்ன எனது குற்றத்தைக்கண்டு இயமனுல் செய்யப்படும் தண்டனைக்கு என்னை ஆட்படுத்தாமல் அவரிடத்துள்ள பெருங்கருணையினுல் என்னை வாளினுல் வெட்டி எனது குற்றத்தை இப்பொழுதே போக்கினராகலின் இப்பொழுதும் எம்மிறைவன் அடியவர் இவர் என்பதில் ஐயுறவேயில்லை. நான் அடியர்பால் சொல்லவேண்டிய இன்சொல்முறை யறியாதிருந்த எனது குற்றத்தைப் போக்கவந்த இவரது செயல் முற்றுப்பெற்றபடியினுல், இனி இவர் போகும் குறிப்புடையவராகக் காண்கின்றேன். யான் அவர்பின்சென்று வழிவிடும் பணிக்கு உரிமையாகா தொழிந்தேனுகலின் அப்பணியை நீ தவராமற் செய்வாயாக என்பது தோன்ற அடியார் போகக் கொண்டுபோய் விடு நீ என்று என்றார். யான் சொல்லியபடி நீ கொண்டுபோய்விடும் பணியில் என்போல் நீ குற்றத்தை விளைவித்துக்கொள்ளாமல் நீ செய்யுந் தொழிலாகிய காவற்றொழிலை, இவர்பால் சிறிதுந் தவராமற் செய்வாயாக என்பது தோன்ற மீது இடைவிலக்காவண்ணம் என்றார். எனவே எனக்கு நன்மைசெய்த இவரைத் தீங்குசெய்தவராக எண்ணி இவரைத் தீங்குசெய்யக் காவலாளிகள் உன்னை விலக்கவருவராயின் அவர்களைத் தடுத்துச் செல்வாயென்பது தோன்ற மீதிடை விலக்காவண்ணம் என்றார். (கஎ)

### தத்தன் பொய்த்தவனைக் கொண்டுபோதல்.

அத்திறம் அறிந்தார் எல்லாம் அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் தன்னைக் கொல்வோம் எனப்புடை சூழ்ந்த போது
தத்தனும் அவரைஎல்லாம் தடுத்துடன் கொண்டு போவான்
இத்தவன் போகப் பெற்ற திறைவன தாணை என்றான்.

(எ - து.) (நாயனுர்செய்தி யிங்ஙனமிருக்க,) முத்தநாதன்செய்த வஞ்சகத் திறத்தையெல்லாம் யாவரும் அறிந்தவர்களாய் அவரெல்லாம், நமது அரசனை இவ்வகைத்தான தீங்குசெய்த பொய்த்தவனைக் கொல்வோமென்று நெருங்கிச் சூழ்ந்தனர். சூழ்ந்தபோது அவர்களையெல்லாம் தத்தனுனவன் தடுத்துத் தன்னுடன் கொண்டுபோவானுயினுன். (அங்ஙனங் கொண்டுபோகும்போது, தடுத்தவரையெல்லாம் பார்த்து) இப்பொய்த்தவனுகிய இவன் யாதொரு துன்பத்துக்கு இடனில்லாமல் போகப்பெற்றது நமது அரசனுடைய ஆணையாகும் என்று கூறினுன் என்பதாம்.

தத்தன் அரசன் ஆணையை மேற்கொண்டு முத்தனாதனை அழைத்துவர, அம் முத்தனாதன் எப்பொழுதுவருவான் வருவானென்று எதிர்பார்த்திருந்தவரெல்லாம் அரசனாணையை அறியாது அவனைச் சூழ்வதற்குவர, அவர்கள் வந்தகுறிப்பை தத்தன் அறிந்து அவர்களைப்பார்த்து, இத்தவன் பொய்த்தவனன்று நமது அரசனுடைய தவத் தை அவமாக்காது மெய்த்தவமாக்கிய மெய்த்தவன். ஆகலின் முன்னர் இவனை நீங்கள் உள்ளேபோவதற்கு வழிவிட்டதுபோலும், இப்பொழுது நமது அரசன் ஆணைப்படி அவனுடன் நான்போக வழிவிடுவீர்களென்று அரசனாணையை யாவர்க்கும் உணர்த்தித் தனக்கிட்ட ஆணையை எவ்விதத்துங் காத்துச்சென்றனன் என்பார் (தத்தனும் அவரை யெல்லாம் தடுத்துடன் கொண்டுபோவான்) என்றார். (கஅ)

## தத்தன் பொய்த்தவனை விட்டேருதல்.

அவ்வழி யவர்கள் எல்லாம் அஞ்சியே அகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன் திருநகர் கடந்து போந்து
கைவ்வடி நெடுவாள் ஏந்தி ஆளுறாக் கானம சேர
வெவ்வினைக் கொடியோன் தன்னை விட்டவன் மீண்டு போந்தான்.

(இ - ள்.) தத்தன்வார்த்தையைக்கேட்ட அவ்வளவில், சூழ்ந்தவரெல்லாம் அச்ச முடையவர்களாய் அங்கு நின்றும் தூரமாய் நீங்கிப்போயினர். தத்தன் அக்கை தவனை ராஜவீதியின்வழியே அழைத்துக்கொண்டுபோய் நகரத்தைக்கடந்துசென்று தனது கைவாளைக் கையிலேந்திக்கொண்டு ஒருவரும் அணுகாவண்ணம் கடுங்காவ லோடு ஆள்கள் சஞ்சாரமில்லாத காட்டுவழியாய்ப்போய் (அவ்விடத்தில்நின்று) கொடிய தீவினையாளனாகிய அப்பெரும்பாவியை அங்குவிட்டு (இனிஒருவரும் உன்னிடம்வர மாட்டார்கள் நீ போகலாமென்று) திரும்பி நகரைநோக்கி வந்தான் என்பதாம்.

அரசன், இப்பொய்த்தவனைக் கண்ட முற்காலத்தும், கொலைசெய்யக்கண்ட பிற் காலத்தும் மெய்த்தவனாகவே கண்டதுபோலும், அவ்வரசர்பெருமானது மெய்த்தவத் தைக் காக்கும் வல்லாளராகிய காவலாளிகள் முதலிய யாவரும் முன்வந்தபோது இவர் மெய்த்தவர் என்றுகண்டு அஞ்சி அகன்றதுபோலும், காவலுடன் பின்வந்த அப்போதும் கண்டு அஞ்சி அகன்றனர் என்பதுதோன்ற அவ்வழி அவர்களெல்லாம் அஞ்சியே யகலநீங்க என்றார். அரசர்பெருமான் கொண்ட மெய்ப்பொருள் நெறியே நகரத்துள் ளார் யாவருங் கொண்டனராகலின், இனி அரசரது ஆணைநெறியை மேற்கொண்டு நாம்செல்வதில் (நமக்கென்ன அச்சமிருக்கின்றது.) அஞ்சாதுசெல்வோமென்று தத்தன் துணிந்து இராஜவீதியின்வழியே சென்றனன் என்பதுதோன்ற - செவ்வியநெறியில் தத்தன் திருநகர் கடந்துபோந்து என்றார். அரசனுடன் செல்லுங்காலத்து எந்தமுறை யாய் வாளையேந்திக் கொண்டுசெல்வானோ அம்முறையாய்ப் பொய்த்தவ அரசனோடு தத் தன் வாளேந்திச் சென்றனன் என்பதுதோன்ற கைவடி நெடுவாளேந்தி என்றார். வீதி யெல்லாங்கடந்து நகரஎல்லையுங்கடந்து, அரசனது ஆட்கள் போதல்வருதலையற்ற ஆரணியத்தில் போய்ச்சேர்ந்தனன் என்பதுதோன்ற ஆளுறாக்கானஞ்சேர என்றார். அக்கானகத்தினும் கொடியோன் இவன், எனவே அது மரக்கானகம், இவன் வினைக் கானகம் என்பதுதோன்ற வெவ்வினைக் கொடியோன்தன்னை - என்றார். தீவினைக்காடா கிய இவனோடு, மரக்காடாகிய இந்நெறியின்கண்ணே விடாதுபோகும்படி அரசனாணை நமக்கில்லை, நமக்கிட்ட ஆணை இவன்போக "இடை விலக்காவண்ணம் கொண்டுபோய் விடு" என்பதே யாகலான், இவ்வினைக்காடனை இக்காட்டகத்தே விட்டு நாம் அரச னிடம் போகத்திரும்புவோம் என்று எண்ணினான் என்பதுதோன்ற - விட்டவன்மீண்டு போந்தான் - என்றார்:

* அவ்வழிஎன்றது ஈண்டுஅரசன் எண்ணிநடத்தியதுபோல என்னும்பொருட்டு.

அரசர்பெருமான், தீதிடை விலக்காவண்ணம் கொண்டுபோய் விட்டு நீ வருவாய் என்றது, விடுநீ என்றது என்னையோ வெனின், எதுபரியந்தம் தடுக்கவருகின்றார்களோ அதுபரியந்தம் நீ உடன்போவ தென்பதல்ல இம்மெய்த்தவர் எவ்விடத்தில் சென்றால் கவலையற்றுச் செல்வரோ அவ்விடங்காறும் போதல் உனதுகடமை என்பதொன்றே அவரெண்ணத்தில் முனைத்துநின்றதனால் வருவாயென்றதனைக் கூறுதொழிந்தனரென்க. இதனை தத்தன் உணர்ந்தவனாய், இவனுக்கு பயம்வருவதற்கில்லாத இடத்தைக்கண்டு அங்குவிட்டு மீண்டுபோந்தான் என்றார். (௧௯)

மற்றவன் கொண்டுபோன வஞ்சனை வேடத்தான்மேற்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறம் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பில் நின்றான்.

(எ - து.) (சேவகன் செய்தி யிங்ஙனமிருக்க) நாயனார், தத்தன் அழைத்துக் கொண்டுபோன வஞ்சனை வேடத்தவன்மேல் எதிர்த்தவர்களை விலக்கி, யாதொரு தீங்கும் யாவராலும் வராதமார்க்கத்தில் அவனைவிட்டதாகிய சொற்றிறத்தைக்கேட்க விரும்பிச்சோர்வடைகின்ற தமது உயிரைச் சோர்ந்துபோகாவண்ணம் தாங்கிக்கொண்டிருக்கின்ற அரசன்முன்னே, அரசன் குறிப்பின்வழியே சென்றுவந்து நின்றானாகிய தத்தன் சென்றான் என்பதாம்.

சோர்கின்ற ஆவிதாங்கும் கொற்றவன்முன்பு, (அக்) கோமகன்குறிப்பில் நின்றான் சென்றான் எனக் கூட்டுக.

நம்மைப்போர்திறத்தில் வெற்றிக்கொள்ளல் அரிது, மெய்த்தவவேடத்தால் வெற்றிகொள்ளல் எளிது என்னும் அவ்வுண்மையுணர்ந்து, மெய்த்தவ வேடங் கொள்வதற்கும், தடைகளெல்லாம் தடுத்தற்கும், ஒருவரும் வரக்கூடாத பள்ளியறையில் வருதற்கும் துணிந்த இவர், தமது எண்ணத்தையும் கேட்கத் துணிந்திருப்பாராயின் வெற்றியுடன் போகச் செய்திருப்போமே அந்தோ! அதனை வீணாக்கி வஞ்சகன், பொய்த்தவன், என்று யாவரும் சொல்லப்போயினரே, நாம் உடல் பொருள் ஆவிகளை வைத்திருப்பது திருவேடத்தாருக்குக் கொடுப்பதற்காகவன்றோ, வேடத்தால் மெல்லலாமென்னும் உண்மை யுணர்ந்ததுபோல், உடலையுங் கேட்டால் கொடுப்பான் என்னும் உண்மையை உணராதொழிந்தனரே என்று இத்திறமெல்லாம் எண்ணி எண்ணிய பின்னர் நம்முயிரைக் கொன்று தம்முயிர்வாழ எண்ணினரோ அதுவேனும் முற்றுப்பெறுமாயின் அவருக்கு நாம் வெற்றிகொடுத்தவராவோம். அது தத்தனால் தெரியவேண்டியிருத்தலால் அவன் வருகையை எதிர்பார்த்திருந்தனர் என்பார் மற்றவன் தீதிலாநெறியில் விட்ட சொற்றிறங் கேட்கவேண்டி ஆவிதாங்கும் கொற்றவன் - என்றார். வஞ்சகன் உயிர்வாழ வேண்டும் என்றுஎண்ணும் சமயம் தம் உயிர் சோரும் அத்தருணமென்பார் - சோர்கின்ற ஆவி - என்றார். அரசர்பெருமான் தனது வருகையை எண்ணியிருப்பாரென்னும் அவருள்ளக்குறிப்பை தத்தன், உணர்ந்து கொடியோன் தன்னை விட்ட அக்கணமே அரசன் முன் வந்துநின்றான் என்பார் - கோமகன் குறிப்பில் நின்றான் கொற்றவன் முன்பு சென்றான் - என்றார். (௨0)

## தத்தன்மீது அரசன் கருணைகூர்தல்.

சென்றடி வணங்கி நின்று செய்தவ வேடங் கொண்டு
வென்றவர்க் கிடையூ றின்றி விட்டனன் என்று கூற
இன்றெனக் கையன் செய்த தியார் செய்ய வல்லா ரென்று
நின்றவன் தன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார்.

(எ - து.) தத்தன் அரசன் சமீபத்திற்சென்று அடிபணிந்துநின்று, தவஞ் செய்தற்குரிய வேடத்தைக்கொண்டு தான் எண்ணிய காரியத்தைச் செய்து தேவரீரை வெற்றிகொண்டவனுக்கு வழியில் யாதொரு துன்பமுமின்றி அவன் போகுமிடத்தில் விட்டனன் என்று சொல்ல, (அரசன் அந்த வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்து) எனக்கு இன்று என்னிறைவன் செய்தது எவர் செய்ய வல்லராவர், என்று கூறித் தன்முன் நிற்கின்ற தத்தனைப்பார்த்து தம்முள் நிறைந்த பெருங்கருணையைச் செய்தனர் என்பதாம்.

அரசன்முன் சென்ற தத்தன் - சென்ற திருவேடத்தார் சோர்ந்து சென்றனரோ அன்று சென்றனரோ என்று சோர்வடைந்து அதனைக் கேட்பதற்கு எதிர்பார்த்திருந்தும் அவரது குறிப்புணர்ந்து அச்சோர்வு அவருக்கு நீங்குமாறு வஞ்சகனைத் தான் விட்டு வந்த செய்தியை மிக்க பணிவுடன் செவியில் இனிமையாய்ப் புகச்செய்தனன் என்பார்-சென்றடி வணங்கிநின்று அவர்க்கு இடையூறின்றி விட்டனன் - என்றார். நம்மால் யாதொரு இடையூறும் வாராவண்ணம் செய்ததனால் அவருக்கு மகிழ்ச்சி யுண்டானதேயன்றித் தவஞ்செய்யும் வேடத்தைக்கொண்டு அவஞ்செய்த அச் செயலை பஞ்சபாதகங்களுட் சிறந்த பாதகச்செயலென்றும் தோல்வியுள் மிக்க தோல்வியென்றும் கவலைப்பட்டுச் செல்வார்போல் செல்வதொழிந்து, வெற்றிவருதற்கான செயலை நல்ல யூகத்துடன் செய்தோமென்றும், அச்செயலால் நாம் நல்ல வெற்றியைப் பெற்றோமென்றும் இறுமாந்து வெற்றிபெற்ற எண்ணத்துடன் செல்கின்றனர் என்று அறிவித்தானென்பார் - செய்தவ வேடங்கொண்டு வென்றவர்க்கு - என்றார். அவன் மகிழ்ச்சியுடனும் வெற்றிகொண்ட எண்ணத்துடனும் போகவேண்டுமென்பதே தாம் திருவேடத்தை மெய்ப்பொருளாக எண்ணி வாழ்ந்ததற்குப் பயன் என்று எண்ணியிருந்தபடியே சென்றானென்று கேட்டபடியால் இச்செயல் நம்மையனன்றி யார்செய்ய வல்லார் என்று எண்ணினரென்பார் - இன்றெனக்கு ஐயன் செய்தது யார் செய்யவல்லார் - என்றார். இறைவன் கருணைத்திறத்தை எண்ணியபின்னர் நமது தாசனாகிய தத்தன் நம்முன் வந்தவுடன் நமது உடற்குறிப்பையும், நமது எண்ணக்குறிப்பையும் தானே யுணர்ந்து நமக்குச் சோர்வுநீக்கிக் களிப்பைக் கொடுத்தனனே இவன் தாசனு! அன்று அமைச்சனே யாவன் இவனுக்கு இப்பொழுது எதுசெய்தால் சன்மானமாகும் என்ற அடங்காக் கருணையைக் கொண்டன ரென்பார் - நின்றவன் தன்னைநோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார் - என்றார். (உக)

நாயனார் திருநீற்றன்பு பாதுகாக்க விதித்தல்.

அரசியல் ஆயத் தார்க்கும் அழிவுறுங் காத லார்க்கும்
விரவிய செய்கை தன்னை விளம்புவார் விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீ ரென்று
புரவலன் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தான்.

(எ - து.) அரசர்பெருமான் (தமது சொற்கடவாத தத்தன்மேற் பெருங்கருணையைக் காட்டியபின்னர்) தமது அரசியலை ஆளுதற்குரிய புத்திரர் முதலாயினவர்களுக்கும், தமது துன்பத்தைக் கண்டு நெஞ்சம் அழிகின்ற மந்திரி முதலானவர்களுக்கும், தமது உள்ளமெல்லாம் கலந்திருக்கின்ற செய்கையை விதிமுகமாகக் கூறுவாராயினர். (அஃதாவது) எவ்வுலகத்தினிடத்தும் பரவியிருக்கின்ற திருநீற்றின்கண் அன்புபாராட்டி பாதுகாத்து உய்வீர்களாக என்று கூறிப்பின்னர் பொன்னம்பலத்தின்கண் நடனஞ்செய்தருளும் வீரகண்டையணிந்த திருவடிகளைச் சிந்தனை செய்தனர்என்பதாம்.

செய்கைதன்னை விதியினால் விளம்புவார் எனக் கூட்டுக.

பொய்த்தவவேடத்தனால் அரசர்பெருமானது மெய்யிற்கு நேர்ந்த செயலெல்லாம் புத்திர மித்திர களத்திராதிகளெல்லாம் உணர்ந்து மெய்பதைத்து வருந்தி வந்து சூழ்ந்தனரென்பார் - ஆயத்தார் காதலார் - என்றார். தனக்கும், தன்னால் தேடப்படும்பொருட்

கும் உட்பட்டவர் புத்திர முதலிய சுற்றத்தினராதலால்-அவரை அரசியல் ஆயத்தார் என்றும், "கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் ஆகிய இவற்றை நன்குணர்ந்து, வன்கண்குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினைஎன்னும் இவைகளில் திறமுடையவராய் அரசியலைக் காப்பதில் ஆசையுடையவர் மந்திரிகளாதலால் அவரைக்காதலர் என்றும், தாம் நடத்திவந்த அரசியலில் நடத்தியது திருவேடமே மெய்ப்பொருள் என்று யாவரும் எண்ணி வழிபடுதலாகிய செயலையாகலான் அச்செயல் இனி என்றும் நடைபெற்றுவர அவர்களுக்கு விதிமுகமாய விதிக்கத் தலைப்பட்டனர் என்பார் - விரவிய செய்கைதன்னை விதியினாலே விளம்புவார் - என்றார் தாம் எண்ணியபடியே அவர்களை நோக்கி நீங்கள் எம்பால் நமது அரசாட்சியில் பரவிவந்ததாகிய திருநீற்றன்பினை எம்மைப்போல் பாதுகாத்து வரல்வேண்டும். அங்ஙனம் வருவீராயின் சிவனருள்பெற்று உய்வீர்கள். உங்கள் உடல்பொருள் ஆவிகளெல்லாம் திருநீற்றுடையார்க்கென்றே பாதுகாத்துவைத்து அவர்கள் எதனைக் கேட்கின்றாராகமோ அதனைக் கொடுத்துவாருங்கள் இதுவன்றி நாம் உய்ந்தும்பாம் வகை வேறில்லை இதுவே என்னால் விதிக்கப்பட்ட விதியாம் என்று ஆணையிட்டனர் என்பார் - பரவிய திருநீற்றன்பு பாதுகாத்துய்வீர் - என்றார். தமது அரசியலை அமைச்சர்வசமாக்கித் தாமைத் திருநீற்றின் வசமாக்கிய திருச்சிற்றம்பலத்தான் வசமாக்க அருளை நினைத்தனரென்பார் புரவலன் மன்றுளாடும் பூங்கழல் சிந்தைசெய்தான் என்றார்

"அரசியல்நெறியில் வந்த அறநெறிவழாமற்காத்து, உரைதிறம்பாதநீதி யோங்குநீர்மையினில்மிக்கார்" என்றதனால் வேதநெறியும், "மங்கையைப் பாகமாகவுடையவர் மன்னுங்கோயில், எங்கணும் பூசைநீடியேழிசைப் பாடலாடல், பொங்கியசிறப்பின் மல்கப்போற்றுதல் புரிந்துவாழ்வார்" என்றதனால் ஆகமநெறியையும் நடைபெற்றோங்கச்செய்து, திருவேடமே மெய்ப்பொருளென நிற்பதாகிய சித்தாந்தநெறியில் தாம்நின்றனர் என்றும், செல்வப்பெருக்கமுடையார் நோயின்றி உடம்புவளாவதற்கு எப்பொழுதும் பசுவின்பாலை உண்பதில் ஆசையிருத்தல்போல, திருவேடமே மெய்ப்பொருளென நிற்கும் இவர்க்கு அருளநிலையினின்றும் மாறாதுநிலைபெறுவிக்கவல்ல நெறிகளைச் சாதனநெறியாலன்றி விதிமுகமாக்கூறும் சித்தாந்தமாகிய ஆகமசாஸ்திரங்களில் நீங்காத ஆசையையுடையவராதலால், பொய்த்தவவேடங்கொண்டுவந்தவன் "உங்கள் நாயகனா உரைத்தஆகமநூல் ஒன்றுகொடுவந்தேன் என்றபோது, பேறெனக்கிதன்மேலுண்டோ" என்று, அந்நூலில் மிக்கஆசைகொண்டனரென்றும், அவ்வஞ்சகன் "மணமேல் எங்கும் இல்லாதது" என்றுகூறவே மெய்ப்பொருளார், எங்கும் இல்லாததாகிய அவ்வாகமநூற்பொருளை "சற்குருவின தன்வசனமாத்திரத்தால்" உணரவேண்டுமேயன்றி நம்முணர்வால் உணரத்தக்கனவாமோ; ஆகாயாகலான் இத்திருவேடத்தாரைப் போலும் யாவர்கிடைக்கப்போகின்றார்கள் இங்ஙனம் எளிமையாக நம்மைஆளவந்த இவரையே நல்லாசிரியராகக்கொண்டு அவ்வாகமத்திலுள்ள பொருளைமெய்ம்மையாகவுணரவேண்டுமென்னும் தீவிரதரங்கொண்டு தவவேடத்தானைத்தவிசின்மேல்" 'ஆசிரியகோலமாகவிருக்க "இருத்தித் தாமும் இருநிலத்திருந்துபோற்றி இனியருளசெய்யுமென்று" அரசனார் பிரார்த்திக்க அப்பாதன் இணங்கினவன்போல் படைக்கலக்கவளிகையைப் புத்தகக்கவளிகையை அவிழ்ப்பான்போல் மடிமேல்வைத்து அவிழ்க்கத் தொடங்கியபோதுதொழவேண்டியமுறைப்படி சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்தனரென்றும், அங்ஙனஞ்செய்யும்போது எவற்றினிடத்தும் மெய்ப்பொருளையே காணும் அவர்க்குப் பொய்யன்கொண்ட வேடம் மெய்ப்பொருளாய், அவரைத்தன்வசமாக்கிக்கொண்டதுபோல், அவன் உபதேசஞ்செய்யவந்தேன் என்றும், கையிலுள்ளது ஆகமம்என்றும் சொன்ன அவைகளும் தன்வசமாக்கிக்கொண்டு அவருக்குவெற்றியைத்தந்தன என்றும், அஃதாவது "ஞானவாளேந்தும்ஐயன்" என்ற திருவாசகப்படி ஆசிரியனால் உபதேசிக்கப்படும் ஞானோபதேசமொழிகளெல்லாம் ஞானவாளாய் மும்மலச்செருக்கைச் சேதிக்குந்தன்மை

டைத்தாகலான், அபபாதகன்-பத்திரபவாங்கித் தான்முன்னினைந்த அப்பரிசேசெய்ய-ப்பரிசால், பத்திரம் ஞானவாளாக அவ்வாளால் அவன்செய்த செய்கை ஆசிரியன் செயலாய்முடிந்து அவருக்கு வெற்றியைத்தந்தது என்றும், அவ்வெற்றியை யாவரும் றியச்செய்வார்போல் "நீண்டகையால் சயவெனத்தடுத்துவீழ்ந்தார்" என்றும், அங் னம் தடுக்கபட்ட தத்தன் "யாதுநான்செய்கேன்" என்றுகேட்டபோது, "எம்பிரான் டியார்போக மீதிடை விலக்காவண்ணம் கொண்டுபோயவிடுநீ" என்றும், அஃதேபோல் வன் யாவராலும்யாதொரு தீங்கின்றிப் போன செய்தியைக்கேட்கும் விருப்பமுடை வராய்ச்சோர்விலாதிருந்தனரென்றும், அங்ஙனம் இருக்கும்போது தன்னுணை கட பாது விட்டுவந்த தத்தன் தன்னிடத்துவந்து "செயதவவேடங்கொண்டு வென்றவற் டையூரின்றி விட்டனன் என்று கூற, இன்று எனக்கு ஐயன் செய்தது யாரசெய்ய ல்லார் என்று அடங்காமகிழ்ச்சியடைந்தார்" என்றும், அம்மகிழ்ச்சிக்குக காரணமாய் ன்ற "தத்தனைநோக்கிப் பெருங்கருணைகூர்ந்தார்" என்றும், அம்மட்டிலே விடாமல் ஆயத்தார்க்கும், காதலார்க்கும்" திருவேடமே மெய்ப்பொருளாகத் தாம் பாதுகாத்த ந்த உண்மையாகிய "செய்கைதன்னை, விதியினாலே விளம்புவார், பரவிய திருநீற் ன்பு பாதுகாத்துய்வீர்" என்றும் கூறினார்.

"கைத்தலத்திருந்த" என்பதுமுதல், 'ஆசியல் ஆபதத்தார்க்கும்" என்பது ஈறாகிய யெட்டுத் திருப்பாசுரத்தானும், மெய்த்தவவேடத்தன், "பத்திரம் வாங்கித் தான் முன்னினைந்த அப்பரிசே செய்ய, இவர் மெய்ப் பொருள்வேடமே மெய்ப்பொருளெனத் தொழுது வென்றார்" என்ற உண்மையைப் பிரகாசப்படுத்தியவாறும்.

எங்ஙனமெனின்,— பொய்த்தவன் மெய்த்தவ வேடங்கொள்ளாது புறககாவலையுங் டந்து, அகக்காவலாளாகிய தத்தனையுங் கடந்து, தன் வன்மையினால் பள்ளிக்குள் சென்று ஆகமத்தை உபதேசிக்க வந்தேனென்று சொல்லாமல் வாளினால் தானெண் ணியபடி அரசர்பெருமானைச் செய்து பின்னர் தத்தனைத் தன் சேவகனைக்கொண்டு, தன்னைத் தடுக்கவந்தாரையெல்லாந் தானே தன்னடிக்கீழ்படுத்தித் தனது வெற்றிக் கொடியை நாட்டிச்சென்றிருப்பானாயின், வெற்றிப்பயன் அப் பொய்த்தவனுடையதே ாம் அங்ஙனமின்றி நாயனார் மெய்ப்பொருளாகக் கொண்டிருக்கும் திருவேடமே வ்வாற்றானும் யாவும் செய்ததாகலின் அரசர்பெருமானே வெற்றியுடையவராயினார். வன்பால் நின்றது அரசர்பெருமான் என்செய்வாரோவென்ற பயம். நாயனார் ால் நின்றது அவனை எவ்விதத்துங் காத்தலாகிய அபயம் இதுகாறும் திருவேடத்தை மெய்ப்பொருளாகக் கொள்ளாதவனுக்குப் பயத்தைப் போக்கி அபயத்தைக்கொடுத்த றத்தை வலியுறுத்தி, இனி மெய்ப்பொருளைத் திருவேடத்திலே கண்டு அத் திரு வேடத்துக்குத் தனது மெய்யைக்கொடுத்தவர்க்கு இறைவன் தனது மெய்ப்பொரு ருவாகிய சங்கயவடிவத்தைக்காட்டி மெய்ம்மையானந்தத்தை விளைவிக்கும் மெய்ப் ண்த்திறத்தையருளி, தமது உபயபாதம் என்றுங் கும்பிட்டிருக்கச்செய்ததிறம் இற் றென இனி வருந்திருப்பாசுரத்தான் வலியுறுத்துகின்றார். (உஉ)

## கும்பிடும் முத்தியைக் கோடுத்தல்.

தொண்டனார்க் கிமயப் பாவை துணைவனார் அவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக்
கொண்டவர் இடை யறாமல் கும்பிடும் கொள்கை ஈந்தார்.

(எ - து.) தமது திருவடியை நினைந்த நாயனாருக்கு மலையரையன் மகளாருக்கு துணைவனாராகிய இறைவர் தம்மை நினைதத அன்றல்லாமல், என்றும் தம்மைக்கண்டவ ராகிய அவர் எதிரேநின்று, அவர் நினைத்தவடிவோடும் காட்சிகொடுத்து, மேன்மை

பொருந்திய தேவர்களுக்கு எட்டாத திருவடிநிழலைச் சேர்ந்து நீர்குடபட்டி ஆண்டு கொண்டு எப்பொழுதும் நீங்காமல் கும்பிட்டிருக்கும் கொள்கையைக் கொடுத்தனர் என்பதாம்.

நாயனார் மன்றுளாடியாரை நினைந்தமாத்திரத்தில் அச்சிற்றம்பலத்தார், தனது துணைவியோடும், இடபாரூடராய் அவரெதிரேவராது, அவர் நாடோறும் மெய்ப்பொருளாகக் கண்டுகளிக்கும் திருவேடமுடைய அடியவராகவே அவர்காண எதிரே வந்தனரென்பார் - "தொண்டனார்க்கு, அவர் முன்தம்மைக் கண்டவாறு எதிரேநின்று காட்சி தந்தருளி" என்றார். இதற்குமேல் இது இதற்குமேல்இது என்றெண்ணவரும் உலகங்களில் வசிக்கப்பட்ட மேலோர்களுக்கெல்லாம் எட்டாததாகிய திருவடிநீழலில் ஆட்பட்டிருக்க ஆளாக்கிக்கொண்டனரென்பார் -"அண்டவானவர்கட் கெட்டா அருட்கழல் நீழல்சேரக் கொண்டு"-என்றார். அங்ஙனங் கொண்டபின்னர் இறைபணியில் வழுவாது என்றும் நிற்றலாகிய அடிமைத்திறத்தைத் தந்தனர் என்பார் - "அவர் இடையறாமல் கும்பிடும்கொள்கை ஈந்தார் - என்றார்.

அநாதியெனப்பெற்ற அனுவை, அநாதியே ஆர்ந்த துயரகல அம்பிகையோடு எவ்விடத்தும், காத்தலாகிய கடனுடையவர் பரசிவனார். அவர் கடனாகக்கொண்ட காத்தற்றொழிலை எவ்வாறு செலுத்துகின்றா ரென்னில், ஆன்மாக்கள் இருவினையுட்பட்டுழலுங் காலத்து, அவர்களுக்கு அங்ஙனம் உழல்வதே பயனாக ஆகாது, அவ்வினையான் இன்பத்துன்பங்களை மாறிமாறிக்காட்டி அவற்றான் அலமறச்செய்து இவ்வின்பத்துன்பங்கள் மாறிமாறி வருவதற்குக் காரணம் வினையல்லவோ என்று கன்மத்தை வருந்திநினைக்கச் செய்வதுவே அங்ஙனம் காத்தலாகிய காத்தற்றொழில், அத்தொழிலால் வரும் பயன் - இருவினையொப்பு. அந்நினைவால் இன்பதுன்பங்கட்குக் காரணம் கன்மமென்று தோன்றியபின்னர் இன்பத்துன்பங்களை அனுபவிக்குங் காலந்தோறும் கன்மத்தையே நாடும்படிச்செய்வதுதான் அங்ஙனம் செய்யுங் காத்தற்றொழிலாகும். இச்சுகதுக்கங்கள் நான்என்னும் அகங்காரம் நம்மிடத்திலேதோன்ற அது எனதென்று சிலபொருள்களைப் பற்றச்செய்வதனாலன்றோ வென்று உதிக்கச்செய்வதுவே அங்ஙனங்காத்தலாகிய காத்தற்றொழில். அதனால்வரும் பயன் - மலபரிபாகம்.

இவ்விருபயனையும் சிவம் சத்தியென இரண்டுருவாய் நின்று உண்டாக்கிய பின்னர் ஆசிரிய வடிவங்கொண்டு வருவர். இவர்செய்யுங் காத்தற்றொழில் எவ்வாறெனின், கேட்டல் சிந்தித்தல் என்னும் இருவழியான மெய்ஞ்ஞானத்தினை யுணருமாறுசெய்து, அங்ஙனம் உணர்ந்தமுறையான் முனைப்பென்னெனறெழுந்து, பின் எனதெனப்பற்றுஞ் செயலொழிந்து * "உனை மெய்ம்மையாக விரித்துரைக்கில், கூறுநாவே முதலாகக் கூறும் கரணம் எல்லாம் நீ தேறும்வகை நீ திகைப்புநீ தீமைநன்மை முழுதும்நீ, வேறு ஓர்பரிசு இங்கு ஒன்றில்லை, (ஆகலின்) தேறும்வகையென் சிவலோகா திகைத்தால் தேற்றவேண்டாவோ" என்று திருவருட்செயலை நாடி வேண்டியிருக்கச் செய்வதுவேயாம். அஃதே அங்ஙனங் காத்தலாகிய காத்தற்றொழில். அதனால் வரும்பயன்-சத்திநிபாதம்.

அதுவந்தபின்னர், அருள்மேலிட்டு சங்கமவுருவங்கொண்டு வருவா. இவர்செய்யுங் காத்தற்றொழில் எவ்வாறெனின்,—"நாயிற்கடையாம் நாயேனை நயந்துநீயே ஆட்கொண்டாய், மாயப்பிறவி உன்வசமே வைத்திட்டிருக்கும் அதுவல்லால், ஆயக்கடவேன் நானேதான் என்னதோ இங்கு அதிகாரம், காயத்திடுவாய் நின்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே" என்றுதெளியச்செய்து அந்நிலைகெடாவாறு திருவேடங்கண் டிழியெல்லாம் மெய்ப்பொருளாகக் காணச்செய்வதாகிய நிட்டையில் நிலைபெறச்செய்வதுவேயாம். அஃதே அங்ஙனங் காத்தலாகிய காத்தற்றொழில். அதனால்வரும்பயன் பெறுவானும் பேறுங்கெடாது அநுபவிப்பதாகிய சிவப்பேறு. இந்நாயனார் இருவினை

* திருவாசகம் - குழைத்தபத்து - ௫.

அடக்கிக் கூறினேனென்பார் - சேதிராதனூர் பெருமைதன்னில் என்னுரைசெய்தேனாக—என்றார். அல்லதூஉம, என்னுடைய அவாமிகுதியினால் இன்னமும் சொல்ல வேண்டுமென்று எண்ணினேனாயினும், என்னுரை அஞ்சிநிற்கின்றபடியால் நானும் அவ்வளவில் நிறுத்தினேனென்றலுமாம்.

இனி இவர்க்கு அப்பால் உள்ளவராகிய நாயனாரது தொண்டைச் சொல்லத் தொடங்குவோமென்று எண்ணினாலோ அவர் விறன்மிண்டராயிற்றே என்று என்னெஞ்சம் மிகவும் நடுங்குகின்றது. என்னையென்னின்: -இதுவரையில் சொல்லிவந்தாரெல்லாம் இறைவனிடத்திலுள்ள அன்பை, அவ்விறைவன்பால் அன்புள்ள அடியார்பாற் செலுத்தினவர். இவ்விறன்மிண்டரோ, அடியார்பால் உள்ள அன்பை - அவ்வடியவரால் அன்புபாராட்டும் இறைவனைப் புறகென்றுசொல்லி அவரை முதலடியவராக் கிப்பின் அவ்விறைவன்பால் அன்பு செலுத்தினவர்.

அதுவேயுமன்றி, அடியவரிடத்து அன்பிலாரையுஞ் சுவசுதந்தரனாகிய இறைவன் ஆள்வானாயின் அவ்விறைவனைப் புறகென்றும், அவ்விறைவனுக்கு ஆட்பட்டவர் - நாம் இறைவனுக்கு ஆட்பட்டிருக்கும் பேரருளுடையோமாயினோமென்று அவ்வளவில் மகிழ்ந்து அன்பரன்பைப் பெறத் தீவிரமில்லாதிருப்பாராயின் அவரையும் புறகென்று கூறும்வன்மையில் மிக்கமிண்டர் என்று நெஞ்சம் அஞ்சுகின்றபடியினால் நான் அவரது உபயபாதங்களைத் தலைமேலிருத்திக் கொண்டு நான் சொல்லுவதில் உண்டாகும குற்றங்களைப் பொறுத்தருளல்வேண்டுமென்று பிரார்த்தித்து அப்பெரியோர் முன்வாதித்த தொண்டினைச் சொல்லத்தொடங்கினேன் என்பார் - இகல் விறன்மிண்டர் பொற்றாள் சென்னியில் வைத்து அவர்முன்செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன் என்றார்.

இத்திருப்பாசுரத்தான், தீக்குணமுடைய தீயோனும், தீத்தொழிற் கருவிகளும் தீச்செயலும், தம்மைத் தீமையேசெய்ய, அச்செயல் நற்செயலாய் அருட்கழல் நீழலில் வாழ்ந்திருக்க அவர்கண்ட மெய்ப்பொருள் செய்திருக்குமாயின் அப்பொருளின் திறம் எத்திறத்ததோ அதனை நான் அறியவல்லனோ, அதனால் அதனைக்கூறஅறியாது அவர் செய்தியை மாத்திரம் சொன்னேனாகலின் என்னுரைசெய்தேனென்றும், அஃதேபோல் இறைமைத்தன்மை முழுவதும், உடைய இறைவனையும் அருளாளும் தன்மைமுழுவதும் உடைய சுந்தரமூர்த்திகளையும் திருவேடமுடையார்க்கு அடியேனென்றும், அவ்வளவிற்போகாது, அடியார்க்கும் அடியேன் என்றும் சொல்லச்செய்த வெற்றிப்பாடு எப்பாடோ அப்பாடு யான் சொல்லப்புகும் பாட்டில் அடங்குமோ? அடங்கா; ஆகலான், அம்மிண்டருடைய செயலைமாத்திரங் கூறுகின்றேனென்றுங் கூறப்பட்டன.

விறல் என்றால் - பெருமை வலி வீரம் வெற்றி எனவும், மிண்டர் என்றால் - திண்ணியர் நெருங்குந் தன்மையுடையவர் கிளப்போர் கருவிபோன்றவர் எனவும் பொருள். அதற்கேற்ப - தமபிரான்தோழரெனப் பெருமைவாய்ந்த பெரியோரைப்புறகு என்றுதடுத்ததனால் பெருமையிலும், திரிபுரதகனத்தில் வைதிகத்தேரைக் காற்பெருவிரலால் ஊன்றி அச்சுமுறித்த வன்மையுடையாரைப் புறகென்றுகூறி அவர் இருந்த நிலையை விட்டுவந்து நிற்கச்செய்ததனால வலிமையிலும், மன்மதனை ஓர் கண்ணால் நோக்கி எரித்தவீரமுடையார் தன்முன் வருதற்கஞ்சி மறைந்துநிற்கச் செய்ததனால் வீரத்திலும், ஆரூர்நாயகரும் ஆரூரரும்சேர்ந்து வேறொன்றுஞ்செய்ய அறியாது "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்குமடியேன்" என்று அடிமைத்திறத்தை ஓதிக்கொண்டுவரச் செய்ததனால் வெற்றியிலும், முன் அடியவரையும் பின்சிவபிரானையும் பணியவேண்டும் என்னுந்தமது கொள்கை எங்குமுள்ள அடியருங்கைக்கொண்டு நடக்கவேண்டுமென்று நடக்கச்செய்ததனால் திண்ணியர், இதிலாத் திருத்தொண்டத்தொகைதர ஆரூரர் வந்தவராயிருந்தும் அதனைவோதியருள இவர்கிளப்புங் கருவியாகயிருக்கவர், இத்திருத்தொண்டுக்கே திருவாரூரை நெருங்கிவந்தவர். (உஎ)

மெய்ப்பொருள்நாயனார் புராணம் முற்றிற்று

௨

கமலாகாந்தாயநம:

# திருத்தொண்டத்தொகை.

"வெல்லுமா மிக வல்ல மெய்ப்பொருளுக் கடியேன்"

ஆன்மாக்களையெல்லாம் வெற்றிகொள்வதில் மிக்கவன்மையுடைய மும்மலங்களையும், திருவேடமேமெய்ப்பொருளாகக்கண்ட மெய்த்திறத்தால் மிக எளிமையாய் வெல்லும் ஆற்றில் (வகையில்) மிகுந்தவன்மையாளராகிய மெய்ப்பொருள் நாயனாருக்கு - (செல்வஞ்சுருங்கியகாலத்தும் வள்ளற்றிறந் தனருக அறிவின்றிறம் உண்டாக இளையான்குடிமாறநாயனாருக்கு ஆட்பட்டதுபோல் திருவேடத்தில் மெய்ப்பொருளைக் காணும் திறம் எனக்குண்டாகும்பொருட்டு அடியேனாகின்றேன் என்று கூறியவாறும்.

வெல்லுமா - என்றதனால் திருவேடத்தில் மெய்ப்பொருளைக் காணும் இவ்வொன்றல்லது, மற்றெதுவும் வெல்லுமா றன்று, மிகவல்ல என்றதனால் இவ்வொன்றுதான் மிக்கவன்மையுடையது என்றும், வெல்லுமா—ஆன்மாக்கள் மெய்ப்பொருளைத் திருவேடத்தில் காணவல்லாராயின் வெல்லுமா - மும்மலங்களையும் வெல்லும் வன்மையுடையவராவரெனப் பொருள்கொள்க.

இதனால், திருவேடத்தில் மெய்ப்பொருளைக் காணவல்லவரே, மும்மலங்களையும் மிகவன்மையாகக் கெடுக்கவல்லவராவரென்றி, அங்ஙனங் காணப்பெறாதார் கெடுக்கவல்லவராகாரென்று கூறப்பட்டதென்க.

திருவந்தாதி.

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் தன்னை அவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் தத்தா நமரோ எனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே.

முத்தநாதன் "மெய்ப்பொருள்வேந்தன் சீலமறிந்து வெண்ணீறுபூசும் அப்பெருவேடங்கொண்டு புத்தகக்கவளி யேந்திவந்து உங்கள்நாயகனார் முன்னமுரைத்த ஆகமநூல் மண்மேல் எங்குமில்லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப" என்றுகூறக் கற்றானாகலான் - "கற்ற"- என்றும், "மெய்யெலாம் நீறுபூசி வேணிகள் முடித்துக்கட்டிக் கையினிற்படைகரந்த புத்தகக்கவளியேந்தி மனத்தினுட் கறுப்புவைத்து பொய்த்தவவேடங் கொண்டான்" ஆகலான்-"நன்மெய்த்தவன்போல் ஒருபொய்த்தவன்" என்றும், "பன்முறையிழந்து தோற்றுப் பரிபவப்பட்ட சினத்தால் புத்தகம் அவிழ்ப்பான்போன்று புரிந்து அவர் வணங்கும்போதில் பத்திரமவாங்கித் தான்முன் னினைந்த அப்பரிசே செய்தான்" ஆகலான் - "காய்சினத்தால் தன்னைச் செற்றவன்" - என்றும, "மனம் அங்குவைத்த தத்தன் இமைப்பொழுதின்கண் கூடி வாளினால் எறியலுற்றான்" - ஆகலான் "அவனைச் செறப்புகலும் - என்றும், செங்குருதிசோர வீழ்கின்றார் நீண்ட கையால் தலைப்படுமெனவில் தத்தாநமர் எனத் தடுத்தார்" ஆகலான்— "திருவாய் மற்றவன் தத்தா நமரெனச் சொல்லி"—என்றும், "தொண்டனார்க்கு இமயப்பாவை நாயக

வனார் அவர்முன் தம்மைக்கண்டவாறு எதிரேநின்று காட்சிதந்தருளி வானவர்க்கெட்டா அருட்கழல்நீழல்சேரக் கொண்டவர் இடையறாமல் கும்பிடும் கொள்கை யீந்தார்'' ஆக லான் - "வானுலகம் பெற்றவன்" - என்றும், சேதிநன்னாட்டு நீடு திருக்கோவலூரின் மன்னி மாதொருபாகரன்பின் வழிவரு மலாடர்கோமான்'' ஆகலான் "சேதியன்" என்றும், திருவேடமே மெய்ப்பொருளெனப்பேசி அவ்வேடத்தில் மெய்ப்பொருளைக் கொள்ளாதார்போலன்றி மெய்த்தவவேடமே மெய்ப்பொருளெனத் தொழுதுவென்றா ராகலான் "மெய்ப்பொருளாமென்று பேசுவரே'' என்றும் அவரது திருநகரத்தையும் திருத்தொண்டையும் திருநாமத்தையும் விளக்கினார்

## புராணசாரம்.

சேதியர்நற் கோவலூர் மலாடமன்னர் திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்தசிந்தை, நீதியினா உடன்பொருது தோற்றமாற்றான் நெடுஞ்சினமும் கொடும்படையு நிகழாவண்ணம், மாதவன்போல் ஒருமுறைகொண் டணுகி வாளால் வன்மைபுரிந் திடமருண்டு வந்ததத்தன், காதலுற நமர்தத்தாவென்று நோக்கிக் கடிதகல்வித் திறைவனடி கைக்கொண்டாரே.

மெய்ப்பொருணாயனார், சேதிநாட்டில் திருக்கோவலூரில் உமாநாதரது பக்தி நிலையில் நிலைபெற்ற சந்ததியில் மலையாளர்களுக் கரசராயுள்ளவர். சிவனடியார் கருத் தறிந்து ஏவல்செய்வதே வேதநெறியென்றும், சிவாலயத்தில் விதிப்படி பூசிப்பதே ஆகமநெறியென்றும் உணர்ந்து அந்நெறிவழுவாது தன்னாளுகையுட்பட்டாரையும் நடக் கும்படிக்காத்த மேன்மையான அரசுபுரிந்து வந்ததேயன்றித் தானும் சடையான் அன் பர்வேடமே மெய்ப்ப (உண்மையான)பொருள் (பரம்பொருள்) என்றுசிந்தித்த அவர்கள் திருவடியேசார்பாகச் சார்ந்து சிறிதும் மயக்கமின்றித் தெளிந்திருக்கும் தன்மையில் மிக்கவர். அன்னவர்தம்மை வெல்லும் ஆசையால் ஓர்மன்னன் போரைமேற்கொண்டு யானை குதிரை காலாள் முதலான பன்முறையிழந்து தோற்றுப் பரிபவப்பட்டு (இகழ்ச்சி யடைந்து) பின்னர் அவரைப் பகைமேற்கொண்டு வெல்லமாட்டாமல், வேந்தன் சீலமறிந்து, வெண்ணீறுசாத்தும் அப்பெருவேடங்கொண்டு, அரசனார் தனித்திருக்கும் சமயமறிந்து, வெல்லும் செயற்கருந்நிலைமை எண்ணித் திருக்கோவலூரிற் சேர்ந்து, மெய்யெலாநீறுபூசி வேணிகள் முடித்துக்கட்டி, கையினிற் படைகரந்த புத்தகக்கவளி யேந்தி, பொய்த்தவ வேடங்கொண்டு அரசனது அரண்மனையடைந்து கடையுடைக் காவலாளர் கைதொழுது ஏற நின்று உடையவர் தாமேவந்தார் உள்ளெழுந்தருளும் என்னத் தடைபல புக்கபின்பு தனித்தடைநின்ற தத்தனையுங் கடந்து பள்ளியறையிற் புகுந்து, அரசனார் நித்திரைசெய்திருக்கக்கண்டு தடைபடாது தானெண்ணிய எண்ணத் தைச் செய்துமுடிக்கத் தொடங்கும்போது, அரசனார் தேவியார், கதுமெனஎழுந்து மன்னனை எழுப்பிட, மன்னனார் எழுந்து பொய்த்தவனைக்கண்டு, அண்டர்நாயகனார் தொண்டராம் எனச் செங்கை குவித்துக்கொண் டெழுந்து எதிர்சென்று வணங்கி நின்று, என் வாழ்வுவந்து அணைந்ததென்றுபோற்றி, 'இங்கு எழுந்தருளப்பெற்றது என்கொலோ?'' என்றுவினவ அவன் 'உங்கள் நாயகனார் முன்னம் உரைத்த ஆகம நூல் ஒன்றுகொண்டுவந்தேன்; அது மண்மேல் எங்கும் இலாதது' என்றுசொல்ல, அச் சொல்லைக்கேட்ட அரசனார் 'பேறு எனக்கு இதன்மேலுண்டோ? எம்பிரான் அருள் செய்த இந்த ஆகமத்தை வாசித்து அருள்செய்யவேண்டும்' என்று கேட்க, அப்பொய்த் தவன் 'உன் மாதுதவிர நானும்நீயும் வேறிடத்திருக்கவேண்டும்' என்று கூறினான். வேந்தனார், தேவியார் தமமைநோக்கி அந்தப்புரத்திடைப் போக ஏவி, தருதவவேடத் தானைத் தவிசின்மேலிருத்தித் தாமும், நிலத்திருந்து போற்றி, 'இனிஅருள்செய்யும்' என்று கேட்டனர். அந்தப்பொய்த்தவன், கைத்தலத்திருந்த வஞ்சக்கவளிகை மடிமேல்

வைத்து, புத்தகம் அவிழ்ப்பான்போன்று அவிழ்க்க, அதுகண்டு அரசனார் வணங்கும் போது, அவன் கவளியினின்றும் வாளையெடுத்துத் தன் உள்ளத்துள் கோபத்தை நிறைத்து வாளால் வன்மையேபுரிய மெய்த்தவவேடமே மெய்ப்பொருளெனத்தொழுது வென்றவர்.

அதுகண்ட தனிக்காவலாளியாகிய தத்தன் மருண்டு வாளினால் பொய்த்தவனைக் கொல்லவர, பொய்த்தவன்மேல் ஆசையுடையவராயத் தத்தாநமர் என்று தடுத்தவர். அவ்வாறு தடுக்கப்பட்ட தத்தனை யாதுநான்செய்யவேண்டுமென்ன இவ்வடியாரை யாரும் விலக்காவண்ணம் கொண்டுபோய்விட்டு வாவென்று ஆக்ஞாபித்தவர். அவன் அவ்வாறே கொண்டுபோய்விட்டு வருதலாகிய செய்தியைக் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவிதாங்கும் கொற்றவர். இடையூறின்றிவிட்டனன் என்றுகூற, இன்று எனக்கு ஐயன்செய்தது யார்செய்ய வல்லாரென்று நின்ற தத்தனைநோக்கி நிறைபெருங்கருணைகூர்ந்தவர். ஆயத்தார்க்கும் காதலார்க்கும் விதியினாலே * மாயமாமேனிமேவாமே, நீற்றுக்கவசம் அடையப் புகுமின்கள், நாம் வானவூர் கொள்வோம்'' ஆகலின் நீங்கள் திருநீற்றன்பு பாதுகாத்து உய்ப்பீரென்று விளம்பினவர். இமயப்பாவை துணைவனாரைச் சங்கமராக முன் கண்டவாறு கலங்காமல் காட்சிதந்தருளப்பெற்றவர். யாவருக்கும் எட்டாத அருட்கழ லீழல் சேர்ந்து அவ்வடியை எப்போதும் கும்பிடுங் கொள்கையைக் கைக்கொண்டவர் என்பதாம்.

இதனால்இந்திரனும் இராமபிரானும் பிறரும் தத்தம் மனைவியாரைக் காணுதபோது அவர்கள்பூண்டிருந்த ஆபரணவிசேடங்களைக் காணவருங்காலத்தில் அவர்களைக் காணப் பெற்றதுபோலும் ஆசையும் அன்பும் உடையவராய அவசமுற்றதன்மை கேட்டிருத்தல் போல் † "சேலுங்கயலுந் திளைக்குங்கண்ணார் இளங்கொள்கையிற் செங்கும்போலும் பொடியணிமார்பிலங்குமென்று புண்ணியர்நெஞ்சு பொற்றிகைசப்ப" என்றபடி, மெய்ப்பொருள் கண்ட புண்ணியர் அம்மெய்ப்பொருட்குரிய அடையாளங்கள் காணவருமாயின் மெய்ப்பொருளைக் கண்டகாலத்துத் தோன்றும் ஆசையும் அன்பும்தோன்றித் தன்வசமொழிந்து அதன்வசமாகவே யிருப்பர். அஃதேபோல் மெய்ப்பொருளார் மெய்ப்பொருளுக்குரிய அடையாளங்களைக் கண்டகாலத்தே ஆசையும் அன்பும உடையராகின்றாராகலின் மெய்ப்பொருளைக் கண்டவரேயாவர் மனைவியைக் கண்டு களிக்கப்பெறுதவர் ஆபரணத்தைக் கண்டகாலத்துக் களிக்கப்பெறுர். அஃதேபோல்,— மெய்ப்பொருளைக் காணப்பெறுதவர். அதற்குரிய அடையாளங்களை கண்டகாலத்துக் களிக்கப்பெறுர் என்று கூறியதாகும்.

இம் மெய்ப்பொருளுண்மையும் திருவேடத்தின்சிறப்பும் உணர்ந்து அவ்வழியில் தம்முடல்முதலியவற்றை நிறுத்தப் பெறுத பலர் திருவேடத்தையே மெய்ப்பொருளாகக் காணும் சாதனநெறியில்நின்றவர் இந்நாயனார் என்று மனத்தாலுங் கூசாது எண்ணி வாக்காலும் தாம்மெய்ப்பொருளைக் கண்டதிறத்தைக் கூறுவர். அந்தோ! இது பாவம் பாவம்!! இதுபோலும் வேறின்றெனக. ஆகவேமெய்ப்பொருள் உணரவேண்டுவோரெல்லாம் அங்ஙனம் எண்ணுமலும் நினையாமலும் உய்வார்களாக

மெய்ப்பொருள்நாயனார் புராணசாரம் முற்றிற்று.

* திருவாசகம் திருப்படையெழுச்சி - க. † திருப்பல்லாண்டு - உ.

—

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ ரசாகப்ரியாயைநம:

# விறன்மிண்ட நாயனார் புராணம்.

## நாட்டுச்சிறப்பு.

விரைசெய் நறுமலர்த் தொடையிதழி வேணி யார்தம் கழல்பரவிப்
பரசு பெறுமா தவமுனிவன் பரசி ராமன் பெறுநாடு
திரைசெய் கடலின் பெருவளமுந் திருந்து நிலனின் செழுவளனும்
வரையின் வளனும் உடன்பெருகி மல்கு நாடு மலைநாடு.

(இ - ள்.) நறுமணங்கமழும் நல்ல கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியினையுடைய இறைவனது திருவடியைப் போற்றிப் பரசாயுதத்தைப்பெற்ற தவச்சிரேஷ்டராகிய பரசிராமமுனிவர் வருணனிடத்தில் பெற்ற நாடாகியும், அலைவீசுகின்ற கடலின்கண் உண்டாகும் முத்துபவளமுதலிய வளங்களும், திருத்தமாகிய நிலத்தின்கண் விளையும் செந்நெல்முதலிய வளங்களும், மலையின்கண் விளையும் சந்தனம் அகில் யானைக்கோடு முதலிய வளங்களும் ஒன்றுசேர்ந்து நிறைந்திருக்கும் நாடாகியும் உள்ளது மலைநாடென்பதாம்.

இறைவன் சூடியிருக்கும் கொன்றைமலர்மாலை ஏனைய மலர்கள்போலாது எப்பொழுதும் பிரணவமென்னும் மந்திரமணத்தைச் செய்துகொண்டிருக்கும் சிறப்பியுடைத்தென்பார் - "விரைசெய நறும்பூந்தொடையிதழி" எனவும், "எனக்கு நீ யடிமையெய்திக் கழிபெருமகிழ்ச்சிகூர்வாய் உனக்கு நான் களைகணாவேன் மொழிவதுசாதம்" என்று "சீரியல் கோக்கொலைசெய்புலையன்" போல்வந்த இறைவனால கூறப்பட்டிருக்கும் தவத்தன் பரசிராமன் என்பார் - வேணியார்தங்கழல் பரவிப பரசுபெறுமாதவமுனிவன்பரசிராமன்-எனவும், அந்நாடு மலைநாடாகலின் அந்நாட்டுக்குரிய மலைவளத்தை மாத்திரம் உடைத்தாயிருப்பதன்றி கடலிற் படுபொருளையும், நிலத்திற் படுபொருளையும் உடைத்தாய்ச் சிறந்திருக்கும் சிறப்புடைத்தென்பார் - "மலைநாடு வரையின்வளனும் கடலின்பெருவளனும், நிலனின்வளனும் உடன்பெருகி மல்குநாடு" எனவுங்கூறினார்.

கடல்வளம் - முத்து, பவளம் முதலியன. நிலத்தின்வளம் - செந்நெல், பயறு முதலியன. மலைவளம் - சந்தனக்கட்டை, யானைக்கொம்பு முதலியன.

இத்திருப்பாசுரத்தால், அடியார்க் கடியரல்லாதாரைத் துடைக்கவந்தவரானாடு - க்ஷத்திரியகுலத்தைத் துடைக்கவந்த பரசிராமனால் உண்டாக்கப்பட்ட நாடென்பதும், அந்நாடு மலைநாடென்பதும், அந்நாட்டில் அதன்வளம் காணப்படுவதன்றி வேறு லங்களின் பொருள்வளங்களும் காணப்பட்டுள்ளது என்பதும் கூறப்பட்டன. (க)

## ஊர்ச்சிறப்பு.

வாரிசொரியும் கதிர்முத்தும் வயன்மென் கரும்பின் படுமுத்தும்
வேரல் விளையும் குளிர்முத்தும் வேழ மருப்பில் ஒளிர்முத்தும்
மூரல் எனச்சொல் வெண்முத்த நகையார் தெரிந்து முறைகோக்குஞ்
சேரர் திருநாட் டூர்களின்முன் சிறந்த மூதூர் செங்குன்றூர்.

காஞ்சிப்புராணம் பரசிராமீச்சரப்படலம். செ - ௩௦

(எ - து.) கடலால் கரையில் ஒதுக்கப்படும் ஒளிவீசுகின்ற முத்தங்களும், கரும்பி னின்று சிதறும் முத்தங்களும், மூங்கில்களில் விளைந்து உதிருகின்ற குளிர்ந்தமுத்தங் களும், யானைக் கொம்பினின்றும் வீழ்கின்ற பிரகாசமுடைய முத்தங்களும், ஆகிய முத்தங்களைப் பற்களெனப்படும் முத்தங்களையுடைய பெண்கள் வேறுவேறு எடுத்து முறையாகக் கோர்க்கும் சிறப்பினைவாய்ந்த சேரருடைய திருநாடுகளிலுள்ள ஊர்களில் செங்குன்றூர் என்னும் பெயரிய ஊரானது மிகவுஞ் சிறந்து விளங்கும் ஊர் என்பதாம்.

சேரர்திருநாட்டு ஊர்களின் முன்சிறந்த செங்குன்றூர் மூதூர் எனக்கூட்டுக.

கடல்படுபொருளும், நிலப்படுபொருளும் மலைநாடு உடைத்தென்று முற்செய்யு ளிற்கூறியவற்றுள் மிகுதியாகவுடைய வளம் முத்துவளமென்பார்—வாரிசொரியும் கதிர் முத்தும், கரும்பின்படுமுத்தும், வேரல்விளையும் குளிர்முத்தும், வேழமருப்பின் ஒளிர் முத்தும்—என்றார். இம்முத்தங்களின் பிறப்புணர்ந்து அவ்வவற்றிற்குரிய விலைகளையும் அறுதியிட்டு மாலையாகக் கோர்த்து விலைபகர்வோர் அந்நாட்டு மங்கையரென்பார்— தெரிந்து முறைகோக்கும வெண்முத்தநகையார்—என்றார். மங்கையர் முத்துக்க ளுடைய விலைபகர்வதற்குக்காரணம் இதுவென்பார்—மூரலெனச் சொல் வெண்முத்த நகையார்—என்றார். எனவே, அந்நாட்டு மங்கையர் தங்களுடைய பற்களுக்கு ஒப்பாக முத்தங்களைச் சொல்லுகின்றபடியால் அவைகளைப பார்பபோமென்று முத்துவகைகளை யெல்லாம் வருவிப்பா ரென்பதும், வருவித்து அவைகள் தங்கள் தந்தங்களுக்கு ஒப்பாகா மையைக் கண்டு இவ்வேற்றுமையை முத்தினை ஒபபன நம்முடையபற்கள் என்றுகூறு வார்சுகுக காட்டுவோமென்று அம்முத்தங்களை வெவ்வேறாகக் கோவைபடக்கோர்த்து விலைகூறுவார்போன்று தங்களுடைய பற்களின் ஒளியைக் காணுமாறுசெய்து இனி இம்முத்தங்களுக்கு எங்களுடைய தந்தங்களைக் கண்டு வெணமுத்தநகையார் என்று கூறுமொழியை விடுமின்என்று அறிவுறுத்தவென்க.

இத்தகைத்தான வளமுடைய மலைநாடு சோர்மரபினராகிய அரசரால் காக்கப்பட்ட தென்பார்—சேரர் திருநாடு—என்றார். அந்நாட்டின்கண்ணுள்ள ஊர்களில் தொண்டர் காவலராகிய விறன்மிண்டரது பெரியவூர் இதுஎன்பார்—முன்சிறந்தமூதூர் செங்குன் றூர்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், மலைநாட்டில் முற்கூறிய வளங்களேயன்றிச் சிறப்புடை மக ளிருடைய சிறப்பு மிகச்சிறபபுடைத்தென்பதும், அந்நாட்டில் சிற்றூர்கள் மிகவுள் ளனஎன்பதும், அச்சிற்றூர்களில் பேரூர் செங்குன்றூர் என்பதுங் கூறப்பட்டன. (உ)

குலச்சிறப்பு.

என்னும் பெயரின் விளங்கிஉல கேறும் பெருமை உடையதுதான்
அன்னம் பயிலும் வயலுழவின் அமைந்த வளத்தால் ஆய்ந்தமறை
சொன்ன நெறியின் வழியொழுகும் தூய குடிமைத் தலைநின்றார்
மன்னும் குலத்தின் மாமறைநூல் மரபிற் பெரியோர் வாழ்பதியாம்.

(எ - து.) (செங்குன்றூர்) என்னும் திருநாமத்தால் யாவரானும் அறியப்படும் சிறப்பினையடைந்து, நாளுக்குநாள் குறையாது வளர்ந்துவரும் வளப்பத்தான் வளர்ந் தேறும் பெருமையினையுடையது. பெரிய வேதமெனப்படும் நூலை ஓது மரபினை யுடையாராகிய வேதியர்கள் வாழ்கின்ற வாழ்வினையுடையது. அத்தகைய பெருமை யுடைத்தான அப்பதி, (எத்தகைய ஏறும்வளத்தான் ஏறும் பெருமைபெற்றதோ வெனின்) அன்னப்பறவைகள் உலாவும் வயல்களில் உழுதலைச்செய்யும் உழவுத்தொழி லால் (குன்றாது) அமைந்த பயிர்வளத்தினால் (பெற்றதாம்.) (அவ்வுழவுத்தொழில் செய்வோர் யாவரெனின்) எப்பொருள்களையும் தெளிந்து ஆராய்ந்த வேதங்களால் சொல்லப்பட்ட நன்னெறியின்வழியே தவாறாது நடக்கும் பரிசுத்தமுடைய உயர்ந்த குடிமையின் தன்மையில் நிலைபெற்று நின்றாராகிய வேளாண்குலத்தினராம் என்பதாம்.

(செங்குன்றூர்) என்னும் பெயரின் விளங்கி உலகேறும பெருமையுடையது, (அது) தான், மாமறைநூன் மரபின் பெரியோர் வாழ்பதி, (எறும்பெருமை) அன்னம் பயிலும் வயல்உழவின் அமைந்தவளத்தால் (ஆம் உழவினராவார்) ஆய்ந்த மறை சொன்ன நெறியின் வழியொழுகும், தூயகுடிமை மன்னுங்குலத்தின் தலைநின்றூராம். எனக்கொண்டு கூட்டுக.

மலைநாட்டைவிளக்காதது ஏனையசிற்றூர்கள், குன்றூரென்பது மலைநாட்டைவிளக்குவது ஆகலான். "சிறந்தமூதூர் செங்குன்றூர்"—என்னும் பெயரின்விளங்கி—என்றூர். * 'துப்பார்க்குத்துப்பாய துப்பாக்கித்துப்பார்க்குத், துப்பாய தூஉமழை" என்னும் சிறப்பினையுடையமழை - பெய்யாது பொய்த்தலின்றி, உழவர்களை ஏரான் உழுதலைச்செய்யச்செய்து, எக்காலத்துங் கெடுபபடுதென்பது இன்றி, எபபோதும் எடுத்தலையே செய்து, தேவர்களுக்கெல்லாம் செய்யப்படுவனவாகிய பூசனை முறைகளெல்லாம் சிறப்புடன் செய்யச்செய்து. அந்நாடுமுழுவதும தானமும தவமுமாகிய இரண்டறமும் தங்கும்படிச்செய்து வருதலால் அந்நாடு பொருளினும் இன்பத்திலும் குன்றுதலறியாது குன்றுபோல் உயர்ந்தோங்குஞ் சிறப்புடைத்தாய் விளங்குதலான்—'உலகேறும் பெருமையுடையது—என்றூர்.

அந்நாடு - கடல்படுவளத்தினும, மலைபடுவளததினும், நிலம்படுவளத்தில் மேம்பட்டு விளங்குதலான்—அன்னம் பயிலும் வயல்வளத்தால்—என்றூர். † பலகுடைநீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர், அலகுடைநீழலவா" என்றுகூறும் சிறப்பினையுடைய அலகினுற்செய்யும் உழவுத்தொழிலால் வயல்கள் வளம்பட விளங்கப்பெற்றன ஆகலான்—வயல் உழவின் அமைந்த வளத்தால்—என்றூர். அவ்வுழவுத்தொழிலுக் குரிமைபூண்டொழுகுவார் உயர்ந்தகுலத்தில் நிலைபெற்ற என்றும் குடிமைக்குணங்களில் தலையாய் நிற்போராகிய வேளாண்மரபினரே யாகலான்—தூயகுடிமை மன்னுங்குலத்தின் தலைநின்றூர்—என்றூர்.

இம்மரபினர் - தலையாய்நின் றொழுகவல்ல குடிமைக்குணங்கள் இறைவனது ஆணைமொழியாயுள்ள வேதங்களாற் சொல்லப்பட்டவையாகலான்—ஆய்ந்தமறை சொன்னநெறி—என்றூர்.

அவையாவன:—செப்பம், ஒழுக்கம், வாய்மை, நாண், நகை, ஈகை, இன்சொல், இகழாமை என்றுசொல்லப்பட்ட எண்குணங்களாம். செப்பமாவது - கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகாமை. ஒழுக்கமாவது - புகழும் புண்ணியமும் ஞானமும் வருதற்குக் கூறப்பட்டுள்ள நன்னெறிகள். வாய்மையாவது—பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் கொடுக்காத சொற்களைச் சொல்லல். நாணமாவது - பழிபாவங்களில் மடங்குதல். நகையாவது - வறுமையர்ளர் வருவாராயின் முகமலர்ச்சியுடையரா யிருத்தல். ஈகையாவது—தமக்குள்ளபொருள்களைக் கொடுத்தல். இன்சொல்லாவது—மனத்தின் கண்ணுள்ள உவகையை வெளிப்படுத்துவனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். இகழாமையாவது—பிறரது எளிமைகண்டு அவமதிக்காமை.

இவ் வெண்வகைக்குணங்களையும் தாங்கள் செல்லும் நெறியாகக்கொண்டு வழுவாது ஒழுகவல்லவராகலான்—ஆய்ந்தமறை சொன்னநெறியின் வழியொழுகும்—என்றூர். ஏனையோர்கள் முதலில் தலைப்பட்டுநின்று இடையில்விடுவோரும், இடையில் தலைப்பட்டு கடையில் விடுவோருமாவர். இவரோ, முத லிடை கடை என்னும் முக்காலத்தும் குன்றாது முதன்மையாகவே நிற்குஞ் சிறப்புடையவராகலான்—தலைநின்றூர்—என்றூர். இத்தகைய வேளாண்மரபினரால் அந்நாட்டுமறையவர் வாழும் வாழ்வுடையாராகலான்—மன்னுங்குலத்தின் மாமறைநூல் மரபிற்பெரியோர் வாழ்—என்றூர்.

* திருக்குறள் - வான்சிறப்பு செ - உ. † திருக்குறள் உழவு. செ - ௪.

இத்திருப்பாசுரத்தால், உலகத்தில் மேன்மேல் ஏறும்பெருமையைத்தருவது மழைவளத்தாலென்றும், அவ்வளம் மழைவளத்தைக்கொண்டு செய்யப்படும் உழவுத்தொழிலின் வன்மையாலென்றும், அத்தொழிலுக்குரியார் செப்பமுதலாகச் சொல்லப்பட்ட எண்வகைக்குணங்களில் தலைநிற்பவராகிய வேளாண்மரபினரே யாவரென்றும், அவர்களால் வாழும் வாழ்க்கையுடையவர் அந்நாட்டுமறையவரென்றுங் கூறப்பட்டன. (சு)

திருநாமச்சிறப்பு.

அப்பொற் பதியி னிடை வேளாண் குலத்தை விளக்க அவதரித்தார்
செப்பற் கரிய பெருஞ் சீர்த்திச் சிவனார் செய்ய கழல்பற்றி
எப்பற் றினையும் அறஎறிவார் எல்லை தெரிய ஒண்ணுதார்
மெய்ப்பத் தர்கள்பால பரிவுடையார் எம்பி ரானுர் விறன்மிண்டர்.

(எ - து.) எமது பெருமானாராகிய விறன்மிண்டநாயனார் "உலகேறும் பெருமையுடையதாகிய" அந்த அழகிய பதியின்கண், வேளாண்மையையுடைய குலத்தைப் பிரகாசப்படுத்த அவதாரஞ்செய்தவர். சொல்லுதற்கரிய பெரிய சிறப்பினையுடைய சிவபெருமானது சிவந்த திருவடிகளைப் பற்றிப்பற்றெனப்படும் எவ்வகைப் பற்றுக்களையும் பற்றறவீசும் வீரமுடையவர், (எவ்வகைமேம்பாடுடையோரானும்) இவ்வளவென்று அளவுபடுத்திச் சொல்லுவதற்கு முடியாத மேம்பாடுடைய பெருமையுடையவர், மெய்ம்மையாகிய பத்தியுடையவர்களிடத்து மெய்ம்மையாகிய பரிவுடையவர் என்பதாம்.

எம்பிரானார் விறன்மிண்டர் அப்பொற்பதியினிடை வேளாண்குலத்தை விளக்க அவதரித்தார் எனக்கொண்டு கூட்டுக.

சீரைத்தேடுதற்கு ஏனைத்தேடும் நற்குலத்தினரால் வளம்படவோங்குதலின்—பொற்பதி—என்றும், வேளாண்குலம ஏனையகுலங்கள்போற்ற மேம்பட்டு விளங்குவதோடு அடியவர்களாலும் புகழ்ந்துரைக்க அக்குலத்தில் வந்தவராகலின்,—வேளாண்குலத்தை விளக்க அவதரித்தாரென்றும்—சொல்லுதற்கரிய பொருள்சேர்ந்த புகழுடையோன் சிவனொருவனே ஆகலின்—செப்பற்கரிய பெருஞ்சீர்த்திச் சிவனார்—என்றும், அச்சிவனாரது அடி, சுவர்க்கப்பற்றினையும், நரகபபற்றினையும், இம்மண்ணுலகப்பற்றினையும் பற்றற அடியோடுதுடைக்கும் பெரும்படையெனக்கொண்டு அவ்வடியை மறவாது உள்ளும்புறம்புமாகப் பற்றியிருப்பவராகலின்—எப்பற்றினையும் அறவெறிவார் சிவனார் கழல்பற்றி' என்றும், பிறவிக்கெல்லையாகிய பற்றுக்களை எல்லையில்லாத புகழினையுடைய செய்ய திருவடியால் எறிவாராகவே, இவரதுபுகழும் அத்திருவடிப்புகழுட்பட்டு எல்லையில்லாததாயிருத்தலான்—எல்லைதெரியவொண்ணுதார்—என்றும், இவரால் பற்றப்பட்ட அத்திருவடிக்குப் பற்றுயுள்ளவர் மெய்யடியார்களேயன்றி வேறொருவரில்லை என்னும் உண்மையுணர்ந்து அவர்கள்பாலே அன்பெல்லாம் உடையவராகலான்—மெய்ப்பத்தர்கள்பாற் பரிவுடையார்—என்றும், அம்மெய்பத்தர்களை அடிபணிந்து அவருக்குட்பட்டொழுக அறியாதவர்கள்யாவராயினும் அவர்களைஅப்புறப்படுத்துவதில் மிகவும் வெற்றிப்பாடுடையவராகலான்—விறன்மிண்டர்—என்றும், அடியருக்கு ஆட்படும் அவருடைய ஆசிரியர் சேக்கிழார் பெருமான் செய்யத்தொடங்கிய இப்புராணத்துக்கு முதநூலாயுள்ள திருத்தொண்டத்தொகை வெளிவருவதற்கு முதலாசிரியராய்நின்றவர் அவராகலின்,—எம்பிரானார்—என்றுங்கூறினார்

இத்திருப்பாசுரத்தால், நாயனார் அவதாரஞ்செய்த அரியகுலம் உபகாரத்தையே மேற்கொண்ட குலமென்பதும், அவர் இறைவனால் பற்றப்படாத பற்றுக்களைப் பற்றற அடியோடு களைந்து எறிவதற்குப் பற்றியகருவி அவ்விறைவனடி என்பதும், அவர் தேடியபுகழ் எல்லையுட்படாத திருவருட்புகழைத் தன்புகழாகக்கொண்ட புகழ் என்பதும், அவர் பரிவெல்லாம் மெய்ப்பத்தர்கள்பாலென்பதும் கூறப்பட்டன.

அல்லதூஉம், பற்றுக்கள் நான்கு என்பார்—எப்பற்றினையும்—எனவும், அப்பற்றுக்களைப் பற்றுதற் கிடனில்லாமல் தடுத்தல் - பற்றற்றான் பற்றினைப பற்றினாலன்றி கூடாதென்பார்—அறவெறிந்தார்—எனவும், இந்நாயனார் எல்லையில்லாததாகிய பற்றற்றான் பற்றினை யுடையவரென்பார்—எல்லைதெரிய வொண்ணாதார்—எனவும், மேற்கூறிய பற்றினைபபற்றி—எபபற்றினையும் அறவெறிவார் மெய்பபத்தர்கள்பாற் பரிவுடையார்—எனவும்,எப்பற்றினையும் அறவெறியும் வன்மையில்லாதார் எவ்வளவு மேம்பாடுடையவராயினும் அவாகளைப பொருளாகமதிக்காத வலியையும், அதனால் வீரத்தையும், அதனால் வெற்றியையும, அதனால் பெருமையும், உடையவராயும், திண்ணியராயும், நாவலூரரை நெருங்கபபோகின்றவராயும், நாமுய்யத திருததொண்டத்தொகையைக் கிளபபும்ஓர் கருவியாளராயும, உள்ளவர்என்னும் பொருளமைந்ததிருநாமம் உடையவரென்பார்—எம்பிரானா விறன்மிண்டா—எனவும் கூறினாரென்பதாம் (௬)

## தொண்டின் சிறப்பு.

நதியும் மதியும் புனைந்தசடை நமபர்விரும்பி நலஞ்சிறந்த
பதிகள் எங்கும் கும்பிட்டுப் படரும் காதல வழிச்செல்வார்
முதிரும் அன்பிற் பெருநதொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத
தெதிர்முன்பரவும அருள்பெற்றே இறைவர் பாதந் தொழப்பெற்றார்.

(எ - து.) கங்கை இளம்பிறை என்னும இரண்டினையும் அணிந்த சடைமுடியினையுடைய இறைவனார், கருணைகொண்டு எழுந்தருளியிருககும நன்மைமிகுந்த திருத்தளிகள் எங்கெங்கிருக்கின்றனவோ அங்கெல்லாம் சென்றுவணங்கி வழிபட்டு, அங்கங்கும் மேலோங்கிவரும ஆசையின் வழியே செல்கின்றவா. (அஙஙனம் செல்லுமிடங்கள் தோறும்) முறைமையான் முதிர்ந்த அன்பினால் பெரியோராகிய பெரிய திருககூட்டத்தவர்கள் முன்சென்று, அவாகள் எதிர்நின்று போற்றி அவர்கள் அருள்பெற்று, (பின்னர்) சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குந்தன்மையைப பெற்றவர் என்பதாம்.

அன்பின்முறைமை முதிரும பெருநதொண்டா நீடுதிருக்கூட்டதது எனககூட்டுக.

அன்பிலே பெருக்குடையாரையும், மலபபற்றை அறவே யொழித்தாரையுமே இறைவன் தன்பால் உடையவரெனபதுதோன்ற—நதியு மதியும் புனைந்தசடை—என்றார். மலநீக்கமும் அன்பின்பெருககமும்தம்மைவழிபட்டாலனறி அவ்விருநலங்களும் ஆன்மாக்களுக்குக் கூடாவாகலான் அவைகூடுமாறு திருவுளதமெண்ணித் திருபபதிகள் தோறும் இலிங்கவடிவமாய் எழுநதருளியிருககின்றவனெனபதுதோன்ற,—நம்பர் விரும்பி நலம்சிறந்த பதிகளெங்கும—என்றா மலநீககமும் பெருககமிகக அன்புமதமமாட்டுளவாமாறு அவாமிக்குடையராய அவ்வவாவே மார்க்கமாககொண்டு பதிகள்தோறும் சென்று கும்பிடும் நன்னெறியினை யுடையாா நாயனா என்பதுதோன்ற—பதிகளெங்கும கும்பிட்டுப படருங்காதல் வழிசசெல்வாா—என்றா. அன்பின்முறையில் பத்தியும், அப்

---

பொறிபுலன்களாலும், கரணங்களாலும், தற்போததாலும், ஆன்மாவாலும் பற்றுவன. இவற்றுள் பற்றுந்தலைமையுடையது ஆன்மவறிவே அதனாற்பற்றும் பொருளோ பொறிகளுக்கு வெளியேயுள்ளன ஆகலின, ஆன்மா பகிர்முகபபடுங்காலத்துத் தற்போதமும் கரணங்களும் புலன்களும் ஒன்றுகூடிப பொறி என்கின்ற வாயிலின் கண்ணே வந்துநிற்கும. நின்றவுடன் புறபபற்றுககளைப பொறிகள்காணும். காணும பற்று உண்டாகவே புலன்களுககு அவைகளை இது இதுவென அறியும்பற்றுணடாகும். அஃதுண்டாகவே கரணங்களுககு அவைகளைச்சிந்திக்கும் பற்றுண்டாகும். சிந்திக்க வரவே தற்போதமானது வேண்டுதல் வேண்டாமை என்னும் இரண்டனுட்பட்டு ஒன்றினைப்பற்றுகின்றது, அதுபற்றியதொன்றை ஆன்மவறிவுபற்றுகினறது.

அன்பின் பெருக்கத்திற்கு - கங்கையையும், மலத்தேய்விற்கு மதியையும் உவமையாக வைத்துக்கூறியதென்க.

பத்திமுறையல காதலும், முறையே முதிரும்படி செய்யவல்ல பெரியதொண்டின் திறத்தை யுடையவரென்பதுதோன்ற அன்பின்முறைமை முதிரும்பெருந்தொண்டர் என்றார். அத்தொண்டின்திறம் குன்றாது ஓங்கச்செய்வோர் அடியவர் திருக்கூட்டத்தவரே என்பதுதோன்ற நீடுந்திருக்கூட்டம் என்றார். அத்திருக்கூட்டத்துள் அன்பு முதலிய மூன்றும் கடல்போல்நிறைந்திருத்தலின் அவை தமமுள்ளத்துள் பரவ முற்பட்டு எதிர்ப்படுவோரென்பதுதோன்ற எதிர்முன்பரவும் என்றார். இவர் எண்ணியவாறே உள்ளத்துள் காதலும் எதிர்ப்பட்டு இறைவனடி கூடுதற்கான அருளும் கிடைக்கப்பெற்று அடியுங்கூடப்பெற்றவ ரென்பதுதோன்ற—அருளுமேயப்பெறு இறைவர்பாதந் தொழப்பெற்றார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தால், சிவக்ஷேத்திரங்களெல்லாம் இறைவன் கருணைகூர்ந்திருக்கின்ற இடங்களெனவும், நாயனார் இறைவன் கருணைக்குரியவராதலால் அக்கருணை பெருக்கை மாறாது பருக அத்தலங்கள்தோறுஞ் செல்வாரெனவும், அதனைப்பருகுதலால் அன்புமுதிருந் தன்மையினைப் பெற்றாரெனவும், அன்பன்றி அருளும், அருளன்றி அடியும் கூடாதாகலான் முன்னர் அன்புடையாரைப்பணிந்து அருள்பெற்று, பின்னர் இறைவனடி தொழுவாரெனவுங் கூறப்பட்டன

"இவ்வண்ணம் தானங்கள் பலவகுத்தது எற்றுக்கேல் இயம்பக்கேளாய், மைவண்ண இருண்மலத்தில் இருவினையாற் பிணிப்புண்டு மருளின்மூழ்கி, உய்வண்ணம் அறியாத பசுக்கள்தமை அம்மலத்தில் உறாதநாமே, மெய்வண்ணத் தன்மையினால் விடுவிக்க வேண்டுமாற்றால்" என்ற காஞ்சிப்புராணவசனத்தால் இருவினையாற் கட்டுண்டு ஆணவமலத்தில் ஆழ்ந்துகிடக்கும் ஆன்மாக்கள் அதனின்றும் விடுபட்டு உய்வண்ணமாகிய நன்மையைப்பெற நதிமதிபுனைந்த சடையானாகிய இறைவன் பெருங்கருணைத்திறத்தால் தானே விரும்பி திருக்கோயில்கொண்டிருப்பவனென்று வெளிப்படலால் அவ்வுண்மைதோன்ற,--நதியும்மதியும் புனைந்தசடை-நம்பர்விரும்பி நலம்சிறந்த பதிகள்--எனவும், பிரமன் உலகங்களைப் படைக்கும்போது படைக்கப்பட்ட க்ஷேத்திரங்களும், காமியமாகவும் நிஷ்காமியமாகவும் பூசிப்போர்க்கு அனுக்கிரகிக்கு நிமித்தம் கோயில்கொள்ளும் க்ஷேத்திரங்களும், "காசி கேதாரம் புஷ்கரம குருக்ஷேத்திரம் நைமிசங்களினும், ஓசைகொள்காஞ்சி அதிகமென்றுரைப்பதற்கு உரைபிரமாணம் ஒன்றன்றால், ஈசனே நீயும் உமையுமே யல்லால் இங்கது படைத்தவரில்லை, தேசுறயானே கண்ணுறக்கண்டு தெளிந்ததாம் எந்தவூழியினும்" என்ற மேற்படி புராணவசனத்தால் இறைவனே படைத்த க்ஷேத்திரங்களும பலவுள்ளன என்பதுதோன்ற,—பதிகளெங்கும்—எனவும், இந் நாயனார் உய்வார்கள் உய்யும்வகையாக உள்ளன ஆலயங்களென்றுணர்ந்த பெரியோராகவின், உணர்ந்தவண்ணமே ஒழுகவல்லராய் எந்நாளும் க்ஷேத்திரயாத்திரை செய்யும் ஆசையில் குன்றாதவரென்பதுதோன்ற,-படருங்காதல் வழிச்செல்வார்--எனவும், இறைவனைக் கண்டபொழுது தோன்றும கடையன்புடையார்போ லல்லாமல் எக்காலத்தும் தைலதாரைபோல் நீங்காது வளர்ந்திருக்கும் தலைஅன்பினை யுடையவரென்பதுதோன்ற, —முதிரும் அன்பிற் பெருந்தொண்டர்—எனவும், தாம செல்லும க்ஷேத்திரங்கள் தோறும் அடியவர்கள் கூடியிருக்கும் பெரியசபைக்கெதிரே செல்லும் முறைமையினையவரென்பது தோன்ற,—நீடுதிருக் கூட்டத்தெதிர் (செல்லும்) முறைமை யுடையவர்—எனவும், "அடியவர்க்கன்பில்லார் ஈசனுக்கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கு அன்பில்லார்" என்ற சித்தாந்தவசனத்தால ஈசனுக்குவேண்டிய அன்பு அடியவருள்ளத்தே யன்றி வேறிடத்தில்லை யென்பதும, அன்பென்பதே வேறிடத்தில்லை என்பதும் வெளிப்படலால் அன்புநிலையைப் பெறுதற்குமுன்னர் அடியவர் திருக்கூட்டத்தை வணங்குதலும் "அன்பேசிவமாவது" என்றபடி சிவத்வத்தைப் பெறுதற்குச் சிவனைப் பின்னுமாக வணங்குதலுமாகிய முறைமைப்பாடுடையவர என்பதுதோன்ற,—* முன் பரவும் அருள்பெற்றே இறைவன் பாதந்தொழப்பெற்றார—எனவுங் கூறினார். (க)

## திருவாரூர்ப்பணிதல்.

பொன்றாழ் அருவி மலைநாடு கடந்து கடல்சூழ் புவியெங்கும்
சென்றா ளுடையார் அடியவர்தந் திண்மை யொழுக்க நடைசெலுத்தி
வன்றாண் மேருச் சிலைவளைத்துப் புரங்கள் செற்ற வைதிகத்தேர்
நின்றார் இருந்த திருவாரூர் பணிந்தார் நிகரொன் றில்லாதார்.

(இ - ள்.) தனக்கு ஒப்பாக ஒருவரையும் இல்லாதவராகிய நாயனார் - பொற்கட்டிக ளோடுகலந்து விழுகின்ற அருவிகளை யுடையமலைகள் நிறைந்துள்ள சேரநாட்டைக் கடந்து, கடல்சூழ்ந்த பூவுலகமுற்றும் சென்று, யாவரையும் ஆளாகவுடைய இறைவன் அடியார்களை அடிபணிதலாகிய சாலவன்மைமிக்க † ஒழுக்கநடையை ஆங்காங்கும் நடத்தி, பூமியை நிலைநிறுத்தும் வன்மையுடைய பொன்மலையை வில்லாகவளைத்து, முப்புரங்களை வேதமாகியதேரில் ஏறிநின்று வென்றவராகிய இறைவர் எழுந்தருளியிருந்த திருவாரூருக்குப்போய் அந்த க்ஷேத்திரத்தை வணங்கினாரென்பதாம்.

நிகரொன் றில்லாதார் பொன்றாழருவி மலைநாடு கடந்து எனக் கூட்டுக.

"சகமிலாது அடிமையில்லை" என்றவேதமொழிப்படி நாரணன்முதலிய யாவரையும் தம்மைவழிபடும் வழிபாட்டினை மேற்கொண்டிருக்கும் ஆளாகவுடையவரென்பார் --ஆளுடையார்- என்றார். யாவரையும் ஆளாகவுடைய அவ்விறைவனருளை ஆளும் முதல்வர் அன்பரேயென்பார் -அடியவர்--என்றார் அருளைவேண்டினார், அருளை ஆளப்பெற்றாரால் ஆண்டாலன்றி அருளுடைய இறைவனால் ஆளப்பெறாரென்பது நிச்சயமாகலின் அந்நிச்சயத்தில் திண்ணியநிலையுடைய இந்நாயனார் முன்னர் அடியார்களைவணங்கி அடியரால் அருள்பெற்று பின்னர் அவ்வருளுக்கிடமாகிய இறைவனடி பணிந்து இன்புறும்தமது ஒழுக்கத்தையே அடியாரெல்லாம் உறுதிபடக்கப்பிடித்து அவ்வழியே மாறாது நடக்க எவ்விடத்துஞ் செய்தனரென்பார்—தம் திண்மையொழுக்க நடைசெலுத்தி—என்றார். பூமி

அருள்பெற்றார்க்கே அடியரை முன்வணங்கும் முறைமை தோன்றுமேயன்றி, அருள்பெறாதார்க்கு அம்முறைதோன்றாதென்க இவ்வுண்மை தோன்றவே, மெய்கண்ட சிவனாரும் "அன்பரொடு மரீஇ * * * ஆலயந்தொழுமே" என்றார்.

†வருணவொழுக்கம் ஆச்சிரமவொழுக்கம் வினைவசப்பட்டரான் அநுட்டிக்கப்பட்டதாகலின் வினை - மாறிமாறி வருதல்போல் அவ்விருவழியே இருவகையொழுக்கமும் மாறி மாறிவருந் தன்மையுடைத்து. இவர் அருள்வசப்பட்டவராகலின் இவரது ஒழுக்கம் சைவவொழுக்கமென்க. அது எக்காலத்தும் மாறுபடாது வன்மை பெற்றிருக்குந்தன்மை யுடைத்து. இதனால் அடியார்கள் இருவினையுட்பட்ட வொழுக்கத்தைக்கொண்டு அதன் வழியே செல்லாரெனவும், அருள்வசப்பட்ட சைவவொழுக்கத்தையே கைக்கொண்டு செலுத்துவாரெனவுங்கொள்க. பொன்மலை பூமிக்கு ஆதாரமாய்ப் பாதலம்வரையில் ஊடுருவிநிற்கும் நிலையுடைத்தாகலின்,—வன்றாண்மேருச்சிலை—எனவும், வேதமும் வேதனும் வேதத்திற்கூறப்பட்ட யாவருமே தேராகவும் தேரோட்டுபவனாகவும் தேரையிழுக்கும் குதிரைகளாகவும் ஆனார்களாகலின்—வைதிகத்தேர்- எனவும், முப்புரம் வெந்தவிய வைதிகத்தேரேறிய ஏறுசேவகன் ஆகலின்—புரங்கள்செற்ற வைதிகத்தேர் நின்றார்—எனவும், வேதத்தில் உள்ளும்புறம்பும் எங்கும் நிற்பவராகலின் நிற்பவரெனவும், அங்ஙனம் நிற்கின்ற இறைவனை ஆகமங்களாற் கூறப்படும் ஆவாகனம் ஸ்தாபநம் சந்நிதானம் சந்நிரோதனமாதி முத்திரைகளோடுகூடிய மந்திரங்களால் அங்கங்கும் இருக்கச்செய்ய ஆலயங்களில் இருப்பவராகலின்—திருவாரூரில் இருந்தார்—எனவும், சிவனருள் பெற்ற அடியரைவணங்கும் அன்பைப்பெறுவிடில் அவர்களை மதிக்காத விறலுடையராகலின்—நிகரொன்றில்லார்—எனவுங் கூறினார்.

நிலையாக நிற்பது தம்மாலன்றி பொன்மலையாலன்றென்று எளிதில் எளியரும் அறிய இறைவன் அம்மலையைப் பேர்த்து வில்லாகவளைத்தனரென்பார்--வன்றாள்மேருச்சிலை வளைத்து--என்றார். வெல்லக்கூடாத பகையை வெல்லவிரும்பவோர் வேதங்களில் விதிக்கப்பட்ட விதிவழியே நிற்கவல்லராயின் அப்பகையை மிக எளிதில் வெல்லவல்லவராவர் என்னும் உண்மை உலகினாக்குணர்த்த—மருளாரிடங்கொண்டு முப்புரம் வெந்தவிய வைதிகத்தேரேறிய வேறுசேவகன்—அச்செயல் புரிந்தனரென்பார்—வைதிகத்தேர் நின்றார் புரங்கள்செற்றார்—என்றார். திரிபுரதகனஞ்செய்தற்கு முன்னமே இருந்த அனாதி க்ஷேத்திரம் திருவாரூரென்பார்- இருந்ததிருவாரூர்- என்றார் முன்னர் அடியார் அடிபணிந்து அருள்பெறாது இறைவனது அருள்பெறுவார் அருள்வழியில் நிற்கும் வன்மையைப் பெறாரென்பதும், அடியாரடிபணிந்து அருள்பெற்றவரே இறைவனால் பெறப்பட்ட அருளின் வழிநிற்கும் வன்மை யுடையவராவரென்பதும் ஆகிய அன்பினைச்சார்ந்த அருள்நெறியை இவர்போலும் நிலைநாட்டினார் ஒருவரும் இல்லையென்பார்—நிகரொன்றில்லாதார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், தேவர்முதலாயினார் சிற்றின்பமாகிய போகத்தில் விருப்புடையவராதலால் அப்போகம் பெறுதற்கான வழிபாட்டில் நிற்றதுவரேயன்றித் தமது அருள்நெறிக்கு ஆளாகாரென்னும் உண்மையும், அடியார்கள் "போகம்வேண்டி வேண்டிலேன் புரந்தராதியின்பமும், ஏகநின்கழலிணை யிலாது இலேன் என் எம்பிரான், ஆகம்விண்டு கம்பம்வந்து குஞ்சியஞ்சலிக்கணேயாக என்கண்கள் தாரை தாரையாக ஐயனே" என்ற * திருவாசகப்படி பேரின்பந்தரும் அன்பில் விருப்புடையவராதலால் அவர்களைத் தமது அருளையாளும் நெறியில் முதல்வராக்குவா ரென்னும் உண்மையும், "நெறிசெய்தருளித் தன்சீரடியார் பொன்னடிக்கே, குறி செய்துகொண்டென்னை யாண்டபிரான் குணமபரவி" என்ற † திருவாசகப்படி இறைவனும், தன்னடிக்கு ஆட்பட்டவரை அவ்வளவில் நிறுத்தாத, அவர்கள் 'தன்சீரடியார் பொன்னடிக்கே, ஆளாகும்வண்ணம் 'குறிசெய்துகொண்டு' அதற்கான 'நெறிசெய்தருள' ஆள்பவன் என்னும் உண்மையும், சிவனருளை உண்மையாகப் பெற்றாரும் அவ்வளவில் நில்லாது 'உன் அடியார் நடுவுளிருக்கும் அருளைப்புரியாய்' என்றும், 'தொண்டருக்குத் தொண்டராம் புண்ணியம் உண்டாங்கொலோ' என்றும், 'உன்னடியாரக்கடியேன் ஆவேனே' என்றும் வேண்டியிருத்தலால் சிவனருளை பெறவிருப்புவோரை முன்னர் அடியார் அருளைப் பெறுமாறு அடியார்களை வணங்கச்செய்யும் திருத்தொண்டில் திண்ணிய மனமுடையவரென்னும் உண்மையுங் கூறப்பட்டன. (சு)

திருவார் பெருமை திகழ்கின்ற தேவா சிரியன் இடைப் பொலிந்து
மருவா நின்ற சிவனடியார் தம்மைத் தொழுது வந்தணையா
தொருவா ஒதுங்கும் வன்றொண்டர் புறகென் றுரைப்பச் சிவனருளாற்
பெருகா நின்ற பெரும்பேறு பெற்றார் மற்றும் பெறநின்றார்.

(இ - ள்.) (எக்காலத்துங் குன்றுதலடையாத பெருமையினையுடைய அருட்செல்வம் நிறைந்து பிரகாசிக்கின்ற, ‡ தேவாசிரியன் என்னும் திருநாமமுடைய மண்டபத்

* திருச்சதகம். செ - எஉ. † திருப்பூவல்லி. செ - (அ)

‡ கல்விச்செல்வத்தினும் பொருட்செல்வத்தினும் சிறந்த அருட்செல்வமுடையார் வாழும் சிறப்புடைத்தாகலினாலும் அவ்விருசெல்வ முடையாராலும் வணங்குஞ்சிறப்புடைத்தாகலின் திருவார்பெருஞ்செல்வ முடையாரும் கல்விச்செல்வ முடையாரும் சூரியப்பிரகாசத்தின்முன் நக்ஷத்திரமுதலியன - பிரகாசிக்குஞ்செயலற்றிருப்ப ,சூரியன் பிரகாசமே மேலிட்டிருப்பதுபோல் அருட்செல்வமுடைய அடியார்கள் பிரகாசிக்குமிடமாகவும், தேவாக்கும் தன்மையுடைய இடமாகவும், கிரியையாதி நெறியினைக்காட்டும் ஆசிரியர் இருக்குமிடமாகவும் இருத்தலால் தேவாசிரியன் என்ப.

தின்கண், மிக்க பிரகாசத்தோடுகூடி நீங்காது எழுந்தருளியிருக்கின்ற சிவனடியார்களை வணங்க அவர்களைச்சமீபித்து அவர்களோடுபொருந்தி அவரருளைபபெறுது, ஓரபக்கமாக ஒதுங்கிச்செல்லும் வன்றொண்டப் பெருமானுரைப் புறகென்றுசொல்ல, இறைவனருளால் பெருக்கெடுத்து வருகின்ற பெரியபேற்றைப்பெற்ற அங்ஙனமான அருட்பேறு பெற்றதுபோல் அருட்பயனுகிய மற்றொருபேற்றையும் பெறும்படி நின்றவர் என்பதாம்.

ஒருவர் நல்வினை வசபபடுங்காலத்து அவரோடு பொருந்திநின்று, பின் தீவினை வசபபடுங்காலத்து அவரைவிட்டு போகின்ற பொருட்செல்வம்போல் விட்டுப்போதலின்றி, பொருந்தவதற்கும் போவதற்குங் காரணமாயுள்ள இருவினையாகிய இடர்களைக்களைந்து சிவமாந்தன்மைப் பெருவாழ்வளித்துப் பிரகாசிக்கச் செய்யவல்ல திருவருட்செல்வம வாழும் இடமாகலின் - திருவ பெருமை திகழ்கின்ற தேவாசிரியன்-என்றார். அங்கு வாழ்கின்றவர், அருளைவிட்டு நீங்காது அதனிடையே வாழ்தற்குரிய அன்பினைப்பொருந்தி அடித்தொண்டியற்றும் பெரியோராகலின்—இடைப்பொலிந்து மருவாநின்ற சிவனடியார—என்றார். * "யாவராயினும் அன்பரன்றி யறியொணுமலர்ச் சோதியான்" என்றபடி அருள் அன்பு என்னும் இருகண்களை அடியவரால் அடையப் பெற்றார்க்கே புறற்றிடங்கொணட பெருமான் காணபபடுவனன்றி,ஏனை எத்திறத்து வன்மையாளர்க்கும் காணபபடான் என்னும உணமையுணர்ந்து அம்மண்டபத்தின்கண்வந்து அருளும் அன்பும் உடைய அடியார்பால் அவ்விரண்டையும் வேண்டிப் பின் இறைவனைக் காணப்போவது அத்தலத்து முறைப்பாடாக அமைந்துள்ளதாகலின் அம்முறைமை யுணர்ந்தவரும் அம்முறையை ஆங்காங்கும் செலுத்திவருகின்றவருமாகிய விறன்மிண்டர் அம் மண்டபத்தில் நின்றிருக்க, அத்தருணத்தில் இறைவன்பால் தோழமைமுறைமையுடைய வன்றொண்டர் நாடோறும் தான்செல்லும முறைப்படிசெல்ல அதுகண்டு, மனம் பொறுது தம்முறையை அஞ்சாதுசெலுத்தத் துணிந்தனராகலின்—அடியார் தம்மைத் தொழுது வந்தனைசெயாது ஒருவாறுதங்கும் வன்றொண்டர் புறகென்றுரைப்ப—என்றார். அருள்விளைதற்கு இடமாயுள்ள அடியவரை வழிபடாதார் சிவபெருமானுக்குப் புறம்பென்னும் உண்மையுணர்ந்து, அடியாரவழிபாட்டை மேற்கொண்டு சிவனருளால் பெருகும்பேறெல்லாம் உடையவராயினுராதலின்—சிவனருளாற் பெருகாநின்ற பெரும் பேறுபெற்றார்—என்றார. எனவே, சிவனருள்என்பது சிவனடியாரை முன்வணங்கும் அவாவேஎன்பதும், பெரும்பேறு என்பது அவ்வவாவே இறைவனருளாற் பெறத் தரும் பெரியபேறெனவும் விளக்கியவாறும.

இதனுல் இந்நாயனுர, சிவபெருமானிடத்தில் எது அருளாயுள்ளதோ அதனையே பெற்ற விறலானர் என்பதும், அங்ஙனம் அதனைப்பெற்ற வன்மையைக்கொண்டு, ஏனையவகையால் அருள்பெற்றுடையாரை அருள்பெற்றவராக எண்ணுத மிண்டனுரென்பதும், உணர்த்தினமைகாண்க. அவர்பெற்ற அபபெரிய பேற்றை இறைவனும் யாவர்க்கும் விளக்கும்வகையான செயலைச்செய்யத் திருவுளத்து எண்ணியிருக்கின்றுனுகலின் மற்றும் பெறநின்றார் என்றார். எனவே,—சுந்தரமூர்த்திகளைப புறகு எனச் சொல்லும்பேற்றைப் பெற்றதேயன்றி, அம்மூர்த்திகளுக்குப் பிராணுகிய தன்னையும் புறகு என்று சொல்லும் பேற்றையும் பெறுதற்கு நிற்கின்றவரென்பதாம்.

இத்திருப்பாசுரத்தான் ,மெய்த்தேவராகத் திரிவோரைப் பொய்த்தேவராக்கி அவர்களைத் தொண்டுகொண்டருளும் இறைவனையாளவல்ல வன்றொண்டரைப் புறகென்று சொல்லவல்ல பெரும்பேறுபெற்ற மிண்டராகிய நாயனுரது பேற்றைக்கூறப் பட்டது. (எ)

---

* திருவாசகம் சென்னிப்பத்து செ - க.

### இறைவனைப் புறகெனல்.

சேணார் மேருச் சிலைவளைத்த சிவனார் அடியார் திருக்கூட்டம்
பேணு தேரும் ஊரனுக்கும் பிரானும் தன்மைப் பிறைசூடிப்
பூணார் அரவம் புனைந்தார்க்கும் புறகென் றுரைக்க மற்றவர்பால்
கோணு அருளைப் பெற்றார்மற் றினியார் பெருமை கூறுவார்.

(எ - து) ஆகாயத்தை அளாவியிருக்கும் மேருமலையை வில்லாகவளைத்த சிவனார் அடியவர் * திருக்கூட்டத்தைப போற்றுதுபோகும் இந்த நம்பியாரூரருக்கும் பிரானுந் தன்மையையுடையராயின், சந்திரசேகரரும், ஒலித்தலைச்செய்யும் சர்ப்பத்தை ஆபரணமாகபபூண்டவருமாகிய அச்சிவனாரு புறகேயாவர் என்றுகூற, (அதனால் அவர் சிவாபராதியாகாமல்) அச்சிவபிரானுக்கு உகந்தவராய் அவ்விறையவர்பால் எக்காலத்தும் மாறுபடாத திருவருளை பெற்றவராயினர். அங்ஙனம்பெற்ற அவரது பெருமையை, இனி யாவர் இத்தன்மைத்தென்று கூறவல்லவராவர் என்பதாம்.

ஆர்க்கும் அரவபபூண்புனைந்தவர் எனக்கூட்டுக. தேவர்களுக்குப பகையாயிருந்த திரிபுரத்தை எரிக்கபபொன்மலையை வில்லாகவளைத்தாரென்பார் சேணார்மேருச் சிலை வளைத்த சிவனார் என்றார். தேவர்களது பகையைப்போக்க வளைக்கபபடாத மலையை வளைத்தவர், அடியவர்ககுப பகையாயிருககின்ற இந்தஆரூரருக்கு இவர்தோழராய்பபிரானுனகாரணம் என்னையோ என்பார்— அடியார் திருககூட்டம் பேணுதேரும் ஊரனுக்கும்பிரானுந்தன்மைஎன்— என்றார். அககாரணம் எககாரணமாயிருக்கினும் இருக்க, எமக்கு நம்பியாரூர் புறகானதுபோல் இநத ஆரூர இறைவரும் புறகேயாவர் என்பார் —பிறைசூடி புறகென் றுரைக்க—என்றார் தம்மையும் தமதுதோழரையும் புறகென்று சொல்லிய அவர்க்கு இறைவன் மறக்கருணையைச் செய்யாது அறக்கருணையைச்செய்யும் அப்பெரும்பேற்றைப பெற்றவரென்பார் மற்றவர்பால் கோணுவருளைப்பெற்றார் என்றார். சிவபரஞ்சுடரைப புறகென்ற இவர், அருளுக்குப் புறம்பாக வேண்டியவராயிருக்க அங்ஙனமாகாது அருளுககே யுரியராகிய அவரது சிறப்பு என்னுவிலடங்குமோ என் நினைவிலடங்குமோ! நானேயன்றி இனி எவருடைய மனவாக்குகளிற்றான் அடங்குந் தன்மையதோ ஒருசிறிதும் அடங்காதென்பார்,—மற்று இனி யார்பெருமை கூறுவார் என்றார்.

கோணுவருள்-காத்தலாகிய நல்லருள். அஃதாவது நிக்கிரகமற்ற அநுக்கிரகம் என்க.

இத்திருப்பாசுரத்தான், சிவனாரைப புறகென்றுகூறி அவருக்கு அகத்தராய் அவரகத்துள்ள கோணுவருளுக்குரியராய் மாதவஞ்செய்த தென்திசைவாழ்ந்திடத், தீதிலாத் திருத்தொண்டத் தொகை தருதற்குக காரணராய் விளங்கிய விறன்மிண்டர்பெற்ற அருட்சிறப்புக் கூறபபட்டது. (அ)

### அடியார் பெருமைவியத்தல்.

ஞாலம் உய்ய நாம்உய்ய நம்பி சைவ நன்னெறியின்
சீலம் உய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பாடச் செழுமறைகள்
ஓலம் இடவும் உணர்வரியார் அடியார் உடனும் உளதென்றால்
ஆலம் அமுது செய்தபிரான் அடியார் பெருமை அறிந்தார்ஆர்

---

முன்னுரைக்காரர்—பேணுதெரும் ஊரனுக்கும், பூணார் அரவம்புனைந்தார்க்கும் திருக்கூட்டமானது புறகுஎன்று வரைந்துள்ளார். அஃது ஈண்டு உரையன்மையறிக. என்னையெனின்,—திருக்கூட்டத்துக்கு இருவரும் புறகுஎன்று நாயனார் கூறினரேயன்றி இவர்களுக்குத் திருக்கூட்டத்தவர் புறகென்று சொல்லியதில்லை. இவ்வுண்மையை "அவ்வாரூரனையும், பிரானவனும் ஈசன்றனையும் புறகு தட்டென்றவன்" எனவரும் நம்பியாண்டார் அந்தாதியானும, "தொண்டரடி வணங்காதேகும்வன்றொண்டன் புறகு, அவனை வலிய ஆண்ட துளங்குசடை முடியோனும் புறகு என்றவன்", எனவரும் உமாபதிசிவனார் - புராணசாரத்தானும் அறிக.

(எ - து.) உலகினர் விதிவழியில் ஒழுகவும், அடியவர்களாகிய நாமெல்லாம் பிழைக்கவும், சிவசம்பந்தமாகிய சைவசன்மார்க்கநெறியின் சீலம் சிறந்தோங்கவும், நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகையைப் பாட, அதில் வளமுடைய வேதங்கள்முறையிட்டும் அரியராகிய இறைவனார், முதலடியாராய் அடியருடனிருக்குஞ் சீர்மையைப்பெற்றுளது என்றால், விடத்தை அமுதமாகவுண்டருளிய சிவனடியார்களது பெருமையை அறிந்தவர் யாவர் என்பதாம்.

நம்பி திருத்தொண்டத்தொகை முன்பாட எனக் கூட்டுக.

இருவினை வசப்பட்டுழலும் வினையாளராகிய உலகினர் அவ்வினைக்குரிய போகங்கள் அநுபவிக்குமாறு செய்யவல்லது வேதநெறியாகலான் அதற்குரியார் தழைத்தோங்க வேண்டுமென்பார் ஞாலமுய்ய என்றார். பரிபாகம் வருவிக்கவல்ல சிவதருமத்தை இயற்றுபவராகிய நாம் பற்றற்றானைப்பற்றுமாறு செய்யவல்லது ஆகமநெறியாகிய பக்திநெறியாகலான் அது வளர்ந்தோங்கவு மென்பார் நாமுய்ய என்றார். வேதநெறி இதுவெனவும் சைவநெறி இதுவெனவுங்காட்டி அவைகட்குரியசீலங்களையும் உணருமாறு செய்யவல்லது சைவசித்தாந்தத்திற் கூறப்படும் நன்னெறிகளாகலான் அவை நிலைபெறவேண்டுமென்பார்—சைவநன்னெறியின் சீலமுய்ய—என்றார். வேதநெறி இது, பக்திநெறி இது என அறிவிப்பதும், அந்நெறிகளிற் செல்லுமுறை இம்முறைகளெனக் காட்டுவதும் அந்நெறிகளிற்சென்றால் அடையப்படும் பயன்கள் இவையென விளக்குவதும் திருத்தொண்டத்தொகை என்க. அதனைப்பாடுதற்கு வேதங்களெல்லாம் முறையோ முறையோ என்று முறையிடினும் இதோவந்தேனென்று வருதலையறியாத இறைவன் அடியெடுத்துக்கொடுக்க முற்பட்டு வந்தானென்பார்—செழுமறைகள் ஓலமிட உணர்வரியார் திருத்தொண்டத்தொகை முன்பாட—என்றார். அங்ஙனம் முற்பட்டுவந்ததேயன்றி மேலோர்க்கு மேலோர்க்கு மேலோனாகிய அப்பெருந்தகையாளன் அத்தொண்டத்தொகையில் தானும் ஒருவனாய்முற்பட்டு உடனாய் நிற்கின்றவனென்பார்.—அடியருடனாமுளது—என்றார். இறைவன் அவ்வாறு நிற்கின்றவனானால் அவ்வடியார் பெருமை அறிந்தார் எப்புவனத்தினும் இல்லையென்பார்—ஆலம் அமுது செய்தபிரான் அடியார்பெருமை அறிந்தார் ஆர் என்றார்.

இதனால் வேதநெறிக்குரியார் ஞாலத்தினரென்றும், சைவநெறியாகிய பக்திநெறிக்குரியார் சரியையாதிகளில் நிற்கும் நாமென்றும், சைவநன்னெறியின் சீலமுடையார் அடியார்களென்றும், இறைவன்—"சீலந்தான் பெரிதும் உடையான்"—ஆகலான் அச்சீலமுடைய அடியாரோடு கூடியிருத்தலில் மிகவும் விருப்பமுடையவனென்றும் விளக்கினமை காண்க.

இத்திருப்பாசுரத்தான், திருத்தொண்டத்தொகையின் சிறப்புக்கூறப்பட்டது. எங்ஙனமெனின் ஆன்மாக்கள் தங்கள்தங்கள் அநுபவத்தின்பொருட்டு வேண்டும் போகத்தையும், யோகத்தையும், ஞானத்தையும், பலவிதமாய் அநுக்கிரகஞ்செய்த இறைமைத்தன்மை விளங்கவும், சிவபரத்வம் விளங்காதார்க்கு அதுவிளங்கவுமாக வந்தவை சிவநாமங்களென்க. நாமங்கள்மாத்திரம் வழங்கப்படுவனவேயன்றி அவர்களோடு ஒன்றுவெண்ணப் பட்டவருமன்று, அவர்களோடிருந்து வாழ்ந்தவருமன்று, திருத்தொண்டத்தொகையில் வரப்பட்ட நாமங்களோ, முத்தான்மாக்களாகவும், இறைவன் வேண்டுவனசெய்யவும், அவன் வேண்டுவன கொடுக்கவும், அவர்களுடைய கரணங்கள், புலன்கள் பொறிகள், உடல்களாகிய இவையெல்லாம் இறைவன்வசப்பட்டு அவன் பணிசெய்யவும், ஆசையெல்லாம் அவ்விறைவன் பாலேயாகவும் செய்யவல்லன. இவ்வுண்மையன்றியும், தில்லைவாழந்தணர்கள், திருநீலகண்டர் முதலாகச்சொல்லப்பட்டாரது சரித்திரங்களை விசாரிக்குங்காலத்தில் இறைவன் அவர்கள் அரியசெயலுக்கேற்ப அவர்களுக்கு வேறொருவர் பதங்களைக்கொடுக்காது, தான்வாழும் உலகினையும், தன்

யினையும், தன்னையனுபவிப்பதாகிய போகத்தையும், தன்னின்பத்தையும் தானே வலிந்து கொடுத்ததாகத் தெரியவருகின்றன.

இதனால் அவர்கள் சிவபெருமான் உலகினையும், அவரையும், அவரனுபவத்தையும், அவரின்பத்தையும், பெற்றவாழ்கின்றவர்களாகத் தெரியவருகின்றனர்.

ஆகலான் அவர்களால் செய்யப்பட்ட செய்கைகளின் உண்மை திருத்தொண்டத்தொகையான் உணர்ந்து, செயற்கரிய செய்கைகளைச்செய்து, அடைதற்கரிய சிவலோகாதிகளைப்பெற்று வாழ்தலே உய்வகையாதலால் ஞாலமுய்ய, நாமுய்ய, சைவநன்னெறியின் நிலமுய்யத் திருத்தொண்டத்தொகைமுன்பாட என்று கூறியதென்க.

சிவனே பரம் என உலகினர்க்கு உணர்த்துவது வேதநெறியாகலான்,—ஞாலமுய்யவெனவும், ஏனையோரையொழித்து, சிவனேபரமெனக்கூறிய வேதநெறியினையுணர்ந்த சத்திநிபாதர்க்கு அச்சிவனருள் எய்துமுறைமையினை உணர்த்துவது ஆகமமாகிய சைவநெறியாகலான் நாமுய்யவெனவும், சிவனருளை எய்தப்பெற்றவர்க்குச் சிவமாய் அவனடிப்பட்டொழுகுமுறைமையினை உணர்த்துவது நன்னெறியாகிய பக்திநெறியாகலான் சைவநன்னெறியின் நிலமுய்ய எனவுங்கூறினார். இதனால் வேதநெறியால்சிவனே பரமென வாக்கைச்செலுத்து முறைமையினையும், சைவநெறியால் அருள்வருமாறு காயத்தைச்செலுத்துமுறைமையினையும், பத்திநெறியால் சிவனடிப்பட்டொழுகுமாறு சிந்தையைச் செலுத்த முறைமையினையும் உள்ளங்கைநெல்லிக்கனிபோல் காட்டவல்லது இத்திருத்தொண்டத்தொகையென் றுணர்த்திபவாறுமென்க. இதனை,—"தந்தைதாயொரும் பிறவித்தாயொழிந்து நிருத்தர் இருதாளைச்சேர்ந்த, மைந்தர்தாள்வேதநெறி சைவநெறிபத்திநெறி வழாது வாய் மெய், சிந்தைதான் அறநெறிக்கே செலுத்தினராய்ச் சிவானுபவச்செல்வம் ஒங்கிப், பந்தமாந்தொடக்கறுத்த திருத்தொண்டர்" எனத் திருவிளையாடற்புராணத்திற் கூறியவாற்றானறிக. (க)

### நாயனார் கணநாதராதல்.

ஒக்க நெடுநாள் இவ்வுலகில் உயர்ந்த சைவப் பெருந்தன்மை
தொக்க தலைமை நெறிபோற்றித் தொண்டு பெற்ற விறன்மிண்டர்
தக்க வகையால் தம்பெருமான் அருளி னாலே தாள்நிழற்கீழ்
மிக்க கணநா யகராகும் தன்மை பெற்று விளங்கினார்.

(எ - து.) குன்றுபோ லுயர்ந்துள்ள சைவத்தினது பெரிய தன்மையெல்லாம் ஒருங்கே கூடியுள்ளதாகிய தலைமைத்தன்மை பெற்றுள்ள (திருத்தொண்டத்தொகையில் கூறப்பட்டுள்ள) நெறியானது, இவ்வுலகில் பொருந்த அநேகநாளாய்ப் பாதுகாத்துவரும் திருத்தொண்டினைப்பெற்ற விறன்மிண்டநாயனார், தமது பெருமான் திருவருளினால் அவரது திருவடிநிழலின்கீழ், கணநாயகருக்குள் மேலான கணநாயகராயிருக்குந் தலைமைத்தன்மையைத் தகுதியானவகையினாற் பெற்றுப் பிரகாசித்தனர் என்பதாம்.

உயர்ந்தசைவப் பெருந்தன்மை தொக்கதலைமை நெறி, இவ்வுலகில் ஒக்க நெடுநாள் போற்றித் தொண்டுபெற்ற விறன்மிண்டர் தம்பெருமான் அருளினாலே தாள்நிழற்கீழ் மிக்க கணநாயகராகும் தன்மையைத்தக்க வகையாற்பெற்று விளங்கினார் எனக் கொண்டு கூட்டுக.

சூரியோதயத்துக்குமுன் நக்ஷத்திரக்கூட்டங்களும் அவைகளுட்சிறந்த சந்திரனும் தலைமைபெற்றும் பிரகாசிக்கப்பெற்றும் இருப்பனவாகக் காணப்படினும், சூரியன் உதயமானபின்னர் அவையெல்லாம் முன்போ லிருப்பினும் தாமொருமுதலாகப் பிரகாசப்படாமலும், சந்திரனும் பிரகாசிக்கின்றான், நக்ஷத்திரங்களும் பிரகாசிக்கின்றன என்று ஒருவராலும் சொல்லப்படாமலும், அவைகளிருக்கச் சூரியனே பிரகாசித்தல்போல, எவ்வெச்சமயத்தில் எவரெவர் இருப்பினும் அவைகளையும் அவர்களையும் பூர்வபக்ஷமாக்கி

அவைகளையும் வைத்துச் சித்தாந்தமாய்க் களங்கமற்றுப்பிரகாசிப்பது—உயர்ந்த சைவப்பெருந்தன்மை—என்றும், அங்ஙனமான சித்தாந் வாழப்பெற்றார் - அச்சித்தாந்தத்தில் அடையப்படும்பயன் இதுவேயாமென்று எளிதில் உணர்ந்துய்ய அருளிய திருத்தொண்டத்தொகையுள் கூறப்பட்டுள்ள தலையான நன்னெறிகளெல்லாம் கண்டுணர்ந்து அந்நெறிகளில் திண்ணியராய் அடியரன்புடையராய் நிகரற்றுலாவ இந்நாயனார் நெடுங்காலமாய் எங்கெங்குஞ்சென்று எங்கெங்கும் நிலைநாட்டினராகலின்—இவ்வுலகில் ஒக்கநெடுநாள் தொக்கதலைமை நெறிபோற்றி—என்றும், திருத்தொண்டத் தொகையின் உண்மை உலகில் உணர்வதற்கின்றிக் குன்றுமாயின் அன்புகுன்றியும், அன்பு குன்றுமாயின் அருள்குன்றியும், அருள் குன்றமாயின் மும்மலத்தொடக்கு மேலிட்டுப் பிறவித்தொந்தனை யொழியாது நிலைபெற்று சிவப்பேறும் சிவானந்தமும் சித்தாந்தஞானிகட்கெல்லாம் இன்றாயொழியுமாகலான் அங்ஙனம் ஒழிந்துபோகாவண்ணம் செய்வதே இறைவன் அகம்படித்தொண்டென்று அத்தொண்டைக் கைக்கொண்டன ராகலின்—தொண்டுபெற்ற—என்றும், பெற்றதற்கேற்ப அத்தொண்டைப்பரிபாலித்து வருங்காலத்தில் அதற்கு மாறுபாடாக எத்தகைய வல்லாளர் வரினும், இறைவனே வரினும் அவர்கள் நிலைமையைநோக்காது தனது தொண்டின் நிலைமையே நோக்கி அதனைச் செலுத்திவருவதில் இவரைப்போலும் வல்லாளர் ஒருவரும் இல்லையாகலின்—விறன்மிண்டர்—என்றும், அங்ஙனம் அத்தொண்டில் மிண்டராயிருத்தல் இறைவன் திருவுளத்துக்கு மாறுபாடன்மையான் அவர்மிண்டாடிச் செய்யும் அவரது தொண்டுக்கு இறைவன் மகிழ்ந்தவராய்த் தன்னருட்செயலில் இவர் செயல் வேறன்றாய் உடனிகழ்நிறுத்தி, அவர் மிக்க ஆவலுடனும் ஊக்கமுடனும் செய்துவருந் தொண்டினையே சிவலோகத்திலும் கணநாதராய்ச் செய்துவர அருள் செய்ய, அவ்வருள்பெற்றுத் தமது தொண்டினையே நடத்திவந்தனராகலின்—தக்கவகையால் தம்பெருமான் அருளினாலே தாள்நிழற்கீழ் மிக்ககணநாயகராகும் தன்மைபெற்று விளங்கினார்—என்றும் கூறினார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் உயர்ந்த சைவசித்தாந்தப் பெருந்தன்மையாகிய நெறியை எங்கும் நிலைநாட்டுவதாகிய தொண்டில் மிண்டராய் வெற்றியுடையவரென்றும், இச்செயல் இறைவன் திருவுளத்திற்கிசைந்ததென்றும், அதனால் இங்குச்செய்த அத்தொண்டையே சிவலோகத்திலுஞ்செய்து மகிழ்ந்துவாழக் கணநாதரா யிருக்கச்செய்தனரென்றுங் கூறப்பட்டன. ௫௦)

அமர்நீதிநாயனார் தொண்டுகூறுகின்றேனெனல்.

வேறு பிறிதென் திருத்தொண்டத் தொகையால் உயர்ந்தோர் விளங்கவரும்
பேறு தனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண் டரின்பெருமை
கூறும் அளவென் னளவிற்றே அவர்தாள் சென்னி மேற்கொண்டே
ஆறை வணிகர் அமர்நீதி அன்பர் திருத்தொண் டறைகுவாம்

(எ - து.) விறன்மிண்ட நாயனாருடைய பெருமையானது திருத்தொண்டத்தொகை என்னும் திருப்பதிகத்தால் உயர்ந்தோரெல்லாம் நின்மலரூபராய் விளங்கவரும் பெரிய பேற்றிற்குக் காரணராயிருக்கும் தலைவனார் என்னும் சிறப்புடைத்தா யிருக்குமாகலால் இதனினும் மேலான பெருமையைக் கொடுக்கத்தக்கது வேறு என்ன இருக்கின்றது. ஒன்று உளதென்று நான் எண்ணிச் சொல்லத்தொடங்குவேனானால், அது என்ன பெருமையினை உடைத்தானதாகும். ஆகலின், அவர்பெருமையினைத் திருத்தொண்டத்தொகையுடன் நிறுத்தி, அவரது திருவடிகளை எனது தலைமேற்கொண்டு, பழையாறை என்னும் திருப்பதியிலிருந்த வைசியர் குலதிலகராகிய அமர்நீதிநாயனாரது திருத்தொண்டைச் சொல்லுவாம் என்பதாம்.

விறன்மிண்டரின்பெருமை திருத்தொண்டத்தொகையால் உலகுவிளங்க வரும் பேறு தனக்குக்காரணராம் பிரானார் (என்றால்) வேறுபிறிதென் கூறும் அளவு என்னளவிற்றே—எனக்கொண்டு கூட்டுக.

உயர்ந்தோரெல்லாம் திருத்தொண்டத்தொகையை நாடோறும் ஓதியோதி அதன் பொருளுணர்ந்து உண்மைச் சிவானுபவிகளாய் யாவராலும் போற்றப்படுதல் கண்கூடாய்க் காணப்படலான்—திருத்தொண்டத்தொகையால் உலகுவிளங்க வரும்பேறு—என்றும், அத்திருத்தொண்டத்தொகை வெளிவருதற்குக் காரணம், இந்த விறன்மிண்டரே என்று அன்றுமுதல் சொல்லப்பட்டு வருமாதலால், இதனினும் ஒருவர் பெறத்தக்கபேறு இல்லையாகலான்—வேறுபிறிது என்—என்றும், யாதாயினும் மற்றெவராயினும் இதனினும் சிறந்த பெருமையொன்றுளது என்று எண்ணிச்சொல்லப்புகின் அதற்குப் பிரமாணம் என்னஇருக்கின்றது, பிரமாணத்தைக் கொள்ளாதது சிறுமையே ஆகலான்—கூறும்அளவு என்னளவிற்று—என்றுங் கூறினார்.

இத்திருப்பாசுரத்தான், விறன்மிண்டநாயனாரைப் போலும் பெருமைபெற்றார் ஒருவரும் இல்லையென்றும், திருத்தொண்டத்தொகைபோல் பெருமைகொடுக்கத்தக்கது மற்றொன்றில்லை என்றும், இதுபிரமாணத்தோடு கூடியதென்றும், ஏனையவை யெல்லாம் பிரமாணமற்றதென்றும் அஃதாவது:—பிரமாணமாக ஒப்புக்கொள்ளப்பட்டாரால் புகழப்பட்டதென்றும், ஏனையவையெல்லாம் அவர்களால் இகழப்பட்டதென்றும், விறன்மிண்டரது பெருமையைக்கூறி மேல் அமர்நீதிநாயனாருடைய திருத்தொண்டைக் கூறுவாமென்றும் கூறப்பட்டன. (கக)

விறன்மிண்டநாயனார்புராணம் முற்றிற்று.

கல்மஷக்நாயநம:

# திருத்தொண்டத்தொகை.

"விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்"

விரிபொழில்சூழ் குன்றையார்—என்றதனால் விரிந்து சூழ்ந்திருக்கும் சோலையையுடைத்தாய் விளங்கும் திருச்செங்குன்றூரில் அவதரித்தவர். எனவே சோலையைப்போலும் விரிந்துகிடக்கும் தமிழ்நாடெங்கும் அருள்பெறுதற்குரிய அடியார்புகழே தழைத்தோங்கச் சைவவிருத்தைச் செய்தவரெனவும் அப்பொழில்நடுவில் செங்குன்றூர் விளங்குவதுபோலும் கைலாய மென்னும் குன்றுடைய பவளம்மணியான் அன்பை உண்டாக்க வந்தவரெனவும்—விறன்மிண்டர்க்கு—என்றதனால் தன் அடிமையென்று இறைவன் வழக்கிட்டு வன்றொண்டராக்கிய என்னைப் புன்றொண்டனாகக் கருதிப் புறகென்றுசொன்னதேயல்லாமல் என்னைத்தொண்டனாக ஆளாது தோழனாக ஆண்டவனையும் புறகென்று கூறி என்னை மீண்டும் வன்றொண்டனாகக் கொண்டமிண்டர்க்கு எனவும் அடியேன்—என்றதனால் அவ்வாறு புறகென்றுகூறியவர் புறகேயாக்காது அடியன் ஆம் தன்மையைப்பெற்று அவருள் ஒருவனாய் உள்ளோம் என்னுஞ் சீர்மையைப் பெற அவருக் கடியேனாகின்றேன் எனவுங்கூறியவாறாம்.

இதனால்,-திருவேடமே மெய்ப்பொருளெனத் துணிந்து, அந்நிலையில் தாம் நின்று தாம்நின்றதுபோலும் தமது அரசியலுக்கு உட்பட்ட ஆபத்தாரும் காதலாரும் நின்று பாதுகாத்து உய்யவேண்டுமென்று மெய்ப்பொருணாயனார் விதித்ததாகிய அவ்விதியின் சிறப்பைப்போல், விரிபொழில்சூழ் குன்றையாரும் எண்ணி, அவ்விதியில் தம்மை உட்படுத்தித் தமதுமனத்தை அதில் திண்ணியதாக்கியும், மெய்ப்பொருள்நாயனார் தமது அ

செயல்முறையில் நடத்தியதுபோலும், தாம்அம்மெய்ப்பொருள் வேடமுடைய மெய்யடியார்களே மெய்த்தெய்வமெனப் பேணிவழிபடவேண்டுமென்னும் அவாமிக்குடையராய், அவ்வவா வுட்பட்ட அவ்வெண்ணம் தமிழ்நாடெங்கும் பரவி நிலைபெற்றோங்குவதற்கு வேண்டிய விறலையும், அவ்விறலுக்குறிய மிண்டுதலாகிய கருவிச்செய்கையையும் உடையவராய் அவ்விரண்டுமே விளங்க—விறன்மிண்டர்—எனத் திருநாமங்கொண்டு, அந்த விறன்மிண்டத் தன்மையை,—மிக்கசீர் அடியார்க்கு அடியேனாகப் பண்ணுநாள் எந்நாளோ—என்று எண்ணியிருந்த என்பாற்காட்டி அந்நாளிலேயே என்னை அடியார்க் கடியனாக்கினாராகலின் அவ்விறன்மிண்டருக்கு நான் மென்தொண்டனாயிராமல் வன்தொண்டனாய் அடியவனாகின்றேன் என்றுகூறியவாறும்.

### திருவந்தாதி.

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனும்
மீசன் தனையும் புறகுதட் டென்றவன் ஈசனுக்கே
நேசன் எனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே.

"ஆராதகாதலில் நம்ஆரூரன் நாம் அழைக்க வாராநின்றான் அவனை மகிழ்ந்து எதிர்கொள்வீர்என்று, நீராரும் சடைமுடிமேல் நிலவணிந்தார்" பேசும் பெருமையினையும், அங்ஙனமான பெருமைபொருந்திய பேச்சைக்கேட்ட பெரியோரெல்லாம் "எம்பிரானார் அருள்தான் இருந்தபரிசு இதுவானால், அவர் நம்பிரான் ஆவாரன்றே" என்று, பேசும் பெருமையினையும் உடையவராகலான்—பேசும்பெருமை அவ்வாரூரனையும்—எனவும், "முன்னவன் எங்கள்பிரான் முதல் காண்பரிதாயபிரான், சென்னியில் எங்கள்பிரான் திருநீலமிடற் றெம்பிரான், மன்னிய எங்கள்பிரான் மறைநான்கும் கல்லால் நிழற்கீழ்ப்பன்னிய எங்கள்பிரான்" என்று பன்முறையும் வேதத்தாற்கூறப்படும் இறைவனாகலின்—பிரானவனும் ஈசன்தனையும்—எனவும், ஆரூராகிய பெரியோரையும், ஆரூராண்டவனாகிய ஈசனாரையும், புறகாகச் செய்யவேண்டுமென்ற பெரியோர் சிவபெருமானை ஓரிடத்தன்றிப பலவிடத்துங் கண்டு களித்தும் அடங்காத பேரன்புடையராகலான்-புறகுதட்டென்றவன் ஈசனுக்கே நேசன் எனவும், வலி, வீரம், வெற்றி, பெருமை என்னும் நான்கினையும், திண்மை, நெருங்கல், தோண்டுங்கருவிஎன்னும் மூன்றினையும் சொல்வகையானேயன்றிச் செயல்வகையானுங் காட்டவல்ல வன்மையாளராகலான்—விறன்மிண்டனே—எனவும், புவியெங்கும் சென்று ஆளுடையார் அடியவர்தந் திண்மை ஒழுக்கநடை எங்கும் சோலைபோல் தழைத்தோங்கச் செய்து, தென்திசைக் கோனாகிய இயமனால் ஏவப்படும் கடுங்காற்றாகிய மரணக்காற்றை மாற்றித் தென்திசையில் வாழ்வாரெல்லாம் வடதிசையின்கண்சென்று சிவலோகத்தில் வாழத் திருத்தொண்டத்தொகை என்னும் தென்தமிழ்க்காற்றை வீசச் செய்விக்கவல்ல அவரது ஊரும் தென்றற்காற்றுலாவும் பொழில்சூழ்ந்த திருச்செங்குன்றூர் ஆகலான்—நீடுதென்றல் வீசும் பொழில் திருச்செங்குன்ற மேய—எனவும், செபபற்கு அரிய பெருஞ்சீர்த்திச் சிவனார் செய்யகழல்பற்றி எப்பற்றினையும் அறஎறிவாரும, எல்லைதெரிய வொண்ணாத பெரிய பெருமையினை யுடையாருமாகிய இவரது பற்று எனக்குண்டாயின் நான் பற்றெலாம் அற்று அடியாரோடுகூடும் பெருமைபெற்ற மோக்ஷவீட்டில் மிக எளிதாய்ப் புகவல்லவனாவேனாகலான்—"மனைக்கேபுக எனக்கும்பிரான்"—எனவும்கூறினார்.

இதனால், விறன்மிண்டநாயனார்·தமக்குரிய திருநாமத்திற்கேற்ப,—இருள்சேர் இருவினையுஞ்சேரா இறைவன், பொருள்சேர் புகழையே—பாடவல்லாராகிய பெரியோரால் புகழப்பட்ட நம்பியாரூரரையும், பாடல்மறையுந் தோரப்பரமனாகிய பிரானாரையும் புறகென்றசொல்லிய அவரது திண்மையே திண்மைஎன்றும், இறைவனைப் புறகென்று சொல்லி "யாவராயினும் அன்பரன்றி யறியொணா மலர்ச்சோதியான்" என்ற உண்மை

வாசகத்தின்படியே அன்பர்கள்பால் * பேரன்புவைத்து அவ்வன்பின்வழியானே ஈசனிடத்தில் வைத்தஅவரது நேசமே நேசமென்றும், அந்நேசத்தால் யானும் என்போன்றாரும் முத்தியாகிய வீட்டிற்புக திருத்தொண்டத்தொகை வெளிவருவதற்குப் பிராணாகின்றனரே அதுவே பிராணுந்தன்மை என்றும் அவரது திண்மையும் நேசமும் பிராணுந் தன்மையும் எடுத்துக்கூறிய பின்னர்—நீடுதோன்றல் வீசும்பொழில் திருச்செங்குன்றூர்—என்று அவரது ஊர்ச்சிறப்பையும் சிறப்பித்தமைகாண்க.

இவ்வுண்மையை, நம்பியாரூரர் - வெளிப்படுத்தவந்தவரும், ஆரூரர் - வெளிப்படுத்தும்படி விட்டவரும் ஆகலின், தம்மைப் புறகென்று நாயனார் கூறவே, இருவரும் நாம் திருத்தொண்டத்தொகையை வெளிப்படுத்தவந்தும் அதனை நாம செய்யாதிருக்கின்றோமன்றோ. அங்ஙனம் செய்யா திருப்போமாயின் இவ்வுலகின்கண் அன்பு இத்தன்மைத்தென்றும், அருள் இத்தன்மைத்தென்றும், அவ்விரண்டும் ஊடுருவிநிற்கும் இயல் - இத்தன்மைத்தென்றும் யாவர் அறியவல்லார். அறியாதிருத்தற்குக் காரணம் நாமேயாய் முடிகின்றோம். ஆகலான் அருள்செயும் அன்பிற்கு நாமும், அருள்பெறும் அன்பிற்கு நீயும் புறகேயாயினோம். என்று எண்ணிப் புறகென்ற நாயனார்பால் நம்பி ஆரூரர் அன்பும், ஆரூரர் அருளும் உடையவர்களாய் அக்கணமே திருத்தொண்டத் தொகையைப்பாடி, அத்தொகையின் வழியாய் அருள்செயும் அன்பின்வழியையும், அருள்பெறும் அன்பின்வழியையும் ஆன்மாக்கள் விரித்துணர அருள்செய்தனரென்க.

## புராண சாரம்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் தொன்மை விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில், வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும் வன்றொண்டன் புறகவனை வலிய வாண்ட, துளங்குசடை முடியோனும் புறகென்றன்பாற் சொல்லுதலும் அவர்தொண்டத் தொகைமுன் பாட, உளங்குளிர உளதென்றூர் அதனால் அண்ணல் உவகைதர உயர்கணத்துள் ஓங்கினாரே.

(எ - து) விறன்மிண்டர் மாதவராகிய பரசிராமன் பரமசிவன்பால் பரசாயுதம் பெற்று அதனால் அளவிடப்பட்ட பூமியை அந்தணர்களுக்குக் கொடுத்துத் தானும் வசித்ததும், கடலின்வளனும் நிலனின்வளனும் மலையின்வளனும் பெருகி விளங்குவதுமாகிய மலைநாட்டில், சேரர்களது நாட்டிலுள்ள ஊர்களில் முன் சிறந்துவிளங்கும் திருச்செங்குன்றூரில், உலகேறும் பெருமையுடைய வயலுழவின் வளமமைந்த தொன்

---

* அருள்செயும் அன்பு, அருள்பெறும் அன்பு என அன்பு இருவகை. அருள்செயும் அன்புடையான் இறைவன். அருள்பெறும் அன்புடையார் அடியவர்கள். இதனால் இருவரும் அன்புடையவர் என்று வெளிப்பட்டது. படவே அருள்பெறுதற்கான அன்பை அன்பரிடத்துப் பெறவேண்டுமென்றும், அங்ஙனம் பெற்றபின்னர் அருள்செயும் அன்பை இறைவனிடத்துப் பெறவேண்டுமென்றும் வெளியாயிற்று. ஏனெனின்,— அருள்பெறுதற்கான அன்பை அன்பரிடத்துப் பெறாராயின் இறைவன் அருள்செயும் அன்பை அவர்களுக்குச் செய்யான். ஆகவே,—இறைவன் அருள்செயும் அன்பைத் தான் செய்வதற்கு, அருள்பெறும் அன்பை அன்பர்கள்பால் பெற்றனராவென்று எதிர் பார்ப்பான். அஃதேபோல்,—அன்பர்கள் இவர்களுக்கு அருள்செயும் அன்பு இறைவனிடத்திருக்கின்றதா என்று எதிர்பார்ப்பார்கள். இவ்வகையாய் இருவரும்பார்த்தல் இயற்கையும் முறைமையுமாம். ஏனெனின். அன்புண்டான இடத்தில் அருளும், அருளுண்டான இடத்தில் அன்பும் ஊடுருவிநிற்கும் இயல்புடைத்து. ஊடுறுவுதல் என்பது - நுழைதல், பீறுதல், புதைதல் என்னும் பொருளுடைத்து. ஆகவே, அடியார்களிடத்தில் அன்புபுதைந்திருக்குமாயின் இறைவனது அருள் அவருள்நுழைந்து பீறிடும். இவ்வுண்மைதோன்றவே திருவாசகம் சென்னிப்பத்து முதற் செய்யுளில் "தேவதேவன் மெய்ச்சேவகன், தேவராயினும் மூவராயினும் (மற்று) யாவராயினும் (அன்பரிடத்து அன்புபாராட்டி அவர்கள்பால் அன்பு பெற்றாலன்றி) அறியொணா மலர்ச்சோதியான், (அன்பர்கள்பால் அன்பினைப் பெற்றால்) தூயமாமலர்ச்சேவடிக்கண் நம் சென்னிமன்னிச் சுடருமே" என்று கூறிற்று.

மையாகிய வேளாண்குலத்தில் அக்குலத்தைவிளக்க அவதரித்தவர். பற்றற்றான் கழல் பற்றி எப்பற்றினையும் அறவெறிந்து பதிகளெங்கும் கும்பிட்டுப் பட்டரும் காதல்வழிச் செல்பவர். மெய்ப்பத்தர்கள்பாற் பரிவுடையராய் பெருந்தொண்டர் திருக்கூட்டத் தெதிர் முன்பரவி அவரருள்பெற்றே பின் இறைவர்பாதந் தொழும் நெறியுடையவர். இத்தன்மையுடைமையால் பெருமையின் எல்லைகாண்பரிய நிகரொன்றில்லாத இவர் திருவாரூரை யடைந்திருக்கும் நாளில் ஓர்நாள் தேவாசிரியமண்டபத்தில் அருள்பெறும் அன்பை அளிக்கும் அன்பு பொலிவுபெற்றுவிளங்கும் மிக்க சீரடியார்கூடி எண்ணிலா ரிருந்தபோதில் இவர்க்குயான் அடியேனாகப் பண்ணுநாள் எந்நாளென்று மனத்தாற் கசிந்து தொழுது காயத்தாற் றொழுது வந்தணையாது ஒருவாறு ஒதுங்கிச் செல்லும் வன்றொண்டப் பெருமானாரை மிண்டி (நெருங்கி)ப் புறகென்றுரைக்கும் பெரும்பேற்றைப் பெற்ற (விறல்) (வலி) உடையவர். அவ்வன்றொண்டரை வலிய ஆண்டவரும் பிரானுந்தலைமை யாவரும் அறியப் பிறைசூடிப் பூணரவம் புனைந்தசடைமுடி யுடையாரு மாகிய தம்பிரானும் புறகெனறு அன்பாற்சொல்லும் விறல் (வீரம்.) உடையவர். அவ்வாறு சொல்லுதலும், அன்பர் யாதுசொல்லினும் அவரன்பினையே பாராட்டும் ஆரூர் நாயகரும் தம்மிடம் விட்டுப் புறகேநின்று ஆரூரரைநோக்கித் தம்மைப்புறகென்ற விறன்மிண்டரால் போற்றப்பெற்ற அடியவா 'பெருமையால் தம்மையொப்பார்'' என்றற் றொடக்கத்தனவாகிய சிறப்பெல்லாங்கூறி அல்லல்தீர்ந்துலகுய்ய மறையளித்த திருவாக்கால் 'தில்லைவா ழந்தணாதம் அடியார்க்கும் அடியேன்' என்று அடியெடுத்துக் கொடுத்து ஞாலமுய்ய நாமுய்ய நம்பி சைவ நன்னெறியின் சீலமுய்யத் திருத்தொண்டத் தொகை பாடுதற்கு ஓர் விறன்மிண்டரா (வெற்றிக்கருவியா) யுள்ளவர். அவர்பாடிய பின் தாம் உளங்குளிர்ந்து ஆரூர் நாயகரிடத்தும் நம்பியாரூரரிடத்தும் கோணாத அருளைப்பெற்றவர். அங்ஙனங்கூறிய திருத்தொண்டத்தொகையால் செழுமறைகள் ஓலமிட்டும் உணர்வரியார் அடியார்க்குப் புறனாகாது அடியரென்று அன்புபாராட்டியதனாலும் நம்பியாரூரர "திருநாவலூராகம்கோன் அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட்டுவப்பார்'' என்றதனாலும் இருவருக்கும் அடியவர்கள்பால் அன்புளதென்று உளங்குளிர்ந்து மற்றவ்விருவர்பாற் கோணாத அருளைப்பெற்ற விறல் (பெருமை) உடையவர். இறைவனாகிய தம்மிடத்தும் அடிமையைக்கண்டு உளங்குளிர்ந்த அதனால் தமதுள்ளங்குளிர்ந்து தம்மைப்புறகெனறும் பின்னாநாம் அடியாருடன் உள்ளவனென்றும் கூறிய மிண்டருக்கு உவகையுண்டாகும்பொருட்டு தாணிழற்கீ ழிருக்கும் அடியவர்களாகிய உயர்கணத்துள் தலைமைத்தன்மையைத்தா அதனைப்பெற்று ஓங்கி விளங்கினவா என்பதாம்.

இதனால், மெய்ப்பொருள்நாயனா திருவேடத்தையே மெய்ப்பொருளாகக் காணும் அன்பினை மேற்கொண்டதுபோல் வேடமுடையாரையே மெய்த்தெய்வமாகக் காணும் அன்பினை மேற்கொண்டு பின்னா ஈசனுக்கே நேசம்பூண்டவரென்றும், இங்ஙனம் இருவருங்கொண்டவுண்மையை ஆராயுங்கால், திருவேடத்தையும், திருவேடமுடையாரையும் அன்புபாராட்டி அவரை முன்வழிபட எண்ணுதார்க்கு இறைவன் புறகேஅன்றி அகத்தான் ஆகான் என்றும், அந்தஇரண்டிடத்தும் வழிபட்டுப் பின் தம்மைவழிபடுவோர்க்குப் புறகாகாது அகத்தனாகும் என்றும் அறிவுறுத்தியவாறும்.

எனவே,—ஒன்றும் வேண்டாது மிக்கஅன்பே வேண்டுவோரை வேண்டுகின்ற இறைவன்—அன்பேவேண்டுகின்ற அவர்களை உய்விக்க வேண்டுவானாயின் † "அடியார் தங்கள் அருட்குழாம்புகவிட்டு, நல்லுறவுசெய்து உய்யக்கொண்டபிரான், தன் உண்மைப் பெருக்கமாம் திறமைகாட்டிய சேவடிகள்" என்றபடி, அவர்களை அடியவரோடுகூட்டிய அவர்களோடு வேற்றுமையின்றி உறவாக்கிப் பின் அவர்கள் உய்யும்வண்ணம் தான் ஆட்கொள்வன் என்றும், அம்முறையாக இறைவன் செய்வதே பெருக்கமான உண்மைக் கருத்தென்றும், அதுவேதான் அருட்டிறமென்றும் விளக்கியவாறும்.

விறன்மிண்டநாயனார் புராணசாரமுற்றிற்று.

---

‡தடுத்தாட்கொண்டபுராணம்—கககசு † திருவாசகம் சென்னிப்பத்து—எ

உ

திருச்சிற்றம்பலம்.

காமதேநம:

# அமர்நீதி நாயனார் புராணம்.

## நகரச்சிறப்பு.

சீரில் நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின் மேவிய களியணி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை.

(எ - து.) மேன்மையிற்சிறந்த சோழர்கள் இருந்து ஆளுதற்குரிய நல்காவிரி நதியையுடைய நாட்டில் தேனுண்டு களிப்பினையடையும் வண்டுகள்வாழும் மலர்கள் நிறைந்து மேகமண்டலமளவும் ஓங்கியுள்ள சோலைகளால் சூழப்பட்டு, சிறந்தரத்னமயமாய்விளங்கும் தேர்கள் உலாவப்பெற்றவீதிகள் சிறப்படைந்து விளங்குவதனால் உலகத்தில் மேம்பட்டபெருமையோடுகூடிய பழையாறையென்னும் ஓர்நகரமுளது என்பதாம்.

*தேனமரும் பைம்பொழிலும்வயலும் சூழ்ந்த—எனவும்,—தேன்தோயும் பைம்பொழிலின் வண்டுபாடும்—எனவும்,—தேனமரும்பைம்பொழிலின் வண்டுபாடும்—எனவும், †—தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடும்—எனவும், புகழ்ந்தோதப்பட்டதென்பார் - காரின்மேவிய களியணிமலர்ப்பொழில்சூழ்ந்து தேரின்மேவிய செழுமணிவீதிகள் சிறந்து என்றார்.

இத்திருப்பாட்டான், இந்நாயனாருடைய நகரம் - பழையாறை என்னும் திருப்பெயருள்ளதென்றும், அந்நகரம் - சிறப்பை மிகுதியாகத் தருதற்குரிய வருடையார்க்கு நீர்வளந்தரும் காவிரிநதி பரந்துகிடக்கும் சோழநாட்டி லுள்ளதென்றும், அந்த நீர்வளத்தால் நகர்ப்புறத்தில் மேகமண்டலத்தை யளாவிய பூஞ்சோலைகள் சூழ்ந்திருக்குமென்றும், அப்பூக்களில் தேனுண்ணுங் களிப்புடன் வண்டுகள் மொய்த்திருக்குமென்றும், நகரகத்திலுள்ள வீதிகளில் இரத்னமயமாகிய ரதங்கள் போதல்வருதலை யுடைத்தாய்ச் சிறந்திருக்குமென்றுங் கூறப்பட்டன. (௧)

## வர்த்தகச் சிறப்பு,

மன்னும் அப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னும் முத்துநன் மணிகளும் பூந்துகில் முதலா
எந்நி லத்தினும் உள்ளன வருவளத் தியல்பால்
அந்நி லைக்கண்மிக் கவர்அமர் நீதியா ரென்பார்.

(எ - து.) அமர்நீதி நாயனார் என்னும் பெரியார், பழையாறை என்னும் சிறப்புப் பெற்ற நகரத்தில், வைசியர்குலத்தில் அவதரித்தவர். எத்தேசத்திலும் விளைகின்ற பொன், முத்து முதலிய மாசற்ற மணிகள், மெல்லியபுடவை, ஆடைகள் முதலானவை யெல்லாம் தம்மிடத்தே விற்பனைக்கு வரும் வாணிபத்திற்குரிய அவ்வியாபார முறைமையில் மேம்பாட்டையுடையவர் என்பதாம்.

* உ-ம் திருமுறை - திருவையாறு - [illegible]   † உ-ம் திருமுறை - திருவெண்ணி - [illegible]

இத்திருப்பாட்டான், மேற்கூறிய நகரத்தில், அமர்நீதியார் வைசியகுலத்தில் வந்தவரென்றும், அந்தக்குலத்திற்கேற்ப பொன் முத்து மணி பூந்துகில் முதலிய விலையுயர்ந்த பொருள்களெல்லாம் எத்தேசத்தினின்றும் வருவிக்கும் பெரிய வியாபாரமுடையவரென்றுங் கூறப்பட்டன. (உ)

## சிவதருமச்சிறப்பு.

சிந்தை செய்வது சிவன்கழல் அல்லதொன் றில்லார்
அந்தி வண்ணர்தம் அடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தை கீளுடை கோவணங் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வார்.

(எ - து.) இவர் சிந்திக்கும் பொருள் இறைவன் திருவடியல்லது வேறொன்றில்லாதவர் ; (அச் சிந்தனைவிசேடத்தால்) தமக்கு வந்துள்ள செல்வ மிகுதியைக்கொண்டு செவ்வானத் திருமேனியனாகிய இறைவன் அடியவர்களுக்குத் திருவமுது செய்வித்து, கந்தையும், கீளும், உடையும், கோவணமும், அவரவர் வேண்டியவைகளை அறிந்து கொடுத்து, அவற்றால் வரும் பிரயோசனத்தைக் கொள்பவர் என்பதாம்.

வந்த செல்வத்தின் வளத்தினால் அந்தி வண்ணர்தம் அடியவர்க்கு கருத்தறிந்து உதவி, வரும் பயன் கொள்வார்—எனக் கொண்டுகூட்டுக.

நாம் அநுபவித்துக்கொண்டிருப்பனவும், இனி அனுபவிக்க வருவனவும் நமது சிந்தைவழியாய்க் காணப்படாமையால் அவைகளைச்சிந்தித்து விருப்பு வெறுப்படைந்து சஞ்சிதமாக்கிப் பிராரத்தானுபவத்துக்கு வரும் வழியைத் தேடவேண்டியதைப்பார்க்கினும், காலதத்துவத்தாலும் நியதிதத்துவத்தாலும் யாவும் நமக்கு வரும் வகையாகச் செய்பவன் சிவனே என்று அவனருளையே நினைப்பவர் என்பார்—சிந்தை செய்வது சிவன்கழல் அல்லது ஒன்றில்லார்—எனவும், அவன் அவள் அது என்னும் நாமரூபங்களைப்பற்றித் தேடும் பொருள்களை உயிருள்ளளவும் அவர்களுக்கேயாக்கி உயிர் போம்போது வந்து உதவுவார் ஒருவரும் இல்லாதவராய் அவர்களால் முனியப்பட்ட பண்டமாய்ச் சுடலையைச் சேர்ந்து தீயால் சுடுபட்டுப்போகாமல், மெய்ப்பொருளைக்காட்டும் திருவேடமுடையாரைப்பற்றித்—தருமந்தான் தவந்தான் தவத்தால் வரும் கருமந்தான் கருமாமறிக்கையினானுக்கருதுவார் ஆகிய இவர்க்கு ஆவனவெல்லாம்' செய்வனவேயாமென்று அப்பணியில் தளராது, தமக்குள்ள செல்வத்தைச் செலுத்தி நிற்பவரென்பார்—வந்த செல்வத்தின் வளத்தினால் அந்திவண்ணர்தம் அடியவர்க்கு, அமுதுசெய்வித்துக் கந்தைகீளுடை கோவணங் கருத்தறிந்து உதவி—என்றார். அங்ஙனம் உதவிய செல்வங்கள் பலவற்றுள்ளும் ஆராய்ந் தெடுக்கப்பட்ட செல்வமாகிய அருட்செல்வத்தைக் கைக்கொள்வரென்பார்—வரும்பயன்கொள்வார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், நாயனார் தமதுசித்தத்தைச் சிவன் திருவடியினும், தமது செல்வங்களைச் சிவனடியாரிடத்தினும் ஆக்கி, அதற்குப் பயனாக அவரிடத்துள்ள அழிவிலாச் செல்வமாகிய அருளைப்பெறுவரென்று கூறப்பட்டது. (௩)

## திருநல்லூரில் திருமடம் அமைத்தல்.

முக்க ணக்கரா முதல்வனார் அவர்திரு நல்லூர்
மிக்க சீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்க அன்பர்தம் அமுதுசெய் திருமடம் சமைத்தார்
தொக்க சுற்றமுந் தாமும்வந் தணைந்தனர் அ(ங்)கோர்.

(எ - து.) (அடியவர்களுக்குத் திருவமுதும், கந்தைமுதலியனவும் ——— அதனால் வரும்பயனைக்கொள்ளும்) அப்பெயராகிய நாயனார், தும்மைச் சேர்ந்தவர்களாகிய சுற்

நத்தாலும், தாமும் முக்கண்ணுடையராய்த் திகம்பரராய் விளங்கும் முதல்வனாராகிய சிவபெருமானது திருநல்லூரென்னும் க்ஷேத்திரத்தில் வந்துசேர்ந்து, அத்திருப்பதியில் நாளுக்குநாள் மிகச்சிறப்புடன் நடந்துவரும் திருவிழாவின் வைபவத்தைக்கண்டு மிக்க ஆசையோடுவணங்கி, (அங்குகூடிய சிறந்த அடியார்கூட்டங்களைக் கண்டு அவர்களை அமுதுசெய்விக்க வேண்டுமென்றெழுந்த அவாவால்) அவர்களை அமுதுசெய்விக்க சிறந்த மடாலயம் ஒன்றை ஏற்படுத்தினார் என்பதாம்.

தூயோர், தொக்கசுற்றமும் தாமும், முக்கண் நக்கராம் முதல்வனார் அவர் திருநல்லூர் வந்தணைந்தனர் மிக்கசீர் * * * திருமடஞ்சமைத்தனர் எனக்கொண்டுகூட்டுக.

தமக்கமைந்துள்ள பொருட்செல்வத்தைச் சின்னாளில் அனுபவித்தொழித்து வறுமையென்னும் அசுத்தத்தை அடையாது, சுத்தராகிய அடியார்களுக்காக்கி அருட்செல்வத்தைப்பெற்றனராகலின்—தூயோரென்றார். தேற்றப்படத்திருநல்லூரகத்தே சிவனிருந்தான், தோற்றப்படச்சென்று கண்டுகொள்ளார் தொண்டர் துன்மதியால் ஆற்றிற்கெடுத்து குளத்தினில் தேடிய ஆதரைப்போல், காற்றிற் கெடுத்து உலகெலாந் திரிந்தவர் காண்பதற்கே—என்றதனால் துன்மதியார்போலாது தூயோராகிய இந் நாயனார் நல்லூரையடைந்து பெருமானது திருவிழாவை வணங்கியும் அடியார்களை உண்டி உடைகளால் வழிபட்டும் வந்தாரென்பார்—நல்லூர் விழாவணங்கித் தக்க அன்பர் அமுதுசெய் மடஞ்சமைத்தார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான்—நாயனார் நல்லடியார்களுக்கு நல்லமுதுபடைப்பதில் நல்லாசை யுடையவராதலால், திருநல்லூரில் நல்லார்க்கு நல்லனாய் நடம்பயின்றாடும் நல்லூர்ப்பெருமானுக்கு நல்விழாநடப்பதால் அவ்விழாவை †"முட்டின் றிருபோதும் முனியாதெழுந்து அன்புபட்ட மனத்த"ராய்க் கண்டு களிக்கவும், அங்கு அடியார்கள் அளவில்லவராகக் கூடுவராகலான் அவர்களுக்கெல்லாம் அமுதளித்து அகங்களிக்கவுங் கருதி, தமது சுற்றத்தாருடன் சென்று, அங்கு திருமடம் சமைத்து அதிலிருந்தனரென்று கூறப்பட்டது. (௪)

அடியார்கள் அமுதுண்ணக் களித்தல்.

மருவும் அன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவி ழாவணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகும் இன்பமோ டமுதுசெய் திடவருள் பேணி
உருகு சிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை யொருநா....

(இ - ள்.) திருநல்லூரில் (திருமடத்தை ஏற்படுத்திய பின்னர்) நீலகண்டருடைய திருவிழாவின சிறப்பை மனத்திற் பொருந்திய அன்போடு காலங்கடோறும் சேவித்து வணங்கி, (பின்னர் அங்கு சூழ்ந்திருக்கும் அடியார்களைக் கண்டு) திருமடத்தில் யாவரும்வந்து பெருகிவரும் இன்பத்தோடு உண்டருளும்படியாக அவர்கள் அருளைப் பிரார்த்திக்க, அதற்கு அவர்கள் இசைந்தவர்களாய் உண்டு களிகூர்வதைக்கண்டு உருகு சிந்தையுடையவராய் மகிழ்ந்து வசித்துவரும் நாள்களுள் ஒருநாள் என்பதாம்.

நல்லூர்மணிகண்டர் திருவிழாவணி மருவும் அன்பொடு சேவித்து வணங்கி, திருமடத்து அடியார் பெருகும இன்பமோடு அமுதுசெய்திட எனக்கொண்டு கூட்டுக.

இத்திருப்பாசுரத்தான்—நாயனார் மண்ணினிற் பிறந்ததனாற் பெறுந்தகும் பயனை நாம் எளிதிற் பெறப்பெற்றோம்—என்று மனங் களிகூர்ந்தமை கூறப்பட்டது. அஃதாவது,—திருநல்லூர்ப் பெருமானது நல்விழாவைச் சேவித்து வணங்கப்பெற்றதும், திருமடத்தில் அடியார்கள் பெருகும் இன்பமோடு அமுதுசெய்யப்பெற்றதுமேயாமென்க.

நான்காந்திருமுறை - திருநல்லூர் - ௮.　　† முதல்திருமுறை - திருநல்லூர் - செ ௯.

மை (எ - து.) முஞ்சியென்னும் தருப்பையை அரைநாணாக முடித்து அதனைக் கட்டிய அரையில், (அதிலூர்க்குப்) பற்றுக்கோடாகவுள்ள வேதமாகிய கோவண ஆடையின் பிடிப்பும் உடையராய், வஞ்சமாகிய வலிய வினையின் களங்கத்தை அறுத்த நெஞ்சத்தை யுடைய அடியார்கள் நெஞ்சத்தைவிட்டு நீங்காத திருவடியாகிய மலர், பூமியிற் பொருந்தி விளங்க என்பதாம்.

வேதமானது,—என்னப்பனும் எல்லார்க்குந் தான் ஈசனுமாகிய சிவபெருமானே சத்தனாகிய புருஷன், அவனொழிந்த திருமால்முதலிய ஆன்மாக்களெல்லாம் சத்திகளாகிய ஸ்திரீகள் என்பதனை அரையிற்பிணிக்கும் கோவண ஆடையாய் ஆயிற்றென்பார்—அரையில் தஞ்சமாமறைக் கோவண ஆடையின் தசைவும—என்றார். சுத்தமாகிய நீர்நிறைந்துள்ள தடாகமபோலும அடியவரதுநெஞ்சம் அன்பென்னும் நீர்நிறைந்துள்ள தென்பார்—வஞ்சவல்வினைக்கறுப்பறு மனத்து அடியார்கள்—என்றார். நீர்நிறைந்திருக்கும் தடாகத்தில் தாமரைமலர் இருத்தல்போல, அடியாரது— கண்ணுனும் நெஞ்சகத்தாலும் வாசமழற்சேவடி—இருப்பதென்பார்—நெஞ்சில் நீங்கிடா அடிமலர்—என்றார்.

திருமால்முதலியோர் சத்திகள்என்பதனை "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்றவேதமொழியானும், புருடநாமம்புனைந்தம் ஆயினும், அத்த நிற் குறிப்பிற் சத்திகள்யாமே, புருடனைச் சத்தியிற் புணர்த்தனை அன்னதற்கு ஒருகாட டென்ப புருடோத்தமனே,—என்ற ஆன்றோர் மொழியானும் அறிக. (அ)

கண்ட வாக்குறு காதலின் மனங்கரைந் துருக
தொண்டர் அன்பெனும் தூநெறி வெளிப்படுப் பாராய்த்
தண்டின் மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டு வந்தமர் நீதியார் திருமடங் குறுக.

(எ - து.) தமது திருவுருவத்தைக் கண்டவர்களுக்கு உண்டாகும் ஆசையினால் மனங்கரைந் துருகும்படியாக, நாயனாருடைய அன்பென்கின்ற நல்ல சுத்தமான நெறியை, யாவரும் அறியும்படி வெளிபபடுத்துகின்றவராய், (தாம் தாங்கியிருக்கும்) தண்டின்மேல் இரண்டு கோவணமும், பெரிய விபூதிபபையும, தருப்பையும் கட்டிக்கொண்டு அமர்நீதியார் திருமடத்துக்குச் சமீபமாக எழுந்தருளிவர என்பதாம்.

கண்டுக் காதல் என்பது காமத்தின் மேற்றன்று—* நல்லூரகத்தே பறைமல்கு பாடலனாடலனாகத் தம்பரிசழிப்பான்—என்றபடி தன்னன்பர் பரிசழிக்குந்தன்மையைக் குறித்ததென்க. †—நீத்தநெறியானும நீங்காத்தவத்தானும் நாதநெறியானும் நல்லநெறியானும் (ஆகிய) நல்லூர்பபெருமான்—தொண்டர் அன்பெனும் தூநெறி வெளிப்படுப்பாராய்த் திருமடங்குறுக—என்றார்.

இவை நான்கு திருபபாசுரத்தாலும்,—பிரமசரிய நிலை இங்கிலை எனக் கூறிய தென்க. அஃதாவது - முடித்தசிகையும், வெண்ணீறுபூசிய திருமேனியும், மான்றோலொடு கூடிய உபவீதமும், கையில் தாபபைப பவித்திரமும், முஞ்சி நாணொடு வெண் கோவணமும், இரண்டுகோவணம் கட்டியுள்ள தண்டும், திருநீற்றுபபையும், தருப்பையும் ஆக எண்வகை உறுப்புக்களோடுகூடியது பிரமசரியநிலையெனக் கூறப்பட்டது. (கூ)

பிரமசாரியார் வரவை வியந்து கூறல்.

வடிவு காண்டலும் மனத்தினு முகமிக மலர்ந்து
கடிது வந்தெதிர் வணங்கிஇம் மடத்தினிற் காணும்
படியி லாதநீர் அணையமுன் பயில்தவம் என்னோ
அடிய னேன்செய்த தென்றனர் அமர்நீதி யன்பர்.

* திருமுறை - திருநல்லூர் - ௫ - அ. † ௬ - திருமுறை - திருநல்லூர்.

(எ - து.) அமர்நீதியார் அவரது திருவுருவத்தைக்காணவும், மனத்தையார்க்கிலும், முகமானது மிகவும் மலர்ச்சியடைந்து விரைவாகச்சென்று அவர்முன்னே வணங்கி, இம்மடத்தில் தேவரீரைக் காணக்கூடுமோ அங்ஙனங் காணும்படி வராதநீர் இன்று இங்கு எழுந்தருள, அடியனேன் முற்பிறவியில் செய்த பழைய தவம் யாதோ என்று கூறினார் என்பதாம்.

அமர்நீதியன்பர், வடிவுகாண்டலும் அடியனேன் முன்செய்த பயில்தவம் என்னோ * எனக்கொண்டுகூட்டுக.

நாயனாருக்கு அடியவரிடத்து மனம்வேறுபட்டு முகமாத்திரம் மலர்ந்து காட்டும் இயல்பின்றி, மனமும் முகமும் ஒருதன்மைத்தாய் மலர்ந்திருக்குந் தன்மையுடையவரா யிருந்தும், அன்றுவந்த பிரமசாரியாரிடத்தில் காணபெற்ற அழகில் கட்புலன் மிகவும் சிறப்புண்டதனால் அப்புலன்வழியே அறியத்தக்க மனம் அவரழகைக் களித்தற்கு இல்லாதொழிந்த தென்பார்—வடிவுகாண்டலும் மனத்திலும் முகமிகமலர்ந்து—என்றார். கண் காட்சியிற் சிறக்கக் காணப்பெற்றஇவர் எங்குச்செல்வரோ என்று விரைந்தனர் என்பார்—கடிதுவந்து எதிர்வணங்கி—என்றார். பிரமசரிய ஒழுக்கத்திற் சிறந்த நீர் - இல்லறவொழுக்கத்திற் சிறந்த அந்தணர்களிடத்தில் பிச்சைக்குப் போவீரேயன்றி என்னால் அமைக்கபபடும் இம்மடத்தில் பிச்சைக்குவர நினையீரென்பார்—இம்மடத்தினிற் காணும்படியிலாதநீர்—என்றார். மடத்தைநோக்கிவாராத நீர், நோக்கிவந்தது ஒருவனுக்கு ஊழில்இல்லாத தொன்று தவமென்னும் முயற்சியொன்றிருப்பின் உளதாகச் செய்யும் என்னும்பிரமாணப்படி நான் முன்செய்த தவத்தினாலென்றறிந்தேன், அங்ஙனமாயினும் அத்தவம் யாதோ அதனை நான் அறிந்தேனல்லேன். அத்தவம் எத்தவமோ அதனை அடியேன் செய்திருப்பனோ என்பார்—அனைய முன்பயில் தவம் என்னோ அடியனேன் செய்தது—என்றார்.

இத்திருப்பாசுரத்தால், பிரமசாரியார் வருகைக்கு தான் செய்ததவம் எத்தவமோ என்று முன்காட்சியில் முகமலர்ந்து கண்டதுபோலும், அகமலர்ந்து இன்சொல் வழங்கினாரென்று கூறப்பட்டது. (௧0)

பேணும் அன்பரை நோக்கிநீர் பெருகிய வடியார்க்
கூணு மேன்மையி லூட்டிநற் கந்தைக ளுடைகீள்
பாணர் வெண்கிழிக் கோவணம் ஈதல்கேட் டும்மைக்
காண வந்தனம் என்றனன் கண்ணுதல் கரந்தோன்.

(எ - து.) நெற்றிக்கண்ணை மறைத்து வந்தவராகிய பிரமசாரியார், தம்மை முகமலர்ச்சியாலும் இனிய சொல்லாலும் உபசரிக்கின்ற அன்பரைப்பார்த்து, நீர் அளவிலாத அடியார்களுக்குவேண்டிய உணவும் மிகச்சிறப்பாகவூட்டி, நல்லகந்தையும், கீளும், ஆடைகளும், புதிதாகிய வெண்ணிறமுடைய கிழித்தகோவணமும் கொடுத்து வருவதை நான்கேட்டு, உம்மைக்காணும் அவாவுடன் வந்தனம் என்றுகூறினார் என்பதாம்.

—சித்தத்துருகி சிவன் எம்பிரானென்று சிந்தையுள்ளே பித்துப்பெருகப்பிதற்றநின்ற அடியவர்க்கு ஊண்முதலியன ஈபவரென்பார்—பெருகிய அடியார்க்கு என்றார். ஆணவமலத்திமிரமுடையாரை அடக்கியாளுகைக்குக்காட்டும் நெற்றிக்கண்ணை, அன்பரிடத்துக்காட்டும் முறைமையுடையன் அன்றென்பார்-கண்ணுதற்கரந்தோன்—என்றார்

இத் திருப்பாசுரத்தால், நாயனாரது அறத்தைப்புகழ்ந்து மகிழ்ந்து இறைவன் காணவந்தமை கூறப்பட்டது. (௧௧)

என்று தம்பிரான் அருள்செய இத்திரு மடத்தே
நன்று நான்மறை நற்றவர் அமுதுசெய் தருளத்
துன்று வேதியர் தூய்மையின் அமைப்பதும் உளதால்
இன்று நீரும்இங் கமுதுசெய் தருளுமென் றிறைஞ்ச.

* நான்காந் திருமுறை - பசுபதி - ௧0.

(எ - று.) (உம்மைக்காணவந்தேன்) என்று, தம்பிரானாகிய பிரமசாரியார் அருள் செய்ய, (நாயனார், சுவாமிகாள்!) இத்திருமடத்தின்கண், நான்குவேதங்களையுணர்ந்த பெரியதவமுடைய வேதியர்கள் நன்றாய் அமுதுசெய்தருளுவதற்கு, அனேகம் பிராஹ்மணர்கள், ஆசாரக்குறைவின்றிச் சுத்தமாகச் சமைத்திருக்கும் அன்னமுதலியவைகளும் உள்ளன. (ஆகலின்) இற்றைத்தினம் தேவரீரும் இம்மடத்தில் அமுதுசெய்தருள வேண்டுமென்று வணங்கினர் என்பதாம்.

எல்லாவுயிர்களுக்கும் சிறப்பினைத்தரும் ஒழுக்கத்தினைச் சிறந்தெடுத்தோதுதலைத் தலைமையாகக்கொண்டுள்ள நன்மையுடைத்து வேதங்களென்பதுதோன்ற—நன்று நான் மறை—என்றார். அங்ஙனங்கூறும் ஒழுக்கத்தினை ஒன்றானும் அழிவுபடாமல் வருந் திக்காக்கவல்லவர் அந்தணரென்பது, தோன்ற—பெருந்தவர்—என்றார். அத்தகைய வேதியர்களும் இம்மடத்தின்கண் அமுதுகொள்வதற்கு அனேகர் வந்திருக்கின்றனர் என்பது தோன்ற—அமுதுசெய்தருளத் துன்றும் வேதியர்—என்றார். செய்தற் கரிய வைதிக ஒழுக்கத்திற் சுருங்காத மனவலி யுடையராகிய அவர்களுக் கேற்றவாறு தனித்து வேறாக மிகவும் பரிசுத்தமாக உணவுகள் அமைக்கப்பட்டும உள்ளது இங்கு என்பது தோன்ற—தூய்மையின் அமைப்பதும் உளதால்—என்றார். இத்தகைய ஒழுக் கச்சிறப்புகளெல்லாம் தேவரீரைப்போன்ற ஒழுக்கத்தினருக்குக் குறைவுவாராவண்ணம் அமைக்கப்பட்டிருத்தலின் யாதொரு சந்தேகமுங் கொள்ளாமல் இற்றையத்தினம் எனது வேண்டுகோளின்படி சுவாமிகள் இங்கிருந்து பிக்ஷைகொள்ளவேண்டும் அதுவே யான் தேவரீரால் பெறத்தகும் பேரருள் என்று வேண்டி வணங்கினார் என்பது தோன்ற—இன்று நீரும் இங்கு அமுதுசெய்தருளும் என்றிறைஞ்ச—என்றார்.

இத்திருப்பாசுரத்தான்,—நான்குவருணத்திலும் ஒழுக்க மிக்குடையார்க்கே இம் மடத்தில் சமைக்கப்பட்டுத் தனித்தனி அமைக்கப்பட்டும் இருக்கின்றது என்றும், அஃதேபோல், அவர்களினும் ஒழுக்கமுடைமையேயன்றி கல்வி கேள்விகளிலும் சிறந்திருக்கும் தேவரீரைப்போன்றவர்க்கும் வேறாகச் சமைக்கப்பட்டிருக்கிறதென்றும், ஆகலின் தேவரீரும் இன்று இங்கிருந்து அமுதுசெய்தருளும் என்று அடிபணிந்தனரென்றுங் கூறப்பட்டன. (கஉ)

வணங்கும் அன்பரை நோக்கியம் மறையவர் இசைந்தே
அணங்கு நீர்ப்பொன்னி ஆடிநான் வரமழை வரினும்
உணங்கு கோவணம் வைத்துநீர் தாருமென் றொருவெண்
குணங்கொள் கோவணம் தண்டினில் அவிழ்த்தது கொடுப்பார்.

(எ - று.) (அமுதுசெய்தருளவேண்டுமென்று) வணங்கிய அன்பரைபபார்த்து (அவர் வேண்டுகோளின்படியே) அந்தப் பிரமசாரியார் திருவுள்ளமிசைந்து, தெய்வீக நதியாகிய காவிரிநதியில் நான் ஸ்நானஞ்செய்து வருகின்றேன். வருகின்றபொழுது ஒருசமயம் மழை வரும்போற் காணப்படுகின்றது.) அப்படி மழைவரினும், எனக்கு வேறொரு கோவணம் வேண்டுமல்லவா; அதற்காக, உலர்ந்திருப்பதாகிய இந்தக் கோவணத்தைத் தருகின்றேன். இதனை நீர் வைத்திருந்து கொடுமென்று, தண்டினிற் கட்டியிருந்த இரண்டுகோவணத்துள் வெண்ணிறங்கொண்ட கோவணமொன்றை அவிழ்த்து அதனை அவரிடத்தில் கொடுப்பாராயினர் என்பதாம்.

தண்டினில், ஒரு வெண்குணங்கொள் கோவணம் அவிழ்த்து அது கொடுப்பாரென்று கொண்டு கூட்டுக.

இறைவன் அன்புடைத் தொண்டர்க்குப பேரருள் கொடுப்பான் பிரமசாரியின் வடிவாகிவந்தவன் கண்ணுதற் கரந்தோனாகலின்—மறையவர்—என்றும், இந்திரன் சோழிப்பதியில்வைத்த நந்தனவனம் நீரின்றி வற்றிப்போக, அதுகண்டு வருந்திய

அவனது தன்பதத்தைப்போக்கவந்த தெய்வமறையாகலின்—அணங்குநீர்ப்பொன்னி—என்றும், இறைவனுக்குரிய தொண்டியற்றி அவர்பால் கருணைபெறுவது எப்பொழுதும் அத்தொண்டை இயற்றுதற்கேயன்றி கருணையைப்பெற்றுத் தொண்டைவிடுவதற்கன்றாகலின்—மழைவரினும் கோவணம்வைத்து நீர்தாரும்—என்றும், இறைவனைக் காணுதற்கு முன் செய்யுந்தொண்டு அருளைப்பெற்றுச்செய்வதும், இறைவனைக் கண்ட பின் செய்யுந் தொண்டு அன்பினைப் பெற்றுச் செய்வதும் ஆகலான்—ஒரு வெண் குணங்கொள் கோ[illegible] தண்டினில் அவிழ்த்து அது கொடுப்பார்—என்றும் கூறினு

[illegible] - கோவணங்கொடுக்கும் பதாணடராகவே அவரிருக்க, இவர் கனைத்துவரு வராயின் அவர் கொடுக்கும் கோவணத்தை இவருக்குக் கொடுக்கமாட்டாரா ? அங்ஙனமிருக்க மறையவர் தண்டினில் ஒரு கோவணத்தை அவிழ்த்து அவரிடத்திற்கொடுத்து, இதனை நீர் எனக்குத்தாரும் என்றதனை ஆராயும் அளவில், முன் அடியார்களுக்கு அவர் கொடுத்துவந்த கோவணம் இவர் கொடுத்த கோவணங்களேயாமென்று அறியவேயாம்.

அஃதாவது,—நாயனார் கொடுத்துவந்த கோவணம் அன்புருவம், மறையவர் நாயனார்பால் கொடுத்த கோவணம் அருளுருவம். ஆகவே அருள் அவனன்றி வாராதென்பது எப்படி நிச்சயமோ அப்படியே அன்பும் அவனன்றிவாரா. இவ்வுண்மை தோன்றவே—அருளென்னும் அன்பீன்குழவி—என்றார் நாயனார். அருள் அன்பீன்ற குழவியாயின் அருள் இறைவன்பால் உள்ளதன்றோ. ஆகலான் அவர் கொடுத்த கோவணங்களும் இறைவன் கொடுத்ததே என்பதில் தட்டில்

இத்திருப்பாசுரத்தான்,—செம்பொருள்கண்டார் வாய்ச்சொல்லாகிய இனியசொல்லைக் கண்டநாயனார்பால் அச் செம்பொருளுருவாய் ஒளிவிடும் ஞானக்கண்ணாகிய நெற்றிக்கண்ணை மறைத்துவந்தாராகலின்-மறையவரென்றும், இந்திரனாகிய தேவனது தன்பதத்தைப் போக்கிய தெய்வநீராகலின் - அணங்குநீர்ப்பொன்னி என்றும், இறைவன், என்பால் பெறவேண்டிய கருணை - மழைபோல் பிரவாகமாய்ப் பெறவரினும், நீ அடியார்க்குக் கந்தை கீளொடு கோவணமுதலியவற்றைக் கொடுத்துவருதலாகிய தொண்டினை விடாது செய்துவருதலே கருணைபெற்றோரது இயல்பாகலின் கோவணம் வைத்து நீர் தாருமென்று என்றும், நீர் அன்பினைக் கோவணமாகக் கொடுத்து வந்தீராதலால், நானும் களங்கமற்ற கருணையைக் கோவணமாகக்கொடுத்தல் முறையாகலான் தண்டினில் கோவணம் அவிழ்த்து அதுகொடுப்பாரென்றுங் கூறப்பட்டன

இறைவன் கொடுத்த கோவணத்தை உணங்கு கோவணமெனவும், வெண்குணங்கொள் கோவணமெனவும், கூறியது என்னையெனின்,—அது அருளுருவாகலான் மலசம்பந்தமாகிய தற்போதத்தை வாட்டி, நின்மலமாகிய அன்பினைத்தந்து என்றும உருகும்வண்ணமாகவே நிற்கச்செய்யும் தன்மைத்து என்று அதன் இலக்கணங் கூறியவாறும் என்க. உணங்குதல் வாட்டுதல். வெண்குணம் வெண்மையாகிய குணம் - அஃதாவது - நின்மலமாகிய அருள்.

இவ்வனங் கூறிவந்த அன்பு அருள் என்னும் இரண்டின் திறத்தை இனிவரும் மெய்யுத்தொருசெய்யுளான் உணர்த்துகின்றார். அஃதாவது,நாயனாரிடத்தும், இறைவனிடத்தும் அன்பும், அருளும், நின்ற திறமும், அங்ஙனம் நின்றதிறத்திற் கேற்ப இருவரும் செய்த செயலின் திறமும் எடுத்துக் கூறுவதாமென்க

---

* உள்ளத்தில் அன்புநிறையப் பெற்றோரே தொண்டுசெய்வ ரென்பதனை இயற்பகைநாயனார் புராணத்தில் அளவிலாததோர் உளநிறையருளால், நீறுசேர் திருமேனியர் மனத்து நினைத்த யாவையும் வினைப்படமுடித்து, என்றதனாலும், அன்பு இறைவிளைத் [illegible] என்றதனை திருவாசகத்தில், "[illegible] இடைப்படு அன்பு [illegible] என் [illegible] நின்றருளுகத்தருள்" என்றதனாலும் அறிக.

### பிரமசாரியார் நீராடுதற்குப் போதல்.

ஓங்கு கோவணப் பெருமையை உள்ளவா றுமக்கே
ஈங்கு நான்சொல வேண்டுவ தில்லைநீர் இதனை
வாங்கி நான்வரும் அளவும்உம் மிடத்திக ழாதே
ஆங்கு வைத்துநீர் தாருமென் றவர்கையில் கொடுத்தார்.

(இ - ள்.) (கோவணங் கொடுப்பாராகிய பிரமசாரியர், நாயனாரைப்பார்த்து) பிரமசாரிகளுக்குச் சிறப்புடைத்தாகிய இக்கோவணத்தின் பெருமையை, உமக்கு இப்பொழுது நான் சொல்லவேண்டுவதேயில்லை. (ஏனெனில் அக்கோவணத்தின் பெருமையெல்லாம் உண்மையாக நீரே அறிந்திருக்கின்றீர், ஆகலின் நான்கொடுக்கும்) இக்கோவணத்தை நீர் வாங்கி, இது கோவணந்தானே என்று இகழ்ச்சிசெய்யாது, காவலுள்ள அந்த இடத்தில் நான் வருமளவும் காவலாகவைத்து, (நான் வந்தபின்னர்) நீர் எமயிடத்தில் கொடுமென்று நாயனார்கையிற் கொடுத்தனர் என்பதாம்.

நீர் கொடுப்பது பருத்தியினாலாகியது, நான் கொடுத்தது வேதஅருத்தத்தினாலாகிய கோவணம் என்பார்—ஓங்குகோவணம்—என்றார். அடியார்களுக்கு எப்படி கோவணஞ் சிறப்புடைத்தோ அப்படியே பிரமசாரிகளுக்கும் சிறப்புடைத்து என்னும் உண்மையை நீயே அறிந்திருக்கும் அறிவாளிஎன்பார்—பெருமையை உள்ளவாறு உமக்குநான்சொல்ல வேண்டுவதில்லை—என்றார். நான்கொடுக்கும் வேதநூலாகிய கோவணம், நீர்கொடுக்கும் பருத்திநூல்போல் காணப்படலால் உம்மிடத்திருக்கும் நூற்கோவணத்தோடு இப்பொருட்கோவணத்தை ஒன்றாகவைக்காமல், செல்வப்பொருளை வேறு வைத்தல்போல் இதனை வேறுவைத்துப் பாதுகாக்கவேண்டும் என்பார்—நீர்இதனை இகழாதே ஆங்கு வைத்து—என்றார். தான் கொடுக்குங் கோவணத்தைத் தானே மாயஞ்செய்து, நாயனாரிடம் வழக்கிட எண்ணிவந்திருக்கின்றாராகலின் அதற்கேற்ப வழக்கினை வலியுறுத்த ஏது தேடினார் என்பார்—நீர் இதனை வாங்கி நீர்தாரும் என்று அவர் கையிற்கொடுத்தார்—என்றார்.

ஓமென வோங்கி வொலிக்கும் பிரணவத்தை முதலாகவுடைய வேதகோவணமாதலினாலும், நாயனாருடைய பொருளனைத்தும் ஓங்கிய பொருளெனக் காட்டவந்த கோவணமாகலினாலும் ஓங்குகோவண மெனபபட்டது.

இத்திருபபாசுரத்தால்,—இறைவன் தாம் செய்யப்போகும் வழக்கிற்கு ஏதுவாக அக்கோவணத்தைத் தமது நாயனார்பாற் கொடுத்தனர் என்று கூறப்பட்டது. (கச)

கொடுத்த கோவணம் கைக்கொண்டு கோதிலா அன்பர்
கடுப்பில் இங்கெழுந் தருளுநீர் குளித்தெனக் கங்கை
மடுத்த தும்பிய வளர்சடை மறைத்தவர் மறையோர்
அடுத்த தெண்டிரைப் பொன்னிநீர் ஆடவென் றகன்றார்

(இ - ள்.) கோவணத்தைக்கொடுத்த (பிரமசாரியாரது)வஞ்சத்தையறியாத நாயனார் அதனைக் கையேற்று வாங்கிக்கொண்டு, (தேவரீர் கட்டளைப்படியே இக்கோவணத்தைப் பத்திரபபடுத்திவைத்துக் கொடுக்கின்றேன்) சுவாமிகள் காவிரிநதியில் ஸ்நானாதி கடன்களை முடித்துக்கொண்டு விரைவில் இம்மடத்தில் எழுந்தருளவேண்டும் என்று சொல்ல, நீண்டசடையின்கண் அலை மடுத்துத் துள்ளும் கங்கையை மறைத்துவந்த பிரமசாரியாகிய மறையோர் சமீபத்திலுள்ள தெள்ளிய அலையையுடைய காவிரிநதியில் நீராடிவருகின்றேனென்று சென்றனர் என்பதாம்.

நீர்குளித்து, கடுப்பில் இங்கெழுந்தருளும் என எனவும், வளர்சடை மடுத்த தும்பியகங்கை மறைத்தவர் மறையோர் எனவும் கொண்டுகூட்டுக.

திருவேடமுடைய அடியாரது காயத்தைச் சிவரூபமாகவே காண்பதுபோல், அவரது வாக்கைச் சிவவாக்காகவும், அவரது உள்ளத்தைச் சிவனது திருவுள்ளமாகவும், எண்ணுவதன்றிப் பாச சம்பந்தப்பட்டுள்ள வாக்காகவும், மனமாகவும் எண்ணும் குற்றமுடையவர் அன்றென்பது தோன்ற—கோதிலா அன்பர்—என்றார். நான் வருமளவும் கோவணத்தைக் காவலில்வைத்து நான் வந்தபின்னர் நீர்தாரும் என்றதனால், நாயனார் இப்பிரமசாரியார் இன்னம் எங்குசெல்ல விருக்கின்றாரோ எப்போது வருவாரோ என்று ஐயமுற்று, ஐயரைநோக்கி தேவரீர் சொல்லியதுபோல எத்தனைநாளானாலும் கோவணத்தைப் பாதுகாத்துக்கொடுப்பதில் தடையில்லை, நீர் விரைவில் அமுதுண்டருளவேண்டு மென்னும் அவாவுடையனா யிருக்கின்றேன் அவ்வவாவின்படியே விரைவில் வரல்வேண்டுமென்னுங் குறிப்புத்தோன்ற—நீர்குளித்து கடிடயில் இங்கெழுந்தருளும்—என்றார். கங்கையாகிய நீரை நீங்காது தலையில்வைத்திருக்கின்ற இறைவா நீர் குளித்துவருகின்றேனென்று சொல்லவந்ததும், நீர்குளித்து வாருமென்று நாயனார் சொல்ல வந்ததும், கங்கையைத் தோன்றாவண்ணம் மறைத்துவந்ததனால் என்பதுதோன்ற—கங்கைமறைத்த அம்மறையோர்—என்றார். தனது அருட்செயலையும், நாயனாரது அன்பின் செயலையும் விரித்து யாவருங்காண ஆடப்போகின்றார் என்பது தோன்ற—பொன்னி நீராடுதற்கு அகன்றார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தால்,—நாயனார்—அடியார்களுடைய மன வாக்குக் காயங்களிடத்தில் எவ்விதத்தும் யாதொருகுற்றமும் கருதாத அன்பரென்றும், அன்பர்களுக்கு அமுதளிப்பதில் மிக்கதீவரமுடைய ரென்றும், அஃதேபோல் இறைவன் அன்பரன்பினை உலகினரறிய விரிப்பதில் அதிதீவர முடையவரென்றும், அதற்கே காவிரிநதிக்குச் சென்றாரென்றுங் கூறப்பட்டன. (௧௫)

## கோவணத்தைக் காப்பிடத்தில் வைத்தல்.

தந்த கோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தை அந்தணர் மொழிகொண்டு முன்புதாம் கொடுக்குங்
கந்தை கீளுடை கோவணம் அன்றியோர் காப்புச்
சிந்தை செய்துவே றிடத்தொரு சேமத்தின் வைத்தார்.

(எ - து.) பிரமசாரியார் கொடுத்தகோவணத்தை வாங்கிக்கொண்ட ஒப்பற்ற பெருமையினையுடைய தொண்டனார், அந்தப் பிரமசாரியார் முன்சொல்லிய வார்த்தையைச் சிரத்தையுடன் மனத்துட்கொண்டு, தாம் முன்னே அடியார்களுக்குக் கொடுத்துவரும் கந்தை, கீள், உடை, கோவணம், ஆகிய இவைகளை வைத்திருக்கும் இடத்தில் அல்லாமல், வேறோரிடமாகிய காவலிற்சிறந்த ஓரிடத்தைச்சிந்தித்து அத் தனியிடத்தில் அக் கோவணத்தை வைத்தனர் என்பதாம்.

அருட் கோவணமாதலால், அதனை முன்னர் சிந்தனையாற் சிந்தித்துப் பின்னர் அச்சிந்தனையிற் றெளிந்த தெளிதலிலேவைத்தல் முறையாதலால்—சிந்தைசெய்து வேறிடத் தொரு சேமத்தின் வைத்தார்—என்றார். அருட்கோவணத்தை வாங்குந்தகுதியாளரானதால்—தனிப்பெருந்தொண்டர்—என்றார். அருட்கோவணத்தைக் காக்கவேண்டிய முறையெல்லாம் விடாது சிரவணஞ் செய்தவராகலான்—முந்தை அந்தணர்மொழிகொண்டு—என்றார்.

இதனால்,—மொழிகொண்டு என்றது சிரவணமெனவும், காப்புச்சிந்தை செய்தது என்றது—சிந்தனைஎனவும், ஒருசேமமென்றது நிதித்தியாசனம் (தெளிதல்) எனவும் பொருள்கொண்டு, இறைவன்கொடுத்த அருளைக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர் நாயனார் என்று கூறப்பட்டது.

இத்திருப்பாசுரத்தான், பிரமசாரியாரது கட்டளைப்படியே, தனியிடத்தில் அவர் கொடுத்தகோவணத்தை வைத்தனரென்று கூறப்பட்டது. (௧௬)

போன வேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பான லந்துறைப் பொன்னிநீர் படிந்துவந் தாரோ
தூந றுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ
வான நீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார்

(எ - து) நீராடுதற்குப்போன பிரமசாரியார், தாம் போனதுபோல் நாயனார் காவலிடத்தில்வைத்த அந்தக்கோவணத்தையும் போக்கி, குவளைமலர்கள் மலர்ந்திருக்கும் துறையுடைய காவிரிதீர்த்தத்தில்மூழ்கித் தான் வந்தனரோ, (அல்லது) நறுமணங்கமழும் சடையிலுள்ள புனிதமாகியகங்காதீர்த்தத்தில் படிந்துதான்வந்தனரோ, (நாம்இவ்விரண்டையும் அறியுந் தரமுடையோமல்லோம்.) ஆகாயத்தினின்றும் மேகமானது மழை பொழிய அம்மழையில்நனைந்து மடத்தைவந்து சேர்ந்தனர் என்பதாம்.

இறைவனார் தாம் காவிரிநதியில் மூழ்கவந்ததுபோல் தமதருளையும் நாயனாருடைய அன்பில் மூழ்கப்போக்கினு ரென்பார்—போனவேதியர் வைத்தகோவணத்தினைப் போக்கி—என்றார். வேத தருமமாகிய யாகாதிகளைக் கண்டு பெய்வதாகிய மேகவருஷத்தில் நனைந்து வந்தவ ரென்பார்—வானநீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந் தார்—என்றார். தன்னிடத்தில்வந்து மூழ்குகின்றவர்களுக் கெல்லாம் பாவத்தைப் போக்கிப் புண்ணியத்தைக் கொடுக்கும் அப்புண்ணியத்துக்குப் பயன்கொடுப்பதற்கு நதியில் மூழ்கினுரென்பார்—பொன்னிநீர் படிந்து வந்தாரோ—என்றார். தனது திருமேனியிற்கலந்து இன்புறும் உமாதேவியைப்போல் தன்னைக்கலந்து அனுபவிக்கப் பெறாது சடையிற் சிக்குண்டு வருந்துகின்ற கங்காதேவியினது துன்பம் நீங்க அத்தேவியைப் பெருக்கிவரச்செய்து அவ்வெள்ளத்தில் பொருந்த மூழ்கிவந்தார் என்பார்—தூநறுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்து வந்தாரோ—என்றார். தமது அருளை அன்பர்பால் போக்கியது உண்மையாகலின் போக்கி எனத் துணிவுப் பொருளிலும், அஷ்டமூர்த்தங்களில் ஒன்றாயெண்ணப்பட்ட நீர் தாமாகவேயிருக்க நதியில் மூழ்குதலும் தமது இடப்பாகத்தை உமாதேவிக்கும். சடையைக் கங்கைக்கும் இடமாகக்கொடுத்து அவ்விருதேவியராலும் கலகமற்று வாழ்ந்திருப்பவர் - அன்று கங்கையில் மூழ்குதலும் எங்ஙனம்கூடும்; கூடாதாகலின் வந்தாரோவந்தாரோ, என ஐயப்பொருளிலும் கூறினரென்க.

இத்திருப்பாசுரத்தான், அப்புலிங்கமாகவே யிருக்கின்றவர் - அப்புவில் மூழ்கவேண்டிய தில்லையாகவேயிருக்க, மூழ்கிவந்தவரைப்போல் காணச்செய்தனராகலான், பொன்னிநீர், கங்கைநீர், மழைநீர் என்னும் மூவகைநீரில் எந்தநீரில் மூழ்கிவந்தனரோ அவர்மாயத்தை நாமகூறமுடியாதென்று கூறப்பட்டது. (கஎ)

## பிரமசாரியாரை எதிர்கொண்டு வணங்கல்.

கதிரி ளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதின்
முதிரும் அன்புடைத் தொண்டர்தாம் முறைமையின் முன்னே
அதிக நன்மையின் அறுசுவைத் திருவமு தாக்கி
எதிரெ ழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்த நூன்மார்பர்

(எ - து.) கிரணங்களைப்பரப்பும் இளம்பிறை மாலையினையுடைய சிவபிரானாகிய பிரமசாரியார், மடத்தைவந்து சேர்ந்தபொழுதில், ஒருகணத்திற்கு ஒரு கணம் வளரும்

---

நதிகள் தங்களிடத்தில் பாவிகள் மூழ்குவதனால் அவரினின்றும் நீங்குவதாகிய பாவங்களை யுடைத்தாயிருக்குமென்றும், அப்பாவங்கள் ஈஸ்வரபக்தியுடையார் செய்யும் ஸ்நானதெரிசன பரிசனங்களால் ஒழியுமென்றும் தேவீபாகவதம் கூ-வது ஸ்கந்தத்தில் கூறியிருத்தலால் தன் வேடத்துக்கேற்பப் பயன்கொடுக்கச் சென்றாரென்றார்.

அன்பினையுடைய நாயனார், அந்தப்பிரமசாரியார் வருவதற்கு முன்னரே, ஆசாரமுறைப்படி மிக்க நல்லசுவையோடு அறுவகைக்கறிகளுடன் திருவமுதமைக்கச்செய்து, எழுந்தெதிரேசென்று வணங்கிட, பூணூல் நிறைந்தமார்பினையுடைய பிரமசாரியார் என்பதாம்.

தொண்டர்தாம் முன்னே, முறைமையின் அதிகநன்மையின் அறுசுவைத் திருவமுதாக்கி எனக்கொண்டு கூட்டுக.

நாயனாரிடத்துள்ள அன்பு—இறைவன்போக்கிய அருளிற்கலந்து முன்னையினும் மேவிட்டிருந்த தென்பார்—முதிரும் அன்புடை—என்றார். பசுவினிடத்தில் உண்டாகும் பால்முதலிய ஐந்தினையும் சுவைப்பதுபோல் அத்துடன் முதிர்ந்திருக்கும் தனது அன்பினையும் இறைவன் சுவைக்குமாறு அறுசுவையோடு திருவமுதமைத்தன ரென்பார்—அதிக நன்மையின் அறுசுவைத் திருவமுதாக்கி என்றார். ஒருபொழுதிலேயே பலமுறை அடியரைக் காணவரினும் அம்முறைதோறும் புதிதாகக் காணவந்தது போலும் வணங்குதல் முறைமை என்பார்—எதிரெழுந்து சென்று இறைஞ்சிட என்றார். மூன்றுவேதமாகிய நூல் ஆகமத்தின் உட்பொருளாகிய முப்பொருளுண்மை நிறைந்த அடையாளப் பொருளென்றுணரப் பூணூலைத் தரித்தனரென்பார்—நிறைந்த நூன்மார்பர்—என்றார். தமதுசடையிலிருக்கும் பிறையில் ஓர்கலையைக்காட்டி வானத்திலிருக்கும் பிறையில் யாவரும் அறியப பதினாறுகலையும் நிறைந்திருக்கக் காட்டுவது போல் தம்மிடத்தில் சிறிதருளைக்காட்டி, நாயனார்பால் நிறைந்த அருளை, யாவரும் அறியக் காட்டுதல் அடியார்பால்வைத்த அன்பின் திறமென்பார்—கதிரிளம் பிறைக் கண்ணியர் நண்ணியபொழுது—என்றார்.

இத்திருப்பாசுரத்தான் - நாயனார்பால் இறைவன் தமதருட்கலையை நிறையச்செய்தனரென்றும், இறைவன்பால் நாயனார் தமது அன்பினிலையை முதிரச்செய்தன ரென்றும், இறைவன் தமது அருட்சுவையில் தம்மைச் சுவைக்கச்செய்ததுபோல், நாயனா தமது அன்பின் சுவையை இறைவன் சுவைக்குமாறு அறுசுவையுணவை அமைத்தன ரென்றும், அதனைப் பிரமசாரியாருண்ண வணங்கினரென்றுங் கூறப்பட்டன. (௧௮

## பிரமசாரியார்கொடுத்த கோவணத்தைக் கேட்டல்.

தொண்ட ரன்பெனுந் தூயநீ ராடுதல் வேண்டி
மண்டு தண்புனன் மூழ்கிய ஈரத்தை மாற்றத்
தண்டின் மேலுள தீரம்நான் றந்தகோ வணத்தைக்
கொண்டு வாருமென் றுரைத்தனர் கோவணக் கள்வ

(எ - து.) (மழைநீராடிவந்த பிரமசாரியார்) நாயனாருடைய அன்பென்னும் சுத்தமாகிய நீரில்மூழ்குதலை விரும்பி (அன்பரைப்பார்த்து) வெள்ளமாகியமழையில் நனைந்து வந்த ஈரத்தை மாற்றிக்கொள்ள, (முன்னர் கோவணம் வேண்டியிருப்பதால் கோவணமோ வேறில்லை) இப் பலாசத்தண்டின்மேலுள்ள கோவணமும் (என்னைப்போல்) நனைந்துள்ளதே, (ஆகையால்) நான் உம்மிடம் முன்கொடுத்த கோவணத்தைச் சீக்கிரமாகக் கொண்டுவாரும் என்று, கோவணத்தைக் களவாடிய கள்வர் கூறியருளினார் என்பதாம்.

கோவணத்தைக் கொண்டுவாருமென்று கோவணக்கள்வர் உரைத்தனர் என்று கூட்டுக.

நாயனாருடைய அன்பினைப்போலும் எமக்குச் சுத்தங்கொடுப்பது — காவிரிநீருமன்று கங்கைநீருமன்று மேகநீருமன்று என்னும் அவ்வுண்மை தோன்ற—தொண்டர் அன்பெனும் தூயநீராடுதல் வேண்டி—என்றார். அன்பர்கள்பால் தன்னருளைவைப்பது அவர்களைத் தன்வசமாக்கிக் கொள்வதற்கேயன்றி அவர்களைத்தன்னைவிட்டு வேறுவைப்பதற் கன்றென்பதுதோன்ற—நான் தந்த கோவணத்தைக் கொண்டுவாருமென்றுரைத்தனர்—என்றார். உனதன்பின் வசப்பட்ட எனதருள் உன்னிடத்தினின்றும்

இனி வெளிப்பட்டாலன்றி உன்பால் நான்வைத்துள்ள திரோதசத்தியின் செயலினைத் தும் மாற்றமுடியாதென்பது தோன்ற—ஈரத்தைமாற்ற—என்றார். தம்மைச்சார்ந்தவரிடத்துஞ் சாராதாரிடத்தும் * தலைமை பெற்றிருக்கும் தற்போதத்தின் வண்ணத்தைக்காட்டாவண்ணம் அதன் வண்ணத்தைக் களவாடும் செயலுடையவன் என்பது தோன்ற—கோவணக்கள்வர்—என்றார்.

இத் திருப்பாசுரத்தான்,—புண்ணிய தீர்த்தங்களினும் சிறந்த புண்ணிய தீர்த்தம் தொண்டர் அன்பென்னும் தீர்த்தமென்றும், அருட்செயல் மேலிடத் தலைப்படின் திரோதச்செயல் மாறுமென்றும், அது மாறவருங்காலத்துத் தற்போதச்செயலின் வண்ணமும் மாறத் தற்போதத்தை இறைவனாகியகள்வன் கவர்வனென்றம், அதைக்கவர்ந்தபின் தனது அருட்செயலை வெளிபபடுத்த அவர் அறிவைத் தன்னளவில் நிறுத்துவனென்றுங் கூறப்பட்டன. (கக)

## நாயனார் கோவணந் தேடுதல்.

ஐயர் கைதவம் அறிவுறா தவர்கடி தணுகி
எய்த முன்சென்று கோவணம் இருந்த வேறிடத்தின்
மையில் சிந்தையர் கண்டிலர் வைத்தகோ வணமுன்
செய்த தென்னென்று திகைத்தனர் தேடுவா ராஞர்.

(எ - து.) நாயனார் பிரமசாரியார் கூறிய பந்தயவார்த்தையை அறியாமல் முன் காப்பிடத்தில் வைத்திருந்த ஐயர் கோவணத்தைக் காணும்பொருட்டு மிகவும் சீக்கிரமாகச்சென்றுபார்க்க, யாதொரு களங்கமும் இல்லாத சித்தத்தையுடைய அவர் முன் வைத்த கோவணத்தைக் காணாதவராகி நாம் செய்தது என்ன, நம்மைக் கோவணஞ் செய்தது என்ன ! என்று மனந்திகைத்தவராய் மீண்டுந் தேடுவாராயினர் என்பதாம்.

அவர், ஐயர் கைதவம் அறிவுறாது முன் வேறிடத்து வைத்திருந்த கோவணம் (காணக)கடிது அணுகிச்சென்று எய்த, முன்கோவணம் மையில் சிந்தையர் கண்டிலர். செய்தது என்னென்று திகைததனர் தேடுவார் ஆஞர் எனக்கொண்டுகூட்டுக.

நாயனார் - உயிர்க்கு அகத்துறுபபாகிய அன்பினைபபெற்றன ராகலின், அவ்வன்பினைப் பிரியாத அருளும உடையராயினர் ஆகவே அவருயிரைவிடாதது அன்பு; அன்பினைவிடாதது அருள். விடாததன்மையை அன்பும் அருளும் பெற்றிருக்குமாயின், அருளாகிய கோவணம் எங்ஙனம் இவர்வைத்தவிடத்தில் வேறாகஇருக்கும்? ஆகலான் அருளானது கோவண வுருவொழிந்து நாயனாரது அன்புருவானதால், கோவணம் இருந்தவிடத்திலும் வேறிடத்திலும் இல்லாமற் போனதென்பார்—கோவணம் இருந்தவேறிடத்திற் கண்டிலர்—என்றார். அன்பும் அருளும் தம்மோடு கலக்கபபெற்றவர் சுட்டியறியும் சுட்டறிவையும் தம்மையும் அறியாது அன்பினால் உள்ளமுருகி அருளுருவாகவேயிருப்பரன்றி வேறுபிரிந்து இது அருளென்று ஒருவருக்கும் காட்டஅறியாரென்பார்—மையில் சிந்தையர் கண்டிலர்— என்றார்.

தற்போதச் செயலற்று அருள்வசப்பட்டாரை—இறைவன் அவர்கள் அவ்வருளைச் சுதந்தரமாய் எங்கெங்குங் கண்டு ஆளுமாறு செய்வதில் தீவரமும், அவர்களும அருளை ஆங்காங்கும் கண்டு ஆளுவதில் தீவரமும் உடையராதலால், அவர்கோவணம் கொண்டுவாவென்ற அக்கணமே அவ்வருட்கோவணத்தைக் கண்டு அவ்வருளுடையானை வந்துசேரச் சென்றனரென்பார்—அவர்கடிது அணுக எய்திநோக்குற—என்றார். அருளானது தன்னை ஆளவரும் அன்புடையாருக்கு †—ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என்உள்ளமும் போய் நான் கெட்டவா—என்றபடி, உடம்பின் செயலையும், உயிரின்

---

* கோ—தற்போதம். வண்ணம்—அப்போதத்தின் செயல். † திருவாசகம். திருத்தெள்ளேணம்—செ - கஅ.

செயலையும், உயிர் உணர்வின் செயலையுங்கெடுத்து, உடம்பின் வகையானும், உயிரின் வகையானும்; உணர்வின் வகையானும் செயப்படும் செயல்வகைகளை எண்ணும் உள்ளத்தின் செயலினையும் போக்கி, இவ்வாறு செயற்படுவனவெல்லாம் செயலற்றுப் போக உடம்புமுதல் உள்ளம்வரையிலும் நின்று அதனதன் செயலை இயக்கிவந்த நான் என்றெழும் ஆணவ அகங்காரத்தின் செயலையுங் கெடுத்து அதனைத் திகைத்து நிற்கச்செய்யும் என்பார்—வைத்தகோவணம் செய்தது என்னென்று திகைத்தனர்—என்றார். செயலெல்லாம் ஒழியினும் அச்செயல்களில் பழகிவந்த ஆன்ம அறிவின்கண் அவ்வாசனை 'இங்குளிவாங்குங் கலம்போலத்' தங்கியிருக்குமாகலின், முன்போல் உடம்புமுதலியன தோன்ற அவைகளில் அவ்வறிவு செல்லும் இயல்புடையதென்பார்—முன்தேடுவாரானார்—என்றார். இங்ஙனமான சித்தாந்த உண்மையை அறியும் வன்மையில்லார் யாங்கள் ஞானிகளாயினோம், அருளுடையராயினோம் என்றுகூறும் அவர்களது பந்தயங்களெல்லாம்போலிப்பந்தயமாய்ப போயொழிய இறைவன் தான்பந்தயங்கட்டிக்கொண்டு அப்பந்தயத்தை அருள்பெற்றநாயனார்பால் காட்டினாலன்றி பிரகாசிக்கா ஆகலான் அது பிரகாசிக்குமாறு கோவணங் கொண்டுவாவென்றுகூறுவதை அவர் அறியாரென்பார்—ஐயர் கைதவம் அறிவுறாது என்றார்.

இத்திருபபாசுரத்தான்,—இறைவன்தனக்கு ஆட்பட்டாரைத் தான் அருளால் ஆளுமுறைமையினை, அவர்களுக்குமுன் உணர்த்தான்என்னும் உணமைதோன்ற—ஐயர் கைதவம் அறிவுறாது—எனவும், இறைவனால் ஆளப்பட்டார் தம்மை இறைவன் நன்றே செய்யச்செய்யினும், பிழையே செய்யச்செய்யினும் அதையதைச் செய்வதேயன்றி, அச்செயலில்வரும் நன்மையையும் பிழையையும் எண்ணார் என்னும் உண்மைதோன்ற—இறைவனார்கோவணம் கொண்டுவாருமென்று உரைத்த அளவில் கோவணம் இருந்த இடத்திலும் வேறிடததிலும் எய்திநோக்கினார்—எனவும்—கண்டிலர் எனவும், தமக்குவரும் நன்மையையும், பிழையையும் கருதாராயினும், தம்மால் அடியார்களுக்கு, ஏதேனும் நன்றாவது பிழையாவது விளைவதாயின் அதனை எண்ணிச்செய்வது அன்பரதுகடமை என்னும் உண்மைதோன்ற—தேடுவாரானார்—எனவும், தேடியும் கண்டிலராகவே மையில் சிந்தையராகிய நாயனார் இச்செயல் யார்செய்யவல்லார் என்று சிந்தித்துப் பின்னர் நஞ்செயலற்று நான் என்பதும் அற்று. நாதன் தன்செயல் நோக்குமநமக்கு, திருவருட்செயலன்றி வேறு எச்செயலிருக்கின்றது என்று அவசமுற்று எண்ணுவதுமற்று செய்வதுமற்று நின்றனர் என்னும் அவ்வுண்மைதோன்ற—கோவணம் செய்தது என்னென்று திகைத்தனர்—எனவுங் கூறபபட்டன. (௨௰)

பொங்கு வெண்கிழிக் கோவணம் போயின நெறிமேற்
சங்கை இன்றியே தப்பின தென்றுதம் சரக்கில்
எங்கு நாடியும் கண்டிலர் என்செய்வார் நின்றார்
அங்கண் வேதியர் பெருந்துடக் கினில்அகப் பட்டார்

(எ - து.) பிரமசாரியாரால் கொடுக்கப்பட்ட வெண்ணிறமிக்க கிழித்தகோவணமானது மறைந்து போனவகையை எண்ணவேண்டிய அளவில் எண்ணிப்பார்த்தும், (புலப்படாமையான்) அக்கோவணம் எவ்வழியானோ தப்பிப்போயிற்று இனிமேல் சங்கையில்லை என்று தெளிந்து, (மறுபடியும் நாம்வைத்திருக்கும் கோவணச் சிப்பங்களில் பார்ப்போமென்று எண்ணி) கோவணச்சரக்கில் ஒவ்வொரு மூட்டைகளிலும் ஆராய்ந்துபார்த்தனர். பார்த்தும் அச்சரக்குகளிலும் காணப்படாமையால் அவருக்கு எண்ணும் எண்ணமும், செய்யும் செயலும் என்ன இருக்கின்றது. ஒன்றும் செய்ய அறியாதவராய் நின்றனர். (அங்ஙனம் நின்றாராயினும்) பிரமசாரியரர் (எண்ணிவந்த) பெருவழக்கு (அவரை விடாதாகலான்) அவர் வழக்காகிய பெரியதொடக்கினில் அகப்பட்டுக் கொண்டனர் என்பதாம்.

மேலைச்செய்யுளில் "இங்குளிவாங்கும் கலம்போல," என்று எடுத்துக்கூறியது போல் முன் வாசனாவசத்தான் கருவிகரணச் சம்பந்தப்பட்டு கோவணத்தை எங்கெங்குந் தேடத்தலைப்பட்டும் அது காணாதொழிந்தது. அதனோடு தேடத்தலைப்பட்ட கருவிகரணங்களும மேன்மேல் முனைத்துத் தோன்றுதலொழிந்தன. ஏனெனில்:—அக்கினியானது தன்னைச் சுடாதிருப்பதற்கு அக்கினிஸ்தம்பன மென்னும் நல்ல தவத்தைச் செய்தவர் அக்கினியிற்கிடப்பினும அதனால் வேகாது தமது நிறத்திலேயே நிற்பது போலும், குதிரை ஊர்வதற்குரிய பாகநூல் கற்றுவல்லார் அக்குதிரையின் வேகத்துட்படினும் தவறிவிழுந்து கலங்காது தமது நிறத்தில் நீங்காது நிலைபெற்றிருப்பது போலும், தேடியுங் காணாமையால் அவ்வளவில் தாம்தேடுஞ் செயலையுமவிட்டு அச்செயலுக்குரிய கருவிகரணங்களையும விட்டுத் தான் முன்னிருந்த அருட்செயலையே நோக்கி அந்நிலையிலேயே நின்றனர் என்னும் அவ்வுண்மைதோன்ற—கோவணம் எங்கும் நாடியும் கண்டிலர் என்செய்வார் நின்றார்—என்றார். இறைவனால் செய்யப்படும் அருள் தொடக்கு—அருட்செயல்வசப்பட்டார் தன்னோடு ஏகனாகிநிற்றற்கும், அங்ஙனம் அவர் நின்றபின்னர், அவர்களை ஓர்விடயங்களையும அறியச்செய்யாது, அவைகளையெல்லாம் தானே அறிவதற்கும், அங்ஙனம் தான் அறிந்தபின்னர் தன்னையின்றி அவர்கள் ஓர் விடயத்தையும் விடயியாமைக்கும் தொடங்கும தொடக்கு பெரிதென்னும் அவ்வுண்மைதோன்ற—வேதியர்பெருந்தொடக்கு—என்றார். இங்ஙனமான அருள்தொடக்கில் நாயனார் தொடக்குறுதற்கு இறைவன் அருள்நோக்கு இல்லையாயின் அத்தொடக்குக் கூடாதென்னும் அவ்வுண்மைதோன்ற—அங்கண்(ணினில்) அகப்பட்டார்—என்றார். மேல் நெறியான அத்தொடக்கில் இவர் யாதொரு தடையுமின்றி அகப்படவே அவர் தேடியபொருள்களும், தம்மிடத்துப் பற்றை விளைவிக்குஞ் செயலை அவர்க்குச் செய்யாதொழிந்தன. அதில் ஐயமில்லை என்னும் அவ்வுண்மைதோன்ற—தன்சரக்கு(கள்) சங்கையின்றியே தப்பின—என்றார் தாம தேடியபொருளில் நீக்கமுண்டாகவே மேல் நெறியாகிய அருள்நோக்கத்தின்வழியே வேதியர் தொடக்கினில் அகப்படுதற்குச் செல்வாராயினார் என்னும் அவ்வுண்மைதோன்ற—மேல்நெறிபோய்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான்—வேதியர் செய்யத்தொடங்கிய தொடக்கு நாயனார் தன்னருட்செயலில் அகப்படுமாறு செய்யத்தொடங்கிய தொடக்காதலான் அதனைப் பெருந்தொடக்கென்றும்,—அப்பெருந்தொடக்கில் அகப்படுதற்கான பேரன்பை நாயனார் உடையவராகலான் அவரை—அகப்பட்டார்—என்றும், அங்ஙனம அகப்படவேண்டிய அவர்க்கு, அவர் தேடிவைத்துள்ள சரக்குகளில் கோவணங் கிடைத்திருக்குமாயின் அவர் அகப்படவேண்டிய அருட்டொடக்குக்கு முரணாம் ஆகலின் அம்முரண் உண்டாகாவாறு—தன்சரக்கில் எங்குநாடியுங் கண்டிலர்—என்றும், அன்றியும அவர்சரக்கில் வேதியர் கோவணம் கிடைத்திருக்குமாயின் அக்கோவணமாத்திரம் அவர்பொருளென்று கொடுத்துவிட்டுத் தன்பொருளெல்லாம் தன்பொருளாகவே பற்றிநிற்க வருமாகலான் அப்பற்றுநீங்கி எல்லாம அவர்பொருளாகவே ஆமாறு—கோவணம் சங்கையின்றியே தப்பின—என்று எண்ணினார் என்றும, பொருட்பற்று அவரைவிட்டு நீங்கி, அருட்பற்று அவரைத் தொடரவருமாயின். அவர் தாம செய்யும் செயலற்று அருட்செயலில் நிற்கவேண்டியவரே யன்றி வேறுசெயல் இல்லையாகலான்—என்செய்வார் நின்றார்—என்றும, இவையெல்லாம இறைவன் அருள்நோக்கன்றி கூடாவாகலான்—அங்கண்வேதியர் என்றுங் கூறப்பட்டன. (௨௧)

### வேறுகோவணம் கொண்டுவருதல்.

மனைவி யாரொடு மன்னிய கிளைஞரும் தாமும்
இனைய தொன்றுவந் தெய்திய தெனஇடர் கூர்ந்து
நினைவ தொன்றிலா வருந்தினர் நிற்கவு மாட்டார்
புனைய வேறொரு கோவணம் கொடுபுறப் பட்டார்.

(எ - று.) (எவ்வாறு அகப்பட்டாரெனின் கோவணங்கிடைக்காதொழியவே தமக்குண்டாய மனவருத்தத்தை யாற்றுவான்பொருட்டு) தம் இல்லாளோடு தமக்குரிய சுற்றத்தாரையும் அழைத்து, அவர்களோடு தாமும் கலந்தவராய், எனக்கு இப்போது நேர்ந்துள்ள கவலையை நீங்கள் யாவரும் அறிவீரன்றோ? இத்தன்மைததான தீங் கொன்று வந்துவிட்டதே! இச்சமயத்தில் இத்தீங்கு நமக்கு வரலாமா? என்று தமக்குண்டாகிய மனக்கவலையை எடுத்துக்கூற, அவர்களும் கவலை கூர்ந்தவர்களாய், ஒன்றுஞ்சொல்லவறியாது நிற்ப, பின்னர் நாயனார் மிகவும் கவலைகூர்ந்து தம்முள்தாமே நினைக்கும் நினைவும் பிறரிடத்துக்கூறும் நினைவும் இல்லாதவராய், அவர் பொருளை அவருக்குக் கொடுப்பதற்கில்லாமற்போயிற்றே என்கிற வருத்தமொன்றே உடையராய் வருந்தி மனைவிமுதலிய சுற்றத்தாரோடும் நிற்கவும்மாட்டாதவராய், (ஒருவகையான எண்ணங்கொண்டு) அந்தப்பிரமசாரியார் உடுப்பதற்குத் தம்மிடத்திலுள்ள ஒரு கோவணத்தை எடுத்துக்கொண்டு பிரமசாரியாரிடம்போகப் புறப்பட்டனர் என்பதாம்.

மனைவியாரும் சுற்றத்தினரும் பிரமசாரியார் புசிப்பதற்கின்றி இடையில் கோவணவழக்கு வந்து விட்டதென்று நாயனாரைபபோல் ஒன்றுந் தோன்றாது வருந்தினரென்பது தோன்ற —மனைவியாரொடு மன்னிய கிளைஞருந் தாமும், இனையதொன்று வந்து எய்தியது என இடர்கூர்ந்து— என்றார். உலக இயலில் தமது நினைவை மேன்மேலும் நினைவிக்கவல்ல சுற்றத்தினரும் நினைவிக்கும் செயலற்று நிற்கவே, நாயனார் நினைவு மறந்து நின்றனர் என்பதுதோன்ற—நினைவது ஒன்றிலர்—என்றார். நினைவது ஒன்றிலராகவே அவருள்ளத்தில் நிறைந்திருந்த அன்பினால் "சிவனே! நல்லூர் நம்பரனே! எமபெருமானே! எம்மானே! இப்பிரமசாரியாராகிய வேதியரது அருளை நான் இன்று எவ்வாறு பெறவல்லேன்" என்று வருந்தினர் என்பதுதோன்ற—வருந்தினார்—என்றார். அன்புமீதூரவே, அவ்வன்பு அருளைக்கூடும் முயற்சியைத் தோற்றுவிக்கும் இயல்புடைத்தென்பதுதோன்ற—நிற்கவுமாட்டார் புனைய வேறொருகோவணம் கொடு புறப்பட்டார்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான் - அன்பின்பயனாகிய அருள்பெறுதற்குரிய நாயனார் அருளுக்குரிய அன்பினை இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியினிடத்தும், புதல்வரிடத்தும், ஏனைச் சுற்றத்தாரிடத்தும செலுத்திவந்ததனால் வேதியராகிய விருந்தினர் பொருட்டுத் தாம்வருந்தும்பொழுது அம்மனைவிமுதலாயினாரும் தம்முடன்வருந்தி அன்புபாராட்டி நாயனாருக்கு மேன்மேல் அருள்நாட்டத்தை உண்டாக்கித் தம்மிடத்து அவர்வைத்த அன்பின்பயனை அவருக்குத் தந்தனரென்றும், தம்மாலும் தம்மைச்சார்ந்தாராலும் அன்பு நிறையப்பெறவே அருள்பெறுதற்குரிய நன்முயற்சி அக்கணமேதோன்றக கோவணங்கொண்டு புறப்பட்டாரென்றுங் கூறப்பட்டன. (உ௬)

### கோவணங்காணாத அதிசயங்கூறல்.

அத்தர் முன்புசென் றடிகணீர் தந்தகோ வணத்தை
வைத்தி டத்துநான் கண்டிலேன் மற்றும்ஓர் இடத்தில்
உய்த்தொ ளித்தனர் இல்லைநான் ஒளித்தவா றறியேன்
இத்த கைத்ததோ ரதிசயம் கண்டிலேன் என்று.

(எ - று.) பிரமசாரியாரிடம் வந்து 'சுவாமிகாள்! தேவரீர்கொடுத்த கோவணத்தை நான் வைத்திருந்த காவலுள்ள விடத்தில் காணப பெற்றேனில்லை. நான் காணாதிருக்கும்படி வேறிடத்தில் ஒளித்து வைக்கத்தக்கவரும் இல்லை. அக்கோவணம் எவ்வகையாய் மறைந்துபோயிற்றோ அதனை நான் அறியேன்; அது மறைந்துபோன வகையை எவ்வகையாய் எண்ணிப்பார்த்தும் அறிய முடியவில்லை. (இது பெரிய அதிசயமாகவிருக்கின்றது.) இவ்வகைத்தான அதிசயத்தை நான் எப்பொழுதுங் கண்டதில்லை' என்று கூறினரென்பதாம்.

இத்திருப்பாசுரத்தான்—நாயனார்—கோவணக் கள்வரிடத்தில் சென்று, சுவாமிகாள்! தேவரீர் என்னிடம் கோவணத்தைக் கொடுத்தபோது நானும் அறிந்தேவாங்கி காப்பிடத்தில்வைத்தேன். அதனை என்னைச்சார்ந்தயாவரும் அறிவார். என்றாலும் யாவராலும் அறியப்பட்ட அக்கோவணம் இப்பொழுது ஒருவராலும் காண்டற்கு அறியப்படவில்லை. அது என்ன கண்மாயமோ! அந்த கண்மாயத்தை இருகண்ணுடையரால் அறியத்தக்கதன்று, முக்கண்ணுடையானே அறிவான். கோவணமோ ஒன்று, அது செய்தவண்ணமோ இவ்வண்ணமென்று அறியமுடியவில்லை. மைப்படிந்தகண்ணுளையுடையாளாகிய மாவடியானது—படியும், அவனது நிறமும், வண்ணமும், அவனருளாகிய கண்ணைக்கொண்டு கண்டால் அல்லாமல், இப்படிஎன்றும், இந்நிறமென்றும், இவ்வண்ணமென்றும் எவ்வாறு காணமுடியாதோ, அஃதேபோல்—தேவரீரால் கொடுக்கப்பட்ட கோவணம்—நான்வைத்த இடத்தில் இல்லாமல் எப்படியாய்ப் போயிற்றோ, என்னிடத்திலுள்ள எந்தக்குணத்தை வெளிப்படுத்த என்னகுணங்கொண்டுபோயிற்றோ, என்னிடத்திலுள்ள எந்தவாசனையைக்காட்ட எவ்வண்ணமாய்ப் போயிற்றோ அப்படியையும், அக்குணத்தையும், அவ்வண்ணத்தையும் நற்றவர்சேர் திருவடியை என்றலைமேல் வைப்பவராகிய இந்நல்லூர்ப் பெருமான்றான் உணர்த்தவேண்டும். ஏனெனில்,—அவ்விறைவன்றான் * உலகத்து உற்றுலவுவதாகிய எழுமைப் பிணியையும் வைத்தவர், பிணியில் உயிரையும் வைத்தவர், உயிர் செல்லும் கதிகள் வைத்தவர், மற்று அமரர் கணம் வைத்தவர், அமரர்காணா மறைவைத்தவர், குறைமதியம் வளரவைத்தவர், செற்றமலி ஆர்வமொடு காமலோபம் சிறவாத நெறிவைத்தவர், துறவி வைத்தவர்—என்று சொல்லப்பட்டிருக்கின்றதாகலான் அவரன்றி இக்கோவணத்தை யார் எடுத்து எவ்விடத்தில் வைக்கவல்லவர். ஆகவே அவர் அருள்வைத்து வைத்த இடத்தைக் காட்டுவாராயின் இனி யான் காணமுடியும், ஆகலின் இனி அவர்காட்டும் அதிசயத்தைக் காண நினைந்திருக்கும் உள்ளத்தனாயிருக்கின்றேன் என்று கூறினாரென்று கூறப்பட்டது. (உ௬)

## கோவணங்கொடுத்துப் பிழைபொறுக்க வேண்டல்.

வேறு நல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேன்
கீறு கோவணம் அன்றுநெய் தமைத்தது கிளர்கொள்
நீறு சாத்திய நெற்றியீர் மற்றது களைந்து
மாறு சாத்தியென் பிழைபொறுப் பீரென வணங்க.

(எ - து.) (சுவாமிகாள்! தேவரீர்கொடுத்தகோவணம காணாதொழிந்தமையால்) என்னிடத்திலுள்ள நல்லதோர்கோவணத்தை இதோகொண்டுவந்தேன். (அதுவிரும்புந்தன்மையுடையது ஆகலின் அதனை விருப்பத்துடன் ஏற்றுக்கொள்ளல்வேண்டும், ஏனெனில் நான்கொண்டுவந்தகோவணம்ஓர் ஆடையினின்றும்) கிழித்ததன்று, (ஆடையைப்போலும்) வேறாகக்கோவணமாகவே நெய்யப்பட்டுவைத்திருப்பது. பிரகாசிக்கும் திருவெண்ணீற்றை அணிந்திருக்கும் நெற்றியையுடையவரே! (தேவரீர்) தரித்திருக்கும் கோவணத்தைக் களைந்துவிட்டு, அதற்கு மாறாக இக்கோவணத்தை அணிந்துகொண்டு எனது குற்றத்தைப் பொறுத்தருள்வீரென்று வணங்க என்பதாம்.

பிரமன்முதலிய பலதேவரும் தத்தமக்கும் பரம் உள்ளது உள்ளது என்று கிழித்தெடுத்து ஆளத்தக்க வேதம் இறைவன்கொடுத்த கோவணம் என்பார்—கீறுகோவணம்,—என்றார். பிரமன்முதலிய பலரையும் பரமல்ல என்று கிழித்தெறிந்து அவர்களைப் பூர்வபக்ஷமாக வேறுவைத்து சிவனே பரமென்று சித்தாந்தப் படுத்தவல்ல ஆகம சம்பந்தம்உள்ளது நாயனார் கொடுத்த கோவணம் என்பார்,—வேறுநல்லதோர் கோவணம்—என்றார். பூர்வபக்ஷப் பயிற்சிவயத்தால் உண்டாகும் உணர்ச்சிவிசேடத்தான் சிவன் ஒருவன்தான் பரம், ஏனையோர் அன்னர் அல்லர் என்றுகூறும் துணிவி

* சு - வது திருமுறை திருநல்லூர் செ—சு

ழுந்து, பூர்வபக்ஷ தெய்வங்களோ டொப்பப் பரசிவத்துக்கும் பரங்கூறுவதுபோலன்றி, குறிகளாலும், குணங்களாலும், அடையாளங்களாலும், அவரவரையும் ஆராய்ந்து ஆராய்ந்து, இவர் பரமாகார் இவர்பரமாகாரென்று கழித்து, சித்தாந்த உணர்ச்சிவிசேடத்தான் பரசிவத்துக்கே தனிப்பரம் அமைத்துக்கூறும் சிறப்புடைத்து ஆகமஞானம் என்பார்—கீறுகோவணம் அன்று நெய்தமைத்தது என்றும். திருநீறணியும் சைவ கலமுடைய வேதியராகியதேவரீர் பொதுபபரங்கூறும் பொது உணர்ச்சியைக் களைந்து தனிப்பரங் கூறும் உணர்ச்சியை மேற்கொள்ளல் கடன் எனபார் — நீறுசாத்திய செற்றியீர் மற்றது களைந்து மாறுசாத்தி என்றும், திருநீறுசாத்தித் தனிப்பரசிவத்துக்குத் தனியடியாராகிய பெரியோரிடத்துப பெற்ற சிவஞானத்தைப் போற்றி, அவரேவிய பணியில் பிழைபடச்செய்தல் பெரியதோர் குற்றம்என்பார்— என்பிழை பொறுப்பீர் என்றும், தனிப்பரசிவத்துக்குப் பொதுப்பரங்கூறும் பிழையும், தனிப்பர முணர்ந்த தனியடியார்களுக்குச் செய்யும் பிழையும் பெரும்பிழையெனக் கருதாதார் போலன்றிப் பிழையெனக்கருதி வணங்கின் அதுவே அப்பிழைக்குக் கழுவாயாகும் என்பார்,—வணங்கி—என்றுங்கூறினார்.

இததிருப்பாசுரத்தான், இருகோவணத்தினியலும் அதனுள் களைவதைக் களைந்து கொள்வதைக் கொள்ளும் இயலும் தன் பிழையியலுங்கூறி நாயனார் வணங்கிய திறங் கூறப்பட்டது. (௨௪)

## பிரமசாரியார் கோபித்தல்.

நின்ற வேதியர் வெகுண்டமர் நீதியார் நிலைமை
நன்று சாலவும் நாளிடை கழிந்ததும் அன்றால
இன்று நான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே
றொன்று கொள்கென வுரைப்பதே நீரென வுரையா.

(எ - து.) அங்கு நின்றவண்ணமாகவே நிற்கின்ற பிரமசாரியார் (வேறுகோவணந் தருகின்றேன் என்று நாயனார் சொல்லியதைக்கேட்டுச்) கோபங்கொண்டவராய், (நீர் தானோ) அமர்ந்தநீதியுடையவர், உம்முடையநீதி மிகவும் நன்றாயிருக்கின்றது, (அந்தோ!) நான்கொடுத்து நாள்கழிந்ததும் இல்லையே, இப்பொழுதுதானே கொடுத்து விட்டுப் போயினேன். (அங்ஙனம்) நான் அடைக்கலமாக வைத்தகோவணத்தைக் கொள்ளைகொண்டு, அதற்கீடாக மற்றொருகோவணத்தை நான் தருகின்றேன், அதனை நீர் வாங்கிக் கொள்ளவேண்டுமென்று நீர் சொல்லலாமா! என்றுகூறினார் என்பதாம்.

வேதவுள்ளுரையாய் நிற்பவர் சிவபெருமானே யாகலான்— நின்றவேதியர்—என்றார். வேதசிவாகமங்கட்குத் தாமே தலைவராயிருக்க, அவற்றுள் ஒன்றுகளைதல் ஒன்றுகொள்ளல் கூடாதாகலான்—வெகுண்டார்—என்றார். இறைவனை அசிந்தனுகக்கண்டு சித்தத்துள்ளே சிந்திக்கு முறை கூறும் வேதார்த்தத்தையும், அசிந்திதனுய்நின்ற பதியைச் சிந்திதனுகக்கண்டு வழிபடுமுறைமை கூறும் ஆகமார்த்தத்தையும் நாயனுர் நீதியாய் உணர்ந்து, உணர்ந்தமுறைப்படியே வேதார்த்தத்தைத் தன்னுட்கொண்டு ஆகமார்த்தத்தை இறைவனிடத்துக் கண்டு தம்பொருளாயுள்ள கோவணத்தைக் கொடுக்க வந்தாராகலான்—அமர்நீதியார்நிலைமை சாலவும் நன்று—என்றார். சித்தத்துள் சிந்திக்கும் சிந்தனைமுறையினும், சிந்தித்தமுறைப்படியே வழிபடும் வழிபாட்டின் முறைமையினும் நாயனுரது நாள் கழிந்ததன்றி, இடைவிட்டிருந்தநாள் ஒருநாளும் இல்லையாகலான்—நாளிடை கழிந்தது அன்றால்—என்றார். இங்ஙனமான சிந்தனையின் வண்ணமும், வழிபடும்வண்ணமும் நாயனுர் கொண்டது இறைவன் அன்றுவைத்த அருள்வண்ணத்தால் ஆகலான்—இன்று நான்வைத்த கோவணங்கொண்டு—என்றார். சிந்தனையும் வழிபாடும் ஒன்றுபட்டொழுகவல்ல நாயனுர், தன்னதென்று சொல்லப்பட்ட எல்லாப் பொருளோடு தன்னையும் கொடுக்கவேண்டியவரா யிருக்க, அதற்குமாறாக ஒரு கோவ

வர்ந்தைக் கொண்டுவந்து கொடுத்து இதனைக் கொள்ளவேண்டுமென்று கூறியது நாயனார்கூறும் கூற்றன்றாகலான்—அதற்கு எதிர்வேறு ஒன்று கொள்க என நீர் உரைப்பதே எனஉரையா—என்றார்.

இத்திருப்பாசுரத்தான், இறைவன், நின்றுதங்குமிடம் வேதம் என்றும், வேதசிவாகமங்களும், அதன்பொருள்களும் ஒன்றென்றுகொள்வதே இறைவன் திருவுள்ளப் பாங்கென்றும், இறைவன் திருவுள்ளப்பாங்கின்படியே அவ்விரண்டொழுக்கங்களையும் நீதியாகக்கொண்டு நடந்து இறைவனை மகிழச்செய்தவர் நாயனார் என்றும், வேதசிவாகமங்களை நாயனார் கற்பதிலும், அவைகளின் பொருள்களை யுணர்வதிலும் நாளைப் போக்கினவரென்றும், அவ்விருசெயலையும் தமதுநுண்ணுணர்வால் மிகவிரைவாய்ச் சிலபொழுதில் முடித்தவரென்றும், ஓதியுணர்ந்த முறைப்படியே அவ்வழியொழுக சிறிதே நாயனார் இறைவன்முன்னிலையில் தலைப்பட்டன ரென்றும், இறைவன் அவர்பால் வைத்த பேரருளால் அவர்சிறிதேகொண்ட ஒழுக்கநெறியானே அவரை முழுவதுங் கொள்ளைகொள்ளத் துணிந்தனரென்றுங் கூறப்பட்டன. (உ௬)

நல்ல கோவணங் கொடுப்பனென் றுலகின்மேல் நாளும்
சொல்லு வித்ததென் கோவணம் கொள்வது துணிந்தோ
ஒல்லை யீங்குறு வாணிபம் அழகிதே உமக்கென்
றெல்லை இல்லவன் எரிதுள்ளி னாலென வெகுண்டான்.

(எ - ந.) (பிரமசாரியார் நீர்சொல்லலாமா என்று சொல்லியதேயன்றி இன்று எனது கோவணத்தை மோசவழியால் கொள்வதற்குத் துணிந்துதானோ) நாயனாரே நீர் இவ்வுலகத்தில் அடியார்களுக்கு நல்லகோவணத்தைக் கொடுப்பேனென்று, நாள்தோறும் யாவரும் அறியும்படியாக யாவராலும் சொல்லிவித்தது, (ஆஹா) நீர் இவ்விடத்தில் ஒருகணமேனும் ஓயாது விரைந்து விரைந்துசெய்கின்ற வாணியத்தொழில் உமக்குமிக அழகிது என்று, எல்லையில்லாதவனாகிய இறைவனார், நெருப்பானது துள்ளித்துள்ளிச் சுடர்விட் டெறிவதுபோல, கோபித்துக்கொண்டனர் என்பதாம்.

அடியார்களுக்குக் கொடுக்குங்கோவணம் நெய்தகோவணம் என்பார்,— நல்லகோவணம்—என்றார். பிறர்க்குக் கொடுத்தலாகிய ஈகையை யாவரும் அறியச்செய்தல் புகழ் புண்ணியங்களைப் பெறுதற்கேயன்றி அவரிடத்தில் உள்ளபொருளைக் களவினால் கொள்ளை கொள்வதற்கன்று என்பார்—கோவணங் கொடுப்பனென்று, உலகின்மேல் நாளும் சொல்லுவித்தது கோவணங்கொள்வது துணிந்தோ—என்றார். புகழும் புண்ணியமும் தேடுதற்குரிய நல்லூரின்கண்வந்து, அவைகளைத் தேடுவதைவிட்டு, தாய்தந்தைமுதலாயினரை விட்டுப் பிரமசரிய நிலையில் நிற்கும் என்பொருளை இப்படிக்கொள்ளைகொண்டால் இதனால் பழியும்பாவமும் உண்டாகுமல்லவா, இந்தப் புண்ணியக்ஷேத்திரத்தில் இப்படிச்செய்யலாமா? புண்ணியக்ஷேத்திரத்தில் நீர் தேடிவைத்துள்ள பொருளைக் கொடுப்பதைவிட்டு, பிறர்பொருளைக் கொள்ளத்துணிந்தது என்னதருமம். இப்போது நீர்செய்தது வர்த்தகதருமமுமன்றே என்பார்,—ஈங்குறு வாணிபம் அழகிதே உமக்கு—என்றார். இவ்வகையான வார்த்தைகளை மேன்மேல் பற்றித்துள்ளிஎழும் தீயைப்போலக் கோபமானது மேன்மேல் பொங்கியெழக் கூறினார் என்பார்—எரிதுள்ளினால் என வெகுண்டான்—என்றார். இங்ஙனம் வெகுண்டுகூறிய இறைவன் நாயனார்பால் அளவுபடாத அருளையுடையவன் என்பார்—எல்லையில்லவன்—என்றார்.

இத்திருப்பாசுரத்தான்,—எல்லைஇல்லவன் என்றதனால் நாயனார்பால் தனக்குள்ளஇருந்தகருணையைக் காட்டவந்தவனென்றும்,—எரிதுள்ளினால் என வெகுண்டான் என்றதனால் அருளானது இறைவனுள் அடங்காது மேன்மேல் பொங்கிஎழுந்தது என்றும், —ஒல்லை ஈங்குறு வாணிபம் அழகிது உமக்கு என்றதனால்—இந்த நல்லூர் என்னும் அரிய சிவக்ஷேத்திரத்தில் நீர் அடியார்களுக்கு அறுசுவையுடன் அன்னம் அளிப்பதும்,

கந்தை, கீள்கோவணம் இவைகளைக் கொடுப்பதும் மிகஅழகு இதுபோலும் யாவர் செய்தாரென்று அவர்செய்யும் அறத்தைப் புகழ்ந்ததென்றும்—நல்லகோவணம் கொடுப்பன் என்று உலகின்மேல் சொல்லுவித்தது என்கோவணம் கொள்வது துணிந்தோ என்றதனால்,—இறைவன் அடியார்களுக்கு நல்லகோவணத்தைக் கொடுத்து அவர்களை மகிழச்செய்து அவர்களால் அப்புண்ணியத்தை சொல்லுவித்தாலல்லாமல் அவ்விறைவன் செய்யவேண்டிய அருளைச்செய்யான் என்னும் அவ்வுண்மையைத் துணிந்து, அது போற்செய்து கோவணத்தைக் கொண்டாரென்று அவர்கொண்டதிறத்தைக் கூறினாரென்றும் கூறப்பட்டன. கோ—தலைமையாயினாது, வண்ணம்—தன்மை. எனவே,—நாயனார் கொடுத்துவந்த கோவணம்—தலையான அன்பின்வண்ணம் எனவும், இறைவன் கொடுத்த கோவணம்—தலையான அருளின்வண்ணம் எனவும் பொருள்கொள்க (உகூ)

## நாயனார் கோபந்தணிய வேண்டல்.

மறிக ரந்து தண்டேந்திய மறையவர் வெகுளப்
பொறிக லங்கிய வுணர்வின ராய்முகம் புலர்ந்து
சிறியஎன் பெரும் பிழைபொறுத் தருளுவீர் அடியேன்
அறிய வந்ததொன் றன்றென அடிபணிந் தயர்வார்.

(எ - து) (தாம் எப்பொழுதுந் தாங்கியிருக்கும்) மானையொளித்து, (பிரமசாரிகளுக்குரிய) தண்டினைத்தாங்கி வந்தவேதியர், (நெருப்புதள்ளினாற்போலும்) கோபிக்க, (நாயனார் அதுகண்டு) தமது அறிவுநிலைபெறாது ஐம்பொறிகளுங் கலங்கிய வுணர்வினராய் முகம்வாடி, அவரடியில் வீழ்ந்து வணங்கி (இப்பிழை) அடியேனுடைய புத்திபூர்வகமாய் அறிய வந்ததல்ல (ஆகலின்) சிறியேனாகிய என்னால் செய்யப்பட்ட பெரும்பிழையாகிய இவ்வொருபிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்று வருந்துவாராயினார் என்பதாம்.

முகம்புலர்ந்து, அடிபணிந்து, அடியேன் அறியவந்ததன்று, (ஆகலின்) சிறிய என் பெரும்பிழையொன்று பொறுத்து, அருளுவீரென, அயர்வார்எனக் கொண்டுகூட்டுக.

மானைக்காட்டி மானைப பிடிப்பதுபோல் என்னும் நியாயப்படி கரத்திலேந்தியிருக்கும் மானைமறைத்து மானுடராகிய நாயனாரைப்போல் மானிடவடிவங்கொண்டும், நாயனார் செய்துவந்த அறச்செயலில் அவரை நிறுத்தத் தண்டேந்தியும் வந்தனரென்பது தோன்ற—மறிகரந்து தண்டேந்திய மறையவர்—என்றார். தண்டாகிய செங்கோலை ஏந்தி சிவதருமத்தில் நாயனாரை நிலைபெறச் செய்யவந்த குறிப்பை ஐம்பொறிகளும் கண்டு, சிவபெருமானையும் சிவனடியார்களையும், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதலாகிய பணியில் நாம் என்னபிழை செய்திருக்கின்றோமோ அப்பிழைகட்கு என்னதண்டனை செய்வாரோ என்று கலங்கின என்பது தோன்ற—வெகுளப் பொறி கலங்கிய,—என்றார். தமது அறிவைப புலன்வழிச்செலுத்தாது, தமது அறிவின்வழிப் புலன்களைச் செலுத்தி ஆண்ட பேரறிவாளர் என்பது தோன்ற—உணர்வினராய் - என்றார். தற்போதமும் மலங்களின் செருக்குமற்றுச் சிறுத்து, அருட்போதத்தை நாடியிருக்கும் நிலைமை யுடையவர் என்பது தோன்ற—புலர்ந்து சிறிய என்,—என்றார். நம்முடையதென் றெண்ணியிருக்கும் தேகேந்திரியப் பிராணாதிகள் யாவும் இறைவனால் கொடுக்கப்பட்டனவே யன்றி ஒன்றேனும் நம்முடைய பொருளன்றே. அங்ஙனமிருக்க, அவைகளை நாம் இறைவனுக்கு இதுகாறுங் கொடுத்ததுண்டோ, அந்த வுண்மையை நாம் உணருமாறு இவர் கொடுத்த கோவணம் மறைந்ததுபோலும், என் றுணர்ந்தவராய் இப்பெரும்பிழையை நாம் எவ்வகையாய்த் தீர்ப்பது, நமது உடல் பொருள் ஆவிகளையும், அவ்வியிற்றின் சார்புகளையும் நாம் இறைவனுக்குக்கொடுக்கும் நாள் எந்நாள். அவன் ஏற்குமநாள் எந்நாள். இப்பொழுதும் இந்தவேதியர் கொடுத்த கோவணத்தைக் கொடுப்பதற்கின்றி இப்பிழைக்கும் ஆளாயினோமே இப்பிழை இவர் பொறுப்

பரோ என்று மிகவும் அஞ்சிக்கூறினார் என்பது தோன்ற—என் பிழைபொறுத்தருளுவீர்—என்றார். இக்கோவணமாயை யொன்றினால் இப்பிழை ஒன்றுதான் நான் அறிய வந்ததன்று, இதுகாறும் சிவனால் கொடுத்துவந்தனவெல்லாம் மாயாவசப்பட்டுப்போயிற்று என்கிற பல நாட்பிழைகளை நன்றாய் அறிந்தவனாயினன் என்று வருந்தினாரென்பது தோன்ற—அடியேன் அறியவந்தது ஒன்றன்று என்று அடிபணிந்து அயர்வார்,—என்றார்.

மறிகரந்து - என்றதனால்,—திருக்கரத்திலுள்ள மானைமறைத்து, நாயனார் என்னும் புமானைப்பிடிக்க மானிடவடிவங்கொண்டு வந்தனரென்றும், தண்டேந்தி - என்றதனால்-நாயனார் எனதெனப்படும் பொருளெல்லாம் தனதேயாக்கிக்கொண்டு அவரைக் குற்றத்தினின்றும் நீக்கி அவரது குணங்கொண்டன ரென்றும், மறையவர் என்றதனால்-நாயனார்பால் செய்யவந்த அருட்செயலைத் திரோதானச்செயலில் மறைத்துச் செய்யவந்தனரென்றும், வெகுளப்பொறிகலங்கி என்றதனால்—நாயனாரைப் பொருந்தினின்ற பொறிபுலன் கரணங்களுடைய செயலெல்லாம் அவரைவிட்டு ஓடுமாறு தமது அருள் நோக்கால் நோக்கிக் கலக்கினரென்றும் -உணர்வினராய் என்றதனால்—ஆன்மாக்களைக் கலக்கும் பொறிகள் நாயனார்பால் கலங்கவரவே அவரறிவு அறிவாகியசிவமேயாய் நின்றதென்றும், புலர்ந்து—என்றதனால் சிவமாகிய நாயனார் அறிவின்கண்ணே அருளுதயந் தோன்றிற்றென்றும், சிறிய என்பிழைபொறுத்தருளுவீர் என்றதனால்—மெய்யர் வெறியார் மலர்ப்பாதம் மேவக்கண்டும் கேட்டிருந்தும், (அதுபோல்) செய்வதறியாச் சிறுநாய்போல் ஆயினேன், ஆகலின் அப் பெரும்பிழை பொறுத்தருளல்வேண்டுமென்று வேண்டினாரென்றும், அடியேன் அறியவந்தது ஒன்றன்று என்றதனால்—இப்போது நீர் என்னைப்போலும் வந்து நான் செய்யும் செயலைப்போல் கோவணத்தின் வழியாகச் செய்து எனது பொறிகலக்கி, என்னுணர்வைச் சிவமாக்கி என்பிழைபொறுத் தருளல்வேண்டுமென்று வேண்ட வந்த இதுவொன்றும் என்செயலால் வந்ததன்றே இதுவும் உன்செயலாலே என்றும், என அடிபணிந்து என்றதனால்—உலவாக்காலந்தவம் எய்தி உறுப்பும் வெறுத்து இங்கு உனைக்காண்பான், பலமா முனிவர் நனிவாட இப் பாவியேனைப் பணிகொண்டாய். மலமாக் குரம்பை யிதுமாய்க்கமாட்டேன் மணியே யுனைக்காண்பான், அலவாநிற்கும் அன்பிலேன் (நான்) என்கொண்டு ஒழுகப்பெறுவேன் என்று திருவருளைநாடி வணங்கினரென்றும், அயர்வார் என்றதனால்—புன்மையேனைக் கோவணங்கொண்டாளவந்த ஐயா நீபுறமே போக விடில், என்னை நோக்குவார் யாரே, நான் என் செய்கேன் என்று சோர்வடைவாரென்றும், பொருள்கொண்டு இறைவனது அருட்செயல் உணரக் கிடக்கின்றமைகாண்க.

இத்திருப்பாசுரத்தான்,— மறிகரந்து தண்டேந்தி மறையவனாய்வந்து, பொறிகலங்கும்படி வெகுண்டது திரோதச்செயலென்றும், அச்செயலால் மாயச்செயலையொழித்து நாயனா உணர்வினராய், முகமலர்ந்து சிறிய என்பிழைபொறுத்து அருளுவீர் அடியேன் அறியவந்தது ஒன்றன்று என்று அடிபணிந்து அயரச்செய்தது அருட்செயலென்றும் கூறப்பட்டன.

இதனால், முத்தான்மாக்களிடத்து இறைவன் செய்யும் திரோதச்செயலெல்லாம் மாயச்செயலைப்போக்கி, அருட்செயலை மேலிடச்செய்யவுமாம் எனவும், பெத்தான்மாக்களிடத்துச் செய்யுந்திரோதச் செயலெல்லாம் மாயச்செயலை வெளிப்படுத்தி அச்செயல் வழியான் ஆணவமலத்தைப் பரிபாகப்படுத்தவுமாம் எனவும் உய்த்துணர்க. (உஎ)

செயத்த கும்பணி செய்வனிக் கோவணம் அன்றி
நயத்த குந்தனம் நல்லபட் டாடைகண் மணிகள்
உயர்த்த கோடிகொண் டருளுமென் றுடம்பினில் அடங்காப்
பயத்தொ டுங்குலைந் தடியிசைப் பலமுறை பணிந்தார்.

(௭-ஆ) (இப்பிரமசாரியார் தாம்செய்யும் பணியால் மனமகிழவேண்டுமென்று எண்ணியிருந்த நமக்கு அவர் கோபிக்கும்படியான அபராதத்தைச் செய்யவந்ததே என்று மனம் வருந்தினவராய், அவ்வேதியரைப்பார்த்து, யான்செய்த பிழைக்குத் தீர்வாக) யான் செய்யத்தகும் பணியையுள்ளவற்றில் எதனைத்தேவரீர் திருவுளத்தில் எண்ணுகின்றீரோ அப்பணியை (யாதொரு தடையின்றிச்) செய்வேன், (அடியேன் இப்போது கொண்டுவந்த கோவணமல்லாமல், விரும்பத்தக்கனவாகிய, நல்லபட்டாடைகள் வேண்டுமானாலும், இரத்தினங்கள் வேண்டுமானாலும் அவைகளைக் கோடிகோடியாகக் கொடுக்கின்றேன் அந்த உயர்ந்தனவாகிய பட்டாடை முதலியவைகளை ஏற்றுக்கொண்டருளும் என்று தமது உடம்பினில் அடங்காத அச்சத்தோடும் பதைபதைப் புடையவராய் அவ்வேதியருடைய திருவடிகளில் பலமுறையும் வீழ்ந்து வணங்கினாரென்பதாம்.

பொன் மணி முதலியவைகள் ஏனையோர்க்கு உயர்ந்தனவேயன்றிப் பிரமசரிய நிலையுடையோர்க்கு உயர்ந்தனவன்றாகலானும்; அவர்கள் விரும்புவது கோவணம் ஒன்றேயாகலானும், அவ்வொருநிலையுடையார் நமது பிழையை நீக்கத் தாம்மற்றொருபொருளைவிரும்பும் பிழையிற்படுவாரா! படாரேஎன்றும் நியாயத்தை நன்றாயுணர்ந்தவராகலான் - உடம்பினில் அடங்காப்பயத்தொடும் குலைந்து அடியிசைப் பலமுறைப பணிந்தார் — என்றார்.

அல்லதூஉம், —"பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந், தெரிந்தோம்பித் தேரினும் அஃதே துணை" என்றும், ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின் ஏதம்படுபாக் கறிந்து" எனறும், ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின், எய்துவர் எய்தாப பழி" என்றும் கூறியுள்ள தருமநெறியை நன்றாயறிந்தவர் பிரமசாரியார், அந்நெறியை நாமும் அறிந்திருக்கின்றோம். ஆகவே பிரமசரிய நிலையுடையார் முதலியோரிடத்து உண்டாகும் குறைகளை கிரகஸ்தநிலையுடையவர் நீக்கவேண்டுமேயன்றி இவர்கள் அவர்களுக்கோர் குறையுண்டாக்கல் அவர்களுக்கு இழுக்காகும். பிரமசரிய நிலையுடையார் தாம்வேண்டப்படாத பொருளை வேண்டல் அவருக்கு இழுக்காகும். இவ்வுண்மையால், இருவருடைய ஒழுக்கமும் குன்றாவாறு நடத்தவல்ல ஒழுக்கம் இதுவென்று நாம் அறிந்தோமில்லையே என்று அடங்காப்பயத்தொடும் குலைந்தனரென்றலுமாம். மிகவும் பயந்தனராகலின், பிரமசாரியாரைநோக்கி, வருணாச்சிரம ஒழுக்கங்களையும், அவைகளில் தவறுண்டானல் அதற்கேற்ற கழுவாய் (பரிகாரம்)களையும் தேவரீர் நன்றாய் அறிந்திருப்பீர் ஆகலான் இப்பொழுது சொல்லியருளல் வேண்டுமென்று பணிந்தாரென்க.

இத்திருப்பாசுரத்தான்,—நாயனார் பிரமசாரியாரிடத்தில் தமக்குண்டாகிய கோவணப்பிழையை மாற்றிகொள்வதற்கான செயல் எச்செயலோ அதனைச் செய்யவே அவாவுள்ளவராய், வேறஎச்செயலிலும் எபபொருளிலும் அவாவற்றவராய் அப்பிரமசாரியரை நோக்கி, தேவரீர என்னிடத்தில் கொடுத்த கோவணம் பிழைபட்டுப் போனபடியினால், அப்பிழையை யான் நீக்கிக்கொள்ள, விரும்பத்தக்க தனங்கள், நல்லபட்டாடைகள், மணிமுதலானவைகள் என்னிடத்தில் உள்ளன. அவைகளில் எது எது உயர்ந்தனவோ அவைகளில் தேவரீருக்கு எவ்வளவுவேண்டுமோ அவ்வளவுந் தருகின்றேன். அவைகளை ஏற்றுக்கொண்டு என்பிழை பொறுத் தருளல்வேண்டுமென்று பன்முறையும் பணிந்தனரென்று கூறப்பட்டது. (உ௮)

## கோவண எடைக்குப் பொருள் கேட்டல்

பணியும் அன்பரை நோக்கியப் பரம்பொருள் ஆனார்
தணியும் உள்ளத்தர் ஆயினர் போன்றுநீர் தந்த
மணியும்பொன்னுநல் ஆடையும் மற்றும்என்செய்ய
அணியும் கோவண நேர்தர அமையும் என்றருள.

(எ - ர.) பலமுறையும்வணங்கும் நாயனாரைப் பரம்பொருளெனப்படும் பரசிவனு ராகிய அப்பிரமசாரியார்பார்த்து தமதுள்ளத்தில் உண்டாகிய கோபந்தணியப் பெற்ற வர்போல நீர்கொடுப்பதாக வொப்பிய இரத்தினமும் பொன்னும் வஸ்திரமும் மற்றுள்ள பொருள்களும் எனக்கு என்ன பயனைத்தரும்? அங்ஙனமிருக்க நானுடுத்திருக்கும் கோவ ணத்தின் எடைக்கு ஒத்திருக்கக் கொடுப்பீராகில் (அதுவே எனக்குப் போதுமென்று அருள்செய்ய என்பதாம்.

அன்பரல்லாதார் — இறைவனைபபணிதல் - அவ்விறைவன்பால் தாம வேண்டும் பொருள்கொள்ள. அன்புடையார் பணிதல் தாம் பெற்றுள்ள பொருளெல்லாம் அவன் கொள்ள. ஆகலின் பிரமசாரியார், நாயனார்பால் அன்புநின்ற நிலையும், பணிதல் என் னும் செயலுக்குரிய செயல்வகையும் கண்டனரென்பது தோன்ற — பணியும் அன் பனை நோக்கி என்றார். முன் எரிதுள்ளினால் என வெகுண்டது மெய்ம்மையாயின் இப்போது தணியும் உள்ளத்தினராயின ரென்பதும் உண்மையாகும், முன் வெகுண்ட தாகக்காட்டியதும் போலியே, இபபோது தணிந்ததாகக் காட்டியதும் போலியே என் பது தோன்ற—தணியும் உள்ளத்தராயினர் போன்று—என்றார். வேண்டுதல் என் னும் குணமுடையோர்க்கு மேன்மேலும் விருப்பத்தைக் கொடுக்கத்தக்க பொன்மணி முதலியனவெல்லாம் வேண்டியதே, அவை அவர்களுக்குச் சாதல் பிறத்தலாகிய பய னைச்செய்யும். வேண்டுதல் வேண்டாமையும், சாதல் பிறத்தலையும் அற்ற இறைவனாகிய எனக்கு என்செய்யும் என்பது தோன்ற—நீர் தந்தமணியும் பொன்னும் நல்லாடையும் மற்றும் என்செய்ய—என்றார். நான் பற்றற்றவன் என்பதனை எனது கோவணத்தாற் காட்டுகின்றேன். அஃதேபோல்—பொன் மணி முதலியவற்றில் நீா பற்றற்றிருக்கும் தன்மையைக் காட்டவல்லீராயின் நாம் ஒத்துக்கொள்ளுகிறோம் இதில் ஐயமில்லை என் பது தோன்ற—அணியும் கோவணம் நேர்தர அமையும் என்றருள என்றார். தமது அன் பர்களது பற்றற்ற தன்மையைப் பிரகாசபபடுத்தலே பரம்பொருட்டன்மையென்பது தோன்ற—பரம்பொருளானார்—என்றார்.

இத் திருப்பாசுரத்தான் தாம்—இயல்பாகவே பாசங்களில் நின்றும் நீங்கியிருக்கும் அநாதிமுத்தத்தன்மையாகிய பரம்பொருட்டன்மையும், அஃதேபோல், நாயனார் அன்ப ரொடுமருவி மருவி பாசங்களில் நின்றும் நீங்கியிருக்கும் சீவன்முத்தத்தன்மையும் இவை யாமென்று கூறப்பட்டன. (உக)

## எடைபோதேற்கு வகைகேட்டல்.

மலர்ந்த சிந்தையர் ஆகிய வணிகரே றனையார்
அலர்ந்த வெண்ணிறக் கோவணம் அதற்குநேர் ஆக
இலங்கு பூந்துகில் கொள்வதற் கிசைந்தருள் செய்தீர்
நலங்கொள் கோவணம் தரும்பரி சியாதென நம்பர்.

(வி - ரு.) (மணியும் பொன்னும் ஆடையும் மற்றும், கோவணம் நேர்தரக் கொடுத் தால்—என்று பிரமசாரியார் சொல்லியமாத்திரத்தில், வாட்டம் நீங்கிய சிந்தையுடையவ ராகிய வணிகருட் சிறந்த நாயனார் 'நீர் அணிந்திருக்கும் கோவணத்திற்கு ஒப்பாக நான் கொடுக்கவிருக்கும் ஒளிவீசும் பொன்னுடை முதலியவற்றைத் தேவரீர் கொள்வதற்கு வேறு வெண்மையாகிய நல்ல கோவணமொன்று தேவரீர் இப்போது கொடுக்கவேண் டுமே, அக்கோவணம் கொடுக்கும் வகை ஏதேனும் இருக்கின்றதா? அஃதெப்படி அத னைச் சொல்லாதிருக்கின்றீரே? அதனைச் சொல்லும்' என்று கேட்க, இறைவனாகிய பிரமசாரியார்—

அலர்ந்த வெண்ணிறக்கோவணம் அதற்கு நேராக, இலங்கோள் பூந்துகில் கொள்வ தற்கு நலங்கொள் கோவணம் தரும்பரிசியாது; இசைந்தருள்செய்தீர், என நம்பர் என்னி கொண்டு கேட்கே.

அன்பானது - மேலாகக் காட்டுவது அருளுக்கு இலக்கணமாகலின், அருள் தட்டு கீழாகவேயிருந்து அன்பின்தட்டை மேலாகக் காட்டிற்று. இறைவன் - அருளைச் சிறிது காட்டினும், அன்பர்கள் - தங்கள் அன்பைச் சிறிதுகாட்டாமல் முழுதுங்காட்டல் இலக்கணமாகலின், அவ் விலக்கணந்தோன்ற - இறைவன் ஒரு கோவணத்தால் சிறிது அருளைக்காட்ட, நாயனார் தமது அன்பை முழுவதும் காட்டினார். அங்ஙனங்காட்டினும் அன்பர் அன்பினையே மேலாகக் காட்டும் எண்ணமுடைய அருட்கோவணத்தட்டு, சமமாக மேலெழுந்திராமல் தாழ்ந்தே இருந்ததென்க. (கடு)

## பலகோவணமிட்டு அதிசயப்படல்.

நாடும் அன்பொடு நாயன்மார்க் களிக்கமுன் வைத்த
நீடு கோவணம் அடையநே ராகவொன் றொன்றாக்
கோடு தட்டின்மீ திடஇடக் கொண்டெழுந் ததுகண்
டாடு சேவடிக் கடியரும் அற்புதம் எய்தி.

(எ - து.) (பிரமசாரியார் வைத்த கோவணத்துக்குத் தான்வைத்த கோவணம் சமமாகாமையைக்கண்டு) கோவணத்தட்டையே நாடுகின்ற அன்புடைய நாயனார், அடியார்கள் மகிழும்படியாக அவர்களுக்குக் கொடுக்க முன்னே அன்போடு வைத்துள்ளதாகிய கோவணங்களெல்லாவற்றையும் (பிரமசாரியாரிட்ட கோவணத்தின் எடைக்குச்) சமமாகும்படி ஒவ்வொன்றாகத் தராசுதட்டின்மேல் இட்டும், இடஇட அக்கோவணங்களையெல்லாம் அத்தட்டானது வாங்கிக்கொண்டு சமமாக நில்லாமல் மேலெழுந்திருப்பதைப்பார்த்து, நடனஞ்செய்தருளும் திருவடிக்கு அன்புபூண்டவராகிய நாயனாரும் ஆச்சரியமடைந்து என்பதாம்.

பிரமசாரியார் கோவணவழக்கு நீங்கி அமுதுண்ணவேண்டும் என்னும் அன்பினை மேற்கொண்டிருப்பவ ராதலால்—அன்பொடுநாடும்,—என்றார். அடியார்களெல்லாம் தமாகவே இருக்கின்ற இறைவருக்கு ஒருகோவணம் போதாதாகலான்,—நாயன்மார்க்கு அளிக்க முன்வைத்த நீடுகோவணம் அடைய நேராக ஒன்றொன்றாக் கோடுதட்டின் மேல் இடஇடக்கொண்டு,—என்றார் பலகோவணங்களை இடப்பெற்ற தட்டினை ஒரு கோவணத்தோடிருக்கும் தட்டானது கண்டு மேலெழுந்திருக்கவேண்டியது முறைமையாயிருக்க, அம்முறைபிறழ்ந்து, ஒரு கோவணத்தட்டினைப் பலகோவணத்தட்டு கண்டு மேன்மேல் எழுந்திருந்தது, அதிசயிக்கத்தக்க அதிசயமாகலான்,—எழுந்தது கண்டு அற்புதம் எய்தி—என்றார். ஒருகாலை ஊன்றியும், ஒருகாலை எடுத்தும் ஆடுகின்ற அருளாடலைக் காண்கின்ற நாயனாருக்கு ஒரு கோவணத்தட்டைக் கீழிருத்தியும், பலகோவணத்தட்டை மேலெடுத்துக் காட்டும் இம்மாய ஆடலையுங் காட்டத் தொடங்கினாராகலான்—ஆடுசேவடி—என்றார். (கசு)

## பட்டுப்பொதி துகிற்பொதி முதலியவைகளை இடல்.

உலகில் இல்லதோர் மாயையிக் கோவணம் ஒன்றுக்
கலகில் கோவணம் ஒத்தில என்றதி சயித்துப்
பலவு மென்றுகில் பட்டுடன் இடஇடவுயர
இலகு பூந்துகில் பொதிகளை எடுத்துமே லிட்டார்.

(எ - து.) அற்புதமெய்திய நாயனார் பிரமசாரியார் இட்ட கோவணம் ஒன்றுக்கு, அளவில்லாத கோவணத்தை நாம்வைத்தும் இடைகொள்ளாமற் போயிற்று. இது என்னவுலகின்கண் இல்லாததோர் மாயமாயிருக்கின்றது என்ன அதிசயமென்று ஆச்சரியமடைந்து, இனிச்சமமாகப் பார்க்க ... ண்டிய காரணமொழிந்து இந்த அ... தைப்பார்த்து ஆவதென் என்று ... டகளைப் பார்க்கும்பொழுது அவ

ஒன்றும் இல்லாமையால், மென்மையாகிய நூலாடைகளோடு பட்டுகளையும், ஒன்றொன்றாக இட்டனர்; இட இட மேலெழுந்தது, (அதனைக்கண்டு) நல்ல உயர்ந்த ஆடைப பொதிகளை எடுத்து அந்தத் தட்டின் மேலிட்டனர் என்பதாம்.

சுத்தமாயாபுவனத்தில் உள்ளவர்க்கும், சுத்தாசுத்த மாயாபுவனத்தில் உள்ளவர்க்கும் அசுத்தமாயாபுவனத்தில் உள்ளவர்க்கும் இவ்வருண்மாயை இறைவன் காணச்செய்த தில்லை என்பது தோன்ற—உலகில் இல்ல தோர் மாயை—என்றார். (௬௪)

முட்டில் அன்பர்தம் அன்பிடும் தட்டுக்கு முதல்வர்
மட்டு நின்றதட் டருளொடும் தாழ்வுறும் வழக்கால்
பட்டொ டுந்துகில் அனேககோ டிகளிடப் பத்தர்
தட்டு மேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு.

(எ - து.) அன்பிற் குறைபடுதலை யறியாத நாயனா (தமது அன்பினால்) கோவண முதலாக இடும் தட்டானது, அன்பினையே இடும் தட்டாகும், எனவே இவா இட்டதட்டு அன்பினை வாங்கிக்கொள்ளும் தட்டெனபபடும்(அந்த அன்பெனனும்)தட்டுக்கு, இறைவனாகிய பிரமசாரியார் இட்டகோவணத்தட்டு, அருள்மட்டோடும் நின்றதட்டாகும், எனவே,அன்புமேலிடுந்தோறும அவ்வன்பின் திறததை யெல்லாம் தான் ஆதாரமாய் நின்றுஏற்றுக்கொள்ளும் முறைமையை யுடைததாகும், அம்முறைமையினால், பத்தராகிய நாயனாருடைய தட்டானது அன்பெனனும் தட்டாகலான், அதில் அவ்வன்பர் பட்டாடைகளோடு நூலாடைகளையும் கோடி கோடியாக இடஇட மேலெழும் முறைமையை உடைத்தாயிருந்தது. பிரமசாரியாா இட்ட ஒருகோவணத்தட்டு தாழ்ந்திருக்கும் முறைமையை யுடைத்தாயிருந்தது என்பதாம்

நாயனார் ஆடைமுதலியவற்றைத் தட்டில் இடுந்தோறும் அன்பானதுமுன்வைத்த ஒருகோவணத்தோடு நில்லாது மேன்மேல் வளர்வதனாலும், அஃதேபோல், இறைவர் தன்னருளைத் தான்வைத்த ஒருகோவணத்தளவில் அல்லாமல், அவ்வொருகோவணத்திலேயே தன்னருளெல்லாம் இறுத்தலால், இறைவர் கோவணத்தட்டு மேலெழுவதற்கில்லாமற் கிடந்தது. அன்பர்தட்டானது, இறைவர்தட்டு தன்னைசகண்டு அருளால் அழுந்துதலால் அதனைக் காணுந்தோறும் அன்பேமேலிட்டு கீழ் அழுந்துவதற்கில்லாமல் மேல் எழுவதில் இருந்தது. ஆதலான்,—முதல்வர் இட்டகோவணத்தட்டு தாழ்ந்து, பட்டொடுந்துகில் அனேக[illegible] இட்ட அன்பர்தம் தட்டு தாழாது மேலிட்டதென்க (௬௫)

ஆன தன்மைகண் டடியவர் அஞ்சியந் தணர்முன்
தூந றுந்துகில் வுங்கநூல் வர்க்கமே முதலாம்
மானம் இல்லன குவிக்கவும் தட்டின்மட் டிதுவால்
ஏனை என்தனம் இடப்பெற வேண்டுமென் றிறைஞ்ச.

(எ - து.) பிரமசாரியார் இட்ட கோவணத்தட்டுத் தாழ்ந்திருக்கும் நிலையிலேயும், தாம் மூட்டை மூட்டையாக இடுந்தட்டு மேலெழுந்திருக்கும் நிலையிலேயும் இருப்பதாகிய தன்மையை நாயனார்கண்டு மிகவும் அஞ்சினவராய, பிரமசாரியார் முன்னேவந்து (சுவாமிகாள்!)மிகச்சிறந்த நூல்ஆடைகளும், நூல்வர்க்கங்களுமாகிய எல்லாமும் இவ்வளவென்று அளவுபடுத்தாமல் இந்தத் தட்டில்குவித்தேன், குவித்தும், இந்தத்தட்டு நிற்கும்நிலை இவ்வளவே, இது அக்கோவண எடைக்கு ஒபபாகப் போவதில்லை. இது நிச்சயம். இதில் ஐயமில்லை, ஆகலான் இனி என்பாலுள்ளன பொன்மணி முதலிய அவைகளைத்தான் இனித் வைக்கவேண்டும். அதற்குத் தேவரீர் குளல்வேண்டுமென்று வ ன்பதாம்.

பிரமசாரியார்—கொடுவென்று கொடுத்தகோவணமும் நம்மைமாயஞ்செய்தது. எடையிடு என்று தட்டில் வைத்த இக்கோவணமும் அதனினும் பெரியமாயஞ்செய்கின்றது இங்ஙனமான மாயக்கோவணங்களை எங்கு சம்பாதித்தனரோ நானறியகில்லேன். முன் மாயஞ்செய்த கோவணத்தை என்கையில் இப்பிரமசாரியார் கொடுக்கும்போது " ஒந்து கோவணப் பெருமை உள்ளவாறு உமக்கே, ஈங்கு நான்சொலவேண்டுவதில்லை, என்று சொன்னது இப்பொழுது வெளியாயிற்று. அஃதாவது,—இங்ஙனம் செய்வதாகிய மாயத்தின் உண்மையை நான்சொல்ல வேண்டுவதில்லை, நீயே அறியப்போகின்றாயென்று சொன்னது போலாயிற்று. இது என்னமாயமென்று அஞ்சினாரென்பார்,—ஆனதன்மைகண்டு அடியவர் அஞ்சி,—என்றார். "எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப். பொய்யாவிளக்கே விளக்கு" என்ற பொய்யாமொழிப் படி, எப்பொருள்வைததாயினும், எடை ஒப்பு செய்யவேண்டியது உமதுவாய்மையன்றோ, ஆகலான்கோவணவர்க்கம் போயினும், நூல்வர்க்கம் போயினும், துகில்வர்க்கம் போயினும்,நமது சொல்வர்க்கம்போதல் முறையன்று. இனி. தனவர்க்கங்களை இட்டாயினும் எடையொப்புச் செய்யவேண்டுமென்று உள்ளத்துள்ளே எண்ணி, பிரமசாரியார், அவ்வெண்ணத்துக் கிசையவேண்டினாரென்பார்—ஏனையென்தனம் இடப்பெறவேண்டும் என்று இறைஞ்ச—என்றார். (௧௬)

### பொன் வெள்ளி நவமணி முதலியவை இடல்.

மங்கை பாகரா மறையவர் மற்றதற் கிசைந்தே
இங்கு நாமினி வேறொன்று சொல்லுவ தென்கொல்
அங்கு மற்றுங்கள் தனங்களின் ஆகிலும் இடுவீர்
எங்கள் கோவணம் நேர்நிற்க வேண்டுவ தென்றார்.

(எ - து.) உமைபங்களாகிய பிரமசாரியார், இனிப் பொன்முதலிய திரவியங்களை இடுவதற்குக் கட்டளைசெய்யவேண்டும் என்று நாயனார் செய்தபிரார்த்தனைக் கிசைந்தவராய், (அவரைப் பார்த்து,) இங்கு இவ்விஷயத்தி னினி நாம்வேறொன்றும் சொல்லவேண்டிய அவசியம் என்ன இருக்கின்றது. நீர் வேதாகிய அந்தத்தட்டில் பொன், மணி முதலியவைகளினாலாகிலும், வேறு எந்தப்பொருளினாலாகிலும் எடை ஒப்பாகும் வரையில் இடவேண்டிய கடமை உம்முடையது. ஆதலின் எதனையேனும் இடுவீர், எங்கள் கோவணத்திற்கு நேராக நிற்கவேண்டுவ தொன்றுதான் எங்களுக்கு வேண்டுவதென்று கூறினார் என்பதாம்.

இறைவன் - பிரமசாரியாய் மறைந்துவரினும் நாயனார்பால் வைத்த அருளை மறவாதவர் என்பார்,—மங்கைபாகராம் மறையவர்,—என்றார். மானம் (அளவு) இல்லாமல் எடையொப்பாக நூலுந் துகிலும் கொடுத்தும், சொல் (மானம்) அளவு நிரம்பாமையால் அந்தமான குற்றத்தை நீக்கிக் கொள்ள துகிலோடு போகாமல் பொன் மணிமுதலியவற்றையுங் கொடுக்கத் துணிந்த குணத்தை நாயனார் கொள்ளவே, அக் குணத்துக்கேற்பத் தாமும் ஒப்புக்கொள்ளும் குணத்தைக் கொண்டன ரென்பார் —மற்றதற்கு இசைந்தே,—என்றார். சொல்மானத்தைப் பெரிதாக எண்ணமல் பொருள்மானத்தைப் பெரிதாக எண்ணுகின்றவரிடத்து அப்போ தப்போதும் பலசொல்லைச் சொல்லவேண்டுமேயன்றிப் பொருள்மானத்தைப் பெரிதாக எண்ணமல், சொல்மானத்தைப் பெரிதாக எண்ணும் உம்மிடத்தில் நீர் இடும்கோவணம் என்னுடைய கோவணத்திற்கு நேர்நிற்கவேண்டு மென்று முன் சொல்லிய அச்சொல் அல்லாமல் இனிச் சொல்லவேண்டிய சொல் வேறில்லை என்பார்—அங்கு மற்றுங்கள் தனங்களினாகிலும், எங்கள் கோவணம் நேர்நிற்க இடுவீர் (என்பது) வேத் (அல்லது) இங்கு நாம்இனி வேறொன்று சொல்லுவது என்கொல்— (௧௭)

அல்ல பொன்னொடும் வெள்ளியும் நவமணித் திரளும்
பல்வகைத்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லை யில்பொருள் சுமந்தவர் இடஇடக்கொண்டே
மல்கு தட்டுமீ தெழுந்தது வியந்தனர் மண்ணோர்.

(எ - து.) (நீர் எதையேனும் இடும் எங்கள் கோவண எடைக்கு ஒப்பாகவேண்டிய தொன்றுதான் என்றுசொல்லிய மாத்திரத்தில் நாயனா) மாற்றுயர்ந்த பொன்னொடு வெள்ளியும் நவரத்தினங்களும் தாம்பிரமுதலிய பலவகையான உலோகங்களும், அவற்றைக் கலந்த வெண்கலமுதலிய பலவும், ஆகிய எல்லாபபொருள்களையும், சுமந்து அழைந்து வந்து நாயனார்தட்டில் இடஇட அவைகளையெல்லாம் நிரம்பக்கொண்ட அத் தட்டானது தாங்கிக்கொ[illegible]ழாது முன்னையினும மேலெழுந்தது, உலகினரெல்லாம் அதிசயத்தை யடைந்தனா என்பதாம்.

மண்ணோர் வியந்தனர் எனக்கூட்டுக

நாயனார் - அதிசயிப்பதைவிட்டு, "எங்கள் கோவணம நேர்நிற்கவேண்டுவது" என்று பிரமசாரியார்கூறிய சொல்லில் ஊக்கமுடையவரா யிருந்தனரென்பார்—எல்லையில்பொருள் சுமந்து வந்து இடஇட - என்றார். எலலாபபொருளையும வாங்கித் தாங்கும் தட்டு இறங்குவதொழிந்து, மேலெழுந்திருப்பதையும், ஒருபொருளையும் தாங்காது ஒருகோவணத்தையே தாங்கித் தாழ்ந்தே யிருப்பதையும திருவிழாவுக்குக் கூடியபல தேசத்தினரும் எங்குங் கண்டறியாத அதிசயமென்று அதிசயித்தனரென்பார்,—மண்ணோர் வியந்தனர் - என்றார். (௯௮)

தவநிறைந்தநான் மறைப்பொருள் நூல்களால் சமைந்த
சிவன்விரும்பிய கோவணம் இடும்செழுந் தட்டுக்
அவனி மேலமர் நீதியார் தனமெலாம் அன்றிப்
புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ.

(எ - து.) சிவபெருமானால் விரும்பப்பட்ட புண்ணியங்களெல்லாம நிறைந்துள்ள நான்குவேதங்களின் பொருளாகிய நூல்களால் செய்யபபட்ட கோவணத்தை இட்ட செழுமையாகிய தட்டினுக்கு, இவ்வுலகில் அமா நீதியாரென்பவர், தமது தனங்களை யல்லாமல், புவனங்களை யல்லாம் எடுத்தெடுத்து வைததாலும் சமமாக நில்லாதென் பது ஓர்புகழாகுமா என்பதாம்.

சிவன்வைத்த கோவணம் அவ்விறைவனால் விரும்பப்பட்ட மெயப்பொருளாகிய அழிவில்லாப்பொருளுடைய மறைக்கோவணமாகலின் அதனை யேந்தியதட்டு பெரும பாரமுடைத்தாயும், நாயனாரிட்ட பொருளெல்லாம பொயப்பொருளாகிய அழிவுடைப் பொருளாகலின் அதனையேந்தியதட்டு பாரமில்லாததாயும் ஆயிற்று. அல்லதூஉம் மெய்ப்பொருள் - பொய்ப்பொருளுக்குச் சமானமாக எழுந்திராதென்பதும், பொயப பொருள் எவ்வளவாயினும் - மெய்ப்பொருளொன்றுக்குச் சமானமாக நில்லாஎன்பதும் தோன்ற,—சிவன் விரும்பிய கோவணம் இடுந்தட்டுக்கு, தனமெலாம் அன்றிப் புவனம் யாவையும் நேர்நிலா என்பது புகழோ,—என்றார் (௯௯)

## தானும் தன்மனைவியும் மகனும் துலையிலேற வேண்டல்.

நிலைமை மற்றது நோக்கிய நிகரிலார் நேர்நின்
றுலைவில் பஃறனம் ஒன்றொழி யாமையுந் தொழிந்தேன்
தலைவ யானுமென் மனைவியு[illegible]னும் தருமேல்
துலையில் ஏறிடப் பெறுவது [illegible] தொழுதார்

(எ - து.) மேலெழுந் தொங்குவதாகிய நிலையிலே நிற்பதாகிய இதனைப் பார்த்திருந்த நாயனார், பிரமசாரியார் எதிரேபோய்நின்று ஒருகாலும் குறைவில்லாமல் வளர்ந்துவந்த பலவகைப்பட்ட திரவியங்களெல்லாம் ஒன்றேனும் விடாமல் இத்தட்டில் வைத்து இன்று ஒன்றும் இல்லையாயினேன். எனது இறைவனே! இனி இருப்பன யானொருவன்; எனது மனைவியொருத்தி; என்மகனொருவன்; எங்களையும் எடையாக இவ்வேதற்குத் திருவுள்ளம் இசையும் பக்ஷத்தில், இந்தத் தராசுதட்டில் ஏறுவோம்: அங்ஙனம் ஏறிடப் பெறுவது உனது அருளாகும் என்று வணங்கினார் என்பதாம்.

பொன்முதலிய பொருள்களைப் பொருளாகக் கருதாது, நிறைமொழி மாந்தராகிய பிரமசாரியாரது மறைமொழியை நிறபபுதலே, பொருளாகக்கருதி அப பொன்முதலிய பொருள்களை நிறையில் நிறுக்கத் துணிந்தனராகலின் —நிகரிலார்,—என்றார். வேதப்பொருளாகிய நூற்பொருளே நிலையுடைப் பொருளென்றும், உலகப்பொருளாகிய செல்வப்பொருள் நிலையிலாப் பொருளென்றும், நேராகநின்று காட்டுகின்றவராகிய இறைவன்முன் - இருவினையும நேர்நிற்கப பெற்றவராகிய நாயனாரும் இருவினைச் செயலற்றுத் தன்னைக்கொடுக்கத் தலைபபட்டு நேர்நின்றனர் என்பார் - நேர்நின்று - என்றார். எமதிறைவனே! தேவரீர் நேராகவந்து என்னைபபற்றியிருந்த மும்மலபபற்றையும் ஒழித்தருளினீர். அஃதேபோல் நானும் அறவேயொழிந்தேன் என்பார்- துலையில்பகிறனம் ஒன்றொழியாமை யீய்த்தொழிந்தேன் - என்றார். அம்மூன்றையும் ஒழித்த உமக்கு என்னையும், என்மனையாட்டியையும், என்மகனையும் கொடுக்கத் துணிந்திருக்கின்றேன். ஆகலின் என்னால் கொடுக்கபபட்ட அசரபபொருள்களை இத்தட்டின் வழியாக ஏற்றுக்கொண்டது போல், சரபபொருள்களாகிய எங்களையும் ஏற்றுக்கொண்டருளல்வேண்டுமென்பார் - யானும், என்மனையும் சிறுவனும் துலையில் ஏறிடத் தருமேல், ஏறுகின்றோம். தேவரீர் எங்களைப பெற்றுக்கொள்ள வேண்டும் எனதுவேண்டுகோளின்படி தேவரீர் பெறுவது உன்னருள் எனத் தொழுதார் - என்றார். (௩௦)

### பிரமசாரியார் மூவருந்துலையிலேற இசைதல்.

பொச்ச மில்லடி மைத்திறம் புரிந்தவ ரெதிர்நின்
றச்ச முன்புற உரைத்தலும் அங்கண ரருளால்
நிச்ச யித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால
இச்ச ழக்கினின் றேற்றுவார் ஏறுதற் கிசைந்தார்.

(எ - து.) பொய்மையில்லாத அடிமைத்திறத்தை எப்பொழுதும் செய்தவராகிய நாயனார் தாம் இறைவனுடைய திருவருளால், நாங்கள்மூவரதாம் உள்ளோம் துலையிலேறுதற்கு, திருவுள்ளம் இசைதல்வேண்டும் என்று பிரமசாரியார் எதிரேநின்று-அச்சத்துடன் சொல்லவும், அப்பிரமசாரியார், நாயனாரது அவ்வுண்மைநிலையைத் துலையென்னும் ஓர்வியாஜத்தினால்நிறுக்கநிலையில்லாத உலகவாழ்வினின்றுமேலேற்றும் கருததுடையராய் (அவர் செயலுககிசைந்தனர் நாயனாரும்) ஏறுதற் கிசைந்தனர் என்பதாம்.

பொச்சமில் அடிமைத்திறம் புரிந்தவர், அருளால் நிச்சயித்(ததனை) அங்கணர் எதிர்நின்று, அச்சமுன்புற உரைத்தலும், அவர் (நாயனாரது) நிலையினைத் துலையெனும் சலத்தால், இச்சழக்கினின்று ஏற்றுவார் (இசைந்தார், நாயனார்) ஏறுதற்கிசைந்தார் எனக் கொண்டு கூட்டுக. இசைந்தார் என்றதனை - இறைவனரிடத்தும், நாயனாரிடத்தும் கொள்க.

அடிமையைப் பொய்ப்படுத்தவல்லன மும்மலங்களாயிருக்க, அம்மும்மலங்களானும் பொய்ம்மைப்படாமல் தனது அடிமையைத் திறமாகச்செய்தனர் என்பார் - பொச்சமில் அடிமைத்திறம் புரிந்தவர்,— மனையாட்டியுடனும், மகனுடன் துலையேறத் துணிந்தநாயனார் பிரமசாரியாருடைய பேராவலையோ ஒன்று. அதற்கு

நாம் இட்டபொருள்களோ பல. எவ்வளவு பொருள்களும் எடைகொள்ளாமல் போனமைக்குக் காரணம் யாதென்று ஆராய்ந்து அதனுண்மை யுணர்ந்து நிச்சயித்தனர் என்பார் - நிச்சயித்து - என்றார். அந்த நிச்சயமாவது - "அருளோடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம், நாம்தேடிய பொருளாக்கம்" என்று துணிந்ததேயாம். அஃதாவது - அந்த ஒருகோவணம் அருளோடும் அன்போடும் கூடியுள்ளவரால் இடப்பட்டது. ஆகவே அது நற்பொருளாய் மலைபோல் பாரங்கொண்டது. அவ்வொன்றுக்கு நாம் இட்டஇவ்வளவு பொருளும் அருள் அன்பு என்னும் நன்றியில்லாத பொருள். ஆகவே - பாரங்கொள்ளாமல் பஞ்சிப்பொதிபோலாயிற்று என்றுணர வந்ததேயாம்.

அங்ஙனம் உணரவந்தமையான் - பாரமுடைய இவ்வளவு பொருளையும் பஞ்சிப் பொதிபோ லாக்கியது பாவமன்றோ? அப்பாவத்தை யுடையோம் நாமன்றோ? பெரும்பாவமுடைய நாம் இத்துலையில் ஏறின் நாமும் பஞ்சிப்பொதிபோல் ஆவோமென்பதில் ஐயமில்லை. அங்ஙனமாயின் பின்னர் நாம்செய்யுஞ்செயல் என்னையோ வென்னும் அச்சத்துடன் தமதெண்ணத்தைக் கூறினரென்பார் - எதிர்நின்று அச்சமுன்புற உரைத்தலும் - என்றார். உள்குவார் உள்ளத்துள் இருக்கும் இறைவன் நாயனார் உள்ளுவதெல்லாம் உணர்ந்து மிக்ககருணையுடையவராய் அவரது உண்மைநிலையினை உணர்த்தவந்த தமது உண்மை அருள்நிலைமையினை வெளியாக்க, நாயனார் வேண்டியவாறே இசைந்தனர் என்பார் - அங்கணர் அருளால் அவர் நிலையினைத் துலையெனும் சலத்தால் இச்சழக்கினின்று ஏற்றுவார் இசைந்தார் - என்றார். சாரசரங்களையெல்லாம் உடைமையாக வுடையவர் தம்மையும் உடைமையாகக் கொள்ள இசையவே, நாயனார் கவலையற்றவராய்த் தாம் எண்ணிச்சொல்லியபடியே துலையில் ஏறுதற் கிசைந்தனரென்பார் - ஏறுதற்கிசைந்தார் - என்றார். (௪௧)

## மூவரும் துலையை வலம் வருதல்.

மனமகிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைம லர்க்குழன் மனைவியார் தம்மொடு புதல்வன்
தனையு டன்கொடு தனித்துலை வலங்கொடு தகவால்
இனைய செய்கையில் ஏறுவார் கூறுவார் எடுத்து.

(இ-ள்) மலர்முடித்த கூந்தலையுடைய மனைவியாரோடுதம்புதல்வனையும், தம்முடன் கொண்டுமனமகிழ்ச்சியோடு, பிரமசாரியாருடைய திருவடிகளைத் தலையால் வணங்கிப், (பின்னர்) ஒப்பில்லாத துலாக்கோலை பிரதக்ஷிணமாகவந்து, தகுதியுடன் இவ்வண்ணமான செய்கையினாலே தராசுத்தட்டில் ஏறுவாராகிய நாயனார், (இஃதொன்று) எடுத்துக்கூறுவார் ஆயினார் என்பதாம்.

புனைமலர்க்குழன்மனைவியார் தம்மொடுபுதல்வன்தனை யுடன்கொடு,மனமகிழ்ந்து, அவர்மலர்க்கழல் சென்னியால் வணங்கி, (பின்னர்) தனித் துலைவலங்கொடு தகவால், இனையசெய்கையில் ஏறுவார் எனக்கொண்டு கூட்டுக.

ஞானாசிரியர்—ஒருசொல்லால் நன்மாணாக்கனது உடல்பொருள் ஆவிகளை ஒருங்கே கொள்வதுபோல், இப்பிரமசாரியார் ஒருகோவணத்தால் நம்முடைய உடல் பொருள் ஆவிகளை ஒருங்கே கொள்ளவந்தனரே இது நமது புண்ணியத்தின் மிகுதியினாலோ இறைவனருளின் மிகுதியினாலோ என உள்ளமகிழ்ந்து அடிபணிந்தனர் என்பார்—புனைமலர்க்குழல் மனைவியார் தம்மொடு புதல்வன்தனையுடன்கொடு மனமகிழ்ந்து அவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கி—என்றார், துலாக்கோல் தன்னுடையதாயிருந்தும் தானிடும் பொருளைப் பாரமாகக்காட்டாது, பிரமசாரியார் கோவணம் ஒன்றைப் பாரமாகக்காட்டி அவர் புகழமே ட்டபடியால், அத்துலையையும், பிரமசாரியாரையும் வணங்கிப் பிரார்த்தித்தது இனி எங்களையேனும் பாரமாகக்கொண்டு

கோவணத்தட்டுக்குச் சமமாக நிற்கக்கடவாய் என்று பிரார்த்தித்தன சென்பார்—தகவால் தனித்துலே வலங்கொடு—என்றார். பிரமசாரியாரைப பிழைபொறுக்கும் பொருட்டு வணங்கியும், துலாக்கோலைப் பாரமாகக் கொள்ளும்பொருட்டு அதனை வலம்வந்து பிரார்த்தித்தும், பின்னர் தமது உண்மையைக்கூறித் தெய்வத்தையும் பிரார்த்திக்கக் கருதினரென்பார்—இனையசெய்கையில் ஏறுவார் எடுத்துக் கூறுவார்—என்றார். (௬௨)

## தங்களுண்மையைக்கூறி அஞ்செழுத்தோதிதுலேயில் ஏறுதல்.

இழைத்த அன்பினில் இறைதிரு நீற்றுமெய் அடிமை
பிழைத்தி லோமெனில் பெருந்துலைநேர் நிற்க என்று
மழைத்த டம்பொழில திருநல்லூர் இறைவறை வணங்கித்
தழைத்த அஞ்செழுத் தோதினர் ஏறினர் தட்டில்.

(எ - து.) (எடுத்துக் கூறவந்தது யாதெனின்) நாங்கள் அன்பினலே செய்து வந்த இறைவனது திருநீற்றின் மெய்யடிமையினின்று (இதுகாறும, தவறில்லாமல் இருந்தோமாகில், இபபெரிய துலேயின் தட்டானது ஏற்றத்தாழ்வில்லாமல் நிற்கக் கடவதென்று கூறி, மேகங்கள் தவழும் விசாலமாகிய பொழில்கள்சூழ்ந்த திருநல்லூர்ப பெருமானைவணங்கி, தமதுள்ளத்தில் நிறைந்துள்ள ஸ்ரீபஞ்சாக்கரத்தைச் சொல்லி தராசுதட்டில் ஏறினர் என்பதாம்.

இறைவனேக்காட்டும் பிரமாணபபொருளாயுள்ளது நீறு என்பது தோன்ற—இறைதிருநீறு—என்றும், அத்திருநீறு உடையார் யாரோ, அவருக்கு என்னை யடிமை யாக ஆக்குவதிலும், என்னுடைமையை அவருடைமையாக ஆக்குவதிலும், பொய்மை யில்லை என்பதும், அன்புடைமையுள் து என்பதில் பிழையில்லை என்பதும் தோன்ற - திருநீற்று மெய்யடிமை பிழைத்திலோம்—என்றும், என்னல் இத்துலேயில் இட்ட பொருளெல்லாம் இடைகாட்டாது பொய்மையா யொழியினும், யான் இப்போது சொல்லியது வாய்மையேயாயின் அது எடைகாணுது இடர்ப்படும் எனக்கு எடைநிற்க வேண்டுமென்பது தோன்ற - எனில் பெருந்துலே நேர்நிற்க - என்றும், எனது வாய்மையினுள்ளும் என்னுள்ளும் இருப்பவன் நல்லூர் இறைவன் ஆகலின் அவனும் உடன் நிற்கவேண்டுமென்பது தோன்ற - நல்லூர் இறைவரை வணங்கி - என்றும், எனது மெய்யடிமை நிலைபெறவும், துலேநேர் நிற்கவும், இறைவன் உடன் நிற்கவும் செய்யவல்லது பஞ்சாக்கரமென்பது தோன்ற - அஞ்செழுத்தோதினர் - என்றும் கூறப்பட்டன. (௬௩)

மண்டு காதலின் மற்றவர் மகிழ்ந்துட னேற
அண்டர் தம்பிரான் திருவரைக்கோவணம் அதுவும்
கொண்ட அன்பினில் குறைபடா அடியவர் அடிமைத்
தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர் நின்றதத் துலேதான்.

(எ - து.) (நாயனர்-தட்டில் ஏறும்பொழுது) அவரது மனைவியாரும் புதல்வனும் (அவரைப்போலுமே) மகிழ்ச்சி யுடையவராய் அவருடன் ஏறினர்கள். (ஏறவும்) தேவர்கள் முதல் வணங்கிய பிரமசாரியார் அரையில் உடுக்கும் கோவணத்தைவைத்த அருளாகிய தட்டும் நாயனர் தாம்கொண்ட அடியவரது அடிமைத் தொண்டின்திறத் தில் குறைபடாத அன்பும் ஒத்தபடியினலே, (நாயனரது அன்பாகியதட்டும்) சமப்பட்டு அத்துலேயானது எடையொத்து நின்றது என்பதாம்.

அடியவர், கொண்ட அடிமைத்தொண்டும் அன்பினிற் குறைபடாது ஒத்தலால்; அத்துலேதான் ஒத்துநேர்நின்றது எனக்கொண்டுகூட்டுக.

அருளின் அளவைக்காட்டுவதும் அன்பும், அன்பின் அளவைக் காட்டுவதும் அருளும் ஆதலின்—கோவணம் அதுவும் அன்பினிற் குறைபடா அடியவரடிமைத்தொண்டும் ஒத்தலால் ஒத்துநேர்நின்றது அத்துலைதான் என்றார். எனவே அன்பை விளைவிப்பது அருளும், அருளை வருவிப்பது அன்பும் ஆகலின் என்க. அஃதாவது அருளில்லையாயின் அன்புவிளையாது, அன்பு விளையாதாயின் அருள்வாராது என்பதாம்.

நாயனாரும், அவர்மனைவியாரும் மகனும் ஒத்த அன்பினரே; அவரால் தேடப்பட்டபொருள்களும் ஒத்த அன்புருவே என்று வெளிப்பட்டபடியான் அத்துலை ஒத்து நேர் நின்றது என்பதுமாம்.

நன்றுசால என்னுந் திருப்பாசுரமுதல் இத் திருப்பாசுரம்வரை - பதின்மூன்று பாசுரங்களான் முறையே;-(௩௨) குன்றவில்லியார் கோவணம் ஒருதட்டில் இட்டார் என்றதனால்—தனது இறைவன் அருளை நாயனாரை ஆளுந்திறத்தில் வைத்தன ரென்றும், தொண்டரும் நெய்தகோவணம் தட்டில்இட என்றதனால்—தனது அன்பை நாயனார் அருளை ஆளுந்திறத்தில் வைத்தன ரென்றும், (௩௩) ஒன்றொன்றாகக் கோடு தட்டின்மீது இடஇடக் கொண்டெழுந்தது என்றதனால்,-நாயனார் ஒன்றொன்றாய் அனுப விக்கவேண்டிய சுகதுக்கங்களெல்லாம் அவரைத் தாக்காவண்ணம் அவையனைத் தையும் தான்தாங்கிக்கொண்டுமேலெழுந்தது என்றும், இவ்வாறு மேல் எழஎழ நாயனு ருக்குஆட்படுந்திறத்தில் அன்புமேலிட்டெழுந்த தென்றும், (௩௪-௩௫-௩௬) மென்துகில் பலவும் பட்டுடன் இட இட, என்றதனாலும், துகில் பொதிகளை எடுத்து மேலிட என் றதனாலும், பட்டொடுந்துகில் அனேககோடிகள் இடஇடப் பத்தர்தட்டுமேற்பட என் றதனாலும் துகில்வர்க்கம் நூல்வர்க்கம் மானமில்லன குவிக்கவும் உயர என்றதனாலும், —மேலேகூறிய சுகதுக்கங்களுக்குக் காரணமாகிய புண்ணியத்திரள் பாவத்திரள் புண்ணியபாவமிச் ரத்திரளெல்லாம் நாயனாரைத் தாக்காவண்ணம் அவையனைத்தையும் தான்தாங்கித் தொண்டு மேலெழுந்த தென்றும், (௩௭-௩௮)உங்கள்தனங்களினுளாகிலும் என்றதனாலும், பொன்னொடுமவெள்ளியும் நவமணித்திரளும் பலவகைத்திறத்து உலோ கமும் புணர்ச்சிகள் பலவும் இடஇட தட்டுமீதெழுந்தது என்றதனாலும்—மேற்கூறிய புண்ணியம் பாவம் மிச்சிரம் என்னும் மூவகைக் கன்மங்களுக்கும் காரணமாகிய நல்வினை தீவினையாகிய இருவினைகள் நாயனாரைத் தாக்காவண்ணம் அவைகளைத் தான் தாங்கிக்கொண்டு மேலெழுந்ததென்றும், (௩௯) சிவன் விரும்பியகோவணம் இடும் செழுந்தட்டுக்கு அமர்நீதியார் தனமெலாம் அன்றிப, புவனம்யாவையும்நேர்நிலா என் றதனால்,—கோவணம் இட்டதட்டு நாயனாரைத்தட்டாகத்தாங்கவந்த இறைவன் அரு ளாகலான் அவ்வருள் நாயனாரைச் சமமா (நேராக)க்கொள்ளுமேயன்றி, மேலெழுந் தன்மையுடைய வினைகளையும், அவைகட்கு மேலெழுந்தன்மையுடைய புண்ணிய பாவங் களையும், அவைகட்கு மேலெழுந் தன்மையுடைய சுகதுக்கங்களையும், நேராகக்கொள் ளுமோ, கொள்ளாவாகவுரன் அவைகளையெல்லாம் தனக்கு நேராக நிற்கச்செய்யாமல் மேலெழுந் தோடச்செய்ததென்றும், (௪௦) நிகரிலார் நேர்நின்று உலைவில் புன்தனம், ஒன்றொழியாமை உய்த்தொழிந்தேன் தலைவ யானும் என்மனைவியும் சிறுவனும், துலை யில் ஏறிடப்பெறுவது உன்னருள் என்றதனால்—சுகதுக்கங்கட்கும், புண்ணியபாவங்கட் கும், இருவினைகட்கும், இடஞ்செய்யத்தக்க எல்லாப்பொருள்களும் என்னினின்றும் நீங்கித் தன்னையடையுமாறுசெய்ய யானும் அவற்றினின்றும் வேறாயினேன். அங்ஙனம் செய்த அருளுக்கு நாங்கள் மூவரும் ஆளாகவேண்டியதேயன்றி வேறொருசெயலில்லை. அஃதாவது, நாங்கள் மூவருந்தான் உள்ளோம், எல்லாப்பொருளையும் துலையில் ஏற்றியது போல் நாங்கள் மூவருந்தான் இனி அத்துலையில் ஏறவேண்டும் என்பதாம், இங்ஙனம் நாங்கள் ஏறப்பெறுவதும் உன்னருளாலேயாம் என்றும், (௪௧) அங்கணர் அருளால் அவர் நிலையினைத்துலையெனும் சலத்தால் சழக்கினின்று ஏற்றவர் ஏறுதற்கு இசைந்தார்- என்றதனால்—நாயனார்பால் இறைவ[illegible] வந்த

அக்கருணைக்கேற்ப அதுகாறும் செய்து வந்தனவும், நாயனார் வேண்டியபடியே அவரைத் துலையிலேற்றித் தனதருளும், அவ்வருளுக்கேற்ப மாறுதியற்றும் அவரது அன்பும், எடையிட்டு அதனை யாவரும் அறியும்வண்ணம், அஃதாவது தன்னைச் சார்ந்தாருடைமையெல்லாந் தனதாகக்கோடலே அருள் என்பதும், அங்ஙனங் கொள்ளும்படி யாவையும் கொடுத்துத் தன்னையுங்கொடுத்தலே அன்பென்பதும் எளிதில் உணரும்வண்ணம் செய்வதாம். ஆகவே, நாயனார் துலையில் ஏறுவதற்கு இறைவனார் இசைந்தார் என்றும் (௩௨ - ௩௩.) அவர்மலர்க்கழல் சென்னியால்வணங்கி, மனைவியார், புதல்வன் உடன் கொடு துலைவலங்கொடு ஏறுவார் எடுத்துக் கூறுவார், என்றதனாலும் இழைத்த அன்பினில் இறைதிருநீற்று மெய்யடிமை பிழைத்திலோமெனில் பெருந்துலை நேர்நிற்க என்று திருநல்லூர் இறைவரைவணங்கி அஞ்செழுத்தோதி தட்டில் ஏறினார்- என்றதனாலும்-எல்லாவுலகும் எடுப்புண்டு எடுப்புண்டு ஏறும் என்னை இத்துலையிலேற்றி இனி எவ்வுலகும் நான் ஏறுவண்ணம் † என் என்பெலாம் உருக நீ எளிவந்து உன்னை என்பால்வைத்து-(அஃதாவது-உனது கோவணத்தை என்னிடத்தில்வைத்து) முன்னை என்பாசமுழுவதும் அகல (அஃதாவது - என்னிடத்தில் அனாதியாயுள்ள மும்மலசம் பந்தமாகிய எல்லாம் பொருளும என்னைவிட்டு நீங்க) இப்பொழுது உன் பாதபங் கயத்தைபபணியச் செய்தனையே என்று அவரடி வணங்கி, துலையிலிட்ட ஏனைப் பொருள்கள்போல மனைவியும், புதல்வனும் தம்முடைய பொருளாகலான் அவர்களை விடாது அவர்களுடன் துலையினருகேவந்து, என்னுடையபொருளை எடையிடுவதற்கு வேறுதுலாக்கோலை நான்தேடாவண்ணம் எல்லாப பொருளையும் உன்னுள் அடக்கிக் கொண்டதுபோல் எங்கள் மூவரையும் நீயே அடக்கிக்கொள்ளவேண்டுமென்று அதனைச்சூழ்ந்துவந்து வேண்டித் தம்முள்ளத்துள் புதைப்பொருளாயிருந்த தமது உண்மையை யாவருங்கேட்க ஓசைபட எடுத்துக்கூறத் தொடங்கினாரென்றும், அஃதாவது, இந்நல்லூர் இறைவன்பால் அன்புவேண்டி செய்துவந்த அன்பும், அவ்வன்பு அமையுமாறு திருநீறுடையார்க்கு அடிமைப்பட்டுவந்த அடிமைத்திறமும், எடைகொள்ளப் பெறாத இப்பொருள்கள்போல் அல்லாமல் எடைகொள்ளபபெற்ற பொருளாக இருக்குமானால், அந்த அன்பிலும், அடிமைத் திறத்திலும் சிறிதும் பிழைபடாது எனது அறிவினாலும் செயலாலும் நடத்திவந்திருப்பேனானால், அன்பு செய்தற்குரிய என்னையும், அடிமை செயதற்குரிய என் மனையாட்டியையும், என் அறிவு செயல்களுக்குரிய மகனையுமே எடைகொணட பொருளாக வைக்கின்றேன். இப்போது யான் கூறியபடி என் அன்புக்கும், என் அடிமைக்கும், என்னறிவு செயல்களுக்கும் எடைகொடுக்கவேண்டியது அஞ்செழுத்தன்றி எனக்குவேறெழுத் தில்லையாகலான் அவ்வெழுத்தை என்னுள்ளத்திருத்தி ஏறுகின்றேன் என்று ஏறினார் என்றும், (௩௪) அவர் மண்டு காதலின் மகிழ்ந்து உடனேற, தம்பிரான் அரைக்கோவணம் அதுவும், கொண்டஅன்பினிலும், அடியவர் அடிமைத் தொண்டிலும் குறைபடாது ஒத்தலால் அத்துலை நேர்நின்றது என்றதனால் - தம்மிடத்தில் எடைகொள்ளும்படி நாயனார் ஓதிய திருவஞ்செழுத்தே வேதத்திணடயில் (நடுவில்) எடையாக (கனத்தபொருளாக) இருப்பதாகலான் தாழ்ந்திருந்த கோவணத்தட்டானது நாயனார் ஏறிய தட்டுக்கு நேராகநின்றது. அங்ஙனம் நின்ற தன்மையை அதுகாறும் நேர் நிலாமையைக்கண்ட யாவருங்காண துலாக்கோல் காட்டியது என்றுங் கூறபபட்டன. (௩௫)

மதிவி ளங்கிய தொண்டர்தம் பெருமையை மண்ணோர்
துதிசெய் தெங்கணும் அதிசய முறஎதிர் தொழுதார்
கதிர்வி சும்பிடை காந்திட நிறைந்தகற் பகத்தின்
புதிய பூமழை இமையவர் மகிழ்வுடன் பொழிந்தார்.

---

கருவூர்த்தேவர் - திருவிசைப்பா, செய்யுள்

(எ - து.) சிவனருளால் சிவஞானப்பிரகாசமுடைய நாயனருடைய பெருமையை எவ்விடத்திலும் உள்ள உலகினர் யாவருங்கண்டு அதிசயமுடையவராய் எதிரேநின்று தோத்திரஞ்செய்து வணங்கினார்கள். தேவர்கள், ஒளிவிளங்குகின்ற ஆகாயமெல்லாம் மறையும்படி, கற்பகவிருக்ஷத்தில் கொத்துக்கொத்தாயுள்ள புதியமலர்களைக்கொண்டு மழைபோல் மகிழ்ச்சியுடன் பொழிந்தார்கள் என்பதாம்.

மதிவிளங்கிய தொண்டர்தம் பெருமையை, எங்கணும் மண்ணோர் அதிசயமுற எதிர்துதிசெய்து தொழுதார், இமையவர் கதிர்விசும்பிடை எனக் கொண்டுகூட்டுக.

அறிவை மறைக்கத்தக்க பொன்னும் பெண்ணும் மற்றைபொருள்களும் நாயனார் அறிவை மறைக்காது விளக்க விளங்கிய பேரறிவுடையவராகலான் மதி விளங்கிய தொண்டர் - என்றார். எனவே, பொன்முதலியவற்றையும் மனையாட்டியையும் அறிவுகலங்காது நிலையிலேற்றியதனால், விளங்கிய மதியாயிற்று அரியவற்றுளெல்லாம் அரிதே பெரியாரைப பேணித்தமராக் கொளல்" அஃதாவது, பெரியவர்களை - அவர் உவப்பன அறிந்துசெய்து தமக்குச்சிறந்தாராகக் கொள்ளுதல், தான் பெற்றிருக்கும் பெரிய பேறுகளெல்லாவற்றுள்ளும் அரிது, என்ற வேதமொழிப்படி நாயனர் - தான்பெற்றிருந்த அரியபொருள்களெல்லாம் பிரமசாரியாகிய அபபெரியோருக்குக் கொடுத்து அவரை அரியபொருளாகக் கொண்ட அருமையைக்கருதி-மண்ணோ தொண்டர்தம் பெருமையைத் துதிசெய்து என்றார். நாங்களெல்லாம் சிறியபொருள்களாகிய பொன் மணிமுதலியவற்றை அரியபொருளாகக்கொண்டு, அரியபொருளாகிய பெரியாரைச்சிறியபொருளாகக்கருதிப பெரியாரைஇழந்து துன்பத்துக்காளாகின்றோம் ஆகலான்-அதிசயமுற எதிர்தொழுதார் என்றார். இமையாநாட்டமுடைய தேவரும் இமை கொட்டத்தக்க அரிய செயலைக்கண்டு மகிழ்ந்தனராகலான் இமையவர் புதிய பூமழை மகிழ்வுடன் பொழிந்தார்-என்றார்.

இத்திருப்பாசுரத்தான்,—விளங்கிய மதியில்லார் அறிவற்ற பொன்மணிமுதலிய பொருள்களை அரியபொருளாகக் கொள்வரென்பதும், விளங்கிய மதியுடையார அறிவுடைய பெரியோரையே அரிய பொருளாகக் கொள்வரென்பதும், அவர்களை † மண்ணுலகும் விண்ணுலகும் வாழ்த்திவணங்கிப போற்றுமென்பதுங் கூறபபட்டன.(௬௫)

அண்டர் பூமழை பொழியமற றதனிடை ஒளித்த
முண்ட வேதியர் ஒருவழி யான்முதல் நல்லூர்ப்
பண்டு தாம்பயில் கோலமே விசும்பினில் பாகம்
கொண்ட பேதையும் தாமுமாய்க் காட்சிமுன் கொடுத்தார்.

(எ - து.) தேவர்களெல்லாம் கற்பகமலர்மாரியைப பொழியும்போது, அம்மழையினிடையில் திரிபுண்டரதாரியாய்ப பிராஹ்மண பிரமசாரியாய் ஒளித்துவந்தவராகிய திருநல்லூர் முதல்வராகிய சிவபெருமான் இடப்பாகத்தைக்கொண்ட உமாதேவியும், தாமுமாய் அனுதியாய்ப் பழகும் கோலத்தையேகொண்டு, ஆகாயத்தின்கண் ஓர்வழியாய் முன்னே தெரிசனமாகும் படியாகக் காட்சிகொடுத்தனர் என்பதாம்.

அண்டர் பூமழைபொழிய மற்றதனிடை, முண்டவேதியராயொளித்த, நல்லூர் முதல்வர், பாகங்கொண்ட பேதையும் தாமுமாய்ப,பண்டுதாம் பயில்கோலமே(கொண்டு) விசும்பினில் ஒரு வழியான் காட்சிமுன் கொடுத்தார் எனக்கொண்டு கூட்டுக.

---

* திருக்குறள் அதி. பெரியாரைத்துணைக்கோடல்—செய்யுள்

† "நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ்சூழ்ந்த நல்லூர கத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட்கொண்ட நோக்கி மனைவியொடு மங்கோர் வணிகனை
யாட்கொண்ட வார்த்தை யுரைக்குமன்றோ இவ் வகலிடமே."

திரிபுண்டர மணிந்த பிரமசாரி என்பார்-முண்டவேதியர் என்றார். நல்லூர் இறைவர்என்பார்.—நல்லூர்முதல்-என்றார். பிரமசாரி வடிவமாறி ஆகாயத்திற்சென்றதை ஒருவரும் அறிவதற்கில்லாமல் பூமழைபொழிந்தனர் என்பார் — அண்டர் பூமழை பொழிய மற்றதனிடை ஒருவழியான் ஒளித்த என்றார். பூமியில்நின்ற பிரமசாரி வடிவத்தை ஒழித்து அந்தரத்தில் உமையோடு கூடிய அழகனும் நாயனார் காண அவர் முன் தெரிசனந்தந்தனர் என்பார் - பாகங்கொண்டபேதையும் தாமுமாய் விசும்பினில் காட்சிமுன் கொடுத்தனர் - என்றார். இறைவன் பலவகையான வடிவங்கொள்ளினும் அவையெல்லாம் அவ்வவ் வவசரபேதங்களைக் குறித்ததெனவும், உமையோடு கூடியிருக்கும் கோலமே அநாதியாய் என்றுமுள்ள கோலமெனவும் அறியவேண்டுமென்பார் ண்டுதாம்பயில் கோலம் - என்றார்.

இத்திருப்பாசுரத்தான், பூமாரியின் சிறப்புத்தோன்ற அதனிடையொளித்த என்றும், பிரமசாரியின் சிறப்புத்தோன்ற நல்லூர் முதல்வரென்றும், உமாசகாயமாகிய அருட்டிருமேனியின் சிறப்புத்தோன்ற - பண்டுதாம்பயில் கோலம் என்றும், பிரமசாரியாய் வந்து உண்டாக்கிய கவலையையொழித்து ஆனந்தமுண்டாக்கிய சிறப்புத்தோன்ற பேதையும் தாமுமாய்க் காட்சி முன்கொடுத்தார் என்றும் கூறப்பட்டன. ()

தொழுது போற்றியத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவில் அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும்
முழுதும் இன்னருள் பெற்றுத்தம் முன்தொழு திருக்கும்
அழிவில் வான்பதம் கொடுத்தெழுந் தருளினார் ஐயர்.

(எ - து) தமது கோலத்தின் காட்சியைக்கண்டு வணங்கித் தோத்திரஞ்செய்து, அந்தத் தராசின் தட்டின்மேலிருந்து நேராகப் புகழ்கின்ற தமது தொண்டில் மாறுபடுதலில்லாத நாயனாரும், அவர் புத்திரரும், அவர் மனைவியாரும், (பெறவேண்டிய) இனிய அருள் முழுவதும் பெற்று, தமக்குமுன்னே என்றுந் தொழுதிருப்பதாகிய அழிவில்லாத பரமுத்திப் பதத்தையுங் கொடுத்து இறைவனார் எழுந்தருளினா ரென்பதாம்.

அந்தரத்தில் நின்று காட்சிகொடுத்த இறைவரை அந்தரத்தில் நின்றதுலையின்கண் இருந்தவண்ணமாகவே கண்டுபோற்றின ரென்பார் - அத்துலை மிசை நின்று தொழுது போற்றி நேர் துதிக்கு - என்றார். நாயனார் தனது மனையாட்டிமுதல் முழுவதுங்கொடுத்து இறைவனுடைய இனிய முழுஅருளும் பெற்றனரென்பார் - அன்பரும் மைந்தரும் மனைவியார் தாமும் முழுதும் இன்னருள்பெற்று - என்றார். முழுவதும் கொடுத்து, முழுவருளும் பெற்றவர்க்குக் கொடுக்கும்பதம் தம்மைவிட்டு நீங்காதிருந்து எப்பொழுதும் கும்பிட்டிருத்தலாகிய நித்தமாகிய உயர்ந்தநிலை என்பார் தம்முன் தொழுதிருக்கும் அழிவில் வான்பதம் கொடுத்தருளினார் - என்றார். அவரவர்க்கு ஏற்றவாறு கொடுப்பதில் தலைவர் என்பார் - ஐயர் - என்றார்.

இத்திருப்பாசுரத்தான்,—இறைவனுக்கு முழுவதுங்கொடுத்து முழுவருள் பெற்றவர் இந்நாயனாரென்று கூறப்பட்டது. (சஎ)

நாதர் தந்திரு வருளினால் நற்பெருந் துலையே
மீது கொண்டெழு விமானம தாகிமேற் செல்லக்
கோதில் அன்பரும் குடும்பமும் குறையறக் கொடுத்த
ஆதி மூர்த்தியா ருடன்சிவ புரியினை அணைந்தார்.

(எ - து.) இறைவனுடைய திருவருளால், நல்ல பெரிய துலாக்கோலே தெய்வவிமானமாகி ஆகாயமார்க்கமாகச்செல்ல, ஆணவாதி குற்றமொழிந்த நாயனாரும், அவரது குடும்பமாகிய மனைவியாரும் புத்திரனும், யாதொரு குறைவில்லாமல் கொடுத்த திரு

வருதலைப்பெற்று உமாசகாயனுர் வந்த இறைவனுடன் சிவலோகத்தையடைந்தனர்

இத்திருப்பாசுரத்தான்,—நாயனுரிட்ட துலையே, அவரைச் சிவலோகத்தில் இருத்துவதற்கும் விமானமாகிய சிறப்புத்தோன்ற நற்பெறுந் துலையே மீதுகொண்டெழு விமானமதாகி மேற்செல்ல என்றும், முன்தொழுது இருக்கும். அழிவில் வான்பதம் கொடுத்த சிறப்புத்தோன்ற குறைவறக் கொடுத்தஎன்றும், அப்பதம் நாயனுர் முதலிய மூவர்க்குங் கொடுத்தனரென்னும் சிறப்புத்தோன்ற அன்பரும் குடும்பமும் என்றும், இறைவனோடு அத்துவிதமாயிருக்கும் முத்தியைப் பெற்றனரென்னும் சிறப்புத்தோன்ற ஆதிமூர்த்தியுடன் என்றுங் கூறப்பட்டன. (௬௮)

சுந்தரமூர்த்திநாயனார் துதி

வேறு.

மலர்மிசை அயனும் மாலும் காணுதற்கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூர் ஆவணப் பழமை காட்டி
உலகுய்ய ஆண்டு கொள்ளப் பெற்றவர் பாதம் உன்னித்
தலைமிசை வைத்து வாழுந் தலைமை நந் தலைமையாகும்

(எ - து.) தாமரை மலரின்கண் வாழும் பிரமனும் திருமாலும் காண்டற்கரியவராகிய இறைவன், யாவராலும் புகழப்படுகின்ற திருவெண்ணெய் நல்லூரின்கண் பழைய மூலவோலையைக்காட்டி உலகெல்லாம் உய்யும் வண்ணமாக ஆண்டுகொள்ளப்பெற்றவராகிய எம்பெருமானது ஸ்ரீபாதங்களை உள்ளத்தின்கண் தியானித்து, முடியின்கண்ணும்வைத்து வாழ்வதாகிய தலைமைத்தன்மையே, நாம் அடையப்படும் தலைமைத்தன்மையாம் என்பதாம்.

'தொழுதும் வணங்கியும் முன்தேடருஞ் சோதி' என்பார், "மலர்மிசை அயனும் மாலும் காணுதற்கரிய வள்ளல்" என்றார். "சென்றாங் கெழுந்தமிழ்ப்பழ ஆவணங் காட்டி" என்பார், 'பலர் புகழ்வெண்ணெய்நல்லூர ஆவணப்பழமைகாட்டி' என்றார் 'எனக்குன் குடிமுடிமுழுதும் அடிமை வந்தாட்செய் எனப்பெற்றவன்' என்பார், "உலகுய்ய ஆண்டுகொள்ளப்பெற்றவர்' என்றார். ஆட்கொள்ளப்பெற்ற அப்பெருமான் (வண்டுகள்) முரல் தேன் ஒழுகுமலரின் நற்றார் (அணிந்த) நம்பியாரூர (னாகிய) எம்பெருமானாகலின் 'அவனது பாதம் உன்னித்தலைமிசைவைத்துவாழும் தலைமை நம் தலைமையாகும்' என்றார்.

அமர்நீதிநாயனார் புராணம் முற்றிற்று.

—••••••—

உ

திருச்சிற்றம்பலம்.

காருண்யாயநம:

# திருத்தொண்டத்தொகை.

அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்

அல்லிமென்முல்லையந்தார்— என்றதனால் - கற்புங்காதலுமுடைய கற்பின்மகளிரும், வேதவேதாந்தங்களில் பண்டிதர்களாகிய அந்தணர்களும, வன்னற்றன்மையில் மிக்க அரசர்களும, தத்தம உள்ளத்தில் உள்ள பெருந்தன்மைகள் பிறருக்குக்காட்ட அகவிதழுடைய முல்லைமாலையை அணிதல்போல்,— இவ்வமர்நீதியார் இறைவனால் கொடுக்கப்பட்ட தனுகரண புவன யோகங்களையெலலாம் தம்முடையனவாகக்கருதி அவனடியார்களுக்குக் கொடுக்க அறியாத உலககாமிகளாகிய பகைவரெல்லாம் நாணப்படவும், அன்புநெறி-திருவேடமுடையார் யாதுவேண்டினும் மறுதகொடுக்கத்துணியும் அறிவே ஞானமென் றறியாத ஞானிகளாகிய புறச்சமயிகளெல்லாம் தமது ஞானம் பாசஞானம்

* சத்தாகிய சிவத்தின்முன் இருப்பதால் ஆணவ மலத்தின் செயல்அழிந்தும், அங்கு தொழுதலால் கன்மமலத்தின் செயல் அழிந்தும், அங்கு இருத்தலால் மாயாமலத்தின் செயல் அழிந்தும் போதலால், அது அழிவில்வான்பதமாயிற்று.

பசுஞானம் என்றுணர்ந்து தாம்ஞானிகள் என்று வெளிவராது அடங்கவும், இறைவன் பால் அன்பே வேண்டியவர் அவ்வன்பினை இறைவன்பால் பெறுதற்குத் தம்பொருளெல்லாம் அவ்விறைவனுக்கே கொடுக்கும் ஆசையுடையோராவர் என்று எண்ணும் தமது தட்பினராகிய அகச்சமயிகளெல்லாம் அகங் களிதூங்கவும் தமது வணிகர்குலச் செய்கைச் சிறப்புத் தலையை நாட்டி, தம்மைக்கோவணத்தால் கொள்ளைகொண்டு ஆளவந்த இறைவன் திருவுள்ளப்படியே ஓர்தட்டில் அப்பெருமானைக்கோவணம் வைக்கச்செய்து, மற்றோர்தட்டில் முன்னர் தமது அசையாபபொருள் அசையும்பொருள்களையெல்லாம்வைத்து பின்னர் இறைவன் அருளோடு தமது திருநீற்றடிமையைச் சமன்செய்து காட்டவல்ல ஸ்ரீபஞ்சாக்கரத்தைச் சாதனைமுறையில் து ஓதாது, நிற்குமுறையில்வைத்து ஓதிக்கொண்டே மேலெழுந்து [illegible]வண்ணமாகவே இருந்த தட்டில் தாமும்ஏறத் தாழ்ந்திருந்தவண்ணமாகவே இருந்த தட்டானக அக்கணமே மேலெழுந்து தமது தட்டுக்குச் சமனாகநிற்க, இறைவனது இனிய [illegible]வதும்பெற்று அவ்வருளாளன் திருமுன் என்றும் நீங்காதிருக்கும் வெற்றிப்[illegible] யாவரும்காணப பெற்றவர்என்றும், அமர்நீதி— என்றதனால் சிவன்முத்திநிலையில் சிவன் அருளுடன் ஆன்மாவோடு அமர்ந்திருக்கும்நிலையும், ஆன்மா பரமுத்திநிலையில் பாசத்துடன் சிவனோடு அமர்ந்திருக்குநிலையும் காட்டவல்ல ஸ்ரீபஞ்சாக்கரத்தை நிற்குமுறையில் ஓதி, சித்தாந்தத்திற் கூறியுள்ள நீதிப்படி இருமுத்தி நிலையில் அமர்ந்திருக்குநிலையினர் என்றும், அடியேன் என்றதனால்— அருட்கலப்பால் சிவன்முத்தியும், அன்பின்கலபபால் பரமுத்திநிலையும், அவ்விரண்டு நிலையினும் அடிமைகுலையாது நிற்கும் நிலையும்ஆகிய மூவகைநிலையினையும் ஸ்ரீபஞ்சாக்கரத்தாற்காட்டிய அப்பெருமானுககு யான் அடிமைகுலையாது நிற்றல் எனது கடைமைப் பாடாம் என்றுங் கூறியவாறும்.

இதனால் விறன்மிண்டநாயனார் தமிழ்நாடெங்கும பரவச்செய்த தொண்டர அடிமைத்திறம் இவ்வளவினதென்று உலகினர் அறியுமாறு தொண்டர் நாயகனாகிய இறைவன் தானே ஓர் துலையிலிட்டுககாட்ட எண்ணி இதற்குரியார் அமர்நீதியார் என்று துணிந்து அவாபால்வநது, தமககுக்கோவணமாக இருககும் வேதத்தை எடைகாட்டும் ஓர் அளவைக்கருவியாச ஓர் தட்டில் வைக்க, நாயனா அவவிறைவனெண்ணபபடியே அந்த வேதஅளவையால் - உலகினா பெரியபொருளாக எண்ணும் பொன்மணி முதலிய எல்லாச்செல்வபபொருள்களையும் இறைவன் ஓா பொருளாகக்கொள்ளும் பொருள்களன்றென்றும், பேரன்புடைய அன்புடையாரையே அவன் கொள்ளத்தகும பெரிய பொருளாகக்கொள்ளும் பொருள்களாமென்றும் காட்டினராகலான் என்னையும் அன்புடைப்பொருளாகக்கொண்டு எமது இறைவனுக்காகக அந்நாயனருககு அடியனானேன் என்று கூறியவாறும்

## திருவந்தாதி.

மிண்டும் பொழிற்பழை யாறை அமர்நீதிவெண்பொடியின்
முண்டந் தரித்தபிராற்கு நல்லூரின்முன்கோ வணநேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமும் தன்னையும்தன்
துண்ட மதிநுத லாளையும் ஈந்ததொழி லினனே.

மேகவாகனனாகிய இந்திரன் சோழிபபதியில் தன்னால் வைககப்பட்ட நந்தனவனத்திற்குச்சிறிலவாதொழிய அதனல்வாடி தவங்கிடந்து ஈசனருளாற்பெற்ற காவிரியின்வளபபத்தால் ஏனையவெனிலும் சிறந்து பொழில்களால் நெருங்கிச் சூழபபட்டுள்ளது பழையாறை என்னும் திருப்பதியாகலான்—மிண்டும் பொழிற்பழையாறை—எனவும், அப்பதியில் எந்நிலத்தினுமுள்ள பொன் மணி துகில் முதலிய எல்லாப பொருளும் நிலவழியால் தாம்செய்யும் வாணிபமுறையால் தம்பொருளாகப பொருந்திக்கிடக்கச் செய்தவராகலான் அமர்நீதி—எனவும், அந்நீதியார் திருநீற்றடிமையில் பிழைத்தலை அறியாத அன்

பிழைக் காட்ட இறைவனார் திருநீறு சண்ணித்தமேனியாராய் வந்தவராகலான்—வெண்பொடியின்முண்டந்தரித்த பிரான்று எனவும், இறைவனது உபகாரத்தை நினைந்து நெஞ்சம் உருகவும், நில்லாமே தீவினைகள்நீங்கவும் எண்ணும் அன்புடை அடியார் முடியில் தனது அடியைச்சூட்டுதற்கு நிஷாத்தானமாய்க்கொண்டிருக்கும் ஊராகலின்-நல்லூர். எனவும், நாயனாரிடம் இறைவன் முன்கொடுத்த கோவணம்—தம்மை அகோசரமாய்க் காணக்கொடுத்த இருக்குவேதமாகிய கோவணம், தட்டில்வைத்த கோவணம்—தம்மைக் கோசரமாய்க் காணச்செய்யவல்ல ஸ்ரீபஞ்சாக்கரத்தைத் தனது இருதயத்தில் கொண்டுள்ள யஜுர் வேதமாகிய கோவணம், உடுத்திருந்த கோவணம்—தம்மைக் கோசராகோசரமாய்க் கண்டுணர்ந்தார் தம்முடனாய் இன்புற்றுநிற்கும் நிலையைப் புகழ்ந்தெடுத்தோதும் சாமவேதமாகிய கோவணம், ஆகலான், நாயனார் பாசப்பொருளோடு கலந்துள்ளாராகலின், பாசப்பொருளைத் தம்முடைமையாகவே வைத்திருப்பார்க்கு இறைவன் அகோசரமென்னும் அவ்வுண்மையை உணர்த்த, அவருக்குமுன்கொடுத்த ருக்வேதமாகிய கோவணம் அகோசரமாய்ப்போயிற்று.

அவ்வுண்மையை நாயனார் உணர்ந்து அகோசரமாய் நிற்கின்ற இறைவன் தமக்குக் கோசரமாம் வண்ணம், புறப்புறமாயுள்ள பொன் மணிமுதலிய பாசப்பொருள்களையும், புறமாயுள்ள பாசப்பொருளாகிய மனையாட்டியையும், அகப்புறமாயுள்ள மகனையும் அம்முப் பாசங்களையும் உடைய தம்மையும், யஜுர்வேதமாகிய கோவணம் இருக்குந் தட்டில் வைக்க, அவ்வேதம் நாயனாருக்கு இறைவனைக் கோசரமாக்கவல்ல ஸ்ரீபஞ்சாக்காரத்தைக் காட்டி அதன் பொருளையும் உணர்த்தி உணர்த்தியவழியே இறைவனருளையே நோக்கி அவனளவாய் நிற்கச்செய்து தானும் நின்றது.

இறைவன் உடுத்திருக்கும் சாமவேதமாகிய கோவணம்—கோசராகோசரமாய் நிற்கும் இறைவனை அருள்வசப்படுத்தி நாயனாரை அன்புருவாக்கிக்க சிந்துருகி என்றும் புகழ்ந்தெடுத்தோதும் பேரின்பானுபவத்தில் நிற்கச்செய்தது.

இவ்வண்ணம் மூன்றுவேதமும் முறையே உணர்த்தவும், காட்டவும், நிற்கவுமான செயலைச் செய்ய அதற்கேற்ற செயலைமாறாது செய்தனராகலின்—தன்பெருஞ் செல்வமும், தன் துண்டமதி நுதலாளையும், தன்னையும் ஈந்த தொழிலினன்—எனவுங் கூறினார்.

இதனால் நாயனாரது ஊரும் பேரும் தொண்டும் பேறும் கூறப்பட்டன.

## புராணசாரம்.

பழையாறை வணிகரமர் நீதியார்பாற்பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலுநல்
லூர்க், குழைகாதர் வந்தொருகோ வணத்தைவைத்துக்கொடுத்ததனை எடுத்
தொளித்துக் குளித்துவந்து, தொழிலாரும் அதுவேண்டி வெகுண்டுநேரித்
துலையிலிடுங் கோவணநேர் தூக்குமென்ன, எழிலாரும் பொன்மனைவி இளஞ்
சேயேற்றி ஏறினர்வானுலகு தொழ ஏறினாரே.

(எ - து.) அமர்நீதியார் பழமையாயுள்ள காவிரிஆற்றினால் நிலவளம் நீர்வளம் குடிவளமுதலிய வளப்பங்கள் நிறைந்த பழையாறை என்னும் திருப்பதியின்கண் பொன் மணிமுதலிய பூஷணமணிகளும், நென்மணிமுதலிய உணவின்மணிகளும், ஆடைமுதலிய உடையணிகளும் ஆகிய எல்லாப்பொருளையும், தமதேபோல் பிறர்பொருளையும் எண்ணிக்காத்தலால்வரும் பொருளையும் தம்வசமாக்கவல்ல வாணிபமுடைய வணிகர்குலத்தில் அவதரித்தவர். சிவன்கழலைச் சிந்திக்குஞ்சிந்தனைச்செயலில் மனத்தையும், செவியுணவை யூட்டவல்ல அந்திவண்ணர் தம் அடியவர்க்கு அமுதுசெய்விக்கும்போது அவருள்ளங்களி கூறுமாறு இன்மொழிகூறும் செயலில் வாக்கையும், பஸ்ம ருத்திராக்ஷங்களையே ஆடையாகவும் அணிகலன்களாகவும் கொண்டுள்ள திருவேடமுடையார்க்கு அவர்கருத்தறிந்து கந்தை நேர் உடை கோவணம் முதலியவற்றைக் கொடுக்குஞ்செயலில் காயத்தையும் சைவநீதிவழியாய் அமர்ந்திருக்கச் செய்யும் வன்மை உடையவராகலின் அமர்நீதியா-

என்னுந் திருநாமமுடையவர். திருநல்லூர் என்னும் திருப்பதியில் வீற்றிருக்கும் முக்கண் அக்காரம் முதல்வனாது திருவிழாக்கோலத்தை நாடோறும் கண்டுகளிக்கவும் எண்ணிறந்த அடியார்களுக்கு அமுதுபடைக்கவும் எண்ணி, அந்நல்லூரில் ஓர்திருமடம் அமைத்து அதில் தன்னுடைய மனைவி மகன் ஏனையசுற்றத்தாருடன் குடியிருந்து, எண்ணிவந்தபடியே நல்லூர்ப்பெருமான் திருவிழா அணியைச்சேவித்தும், மடத்தில் அடியார்கட்கெல்லாம் இன்பமாகிய அமுதளித்தும், அவர்களுக்குவேண்டிய கந்தை கீள் உடை கோவணம் முதலியவைகளைக் கொடுத்தும்வருநாளில் ஓர்நாள் நீலகண்டமும் குழைக்காதுமுடைய நல்லூர் இறைவன் அமர்நீதியார்க்கு அவர்கொடுத்துவரும் கோவணப் பெருமையை முன்னே காட்டிப் பின்னர் நிறைந்த பேரருளைக்காட்டி ஆட்கொள்ளத் திருவுளத்தெண்ணி யாவராலும் போற்றப்படும் பிரமசாரியாய் சிறிய முனிவடிவினையுடையராய் எத்தராகவந்து தமதுமடம் புகும் பாக்கியம் பெற்றவர். அம்முனிவரைக் கண்ட அளவில் உள்ளமும் மலர்ந்து, முகமிகமலர்ந்து மிக்கவிரைவுடன் எதிரேசென்று எம்பெருமானே! தேவரீரது திருவுருவம் எனனல் காணுந்தரத்ததன்று இவ்வரிய திருவுருவத்தைக்காண அடியேன் செய்துவந்ததவம் யாதோ என்று போற்றும் பொழுது, பிரமசாரியார்-நீர் பெருகிய அடியார்க்கு நல்லுணவும், நல்ல ஆடைமுதலியனவும் அன்புடன் மாறாது கொடுத்துவரும் அருமையைக் கேட்டு உம்மைக் காணவந்தேன் என்று அவரால் புகழப்பெற்றவர்.

நாயனார் "இங்கு நல்லொழுக்கமுடைய வைதிகப்பிராமணர்களால் மிகவும் பரிசுத்தமாய் திருவமுது அமைக்கப்பட்டிருக்கின்றதாகலின் தேவரீர் இன்று அமுது கொண்டருளவே வேண்டும்" என்று பணிந்து வேண்ட பிரமசாரியார் இசைந்தவராய் யான் காவிரிக்குச்சென்று நீராடி நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு வருவதற்குள் மழைவரும்போல் காணப்படுகின்றதாகலின் இக்கோவணத்தை வைத்திரும் என்று தாம் தாங்கியிருக்கும் தண்டத்திலுள்ள ஓர் கோவணத்தை அவிழ்த்துக்கொடுத்து "நீர் கோவணப் பெருமை நன்றாய் அறிந்திருப்பவராதலால் நான் ஒருவிசேடமும் எடுத்துச்சொல்லவேண்டியதில்லை; இதனைக்காவலுள்ள இடத்தில் வைத்திருந்து நான் வந்த பின்னர்கொடும்" என்றுகூற வாங்கப்பெற்றவர். பிரமசாரியார் சொல்லியபடியே ஓர் தனியிடத்தில் மிக்ககாவலுடன் நாயனார் வைக்க, அதனை அடியார் உள்ளங்கவர்கள்வனாகிய கங்காதரன் அவ்விடத்தில் இல்லாமற்போக்கி மழையை வரவழைத்து அதனால் நனைந்து மடத்தைவந்து சேர்ந்தனர், வந்துசேர்வதற்குமுன் நாயனார் மிக்கபக்குவத்தோடு அறுசுவைத்திருவமுதாக்கிப் பிரமசாரியார் வருகையைநோக்கி இருப்பவராதலால் அவர்வந்து சேர்ந்தவுடன் அவர்அமுது கொள்ளும் பொருட்டாக அவரடிபணிந்து நிற்ப அவரைநோக்கி யான் நனைந்துவந்தேனாகையால் நான்முன்னே கொடுத்த கோவணத்தைக் கொண்டுவாருமென்று சொல்ல அவர் தொடக்கிலகப்பட்டவர் - நாயனார் - அதிசீக்கிரமாகவுள்ளே சென்று கோவணம் வைத்த இடத்திற்பார்க்க, அதனைக் காணாது தான் வைக்காத வேறுவேறு பலவிடங்களிலும் தேடித்தேடிப்பார்த்தும் தம்மைச் சார்ந்தாரைப் பார்த்ததுண்டோ என்று கேட்டும் அவரும் காணாதவராகையால் இவரைப்போலவே அவர்களும் காணாமையைக்கூற இஃதென்ன மாயமென்று மயங்கினர் இதற்கு நாம் என்செய்வது என்று எண்ணுதெல்லாம் எண்ணினவர். பின்னர் அஃதில்லாதொழியினும் நம்மிடத்திலுள்ள ஓர் கோவணத்தைக் கொண்டுபோய்க் கொடுப்போமென்று துணிந்து ஓர்கோவணத்தை எடுத்துக்கொண்டு பிரமசாரியிடஞ்சென்று இதோ கோவணம் கொண்டுவந்தேனென்று அக்கோவணத்தை அவர் கையிற்கொடுக்காமல் இக்கோவணம் தேவரீர்கொடுத்த தன்று, அதனை வைத்த இடத்திற் காண்கிலேன் இந்த மாயத்தையும் அதிசயத்தையும் நான்எப்பொழுதும் கண்டதில்லை, இது என்னிடத்திலுள்ள நல்லகோவணம் கிழித்தகோவணமன்று, நெய்தகோவணம் என்பிழைபொறுத்தினை உடுக்கவேண்டுமென்று வணங்கினவர்.

நாயனார் சொல்லியதைக்கேட்ட பிரமசாரியார் அடங்காகோபங்கொண்டு "ஆஹா இதென்ன அதிசயம் நான் நீராடிவருவதற்குள் நான் கொடுத்தகோவணம் மாயமாய்ப் போயிற்றென்று கூறுகின்றீரே! நீர்கூறுவதுமாயமா! அதுபோனதுமாயமா! நான் கொடுத்ததுமாயமா! இந்தமாயத்தை நான் எங்குங்கண்டதில்லை. வணிகர்குலத்திற் பிறந்து அக்குலத்திலில்லாத வாணிபத்தைச்செய்ய எங்ஙனங்கற்றீர் நீர்கற்றுக் கொண்ட வாணிபத்தைப்பிரமசாரியாயும் சிவனடியனாயும் இருக்கின்ற என்னிடத்திற்றானு காட்டவேண்டும் என்னிடத்திலேயே காட்டத்துணிந்தீர் மற்றையரிடத்தில் காட்ட அஞ்சியிருப்பீர்! இல்லை உம்மிடத்திலுள்ள பொருளெல்லாம் இவ்வழியாய்ச் சேர்ந்தபொருள்தான் போலும். உம்முடைய வாணிபம் மிகநன்றானன்று. இப்படியன்றோ பொருள்தேடவேண்டும், உம்மைப் போலும் வாணிபஞ்செய்து பொருள்தேடுவோரைக் கண்டதில்லை எத்தனைபேர் இப்படி தத்தம்பொருளெல்லாங்கொடுத்துப் போயினரோ அதனைநான் அறியாதொழிந்தனனே அவர்களைப்போல நான் போகத்தக்கவனன்று. நீர் பெருங்கோவணக்கள்வர் உம்முடைய கள்ளத்தனத்தை நான்யாவருங்காணச்செய்கின்றேன் யான்செய்யும் செயலால் என்கோவணந்தானவருமோ! நீருந்தானவருவீரோ! அதன்பின்னே அறியவரும் என்ன சொல்லுகின்றீர்" என்று நெருப்பானது அள்ளித்துள்ளி எரிவதுபோலும் துள்ளி பேச, நாயனார் அந்தச்சொற்களைக் கேட்டுப் பொறியும் அறிவுங்கலங்கி, மலர்ந்தமுகமும் வாடிப் பிரமசாரியாரைவணங்கி "என்பிழை பொறுத்தருளுவீர். யான் பிறர்பொருளைவஞ்சித்துக்கொள்ளும் வாணிபனல்லன் பிறர் பொருளுந் தம்பொருள்போற் பாதுகாத்துக்கொடுக்கும் நல்வாணிபன் என்வாணிபம் அங்ஙனமிருக்க நீர் உம்முடைய பொருளுக்கு நான் செய்யவேண்டியவழி எதுவோ அதனைச்சொல்லும் செய்கின்றேன் அன்றியும் உம்முடைய ஒருகோவணத்துக்கு என்னிடத்திலுள்ள நல்லபட்டாடைகள், மணிகள் இவைகளை அநேகமாக வைக்கின்றேன் எவ்வளவுவேண்டுமோ அவ்வளவும் எடுத்துக்கொள்ளும் என்வாணிபத்தையும் என்னையும் இகழவேண்டாம்" என்று மிகவும் வேண்டினர் பிரமசாரியார் "ஐயா! வாணிபரே! நான் உமது பொருளைக் கொள்ளையடிக்க வந்தவனன்று என்னுடையபொருள் எனக்கு வந்தாற்போதும் முன்கொடுத்த கோவணம் போயினும் இதோ என் தண்டினிலிருக்கின்ற கோவணத்தைக் கொடுக்கின்றேன் அது எவ்வளவு எடை இருக்கின்றதோ அவ்வளவே உடையனவாக எதனைக்கொடுக்கின்றீரோ அதனை நான் பெற்றுக்கொள்ளுகின்றேன்" என்ன நாயனார் அதுகேட்டு "அப்பா! இவ்வந்தணர் தொடக்கு நம்மைவிட்டது. இந்த ஒருகோவணம் என்ன எடைஇருக்கப்போகின்றது, ஆனால் அவர் சொல்லுகின்றபடி அதனை நாம் மறுத்தல்கூடாது ஒருக்கால் மறுப்போமாயின் இவர் பெரிய தொடர்வழக்காளியாய்க் காணப்படுகின்றார் இவர் வழக்கினில் நாமகப்படக்கூடாது" என்றெண்ணி ஒருதுலாக்கோலைக் கொண்டுவந்து நாட்டி "சுவாமிகாள்! தேவரீர்வைக்கவேண்டிய கோவணத்தை இந்தத் தட்டில்வையும், அதற்கு நான் வைக்கவேண்டியகோவணத்தை வைக்கின்றேன் எடையொத்தபின் அதனை எடுத்துக்கொண்டு ஈரக்கோவணத்தைக்களைந்து உடுத்து அமுதுகொண்டருளவேண்டும்" என்று கூறினர் பிரமசாரியார் "அமர்நீதியாரே! ஏன் அவசரப்படுகின்றீர்! எனக்கு நீர் அன்னம்படைத்து என்னை உண்ணச்செய்வீரோ! என்னை நீர் உண்பீரோ! எனக்கு யோசனையாக இருக்கின்றது" என்று ஒருகோவணத்தை ஒருதட்டிலிட்டு 'நீர் வைப்பதைஅந்தத்தட்டில் வையும்'என்றனர். நாயனார் நெய்தகோவணமொன்றை வைத்தனர். பிரமசாரியார் கோவணத்தட்டு எழுந்திருக்கவேண்டியதிருக்க அது எழுந்திராது நாயனார் கோவணத்தட்டு எழுந்தது. நாயனார் அதுகண்டு அஞ்சி, ஒவ்வொருகோவணமாக வைத்தனர், பின்னர் ஒன்றிரண்டு கோவணம் வைப்பதொழிந்து மூட்டையாக நூல்வர்க்கமெல்லாம் வைத்தனர், எது எது வைத்தும் மேன்மேலெழுந்ததேயன்றித் தாழ்ந்ததில்லை. அவ்வதிசயத்தைக்கண்டு இதுவுலகில் இல்லதோர்மாயமென்றஞ்சி, மீண்டும் பிரமசாரியாரை வணங்கி ஐயரே நீர்வைத்தகோவணம் ஒருகோவணமா! அதுவுருவத்தால் கோவணமாகக்காட்டினும்

அது குணத்தால் எடைகொள்ளத்தக்கதாகக் காணப்படவில்லை. இனி பொன் மணி முதலியன யாவும்வைக்கின்றேன் என்றுகூறி அவையாவும் வைக்க அவைகளும் எடைகொள்ளாதொழிய இனி எடைவைக்கும்பொருள் ஒன்றுமின்மையைக்கண்டு இது அதிசயத்திலும் அதிசயமென்று ஒருவகையானகளிப்பும், பிரமசாரியார் வழக்கு ஒழிவதற்கில்லையே என்கிற ஓர் துக்கமும் உடையவராய் நிற்க, அவரை நோக்கி என்னுடைப் பொருளெல்லாம் எடையிட்டும் எடைகொள்ளவில்லை. யானும் என்மனைவியும் என் மகனுமுள்ளோம். எடையாக அத்தட்டில் ஏறுகிறோம் இனியேனும் எடைகொள்ளா மாயஞ்செய்ததுபோல் செய்யாது எடைகொள்ளும் அருளைத் திருவுள்ளங்கொள்ளல் வேண்டும் என்று குடும்பத்தோடும் பணிந்து துலாக்கோலை வலம்வந்து திருநீற்றுமெய்யடிமை பிழைத்திலோமெனில் இப்பெருந்துலை நேர்நிற்க வேண்டுமென்று நல்லூர்ப் பெருமானை வணங்கி எல்லாப்பொருளையும் எல்லாவுயிரையும் எடைகொள்ளவல்ல திருவஞ்செழுத்தையோதி எழுந்திருந்ததட்டில் ஏறினர். அவ்வளவில் அண்டர்தம்பிரான் திருவரைக்கோவணம்வைத்ததட்டும் அடியவரடிமைத்தொண்டெலாம் வைத்ததட்டும் அன்பினிற் குறைபடாது நேரொத்துநிற்க, அம்மையப்பராகிய பரசிவமும் பராசிவையும் நாயனாரும் மனைவியாரும காண நேராகக்காட்சி கொடுக்கப்பெற்றவர். இவ்வதிசயத்தை மண்ணுளாரும் விண்ணுளாருங்கண்டு கண்மாரியும் பூமாரியும் பொழிந்து, ஆனந்தபரவசத்தராய்க் கூத்தாடினவர். பின்னர் அத்துலையே விமானமாய் நாயனாரும் அவர்கும்பமும் குறைவறக்கொடுத்த அருட்செல்வத்தோடு ஆதிமூர்த்தியுடன். சிவபுரமணைந்து அம்மூர்த்தியின்முன் என்றுந்தொழுதிருக்கும் பேரின்பமுத்திலயப்பெற்றவர்.

இதனால், திருவருள் இறைவன்வைத்த ஓர்கோவணவுருவாய் நின்று அடியார்பால் சென்று பலபொருளுருவாய்ப் பரந்தோங்கி அன்புருவாய்நின்று அவ்வடியவரை அவ்வன்பில்நிறுத்தி, பின் தான் இறைவன்பால்கலந்து பேரின்பத்தைப்பெருக்கியும், அவ்வின்பத்தை அன்பின்வழிநிற்கும் அடியரை நுகரச்செய்தும் வந்த அருட்டிறத்தினளவை எடையாகக்கூறியவாறும்.

அமர்நீதிநாயனார் புராணசாரம் முற்றிற்று.

நருண்யாயநமஃ

# திருத்தொண்டத்தொகை.

## ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

ஆரூரன்—என்றதனால், என்னை ஆளவந்த இறைவன் ஆவணத்திற்காட்டியபடி என் மூதாதையின் பெயரையே கொண்ட ஆரூரனாகியயான் என்றும், ஆரூரில் அம்மானுக்கு—என்றதனால் திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தாயாகிய உமாதேவியையுடைய தந்தைக்கு என்றும், ஆளே—என்றதனால், ஆரூரில் அம்மானுக்கு வன்றொண்டனுனதேயன்றி, அடியார்களுக்கும் இன்தொண்டனுயினேன் என்றும் கூறியவாறும்.

ந்தரமூர்த்திகள் துதி.

திருவந்தாதி.

தொழுதும் வணங்கியும் மாலயன் தேடரும் சோதிசென்றாங்
கெழுதுங் தமிழ்ப்பழ ஆவணங் காட்டி எனக்குன்குடி
முழுதும் அடிமைவந் தாட்செய் எனப்பெற்ற வன்முரல்தேன்
ஒழுகு மலரினற் றூர்எம் பிரான்நம்பி யாரூரனே.

திருமால்-'' பாதம் இரண்டும் வினவில் பாதாளம் ஏழினுக்கு அப்பால் ''-என்னும் வேதசாரவுண்மை யுணராது வராகவடிவங்கொண்டு பூமியைக் கீழ்க் கீழ்த் தோண்டித் தொழுதும், அயன்-"சோதி மணிமுடிசொல்லில் சொல்லிறந்துநின்ற தொன்மை"— என்னும் சுருதிசாரவாசகத்தை யுணராது, அன்னப்பட்சி வடிவங்கொண்டு இருபக்கங்

(இறு)களையும் வணக்கிவணக்கி அசைத்தசைத்து வணங்கியும், அடிமுடியைக் காணுதற்கரியனாய்ச் சேணோங்கிய சோதிசொரூபன், தம்மைச் சிறிதுந் தேடாதவன் நீர் என்று எண்ணாத பூதலத்தே போந்தருளி அந்தணனாய், தனது அடிமுடிகளை மிக எளிதாய் எல்லாருங்காண மணப்பந்தரின்கண்ணே வந்து எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தாமும் ஆட்கொள்ளத் தன்னாடிநின்று ஒருவராலுந் தள்ளக்கூடாத அடிமைவழக்கை ஒருவராலும் எள்ளக்கூடாத அனாதியாயுள்ள தமிழால் எழுதப்பட்டுள்ள அடிமைப்பத்திரத்தைக் காட்டி, அறைகூவி "இப்பத்திரப்படி சுந்தரா! உனக்கு உனது தாதை மூதாதை முதலிய யாவரும் அடிமையாகும். ஆகலின் நீயும் வழிவழியாய் வந்த எனதடிமையாகும். ஆகவே நீ இந்தமணப்பந்தரை விட்டு என்பின்னே வந்து நான் இடும்பணி எதுவோ அதனை எனது ஆளாகச்செய்துவருவாய்" என்று வழக்கிட்டு ஆளப்பெற்றவர், தேன்வண்டுகள் தேனுண்டொலிக்கின்ற நறுமணங்கமழும் மலர்மாலைசூடிய நம்பியாரூரன் என்னும் நாமமுடைய எம்பெருமானாகிய தேவரீரன்றோ? என்று இத்திருப்பாசுரத்தால் கூறப்பட்டது.

தேவர்களிற் பெரியோராகிய அரிபிரமர்களால் பலகாலுந் தேடியுங் காண்டற்கரிய பெரியோனாகிய இறைவன் தம்மாட்டு மிக எளிமையாய் வலிந்துவந்து வழக்கிடும் ஆண்டன்மையுடைவர் என்பதுதோன்ற—முரல்தேன் ஒழுகும் மலரின் நற்றா எமபிரான் நம்பியாரூரனே—என்றுகூறலுமாம்.

ஆவணங்காட்டிக் குடிமுழுவதும் வந்தாட்செய் என ஆட்பெற்றவன் என்றதனால் தில்லைவாழந்தணர்முதலாகச் சொல்லப்பட்ட எழுவரையும் ஆவணங்காட்டியே இறைவன் ஆண்டருமை வெளிப்படுகின்றது இதனுண்மையின் விரிவை இச்சருக்கத்தின் முதற்பக்கத்திற் காண்க.

இச்சருக்கமுதலில் தில்லைவாழந்தணராகிய நடராஜமூர்த்தியையும், இறுதியில் அமர்நீதியாரையும் வைத்து ஓதியது திருத்தொண்டத்தொகையின் சிறப்பைப் பிரகாசப்படுத்தி மாதவரெல்லாம் பிறவிப்பிணி நீக்கி உய்தற்கேயாம்.

என்னையெனின், முதலில் உள்ள நடராஜமூர்த்தி, பிறவிப் பெருங்கடலாகிய பெருந்துன்பத்தில் ஆழ்த்தும் பாசப்பெருநோய்க்கு அமிர்தசஞ்சீவினி மருந்தாயுள்ள மஹாமந்திரமாகிய பஞ்சாக்கரசொரூபியாய், பிறவிநோய் ஊனமுடைய ஊனநடனமும், பேரின்பவாழ்வுண்டாக ஞானநடனமும் செய்தருளும் அருண்மூர்த்தியாயுள்ளவன். இறுதியிலுள்ள அமர்நீதியார், மண்ணினிற் பிறந்ததனாற் பெறவேண்டிய பெரும்பயனைப் பெறுதற்கு திருநல்லூரின்கண் வந்து மதிசூடிய அண்ணலார் அடியாரதமை அமுதுசெய்வித்துப் பாசநிலையைப்போக்கி, மதிசூடும் அவ்வண்ணலாரது நல்விழாப் பொலிவு கண்ணினாற்கண்டு பசுநிலையைக்கடந்து அருள்வசத்தராய் அன்புநிலையில் நின்று பிறவிப்பெரும்பிணிக்கு அருமருந்தாகிய பஞ்சாக்கரமருந்தை உண்ணுமுறையே உண்டு நோயைப் போக்குமுறையே போக்கி வாழுமுறையே வாழ்ந்து அழியாப்பேரின்பநிலையில் பெயராது நின்றவர்

ஆகவே, பிறவிப்பிணியாளர்க்கு இத்திருத்தொண்டத்தொகையன்றி மருந்து வேறொன்றுண்டோ. மாதவஞ்செய்து முற்றுப்பெற்றார்க்குக் கைதவத்தையும், புல்லறிவையும், கற்பனையையும், மையலையுந்தீர்த்து அத்துவிதானந்த அகண்டபரிபூரணத்தில் நித்தியமாய் வாழ்வதாகிய பெருவாழ்வினைத்தருவது இதனினும் வேறொன்றுண்டோ.

ஆகலின் பிறவித் தொகையுட்பட்டு உழல்வாரெல்லாம் இத்திருத்தொண்டத்தொகையின் சிறப்பினையுணர்ந்து பிறவித்தொகை யொழியுமாறு நைந்துருகி மெய்யன்பால் என்றும் விளம்பி மண்ணினிற்பிறந்த பயனைப் பெற்றுய்வார்களாக.

திருச்சிற்றம்பலம்.

**தில்லைவாழந்தணர் சருக்க முற்றிற்று.**

ஸ்ரீ சந்த்ரசேகராய நம:

# பெரியபுராணம்

## தில்லைவாழந்தணர்சருக்கம்

மூலமும்

காஞ்சிபுரம்

ஸ்ரீமத் - ஏகாம்பரசிவயோகிகள்

பாருசேகரன்

ஸ்ரீ - ஆலாலசுந்தரம்பிள்ளை அவர்களால்

இயற்றிய

சித்தாந்தபோதரத்நாகரமாகிய

பொழிப்புரை - விசேடவுரையும்

வேதாகம போதக சைவசித்தாந்தசபையின் ஒருவராகிய

மெஸர்ஸ் அட்டிஸன் அண்ட் கம்பெனி

கா. வெங்கடாசலமுதலியார்

அவர்களால்

சென்னை:

கணேச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1915.



Price Re 2.

| | | | |
|---|---|---|---|
| தேவிபாகவதம் (வசனம்.) | 7 | 0 | 0 |
| காமாக்ஷிலீலா ப்ரபாவம் (வசனம்.) | 0 | 12 | 0 |
| காஞ்சிப்புராணம் (மூலமும்-உரையும்.) | 10 | 0 | 0 |

வி. பி. பிரத்யேகம்.

கா. ஆலாலசுந்தரம்பிள்ளை அவர்கள்

சித்தாந்தபோதரத்னாகரம்.

19 - ரெண்டால்ஸ் ரோட், சென்னை வேப்பேரி.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டத்தொகை.

## திருநாமத்தின் காரணச்சிறப்பு.

இறைவன், ஆன்மாக்கள் பாசத்தினின்றும் நீங்கித் தன்னடி கூடுவதாகிய முத்திநிலை கூடுதற்குச் செய்யத்தொடங்கிய பஞ்சகிருத்தியங்களில் முதற்கண் அவ்வான்மாக்கட்குப் பந்தநிலை இதுவென்றுணர்த்த சிருஷ்டி திதி சங்கார மென்னும் முத்தொழிற்குக் காரணமாகும் பாசத்தின் பகுதியாகிய பிரபஞ்ச விவகாரத்தை வேதத்தால் பிரகாசப்படுத்தியும், பின்னர் பிரபஞ்ச வசப்பட்டு முத்தொழிலால் மொத்துண்டு இளைப்புத் தோன்றித் தமது நிலைதோன்றாது மயங்கிநிற்கும் அந்நிலையில் அவர்கட்கு அந்நிலைமை தோன்றுமாறு வேதாந்தத்தாற் பிரகாசப்படுத்தியும், அந்நிலை இதுவெனப்பிரகாசமாயவழி அவர்கட்கு ஆதாரமாய் நிற்கும் பதிப்பொருள் பரமான்மாவாகிய பரசிவம் இதுவெனவும் பரசிவத்தை ஆன்மாக்கள் அடையும்வகை இவ்வகையெனவும் அவ்வகையான் அவ்வாதாரத்தில் ஆன்மாக்கள் நிற்கும்நிலை இந்நிலையெனவும் தோன்றுமாறு வேதாந்தத்தெளிவாகிய சைவசித்தாந்தத்தால் பிரகாசப்படுத்தியும், அந்நிலைக்கண் தன்னடி கூடும்வகை யறியாது தியங்கச்செய்யும் தியக்கத்தைத் திரோதானச்செயலால் நீக்கிச் சாதனமுறையால் சரியையாதிகளைப் பிரகாசப்படுத்தியும் அப்பிரகாசத்தால் சாதகத்தன்வண்ணமாசற்ற சுத்தபடிகம்போல் அறிவைப் பிரகாசப்படுத்தியும், அவ்வறிவு பிரகாசமாயவழி இறுதியாயுள்ள அருட்செயலால் ஆன்மாக்கள் தன்னடிகூடுமாறு தனியடியார்களாகிய அறுபான்மும்மை நாயன்மார்களாலும் தொகையடியார்களாகிய ஒன்பதின்மர்களாலும் ஞான யோகக் கிரியா சரியைகளாகும் சைவத்திறமாகிய தொண்டால் பிரகாசப்படுத்தியுள்ளாராகலின் இதற்கு, பிரபஞ்ச விவகாரத்தைப் பேசிய நூலை வேதமெனவும், ஆன்மப்பிரகாசத்தைப் பேசிய நூலை வேதாந்தமெனவும், ஆன்மா, பரமான்மாவாகிய ஆதாரத்தில் நிற்கும்நிலையைப் பேசிய நூலைச் சித்தாந்தமெனவும் பெயரிட்டதுபோல் திருத்தொண்டத்தொகை எனப்பெயரிட்டனரென்க.

இதனால் நூல்களிற்சிறந்தது வேதமெனவும், அதனினும் சிறந்தது வேதாந்தமெனவும், அதனினுஞ் சிறந்தது சித்தாந்தமெனவும், அதனினும் சிறந்தது இத்திருத்தொண்டத்தொகையென்னும் இந்நூலெனவும் தெள்ளிதின் அறியக்கிடக்கின்றன.

அன்றியும்-வேதநூல் ஆராய்ச்சியால் பிரபஞ்சம் இதுவெனப் பிரகாசமாய் அறியவரும் என்றும், வேதசாரமாகிய வேதாந்தநூல் ஆராய்ச்சியால் ஆன்மா இதுவெனப்பிரகாசமாய் அறியவரும் என்றும், சித்தாந்த நூலாராய்ச்சியால் பரமான்மா இதுவெனப்பிரகாசமாய் அறியவரும் என்றும், இச்சித்தாந்தசாரமாகிய இத்திருத்தொண்டத் தொகையால் அடிகூட்டுவதாகிய அருள் இதுவெனவும், அவ்வருளால் விளையும் இன்பத்தை அனுபவிக்கச் செய்யவல்ல அன்பு இதுவெனவும் பிரகாசமாய் அறியவரும் என்றும் திருவருளுணர்வால் அறியவருமென்க.

தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் ;
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன் ;
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன் ;
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன் ;
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன் ;
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியே
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன் ;
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே !

# 2

## அடிமைச்சிறப்பு

ஆரூரர், தம்மை அடிமை என்று கொண்டு தோழனாக ஆண்ட இறைவன், தம்மை மறவாது வழிபடும் தில்லைவாழந்தணர்களாகிய அடியார்கள் தாமும் ஒருவனாய் ஆனந்தக் கூத்தாடி நிற்கும் பேரவாவைக்கண்டு தாமும் அடியார்களுள் இருக்கும் ஆசையுடையவராய்த் தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் என்றார்.

அடியார்பால் இங்ஙனமான ஆசையுள்ள இறைவனது ஆணையின்வழி, சிற்றின்பானுபவத்தை நிறுத்தவல்லார், சின்னாளில் ஒழியும் சிற்றின்பத்துக்குரிய தமது இளமைப்பருவம் என்றும் இளமைமீளாது நிற்கவும், அவ்விளமையான் என்றும் இளைத்தலை அறியாத அடைதற்கரிய பேரின்பத்துறையில் இழிந்து மிக எளிமையாய் அவ்வின்பகத்தில் வாழவும் ஆவார்கள் என்பதை, திருநீலகண்டரால் உணர்ந்து தாமும் இறைவனாணையின் வழியே நின்று அவ்வின்பவாழ்வைப்பெறும் அவாவுடையவராய திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன் என்றார்.

இங்ஙனம், தன்னாணையின்வழி சிற்றின்பானுபவத்தை நிறுத்தவல்லார்க்கு, என்றும் இளமைப்பருவமும், என்றும் இறவாத பேரின்பமும் தாமேவலிந்து கொடுக்க வந்த இறைவனுக்கு இல்லையென்னாது கொடுத்தலாகிய ஒப்புரவுடையார்க்கு மயக்கறு மறையோலமிட்டும் காண்டற்கரியனாகியும் இன்றளவும் மாலயன் தொடர்ந்தும் கிடைத்தற்கரியனாகியும் இருக்கின்ற இறைவன் அடைக்கலப்பொருளாகும் எளிமையை இயற்பகை நாயனாரிடத்திற் கண்கூடாய்க் கண்டு, தாமும் அவ்வொப்புரவுடையராய அவ்விறைவனைத் தமது அடைக்கலப்பொருளாக என்றும்பெறும் பேரவாவுடையராய இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன் என்றார்.

இறைவனை அடைக்கலப் பொருளாகப் பெற்றவர் செல்வம் நிலவுதலொழிந்து, நல்குரவு அல்லலுறவரினும் அதனால் தாங்கொண்ட அன்பின் திறத்தில் இளைக்காமல் அவ்வன்பின் செயலையே மேற்கொண்டு, செல்வவறுமைக்கேதுவாகிய மாயாமலக்கூட்டையும், அதற்கு இடஞ்செய்யவல்ல புன்மூளையாகிய கன்மமூளையின் விளைவையும், அம்மூளைக்கு வித்தாயுள்ள ஆணவமலமாகிய வித்தினையும், வாரிப்பிடுங்கிப் பறித்துப் பரஞ்சோதியாய் விளங்கும் சிவசொரூபத்தைக் கண்டு இருநிதிக்கிழவன் நிதியமேந்தி மொழிவழி வல்கேட்கக் குற்றேவலாளாய் நிற்ப, பேரின்பம் ஆர்ந்திருக்கும்பெருமையினை இளையான்குடிமாறனாரிடத்திற் கண்டு, தாமும் தம்பால் குபேரன் குற்றேவலாளாய் நிற்பச் சிவலோகத்தில் பெருஞ்செல்வராக வாழும் அடங்காத அவாவுடையராய இளையான்குடிமாறன் அடியார்க்கும் அடியேன் என்றார்.

பெருஞ்செல்வத்தோடு சிவலோகத்தில் வாழும் பெருவாழ்வுபெற்ற பேரறிவாளர், பயன்மரம் உள்ளூரில் பழுத்தது யாவர்க்கும் பயன்படுமாறுபோல, தாம்பெற்ற வாழ்வு இவ்வுலகெலாம் பெறுமாறுசெய்த, அதனால் வரும்புகழைப்பெறுவதே பொய்ப்பொருளாகிய இவ்வுடம்பாற் பெறும்பயனென உணர்ந்தவர், அதற்குத் தமது உடலையும் உயிரையும் எவ்வகையாற் கொடுக்கவரினும் அச்செயல் செய்வதற்குச் சிறிதேனும் அஞ்சாது அவைகளை மிக எளிதாய்க்கொடுத்து அப்புகழைக்கொள்வதில் ஊக்கப்பாடும் உள்ளக்கிளர்ச்சியும் உடையராவார் என்னும் உண்மையை மெய்ப்பொருள் நாயனாரிடத்திற் கண்டு, அவரருளால் தாமும் அவைபெறும் அன்புடையராய் வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன் என்றார்

அப்புகழ் எங்கும் பரவவேண்டுமாயின் எவ்விடத்திலுள்ளாரும் திருவேடமுடைய அடியார்க்கு அடிமை பூண்டாலன்றி வாராதாகலான், எத்தகைய மேம்பாடுடையராயினும் அவர்களை அத்தொண்டில் நிறுத்தும் வன்மையை, விறன்மிண்ட நாயனாரிடத்திற் கண்டு, தாமும் அத்தொண்டில் மிண்டராக அவர்பால் பேரின்புடையராய விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன் என்றார்.

திருவேடமுடைய அடியார்க்கு அடிமை பூணுதல் என்றால் அவ்வடிமையினளவு இவ்வளவினதென்று அறியவந்தாலன்றி அடிமைத்திறத்தை மேற்கொள்ளல் கூடா

தாகலின் அவ்வளவு, தான் உடைமையாக வைத்திருக்கும் எல்லாப்பொருளுமென வும், தன்னடிமையாக எண்ணியிருக்கும் மனைவியும் மகனும் அவர்களோடு தானும் எனவும் கருதி, அவ்வுண்மையை அடியவரெல்லாம் அறிய ஓர் துலையிலிட்டுக் காட்டும் பேராண்மையை அமர்நீதிநாயனார்பாற்கண்டு, தாமும் தமது குடி முழுவதும் அடிய வர்க்கே அடிமையாகி அவர்கள்வழியொழுகி அழிவில் வான்பதமாகிய சிவபுரியில்வாழும் வாழ்க்கையைக்கொள்ள அல்லிமென்முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன் என்றார்.

இவ்வண்ணம் அடியார்க்கடியேனென்று கூறிவந்த தாம், தம்மையும் தமது தலை வனையும் அன்பரிடத்து அன்பில்லாரென்றுகருதி புறகுதட்டென்றுகூறிய விறன் மிண்டநாயனாருக்கு தம்மிருவருக்கும் உள்ள அன்புடைமை தோன்ற ஆரூரன் ஆளே என்னாது, ஆரூரன் ஆரூரில் அம்மானுக்காளே என்றார்.

## தொகைச்சிறப்பு.

இனி, தில்லைவாழந்தணர்களை ஏனையதொகையடியாராகிய பொய்யடிமையில்லாத புலவரோடேனும் பத்தராய்ப்பணிவார்களோடேனும் அன்றி அவர்களை இவ்வந்தணர்க ளோடேனும் ஏனையதனியடியார்களோடேனும் ஓதவேண்டியிருக்க இவர்களைமுதலில் எடுத்தோதவேண்டியகாரணம் என்னையென்று ஆராயின், "தாவரசங்கமங்கள் என்ற இரண்டுருவில் நின்று மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க்கு அருளைவைப்பன்" என்ற சித்தாந்த வசனத்தை வலியுறுத்தவேயாம்.

எங்ஙனமெனின்,— 'தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும். பால் வெள்ளை நீறும் பசுஞ் சாந்தும் பைங்கிளியும், சூலமும் தொக்க வளையும் உடைத் தொன்மைக் அநாதி) கோலமேயுடைய பரசிவனே தாவரவுருவமாய் விளங்கும் தில்லைவாழந்தண னாகிய நடராஜமூர்த்தியாயும், ஏனைத் தில்லைவாழந்தணர்களாகிய சங்கம மூர்த்திகளாகி யும் திருவுருக்கொண்டுள்ளான் என்பதேயாம்.

"சிவன் உருவும் அருவும் அல்லன் சித்தினோடு அசித்தும் அல்லன், பவமுதல் தொழில்கள் ஒன்றும் பண்ணிடுவானும் அல்லன், தவமுதல் யோகம் போகம் தரிப்ப வனல்லன்" என்ற அவ்வளவில் நிறுத்தாது, "தானே இவைபெற இயைந்தும்" என்று சித்தாந்தங் கூறுதலால் மேலே சொல்லிய தாவரவுருவத்தையும், சங்கம வுருவத்தையும் கொண்டருளின னென்க. எனவே பரசிவத்துக்கு தாவரம் என இரண்டுருவ ங்கள் உளதென்றும், அவற்றுள் தாவரவுருவமாகிய நடராஜமூ சிவத்தின் சொருப வடிவமென்றும், ஏனைய சங்கமவுருவினராகிய தில்லைவாழ் அந்தணர்கள் தடத்தவடி வங்க ளென்றும் அறிவுறுத்தியவாறும்.

இக்கருத்துபற்றியே ஆசிரியர் சேக்கிழார் 'அம்பலத்தாடுவான்' "உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்" 'அலகில் சோதியன்' என்றுகூறியதனால் நடராஜமூர்த்தியை சொரூபமென்றும், தில்லைவாழந்தணர்களை-தொல்லை வேதியர்களென்றும், முதல்வனைப் பெற்றுவாழ்வார் என்றும், இனிப்பெறும் பேறொன்றில்லார் என்றும், தம்மையே தமக் கொப்பான நிலைமையால் தலைமைசார்ந்தார் என்றும், திருத்தொண்டத்தொகை முன் பாடமுதற்பொருளானார் என்றுங்கூறியதனால் தடத்தமென்றும் கொள்ளவந்தன.

எனவே, அநாதி அந்தணனாகிய சிவன் தன்னோடு ஒன்றாய் இவர்கள் எண்ணப் பட்டாராகலின் 'தொல்லைவேதியர்' என்றும், முதல்வனாகியபரசிவனுக்கு இவர் தடத்த வடிவங்களாகலின் 'முதல்வனைப் பெற்று வாழ்வார்' என்றும், முதல்வனாது தடத்த வடிவங்களாகவே, ஆன்மாக்களாயுள்ளார் பெறும்பேற்றை இவர் பெறவேண்டியவ ரல்லராகலின், "பெறும் பேறு ஒன்றில்லார்" என்றும், தனக்கு மேலொரு பொருள் உளதென்றும் ஒப்பான பொருள் ஒன்றுளதென்றும் சொல்லுதற் கில்லாத சொரூப சிவமாகிய நடராஜமூர்த்தியோடொப்பான இவர்களுக்கு ஒப்பிடும் பொருள் இல்லையா கலின் 'தம்மையே தமக்கொப்பான நிலைமையால்தலைமைசார்ந்தார்' என்றும், திருத்தொ ண்டத்தொகையை ஓத இறைவன் தாமே முதல் நாயனாராக நின்றபோது இவ ர்களை ஏனைய நாயன்மார்களைப்போல் தனித்தெடுத் தோதச் செய்யாது தம்மோடொ

பச்சேர்த்து ஓதச் செய்தன ராகலின் திருத்தொண்டத்தொகை முன்பாட முதற்பொரு ளானார்கள் என்றும் கூறினர்.

இனி, எண்ணிறந்த மூவகையுபாசகாரியங்களையும், எண்ணிறந்த மூவகை ஆன்மாக் களையும், எண்ணிறந்த (மகத்)வடிவங் கொண்டு தன்னுள் அடக்கி வியாபகப்பொருளாய் ஒருருவாய் நிற்கும் தனது ஆற்றலுடைமை தோன்ற மூவாயிரவர் எனப் பல திருவுருக் கொண்டுள்ளவர்களைத் தன்னுள் அடக்கித் தில்லைவாழந்தணனென மகத்வடிவமாய் அம்பலவாணனாய் ஒருருக்கொண்டு நின்றருளுகின்றனன் என்றலுமொன்று.

பஞ்சகிருத்தியத்தையும், அக்கிருத்தியங்க ளியற்றும் பதியையும், அக்கிருத்தியங்க கட்குரிய பசுக்களையும், அப்பசுக்கள் அக்கிருத்தியங்களில் உட்படுதற்குக் காரணமாகிய பாசத்தையும் உணர்த்தவல்ல ஸ்ரீபஞ்சாக்கரம் ஓர்பதமாய் நிற்பதாகலின், அப்பஞ்சாக் கரத்தைத் திருமேனியாகவுடைய நடராஜமூர்த்தியும் பதி பசு பாசம் என்னும் முப்பொ ருள்களையும் ஆயிரம் ஆயிர முகமாகப் போதிக்கவல்ல மூவாயிரம் சங்கமர்களையும் தன் னுட்கொண்டு ஒருருவாய் நின்றருளுகின்றனன் என்றலு மொன்று.

இனி, ஸ்ரீசுந்தரமூர்த்திகள் ஓதத்தொடங்கிய திருத்தொண்டத்தொகையில் இம் முதற்பாவில் தில்லைவாழந்தணர் முதலிய எழுவரை வைத்துப் போற்றுதற்குக் காரணம் ஆராயுமிடத்துச் சிறப்பு ஒற்றுமை என்னுங்காரணங்களையே நோக்கி என்க.

சிறப்புக்காரணமாவது:—அடிமை வேண்டாத ஆரூரர்பால் இறைவன் வலிந்துவந்து தம் அடிமைவேண்டி மேன்மேல் வழக்காடி தம் அன்மை நிறுவி வன்றொண்டன் என ஆண்டதுபோலன்றி, அடிமையையே வேண்டிய எழுவர்பால் அடிமை வேண்டாதவர் போல் இறைவன் அடிமை நீங்குஞ்செயலையே செய்தும் அப்பெருமக்கள் தங்களன்பின் நிறைவால் இயற்றிய வன்றொண்டின் திறத்தால் அடிமை நிலைபெறுமபடிச் செய்த சிறப்பேயாம். இனி அவையிற்றை வகுத்துக்கூறுவாம்:—

இறைவன் அடிமை
நீங்கத்தகுந்த செயல்கள்.

1. மூவாயிரவர் எண்ணளவையிற் குறைய அதுநிறையத் தான் கடையனாய் நின்றது.

2. திருவோடு கொடுத்துவைத்தாரைக் கருத் திருவோடளித்தது மன்றேறி திருநீலகண் டத்தாணையால் தீண்டாத மனைவியைத் தீண்டி மலர்ப்பொய்கையில் மூழ்கவே பேசி வந்து நின்றது.

3. இல்லையென்னாது கொடுக்குமீகை யுடையார்பால் இல்லையென மறுக்கக் கூடிய மனைவியைக்கேட்டது.

4. அடியார்க்கமுதளிக்கும் பணிபூண்ட வர்க்கு வறுமையுங் கொடுத்து மழையோடு இருளில் பசியுடன் வந்தது.

5. பொய்த்தவனை புத்தகக் கவளிபோ லும் படையைக் கைக்கொண்டு மெய்த்தவ வேடம்பூண்டு குருவாக வரச்செய்தது.

6. ஈசன்பா லன்புடையாரை அடியர் பாலன்புண்டாக்கும் விறன்மிண்டர்முன், மிக்க சிரடியார் கூடியிருந்தபோது இவ ரடியார்க்கு அடியேனாகப் பண்ணுநாள் எந்நாளென ஆதரவு கூறப்பணிந்து செல் லும் ஆரூரரை அடியாரிடத்து அன்பிலார் போலத் தோன்றச்செய்தது.

7. கோவணத்துக்குநேராக எப்பொருளை யும் எடைபெறாவண்ணஞ் செய்தது.

அடியார்கள் அடிமை
நிலைபெறச்செய்த செயல்கள்.

1. அங்ஙனம் நின்றவரைத் தலைவன் எனவேகொண்டு தாம்அகம்படித்தொண்ட ரானது.

2. ஒருகழியின் இருதலையையும் இரு வரும்பற்றிநிற்க இறைவன் நடுவேநிற்க மனைவியின் ஆணைதவறாமலும் சிவயோகி யார் வார்த்தை கடவாமலும் தமது விரதங் கெடாமலும் நீரில் மூழ்கி எழுந்தது.

3. ஒப்புரவினால் மனைவியைக்கொடுக்க மானம் பொறாத சுற்றத்தினரைக்கொன்று மனைவியைக் கொண்டுபோகச்செய்தல்.

4. அப்பசிமாற்ற புலத்தில் சென்றுமுளை வாரி குழிப்பயிரைப்பறித்து இல்லத்தின் அலக்கினால் பதமாக்கி அமுதுபடைத்தது.

5. மெய்க் குருவாகக்கொண்ட பொய்த் தவனால் தீங்கு நேரிடும், அவனுக் கது நிகழாவண்ணஞ் செய்தது.

6. சிவனருளால் அடியாரிடத்துப் பெ ருகாநின்ற அன்பாகிய பெரும்பேற்றை அன்பர் அன்புவேண்டிய சுந்தரமூர்த்தி சுவாமி களிடத்தும், திருவுள்ளப் பாங் காகிய கோனருளை பூணாரவம் பூண் டாரிடத்தும்பெற புறகு புறகு என்று அஞ்சாது கூறியது.

7. பஞ்சாக்கரத்தால் தம்மோடெப்பொ ருளும் எடைபெறும்வண்ணஞ் செய்தது.

ஒற்றுமைக்காரணம் :—ஆரூரரை நிகழ்த்தியதுபோல் இவ்வெழுவரிடமும் (1) இறைவன்வந்து, (2) ஆவணங்காட்டி, (3) தடுத்தாண்டு, நிகழ்த்திய பெருங்கருணையேயாம்.

### (1.) வந்தது.

இவ்வெழுவருக்குமுன். இறைவன் நடராஜமூர்த்தியாகவும், சிவயோகியாகவும், தூர்த்தவேதியராகவும், தபோதனராகவும், மெய்த்தவவேடனாகவும், மணவாளக்கோலத்தோடு சுந்தரமூர்த்தியாகவும். பிரமசாரியாகவும் முறையே வந்தது.

### (2.) ஆவணங்காட்டியது.

தில்லைமூவாயிரவரிடத்து அவருள் தானொருவரென்பது * ஆவணம் (உரிமை) திருநீலகண்டரிடத்து கொடுத்ததிருவோடு ஆவணம் (அடையாளம்) ; யாதுமொன்று என்பக்கலுண்டாகில் அன்னது எம்பிரான் அடியவருடைமை, ஐயமில்லை என்ற இயற்பகையாரிடத்து மனைவியைக்காட்டி (குறித்து)க்கேட்டது ஆவணம் (உரிமை) ; இளையான்குடிமாறனாரிடத்துச் செல்வமேவியநாளிலும் அல்லல் நல்குரவானபோதிலும் மெய்யினால் வல்லரென் றறிவிக்கவே வறுமைப்படதப்புக தில்லைமன்னினார் உன்னியது ஆவணம் ; (அறத்தைத் தப்பபதற்குரிய வறுமை என்னும் எல்லை.) ; மெய்ப்பொருளாரிடத்து வாட்படையை ஆகமமாகிய புத்தகக்கவளியென்று பொய்த்தவனைக் காட்டச்செய்தது ஆவணம் (அடையாளம்,) ; விறன்மிண்டரிடத்து அடியவர்தந் திண்மை யொழுக்கம் வெளிப்பட. சுந்தரமூர்த்தியாய் விளங்கி அன்பை யுள்ளடக்கி ஒதுங்கியது ஆவணம் (அடையாளம்) ; அமர்நீதியாரிடத்து இறைவன கொடுத்த கோவணம் ஆவணம் (அடையாளம்)

### (3.) தடுத்தாண்டது.

தில்லை மூவாயிரவருள் ஒருவரைத்தடுத்து தானே அவராகி ஏனையரையும் தன்னுடனுய் வாழ ஆண்டது, திருநீலகண்டரை— ஆணையால் சிற்றின்பத்தைத் தடுத்து என்றும் இளமையோடு வாழ ஆண்டது, இயற்பகையாரை—உலகியலால் தடைபடும்பொருளில் தடைபடுஞ் செயலைத்தடுத்த "செயற்கருஞ்செய்கைசெய்த தீரனே ஓலம் ஓலம்" என்று அழைத்தாண்டது, இளையான்குடிமாறரை—அவர்கொண்ட அறிவாகிய மெய்ச்செல்வத்திற்குப் பகையாயுள்ள செல்வவறுமைகளைத் தடுத்து அன்பாபூஜையில் மனஞ்சுருங்குதலற்ற அன்பினை நிறைவித்தாண்டது, மெய்ப்பொருளாரை—மெய்ப்பொருளுக்குப் பகையாயுள்ள உடற்சார்பு பொருட்சார்புகளைத் தடுத்து திருவேடச் சார்பினாலே ஆண்டது, விறன்மிண்டரை—அடியாரிடத்து அன்பற்று அரனிடத் தன்புள்ள அன்பினைப்போக்கி அனைவரும் அடியவரிடத்து முன்னும் அரனிடத்துப் பின்னும் அன்புடையராய்ச் செய்துவந்த அவரதுவலிந்த அன்பினைத் தமது தோழரிடத் துள்ளதெனத் தோன்றுவண்ணம் தடுத்து புறகென்று கடுமொழிகூறிய திறங்கண்டு பின் தம்மிருவர்க்கும் அடியவரிடத்துள்ள அன்பினைத் திருப்பதிகவாயிலாய்க் காட்டி ஆண்டது, அமர்நீதியாரை—தமது வேதக்கோவணத்தை எடையாகவைத்து, அவ்வெடைக்கு அவர்பொருளெல்லாம் எடைகொள்ளா வண்ணம் தடுத்துப் பின் பஞ்சாகரத்தின் எடையால் ஆண்டது

### பயன்.

இதனால் · இறைவனே வந்து தடுத்தாளப்பெற்றோர்க்கு வரும் பயன் இத்திறமென நன்கே, விதந்து எடுத்துக்கூறியவாறுமாம். என்னையெனின்:—

பரிவைப்பிரபு - தம்மை எப்பொழுதும் வழுவாதவழிபடும் வழிபாடுடையார்க்கு, தான் மிகஎளியனாய் அவருள்புக்கு ஒருவனாய் நின்று, தமது பதியின்திறம் குன்றாது அவர்களைத் தமது பணியின்திறத்தில் நிறுத்தி ஆண்டும், அங்ஙனம் அவ்விறைவனால்

---

* ஆவணம்=உரிமை, அடையாளம், எல்லை, முறிச்சீட்டு.

இன்பத்தைப்போலும் அன்று பேரின்பம். அது வெளியாயுள்ளது (ஆகாயம்போல் ஒன்றானும் தட்டில்லாமலிருப்பது.) அவ்வண்ணமுள்ள பேரின்பவெளியினுள்ளே நீ கலப்பதுமற்று, விரைந்துசெல்வதுமற்று, அருள்துணையாய் நிற்பாயாக என்க.

இரவில் - விரவி விரவி நின்று. பகலில் விரைய விரைய நின்று எனக்கூட்டுக.

இரவுபகலில்லா இன்பவெளி—தோன்றப்படாதது, தோன்றப்படுவது என்று சொல்லுவதற்கில்லாத பரமானந்தப் பெருவெளி. இரவு—தோன்றாமை. பகல்—தோன்றுதல்.

இருள் கட்புலனுக்குப் பொருளின்சொரூபத்தைத் தெரிவிக்காமல்சும்மாயிருக்குஞ் சுகத்தைக்கொடுத்தல்போல, சுழுத்தியும் சுகத்தைக்கொடுக்கும் பொருளைக்காட்டாது சும்மாவிருக்குந் தன்சுகத்தைக்கொடுத்தலால் இருள் சுழுத்திக்கு உபமானமாயிற்று. பகல் சுகங்கொடுக்கும் பொருள்களைக் கட்புலனுக்குக்காட்டி சுகங்கொடுத்தல்போல, சாக்கிராவஸ்தையும் எல்லாப்பொருள்களையுங் காட்டிச் சுகங்கொடுத்தலால், பகல் சாக்கிரத்துக்கு உபமானமாயிற்று. விரைய விரைய நிற்றலாவது - கலந்துகலந்து நிற்றல் அஃதாவது, முன்சுழுத்தியிற்கலந்து பின் அச்சுழுத்தியாலுண்டாகும் இன்பத்திற் கலந்து நிற்றலாம். விரைய விரைய நிற்றலாவது - ஒவ்வொருபொருளிலுள்ள இன்பத்தை யனுபவித்தற்கண் அதிலதிலுள்ள திவரம்.

அருளாற் சிவனைக்கூடி அனுபவிக்கும் பேரின்பம் அறிந்தனுபவிப்பதென்றும் அறியா தனுபவிப்பதென்றுஞ் சொல்லக்கூடாதாகலின்—“இரவுபகலில்லா இன்ப வெளி” என்றும், பேரின்பநிலையை யனுபவிக்கும் நிலையைப்பெற்றவன் இந்திரியங்களோடு பிரபஞ்சமுகப்பட்டகாலத்து அருளை அப்பொழுதே விரவிவிரவிநின்று நாடுதலும், இந்திரியங்களின் வழிப்படாது உன்முகப்பட்டகாலத்துச் சிவத்தை அப்பொழுதே விரையவிரையநின்று நாடுதலும் உண்மையால் விரவிவிரவிநின்று விரையவிரைய நின்று என்றும் இரட்டித்துக் கூறினர்.

இத்திருப்பாட்டான், பேரின்பம், அறியாதனுபவிக்கும் சுழுத்தியின்பம்போலு மன்று, அறிந்தனுபவிக்கும் சாக்கிராவஸ்தையின் இன்பம்போலுமன்று; கருவிகரணங்களுடைய அறியாமையும் அவைகளுடைய அறிவையுங்கொண்டு அனுபவிக்கின்ற இன்பமுமன்று, அறிவேயாய்விளங்கும் அருளாலும், அருளேயாய்விளங்கும் சிவத்தாலும் அனுபவிக்கும் இன்பம் என்றுகூறப்பட்டது.

## திருக்களிற்றுப்படியார்.

ருசு. உண்டெனில் உண்டாகும் இல்லாமை இல்லையெனில்
உண்டாகும் ஆனமையில் ஓரிரண்டாம்—உண்டில்லை
என்னும் இவைதவிர்ந்த இன்பத்தை எய்தும்வகை
உன்னில்அவன் உன்னுடனே யாம். (1)

(இ-து.) உண்டெனில் - சுழுத்தியவத்தையில் கருவிகரணங்களோடுகூடி அச் சுழுத்தியின்பத்தை அறிவதுண்டெனில், இல்லாமை உண்டாகும் - சுழுத்தியினால் வரும் இல்லாமற்போதலாகிய தன்மைதான் உண்டாகும், இல்லையெனில்—சகலாவத்தையில் கருவிகரணங்கள் இல்லையென்று சொன்னால், இல்லாமை யுண்டாகும் சகலாவத்தையிலுண்டாகும் இன்பம் இல்லாமற் போதலாகிய தன்மைதான் உண்டாகும், ஆனமையில்—இவ்விரண்டு தன்மையிலும் இன்பம் இல்லாமையே உண்டாவதாயிருக்கின்றபடியால், உண்டில்லை என்னும் ஓரிரண்டாம் இவை—கருவிகரணங்களை உண்டென்பதும் இல்லையென்பதுமாகிய இவ்விருவகையாயுள்ள இவைகளை, தவிர்ந்த இன்பத்தை - நீக்கியுள்ள பேரின்பத்தை, எய்தும் வகையுன்னில் - அடையும்வகை இது தானென்று திருவருட்டுணையைக் கருதினால், அவன் உன்னுடனேயாம்—இன்பத்தைக்

கொடுப்போனாகிய இறைவன் வேறாகாமல் உன்னுடனாகவே யிருப்பன். எனவே, இன்பரூபியாகிய இறைவன் உடனாகவே யிருத்தலால் இன்பமும் பிறகாரணம் வேண்டாது உடனேயாம் என்பதாம்.

உண்டெனில் இல்லாமை உண்டாகும் இல்லை யெனில் இல்லாமை உண்டாகும் ஆணமையில் உண்டு இல்லைஎன்னும் ஓரிரண்டாம் இவை தவிர்ந்த இன்பத்தை எய்தும் வகை உன்னில் அவன் உன்னுடனேயாம் எனக்கூட்டுக. இல்லாமை என்பதை உண்டெனில் இல்லையெனில் என்னும் ஈரிடத்துங்கூட்டுக.

சுழுத்தி இன்பத்துக்குக் கருவிகரணங்கள் இல்லை என்பதும், சகல இன்பத்துக்கு அவை உண்டென்பதும் சொல்லப்படுகின்றன. பேரின்பம—கருவிகரணங்க ளில்லாமற்போனால் அது இல்லாமற்போவதுமல்ல, அவை உண்டாயிருக்குமானால் அது உண்டாவது மல்ல. அருட்டுணையில்லாமற் போகுமானால் அதுவும் இல்லாமற்போம. அத்துணை உண்டாகுமானால் அதுவும் உண்டாகும்.

உண்டில்லை என்னும் இவைதவிர்ந்த இன்பம் எனறதனால்—அது பேரின்பமென்றும், சகலமும் சுழுத்தியும—உண்டில்லை எனனும் அனுபவத்தை உடைத்தாயிருப்பதால் இது சிற்றின்பம் என்றும சொல்லப்பட்டன. சிற்றின்பத்திற்குத் துணை கருவிகரணக்கூட்டங்களாயிருத்தலால் அது சிற்றின்பமென்றும, பேரின்பத்துக்குத் துணை பெரியோனது அருளா யிருத்தலால் பேரின்பமென்றும இனவகைபற்றியும் கூறப்படுமே. ஆகவே சிற்றின்பத்தை விட்டுப் பேரின்பத்தைக்கொண்டு அதனை அனுபவிக்கவேண்டுமென்றாயிற்று.

௬௭. தூல வுடம்பாய முப்பத்தோர் தத்துவமும்
மூல வுடம்பா முதனான்கும—மேலைச்
சிவமாம் பரிசினையும் தேர்ந்துணர்ந்தார் சேர்ந்த
பவமாம் பரிசறுப்பார் பார் (2)

(எ - து.) தூலசரீர சம்பந்தமாயுள்ள ஆன்மதத்துவம் வித்தியாதத்துவங்கூடிய முப்பத்தொருதத்துவமும், இவைகட்கு மூலமாயிருக்கின்ற சுத்தவித்தை ஈச்வரம சதாக்கியம் சத்தி என்னும் நான்கும, இவைகட்கெல்லாம் மூலமாயிருக்கின்ற சிவமும் ஆகிய முப்பத்தாறு தத்துவங்களையும் தத்துவரூபம தத்துவதரிசனம தத்துவசுத்தி என்னும் இம்முறையால் ஆராய்ந்துணர்ந்தவர்கள், பிறவிக்கிடஞ்செய்ய வல்லதாகிய தத்துவங்களின் தன்மைகளைப் பற்றற விட்டொழிப்பர்; இதனை யுணரிப் பார்ப்பாயாக என்பதாம.

தத்துவங்களெல்லாம் பிறவித்தொந்தனையில் அகப்பட்டுச்சிறறின்ப நுகர்தற்கண் துணைக்காரணமாய நின்று நுகர்விக்குமாறு கூட்டியது அவ்விறைவனாயிருக்க, அவ்விறைவனே இவனுள் குடிபுகுந்து பேரின்பத்தைத் தனது அருளால் இவன் நுகரும் வண்ணஞ்செய்யத் தலைப்பட்டபொழுது கருவி கரணங்கள் சேட்டையோடு கூடியிருந்தாலென்! சேட்டை யற்றிருந்தாலென்! அடிமையை ஆண்டவனானுங் காலத்தென்க.

தத்துவங்கள் இறைவனால் கூடிய தென்றதனால் அவை தானேவந்து கூடியதன்றென்றாயிற்று. அவைதானே வந்துகூடும் ஆற்றலுடையதாயின் இப்பொழுதும் வந்து கூடுமே என்றெண்ணி அவைகள்சேட்டையற்றிருக்க இறைவன் செய்யவேணடும.

இவ்விரண்டு திருப்பாசுரத்தான், உந்தியாரில் 'இரவு' என்றதை உண்டெனில் இல்லாமை உண்டாகும் என்றும், 'பகல்' என்றதை இல்லையெனில் (இல்லாமை) உண்டாகும் என்றும், 'இல்லா இன்பவெளி' என்றதை ஆணமையில் உண்டு இல்லை என்னும் ஓரிரண்டாம் இவை தவிர்ந்த இன்பத்தை என்றும, 'விரவி' என்றதை—அவன் உன்னுடனேயாம் என்றும், 'நின்று' என்றதை—உன்னில் என்றும்,

'விரைய' என்றதை தூலவுடம்பாய முப்பத்தோர்தத்துவமும் மூலவுடம்பாம் முதனான்கும் மேலைச்சிவமாம் பரிசு என்றும், 'நின்று' என்றதை உணர்ந்து என்றுங் கூறப்பட்டன. எங்ஙனமெனின்:—

சகல கேவலமெனும் இரண்டவத்தைகளினால் உண்டாகும் அவத்தை இன்பமும், அவ்வவத்தைகளுக்குக் காரணமாகிய கருவிகரணங்களுடைய இயக்க உண்மையும் இயக்கமின்மையும், அற்றநிலையையுடையது பேரின்பமென்றும், விரவி, விரவிஎன்றதில் முன்னையதை—எய்தும்வகை என்றும், அஃதாவது - பேரின்பத்துக் கேதுவாகிய அருளோடு ஆன்மா கலக்கும் வகைஎன்றும், பின்னையதை—அவன் உன்னுடனேயாம் என்றும், அஃதாவது—அருளோடுகலக்கும் வகையால் ஆன்மாகலந்தகாலத்தில் இறைவன் தானே அவ்வருளோடு கலப்பனென்றும், விரைய விரைய என்றதை—தூலவுடம்பாய முப்பத்தோர் தத்துவமும், மூலவுடம்பாம முதல்நான்கும், மேலைச் சிவமாம் பரிசு என்றும், அஃதாவது :—சிவதத்துவமானது வித்தியாதத்துவத்தோடு கலந்து அத்தத்துவங்களையும், அந்த வித்யாதத்துவத்தின் வழியாய் ஆன்மதத்துவத்தோடு கலந்து அத் தத்துவங்களையும் இயக்குந் தலைமைத்தன்மை யுடைத்தென்றும, நின்று நின்று என்றதில் முன்னையதை—உன்னில் என்றும, அஃதாவது :—தலைமைபெற்றிருக்குந் தன்மையுடைய சிவதத்துவத்துக்கு அதிபதி சிவமே என்றும, அச்சிவம் உன்னுடனான போது அச்சிவத்தால விளையத்தக்க இன்பத்துக்கு, துலவுடம்பாய முபபத்தோர்தத்துவங்கள் இருக்கவேண்டும், இல்லா தொழிக்கவேணடும் என்னும் அவ்விசாரத்தைவிட்டு, இன்பத்தை விளைவிக்கவல்ல அருளோடுகலந்து நிற்றலையும், அவ்வருள்வழியானே இன்பத்தைக் கொடுக்கும் சிவதத்தோடுகலந்து நிற்றலையும் நினைந்து அந்நிலையில்நின்று என்றும், பின்னையதை தேர்ந்துணர்ந்து என்றும—அங்ஙனநின்று தத்துவங்களெல்லாம் மலரூபமென்றும், அவைகள் இயங்குந்தன்மை யுடையனவல்ல சடங்களென்றும் தேர்ந்து, அத்தத்துவங்களில் தான் சிறிதும நில்லாது சிவத்தையே யுணர்ந்து சத்தியாய் நின்று என்றுங் கூறபபட்டன. (உ0)

உக. சொல்லும் பொருள்களும சொல்லாதனவும் அங்
கல்லனும ஆனுனென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற.

(இ - து. உ - ர். என் - எனின்.) பேரின்ப அநுபவங கூறிற்று

(இ - ள்.) உமைபாகனாகிய இறைவன் ஆன்மாககள் அருளைததுணையாகப பற்றாத காலத்தில் முபபத்தாறாகச் சொல்லபபட்ட தததுவங்களும் அவற்றின் செயற்பாடாயுள்ள பொருள்களும் இந்தத் தத்துவஙகளையன்றி ஏனைச்சமயிகளால் கணக்கிட்டுச சொல்லப்பட்ட தத்துவங்களும் அவற்றின் பொருள்களுமாகிய எல்லாவற்றுள்ளுமாயிருக்கின்றான். திருவருளைத் துணையாகபபற்றவந்த அவ்விடததில் மேற்கூறிய தத்துவங்களும் தத்துவார்ததங்களும் அல்லாதவனாக இருக்கின்றான் என்க.

அம்பிகைபாகன் அங்கு சொல்லும் பொருள்களும் சொல்லாதனவும் ஆனான் அல்லனும் ஆனான் எனக்கூட்டுக.

ஆத்மதத்துவம் விதயாதத்துவம் சிவதத்துவம என்று தததுவங்கள் சொல்லபபடுகையின் 'சொல்' என்றும், தத்துவங்களுடைய செயற்பாடுகளால் ஆன்மாக்கள் அநுபவிக்கவேண்டிய பொருள்களெல்லாம் காரியபபட்டுவருகையின் அவ்வொற்றுமைகருதி அப்பொருள்களெல்லாம் தத்துவங்களுடைய 'பொருள்கள்' என்றும், இங்ஙனஞ் சொல்லிவந்த தத்துவ முறைபபாடன்றி ஏனைச்சமயிகளால் தொகுத்துச் சொல்லபபட்டனவெல்லாம் சைவத்துக்கு உடன்பாடன்மையின் 'சொல்லாதனவும' என்றும், இவையெல்லாம் தத்தம்தொழில்களைச்செய்து பயன்படவேண்டுமாயின் தானன்றியாகாவாகலான், 'ஆனான்' என்றும், திருவருள்வசபபட்டகாலத்து இததத்துவங்களுடைய செயல்

களும் அச்செயல்களால் வரும்பயன்களும் வேண்டாமை நோக்கி அத்தத்துவங்களினின்று செய்யுஞ்செயலைச் செய்யாதொழிவானாகலின் 'அங்கல்லனானான்' என்றாக கூறினார்.

சொல்லிறந்துநின்ற இன்பவெளியில்கூடிய அம்பிகைபாகன் சிரவணகாலத்தில் கேட்டசொல்லனவல்லனாய், சிந்தனைகாலத்தில் சிந்தித்த பொருளனவல்லனாய் நின்ற நிலையைத தெளிந்தகாலத்தில் என்னன வாயினான் என்றும் பொருள்கொள்க

இப்பொருளுக்கு - அங்கு அம்பிகைபாகன் சொல்லும் பொருள்களும் அல்லனாய் ஆனான், சொல்லாதனவும் அல்லனாய ஆனான் எனக்கூட்டுக

சிரவணகாலத்தில் இறைவன் தனக்குவேறாகவும், சிந்தித்தகாலத்தில் தன்னுள்ளானாகவும, கண்டதுபோலல்லாமல் தெளிந்தகாலத்தில் விளைந்ததாகிய இப்பேரின்பநிலையில் தானேயாய் நின்ற சிவநிலை இதுவாமென றுணர "அல்லனாய் ஆனான்" என்றார

இதனால், இறைவன் சிரவணகாலத்துச சொல்லாகவும, சிந்திக்குங்காலத்துப பொருளாகவும, தெளியுங்காலத்துத தானாகவும் நிற்குமுறைமை கூறியவாறும.

திருக்களிற்றுப்படியார்.

௫௮. எத்தனையோ தத்துவங்கள எவ்வெவர்கோட பாடுடைய
அத்தனையும சென்றங் களவாதே—சித்தமெனும
தூதுவனைப் போக்கிப்போய்த் தூக்கற்ற சோதிதனில்
பாதிதனைக் கும்பிடலாம பார. (1)

(எ - து.) எத்தனைவகைப்பட்ட தத்துவங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை செயதார இவரென்று சொல்லக்கூடாத எவரெவர்களுடைய கொள்கைபோ அவரவர்களுடைய கொள்கைகளாக வுடையன அவையெல்லாம நம்முடைய கொள்கைக குடனபாடன்மையான் அத்தத்துவ முறைகளிற்சென்று உன்னறிவைக கலக்குமபடிச் செயயாதே. நீ கலக்கும் எண்ணத்தைக கைவிட்டிருப்பினும, உனனிடத்திலுள்ள சித்தமானது, அவ்வவற்றிற் சென்றுழலும் வாலாயமுடைத்தாகலின் அந்தச சித்தமென்கிற தூதுவனை நீ விடுவாயாக விடுவையேயாயின உனனிடத்தில ஆராயவேணடியவற்றுள ஒனறையும ஆராயவதைவிட்டு, உன்னுள எளிதாயவந்து பிரகாசிக்கின்ற சோதியினிடத்தில இருக்கின்ற அருளைக்கண்டு அதனவசப்படலாம. இதனை யாராய்ந்து பார்ப்பாயாகவென்பதாம்.

சோதிதனிற்பாதி - சோதிரூபமாயிருக்கின்ற இறைவனது இடப்பாகத்திலுள்ள தாதான்மிய சத்தி கும்பிடுதல - திருவடியினிடத்தில் வணங்கல். அஃதாவது அடி-திருவருள, வணங்கல - அவ்வருளில் அடங்கிக்கிடத்தல

௫௯. சாம்பொழுதும ஏதும சலமிலலைச் செத்தாற்போல
ஆம்பொழுதி லேயுடைய ஆசையறில - சோம்புதற்குச
சொல்லுந் துணையாகும் சொல்லாத தூய்நெறிக்கண்
செலலும் துணையாகும சென்று. (2)

(எ - து.) உயிர உடலோடு கூடியிருக்கும் காலத்திலேயே ஒருபொருளினும ஆசை செல்லுவதொழிந்து பிணமபோல் கிடக்கப்பெற்றால், (அசசெயலானது) உடலிருக்குமளவும விருப்பு வெறுப்பற்ற நிற்சிந்தையாயிருப்பதற்குச் சொல்லப்பட்ட நல்லதுணையாகும். உடல்விட்டுப் போகுங்காலத்திலும யாதொரு மனோவிகற்பங்களுக்கு இடனில்லாமல் சுகமாய்ப்போம். உடல்விட்டுப்போய் மீண்டும் உடலுக்கு வாராத மார்க்கமாகிய சொல்லுதற்கரிய வீட்டுநெறிக்கண் சென்று கூடுதற்குச்சொல்லப்பட்ட நல்லதுணையுமாகும் என்பதாம.

ஆம பொழுதிலே ஆசையற்று செத்தாற்போல் அடையின் சோம்புதற்குச் சொல்லும் துணையாகும் சாம்பொழுதும எதும் சலமில்லை தூய்நெறிக்கண் சென்று செல்லும் துணையாகும் எனக்கூட்டுக.

ஆம்பொழுது-உயிர் உடலோடு கூடியிருக்குங்காலம ஏதும்சலம்-யாதொரு மனோ விகற்பங்கள். ஏனையவை வெளிப்படை.

சித்தமெனும தூதவன் ஆசை யுடனிருப்பவன ஆகலான், அவ்வாசையையொழித்தால் அததூதவன் தானேபோயவிடுவன ஆசை போகாதிருப்பின, உடலோடு கூடி யிருக்குமளவும துக்கத்தையேசெயவன, உடலைவிட்டுப போகுங்காலத்திலும எண்ணாத எண்ணமெல்லாம எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம நைந்துபோகும்படிச் செய்வன, முத்திக்குப்போகும மார்க்கத்தைத தேடத தொடங்கினுல தேடவொட்டாமலும செய்வன். ஆகவே ஆசையொழிவே முக்காலத்துக்கும இன்றியமையாத ஓர பெருந் துணையாம இதனுல தூதுவனைப போக்கி நன்மைபெறும வகையைக் கூறியதென்க.

௪௦ வேண்டுங்கால் வேண்டும பிறவாமை யென்றமையால
வேண்டினை நீயொன்றுமே வேண்டுவது—வேண்டினது
வேண்டாமை வேண்டவரும என்றமையால வேண்டிடுக
வேண்டாமை வேண்டும அவனபால. (3)

(எ - று) வேண்டுங்கால வேண்டும பிறவாமை என்று பெரியோராகிய நாயனுர கூறியிருக்கின்றபடி பேரின்பத்தை விரும்புவோன யாதானு மொன்றை விரும்பத் தொடங்கினுல், வேண்டுவனவெல்லாம விட்டுப பிறவாமை யொன்றையே விரும்ப வேண்டும. அப பிறவாமையை விரும்பினுல, அதுவேண்டாமை வேண்டவரும் என்று சொன்னபடியினுல் உன்னை விரும்பிவந்த அவ்விறைவனபால அவாவின்மையே வேண்டுமென்று வேண்டுவாயாக எனபதாம

அவனபால் வேண்டாமை வேண்டும (என்று) வேண்டிடுக எனக் கூட்டுக.

இதனுல் சித்தமெனுந் தூதுவனை போக்குதற்குப பெருந்துணையாகக் கூறிய நலலுரை இதுவாமென்று கூறியதெனக அஃதாவது,—இருக்கும்போதும இறக்கும்போதும முத்தி நெறிக்கண செல்லும்போதும, நீங்காததுன்பத்தையே செய்யவல்ல ஆற்றலுடைய அவ்வாசையைப போக்குதற்கு உன்னுல முடியுமோ முடியாது ஆகையால உனக்கோர் துணைகூறுகின்றேன யாதெனின், உன்னுள்ளத்திற குடிபுகுந்தானுகிய இறைவனை நீ நோக்கி எனக்கு யாதொன்றையும வேண்டாமையாகிய மேலான செலவம் வேண்டும் வேண்டுமென்று வேண்டுவாயாக என்று கூறியதேயாம்.

இம்மூன்று திருப்பாசுரத்தாலும உந்தியாரில்— சொலலும பொருளகளும சொல்லாதனவும்'—என்றதை—"எத்தனையோ தததுவங்கள எவ்வெவர் கோட்பாடுடைய அததனையும"—என்றும், "அங்கு ஆருனை"—என்றதை—"சென்றங்களவாதே" என்றும எனவே, ஆன்மாவை சாரந்திருக்கும ஆணவத்தினசார்பாகிய பேதமானது, ஆணவறிவைச்சாரந்து ஆனமபோதம என நிற்றலால் அப்போதமானது ஆன்ம அறிவை விட்டுப போதற்கு அமபிகைபாகனுகிய இறைவன மாயாமலத்தினின்றும் ஆன்மதததுவ முதலாக எண்ணப்பட்ட சகல தத்துவ பேதங்களையும தனதுபாகமாயுள்ள சத்தியினுல உண்டாக்குவதாகிய சிருட்டியையும், சிருட்டித்தவைகளாகிய தத்துவங்களையும ஆன்மாவையுங் கூட்டித் தற்போதத்தின நினைவாகிய சித்தத்தைத தூதுவனைப போற் கொண்டு இந்திரிய விஷயானுபவத்தை நுகாவித்தலாகிய திதியையும இயற்றப பதியென நின்கின்றுனாகலின்—"அளவாதே"—என்றும், 'அங்கு அல்லனும"--என்றதை—"சித்தமெனும் தூதுவனைப போக்கிப்போய துக்கற்ற"—என்றும, எனவே பதியென நின்று திதியின்கண் சித்தமெனும தூதுவனைக்கொண்டு விடயானுபவத்தை

நுகர்விக்கும்போது, அவ்வநுபவத்தை ஒருவழிப்பட்டு நுகரச்செய்யாது இன்பமாயும் துன்பமாயும் அவ்விரண்டிலுள்ளும் பலபிரகாரமாயும் அனுபவிக்கச்செய்து அவ்வனு பவ இடையில் அவைகளை ஆராய்தற் கிடனின்றித் தற்போதத்திற்குச் சுதந்தர ஹானி யைக்காட்டிச் சித்தமென்னுந் துறவினைப் போக்கச்செய்வதாகிய சங்காரத்தைச் செய் கின்றனாகலின்—"அங்கு அல்லனும்"—என்றும், அம்பிகைபாகன்—என்றதை—"சோ திதனிற் பாதிதனை—என்றும், எனவே—சோதியாகிய இறைவன் தனது சத்தியின் வழியாய் பதியென நின்று மேற்கூறிய சிருட்டி திதி சங்காரங்களைச் செய்து, பின் முத் தொழிலுமற்றுத் தானே சுயம்பிரகாசமாய் நிற்றலின்—"அம்பிகைபாகன் என்றுங் கூறினார்.

அங்கு ஆனன் என்றதும, அல்லன் என்றதுமாகிய அவ்விருதன்மையும் கும்பிட் டாலன்றி அறியக்கூடாதாகலின் "கும்பிடலாம்பார்" என்றும், மற்றைய இரண்டுசெய்ய லால் கும்பிடுதல் இவ்வகையாமென்றும் விளக்கியதென்க. (உக

உஉ. காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற
அல்லாத தல்லலென் றுந்தீபற.

(எ-து. உ-ர் என்-எனின்,) பேரின்ப அனுபவத்திற்கு பிராணவாயுவை அடக்க முயலும் அனுபவம் அல்லல் என்று கூறிற்று.

(இ-ள்.) உன்னறிவை உன்னறிவினுள்ளே விளங்கிய அறிவினுள் நீங்காது நிற் குமாறுசெய்வதுவே வன்மையுள் வன்மையாம். இதனைச்செய்யாமல் அலைகின்ற பிராண வாயுவை யடக்க உன்னறிவை முயலும்படிச்செய்தல் துன்பமாம் என்க

கருத்தைக் கருத்தினுள் ஆற்றுவது ஆற்றல். அல்லாது காற்றினைமாற்றி (ச்செய் வதாகிய) அது அல்லல் எனக் கொண்டுகூட்டுக.

கருத்தை - ஆன்மஅறிவை. கருத்தினுள்-ஆன்மஅறிவினுள்விளங்கும் சிவமாகிய அறிவினுள். ஆற்றுவது ஆற்றல் - பூரணத்தன்மையுடைய பரவறிவினுள் சிற்றறிவா கிய உன்னறிவு அடங்கிநிற்கும்படிச்செய்தல். அல்லாதது - அங்ஙனம் அடக்கப்பெறா தது. காற்றினை-பிராணவாயுவை. மாற்றி-அடக்கி.

அவாவையடக்க இறைவன்பால் வேண்டாமை வேண்டுவதையபாக்கினும் ஆதார யோகத்தின்கண் நாம் பிராணாயாமத்தில்பயின்றுவந்த பயிற்சியைதாால்மனத்தையடக்கி அதன்வழியே அலையும் அவாவையும் அடக்குவோம் என்றெண்ணுவது அறிவின்மை யாம். எனெனில், பிராணவாயு உடலைச்சார்ந்து நின்றியங்கும்ஓர்வகையானகாற்று. அவா வோ அறிவைச்சார்ந்து நின்றியங்கி எல்லாவுயிர்க்கும் தவாபபிறப்பீனும் வித்தாயுள்ளது. அவ்வாறுசெய்யவல்ல அறிவின் சம்பந்தமாகிய அவாவை அறியாமையாகிய உடம்பின் சம்பந்தமாயுள்ள காற்றைக்கொண்டு அடக்கமுயன்றால் அது அடங்குமோ! அறிவுக்கறி வாயிருக்கின்ற இறைவன் அடக்குவானாஹல் அது அடங்கும். இக்கருத்தைபற்றி இறை வன்பால் வேண்டுக என்றும், இதுஅல்லாத அது (காற்றினால்மாற்றத்தொடங்கல்) அல்லல் என்றுங் கூறியவாறும்.

ஆன்மபோதமானது மனோசம்பந்தப்பட்டு அம்மனம் பிராணவாயுவோடு சம்பந்தப் பட்டு இந்திரியங்கள் காட்டும் விஷயங்களில் ஓயாது அலைந்து உழலாநிற்கும். ஆகை யால் ஆன்மா தற்போதத்தை தன்னறிவின்வசப்படுத்தித் தனக்குள்ளாய்நிற்கும் சிவ மாகியஅறிவினுள் அறிவாயிருக்கச்செய்வதுவே வன்மையுள்வன்மை. அஃதாவது,செயற் கரியசெய்கையென்று சொல்லப்படும். இதுவொழிந்து தற்போதத்தையும்மனத்தையும் பிராணவாயுவையும் அடக்கமுயல்வது துன்பந்தரும் அல்லலாகுமேயன்றி வேறில்லை. எனெனின் உணர்த்தும் அறிவினுள் உணரும்அறிவு அடங்கி யிருக்க வேண்டுமேயன்றி

[illegible] "இல்லுடையார்" என்றும், [illegible] விட்டுத் [illegible] இறைவனோடு கலக்க [illegible] அகலபபைத [illegible] நிடில்" என்றும், அக்கலப்பினால பிறவித்தொந்தரைக் கெடம்செய்யுஞ் சஞ்சிதபபட்டிருக் [illegible] ஒழியுமாகலின் அவ்வொழிவிடத்தை "வெள்ளவெ ளியும் என்றும, சஞ்சிதக்கூட்டொழித்தார் சனன மாணத்துன்பம் விட்டு இன்ப மாகிய திருவடியை எளிதாகக் கூடுவாராகலின் அங்ஙனங் கூடுதலாகிய வினையை "வீடும் எளிதாம்" என்றுங் கூறினார்.

இதனால் தம்முள் இருந்து உணர்த்துகின்றதாகிய பாணறிவினுள்ளே உணரும் அறிவினராகிய தம்மறிவை அடக்குவாராயின் தற்போதமுதலியவைகள் முன்போல் விடயங்களை உணர்வதற்கு அறிவேது. அஃதில்லையாகவே தற்போதமுதலியன வெல் லாம் ஒழிந்து வெள்ள (அகண்ட) வெளியாய்ப்போம போகவே, கூடுதற்கரிதாக இ ந்த வீடும் மிக எளிதாம். ஆகவே, தமமுள்ளிருந்தகளவனுள் தாம்புகுவாராயின், தம்மைக்கள வாடும் தற்போதாதிகள் அவ்வுளளில் புக பெறுதனவாய வெளியே நிற்கும். நிற்கவே, அடைதற்கரியவீடு மிக எளிதாமெனக இஃதொழிநது, தற்போதமுதலியவற்றுள் தான் புகுந்து நின்று அவையிற்றை அடககமுயலின வீடு எளிதாகாதெனக.

## திருக்களிற்றுப்படியார்

௯௨. இன்றிங் கசேதனமாம இவ்வினைகள ஓரிரண்டும
சென்று தொடருமா அவன் சென்றிடத்தே—என்றுந்தான்
நீதுறுவன் ஆனால சிவபதிதான கைவிடுமோ
மாதொருகூ றலலனோ மற்று. (1)

(எ - து.) இப்பொழுது இவ்விடததில வினையீட்டுதறகுரிய சடஙகளாகிய கரணங களும் காற்றுமாகிய இந்தஇரண்டும், ஆதார நிராதார யோகஙகளைக கடந்து அருட்டுணை யைத் தொடரும் அந்தவிடததிலும போயபபற்றும் வன்மையுடைததானவையாயப பற்றும். (அஙகும்சென்றுதொடாநதுபற்றுவனவாயின்) இந்தயோகியானவன் எபபொழு தும் அவைகளால் வருந்துன்பததை அனுபவிககின்றவனாகவே ஆவன அப டியாவா னாயின் இவன் பிழைககும் வகை எபபொழுதும் இல்லை அஙஙனமன்று, பதிபபொரு ளாகிய சிவன்கைவிடுவனே! (அவன்) உமாதேவியை ஒருபாகததிலுடையவனல்லவா! என்பதாம்.

இன்று என்றது—கருததினுள்கருத்தை ஆறறுங்காலம இஙகு என்றதும சென் றிடத்து என்றதும—ஆராதார நிராதாரயோகங்களைக கடந்து அருட்டுணையைத் தொட ரும்இடம. அசேதனம் என்றது- கருத்தினுள் கருத்தடஙகவே ஆன்மாவோடு கூடிவினை யீட்டுதற்குரிய காணமும காலும் விடயங்களை உணரும் உணாவற்றிருத்தல். இவ் வினைகள் ஓரிரண்டும் என்றது—மேற்கூறியகாணமும் காற்றும். இவன் என்றது— யோகநெறியில் செல்வோன். என்றும் என்றது—பெத்தநிலையில் விடயங்களைப் பற்று தற்குத் தொடாநதேயல்லாமல் அருட்டுணையைத் தொடருங்காலத்திலும. நீதுறல் என்றது—மேற்கூறிய இருவினைகள் பற்றத்தொடர்தல்.

மாதொருகூறன் என்றது—ஒருபாகத்தில் அருட்கருணையையுடையவன். எனவே இடப்பாகமாகிய சத்திபாகத்தில் அருட்கருணையுடையவன் என்றும, வலப்பாகமா கிய [illegible]பாகத்தில் மறக்கருணையுடையவன் என்றும் ஆயிற்று ; ஆகவே, ஆன்மாக்க [illegible] குற்றங்களைக்கண்டு அவைகட் கேற்றதாகிய பரிகாரங்களை மறக்கருணையாற் செய் வனென்றும், அங்ஙனஞ்செய்யும் பரிகாரங்களாற் குற்றங்களைந்த பின்னர் அருட் கருணையால் அருட்குணங்கட் காளாக்குவனென்றுமறிக. என்னையெனின், வைத்திய [illegible] ஒருவனது நோயை முன்னா அறிந்து அதற்கேற்ற மருந்துகளைக்கொடுத்து [illegible] போக்கிப் பின் அவனைச் சுகமுற்றிருக்கச் செய்வதுபோலவெனக.

வன் முற்றும் அறக்கருணை யுடையவனாகவே இருத்தல்கூடாதோவெனின், ஆன்மாக்களிடத்தில் குற்றமேயில்லாமல் குணமேயிருக்குமாயின் இறைவனும் அறக்கருணை யொன்றையேயுடையனாயிருப்பன். அங்ஙனம் இருக்க அறியா ஆன்மாக்கள். ஏனெனில், அவர்கள் மலங்களோடு கூடியிருப்பவராதலின் என்க. கைவிடாமைக்கு-மாதொருகூறன் என்பதேயல்லாமல் மற்றொரு காரணமும் உண்டு. அதனை வருஞ்செய்யுளிற் காண்க.

சரு அனாதி சிவனுடைமை பாலெவையும் ஆங்கே
அனாதினைப் பெற்ற அணுவை—அனாதியே
ஆர்த்த துயர் அகல அம்பிகையோ டெவ்விடத்தும்
காத்தல் அவன்கடனே காண் (2)

(எ - து.) அனாதியே சிவனுக்கு எவையும் உடைமையாம் அங்ஙனம் இருத்தலால், அவற்றையும் உடைமையாகக்கொண்ட அப்பொழுதே, அனாதி என்று சொல்லப்பட்ட ஆன்மாக்களை, அனாதியிலேயே பொருந்தியிருக்கின்ற ஆணவாதிமலத் துன்பங்களொழிய, அம்பிகையாகிய கருணையோடு எவ்விடத்திலும் இரக்ஷித்தல் அவனது கடமையேயாகும் என்பதாம்.

எவையும் அனாதி சிவனுடைமையா என்றதனால், சிவனும் அனாதி, அணுவெனப்படும் ஆன்மாக்களும் அனாதி, உடைமை எனப்படும் உலகமும் அனாதி, என மூன்றையும் தனித்தனி கூறினாரென்க.

இவ்வுண்மையையறியாதே அனாதியா யுள்ளவன் சிவன் ஒருவனே என்றும் அவனால் உண்டாக்கப்பட்டவர் ஆன்மாக்கள் என்றும், அவர்களைப் பின்னர் ஆணவாதிகள் வந்து கூடின என்றுங்கூறி இடர்ப்படுவோரியார் இன்னமும் இவ்விடர்ப்பாடுகள் பல, அவை எல்லாம் ஈண்டுவிரிக்கிற்பெருகும்.

இனி, எவையும்—என்றது மாயாகாரியமாகிய சர்வ பிரபஞ்சங்களை. உடைமை என்றது— ஆன்மாவாகிய அணுக்களை. எவ்விடத்தும் என்றது—சிருட்டி திதிசங்காரம் எனனும் மூன்றிடங்களை. துயர் அகல என்றது—சிருட்டியால் ஆணவமலத் துன்பமும், திதியால் மாயாமலத்துன்பமும் சங்காரத்தால் கன்மமலத்துன்பமும்,போம்படிச்செய்தல். காத்தல் என்றது—சிருட்டியில் தனுகரணங்களைக் கூட்டுதலால் உண்டாகும் துன்பங்களால் உயிர் பாழ்பட்டுப்போகாவண்ணங் காத்தல். திதியில் புவனபோகங்களால் உண்டாகும் ஆனந்தங்களினின்றும் நீங்குமா வண்ணங்காத்தல். சங்காரத்தில் வினைகளேற்றபடி சுவர்க்கநரகங்களில் நிறுத்தி அவ்வவ்வினைகளகமறிந்து மீட்பித்தல் அவன்கடனே என்றது மேலே சொல்லிய முத்தொழிலிடத்தும் காத்தல் தன்கடனாகக்கொண்டவனுக்கு இவ்வருள்நிலையாகிய இவ்விடத்தில் கரணாதிகளுடைய சேட்டைகளையடக்கித் தனது அருண்மயமாகச் செய்தலாகிய செயலை அவனன்றியாவர் செய்வார்! அம்முத்தொழிலும் அனாதிதொட்டு இன்றளவும் செய்து வந்தது, உயிர்கள் இவ்வருள் நிலையில் கூட்டுதல் காரணமேயாதலான் இன்று செயப்வேண்டியவற்றைச் செய்யாதொழிவனோ! தன்னடிமையாகிய உயிர்களைக்கைவிடுவனோ! விடுவானாயின் மாதொருகூறன் - என்றதும், சிவபதி—என்றதும் யாதாய் முடியும். ஆகலான் காத்தல் அவன் கடனே என்பது திண்ணம் என்க.

இத்திருப்பாட்டால் "அரணவுணர்வுதனில் அவ்வுணர்வைமாற்றில்,காணமும் காணுமகைகூடேல், (கூடினால்) கூட்டினுக்கு, வாட்டமையும் வந்துகூடும் (என்றதனால்)" என்றார் நீதுறவமஞ்ஞு" என்று ஐயமுண்டாய இடர்ப்படுத்திய அவ்விடர்ப்பாடொழிய "எவ்விடத்துங்காத்தல் அவன்கடனே" என்று கூறினார்.

என்னையெனின்—இடர்ப்படுத்துவதாகிய கரணமும், காற்றும், வினைத்தத்துவங்களும் சிருட்டிகாலத்தில் ஆன்மாவோடு கூடும்படி இறைவன் செய்தது, அஞ்ஞான

பட்ட அவர்க்கு * 'அயன்மாண்டு அருவினைச்சுற்றமும் மாண்டு அவனியின்மேல் மயல் மாண்டு மற்றுள்ள வாசகமுமாண்டு தன்செயலுமாண்டு பார்பாடும் பாதாளர்பாடும் விண்ணோர்தம்பாடும் ஆர்பாடும் சாராதவர்' என்றும், வீடே—என்றது தன்னுற்பற்றப்படும் பொருள்களையெல்லாம் இறைவன் தமது உடம்பாகக் கொண்டிருக்கின்றமை உணர்ந்து அவைகளில் தன்பற்றை விடுதலேஎன்றும், வீடாகும்—என்றது முத்தியாகிய வீட்டின் கண்பற்றவேண்டுமவன், தான்பற்றுக எண்ணிவிட்ட அவைகளிலேயே காணப்பெற்றமையால் அவனுடன்கலந்து இன்புறுதலே பேரின்பம் என்றுங் கொள்க.

அருளை உடம்பாகவுள்ள இறைவன் அவ்வருளினாலேயே நிலநீர்முதலிய எட்டையும் உடம்பாகக் கொண்டனனாகலான் - எட்டுங்கொண்டார் என்றும் பிரபஞ்சபற்றை விடவேண்டியவன் அந்நிலநீர்களையும், அவற்றின் குணங்களையும், பற்றாது விட்டு, அவற்றை உடம்பாகக்கொண்ட சிவனையும், அவனது சத்தியாகிய அருட்குணங்களையுமே தொட்டுக்கொண்டு நிற்பவராகலான்-தமைத்தொட்டுங்கொண்டேநின்றார்--என்றும். அங்ஙனம் நிற்கப் பெறுதலே உலகப்பற்றை விடுதலாகலான்-விட்டார் உலகம்-என்றும், உலகப்பற்றை விட்டு, உலகத்துள்ளாய் நின்ற அவனைப் பற்றி அவனிடத்திருப்பதே இவனிருக்கும் வீடாகலான்- வீடேவீடாகும்—என்றுங் கூறினார்.

இத்திருப்பாட்டன்- உலகுக்கு வேறாகத் தன்னைக்கண்டு அவையிற்றை இறைவனுடம்பாகக் கண்டுவிட்டு இறைவனையே தனக்கு வீடாகக்கொண்டு இந்தவீடே நாம் பெறத்தகும் வீடாகுமென்று மகிழ்வரென்று கூறப்பட்டது.

௪௪. தம்மில் சிவலிங்கம கண்டுதனைத் தாம்வணங்கித்
தம்அன்பால் மஞ்சனநீர் தாமாட்டித்—தம்மையொரு
பூவாகப் பூஅழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை அன்றே உளன். (1)

(எ - து.) உடலை இடமாகக் கொண்டிருக்கும் தம் அறிவின்கண், சிவலிங்கசொரூபத்தை யிடமாகக் கொண்டிருக்கும் சிவமாகிய அறிவைக்கண்டு, அந்த அறிவினுள் அறிவாகிய தான் உள்ளடங்கி யிருத்தலாகிய நமஸ்காரஞ்செய்து, அங்ஙனம் அடங்கியபொழுது தம்மிடத்து நின்றும் ஊற்றெழுந்து வருவதாகிய அன்பையே திருமஞ்சன நீராகக் கொண்டு அன்பு நீங்காமல் அபிஷேகஞ்செய்து, அதுசெய்தபின் அவன்பின் முதிரான் ஆனந்த வடிவாகிய தம்மையே மலராகக், தம்மிடத்திற் றோன்றிய அந்த ஆனந்தங் கெடாமல் அருச்சித்தவந்தால், அப்பொழுதே இறைவன் அவ்வானந்தசொரூபனாகவே இவனைவிட்டு நீங்காதிருப்ப னென்க.

விஷயானந்தத்தில் ஆன்ம அறிவு கெடாமல் புலனறிவுள் அடங்கிநிற்றலும், அங்ஙனம் நிற்கும்பொழுது ஆசையெழுதலும், அது எழும்பொழுது மகிழ்ச்சி தோன்றுதலும், அதுதோன்றும்பொழுது விடயானந்தானுபவம நீங்காதிருத்தலும், அதுநீங்காதிருக்கப்பெறவே ஐம்புலனறிவும ஆனந்தமயமாய் இவனைவிட்டு நீங்காதிருத்தலும் - கண்கூடாய்க் காணப்படுதல்போல், மேலேசொல்லிய சிவானந்தானுபவமு மென்றறிக.

இதனால் சிவானந்தானுபவத்தில் அறிவு தோன்றுதிருத்தல் வேண்டுமென்றும், அன்பும மகிழ்ச்சியும் தோன்றுதற் கிடமின்றென்றும கூறும் கூற்றுக்கள் இடர்ப்பட்டொழிதல்காண்க.

௪௫. தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை தானென்றும்
தன்னைத்தான் பெற்றவன்றான் ஆரொன்னில்—தன்னாலே
எல்லாந்தன் உட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே
எல்லாமாய் நிற்கும் இவன். (2)

திருவாசகம், திருத்தெள்ளேனம்.

(எ-று.) ஆன்மாவாகியதான் எப்பொழுதும் தன்னைத் தத்துவக்கூட்டங்களுக்கு வேறு யிருப்பவனாகக்கண்டு, தன்னைப்பொருளாகப் பெறுவதினும் பெறும்பேறு வேறொன்றில்லை, அவ்வாறுதன்னைப் பெற்றவன் யாரென்று வினவின், தன்சத்தியாலே சேதனாசேதனங்களாகிய சர்வப் பிரபஞ்சங்களையும், தனக்குள்ளேயடக்கி, கொண்டு, அப்பிரபஞ்ச இயல்புகளைத் தான் கொள்ளாமல், யாவுமாய்நிற்கும் இறைவனாகிய சிவன் தானாக இருக்கப் பெற்றவன்றான் தன்னைப் பெற்றவனாவனென்க.

தன்னைத்தான்பெற்றவன் என்றதை ஈரிடத்துங்கூட்டுக.

தத்துவங்களுக்கு வேறாகத் தன்னைக்காண்பதுவே பேறெனப்படுமென்பார்—தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை என்றும், அப்பேறு பெறும்வன்மையாளன் மேலே சொல்லப்போகும் அவனன்றி மற்றெவரும் அன்றென்பார் தன்னைத்தான்பெற்றவன் றான் யார் என்றும் அப்பெறும்பேறு இதுவாம் என்பார்—தன்னாலே எல்லாந்தன் உட்கொண்டு கொண்டதனைக்கொள்ளாதே எல்லாமாய் நிற்கும் இவன் என்றுங்கூறினார்.

எனவே—தத்துவங்களுக்கு வேறாய், எல்லாத்தத்துவங்களையுந் தன்னுட்கொண்டு அவற்றின் தன்மைகளைத் தான் கொள்ளாமல் அல்லனாய் (வேறாய்), அவையெல்லாமாய் (ஒன்றாய்), உடனாய் நிற்கும் இறைவனாகிய அவன் இவனேயாய் நிற்கப்பெறுதலேயாம்.

இவ்விரண்டு திருப்பாட்டானும் உந்தியாரில் * "எட்டுக்கொண்டார்த்தம்" என்றதை—தமமிற் சிவலிங்கங்கண்டு அதனை என்றும், † "தொட்டுக்கொண்டே நின்றார்" என்றதை—தாம் வணங்கித் தமமன்பான் மஞ்சனநீர் தாமாட்டித் தம்மையொரு பூவாக்கிப் பூவழியாமற் கொடுத்துப் பூசித்தால் என்றும், "விட்டார் உலகம்" என்றதை—தன்னைத்தான் பெற்றவன் என்றும். "வீட்டை வீடாகும்" என்றதை ‡ என்றுந் தன்னைப் பெறுவதின்மேற் பேறில்லை, ப தன்னாலே எல்லாந் தன் னுட்கொண்டு கொண்டதனைக் கொள்ளாதே எல்லாமாய் நிற்கும இவன என்றும, ஒவாமை என்றும், உளன் என்றுங் கூறினர்.

உகு. சித்தமும் தீயகாரணமும் சித்திலே
ஒத்ததே ஒத்ததென் றுந்தீபற
ஒவ்வாத தொவ்வாதென் றுந்தீபற.

(எ - து. உ - ா. என் எனின், சித்த முதலிய காரணங்களும் சிவமயமானால்தான் ஆன்மா சிவமயமாயிற்றென்பது பொருந்தமென்று கூறிற்று.

(இ - ள்.) தீமை பயப்பனவாகிய சித்தமும், ஏனையதத்துவங்களும், சிவசித்தினிடத்தில் பொருந்தியிருந்தலே, ஆன்மா சிவசித்தினிடத்தில் பொருந்தியதன்மை யுடைத்தானதென்று சொல்லலாம். சித்தமுதலியவை பொருந்தாமற் போமாயின், சிவசித்தினிடத்தில் ஆன்மா பொருந்திய தன்மையுடைத்தானதென்று கூறல் பொருந்ாதென்க.

மேற்கூறியபடி எல்லாவற்றிலுமிருந்து தன்னைத்தெரிவிக்கும் சிவ சித்தினிடத்தில் ஆன்மாவாகிய தான் பொருந்தியிருத்தல்போல் தற்போதமும அதுபற்றுதற்கிடமாயுள்ள சித்தமுதலிய சகலதத்துவங்களும் வேறின்றிப் பொருந்தியிருந்தால்தான் ஆன்மாசிவத்தினிடத்தில் பொருந்தியிருப்பதென்பது பொருந்தும் என்பார்—"சித்தமுந்தியகாரணமுஞ் சித்திலே ஒத்ததே ஒத்தது" எனவும், போதமும் ஏனையதத்துவங்களும் சித்தி

அட்டமூர்த்தியில் ஆன்மா ஒன்றாகலின், † வணக்கலினானும் நீராட்டுதலினானும் பூசிப்பதலினானும் தொட்டுக்கொண்டேயிருத்தலினானும் ‡ தத்துவங்களனைத்தும் விட்டுத் தன்னைவேறாகக்காண்டலினானும் ப தன் (சத்தியி)னாலே எல்லாந்தன்னுட்கொண்டு என்றதனால் ஒன்றாந்தன்மையும கொண்டதனைக்கொள்ளாதே யென்றதனால் வேறாந்தன்மையும் எல்லாமாய்நிற்கும் என்றதனால் உடனாந்தன்மையும் ஆகிய அத்வைத இலக்கணத்தால் என்றும் நீங்காதிருத்தலினானு மென்க

பொருந்து மென்றுசொல்லுவது ஒபபத்தகுந்தன்று என்றால் ஆன்மா மாத்திரம் சிவத்தைப்பொருந்தியிருக்கும் என்று சொல்லுவதும் பொருந்ாது என்பார்—"ஒவ்வாதது ஒவ்வாது" எனவுங் கூறினர் இவ்வுண்மையை— "நான் என்றும் தான் என்றும் நாடினேன் நாடலும், நான் என்று தான் என்றும் இரண்டில்லை என்பது, நான் என்ற ஞானம் முதல்வனே நல்கினன், நான் என்று நானும் நினைப்பொழிந்தேனே என்றருளிய திருமந்திரத்தானறிக.

சிவனைத் தொட்டசீவன் சிவமயமானபோது சிவனைத்தொட்டுக் கொண்டிருந்த கரண முதலியவைகளும் ஏன்சிவத்தைத்தொட்டு சிவமயமாகாது? ஆகுமென்பதேசித்தாந்தத்துணிபாகலின் ஒத்ததே ஒத்ததென வலியுறுத்தியும், கரணங்கள் சிவமயமாகாமற் போமாயின் சீவனும் சிவமயமானதில்லை என வருமாகலான் ஒவ்வாததொவ்வாது என மறுத்துங் கூறியவாறும்.

இதனால் சீவன் சிவமயமாய்ச் சிவானுபவம் படுங்காலத்து, கரணங்களும் அச்சிவானுபவாகாரமாகவே இருக்குமென அறிவுறுத்தியவாறும்.

## திருக்களிற்றுப்படியார்.

துன்பமா மெல்லாம பரவசனாய்த் தான் துவளில்
இன்பமாம தன்வசனாய்த் தானிருக்கில்—என்பதனால்
நின்வசனாயே யிருக்கின் நின்னுடனாம் நேரிழையாள்
தன்வசனா யேயிருப்பன் தான். (1)

(எ - து.) அருள்வசப்பட்டு அதுவாயிருக்கின்ற தான் இனிக்கரணங்கள் நமக்காகாவென்றும், அவை நம் வசப்படவேண்டுமென்றும், சித்த விகற்பத்தின் வசப்படுவானாயின் கரணங்களே யல்லாமல் எல்லாத்தத்துவங்களும் துன்பஞ்செய்வனவாகவே ஆகும், தன்னைத் தன் வசப்படுத்திய அருள்வசமாகவே தானிருந்தால், துன்பஞ்செய்வன வாகவிருந்த அவையெல்லாம் இன்பஞ்செய்வனவாகவே ஆகும். என்று மேலே கூறியிருக்கின்றபடியால், நீ நிற்கப்பெற்ற அருள்வசமாகவே மாறாது நிற்டையேயாயின் உன்னை விட்டுப்பிரியாத உன்னுடனாயிருக்கின்ற யாதொரு அருட் சத்தியுண்டோ அந்தச்சத்தியின் வசமாகவே இறைவன் இருக்கின்றவனாகலின் அவன் உன்வசமாக இருக்கும் அச்சத்தியை வந்துபொருந்தி யிருப்பனல்லவா என்பதாம.

பரவசனாய்த் தான் துவளில், எல்லாம் துன்பமாம், தன்வசனாய் தான் இருக்கில், இன்பமாம் எனக்கூட்டுக

அருள்வசப்பட்டநீ, அவ்வருள் வசமாயிருக்கும் இறைவனும்; உன்வசமாகவேண்டுமென்றெண்ணி அவனைநோக்கியிருப்பதொழிந்து கரணங்களைநோக்குவையாயின் அவன் உன்வசப்படான்; அவையுந்துன்பஞ் செய்யும். கரணவசப்படாதொழிந்து அருள்வசமாகவேயிருப்பின் அவனும் உன்வசப்படுவான்; அவையும் இன்பஞ்செய்யுமென்று இத்திருப்பீட்டால் கூறியதாகும்.

௭. செத்தாரே கெட்டார் கரணங்கள் சேர்ந்ததனோ
டொத்தாரே யோக பரர்ஆனார்கள்—எத்தாலும்
ஆராத வக்கரணத் தார்ப்புண்டிங் கல்லாதார்
பேராமற் செல்வர்அதன் பின். (2)

(எ-து.) யோகபரரானார்கள், அதனோடு அருளோடு) சேர்ந்து ஒத்திருந்தார் யாவரோ அவரே கரணச்சேட்டைகளை யொழித்து அதனைக் கெடுத்தவராவர். அல்லாதார் யோகபரராய் அதனோடுசேர்ந்து ஒத்திராதவர், எவ்விதமான சாதனங்களாலும்சேட்டை

---

ன்பதாம் தந்திரம்-சத்திய ஞானோதயம். செ-ள். அ.

